# தற்காலத் தமிழ் இலக்கியத்தின் புதிய போக்குகள்

தொகுதி - 2



அருள்மிகு பழனியாண்டவர்
மகளிர் கலைக் கல்லூரி, தன்னாட்சி,
தேசியத்தர மதிப்பீடு B++
பழனி 624 615

தமிழ்த்துறை - உயராய்வு மையம்

# தற்காலத் தமிழ் இலக்கியத்தின் புதிய போக்குகள்

தொகுதி – 2



*அருள்மிகு பழனியாண்டவர்*
*மகளிர் கலைக் கல்லூரி, தன்னாட்சி,*
*தேசியத்தர மதிப்பீடு B++*
*பழனி – 624 615.*

தமிழ்த்துறை – உயராய்வு மையம்

## நூல் விவர அட்டவணை


| | | |
|---|---|---|
| 1. | நூலின் பெயர் | : தற்காலத் தமிழ் இலக்கியத்தின் புதிய போக்குகள் |
| 2. | பதிப்பாசிரியர்கள் | : தமிழ்த்துறை - உயராய்வு மையம்,<br>அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி, தன்னாட்சி.<br>தேசியத்தரம் B ++<br>சின்னக்கலையம்புத்தூர், பழனி. |
| 3. | முதற்பதிப்பு | : மார்ச்சு 2005 |
| 4. | மொழி | : தமிழ் |
| 5. | பக்கங்கள் | : 358 |
| 6. | வெளியீடு | : தமிழ்த்துறை - உயராய்வு மையம்,<br>அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி, தன்னாட்சி.<br>தேசியத்தரம் B ++<br>சின்னக்கலையம்புத்தூர், பழனி. |
| 7. | கணினி ஆக்கம் | : அரசு கம்ப்யூட்டர்ஸ் & ஆப்செட் பிரிண்டர்ஸ்,<br>போன் : 04545 - 241313, செல் : 09362510543. |

# வாழ்த்துரை

அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிர்வாகத்தின் கீழ் இயங்கி வரும் அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரித் தமிழ்த்துறையினர் **"தற்காலத் தமிழ் இலக்கியத்தின் புதிய போக்குகள்"** என்ற தலைப்பில் தேசியக் கருத்தரங்கினை நடத்துகின்ற முயற்சி பாராட்டுக்குரியது. தமிழே முருகன்; முருகனே தமிழ் என்ற பெருமைக்குரிய தமிழ்மொழி நெடிய நீண்ட தொன்மை சான்ற இலக்கிய இலக்கண மரபினை உடையது. வாழ்க்கை நெறிமுறைகளை வரையறுக்கும் "பொருள் இலக்கணம்" கண்ட மொழி தமிழ்மொழியே. உயர்தனிச் செம்மொழிக்கான தகுதிகளைப் பெற்ற நம் தமிழ்மொழி "செவ்வியல் மொழியாம்" உரிமையை காலம் தாழ்த்தேனும் பெற்றுள்ளது. யுனெஸ்கோ எனும் உலக அரங்கம் தனது ஆய்வின் முடிவாக, இன்னும் நூறாண்டுகளில் "தமிழ் எனும் மொழியே இருக்காது" என்று தெரிவித்த போது, தமிழ் ஆர்வலர்களுக்கு எல்லாம் அச்செய்தி அதிர்ச்சியைத் தந்தது. எனினும் பாலி மொழியால் பாதிக்கப்படாமல் வடமொழியால் வாடிப் போகாமல், விசயநகரத்தாரின் தெலுங்கு மொழியால் தீர்ந்து போகாமல் வளர்ந்த தமிழ் மொழி, ஆங்கில மோகத்தால் மட்டும் அழிந்து விடுமா என்ன? அழியாது முன்னைப் பழமைக்கும் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் புதிய வேகத்தில் வளர்ந்து வருகின்றது என்ற நம்பிக்கையை இத்தமிழ்க் கருத்தரங்கம் ஏற்படுத்துகின்றது.

**"தற்காலத் தமிழ் இலக்கியத்தின் புதிய போக்குகள்"** - என்ற தலைப்பில் தமிழ் கூறும் நல்லுலகில் இருந்தும், பிற மாநிலங்களில் இருந்தும் தமிழ் ஆர்வலர்கள் பங்கேற்று இலக்கியம் - வகைமை - கோட்பாடு - இயக்கம் ஆகிய அனைத்துக் கூறுகள் குறித்தும், தற்காலத் தமிழ் இலக்கியப் போக்குகளின் மாற்றங்கள் - பாடுபொருள் குறித்தும் ஆய்வு நோக்கில் குழுமி விவாதிக்கின்ற முறையில், இக் கருத்தரங்கை ஏற்பாடு செய்துள்ள எமது திருக்கோயில் நிர்வாகம் சார்ந்த மகளிர் கலைக் கல்லூரி தமிழ்த்துறையினரின் முயற்சியை நான் பெரிதும் பாராட்டுகின்றேன். இதேபோன்று மேன்மேலும் பலதுறைகளிலும் தமிழின் வளர்ச்சிக்கென இக்கல்லூரித் தமிழ்த்துறை பாடுபடும் என்பது வெள்ளிடைமலை.

வாழ்க அவர்தம் தமிழ்ப்பணி ; வளர்க அவர்களது முயற்சி ; இக்கருத்தரங்கம் செவ்வனே நிறைவெய்த அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமியின் திருவருள் நாளும் துணை நிற்கும் என வாழ்த்துகிறேன்.

திரு. *த. சுந்தரம்*
நிர்வாக அதிகாரி/இணை ஆணையர்
அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
கல்லூரிச் செயலர் & தாளாளர்
அருள்மிகு.பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி,
பழனி - 624 615.

# அணிந்துரை

பழனி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிர்வாகத்தின்கீழ் இயங்கிவரும், அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி கலை, அறிவியல், கணினி எனப் பலதுறைகளிலும் பரிணமித்து வளர்ந்து வருகின்றது. மாணவியருக்குப் புத்தக வாசிப்பால் புத்தம்புதிய அறிவைப் புகட்டுவதோடு மட்டுமின்றி, ஆராய்ச்சி மனப்பான்மையினையும் வளர்த்து வருகின்றது. இவ்வளர்ச்சியால் முகிழ்த்ததே தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவரும் கூடி நடத்தும் **"தற்காலத் தமிழ் இலக்கியத்தின் புதிய போக்குகள்"** என்னும் பொருண்மையில் அமைந்த தேசியக் கருத்தரங்காகும். தமிழ் இலக்கியத்தில் காலந்தோறும் வளர்ந்து வருகின்ற புதுப்புது ஆய்வு முயற்சிகளைத் தொகுத்தளிக்க முயல்கின்றது இக் கருத்தரங்கம்.

புனைவியல், நடப்பியல், நவீனத்துவம், பின் நவீனத்துவம், அமைப்பியல், பின் அமைப்பியல், பெண்ணியம், தலித்தியம், பெரியாரியம், மார்க்சியம், ஹைகூ, சென்ரியு, லிமெரிக், லிமெரிக்யு எனத் தற்காலத் தமிழின் வளர்ச்சிப் போக்கினைப் பல்வேறு ஆய்வாளர்களைக் கொண்டு இக்கருத்தரங்கு மீள்பார்வை செய்கின்றது.

புத்திலக்கியத்தின் புதிய இயக்கங்களின் கொள்கைகளையும், கோட்பாடுகளையும் மாணவர்களும், திறனாய்வாளர்களும் தெரிந்து கொள்வதற்கு இக்கருத்தரங்கு பெருமளவு பயன்படும் என்பதற்குச் சான்றுகளாக இந்நூல்களில் இடம்பெற்றிருக்கும் அனைத்துக் கட்டுரைகளும் திகழ்கின்றன.

புனைவியல், நடப்பியல் என்ற இருபெரும் பொருண்மைகளினின்று கிளைத்தவையே பிற இயக்கக் கூறுகள் என்பதை, இந்நூல்களுள் இடம் பெற்றுள்ள பெரும்பான்மையான கட்டுரைகள் உணர்த்துகின்றன. மனித உரிமைகளும், பொருளாதாரப் பகிர்வு, பயன்பாடு ஆகியவற்றுக்கான இயங்கு தளங்களும் முரண்படுவதே மேற்கண்ட இலக்கிய இயக்கங்கள் தோன்றுவதற்கான காரணிகள் என்பதையும் பெரும்பாலான ஆய்வாளர்கள் புரியவைத்துள்ளனர்.

முற்காலத்தில் பெண்களும் பெண்ணுரிமைகளும் முடக்கி வைக்கப்பட்டன. இம் முட்டுக்கட்டைகளை நீக்கியவர் பாரதி. இதனால், பெண்கள் சற்று நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். இருப்பினும், ஆங்காங்கே இவர்களுக்கு எதிராகப் பிரச்சினைகள் தோன்றிக் கொண்டுதான் உள்ளன. இவை யாவும் இலக்கியங்களில் இயன்ற அளவு பிரதிபலித்துள்ளன என்றாலும், முழுமையான தீர்வு இன்னும் ஏற்படவில்லை. இச்சிக்கல்களை முற்றிலும் புறந்தள்ளும் வண்ணம் தங்கள் புரட்சிக்கருத்துகளைப் போர்வாளாய்க் கொண்டு, தொண்ணூற்றுக்கும் மேற்பட்ட திறனாய்வாளர்கள் பெண்ணியக் கட்டுரைகள் படைத்துள்ளனர். ஞாலத்தின் ஞானிகளாய்த் திகழும் தகுதிவாய்ந்த பெண்கள் அனைவரும் எள்ளளவும் இழிவாகக் கருதப்படக்கூடாது என்பதையே இவர்களுடைய கருத்துகள் புலப்படுத்துகின்றன. இக்கருத்தரங்கக் கட்டுரைகள் அனைத்தும், இரு தொகுதிகளாகப் பகுத்து நூலாக்கம்

செய்யப்பட்டுள்ளதால் ஒரு தொகுதியைப் பெண்ணியம் ஆக்கிரமித்துள்ளது. என்பதை அறிகையில் "ஆணுக்குப் பெண் சமம்" என அன்று நாம் எண்ணியதை இன்று முழுமையாக எய்திவிட்டோம் என உரக்கக் கூற வேண்டு போல் உள்ளது.

நவீனத்துவம், பின் நவீனத்துவம் சார்ந்த கட்டுரைகள் யாவும் மற்ற பொருண்மைகளில் அமைந்த கட்டுரைகளைத் தன்வயப்படுத்திவிட்டன. சமுதாய வளர்ச்சிக்கேற்ப இலக்கிய முன்னேற்றமும் புதுமைப்போக்கில் மாறிக்கொண்டு வருகின்றது என்பதற்கு உரிய சான்றாகப் பெரும்பான்மையான கட்டுரைகள் அமைகின்றன. மார்க்சியம், அமைப்பியல், பின் அமைப்பியல், பெரியாரியம் சார்ந்த கருத்துகள் இவ்வாய்வுத் தொகுதிகளில் சிறுபான்மை இடம்பெற்றிருப்பது தமிழ்த் திறனாய்வாளர்கள் இச் சிந்தனைகளில் மேலும் கவனம் செலுத்த வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றது.

தலித்தியப் பொருண்மை அதிக ஆய்வாளர்களின் கவனத்தை ஈர்த்துள்ளது. சமுதாயத்தின் அழுகுகளை முருகியல் உணர்வோடு படைத்த படைப்பாளிகள் விளிம்புநிலை மக்களையும் வழியெடுத்துப் பார்த்துள்ளனர். இக்கடைநிலை மக்களின் கடைத்தேற்றம் கூடிய விரைவில் நிகழ்ந்தேறும் என்று கட்டியங் கூறுமுகமாக அக்கட்டுரைகளின் கருத்து வீச்சுகள் அமைகின்றன.

எட்டுத்திக்குகளிலும் நிலவும் இலக்கியச் செல்வங்கள் தமிழ் மக்களின் அறிவை மேலும் செழுமைப்படுத்தி வருகின்றன என்பதனை ஹைகூ, சென்ரியு, லிமெரிக், லிமெரிக்யு என்ற கவிதைக் கோட்பாட்டுக் கட்டுரைகள் மெய்ப்பிக்கின்றன.

கடலியல், சுற்றுப்புறச் சூழலியல், இருத்தலியல் எதிர்காலவியல் போன்ற கோட்பாடுகளைப் பிரதிபலிக்கும் கட்டுரைகள் இந்நூல்களுள் இடம்பெற்றிருப்பது நவீன இலக்கியத்திறனாய்வுக் கொள்கைகள் நாள்தோறும் திறனாய்வாளர்களால் உற்றறியப்படுகின்றன என்பதை உணர்த்துகின்றன. இருதொகுதிகளிலும் இடம்பெற்றுள்ள கருத்துகளைக் கண்ணுறுகையில், தமிழின் தனித்தன்மை மேலும், மேலும் நிலைத்த தன்மையை அடையும் சாத்தியக்கூறுகள் அதிகரித்தே வருகின்றன என்றே கூற வேண்டும்.

வருகைபுரிந்த அனைத்துக்கட்டுரைகளையும் பகுத்துத் தொகுத்து அரிதுமுயன்று நூல்களாக்கி, இக்கருத்தரங்கை நிகழ்த்தியிருக்கும் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவரின் முயற்சியும் நினைந்து நினைந்து போற்றற்குரியது. இனி வருங்காலங்களிலும் இவர்கள் இத்தகைய சிறப்புமிக்க பணிகளில் தொடர்ந்து ஈடுபட்டு வெற்றிபெற வாழ்த்துகின்றேன்.

திருமதி. *சந்திரகாந்தா ஜெயபாலன்*
முதல்வர் - அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி,
சின்னக்கலையம்புத்தூர், பழனி.

## பதிப்புரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் பாரதி ஒரு மைல்கல். அவனுக்குப் பின்னர் இலக்கியம் நவீனமாக்கப்பட்டு - புதுப்புது பார்வைகளும் தாக்கங்களும் ஏற்பட்டன. அந்தப் பின் நவீனத்துவத்தை அறிமுகப்படுத்த வேண்டும் என்ற ஆவலினாலேயே, இத்தலைப்பு எங்களால் தேர்வு செய்யப்பெற்றது. நவீனத்துவமும் - பின் நவீனத்துவமும் இன்றைய நடைமுறை மரபுமீறல், உடைத்தல் முதலிய எதிர்கலாச்சாரத்தை ஏந்தி வருகின்ற உண்மையை யாரும் மறுப்பதற்கில்லை. புதுக்கவிதை மரபினைத் தாண்டி, ஹைகூ, சென்ரியு, லிமெரிக், லிமெரிக்யு போன்ற கவிதை வகைமைகளையும் கொண்டிருக்கும் பின் நவீனத்துவத்தை அலசுவதற்காகவே இக்கருத்தரங்கானது ஏற்பாடு செய்யப் பெற்றுள்ளது. நவீனமான தலைப்பில் நவ நவமான 235 கட்டுரைகளை ஆர்வலர்கள் எழுதியுள்ளனர். அதனைப் புத்தக வடிவில் தொகுத்தளித்துள்ளோம்.

கருத்தரங்கம் என்றவுடனேயே நடத்துங்கள் என்று அனுமதி வழங்கியும், புத்தக வடிவில் கொண்டுவர முனைந்தபின்னர், ஏற்பட்ட பல்வேறு இடர்பாடுகளைக் களைய தக்க ஆலோசனைகள் வழங்கியும், பல்லாற்றானும் துணை நிற்கும் எம் கல்லூரி முதல்வர் முனைவர் திருமதி. ***சந்திரகாந்தா ஜெயபாலன்*** அவர்களை நன்றியுடன் இக்குழு நினைவு கூர்கிறது.

பணம் பற்றாக்குறை என்றவுடனேயே, அதனை நீக்க நானிருக்கிறேன் என்று முன்வந்து எங்கள் குறையைக் களைந்ததுடன் வாழ்த்துரையினையும் வழங்கிய, எங்கள் கல்லூரிச் செயலர் & தாளாளர் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் இணை ஆணையர் மேதகு. ***த. சுந்தரம்*** பி.ஏ.பி.எல்., அவர்களுக்கு எங்கள் பதிப்புக்குழு மனமார்ந்த நன்றிதனை உவந்தளிக்கின்றது.

கட்டுரைகளைத் தட்டச்சு செய்தும், குறுந்தட்டு வடிவாக்கம் செய்தும் தந்த செல்வன். த. சித்திரசேகரையும், நூலாக்கம் செய்து தந்த அரசு கம்ப்யூட்டர்ஸ் & ஆப்செட் பிரிண்டர்ஸ், மனியரசனையும் இக்குழு நன்றியுடன் பாராட்டுகிறது.

ஆக்கமும், ஊக்கமும் அளித்த துறை ஆசிரியர்களுக்கும், கட்டுரையாளர்களுக்கும் இக்குழு நன்றிதனை நல்குகிறது.

தோன்றாத்துணையாகும் கந்தப் பெருமான், எங்கள் சொந்தப் பெருமான் அவனுக்கும் எங்கள் நெஞ்சம் நிறைந்த நன்றிகள்.

**- பதிப்புக்குழு -**

# பொருளடக்கம்

*வாழ்த்துரை*

*அணிந்துரை*

*பதிப்புரை*

## நடப்பியல்

| வ. எண் | மார்க்சியம் | பக்க எண் |
|---|---|---|

| வ. எண் | நவீனத்துவம் - பின்நவீனத்துவம் | பக்க எண் |
|---|---|---|

| வ. எண் | பிறதுறைகள் | பக்க எண் |
|---|---|---|
| 1. | **சி. அயோத்தி**<br>தமிழ்க்கவிதைகளில் பெரியாரியம்- இதழ்கள் வழித்தேடல் | 217 |
| 2. | **சு. அரங்கநாதன்**<br>தமிழ்நாவல்களில் மருத்துவச் செய்திகள் | 221 |
| 3. | **வீ.ச. அசோக்குமார்**<br>யுக பாரதியின் கவிதைகளில் பெரியாரியம் | 224 |
| 4. | **த. இரசனி**<br>பொன்னீலனின் புதிய மொட்டுக்கள் நாவலில் கதைகூறல் உத்தி | 226 |
| 5. | **கமலாமுருகன்**<br>புதுக்கவிதையில் கடலியல் | 228 |
| 6. | **சூ. காந்திமதி**<br>ஆகிவரும் பெயர்கள் | 232 |
| 7. | **செ. காளிமுத்து**<br>கவிஞர் இன்குலாப் கவிதைகளில் இயக்கங்கள் தாக்கம் | 234 |
| 8. | **சி. கார்த்திகேயன்**<br>தன் வரலாற்று ஆசிரியர்களும் இலக்கியப் பாங்கும் | 237 |
| 9. | **சு. கீதா**<br>வாசந்தியின் வேர்களைத்தேடியில் மனித நேயம் - உளவியல் பார்வை | 240 |
| 10. | **கீதாராணி**<br>கவிஞர் முத்துலிங்கம் கவிதைகளில் சமுதாயம் | 244 |
| 11. | **இரா. சங்கர்**<br>ஜெயகாந்தனின் சிறுகதை அமைப்பு | 248 |
| 12. | **க. சரசுவதி**<br>ஜோ.டி., குரூஸ் கவிதையில் இணைப்புப் பணி | 251 |
| 13. | **சரோஜா**<br>தமிழ் இலக்கியமும் சுற்றுலாவும் | 254 |
| 14. | **சரசுவதி கிருஷ்ணன்**<br>துறைதோறும் தமிழ் | 257 |
| 15. | **எம். சாந்தி**<br>தற்காலக் கவிதைகளில் சுற்றுப்புறச் சூழல் | 261 |

# அப்துல்ரகுமானின் பித்தன் கவிதைகளில் நடப்பியல்

*மா.இராமச்சந்திரன்,* எம்ஃபில் ஆய்வு மாணவர், தமிழ்த்துறை,
பூ.சா.கோ.கலை அறிவியல் கல்லூரி, கோவை.

இருபதாம் நூற்றாண்டு இலக்கிய வகைகளுள் தனித்தன்மையோடு ஆளுமை பெற்று விளங்குவன புதுக்கவிதைகள் எனலாம். நுட்பமான கருத்துக்களைச் சுருக்கமாகவும், செறிவாகவும் வெளிப்படுத்தும் தன்மையில் புதுக்கவிதை சிறக்கிறது எனக் கருதலாம். அதாவது பொருள் ஆழமுடையது புதுக்கவிதை என்றும் கூற இடமுண்டு. அவ்வகையில் கவிஞர் அப்துல்ரகுமானின் பித்தன் கவிதைத் தொகுப்பானது முரண் என்ற உத்திவழி பொருள் வெளிப்பாட்டைத் தருவதாகும். முரண் உத்திவழி அமையும் பொருள் வெளிப்பாட்டில் நடப்பியல் எவ்வாறு வெளிப்படுகின்றது என்பதை எடுத்துக் கூறுவதாக இக்கட்டுரை அமைகின்றது.

## நடப்பியல்:

நடப்பியல் என்பதை நடைமுறையியல் எனலாம். அதாவது இன்றைய உலக இயக்கம் (அ) சமூக இயக்கத்தின் வெளிப்பாடே நடப்பியல். பொதுவாக உலக இயக்கத்தின் அடிப்படை ஆதாரமாக விளங்குபவை முரண்களே. அதாவது இரவு - பகல், ஆண் - பெண், பிறப்பு - இறப்பு என்று ஒன்றுக்கொன்று முரணான இரண்டால்தான் உலக இயக்கம் நடைபெறுகிறது. இத்தகு நடப்பியலை முரண் உத்தியை ஆதாரமாகக் கொண்டு அமையும் பித்தன் கவிதைகளில் காண்பது இங்கு பொருத்தமாகிறது.

## பண்படா மனமும் பண்பாட்டு முரணும்:

ஆடை என்ற கவிதையில் சட்டையைக் கிழித்துக் கொண்டிருக்கும் பித்தன், உங்கள் ஆடை கள்ளமின்மைக்குப் போர்த்திய சவக்கொடி என்று ஆடையை இகழ்கிறான். இதனை நடப்பியலாகக் காணும்போது இன்றைய நாகரிக மாற்றத்தினால் விழைந்த குறைபாட்டைக் காணமுடிகின்றது. அதாவது ஆதிகால மனிதனாய் நிர்வாணமாகவும், இலை தழைகளை அணிந்துகொண்டிருந்த காலத்திலும் நமது பார்வைக்குத் தெரியாத ஆபாசம், ஆடை அணிந்து கொண்டபின் நமது பார்வைக்குத் தெரிகிறது. ஆடை அணியாதபோது இருந்த அந்தக் கள்ளங்கபடமற்ற மனம் பிற்காலத்தில் சலனப்பட்டுப்போனது. இதனால்தான் பித்தன் உங்கள் ஆடை கள்ளமின்மைக்குப் போர்த்திய சவக்கொடி என்கிறான். அதாவது உடலை மறைக்க வேண்டிய நமது ஆடை வெளிக்காட்டுவதாக விளங்குவதே இன்றைய நிலையாக விளங்குகிறது எனலாம்.

இச்செய்தியினை இசுலாம் மதத்தின் நபிமொழிகள் என்னும் நூல்வாயிலாகவும் அறியமுடிகின்றது. *எண்ணற்ற ஆண்டுகள் பழமையான இந்நூலில் பிற்காலத்தில் உலக அழிவிற்கான காரணங்களாகப் பலவற்றைக்* குறிப்பிடுகையில், பிற்காலத்திய மக்கள் இறுக்கமான ஆடைகளோடு நிர்வாணமாகத் திரிவார்கள் என்பதாகக் கூறப்பட்டுள்ளது. இச்செய்தி பித்தனின் கூற்றோடு ஒப்புநோக்கத்தக்கது.

தேங்கிய நீர் பாசியையும், அணைந்த நெருப்பு சாம்பலையும் உடுத்திக்கொள்ளும். அது போலத்தான் மனிதன் ஆடை உடுத்துகிறான் என்பது பித்தனின் கூற்றாகிறது. இதிலிருந்து நீரோட்டம் தடைப்படும்பொழுது பாசி தோன்றுகிறது. நெருப்பின் இயக்கம் நிறைவுறுகையில் சாம்பல் தோன்றுகிறது. நம் மன ஓட்டம் சீராக ஓடாது தடைப்படும்போதுதான் சலனம் தோன்றுவதும், பார்வை நிர்வாணத்தை நாடுவதும் என்பதாக விளக்கம் பெற முடிகின்றது.

## கொள்கையும், கொள்கையின்மையும்:

அறிக்கை என்ற கவிதையில் பித்தனை நோக்கி உன் கொள்கை என்ன என்று கவிஞர் கேட்க, அவனோ கொள்கையின்மையே தன் கொள்கை என்கிறான். ஒரு குறிப்பிட்ட கொள்கைக்குள் அடகுபவன் கூண்டின் கூரையையே வானமென்று வாதாடும் கூண்டிற் பறவையாகிவிடுகிறான். ஓர் உரையை மட்டும் ஏற்பவன் உண்மையின் பல பரிமாணங்களைக் காணாமல் போய்விடுகிறான் என்பதாகக் கூறும் பித்தன்,

மதவாதி
என் தோட்டத்துப்
பூவில் மட்டும்தான்
தேன் இருக்கிறது

என்கிறான்

இது மதக்கோட்பாட்டின் உண்மையை வெளிக்கொணர்வனவாக அமைகின்றது. அதாவது, இறைவன் என்பவன் ஒருவனே. அவன் மதத்தின் பெயரால் வெவ்வேறு பெயர்களில் அழைக்கப்படலாம். இதை உணராமல் மதத்தை மட்டும் பின்பற்றும் மதவாதிதான் என் மதத்தார் பின்பற்றும், என்மதம் வழிபடும் இறைவனே இறைவன் என்று இறைவனுக்கும் வரையறை செய்வான்.

அதனால்தான் தன்னை ஒரு தேனீ என்று சொல்லும் பித்தன் பூக்களின் வேறுபாடுகளைத் தேனீ இலட்சியம் செய்வதில்லை, எல்லாப் பூக்களிலும் தேன் உண்டு என்பதும், தேன் என்பது ஒன்றுதான் என்பதும் தேனீக்கு மட்டுந்தான் தெரியும் என்று சொல்வதில், இறைவன் ஒருவனே என்பதைப் பித்தன் உணர்ந்தவன் என்பதைக் காட்டுகின்றது. எனவே பூக்களாய் வேறுபடாமல் தேனாய் ஒன்றுபடுங்கள் என்பது, மதங்களால் வேறுபடாமல் இறைவனால் ஒன்றுபடுங்கள் என்ற சிந்தனைக்கு வழியமைக்கிறது.

### ஒருமைப்பாட்டு முரண்:

சிதறு தேங்காய் என்ற கவிதையில் சிதறு தேங்காய் உடைக்கப்பட அதனைப் பொறுக்க விழையும் ஒருவனைத் தடுக்கும் பித்தனின் கூற்றுக்கள் இடம்பெறுகின்றன. உடைந்து கிடப்பவர்கள் நாம்தாம் நம்மைத்தான் நாம் பொறுக்கிக்கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம் என்று கூறும் பித்தன்,

வீட்டிலும் வெளியிலும்
நீங்கள் / சிதறிக் கிடப்பதை
அறியவில்லையா?
மனமும்
வயிறும் உடைக்க
நீங்கள் ஒருவரே

இக்கூற்றிலிருந்து நாம் ஒவ்வொருவரும் குடும்பம் என்ற நிலையில் ஒருவராகவும், அதனைத்தாண்டிச் சமூகம் என்ற வெளியில் மற்றொருவராகவும் விளங்குகின்றோம் என்பதை அறிகிறோம். இங்கு மனத்திற்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவம் வயிற்றுக்கும் கொடுக்கப்பட்டுள்ளதைக் காணலாம். மனத்தால் உடைக்கப்படுவது என்பது ஏற்கவேண்டிய ஒன்றைச் சூழ்நிலையின் காரணமாக ஒதுக்கிவிடுவது. வயிற்றால் உடைக்கப்படுவது என்பது பசிக்கொடுமை காரணமாக நாம் சிலவற்றைச் செய்துவிடுவது எனலாம்.

### படிப்பறிவும், பட்டறிவும்:

புத்தகம் என்ற கவிதையில் மழைக்காகப் பள்ளியில் ஒதுங்கிய பித்தன் புத்தகங்களைப் பார்த்து,

புத்தகங்களே
சமர்த்தாயிருங்கள்
குழந்தைகளைக்
கிழித்துவிடாதீர்கள் என்கிறான்.

இதில் முரணைக் காணலாம். பித்தன் இவ்வாறு கூறக் காரணம் இன்றைய கல்வியானது வேலையில்லாப் பட்டதாரிகளைப் பெருமளவு உருவாக்குவதும், தொழில் தருவனவாக இல்லை என்பதும் தெரிகிறது. உலகில் நடைபோடத் தேவையானது இந்த ஏட்டுக்கல்வியைக் காட்டிலும் அனுபவக் கல்வியே என்பது பித்தனின் கருத்தாகறது. அதனால்தான் பித்தன்,

காகித ஓடங்களை
நம்பி இருப்பவர்களே
நீங்கள் எப்படி
அக்கரை போய்ச் சேருவீர்கள்? என்கிறான்

### முடிவாக:

இன்றைய சமூகத்தில் நாகரிகத்தின் மாற்றமென்று நாம் இறுக்கமான ஆடைகளோடு நிர்வாணமாகத் திரியும் நிலையும், மதங்களின் பெயரால் மனிதம் மறைந்து கிடக்கும் நிலையும், ஒவ்வொரு தனி மனிதனுக்குள்ளும் குடும்பம், சமூகம் என்ற இரண்டு நிலைகளுக்கு ஏற்பக் காணப்படும் இரட்டை நிலையும்

ஏட்டுக் கல்வியைக் காட்டிலும் அனுபவக் கல்வியே உலகில் நடைபோடப் பெரிதும் உதவுகிறது என்பன போன்ற நடப்பு நிகழ்வுகள் கட்டுரையின் வழி வெளிப்படும் முடிவுகளாகின்றன.

# மு.மேத்தா கவிதைகளில் நடப்பியல் ஒரு பார்வை

*கி. கதிர்வேல்*, ஆய்வு மாணவர்,
என்.ஜி.எம். கல்லூரி, பொள்ளாச்சி.

முன்னுரை

இன்றைய சமுதாயத்தின் ஏற்றத்தாழ்வுகளை சமூகச் சீர்கேட்டை எடுத்துரைக்கும் ஒரு காலக்கண்ணாடியாக விளங்குவதில் புதுக்கவிதை - மிகச் சிறப்பாகப் பங்காற்றி வருகின்றது. புதுக்கவிதை புனைவதில் பல்வேறு கவிஞர்கள் தம் பங்கை இனிதே ஆற்றியுள்ளனர். அவ்வரிசையில் கவிஞர் மு.மேத்தா அவர்கள் குறிப்பிடத்தக்கவராவார்.

## கவிஞரின் கவின்மிகு படைப்புகள்

மு. மேத்தா அவர்களின் கவிதை நூல்களில் மிகவும் பிரசித்தி பெற்றது கண்ணீர் பூக்கள் என்ற கவிதை நூலாகும். கவிஞர் 2004ம் ஆண்டு படைத்தளித்துள்ள ஆகாயத்துக்கு அடுத்த வீடு என்னும் கவிதை நூலில் சமுதாயத்தின் பல்வேறு அவலங்களையும், பெண்கள் நிலைபற்றியும் இனிதே எடுத்துக்கூறியுள்ளார்.

இத்தோடு மட்டுமல்லாது கவிஞர் கவிதைச் சிறுகதை, புதினம், கட்டுரை, போட்டிகள், காவியம் போன்றவையும் படைத்தளித்துள்ளார். மேலும் திரைப்படங்களுக்கும் பாடல்கள் பலவும் படைத்துள்ளார்.

## கவிஞரின் கவிதை நோக்கில் சமுதாயப் பார்வை

ஊர்வலம் - 1977 ஆம் ஆண்டின் சிறந்த கவிதை நூல் என்று தமிழக அரசின் முதற்பரிசு பெற்ற இந்நூலில் அவர்களும் இவர்களும் என்ற தலையில் அமைந்த கவிதையில்

"மயிலின் நடுக்கத்துக்குப்
போர்வை கொடுத்த பேகனே
எங்கே போய்த் தொலைந்தாய்?
வா
லட்சோப லட்சம் பச்சை மயில்கள்
வறுமை அடிமை வரதட்சணைக் கொடுமை
இவற்றில் நடுங்குகின்றன - என்றேன்
வேக வேகமாய்
எதிரே வந்த பேகன்
அவரச அவசரமாய்ப்
போர்வையை எடுத்துத்
தன்
முகத்தைப் போர்த்துக்கொண்டான்" ((மு.மேத்தா,ஊர்வலம் ப.39)

என்ற வரிகள் சலிப்போடு சிந்திக்கவும் வைக்கின்றன. வறுமை, அடிமை, வரதட்சணைக் கொடுமை என்று கவிஞர் கூறியதோடு இன்றைய காலகட்டத்தில் நடக்கும் கொலை, கொள்ளை போன்றவைகளையும் சுட்டிக்காட்டுகிறது. மு.மேத்தா அவர்கள் தேசப்பிதாவுக்கு ஒரு தெருப்பாடல்களின் அஞ்சலி எனும் தலைப்பில் நமக்குப் படைத்தளித்துள்ள கவிதையைப் படிக்கும் போது தேசத்தின் நிலை நமக்கு நன்கு புலானகிறது.

"ஒரே ஒரு விஷயத்தில் மட்டும்
இந்த நாட்டு மக்கள்
உன்னை
அப்படியே பின்பற்றுகிறார்கள்
அரைகுறையாகத்தான்

உடுத்துகிறார்கள்
தேசம் போகிற
போக்கைப் பார்த்தால்
பிறந்த நாள் உடையே
எங்கள்
தேசீய உடையாகி விடும்போல்
தெரிகிறது" (மு.மேத்தா, கண்ணீர் பூக்கள் ப.34)

என்ற வரிகள், இன்றைய சமூகத்தின் ஆடை அலங்காரததின் அவல நிலையை நன்கு வெளிப்படுத்தியுள்ளது. இன்று நாம் கையில் வைத்திருக்கும் கைக்குட்டை நாளை நம் உடம்பிற்கு நவநாகரீக ஆடையாகிவிடுமோ என்று ஐயங்கொள்ளும் அளவிற்கு இன்றைய நவீன உலகம் நரக வாழ்க்கையைத் தேடிச் சென்றுகொண்டிருக்கிறது என்பதை வேதனையோடு மேத்தாவின் கவிதை வெளிப்படுத்தியுள்ளது.

சாதி மத பேதங்களால் வேறுபட்டுக்கிடக்கும் மனிதர்களைப் பார்த்து இறைவனும், கர்த்தரும், கடவுளும் மூவருமாக இணைந்து கேட்கும் கேள்வியாக ஒரே குரல் எனும் தலைப்பில் குறிப்பிடுகையில்,

"இடிந்து கிடக்கின்றன மசூதிகள்...
இடிபாடுகளின் உள்ளிருந்து
எட்டிப் பார்க்கிறான்
இறைவன்..
எரிந்து கிடக்கின்றன தேவாலயங்கள்
சாம்பல் குவியலில்
மெல்ல அசைகிறது
கர்த்தரின் தலை
காயம்பட்டுக் கிடக்கின்றன கோவில்கள்
காதுகளைப் பொத்தியபடி
கண்திறந்து பார்க்கிறான்
கடவுள்
வேடிக்கை பார்த்துக்
கொண்டிருக்கும்
கூட்டத்தை நோக்கி
மூவரும் நோக்கி
ஒரு கேள்வி
உங்களில் யாராவது
ஒரு மனிதன் இருந்தால்
வரச் சொல்லுங்கள்
ஒன்றாக நாங்கள்
உயிர்த்தெழுகிறோம்" (மு.மேத்தா, ஆகாயத்துக்கு அடுத்த வீடு.ப.31)

என்று எடுத்துக்கூறி இதே கருத்தைக் கவிஞர் தொலைக்காட்சியை நோக்கித் தொழுகை நடத்துவோம்" எனும் தலைப்பில் மிகச் சுருக்கமாகவும் சிறப்பாகவும் எடுத்துக் கூறுகின்றார்.

"அவ்வரிகள் வருமாறு
பெருமாள் கோவிலின் முன்
ஏராளமான
பிச்சைக்காரர்கள்

மசூதிகளின் முன்பு
முண்டியடித்தபடி
முஸாபர்கள்...
மாடி வீடுகளில்
மகிழ்ச்சி குறையாமல்
வாழ்பவர் தமக்குள்
வாதமிடுகிறார்
"இராமர் கோவிலா?" (பாபர் மசூதியா? ((மு.மேத்தா, கனவுக் குதிரைகள். பக்.72,73)

மேற்கண்ட வரிகளில் ஜாதி மத வெறியைத் தூண்டிவிட்டு அதை வேடிக்கை பார்ப்பவர்கள் பற்றியும் அதன் மூலம் சுயலாபம் ஈட்டுபவர்கள் பற்றியும் கவிஞர் தம் கவிதையின் வாயிலாக எடுத்துக்காட்டுகின்றார்.

## மு.மேத்தா கவிதைகளில் தாய்மை

ஒரு பெண் இந்த உலகத்தில் மிகப்பெரிய அளவில் மகிழ்ச்சி கொள்வது அவள் தாய் எனும் ஸ்தானத்தை அடையும் பொழுதுதான்

பெண்கள் உலகமே பெருமிதம் கொள்வது
தாய் எனும் பெயரைத் தாங்கும்போ தல்லவா?
அன்பே என்கிற அழைப்பை விடவும்
ஒரு பெண் அதிகம் எதிர்பார்ப்பது
அம்மா என்கிற அழைப்பை அல்லவா?

என்று கூறுவதன் மூலம் அம்மா என்கிற அளவற்ற மகிழ்ச்சியை ஏற்படுத்தும் வார்த்தையின் அருமை நமக்கு நன்கு புலனாகிறது. இதே போல் கவிஞர் தம்முடைய ஆகாயத்துக்கு அடுத்த வீடு எனும் நூலில் தாய்மையின் பெருஞ்சிறப்பைப் பறைசாற்றுகின்றார்.

"தாய்/பெட்டியை மேலே வைத்தான்/சிறிய பெட்டியைப்
புகை வண்டியின்/இருக்கைக்குக் கீழே
இழுத்துத் தள்ளினான்/தோள் பைபைக் கம்பியில்
தொங்க விட்டான்/கனமாய் இருக்கிறதென்று
கைப்பையைக் கழற்றினான்../கையில் பிடித்திருந்த
பத்திரிக்கையைக் கூடப்/பக்கத்தில் வைத்தான்
நெட்டி முறித்து/நிமிர்ந்தான்...
எதிரே/இடது தோளிலும்/வலது தோளிலும்
இடுப்பிலும்/மாற்றி மாற்றி
வைத்ததன்றி/தன் குழந்தையைக்/கீழே
இறக்கி வைக்காத/தாயைப் பார்த்துத்
தலை குனிந்தான்" (மு.மேத்தா, ஆகாயத்துக்கு அடுத்த வீ.டு.ப74)

இங்ஙனம் தாய்ப்பாசம் பற்றிக் கவிஞர் மிக அருமையாக உதாரணம்காட்டிச் சுட்டுகின்றார்.

## முடிவுரை

இவ்வாறாகக் கவிஞர் மு.மேத்தா அவர்கள் அரசியல் சமூகச் சீர் நிலைகளைத் தம் கவிதை நூல்களில் வாயிலாக இந்தச் சமுதாயத்திற்கு எடுத்துரைக்கின்றார். மேலும் புதுக்கவிதை புனையும் அனைத்துக் கவிஞர்களும் தாய்மை பற்றிப் பல கவிதைகள் படைத்துள்ளனர். அவ்வகையில் மு.மேத்தா அவர்களும் தம்நூல்களில் தாய்மை பற்றிச் சிறப்பாகக் கவிதை படைத்தளித்துள்ளது இச்சமூகத்திற்கு மிகவும் பெருமை சேர்க்கத்தக்கதாகும்.

# தமிழ் இலக்கியத்தில் நடப்பியலின் வளர்ச்சி நிலைகள்

முனைவர். *இரா. கலாவதி*, பேருரையாளர், தமிழ்த்துறை,
மீனாட்சி மகளிர் கல்லூரி, சென்னை - 24.

கவிஞனின் உள்ளத்து உணர்ச்சியின் வெளிப்பாடாகவும், வாழ்க்கையின் மறுபதிப்பாகவும் விளங்குவது இலக்கியம். தம் கவிதைகள் மூலம் சமுதாயத்தைச் சித்தரிப்பவன் கவிஞன். இலக்கிய வளர்ச்சிக்கு இலக்கிய இயக்கங்கள் துணைபுரிகின்றன. செவ்வியல் புனைவியல் அல்லது மிகை உணர்ச்சியியல், நடப்பியல், படிமவியல், கறியீட்டியல், இயல்பியல் போன்ற மேனாட்டு இயக்கங்கள் குறிப்பிடத்தக்கன.

## நடப்பியலின் தோற்றம்

"மேல் நாட்டில் முதலில் கவிதை இயல் (பொயட்டிக்ஸ்) தோன்றுகிறது. அதன் உட்பிரிவுகளாகக் காவிய இயல் (கிளாசிசம்) மிகை உணர்ச்சியியல் (ரொமாண்டிசம்) நிஜ வாழ்வியல் (ரியலிசம்) முதலியன தோன்றுகின்றன" என சி.சு. செல்லப்பா (படைப்பியல் பக்.9) குறிப்பிடுகின்றார். காவிய இதழின் நிதானத் தன்மைக்கு எதிராகத் தீவர மனப்பான்மை கொண்டதாக விளங்கியது மிக உணர்ச்சியியல். இதனுடைய அதிதீவிரம் மக்கள் மன இயல்புக்கு, நடப்புக்கு ஒவ்வாது போகவே மறுபடியும் தணிவை விரும்பும் மனப்போக்கு ஏற்பட்டது. அதீதமான கற்பனையும், மிகுதியான உணர்ச்சியும் கவிதையின் உண்மை அழகினைக் கெடுக்கின்றன என்னும் சிந்தனை எழுந்தது. உள்ளதை உள்ளபடியே சொல்லுவது, அதுவும் வாழ்வியலோடு நடைமுறைகளுக்கு ஒட்டியதாக கூறுவது என்னும் போக்கின் விளைவாகத் தோன்றியதே நடப்பியல். கண்கூடாகக் காணும் நடைமுறையோடு இலக்கியம் படைக்கப்படும் பொழுது அதில் மனித நேயம் ஒன்றுவது இயல்பு. இதனை முக்கியக் கூறாகக் கொண்டே இந்நடப்பியல் தோன்றியது. 19ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் உண்மைக்கு மாறானவைகளுக்கு எதிராக எழுதப்பட்ட சொல் நடப்பியல் ஆகும். பிரான்சு நாட்டில் 19ஆம் நூற்றாண்டு ஓவியக் கலைஞர்களுக்கிடையே ஒரு இயக்கம் கிளர்ந்து எழுந்தது அது அப்படியே இலக்கியத்திலும் தன் தாக்கத்தை ஏற்படுத்தியது என்று மேற்கண்ட நூலில் (பக்.55) குறிப்பிடுகின்றார். கலை கலைக்காகவே என்ற நிலை மாறி கலை நமக்காக. நம் வாழ்க்கைக்காக என்ற சிந்தனையின் விளைவே நடப்பியலாக மலர்ந்தது.

தமிழ் மொழியில் கி.பி. 15,16,17ஆம் நூற்றாண்டுகளில் சிற்றிலக்கியங்கள் பல புற்றீசல்களைப் போல தோன்றின. சொல்லணிகளும், பொருளணிகளும் யகமம், திரிபு, சிலேடை போன்றவை மிகுந்தன. தலபுராணங்களின் எண்ணிக்கை மலைப்பை ஏற்படுத்தின. இத்தகைய பாட்டுக்களை "உயிரில்லாப் பாட்டுக்கள்" என்றும் கருத்து மூலம் வாய்ந்த கற்பனையுள்ள பாடல்களை "உயிருள்ள பாட்டுக்கள்" என்றும் மு. வரதராசனார் குறிப்பிடுகின்றார். (இலக்கியத்திறன் ப. 299) கலம்பகம் பார்த்ததொரு கலம்பகமும், அந்தாதி பார்த்ததொரு அந்தாதி, மாலை பார்த்ததொரு மாலை தோன்றிய நிலை பாரதிதாசன் மனத்தில் கவலை ஏற்படுத்தியதை அவர் கவிதைகளில் காண்கிறோம். (பாரதிதாசன் கவிதைகள் ப. 589)

## நடப்பியலும் அதன் வகைகளும்

நடப்பியல் அல்லது எதார்த்த வாதம் என்பதற்கு மெய்மை கற்பனை கலப்பற்ற இயல்பான சித்தரிப்பு, அதிக அணி நலன்களின்றி, உள்ளவாறு நிகழ்ச்சி உரைத்தல், வாழ்க்கையைப் புகைப்படம் போல் சித்தித்தல், நுணுக்கமான விவரிப்பு நடைமுறைக்கு ஏற்றதாக கூறுவது, அப்பட்டமான உண்மையை விவரிப்பது, சமூக வாழ்வியலை சித்தரிப்பது, சமுதாய நடப்பை பதிவு செய்வது அறிவு பூர்வமானது, தன்மை நவிற்சியாவது; அறிவியல் சார்ந்தது செயல்முறையாகக் கூறுவது, எளியநடை எனப் பலவாறு பொருள் கொள்ளலாம். இந்நடப்பியல் சோசலிச எதார்த்தவாதம், விமர்சன எதார்த்தவாதம் என்னும் இரு பிரிவுகளை உடையது. இவ்விரு பிரிவுகளும் சமூக நோக்கம் கொண்டவை. மார்க்சியத்தின் இரண்டு முக்கிய தன்மைகளாகவும் இவை விளங்குகின்றன என்று ஆ. செககந்நாதன் (புதுக்கவிதையில் மார்க்சியம் பக். 22) கூறியுள்ளார். மனிதாபமான பேரக்கு கொண்ட சோசலிச எதார்த்தவாதம் அடக்குமுறையைத் தவிர்ப்பது, வேற்றுமையை அகற்றுவது. புதிய சமூக வாழ்வைத் தட்டி எழுப்பி வலுப்படுத்துவது என்ற அடிப்படைகளை உடையது. விமர்சன எதார்த்தவாதம் சமுதாயத்திலுள்ள குற்றங் குறைகளை வெளிக்காட்டி எள்ளி நகையாடி விமர்சிப்பது. விமர்சன இயல்பு நவிற்சி எனக் குறிப்பிடுவர் (மேற்படி பக். 20)

## தமிழ் மொழியின் வளர்ச்சி நிலை

வாய்மொழி, தொல்காப்பியக் காலம் முதல் கால் கொண்டு இக்கோட்பாடு வளர்ந்துள்ளது. 20 ஆம்

நூற்றாண்டில் பெரு வளர்ச்சியை அடைந்திருக்கின்றது. நடப்பியல் இலக்கியங்கள் என்ற பிரித்துக் காணும் அளவிற்கு, கவிதை, சிறுகதை, நாவல் எனப் பல கிளைகளாக விரிந்திருக்கின்றது. தமிழ் இலக்கியத்தின் இதன் வளர்ச்சி நிலையைக் காண்பது இக்கட்டுரையின் நோக்கம்.

வாய்மொழி இலக்கியங்கள் எதார்த்த வாழ்வைச் சித்தரிப்பன. பாமர மக்களின் எண்ண ஓட்டங்களை அப்படியே நடப்பியலாகப்படம் பிரித்துக் காட்டுபவை தொல்காப்பியர் குறிப்பிடும் "நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்" (தொல் பொருள் 54) என்னும் தொடர்க்கு விளக்கம் கூறவந்த இளம் பூரணர். இதில் வரும் உலகியல் வழக்கு என்பது உலகத்தோர் ஒழுகலாற்றோடு ஒத்து வருவது எனக் கூறியுள்ளது இவண் கருதத்தக்கது. சங்க இலக்கியம் நடப்பியல் கூறினைச் சிறப்பாக வெளிப்படுத்தியிருக்கிறது என்று பொன்மணி வைரமுத்து (சங்க இலக்கியத்தில் புதுக்கவிதைக் கூறுகள் பக். 200) கூறுவது சங்க இலக்கியம் உணர்த்தும் நடப்பயில் சிந்தனையை விளக்குகின்றது.

"உண்டி மதற்றே உணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தொடு கீழே"

என்ற கலித்தொகைப் (பக் 51) பாடல் மனிதனின் அடிப்படை உணவு அதை ஆக்கத் தேவைப்படும் நீர் இவற்றின் இன்றியமையாமையை உணர்த்துகின்றது. "உலகத்தோடு ஒட்ட ஒழுகல்" (குறள் 140) என குறள் கூறுகின்றது. இத்தகைய வாழ்க்கை முறை இல்லாதவர் பல கற்றும் கல்லாதவர் என்பது வள்ளுவரின் துணிபு. பழமொழி ஆசாரக் கோவை போன்ற நீதி இலக்கியங்களும் நடப்பியல் உண்மைகளை விளக்குகின்றன. சிலப்பதிகாரம் முப்பெரும் உண்மைகளைக் கூறும். "அரசன் அன்று கொல்வான்" நளாயினி, அருந்ததி போன்ற பத்தினிப் பெண்டிர் வணங்கப்படுவது. "காசிக்குப் போனாலும் கருமம் தொலையாது" என்ற மொழியும் இளங்கோவின் முப்பெரும் உண்மைகளின் நடைமுறை விளக்கங்கள் ஆகும். பக்தி இலக்கியங்களில் நாட்டுப்புற மரபுகள், மக்களிலக்கியமாக நடைமுறைக்கு ஏற்புடையதாக அமையவேண்டும் என்று கையாளப்பட்டுள்ளன. சிற்றிலக்கியங்களில் குறவஞ்சி, பள்ளு போன்றவை சேரி மொழியைக் கையாண்டாலும் நடப்பியலுக்கு மாறான கருத்துக்களைக் கொண்டதால் மக்களிடையே செல்வாக்கை இழந்தன. சித்தர் பாடல்களைத் தமிழ் இலக்கிய வரலாற்றின் மையப் பகுதியில் வைப்பர். நடப்பியலின் வளர்ச்சி நிலையை இவர் பாடல்களில் பரக்கக் காணலாம். கசப்பான உண்மைகளை வெளிப்படுத்துவது இவரின் நடைப்பாங்கு, உண்மைவேறு, பொய்வேறு என எடுத்துக் காட்டுவதும் இவரின் இலக்கிய மரபு. பொருளில்லாச் சடங்கை மேற்கொள்ளும் மக்கள் விமர்சனத்திற்கு உள்ளாகின்றனர்.

### சாவதான தத்துவச் சடங்கு செய்யுமூமைகாள்

தேவர் கல்லு மாவரோ! சிரிப்பதன்றி என் செய்வேன்! என்ற சிவவாக்கியர் பாடல் பல்வேறு உருவங்களைச் செய்து வைத்து வணங்குவதையும் பொருள் இல்லாத சடங்குகளைச் செய்வதையும் எள்ளி நகையாடுகின்றது. தனித்தமிழ் இலக்கியமும் புதுக்கவிதை வரவும் இருபதாம் நூற்றாண்டில் நடப்பியல் சிந்தனைக்குப் பெரிதும் சான்றாக அமைகின்றன. புதியசொல்லாட்சி, புதிய பொருளும் உடையதாக விளங்க வேண்டும் என்பது பாரதியின் வேட்கை. பொய்யை அடிப்படையாகக் கொண்டு இலக்கியம் படைக்கப்படுவதை கண்டித்தார். இதை இவரின் பாஞ்சாலிசபத முன்னுரை விளக்குகின்றது.

"எச்சில் இலை வீசப்படும் இடங்களிலெல்லாம் முண்டியடித்துக்கொண்டு ஓடும் ஒரு கும்பலை
முகத்தில் வழிந்த
உச்சிலைத் தூண்டிவிட்டு
நாளைய சோற்றைக் குறியாய் வைத்து
நகரும் கும்பல்" (பிரம்ம ராஜன் வலி உ[illegible]ருமட் மனிதர்கள் பக். 21)

என்ற கவிதை படம்பிடித்துக் காட்டுகிறது. சமத்துவம் அற்ற நிலையில் விலங்குகளோடு மனிதர்களும் எச்சில் இலைக்காக ஓடும்நிலை சோசலிச எதார்த்தவாதமாக வெளிப்பட்டுள்ளது.

"ஞான நல்லறமாது
இன்று
மூக்கணாங்கயிற்றின்
முடிச்சிறுக்கத்தில்
மூச்சுவிட முடியாமல்
திணறிக்கொண்டிருக்கிறாள்"

என்ற பொன்மணி வைரமுத்துவின் கவியரங்கக் கவிதை பெண்ணிய நடப்பியலை விளக்குகின்றது. பாரம்பரிய முடிச்சில் பெண்ணின் வாழ்வு அடிபட்டிருக்கும் நடப்பு இக்கவிதையில் பதிவாகியுள்ளது.

"நாங்கள் வேலைக்கு போகும் பெண்கள்
எங்கள் தாய்மை
பால் பவுடர் டப்பாக்களில் சிறைபட்டுக்
கிடக்கிறது" ( ரோஹிணி - திருமதி தேவமகள்)

என்ற இக்கவிதை வேலைக்குப் போகும் பெண்ணின் மனநிலைச் சித்தரிப்பு.

சர்க்காரு அதிகாரிகளால் இடிக்கப்பட்டும் தன் வீட்டைக் கண்டு தவிக்கின்றாள் ஓரு தாய்.

"பொத்தி வளத்த செடி
பூப்பூக்கு முன்னால
கத்தி எறியாதிக
கடப்பாறை வீசாதிக
ஆசையாய் வச்ச கொடி
அசங்காம இருக்கட்டும்
அவ வச்ச மல்லிகைதான்
எவளுக்கோ பூக்கட்டும்"

என்ற வைரமுத்துவின் கவிதை ஏழை மக்களுக்குச் சொந்தமான சிறுபொருட்களும் கூட ஆதிக்க வர்க்கத்தின் சொந்தமாகிப் போகும் அவலநிலையை விவரிப்பதாகும்.

நடப்பியல் ஆய்வில், அறிவியல் முக்கிய பங்கு வகிக்கின்றது. உண்மை தேடல் நடப்பியலுக்கும் அறிவியலுக்கும் பொதுவாகும்.

"இயற்கை /எழுதும் /அடித்துத் திருத்த
ஆகாயத்திலோர் அலுவலகம் திறப்போம்!
ஆளனுப்பி வைத்தால்/கோளாறு நடக்கலாம்
அந்த /அலுவலகத்தை/எந்திரங்களே நிர்வாகம் செய்யட்டும்"

என்ற தமிழன்பன் (திரும்பிவந்த தேர்வலம் பக். 14) கவிதை இயற்கை சீற்றத்தால் ஏற்படும் அழிவுகளைத் தடுக்க ஆகாயத்தில் "இயற்கைச் சீற்ற முன்னெச்சரிக்கை மையம்" ஒன்று திறந்தால் எப்படி இருக்கும்? என்று அனுமானித்தது. இதை இன்று சுனாமி தாக்குதல் நடைமுறையாக்க முயற்சி செய்கின்றது. கவிஞன் தொலைநோக்குப் பார்வை உடையவன். சமுதாய முன்னேற்றத்திற்காகச் சொல்லப்படும் அவரின் கருதுகோள்கள் நிரந்தர உண்மைகள் ஆகிவிடும் என்பதைக் காலம் உயர்த்தும்.சமூக, சமுதாய நடப்புகள் கவிதைகளாக உடனுக்குடன் பதிவாகிவிடும் என்பதை சுனாமி குறித்த கவிதைகளும், இலங்கைத் தமிழரின் நிலையறிந்த கவிதையும் உணர்த்துகின்றன.

"என்னைச் சுற்றிலும் பயம்/இருளாய் அப்பியிருக்கிறது
என் உடமைகள் என் எதிரிலே/எரிந்து கொண்டிருக்கின்றன
எனக்கு நேசமான தாய்மொழியும் /என் பெயருமே என் எதிரியாகி
என்னைத் துரத்துகின்றன விடாமல் (ராஜகோபாலன் "ழ" ப. 3)

இக்கவிதை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் ஓர் அச்ச நடப்பை அவலத்தோடு விளக்குகின்றது. எல்லாவற்றையும் இழந்து கொண்டிருக்கும் இலங்கைத் தமிழரின் சோகத்தை இது எதார்தமாக வெறிப்படுத்துகிறது.

"இன்னொரு தனுஷ்கோடி/இப்போதைக்கு வேணாம்மா
இயற்கைத் தாயே எங்கள் /மன்னிச்சு விட்ரும்மா (நா. முத்துக்குமார்)
மீன் குழம்பில் /பிணக்கவிச்சி (கபிலன்)
ஊரேவரும் /உன் காற்றை வாங்க
ஏன் வந்தாய் ஊருக்குள்
எம் மூச்சுக்காற்றை வாங்க" (நெல்லை ஜெயந்தா - ஆனந்த விகடன் 9.1.05 - பக் 188 - 189)

பிரெஞ்சு நாட்டில் தோன்றிய இக்கட்டுப்பாடு, தமிழ்மொழியில் அவர் காலத்திற்கு முன்பே வேரூன்றியிருந்ததையும், அக்கூறுகள் காலந்தோறும் வளர்ந்து, கிளைத்து, இருபதாம் நூற்றாண்டில் நடப்பியல் இலக்கியங்கள் என தனி இலக்கிய வகை உருவாகும் நிலை அடைந்துள்ளமையும் இக்கட்டுரை மூலம் தெரிந்து கொள்கின்றோம்.

## வன்மம் புதினத்தில் நடப்பியல் தன்மை

*ப.கவிதா,* முதுகலை-தமிழ் இலக்கியம் - நிறைவாண்டு,
அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கல்லூரி, சின்னக்கலையம்புத்தூர், பழனி.

### முன்னுரை:

தொடக்க காலப் புதினங்களில் வரலாற்றுச் செய்திகள் மட்டுமே அதிகம் இடம்பெற்று வந்திருக்கின்றன. அவையும் நீண்ட காப்பியங்களாகவே இருக்கின்றன. இந்நிலை மாறி, வருகின்ற சமுதாய மாற்றங்களுக்கு ஏற்ப அந்தந்த காலச் சமூகச் செய்தியினைக் கருவாகக் கொண்டு புதினங்கள் படைக்கப்பட்டு வருகின்றன. இன்றைய நடப்பியல் சூழ்நிலையில் இரண்டு கருத்தாக்கங்களை மையமாகக் கொண்டு புதினங்கள் படைக்கப்படுகின்றன. இந்தக் கருத்தாக்கங்களில் தலித்தியம் என்பதும் ஒன்றாகும். சமூகத்தில் இவர்களுக்கு எதிராகக் கொடுமைகள் நடப்பதால் இக்கருத்தை மையமாகக் கொண்டு பாமாவின் வன்மம் என்ற புதினம் படைக்கப்பட்டுள்ளது.

இன்றைய சமூகத்தில் காணப்படுகின்ற சமகாலப் பிரச்சனைகளாகிய சாதி, மதம், கல்வி, வறுமை, அரசியல், வேலையின்மை, சட்டத்தின் ஓட்டைகள், உழைப்பாளர் நிலை, உழைப்புச் சுரண்டல், மனித நேயம், சமுதாய நிலை இவை போன்ற பல ஏராளமான நடப்பியல் பிரச்சனைகளை பாமா தம் புதினத்தில் முன்வைத்திருக்கின்றார்.

### நடப்பியலின் தோற்றம்:

மேனாட்டில் இடைக்காலத்தில் வியப்பார்ந்த புனைவியல் இலக்கியங்களே அதிகச் செல்வாக்கு பெற்றிருந்தன. வீரம், தீரம், மாயம் போன்ற செயல்களும், வரலாற்றுத் தொடர்பான நிகழ்ச்சிகளும் அமைந்த கதைகள் புனைவியல் இலக்கியங்களில் இடம்பெற்று மக்களின் உள்ளங்களை அவை கவர்வனவாய் விளங்கின [1].

நடப்பியல் இயக்கம் இலக்கியத்தை மரபாகிய அடிமைத்தளையிலிருந்து விடுவிப்பதற்காகத் தோன்றியதாகும். நடப்பியல் அன்றாட வாழ்க்கை அனுபவங்களை விளக்கிக் கூறி இயற்கைத் தன்மையை வலியுறுத்துகின்றது [2] என்பர்.

### *நடப்பியலின் சிறப்புத் தன்மைகள்:*

1. சுவையாகப் படைக்க முடிதல்
2. நடைமுறை வாழ்வின் பல பகுதிகளையும் சுவையாக்கிக் கொண்டு விளக்குவது.
3. நிகழ்கால நிலையைக் காட்டுவது. [3]

### புதின ஆசிரியர் பாமாவின் நடப்பியல் சித்தரிப்புகள்:

தலித் சமூகத்தின் மீது தீராத பற்றுகொண்ட பாமா தம் படைப்புகளில் சாதிமத பேதத்தினால், ஆதிக்க வெறி கொண்டு, எளியார், வலியாரை வாட்டும் சமுதாயக் கொடுமைகளைப் பற்றி வன்மம் புதினத்தில் படைத்துக்காட்டியுள்ளார்.

### உழைப்பாளர் நிலை:

முன்னொரு காலத்தில் தலித்துகள் (பள்ளன், பறையன்) மேல் சாதியினரின் விவசாய நிலங்களில் பாடுபட்டு அவர்கள் கொடுக்கும் குறைந்த வருவாயை வைத்து தங்கள் குடும்ப வாழ்க்கையை நடத்தினார்கள். ஆனால் இப்போது அவர்கள் மேல்சாதியினரின் நிலங்களைக் குத்தகைக்கு எடுத்து, அந்நிலங்களில் இரவு, பகல் என்று பார்க்காமல் விளையாத மண்ணையும் விளைய வைத்து, அந்த நிலங்களுக்கு ஏற்ற பயிர்களை விளையச் செய்தும் தங்கள் வாழ்க்கையில் முன்னேற்றம் அடைகின்றனர் பறையர்கள்

ஆனா இந்த அளவுக்கு பள்ளர்க யாரும்
சம்சாரிக காடுகள் ஒத்தி எடுத்து பாடுபடல [4]

என்பதால் அவர்கள் (பள்ளர்கள்) முன்னேற்றம் அடையவில்லை.

## சமுதாய முன்னேற்றம்:

சமுதாயம் என்பது மக்கள் வாழும் இடம் ஆகும். சமயம், கல்வி, மொழி, பொருளாதார அமைப்பு மற்றும் அவர்கள் உலகத்தோடு ஒத்துப்போகும் தன்மையினைக் குறிப்பதாகும். முன்பு மேல்சாதியினரின் ஏவல் வேலையைச் செய்து கொண்டிருந்த தலித்துகளும் முன்னேற்றம் அடைந்துள்ளதை தம் புதினத்தில் கூறியுள்ளார் பாமா.

சாமிநாதனோட தாத்தா பாட்டி காலத்துல, வள்ளுசா கீழ்ரோட்டுல கெடந்தாக. சம்சாரிக வீட்டுகள்ள போயி சாணிசகதி அள்ளிப்போட்டு, ஏண்டா வேல எடுத்த வேலை செஞ்சுட்டு புளுச்சுப் போன பழைய கஞ்சியும் இத்தினி ஊறுகாவும் கொண்டாந்து நக்கிப் பொழச்ச காலம் அது [5]

ஆனால், அதுவே இப்போது,

கண்டம்பட்டி பறையர்க தெருவுல எடுத்துக்கிட்டா, டெய்லருக, வக்கீலுக, கொத்தனாருக, பிளம்பருக, டிரைவருக, கண்டக்டருக, டீச்சருக, போலீசுன்னு கண்ட தொழிலுஞ் செய்றவுகளப் பார்க்கலாம் [6].

என்று புதின ஆசிரியர் கூறியுள்ளதில் இருந்து சமுதாயத்தில் தலித்துகளும் முன்னேற்றம் அடைந்துள்ளதை அறிய முடிகின்றது. பல தலைமுறைகள் கடந்து இத்தகைய முன்னேற்றத்தை அடைந்திருக்கின்றனர். சிறிதளவு முன்னேற்றமே அடைந்துள்ளார்கள். இன்னும் முழுமையான சமுதாய முன்னேற்றம் அடையவில்லை

## சாதிமத இனவேறுபாடு:

பாமாவின் புதினத்தில் சாதி, மத, பேதம் கொண்ட சமுதாயத்தைக் காண விழைகின்ற, மனிதநேயமற்ற நடப்பியல் சிந்தனையினைக் காணமுடிகின்றது. ஐந்தறிவு கொண்ட மிருகங்கள் கூட ஒன்றுடன் ஒன்று நேசமுடன் வாழ்கின்றன.. ஆனால் ஆறறிவு கொண்டிருப்பதற்குப் பெருமைப்படும் மனிதன் தீண்டாமை என்னும் கொடிய செயலை நடைமுறையில் கடைபிடித்து வருகிறான்.

புதினத்தில் கூறியுள்ள கண்டம்பட்டி கிராமத்தில் பலசாதி மக்களும் வாழ்கின்றனர். பள்ளன், பறையன் முதற்கொண்டு அங்கு சாலியார், மூப்பனார், பன்னாடிமார், தேவர், செட்டியார், ஆசாரி, பிள்ளைமார், நாடார், நாய்க்கர் என்று எல்லா இன மக்களும் வாழ்கின்றனர். இப்படி பல இனத்தவர் வாழ்ந்தாலும் பள்ளனுக்கும், பறையனுக்கும் பகைமை உணர்வைத் தூண்டி விட்டுவிட்டு, தங்கள் இனத்தவர் (நாய்க்கர்) மட்டும் ஒற்றுமையுடன் வாழ்கின்றனர்.

உருவமே இல்லாத காற்று எல்லோரையும் ஆரத்தழுவி நேசம் கொள்கிறது. ஆனால் கண், வாய், கை, கால் என எல்லா உறுப்புக்களையும் பெற்றுள்ள மனிதன் வேற்றுமை பாராட்டுகிறான். [7]

அவனுக என்ன பெரிய மயிருகள். என்ன இருந்தாலும் உங்க ஜாதியை விட அவனுக மட்டந்தாண்டா நீங்க துணுஞ்சு எறங்குனீகன்னா, அவந் தன்னால அடங்கிப் போயிருவானுக. [8]

என்று லோகநாதன் நாய்க்கர் தூண்டி விடுவதாகப் புதினம் செல்கிறது.

## கல்வியால் ஏற்பட்ட முன்னேற்றம்:

நடப்பியலின் சிறப்புத் தன்மைகளில் ஒன்றான நிகழ்கால நிலையைக் காட்டுவது என்பதைத் தம் புதினத்தில் பாமா படைத்துள்ளார். ஒருவன் கல்வி பெற்றால் தன்னைச் சார்ந்த மக்களையும் முன்னேற்றப் பாதையில் கொண்டு செல்ல முடியும். அந்த வகையில் பறையர் தெருவில் படித்த இளைஞர்களினால் எதையும் சாதிக்க முடியும் என்பதை வன்மம் புதினம் தெளிவுபடுத்தியுள்ளது.

தெருவிற்கு இரண்டு வேப்ப மரங்களை நட வேண்டும் [9]

என்றும்,

தெருக்களைச் சுத்தம் செய்ய வேண்டும். அங்னக்குள்ளேயே துணி துவைக்கிறது, அங்னக்குள்ளேயே குளிக்கிறது பெறகு குடிக்கத் தண்ணி பிடிக்கிறது இப்படி சுகாதாரமில்லாமெ இருக்குது. இதுக்கு ஒரு வழி பண்ணனும். [10]

என்று படித்த இளைஞர்களே ஒரு கலைக்குழுவினை ஆரம்பித்து அதன்மூலம் தம்முடைய இன (தலித்) மக்களுக்கு பல அரிய நன்மைகளையும், விழிப்புணர்வினையும் ஏற்படுத்துகின்றனர்.

அன்று விவேகானந்தர் நூறு இளைஞர்களை என்னிடம் தாருங்கள் இந்தியாவை நான் மாற்றிக் காட்டுகிறேன் என்று கூறினார். இந்த கண்டம்பட்டி கிராமத்தில் சாமிநாதன், ஜெயராசு, அந்தோணி மூவரும் மற்ற இளைஞர்களை ஒன்றாகத் திரட்டி தன் கிராமத்தையே மாற்றி அமைத்துள்ளனர். இந்தச் செயல் விவேகானந்தரின் கனவை நினைவாக்கியதாகக் கொள்ளலாம். நடைமுறையில் படித்த இளைஞர்களினால் எதனையும் சாதிக்க இயலும் என்ற நடப்பியல் நிகழ்வினை ஆசிரியர் காட்டுகிறார்.

### உழைப்புச் சுரண்டல்:

ஆரம்பகாலங்களில் நாய்க்கர்களின் வயில்களில் வேலைசெய்து, அவர்கள் கொடுக்கும் பழைய சாதத்தைச் சாப்பிட்டுக்கொண்டும் வாழ்ந்தனர். இந்த நிலையிலும் தன் பிள்ளைகளைப் படிக்க வெளியூர்களுக்கு அனுப்பி வைத்தனர். அப்படி படித்து வந்தவர்களில் பலர் தம் இனமக்கள் (தலித்). என்னதான் உழைத்தாலும் அதற்குத் தகுந்த பலன் கிடைப்பதில்லை. எனவே அவர்களே (தலித்துகளே) கடினமாக உழைத்து வந்தனர். இதைச் சகித்துக் கொள்ள முடியாத நாய்க்கர்கள், பள்ளனையும், பறையனையும் மோதவிட்டு வேடிக்கைப் பார்த்தனர். இது தலித்துக்கள் எப்போதும் தங்களுக்குக் கீழான நிலையில் இருக்க வேண்டும். அவர்கள் தங்களுக்கு அடிமையாகவே வாழ்ந்து சாக வேண்டும் என்று நினைத்தார்கள். அது முடியாமல் போகவே பெரும் மனவருத்தம் அடைகின்றனர். சுரண்டப்படுகின்ற வர்கக்ச் சார்பினை விளக்குவது என்ற நடப்பியல் கோட்பாட்டினை இப்புதின ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

### வேலையின்மை:

நடப்பியல் என்பது மரபினை வழிபடுவதையும் செயற்கையாகிய மரபியல் ஒன்றையே உயர்ந்ததாகக் கொள்வதையும், அன்றாட வாழ்க்கையில் காணும் மனிதர்களை அல்லது நிகழ்ச்சிகளைச் சாதாரணமானதாகவும், கீழ்த்தரமானதாகவும் கொள்வதையும் எதிர்ப்பதாகும் என்ற நடப்பியலை விளக்க வந்த புதின ஆசிரியர்

கலவரம் ஏற்பட்டதினால எந்த வேலைகளுக்கும் செல்ல முடியாமல் ஓடி ஒழிந்து வாழும் வாழ்வு ஒரு வாழ்வா! என்ற உயரியக் கருத்தை முன்வைத்துள்ளார் ஆசிரியர்.

### வறுமை:

மக்களுக்கு வறுமையினால் ஏற்படக்கூடிய பாதிப்பைக் காட்டிலும் வேறு கொடுமை எதுவும் இருக்காது.

நிலங்களில் மேடுபள்ளங்கள் இருப்பது போன்று சமூகத்தில் ஏற்றத்தாழ்வு எப்போதும் இருந்துகொண்டுதானிருக்கின்றது. சாதாரண மனித மனத்திற்குத் தோன்றும் வண்ணம் நடைமுறையில் உள்ளதை உள்ளபடி காட்டுவதோடு தொடர்புடைய கலைக் கூறே நடப்பியல் என்ற கொள்கையினை இப்புதினத்தில் விளக்கி, கலவரம் ஏற்பட்டதால் அவர்களுக்கு ஏற்பட்ட வறுமையினைக் காட்டியுள்ளார்.

ஊர்ல பொம்பளைக வேல வெட்டிக்குப் போக முடியாம, கஞ்சி தண்ணி இல்லாமக் கஸ்டப்பட்டாக [11]

என்பதிலிருந்து கலவரத்தினால் ஏற்பட்ட வறுமையினை உள்ளது உள்ளவாறே உணர முடிகின்றது.

### சட்டத்தின் ஓட்டைகள்:

நாடு விடுதலை பெற்றும் மக்களின் மனம் விசாலமடையவில்லை எனக்கூறி வருந்தும் ஆசிரியர், சட்டம் மக்கள் நலன் கருதி மக்களைப் பாதுகாப்பதற்காகவே உருவாக்கப்பட்டது. ஆனால் அந்த சட்டம் குற்றவாளிகளுக்குச் சாதகமாகவே நடைமுறையில் உள்ளது.

குமரேசன் நாய்க்கர் காவல்துறையினருடன் வந்தார். அங்கே பள்ளர்களிடம் அந்த அதிகாரி,

நீங்க நாளைக்குக் காலைல மொத வேலையா என்ன செய்றீகன்னா ஒரு பத்துப் பதுனஞ்சு பேத்த எங்ககிட்ட சரண்டராக்கிடுங்க. எவனாவது ஏப்ப சாப்பையா இருந்தாம்னா, அவனுகள கொண்டாந்திடுங்க எல்லாத்தையும் நாம்பார்த்துகிறேன் [12].

என்று அரசாங்க அதிகாரியே குற்றவாளிகளுக்குத் துணை புரிகின்றார்.

எனவே, இங்கு சட்டம் என்பது பணபலம் மற்றும் ஆள்பலம் உள்ளவர்களுக்கு மட்டுமே. அதுவும்

மேல்சாதியினர் என்றால் கேட்கவே வேண்டாம். அவர் தவறே செய்திருந்தாலும் அது தவறில்லை. இதே கீழ்மட்டத்தில் இருக்கும் ஒருவன் செய்திருந்தால் அதுவே பெரிய தவறாகக் கருதப்பட்டு அவனை கொடுமைப்படுத்துவர். சட்டம் என்பது எல்லோருக்கும் பொதுவானது என்பது வெறும் ஏட்டளவில் மட்டுமே, நடைமுறைக்கு அவ்வாறு அல்ல என்பதை இந்த வன்மம் புதினம் மூலம் வெளிப்படுத்தியிருக்கின்றார் புதின ஆசிரியர்.

## நடப்பியல் தன்மை:

சாதிக் கலகமானது இன்றளவும் கிராமங்களில் அன்றாடம் நடைபெறும் நிகழ்வுகளாக உள்ளன என்பதை நடப்பியலாகப் புதினம் உணர்த்தியுள்ளது. அதிகமான சாதிப் பிரச்சனைகள் பெருகி வருவதற்குக் காரணம் சாதிகளும், சமுதாய அமைப்பு முறைகளுமே ஆகும். புதினத்தில் தாழ்த்தப்பட்ட ஒரே இனத்தைச் சேர்ந்த மக்களுக்குள் ஏற்படுகின்ற ஏற்றத்தாழ்வுகள் அவ்விரு இன மக்களிடையே பகைமையை ஏற்படுத்துகின்றது. இந்தப் பகைமையை மேல்சாதி மக்கள் தமக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். அதன் விளைவு உயிர்ப்பலிகள். பின் மேல்சாதி மக்களின் சூழ்ச்சியை உணர்ந்து இவ்விரு இன மக்களும் தங்களுக்குள் இருந்த ஏற்றத்தாழ்வினை மறந்து ஒற்றுமையுடன் வாழலாம் என்ற உயரிய கருத்தை முன்வைத்துப் புதினம் அமைந்துள்ளது.

அம்புட்டுச் சாதிக்காரனும் இன்னைக்கு மூக்குமேல வெரல வச்சு நம்மள அருவசமாப் பாக்குரானுக. பிருஞ்சு கெடந்த நம்ம ஒன்னாச் சேர்ந்துட்டோம். இனிமேல்பட்டு நம்ம ரெண்டு சாதிகளும் சண்ட சச்சரவு போடாமெ வாழனும் [13].

என்றும்

இனிவரும் தலைமுறையாவது, வன்மமில்லாமெ, வன்முறையில்லாமெ, சண்ட சச்சரவு இல்லாமெ ஒன்னா மண்ணா இருக்கனும் [14].

என்ற நடப்பியலின் நிகழ்காலத் தன்மையினை இப்புதினம் காட்டியுள்ளது.

## தொகுப்புரை:

ஆசிரியர் பாமா தம் புதினங்களில் அன்றாட வாழ்வின் எவ்வித கற்பனையும் இன்றி, உள்ளது உள்ளபடி இயல்பாக நிகழ்கின்ற நடப்பியல் நிகழ்வினைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

சாதி, இன, மத, பேதமில்லாத மக்கள் சமுதாயத்தை உருவாக்க வேண்டும் என்ற நோக்கத்தில் படைத்துள்ளார்.

ஒரு நாட்டின் வளர்ச்சியானது அந்த நாட்டில் வாழுகின்ற மக்கள் சமூகத்தைப் பொறுத்தே அமைகின்றது.

சாதிவெறி கொண்ட மக்கள் சமூகம் என்றைக்குமே வளர்ச்சியடையாது என்ற உயரிய நோக்கத்தினை வலியுறுத்தியுள்ளது பாமாவின் வன்மம் என்ற இப்புதினம்.

## அடிக்குறிப்புகள்:


1. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.348
2. நா. பிச்சமுத்து, இலக்கிய இயக்கங்கள், ப.142.
3. மேலது, ப.144.
4. பாமா, வன்மம் புதினம், ப.13.
5. மேலது, ப. 13
6. மேலது, ப.14.
7. சந்திர சேகரன், கட்டுரை தொகுப்பு, ப.158.

# ஏறு வெயில் நாவலின் சமூகப் பதிவுகள்

***இரா. கவிதா*** எம்.ஏ., எம்.ஃபில்., விரிவுரையாளர் - தமிழ்த்துறை,
எம்.வி.எம். அரசு மகளிர் கலைக்கல்லூரி,திண்டுக்கல்.

## முன்னுரை

இலக்கியப் போக்குகளில் ஏற்பட்ட மாறுதல் வட்டாரமொழி இலக்கியங்கள் செல்வாக்குப் பெறக் காரணமாயின எனலாம். படைப்பிலக்கியங்கள் சமூக நிகழ்வுகளை இலக்கியச் சுவையோடு பதிவு செய்து வந்த நிலைமாறி எதார்த்தமான மக்கள் வழக்கு மொழியியை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டது ஏறு வெயிலில் நாவல்.

ஏறு வெயிலில் நாவலிலன் ஆசிரியிர் பெருமாள் முருகன் கொங்கு வட்டார மொழியில் நன்கு பயிற்சி பெற்றவர் அவரது தொகுப்பான கொங்கு வட்டாரச் சொல்லகராதி தமிழக அரசின் விருது பெற்றது. மிகவும் எதார்த்தமான நேர்மையான உணர்வுச் செறிவுள்ள நாவல் என்று விக்கிரமாதித்தனால் குறிக்கப்பெறும் இந்நாவலின் சமூகப் பதிவுகளை வகைப்படுத்தி விளக்குகிறது இவ்வாய்வுக் கட்டுரை.

மனிதன் ஒரு சமூக விலங்கு என்பது சமூக அறிவியலாளர் கருத்தாகும். காலமாற்றத்திற்கேற்ப தன்னை தகவமைத்துக் கொள்ளும் கட்டாயத்திற்கு மனிதன் தள்ளப்படுகிறான். அவ்வாறு அவன் தன்னை மாற்றிக்கொள்ள முயலும் போது மண்ணின் வாசனையோடு பழகிவிட்ட அவனது பண்புகளும் அவன் மீது ஆதிக்கம் செலுத்த விரும்பும் புதிய மாறுதல்களும் முரண்படும் போது அவனது பெறுதல்களும் இழப்புகளும் தனி மனித வாழ்விலும் சமுதாய அமைப்பிலும் சலனங்களை தோற்றுவிக்கின்றன. இச்சலனங்களை உள்ளது ள்ளவாறே பதிவு செய்துள்ளது ஏறு வெயிலில் நாவல். நாவலில் காணப்படும் சமூகப் பதிவுகளை

1. சாதீய வெறி, 2. முதலாளித்துவ சமூகம், 3. மாறும் சமூக விழுமியங்கள், 4. மாறும் சமூக அமைப்பு, 5. மொழிநடை எனப் பகுத்துக் காணலாம்.

## சாதீய வெறி

சிறப்பொக்கும் செய்தொழில் வேற்றுமையான் என்ற தமிழர்நெறி மாறி பிறப்பால் வேற்றுமை பாராட்டும் சமூக நிலை வர்ணாசிரம ஆதிக்கப்போக்கின் விளைவாகும். இந்திய அரசியல் விடுதலைக்குப்பின் அனைவருக்கும் கல்வி பரவலாக்கப்பட்ட் போதிலும் மனிதனுக்குள் ஊறித்தேங்கி கிடக்கும் சாதி வெறி அவ்வப்போது நிகழும் சமூக வன்முறைகள் மூலம் வெளிப்படக் காணலாம். கல்வி நகர்புறங்களில் ஆதிக்கம் செலுத்தவே செய்கின்றது எனலாம்.

நகர் மயமாதலில் தன் இடங்களையும் இழந்து போகிறது ஒரு சமூகம். அவர்கள் இழந்த பகுதியில் புதிதாக காலனிக்குடியிருப்புகள் உருவாகின்றன. குடியிருப்பில் வசிக்கும் பாங்க் ஆபிசரின் தந்தை இறந்து போகின்றார். அவர்களுக்குரிய சுடுகாடு அரசால் முடிவு செய்யப்படவில்லை. இந்நிலையில் நாவலில் வரும் ஒரு சமூகத்தைச் சார்ந்தவர்கள் தங்கள் சுடுகாட்டில் இறுதிச் சடங்கு செய்ய மறுப்பது சமூகத்தில் தங்கள் இருப்பைப் பலவீனமாக வெளிப்படுத்தும் கடைசி முயற்சியாக அமைகிறது எனலாம்.

காலனி குடியிருப்பில் வசிக்கும் பெண்ணிடம் அ.தி.மு.க சுப்பிரமணி தவறாக நடந்து கொண்ட பொழுதும் தங்கள் சாதிக்காரன் என்ற ஒரே காரணத்திற்காக அவனை ஆதரிக்கும் போக்கு அச்சமூகத்தினரிடம் காணப்படுகின்றது. நாவலில் இடம் பெறும் இந்நிகழ்வுகள் மனித நேயத்தையும் மீறிய சாதி வெறியின் வெளிப்பாடாகவே அமைவதைக் காணலாம்.

## முதலாளித்துவ சமூகம்

முரண்பாடுகளே சமூக இயக்கத்திற்குக் காரணமாகின்றன. எதிரெதிர் நிலையில் அமையும் இரு கோட்பாடுகள் சமூக இயக்கத்தில் ஒன்றின் சிதைவே மற்றொன்றின் எழுச்சியாக அமைகிறது. பன்னாட்டுப்

பொருளாதாரத்தின் விளைவு நிலவுடமைச் சமுதாயம் சிதைந்து தொழில்வள முதலாளித்துவ சமுதாயத்தின் வளர்ச்சிக்குக் காரணமாகிறது. தொழில்வள சமுதாயம் மனிதனின் புறத் தேவைகளை மிக விரைவில் செய்வதுடன் ஆடம்பர வாழ்க்கைக்கும் வழிகாட்டுகிறது. மேலும் தனிமனித ஆதிக்கத்திற்கும் அதிகார போக்கிற்கும் காரணமாகின்றது. இதனை நாவல் சுட்டிக்காட்ட முனைகிறது எனலாம்.

இரண்டு வகையான மாந்தர்கள் நாவலில் இடம் பெறுகன்றனர். நிலத்தின் மீது பற்றும் பாசமும் கொண்டு பழைமையை இழக்க முடியாமல் புதுமையைத் தவிர்க்க இயலாதவர்களாய்த் தவிக்கும் முதல் வகையினர். இரண்டாம் வகையினர் சூழலுக்கேற்ப விரைந்து தங்களை மாற்றிக்கொண்டு அதற்கேற்பத் தங்கள் வாழ்க்கையை வளப்படுத்துவதில் முனைபவர்கள். இவ்விருவகையினரைச் சேர்ந்தவர்களாக நாவலில் வரும் நிலத்தின் மீது பற்றுக் கொண்ட பென்னையன் தந்தை பைனான்ஸில் பணம் போடுவதும், உடல் உழைப்பை மறுத்து வட்டிக்கு பணம் கொடுத்து வாங்குவதில் மகிழும் தாய், வியாபார நுணுக்கம் அறியாத போதும் கடை வைத்து நடத்தும் தமையன், அறியாமையைப் பயன்படுத்தி பணம் சுரண்டும் தி.மு.க. மொண்டிராமு, தன் ஆடம்பரத்திற்கும் அதிகாரப் போக்கிற்கும் தன் சமூகத்தை அடிமைப்படுத்தி அ.தி..க சுப்பிரமணி போன்றோர் நகர்மயமாதலில் தங்கள் அடையாளத்தைத் தொலைத்து விட்டு முதலாளித்துவ சமூகத்திற்கு பலியாகிப் போகின்றனர் எனலாம்.

### மாறும் சமூக விழுமியங்கள்

ஒரு குழு அல்லது இனத்தவரின் ஒட்டுமொத்த நடத்தை அந்தக் குழு அல்லது இனத்தவரின் பண்பாடாக பரிணமிக்கிறது. பண்பட்ட சமூகத்தின் மிகச் சிறந்த கூறுகளாக அன்பு, அடக்கம், ஒழுக்கம், பொறுமை, மனிதநேயம், கற்பு, வீரம், சகிப்பத்தன்மை போன்றவைகள் இன்றளவும் போற்றப்படுகின்றன. ஆனால் முதலாளித்துவ சமூக அமைப்பின் ஆதிக்கம் காரணமாக சமூகத்தின் உயர்ந்த கருத்தியல்களும், எதார்த்த வாழ்க்கையும் இயைந்து செல்வதில் பெரும் முரண்பாடு காணப்படுகின்றது. பெருகி வரும் தனிமனித ஆதிக்க, ஆடம்பர, சுயநல தேவைகள் மனிதப்பண்பை இழக்கச் செய்து இரக்கமற்ற செயல்களுக்குத் தூண்டுகோலாக அமைகின்றன எனலாம்.

“ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்” என்பது வள்ளுவரின் பொய்யாமொழி. நாவலில் கல்லூரிக்குச் செல்லும் பொன்னையனுக்கு நடைபெறும் மிகக் கேவலமான ராகிங், மாறும் சூழ்நிலையில் வாழ்தலின் அவசியம் தந்தை குப்பாண்டியே தன் மகள் ராமாயியை விபச்சாரத்திற்கு உட்படுத்தும் நிலை, பணம் கொடுத்துச் செல்வதை நியாயப்படுத்தும் பொன்னையன் நண்பன் முரளியின் பேச்சு போன்ற நிகழ்வுகள் இடம் பெறுகின்றன. இந்நிகழ்கவுகள் ஒரு சமூகத்தின் வாழ்க்கைத் தரத்தையே கேள்விக்குரியதாக்குவதைக் காணலாம்.

### மாறும் சமூக அமைப்புகள்

ஒவ்வொரு சமூகமும் தனக்கேவுரிய சமூக அமைப்பைக் கொண்டு விளங்குகிறது. ஒவ்வொரு சமுதாயமும் வலுவான காரணமில்லாமல் தங்கள் சமூக அமைப்பை மாற்றிக் கொள்ள முயலுவதில்லை. சமூக அமைப்பு சமூக நிறுவனங்களால் நிலை நிறுத்தப்படுகின்றது எனலாம். சமூக நிறுவனங்களுள் முதன்மையானது குடும்பம். குடும்பம் உறவுகளால் பிணைக்கப்பட்டு நிலைநிறுத்தப்படுகிறது.

முதலாளித்துவ சமூக அமைப்பில் முதலில் சிதைவது சமூக உறவுகள் ஆகும். முதலாளித்துவ சமூகம் இயந்திரமான பொருளியலுக்கு முதன்மை அளிப்பதால் அன்பு, பாசம் முதலான கருத்தியலுக்கு முதன்மை அளிக்கும் சமூக உறவுகள் சிதைகின்றன. பெற்ற பிள்ளைகள் இருந்தும் வெள்ளத்தில் அனாதரவாய் தத்தளிக்கும் பொன்னையன், தாத்தா பாட்டி மாமியார் மீது காரணமில்லாமல் வெறுப்புக்காட்டும் தாய், பணத்திற்காக வீட்டு மாப்பிள்ளையாகும் பெரியப்பா, அதன் காரணமாக பெற்றவரை பராமரிக்கத் தட்டிக் கழிக்கும் செயல், பணம் இல்லையென்றதும் உறவை வெட்டிக் கொள்ளும் மாமா அத்தை, குடித்துவிட்டுத் தந்தையை எதிர்க்கும் அண்ணன், தந்தை பைனான்ஸில் பணம் இழந்ததும், தன்னுடைய நகைகளை கொடுத்துதவ

மறுக்கும் தாய் என்று நாவல் சுட்டிக்காட்டும் உறவுகளின் சிதைவு பொருளை முதன்மைப்படுத்தி நிகழ்வதைக் காணலாம். நகர்மயமாதலின் விளைவாகக் கட்டப்படும் காலனிக் குடியிருப்புகள் வர்ணாசிரம தர்மத்திற்கு முடிவுகட்டுவதாக இருந்தாலும் முதலாளித்துவ சமூகம் வர்க்க வேறுபாட்டிற்கு வித்திடுவதையும் உணர முடிகின்றது.

## மொழிநடை

தனிமனித மற்றும் ஒரு இனத்தவரின் பண்பை வெளிப்படுத்துவது மொழி, மொழி அறிவு வளர்ச்சிக்கு மட்டும் பயன்படுவதில்லை. மாறாக பண்பாட்டு மரபை பாதுகாப்பதில் முக்கிய பங்கு வகிக்கின்றது என்பது சமூக அறிவியலாளர் கருத்தாகும். படைப்பிலக்கியங்கள் சமூகப் பங்கு வகிக்கின்றது என்பது சமூக அறிவியலாரின் கருத்தாகும். படைப்பிலக்கியங்கள் நீதிகளை இலக்கியச் சுவையோடு தருவது எதார்த்தத்திற்கு மாறானதாகக் கருதப்படுவதால் நாவலில் வரும் பாத்திரங்களின் பேச்சு வட்டார மொழி நடையில் அமைகின்றது. இது அவர்களது இயல்பான சமூக வாழ்வியல் முறையில் வெளிப்பாடாக அமைந்தாலும் இலக்கியச் சுவை அற்றதாக பிற வட்டாரங்களைச் சார்ந்தவர்கள் எளிதில்உணர்ந்து கொள்ள இயலாதவாறும் அமைந்துள்ளது.

## முடிவுகள்

1. சாதிவெறி மனித நேயத்தை இழக்கச் செய்கிறது எனலாம்.

2. நிலவுடமைச் சமூக அமைப்பு சிதைந்து தொழில்வள முதலாளித்துவ சமுதாயம் ஆதிக்கம் பெறுகிறது.

3. முதலாளித்துவ சமுதாய ஆதிக்கம் சமூக உறவுகள் சமூக விழுமியங்கள் சிதைவதற்குக் காரணமாகின்றது.

4. முதலாளித்துவ சமுதாய ஆதிக்கம் சமூக உறவுகளின் சமூக அமைப்பைச்சிந்தித்து வர்க்க சமூக அமைப்பிற்கு வழி கோலுகின்றது.

5. மாந்தர்களின் எதார்த்த வாழ்வை, பண்பாட்டை வெளிப்படுத்தும் மொழி இலக்கியச் சுவையற்று கொச்சையற்று எதேச்சையாக அமைகின்றது.

## துணை நின்ற நூல்கள்

12. ஞானி - தமிழில் நவீனத்துவம் - பின் நவீனத்துவம்

காவ்யா - பெங்களூர் - 560 038. டிசம்பர் 1997.

2. H.R. Mukhi M.A. - Principles of Sociology - Surjeet Book Dept. 1978 - Post Box 1425 - 4074-75, Naisarak - Delhi - 6.

# தமிழ் நவீன நாடகங்களில் - நடப்பியல்

*பா. குமார்,* தமிழ் உதவியாசிரியர்,
அ.ப.க. கல்லூரி, பழனி.

## முன்னுரை

மேலை நாட்டார் நமக்குத் தந்த இலக்கிய கொடை "நவீன இலக்கியம்" - "நவீனம்" என்ற சொல் பழமையின் நிராகரிப்பு என்று பொருள் கொள்ளாமல், புதிய சமூக மாற்றத்திற்கான புதிய கூறுகளின் தோற்றம். பழைய கூறுகளின் உதிர்வு என்று பொருள் கொள்ள வேண்டும். இது காலத்தின் சிருஷ்டி, கலைஇலக்கியங்கள் அனைத்துமே அவ்வக்கால வாழ்வின் சித்தரிப்புக்கள் என்பதால் நாடகமும் அது தோன்றும் கால வாழ்வைப் பிரதிபலிக்க வேண்டும் என நவீன நாடக ஆசிரியர்கள் கருதுகின்றார்கள்.

அவர்கள் வார்வின் போலித்தனங்களையும், அதீத கற்பனைகளையும் வெறுப்பது, அவற்றை மேடையேற்றுவது, அவற்றை பார்வையாளருக்கு உணர்த்திக் காட்டுவது. இம்முயற்சியில் உறுதியாக இருக்கின்றார்கள். நாடகத்திற்கு மேடை, ஒப்பனை, வண்ணவிளக்குகள், காட்சி நிர்மாணம், மேடைப் பொருட்கள் போன்ற அவசியமற்ற ஆராய்ச்சிகளில் இறங்குவதில்லை.

## நடப்பியல்

நடப்பியல் இயக்கம் இலக்கியத்தை மரபாகிய அடிமைத்தளையின்றும் விடுவிப்பதற்காகத் தோன்றியது. அன்றாட வாழ்க்கை அனுபவங்களை விளக்கி, இயற்கைத் தன்மையை வலியுறுத்துகின்றது என்பர். (1.142) நடப்பியல் படைப்பில் மிகை நவிற்சி அளவாகவே பயன்படுத்தப்படும். ஏதாவது ஒரு உணர்ச்சியையோ, பாத்திரத்தின் தன்மையையோ, அழுத்தமாகப் பதியவைக்க இந்த உத்தி பயன்படுத்தப்படும். (2.142)

## சோசலிச நடப்பியல்

தனிமனித உணர்வு மாற்றங்களைச் சித்தரிப்பது மட்டுமல்லாமல், சமுதாயத்தை மாற்றவல்ல, சமுதாய உணர்வு மாற்றங்களைச் சித்தரிப்பது சோசலிச நடப்பியலின் தொடக்கம். நடப்பியவ் உலகைச் சித்தரிப்பதற்கு நிகழ்காலத்தில் காலூன்றி நின்று உலகை நோக்க வேண்டும். வருங்கால வளர்ச்சியைக் காட்ட, மனித குலத்தின் கனவுகளில் இருந்தும் காட்சிகளில் இருந்தும், கலைக் கூறுகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இதனை நடப்பியலை விட்டு விலகுவதாகவோ, கற்பனை உலகில் சஞ்சரிப்பதாகவோ எண்ணக் கூடாது. (2-38)

## நடப்பியலும், குறிக்கோள் கலையும்

இவ்விரண்டும் கவிதை, நாடகம், காவியம், புதினம் முதலிய பல இலக்கிய வகைகளோடு தொடர்புடையன. கலைப்படைப்பின் இயல்பிற்கு ஏற்ற வண்ணம் இவை மிகுந்தோ, குறைந்தோ காணப்படும் என்கிறார் நா. பிச்சமுத்து.

நடப்பியலின் சிறப்புத்தன்மை என்று வரும்போது 1. சுவையாகப் படைக்க முயலுதல் 2. நடைமுறை வாழ்வின் பல பகுதிகளையும் சுவையாக்கிக் கொண்டு விளக்குதல் 3. நிகழ்கால நிலையைக் காட்டுதல் எனக் கூறலாம். (1-44)

## தமிழ் நவீன நாடகங்களில் - நடப்பியல்

தமிழ்க்கலைகளை - தமிழ்மரபை - அந்தக் காலச் சமூக பொருளாதார பிண்ணனியில் புரிந்து கொண்டு, மாறி வரும் காலச் சூழலுக்கு ஏற்பத் தமிழ் கலைகளை வளர்ப்பதும், அதை நவீனப்படுத்துவதுமான ஒரு பார்வை தமிழுக்குத் தேவைப்படுகின்றது. அது இன்று நவீன நாடகத்துறையில் உணரப்பட்டிருக்கின்றது.

## நீதித்துறை விமர்சனம்

"ஞானி" அவர்கள் எழுதிய "பலூன்" நாடகத்தில் நீதித்துறையில் ஏற்படும் முறையற்ற விசாரிப்புக்களை முன்வைத்து தன் கோபத்தை வெளிக்காட்டி இருக்கின்றார். "வேலியே பயிரை மேய்ந்த கதையாக" இதை கருத நேரிடுகிறது. மக்களின் அடிப்படை உரிமையைக் கோரும் போராட்டம் நடக்கின்றது. அதில் காவலரின் கட்டு மீறிய அடக்குமுறையால் கலவரத்தைத் தூண்டியவர்கள் இவர்களே என சிங்காரம், ரகு, சத்யன், ஆனந்தன், சபாபதி, உஷா ஆகியோர் நீதி மன்றத்திற்கு வரவழைக்கப்படுகின்றார்கள். இங்கு கேட்கப்படும் வினாக்களுக்கு நேரடியான விடைகளைத் தராமல் தங்கள் அத்துமீறிய கோபத்தை வெளிப்படுத்துகிறார்கள் ஒரு சான்று

அரசாங்க வக்கீல் - மேடம் நீங்க சிகரெட் பிடிக்கிறதுண்டா?

உஷா - நான் சாதாரண சிகரெட் பிடிக்கிறதில்ல. கஞ்சா போட்டுத்தான் பிடிப்பேன். அதுதான் என்கேரக்டர்....

ஜட்ஜ் - ஸ்டாப் தட் நான்சென்ஸ். பிஹேவ் ப்ராப்பர்லி திஸ் இஸ் ய கோர்ட் ரூம்

உஷா - தென் வாட்? என் கேரக்டரையும் பிகேவியரையும் பத்தி இவர் என்னை எஸ்டா பிளிஸ் பண்ணப் போறார்? ஒரு சாதாரண பஸ்பேர் ஹைக்காக் கண்டிச்சு ஒரு மிடில் கிளாஸ் பொண்ணு வந்துட்டா, அதை உங்களால பொறுத்துக்க முடியல, இல்ல? ஓங்க வீட்டுப் பொண்ணு ஓங்க பேச்சை மீறிட்டமாதிரி பயம் வருது இல்ல, உங்க டாட்டர்சை மாதிரி நானும் பத்தினிதான். அவங்க வெளியில வரல. நான் வந்திருக்கேன்.

எனும் பகுதியில் நியாமும் தார்மீகக் கோபமும் வெளிப்படுகின்றது. சாதாரண மனித மனத்திற்குத் தோன்றும் நடைமுறையில் உள்ளதை உள்ளபடி காட்டும் சிந்தனைக் கலைக் கூறே நடப்பியல். இங்கு இயல்பான மனித மனக்கோபம் வெளிப்படுவதைக் காட்டியிருக்கின்றார்.

## தனி மனிதக் கொடுமை

சென்னைக் கலைக்குழுவால் "கண்ணகி" என்னும் நாடகம் உருவாக்கப்பட்டது. உண்மைக் கதையை வைத்து எழுதப்பட்டது. இந்நாடகம் ஒரு காவல் நிலையத்தில், காவல் அதிகாரிகளாலேயே கற்பழிக்கப்பட்ட ஒரு அவலப் பெண்ணின் வாழ்க்கையையும், அதற்குப் பின் அவள் ஒரு புரட்சிப் பெண்ணாக மாறிய எழுச்சியையும், இந்நாடகம் உள்ளடக்கமாகக் கொண்டிருக்கிறது. நவீன அரசியலில் நவீன மனிதனுக்கு ஏற்படும் கொடுமைகள், சீர்கேடுகள், அவளின் அன்றாடப் பிரச்சினைகள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு இக்கலைக்குழு நாடகங்களைத் தயாரித்து சமூகத்தில் நிகழ்த்திக் காட்டுகின்றது.

## அரசியல்

மக்கள் நலனைப் பற்றி சிறிதும் அக்கறை கொள்ளாமல், தமக்குள் தாமே ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டு, அரசியலை ஒரு பொழுதுபோக்காக்கி, அவரவர் வெற்றி தோல்விகளையே குறிக்கோளாகக் கொண்டு, அப்பாவி மக்களை ஓட்டுப் போடச் சொல்லி, அவர்களைப் பலிகடாக்களாக்கும் அரசியல் வாதிகளின் இயல்பினைச்சுட்டும் வகையில் ந. முத்துச்சாமி அவர்கள் "நாற்காலிக்காரர்" எனும் நாடகத்தில் கதைப்பொருளாக்கி இருக்கின்றார். "சீட்டுக்கட்டு குழு ஒன்று, கோலிக்குண்டு குழு ஒன்று இரு குழுவினரும் நட்பாகவும் பகையாகவும் ஆட்டம் ஆடுகின்றனர். ஒரு வேடிக்கை பார்ப்பவனும், ஒரு நாற்காலிக்காரனும் சற்று தள்ளியிருந்து வேடிக்கை பார்க்கின்றனர். ஆட்டங்கள் பின்னர் மாற்றிக் கொண்டே செல்கின்றனர். கோஷம் போடற ஆட்டம், வாழ்க - ஒழிக ஆட்டம் தொடர்கிறது. இதில் வெற்றி தோல்வி கண்டுபிடிக்க முயல்கிறார்கள். தொடர்கிறது இறுதியில் பறவை விளையாட்டு ஆடலாம் என முடிவாகிறது".

கூஜாவில் உள்ள குறைந்த அளவு தண்ணீரில் கல்லைப்போட்டு தண்ணீர் மேலெழும்புவதைக் காணும் "காக்கை விளையாட்டு", எட்டுத் திக்கும் சென்று முழுங்குகிறார்கள். கூழாங்கல்லைக் கொடுத்து விரும்பிய வண்ணம் போடச் செய்கிறார்கள். இறுதியில் ஒரு கல் இருக்கிறது அதனை நாற்காலிக்காரரைக் கொண்டு போடச் சொல்கின்றார்கள்.

"சீட்டுக் கட்டுக் கோஷ்டியை எனக்கும் பிடிக்காது. அது நம்ம தேசத்து மரபில்லை, நம்ம தேசத்து விளையாட்டு இல்லை. அது மனிதனை அடிமையாக்குகின்றது. சூதாடியா ஆக்கிடுது. கோலிக்குண்டு நம்ம ஆட்டம், நம்ம தேசத்து கல்தோன்றின காலத்திலேயே அந்த ஆட்டமும் தோன்றியிருக்கனும் அதனாலே நம்ம தேசத்து விளையாட்டாக கோலிக்குண்டு கோஷ்டிக்குத்தான் என் கல என்று கூறி அந்தக் கல்லைக் கோலிக்குண்டு குழுவினரின் கூஜாவில் போடுகிறார். வெற்றி பெற்ற குழு ஊர்வலம் செல்கின்றது. தோற்ற குழு கூஜாவை உடைத்துவிட்டு, ஒழிக குரலிட்டு, ஒருவரை ஒருவர் உதைத்து அங்குமிங்கும் ஓடுகிறார்கள். இறுதியில் கலவரத்தில் நாற்காலிக்காரர் விக்கி கூக்குரலிடுகிறார். இந்நாடகத்தில் இடம்பெறும் சீட்டு, கோலி, கூஜா. கூழாங்கல் அனைத்தும் குறியீடுகளாக அமைக்கப்பட்டிருக்கின்றன. அழுக்கடைந்த சமுதாயத்தைக் காட்டுவது நடப்பியலுக்கு ஒத்தது. அனைத்துலகப் பார்வை இங்கு அமைவதைக் காணமுடிகின்றது.

## தலித்தியப் பார்வை

ஒடுக்கப்பட்ட சமூகம் இன்று தன்முகம் காட்டத் தகூங்கியுள்ள நிலையில் அவர்களின் உள்ளக் குமுறல்களை நவீன நாடகங்கள் வெளிக்காட்டுகின்றன. ஞானியின் "பலூன்" கதையில் அறுவரில் ஒருவன் தாழ்த்தப்பட்ட இனத்தவன். இருபத்தெட்டு வயது இளைஞன் பேசுகிறான்.

"என் பேரு சிங்காரம். நான் ஒரு பறையன். பறையன்னு சொல்லிக்கிடறதுல எனக்கொன்னும் வெக்கம் இல்ல. நான் எதுக்கு வெட்கப்படணும்? ஹரிஜன், கிரிஜன்னு சொல்றதெல்லாம் பிராடு, பறையனும் பள்ளனும் கடவுளோட புள்ளைன்னா அந்தக் கடவுள் ஏன் கோவில விட்டு வெளிய வந்து எங்க நிலமைய பாக்கல? அப்ப நாங்க என்ன, கடவுளோட வெப்பாட்டிக்குப் பொறந்த புள்ளைங்களா?" என்று வாதிடுகிறான். "சுரண்டப்பட்ட

வர்க்கச் சார்பினை விளக்குவது" என்ற நடப்பியல் கோட்பாட்டை இங்கு முன்வைக்கிறார்.

### சாதி - மதப் போராட்டம்

சென்னையில் இயங்கிவரும் "பல்கலை அரங்கம்" என்னும் நாடகக்குழு "தீனிப்போர்" என்ற நாடகத்தை நிகழ்த்திக் காட்டியது. காட்டில் வாழும் குள்ளநரி ஒன்று, காட்டில் உள்ள விலங்குகளையே வேட்டையாடிச் சலிப்புற்று, நாட்டில் உள்ள விலங்குகளைப் பதம் பார்க்க நாட்டு எல்லைக்கு வருகிறது. அத்தருணத்தில் நாட்டிலே வாழ்ந்து சலிப்புற்று, காட்டில் உள்ள விலங்குகளை வேட்டையாட நாட்டு நாய் ஒன்று - காட்டு எல்லைக்கு வருகின்றது. அந்த எல்லையில் முயல் கூட்டங்கள் மேய்வதைக் கண்ட நரியும், நாயும் அவற்றின் மீது பாய, ஒன்றோடு ஒன்று மோதி சண்டையிட்டுக் கொள்கின்றன. இதன் விளைவு காட்டு விலங்குகளுக்கும், நாட்டு விலங்குகளுக்கும் பெருத்த போர் நிகழ்கின்றது. போரின் முடிவில் இவ்விருவகை விலங்குகளும் சைவம் - அசைவம் என்று பிரிகின்றது. இது நாடகத்தின் கதை - இதில் காட்டு விலங்குகளும், நாட்டு விலங்குகளும் சமுதாயத்தின் குறியீடுகள். நம்முடைய சமுதாயத்தில் நிகழும் சாதி, மதப் போராட்டத்தைப் பிரதிபலிக்கும் வகையில் இந்நாடகம் அமைந்திருக்கிறது. இதில் சாதி, மதம், பேதங்களைச்சாடும் சமத்துவச் சமுதாயத்தைக் காண விழைகின்ற மனித நேய நடப்பியல் சிந்தனையைக் காண முடிகிறது.

### பெண்ணின் கதை

இந்திராப் பார்த்தசாரதியின் "கொங்கைத் தீ" எனும் நாடகம் பெண்ணின் கதையைப் பற்றிப் பேசுகின்றது. இதனைச் சொல்லும் போது

"இச் சமுதாயத்தின் போலிதர்மத்தைச்
சுட்டெரிக்கும்
பெண்மைக் கனல்தான்
கொங்கைத் தீ

எனக் கதைப் பொருளாகத் தெளிவுப்படுத்துகின்றார். கோவலனைப் பற்றித் தேவந்தி சொல்லும் போது

*அவரவர் குணமே அவரவருக்கு விதி இது வாழ்க்கையின்*
சட்டம்
மாற்ற இயலாது
நிலை கொள்ளா உள்ளம், கோவலன் இயல்பு

என்கிறார். இறுதியில் "கண்ணகி" மதுரையை எரிப்பதோடு கதை மடிகின்றது. மீட்டுருவாக்கம் செய்து நவீன இலக்கியப் பாங்கில் இதனை அம்மைத்திருக்கின்றார். இது போலவே பிரமிள் - "நட்சத்திரவாசிகள்" எனும் நாடகத்தில் பெண்ணியம் பற்றிச் சொல்லிச் சொல்கின்றார்.

### நகர வாழ்க்கை - நரக வாழ்க்கை

சென்னைக் கலைக்குழுவின் - "மாநகரம்" என்ற நாடகத்தில் சென்னை வாழ்க்கையின் சீர்கேடுகளைக் கோர்வையாக்கி, நிகழ்ச்சிகளாக மாற்றியிருக்கின்றார்கள். நகர வாழ்க்கையில் போதிய வசதியில்லாமல் அவதிப்படும் ஏழை மக்களின் அவல நிலைகளை நாடகம் உள்ளடக்கமாகக் கொண்டு அமைகின்றது.

அது போல் இவர்களின் "உரம்" எனும் நாடகம் ஒரு ஏழை விவசாயிக்கு விவசாயத் தொழிலில் ஏற்படும் பிரச்சனைகள், அவனுக்கு உதவுகிறோம் என்று வரும் அரசாங்கத்தால் ஏற்படும் தொல்லைகள் பற்றி நாடகம் பேசுகின்றது. இங்கு அன்றாட வாழ்வில் நிகழும் பிரச்சனைகளும், நிகழ்வுகளும் விளக்கும் நடப்பியல் தன்மை பேசப்படுகின்றது.

### சுற்றுப்புறச் சூழல்

மதுரை நிஜநாடகக் இயக்கத்தினரின் "சுற்றுப்புறச் சூழல்" என்ற நாடகம் நகரங்களில் வாழும் மக்கள் சுற்றுப்புறச் சூழல் சீர்கேடுகளால் என்னென்ன அவதிக்குள்ளாகிறார்கள். அதனால் என்னென்ன நோய்கள் வருகின்றன என்ற கருத்தை நாடகம் புலப்படுத்துகின்றது. குறிப்பாக நகரங்களில் உள்ள தொழிற்சாலைகள், சாலைகளில் செல்லும் வாகனங்கள் ஆகியவை வெளியேற்றும் புகை மண்டலங்களால் மக்கள் எவ்வாறு பாதிக்கப்படுகிறார்கள் என்பதைச் சொல்கின்றது. இது நவீன உலகம் இன்று எதிர்கொள்ளும் முக்கியப் பிரச்சனையாகும். இங்கு சமூக நிகழ்வு இந்நாடகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

### சுவரொட்டிகள்

தற்காலச் சடங்குகளில் ஒன்றினைப் பின்பற்றி "சுவரொட்டிகள்" என்ற நாடகம் துவங்குகின்றது.

“நோட்டீஸ் ஒட்டக்கூடாது” என்று எச்சரிக்கை செய்தும், மீறி அதில் ஒட்டுவது என்பது தினசரி நாம் காணும் நிகழ்வாகும். இந்தக் காலத்து சுவரொட்டிகள் உண்மைகளை உணர்த்துவதற்கு மாறாக உள்ளதைக் குழப்பும் வாசகங்களாக இருக்கின்றது என்பதை இந்நாடகம் காட்டுகின்றது. வாழ்வின் ஒரு பகுதியாக மாறிவிட்ட “சுவரொட்டிக் கலாச்சாரத்தை” இந்நாடகம் காட்டுகின்றது.

### சான்று

முகமூடிய தீட்டிய சுவரொட்டிக்கு அருகே ஏணியில் முகமூடியுடன் ஒருவன் நிற்க, தரையில் தலையாட்டும் பொம்மைகளாக மற்றவர்கள் நிற்பது சமூகத்தை வேலிக்குள்ளாக்குவதாக அமைகிறது. இங்கு சாதாரண ஒரு சுவரொட்டிக் கலாச்சாரம் கதையாக்கப்பட்டு சமூக அவலங்களை பிரதிபலித்துக் காட்டுமுகமாக அமைவது சிறப்பு.

### மனநோயாளி

“ருத்ரன்” என்பவர் எழுதிய “விசாரணை” எனும் நாடகம் ஒரு நடுத்தரவர்க்க திருமணமாகாத இளைஞன் ஒருவன் ஒரு அலுவலகத்தில் தட்டச்சராக வேலை பார்த்து வருகின்றான். அவன் விடுதியில் தங்கி இருக்கின்றான். அவன் விடுதியிலிருந்து புறப்பட்டு அலுவலகம் செல்வது, வேலை பார்ப்பது, மாலையில் அங்கிருந்து விடுதிக்குச் செல்வது. இப்படியே தின வாழ்க்கை ஓடுகிறது. பின்னர் தானுண்டு தன்வேலையுண்டு என்றிருப்பதால் சமுதாயத்தின் முன் குற்றவாளியாகிறான். அவனது கனவில் அவன் குற்றங்கள் விசாரிக்கப்பட்டு தண்டனை வழங்கப்படுகின்றது. இறுதியில் அவன் மனநோயாளி என்று நாடகம் உறுதி செய்கிறது.

இவ்வாறு சமுதாயத்தில் மக்கள் ஏதாவது ஒரு வகையில் மனநோய்க்கு சம்மந்தப்பட்டவர்களாகவே உள்ளனர் என்பதை இந்நாடகம் உணர்த்துகின்றது. உளவியல் அடிப்படையில் இந்நாடகம் அமைகின்றது.

### நவீன நாடகங்களில் கதைப் பொருள்கள்

நிகழ்கால வாழ்வில் மக்களிடையே ஏற்படும், தற்கொலை, விரக்தி, தோல்வி, தனிமை, நோய், துன்பம், மன உள்ளச்சல், தியாகம், அறிவுத்தாகம், பெண்ணுரிமை போர், நம்பிக்கை, ஒற்றுமையுணர்வு, அரசியல் போன்றவைகள் இன்றைய நாடகங்களின் கதைப் பொருளாகத் திகழ்கின்றன. நவீன நாடகக்குழுக்கள் எடுத்துக் கொள்ளும் கதைப் பொருட்கள் என்று எடுத்துக்கொண்டோமானால்

1. மனித வாழ்க்கையிலுள்ள அபத்தங்களை வெளிக்கொணர்தல்
2. சமகாலப் பிரச்சனைகளைப் பேசுதல்
3. தற்கால அரசியல் - சமூகச் சீர்கேடுகளைச் சொல்லல்
4. தனிமனிதம் - சமுதாயப் போராட்டங்களின் உரிமை பற்றிப் பேசுதல்
5. மனநோயாளிகளின் பிரச்சனைகளுக்குத் தீர்வு காணல்
6. பழைய புராண-இதிகாச-வரலாற்றுக் கதைகளைச் சமகாலப் பிரச்சனைகயோடு ஒப்பிடல் (3.120)

என்று அமைகிறது.

### முடிவுரை

காலத்தின் தேவையறிந்து அவ்வக்கால மக்களின் விழிப்பிற்கும், மேமபாட்டிற்கும் எது உதவுவதாக இருக்கின்றதோ அது அக்காலத்தில் நவீனமாகிறது. நடப்பியல் நெறி நவீன நாடகங்களில் வரப்பெறத் துவங்கிவிட்டன. யதார்த்தம் சார்ந்த காலத்தின் தேவைகளை நிறைவேற்றுவதாக இருப்பதால் இதுவே இன்றைய “நவீனத் தமிழ் நாடக” மாக இருக்கிறது. இங்கு இயங்குதல் இயக்கங்கள், குழுக்கள், தங்களுக்கென்று “கருத்துகளை“ வைத்துக் கொண்டு அதனடிப்படையில் நாடகங்கள் நடிக்கப் பெற்று வருவது போற்றதலுக்குரியது.

### துணை நூற்கள்


1. நா. பிச்சைமுத்து, இலக்கிய இயக்கங்கள், சக்தி வெளியீடு, திருவல்லிக்கேணி, சென்னை - 1983.
2. நா. வானமாமலை, மார்க்சீய அழகியல், மக்கள் வெளியீடு, எல்லீசு சாலை, சென்னை - 1978.
3. தமிழில் நவீன நாடகம், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி - சென்னை - 1996.
4. 20ம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள், உலகத்தமிழாராயள்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 1999.
5. சே. இராமனுஜம், நாடகக் கட்டுரைகள் (தொகுப்பு) காவ்யா, சென்னை - 2003.

# கள்ளிக்காட்டு இதிகாசம் - ஒரு பன்முகப் பார்வை (நடப்பியல்)

.எஸ். கௌசல்யா , முதுநிலை விரிவுரையாளர்
அரசு மகளிர் கல்லூரி -கும்பகோணம்.

## முன்னுரை :

1958ல் வைகை அணை கட்டி முடிக்கப்பட்டு, அதன் நீர்ப்பிடிப்புப் பகுதிக்குள் இருந்த சிற்றூர்கள் நீரில் மூழ்கும் சூழலில் அவ்வூர்களை விட்டு மக்கள் வெளியேறினர். அவ்வாறு வெளியேறிய மக்களில் தானும் ஒருவர் என்று ஆசிரியர் கூறியுள்ளார். அவரது கிராம வாழ்க்கையின் அனுபவம், சிறுவயதில் மனத்தில் பதிவாகிய கருத்துக்கள் இவற்றை அடிப்படையாக வைத்து இந்நாவலைப்புனைந்துள்ளார் என்று கூறுவதைவிட உள்ளதை உள்ளபடி புனைவியலின்றிப் பதிவு செய்துள்ளார். என்று கூறவேண்டும். இந்நாவலில் இடம் பெற்றுள்ள கிராம மக்களின் வாழ்க்கைமுறை, பாத்திரப்படைப்பு, நடை இவற்றில் அமைந்துள்ள நடப்பியல் பாங்கினை விளக்குவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## கள்ளிக்காட்டு இதிகாசமும் நடப்பியல் பாங்கும்

கடந்தகால நிகழ்வுகளை உள்ளபடி எடுத்துரைப்பதை வரலாறு என்கிறோம். கள்ளிக்காட்டு இதிகாசமும் ஒரு வரலாற்று நூல்தான். கள்ளிக்காட்டு மக்களின் வாழ்க்கை வரலாறு. அதனால்தான் இந்நாவலுக்குப் பொருத்தமாக "இதிகாசம்" என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது. இந்நாவலில் கிராம மக்களின் வாழ்க்கை முறையை எடுத்துரைப்பதில் மண்ணின் வாசம் கமழ்கிறது. இதில் உழவுத்தொழில், சலவைத்தொழில், சவரத்தொழில் ஆகிய தொழில்களின் நுட்பங்கள், மகப்பேறு, மாடு கன்று போடும் தன்மை, சாராயம் காய்ச்சும் முறை, கோழிக்குழம்பு வைக்கும் முறை, இறப்புச் சடங்கு, அவர்கள் உண்ணுதல், உறங்குதல், உடுத்துதல், அவர்களின் பழக்கங்கள், நம்பிக்கைகள் அனைத்திலும் ஆசிரியர் யதார்த்தத் தன்மையை நூலும் பாவுமாக இழையோட வைத்துள்ளார்.

## வாழ்க்கை முறை

கள்ளிக்காட்டை அறிமுகப்படுத்தும் பொழுதே வறண்ட நிலத்தை அப்படியே காட்சிக்குக் கொணர்கின்றார். "கரும் பாறையிலும், சரளையிலும் சுக்கான் கல்லிலும் முள் மண்டியநிலங்களிலும் தொலைந்து போன வாழ்வைமீட்டெடுக்கும் போராட்டம்தான் அவர்களின் பொழப்பு" (ப.1) என்பதில் அவர்களின் வாழ்வின் சூழல் புலப்படுத்தப்படுகிறது. "ஒரு முருங்கைமரம் ஒரு பசு ஒரு வெட்டரிவாள் மூன்றுமிருந்தால் என்பது சதுர அடியில் வாழ்ந்து விட்டுப்போய்விட முடிகிறது" (ப.28) என்று கூறுவதில் கிராம மக்களின் வாழ்க்கைக்கு ஒரு எல்லை வகுத்துவிடுகிறார்.

"ஒத்தக்கமலை /தொத்தை மாடு...
ஓட்(ன)டச்சாலு /கிழிஞ்ச தோலு" (ப.77)

இவைதான் ஏழை விவசாயியின் சொத்து. மாடு கன்று போட இயலாமல் தவித்தபோது," யப்பே எம் பொழப்பக் காப்பாத்துப்பே.." என்று பேயத்தேவரிடம் ஓடி வருவதும், மாடுகளை கடன்காரன் பிடித்துச் சென்றவுடன் பேயத்தேவரின் வேதனையிலும் இதனை உணரலாம்.

## உணவு

பகலில் கஞ்சி, கூழ், இரவில் களி வெந்தயக் கொழம்பு, அவிச்ச முட்டை, தட்டங்காய், இடையில் தின்பது வறுத்த கல்லைப்பயறு, கானப் பயிறு முளைகட்டிய கம்பு இவைதான் கிராம மக்களின் உணவு என்பதை நன்கு உணர்த்தியுள்ளார். காட்டிற்கு வேலைக்குச் செல்பவர்களுக்குத் தூக்குவாளியில் கஞ்சியை ஊத்தி, புறத்தில் துவயலையை அப்பி விடுவார்கள். கஞ்சி குடிப்பதற்கு முன் அதையும் காக்கா தின்றுவிடும். பின்பு உடனே ஒரு மறுமாத்தம் (தொட்டுக்கொள்வதற்குக் கிராமங்களில் பயன்படுத்தும் சொல்) தயார் ஆகும்.

"இரு தாத்தா...." என்றவன் (மொக்கராசு) படபடவென்று எழுந்தான். கிலுவைமரம் தாண்டியோடி இரண்டு மூன்று புதர்தேடி கொத்து விரல்களாய் மொத்தமாய் நீண்டு வளர்ந்திருக்கும் "கட்டக் கடகா" பறித்தான் கான மிளகாய்ச் செடியிலிருந்து பிஞ்சும் காயும் பிடுங்கினான். இரண்டையும் பாறையில் வைத்து கல்லொன்று எடுத்துக் கால்சட்டையில் துடைத்துத் தட்டினான். உப்பு தும்பைச் செடி பறித்து அதில் சாறு பிழிந்தான்... தூக்குவாளி மூடியில் அள்ளியோடிவந்து தாத்தா "மறுமாத்தம்" என்றான். (பக். 21) இதில் சிறுவனின் செயலை அப்படியே காட்சிப் படுத்துகிறார்.

உடை :

பெரும்பாலும் ஆண்கள் வெளி ஊர்களுக்குச் செல்லும் போது மட்டும் மேல் சட்டை அணிந்து கொள்வார்கள் வேட்டி வெள்ளையாக இருக்க வெளியில் கிளம்பும்போது, மறுபக்கம் திருப்பி உடுத்திக் கொள்வதும் உண்டு.

"வெள்ளைக்குப் போட்ட வேட்டி வரல. சிவீர்ன்னு செம்மண் புடிச்சிருந்தது. கட்டியிருந்தத நாலு மொழ வேட்டி. அவுருக்கே பொறுக்கல ஒரு நாடு நகரத்துக்குப் போறப்ப - நல்லது கெட்டதுக்குப் போறப்ப வெள்ளையுஞ் சொள்ளையுமாப் போக வேண்டுமா? உடுத்தியிருந்த வேட்டியப் பெலமா உதறிப் பெரட்டிக் கட்டினாரு. குனிஞ்சு பாத்தாரு ஏற்கெனவே இருந்த பக்கம் இதவிட வெள்ளையா இருந்துச்சு." (பக் 346) இதனைப் படிப்பவர்களுக்கு நஞ்கச்சுவையாக இருக்கலாம். ஆனால் விவசாயி வெளியில் கிளம்பும் போது பெரும்பாலும் நடைபெறும் செயலையே ஆசிரியர் யாதார்த்தமாக் கூறிச் செல்கிறார்.

## பெண்களின் காலைநேர செயல்பாடுகளும், வாழ்வும் :

பெண்கள் அதிகாலையில் எழுந்து சுறுசுறுப்பாக இயங்குவார்கள். "கோழி கூப்பிட எழுந்து வாசல் தெளித்து கோலம் போட்டு கொட்டம் பெருக்கி சாணியள்ளி, பண்ட பாத்திரம் தேய்த்து "சலக் சலக்" என்று தயிர் கடைந்து, காலைக் கஞ்சிக்கு மறுமாத்தம் அரைத்து வேலைக்குப் போகும் ஆட்களுக்கும் கும்பா நிறையக் கூழ் ஊற்றி வைத்து, ஆடு மாடு ஓட்டிப் போகும் பண்ணைக்காரர்களுக்கு முளைக்கப் போட்ட கம்போ பயறோ முடிந்து கொடுத்து எல்லாரையும் அவரவர் திசைக்கு ஏவிவிட்டு அவள் (செல்லத்தாயி) முதல் வாய்க் கூழ் குடிக்கிறபோது கஞ்சிப் பொழுது கடந்தே போய்விடும்" (பக். 32) இதில் அப்படியே அவர்களது இயல்பு வாழ்க்கைய்யைப் பார்க்க முடிகின்றது.கிராமங்களுக்குத் திருமணமாகி வரும் பெண்கள்,"ஈரச்சாக்கும் - இந்த சேலையும் அரைப்படி சோளமும் - அவத்தக் கஞ்சியுமே அன்றாடங்களாகிவிட்ட ஒரு வறட்டு வாழ்க்கைக்கு வாக்கப்பட்டு வருகிற ஒரு பொம்பள திருடிக்கொள்வதற்கு சௌகரியங்கள் ஏதும் இல்லாததால் பாடுகளை மட்டுமே பகிர்ந்து கொள்கிறார்கள்" (பக். 96) என்பது உண்மை."சோடி மாட்டில் ஒரு மாடு செத்துப் போக இன்னொரு மாடு வாங்கி உழுவதற்குள் ஈரம் போய்விடுமே என்று ஒடிஞ்சு உட்கார்ந்த போ? "ஏ ஆம்பள! ஒத்த மாட்டோட இந்தத் தொத்த மாட்டப் பூட்டி உழுக வேண்டியதுதானே.... என்று நேக்காலைத் தன் கழுத்தில் மாட்டிக் கொண்டு மாடடின் தேவையையும் பூர்த்தி செய்த மனுஷி..." (பக். 98) (அழகம்மா).

## மக்களின் மனித நேயம் :

கிராமங்களில் ஒரு குடும்பத்திற்கு ஒருபிரச்சினை என்றால் ஊர் ஒன்று சேர்ந்து அந்தப் பிரச்சனையை சமாளிப்பார்கள். பேயத்தேவரின் மகன் சின்னுவாங்கிய கடனுக்காக, வெளியூர்க்காரர்கள்பேயத் தேவரை அவமானமாகப் பேசும்பெழுது, தலைக்கு ஒரு ரூபாய் கொடுத்து பேயத்தேவரின் மானத்தைக் காப்பாற்றுகிறார்கள். அடிக்க வரும்பொழுது "கள்ளிப்பட்டிக்காரர்கள் மொக்கராசைச் சுற்றி மொய்த்து மனிதக் கவசமானார்கள்" (பக். 143) இதில் கிராமத்தின் மனித நேயம் பளிச்சிடுகின்றது.

## பாத்திரப்படைப்பு :

"பாத்திரப் படைப்பு என்பது பாத்திரம் ஒன்றின் தோற்றம், இயல்புகள் ஆகியவற்றை விளக்கமாகத் தெரியும்படி வெளிக் கொணர்வதாகும்". (மேலை இலக்கியச் சொல்லகராதி ப. 29).

“கதை நிகழ்ச்சிகளை ஒழுங்காகப் பின்னி முழுமை நிலையில் அமைத்துக் காட்டுவதில் தான் இப்பாத்திரப் படைப்பு விளக்கம் பெறுகிறது” (தமிழ் நாடகம் ஓர் ஆய்வு. ப. 229). இந்நாவலில் இடம்பெறும் பாத்திரங்கள் ஒவ்வொன்றும், முழுமை நிலையில் விளக்கப் பெறுகின்றன. பாத்திரங்களின் தோற்றம், இயல்புகள் அனைத்திலும் யதார்தப் பண்புகள் மிளிரப் படைத்துள்ளார். இந்நாவலில் இடம் பெறும் தலைமைப் பாத்திரம் பேயத்தேவர். பேயத்தேவரை மையமாக வைத்து கதையை நகர்த்திச் சென்றாலும, துணைப் பாத்திரங்களான, அழகம்மா, செல்லத்தாயி, மின்னல், மொக்கராசு, ஒச்சு, சின்னு, வண்டி நாயக்கர், முருகாயி ஆகிய பாத்திரங்களையும் இயல்பாகப் படைத்துள்ளார். இங்கு பேயத்தேவர் பாத்திரம் மட்டுமே விளக்கப்படுகின்றது.

### பேயத்தேவர் :

கவிஞர் வைரமுத்துவின் தாய்வழித் தாத்தா பொன்னையாத் தேவரையும், தந்தை வழித்தாத்தா சின்னாங்கி உடையத் தேவரையும் இணைத்து “பேயத்தேவர்” என்ற பாத்திரம் உருவாக்கப்பட்டுள்ளது. (இது ஆசிரியர் கூற்று).பேயத் தேவர் கடின உழைப்பாளியாக, பிரச்சனைகளை எதிர்கொள்ளும் மனவலிமை உடையவராக, நேர்மையாளராக, இரக்க குணம் உடையவராக, மனைவியின் மீது அன்பு செலுத்தி மதிக்கும் பண்பாளராக, ஒருவனுக்கு ஒருத்தி என்ற உயர்ந்த பண்பினைந கடைபிடிப்பவராக, நன்றி உணர்வுடையவராக, மண் மீது மாறாக் காதல் கொண்டவராக படைக்கப்பட்டுள்ளார்.

### பேயத்தேவர் : தோற்றப் பொலிவு :

“பேயத் தேவர் நல்ல உயரம், முண்டாசையும் சேர்த்தால் ஆறடி சொச்சம், வேர்வையைப் போலவே வயதையும் வழித்தெறிந்துவிட்ட உடம்பு, மீசை போல் புருவக் கட்டு கம்பளி கத்தரித்த மாதிரி மீசைக்கட்டு நெற்றி மேட்டிலிருந்து பள்ளம் பறித்து ஆழத்தில் மின்னும் பிரகாசமான கண்கள். நிலம் கிழிக்கும் கலப்பை இருபுறமும் குங்குமம் கொட்டுமேட...” (பக் - 16) என்று பேயத் தேவரின் தோற்றப் பொலிவு விளக்கப்படுத்தும் பொழுதே உழைப்பாளியாக அறிமுகப்படுத்துகிறார்.

### கடின உழைப்பாளி :

பேயத் தேவர் எதிர்கொண்ட பிரச்சனைகள் ஒன்றா? இரண்டா? அவரது வாழ்க்கை முழுவதும் பிரச்சனைகளும், வேதனைகளும் நிறைந்தவை. இரண்டு மகள், ஒரு மகன். மகள் செல்லத்தாயி, கணவனை இழந்தவள். இரண்டாவது திருமணம் செய்து கொடுக்கிறார். அப்பெண்ணிற்குப் பதினைந்து பவுன் போடுவதற்கு மிகவும் கஷ்டப்படுகிறார். அடிக்கடி செல்லத்தாயை நகை கேட்டு வீட்டிற்கு அனுப்பி விடுவான் அவள் கணவன். தவணை முறையில் கடன் வாங்கி, தோட்டத்தை அடமானம் வைத்து நகை போட்டு, மகளை வாழ வைக்கிறார். அடுத்த மகள் மின்னலும் கைக்குழந்தையுடன் வாழா வெட்டியாக வந்து விடுகிறாள். மகன் சின்னு ஊதாரி கள்ளச்சாராயம் காய்ச்சுதல், கஞ்சா விற்றல் போன்ற தீய தொழிலில் ஈடுபடுகிறான். அடிக்கடி “சொத்தை பிரித்துக் கொடு” என்று சண்டை போடுகிறான். ஒத்தி வைதத தோட்டமும் பறி போகின்றது. அதனால் காட்டில் கிணறு தோன்டுகிறார். கிணற்றில் வெடித்த வெடியால் பேத்தி இறந்து விடுகிறாள். மனைவி பலநாள் படுத்த படுக்கையாகி இறந்து விடுகிறாள். இவ்வளவு பிரச்சனைகளையும் எதிர் கொண்டு காட்டில் கிணறு தோண்டி தண்ணீர் கண்டு விவசாயம் செய்து, விளைச்சல் சமயம்,அணை கட்டுவதாகக் கூறுகிறது அரசு. நஷ்ட ஈடு வாங்கலாம் என்று போனால் பட்டா உள்ள நிலத்திற்கு மட்டுமே நஷ்ட ஈடு. பேயத்தேவரிடமிருந்த நிலத்தில் கொஞ்சம் பட்டா உள்ள நிலம். மீதி பட்டா இல்லாத நிலம். இதில் அப்பணத்தைக் கைப்பற்ற மகள் காத்திருக்கின்றாள். இப்பிரச்சனைகளையெல்லாம் எதிர்கொண்டு மீண்ட பேயத்தேவரால் மண் மீது கொண்ட பாசத்தை மட்டும் விடமுடியவில்லை. மண்ணுடன் இரண்டறக் கலந்து விடுகின்றார்.

### மனைவி மீது கொண்ட அன்பும் மதிப்பும் :

“அழகம்மா மாதிரி கோழிக் குழம்பு வைக்க அஞ்சு சில்லாவிலும் ஆள் இல்லை” என்று மனைவியைப் பாராட்டும் பேயத்தேவர், மனைவியைச் சிக்கனகாரியாக, விளையாட்டுக்காரியாக, நேசக்காரியாக, வைத்தியக்காரியாகப் போற்றுகிறார். மனைவி இறந்தபின் மனைவியின் சேலையைத தலைக்கு வைத்துப்

படுக்கிறார். ஒரு நாள் சேலையை சலவைக்குப் போட்டுவிட்டது தெரிந்தவுடன், சலவைத் தொழிலாளியிடம் வெள்ளாவியில் வேகும சேலையை எடுத்துத் தரச் சொல்லும், பொழுது,

"யப்பா! தங்கையா, இதுல ஆத்தா சீலய எடுத்துக் குடுத்திருப்பா! அந்தச் சீலக்குள்ள இருக்கடா என் சீவியம்" (ப. 194) என்று கூறுவதிலும், மகளிடம்,"அழகம்மா ஆவியடியம்மா அது, ஏங்கூட பேசும்... அது கூட நான் பேசுவேன். ராசாவுக்கு கிரீடம் மாதரியடியம்மா ஏந்தலைக்கு அவ சீல" (ப. 189) என்று கூறி புலம்புவதிலும், அவர் மனைவி மீது கொண்ட அன்பும், மதிப்பும் வெளிப்படுகின்றன.

## மூதாதையர் மீதும், மண்மீதும் கொண்ட பற்று :

தனது மூதாதையர் வாழ்ந்த பூமியை, விட்டு வெளியேற அவர் மனம் இடம் தரவில்லை, அஞ்சாமல் ஆட்சியரிடம், "அய்யா! நீங்க குடுக்கிற பச்ச நோட்ட வாங்கி எந்த ஊருக்குப் போனாலும் வீடு வாச வாங்கலாம்... ஆனா எங்க அப்பன் ஆத்தா செருப்பில்லாத காலோட அலஞ்சு திரிஞ்ச தடம் இருக்கே அந்த மண்ணுல, அதுக்கு என்னய்யா நஷ்ட ஈடு குடுப்பீக?... பரம்பரையா அந்த மண்ணுல நாங்க சிந்துன கண்ணீருக்கும், வேர்வைக்கும், ரத்தத்துக்கும் என்ன மதிப்புன்னு ஒங்க பேரேட்ல எங்கயாச்சும் போட்ருக்கா?" (ப. 350).

"... அந்தக் கதவு நெல சன்னல்ல எங்க அப்பன்ஆத்தா கைரேகை இருக்கு. எங்க பூர்வீகத்து ஆளுக உசுரு இன்னும் அதுல ஒட்டியிருக்கு. அதுக்கு ஒங்க தொள்ளாயிரம் இல்லய்யா.. ஒம்போது லச்சம் குடுத்தாலும் ஈடாகாது.." (ப. 350) என்று கூறும்போது அவர் மண்ணின் மீதும் மூதாதையர் மீது கொண்ட பற்றும் வெளிப்படுகின்றன.

விளைந்த நிலத்தைப் பார்த்து/சடைசடையாத் தானியங்க
சரஞ்சரமா தட்டாங்கா/நச்சுன்னு புடிச்சகாடு
நாளைக்கு என்னதில்ல

என்று புலம்பி அழுவதில் அவரது வேதனை தாங்க இயலாத ஒன்று, பேயத்தேவர் என்ற பாத்திரத்தின் ஆளுமைத்திறனை சில எடுத்துக்காட்டுகளால் விளக்க இயலாது. மிகவும் ஆழமான ஒரு கதாப்பாத்திரம். இப்பாத்திரத்தின் மூலம் தெரிந்து கொள்ள வேண்டிய செய்திகள் அதிகம்.

## முடிவுரை :

1. "பிரச்சனையே பொழப்பா வாழ்ந்தவுகதான் அந்தக் கள்ளிக்காட்டு மக்க", என்ற கூற்று பேயத்தேவர் என்ற பாத்திரத்திற்கு மிகவும் பொருந்துவதாக உள்ளது.
2. ஊர் மக்கள் ஊரைவிட்டு வெளியறேும் போது, பிடி மண் எடுத்துக் கொண்டு ஊரில் உள்ள மரம்,... பேன்ற அஃறிணைப் பொருள்களிடம் விடை பெற்றுச் செல்வது, அவர்கள் ஊர் மீது கொண்டப் பற்றினைக் காட்டுவதுடன் படிப்பவர் உள்ளத்தை உலுக்குவதாக உள்ளது.
3. இந்நாவலில் இடம் பெறும் கிராம மக்களின் வாழ்க்கை முறையிலும், படைக்கப்பட்டுள்ள பாத்திரங்களிலும் ஆசிரியர் கையாண்டுள்ள நடையிலும் யதார்த்தத் தன்மையைப் பார்க்க முடிகின்றது.
4. ஒவ்வொரு கதை மாந்தர்களின் உள்ளங்களையும் ஊடுருவிப் பார்த்தே அவர்களைப் படைத்துள்ளார் ஆசிரியர்.

# கள்ளிக்காட்டு இதிகாசத்தில் நடப்பியல்

*கா. சண்முகப்பிரியா,* எம்.ஏ., எம்.ஃபில்.,
ஆய்வியல் நிறைஞர், தமிழ்த்துறை - உயர் ஆய்வு மையம்,
அருள்மிகு பழனியாண்டவர் கலை & பண்பாட்டுக் கல்லூரி, பழனி - 624 601.

மேனாட்டில் அதிக அளவில் புராணங்களும், இதிகாசங்களும் வளர்ச்சி பெற்றுக் காணப்பட்டன. பின்னர் சிறிது, சிறிதாக அதன் செல்வாக்குக் குறையத் தொடங்கின. நடப்பியல் இலக்கியத்தின் வளர்ச்சியே இதற்கு முதன்மைக் காரணமாகும்.

## நடப்பியல் - விளக்கம் :

நடப்பியலாவது வாழ்க்கைச் செய்திகளையும் நிகழ்ச்சிகளையும் உள்ளபடியே விளக்க வேண்டும் என்று ஓவெல்ஸ் (Howells) என்ற அமெரிக்கத் திறனாய்வாளர் விளக்கிக் கூறுகின்றார்.1 நிகழ்ந்தவைகளை நிகழ்ந்தவாறே கூறவேண்டும் என்று அவர் உரைப்பினும் அவற்றுள் தகுதியுடையவைகளையே ஆசிரியர் தம் இலக்கியத்தில் படைக்க வேண்டும் என்கிறார். அதாவது, இழிவானவையும், அருவருக்கத்தக்கனவும் இலக்கியத்தில் இடம்பெறக் கூடாது என்பது அவர் கருத்தாகும்.

நடப்பியல் இலக்கியம் இலக்கியத்தை மரபாகிய அடிமைத்தளையினின்றும் விடுவிப்பதற்காகத் தோன்றியதாகும். நடப்பியல் அன்றாட வாழ்க்கை அனுபவங்களை உள்ளவாறு விளக்கிக் கூறி, இயற்கைத் தன்மையை வலியுறுத்துகின்றது. அதோடு வாழ்க்கை நிகழ்ச்சிகள் பெரும்பாலும் எவ்வாறு நிகழலாம் என்பதையும் குறிப்பிடுகின்றது. 1958-ல் வைகை அணை கட்டி முடிக்கப்பட்டு, அதன் நீர்ப்பிடிப்புப் பகுதிக்குள் இருந்த சிற்றூர்கள் பற்றியும் அந்த கிராம மக்களின் நடைமுறை வாழ்க்கை பற்றியும் கள்ளிக்காட்டு இதிகாசத்தில் நடப்பியல் போக்கில் வைரமுத்து கையாண்டுள்ளார். "இதிகாசம்" என்றால் "இது நிச்சயம் நடந்தது என்று பொருள்."

## நடப்பியல் கூறுகள் :

1. சடங்குகள், 2. தொழில், 3. உணவு.

## கள்ளிக்காட்டு இதிகாசத்தில் நடப்பியல் பழக்கவழக்கங்கள் (சடங்குகள்) :

### அ). பிறப்புச் சடங்குகள் :

குழந்தை பிறந்தவுடன் சேனை தொட்டு வைக்கும் வழக்கம் கள்ளிக்காட்டு மக்களிடையே இருந்துள்ளது. சேனை தொட்டு வைப்பது என்பது தண்ணீரில் சர்க்கரை போட்டுக் கலந்து அதனை அக்குழந்தையின் பெற்றோர்களோ அல்லது சான்றோர்களோ, பாட்டியோ, தாத்தாவோ, மாமாவோ, அல்லது நண்பர்களோ அந்த சர்க்கரைத் தண்ணியைத் தொட்டு குழந்தையின் வாயில் மூன்று முறை வைப்பது சேனை தொட்டு வைப்பது என்பதாகும். தேனைத் தொட்டு வைக்கும் பழக்கமும், தங்க மோதிரத்தில் தேனைத் தொட்டு வைக்கும் பழக்கமும், இன்னும் வழக்கில் இருந்து வருகின்றன. ஆனால் கள்ளிக்காட்டு மக்களோ வசம்பின் நுனியில் எண்ணெய் தொட்டுக் குழந்தையின் வாயில் மூன்றுமுறை வைப்பார்கள். மூத்தவர்கள் ஒவ்வொரு முறை தொட்டு வைக்கும் போதும் "ஓம்புத்தி போயி எம் புத்திவா" என்று சொல்லிச் சொல்லி வைப்பது மரபு" என்று குறிப்பிடும் சடங்குமுறை உணரத்தக்கது.

### ஆ. திருமணச் சடங்கு முறை : (மறுமணம்)

பேயத்தேவரின் மகள் செல்லத்தாயியின் இரண்டாவது திருமணத்தின் வாயிலாக மறுமணம் பற்றிய செய்தியைக் கூறி கள்ளிக்காட்டின் திருமண முறையை எடுத்துரைக்கிறார்."திருநெல்வேலியினைச் சேர்ந்த மறவன் சாதிச் சமீன்தார்கள் மணமகனுக்குப் பதிலாக அவன் சார்பில் ஒரு தடியினை மணப்பந்தலுக்கு அனுப்பி நட்டுவைத்து மணம் செய்து கொள்கின்ற வழக்கத்தை மேற்கொள்கின்றனர். தாலிகட்டி மணச்சடங்கை நிறைவு செய்வார்" என்று க. ரத்தினம் சுட்டிக்காட்டுவது இங்கு ஒப்புநோக்கத்தக்கது. இவ்வாறு பல்வேறு திருமண

முறைகளில் மணமகன் எதிர்ப்பாராதவகையில் மணச்சடங்கில் பங்கு பெறாத போதோ அல்லது இறந்துவிட்ட நிலையிலோ வேறு ஒருவரைத் திருமணம் செய்துகொள்வது நமது நாட்டில் பின்பற்றி வரும் பழக்கத்தை பல சான்றாதாரங்கள் மூலம் அறியலாம். கள்ளிக்காட்டு இதிகாசத்தில் செல்லத்தாயியின் திருமணத்தின் வாயிலாகக் கள்ளிப்பட்டி மக்களிடையே பெண்கள் மறுமணம் செய்து கொள்ளும் வழக்கம் அக்காலத்திலே இருந்ததை அறியலாம். அக்கிராம மக்களின் வசதிக்காக இரவில் திருமணம் நடத்தும் முறை இருந்தது. திருமண வீட்டுவாசலில் கொட்டகை போட்டு, பூவோடு வாழைமரங்கள் கட்டி, ஒலிப்பெருக்கிக் குழாய்கள் வைத்து திருமணம் நடத்தினர். மேலும், பொண்ணு, மாப்பிள்ளைக்கு நாற்காலி போட்டு அதனை ஒரு துப்பட்டியால் மூடியும், மாலை மாற்றிய பின் மாப்பிள்ளையும், பெண்ணும் ஊர்ப்பெரிசுளின் காலில் விழ, பெரியவர்கள் அவர்களுக்கு நெற்றியில் திருநீறு இடுவதும் கள்ளிப்பட்டி மக்களிடையே நடைபெறும் திருமண முறையாகும். திருமணத்திற்குச் சேலை எடுக்கக் கட்டிச்சோறு கட்டிக்கொண்டு செல்லும் வழக்கமும் அவர்களிடம் இருந்ததை அறியலாம்.

**மார்க்கக் கல்யாணம் (சுன்னத்) :**

ஒவ்வொரு சமுதாய மக்களும் தனிப்பட்ட பழக்க வழக்கங்களைப் பின்பற்றுகின்றனர். அவை தொன்று தொட்டு, மரபு வழியாக அச்சமுதாய மக்களால் கடைபிடிக்கப்பட்டு வரும் ஒரு பழக்கமாகும். சடங்குகளும் பழக்க வழக்கங்களும் ஒன்றை ஒன்று சார்ந்தே அமையும். "பழக்க வழக்கங்கள் காலப்போக்கில் சீரிய சிந்தனை, அறிவியல் கருவி ஆகியவை காரணமாகச் சமுதாயத்தில் முன்னேற்றம் அடையும் போது அவை சடங்காக மாறுகின்றன" என்று குறிப்பிடுவர்.

மார்க்கக் கல்யாணம் என்பது பொண்ணு சடங்கு செய்வது போன்றது. இதனை ராவுத்தமார் "சுன்னத்" துங்கிறாங்க. இதற்குக் கல்யாணம் போன்று பந்தல்போட்டுத் தோரணம் கட்டி, கொட்டடிச்சு, கொலவைபோட்டு, ரேடியோக் குழாய்க் கட்டிவிடுவார்கள். சம்பந்தப்பட்ட ஆளுக்கு புதுத்துணி எடுத்து, மாலை போட்டு, சந்தனம், குங்குமம் வைத்து ஊர்வலமாக அழைத்துச் செல்வார்கள். மேலும், கொட்டுக்காரர்களின் சத்தத்துடன் சன்னாசியப்பன் கோயிலுக்குப் போய் சூடம் கொளுத்தி, வாழைப்பழம் கண் திறந்து வைத்து, சாம்பிராணி காட்டி, சிதறு தேங்காய் போட்டு, ஊர்ப்பெரியவர் காலில் விழுவது வழக்கமாக இருந்துள்ளது. இந்த மார்க்க கல்யாணம் வைத்திய முறைப்படி செய்வதாகவும் அந்த வைத்திய முறையையும் தெளிவாக விளக்கியுள்ளார் ஆசிரியர். இது போன்ற கல்யாணம் நடத்தி தன் கவுரவத்தைக் காக்கும் பழக்கம் கள்ளிக்காட்டு மக்களிடம் இருந்தததை அறியமுடிகிறது. மக்கள் மகிழ்ச்சியாகவும், தங்கள் தேவைகளுக்காவும் இவ்விழாவை நடத்துகின்றனர்.

**இ. இறப்புச் சடங்குகள் :**

இறப்பு என்பது நடப்பியல் வாழ்வில் மாறாத உண்மை நிகழ்வு. எனவே மக்களின் பல்வேறு இனங்களுக்கு ஏற்ப தனித்தனி சடங்குகள் கடைபிடிக்கப்படுகின்றன. நாவலில் தேவமாரின் இறப்புச் சடங்குகள் பற்றிய செய்திகள் விளக்கமாகவே இடம் பெறுகின்றன.

அழகம்மாள் இறந்த போது செய்த சடங்குகள் விரிவாக விளக்கப்படுகின்றன. தாய்க்குத் தலைமகள் சுடுகாட்டில் பிணத்தை மூன்று முறை சுற்றி நீர்க்குடம் உடைத்தல் வரை அனைத்துச் சடங்குகளும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இந்நாவலில் மேலும் அழகம்மாள் இறந்த உடம், இறந்தவுடன் செய்தி ஆள் மூலம் பக்கத்து ஊர்க்கு சொல்லப்பட்டுள்ளது. ஆள் அனுப்பி, பந்தல்காரனைக் கூப்பிட்டு பந்தல் போட்டு, சங்கூதி, பண்டாரத்தைக் கூட்டி வருகின்றனர். பிணத்தைக் குளிப்பாட்டி, நாற்காலியில் உக்காரவைத்து கைகளைப் படியவைத்து, கால்கட்டை விரலைத் துணியால் கட்டும் வழக்கமும் நெற்றியில் விபூதி, சந்தனம், குங்குமம் வைத்து அதன் மேல் நெத்தி காசு வைக்கும் வழக்கமும் கூறப்படுகின்றன. மற்றும் ஊதுவத்தி கொளுத்தி வைத்து உறவினர்கள் சூடம் சாம்பிராணி காட்டி நீர் கொண்டு வந்து பிணத்தைக் குளிப்பாட்டி, பின்பு பிறந்த வீட்டு கோடி உடுத்தி தேர் கட்டி அழகம்மாளைச் சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்லும் வழக்கமும் சுட்டப்பட்டுள்ளது.

**தொழில் :**

கள்ளிக்காட்டு இதிகாசத்தில் விவசாயம், சாராயம் காய்ச்சுதல், நாவிதனின் சவரத் தொழில், சலவைத் தொழில், பிணம் எரித்தல் போன்ற தொழில்களைப் பற்றிக் கூறுகிறார். இவற்றில் முதன்மையானது விவசாயம்.

"ஒரு மாடு குடும்பங்காக்கும், ஒன்பது மாடு குலங்காக்கும்" என்பது விவசாய வாழ்வில் வேரோடிய நம்பிக்கை, ஒரு முருங்கை மரம் - ஒரு பசு - ஒரு வெட்டரிவாள் மூன்றுமிருந்தால் எண்பது சதுர அடியில் அறுபது வருடங்களைப் பத்து மைல் சுற்றளவில் வாழ்ந்து விட்டுப் பேய்விட முடிகிறது" என்று சுட்டும் இடத்து கள்ளிக்காட்டு மக்களின் வாழ்க்கை முறையைத் தெளிவாக அறியமுடிகின்றது.

**விவசாயம் :**

பேயத்தேவர் தான் விவசாயம் செய்யும் முறையை சின்னுவிடமும் மற்றவர்களிடமும் கூறும்போது,

"ஏலே நான் என்ன கோட்டிப்பயலா? ரவ்வொண்ணுக்கும் ஒரு வெவரமிருக்கப்பா. நெல்லு நட்டா ரெண்டு நாகத்துக்கு மத்தியில நண்டோடணும்; கரும்பு ரெண்டு கரும்புக்கு மத்தியில நரியோடனும், வாழ நட்டா ரெண்டு வாழைக்கு மத்தியில வண்டியோடனும்; தென்ன நட்டா இரண்டு தென்னைக்கு மத்தியில தேரோடணும்".

"நண்டுர நெல்லு/நரியோடக் கரும்புவண்டியோ வா(வை)ழ
தேரோடத் தென்ன"

என்று குறிப்பிடுகிறார். இதன் மூலம் விவசாயம் முதன்மைத் தொழிலாகவும், பிற தொழில்கள் அடுத்த நிலையிலும் நடைபெறுவது இந்நாவலில் அறியத்தக்கது.

**உணவு :**

கள்ளிக்காட்டு இதிகாசத்தில் தமிழர் பயன்படுத்தும் உணவான, அரிசிச் சோறு, கூழ், மறுமாத்தம் (துவையல்) அதிரசம், இறைச்சி உணவான (ஆடு, கோழி), மொச்சை சீயான், ரசம், கத்திரிக்காய், களி, சுக்குத் தண்ணி போன்ற உணவுகள் பற்றி இந்நாவலில் ஆசிரியர் எடுத்துக் காட்டியுள்ளார்.

(எ.டு.) "உணவெனப் படுவது நிலத்தோடு நீரே" (புறம் - 18:2)

"இரண்டு தூக்குச் சட்டிகளில் கஞ்சி, ஒரு தகரக் குடத்தில் குடி தண்ணீர்" இவையே கள்ளிக்காட்டு மக்களின் அன்றாட வாழ்வில் ஒரு வேளை உணவு இதற்கு "மறுமாத்தம்" பயன்படுத்துவர். நிலமுள்ளவனுக்கு உணவு "கஞ்சி" அவையே நோயுற்றவனுக்கு மருந்து. மறுமாத்தம் என்னும் உணவு பற்றி ஆசிரியர் விளக்குவதை பின்வருமாறு :

"மறுமாத்தம்" - இந்த ஒரு சொல்லில் இருக்கிறது ஒடுக்கப்பட்ட ஜீவன்களின் உணவுமுறை. கூட்டு - பொறியல் - வறுவல் - வதக்கல் - பச்சடி - ஊறுகாய் - அப்பளம் - என்றெல்லாம் விரிவு செய்யப்பட்ட உணவு முறையிலிருந்து வித்தியாசம் சொல்கிறது "மறுமாத்தம்" என்ற ஒரு வார்த்தை. கஞ்சி - கூழ் - சோறு - இவற்றில் ஏதாவது ஒரு உணவு தயாரிக்க மட்டுமே வசதிப்பட்ட உழைப்பாளிகள் மிளகாய் - வெங்காயம் - துவையல் - கருப்பட்டி - வெல்லம் - வற்றல் தேங்காய்ச்சில் இவற்றில் ஒன்றை முந்தைய ஒரேவகை உணவுக்கு மாற்றமாகத் தொட்டுக் கொள்வது "மறு மாற்றம்; வட்டார வழக்கில் "மறுமாத்தம்" என குறிப்பிடப்படுகிறது.

மேற்குறிப்பிட்ட செய்திகளின் வாயிலாக, பிறப்புச் சடங்கு, திருமணச் சடங்கு, இறப்புச் சடங்கு போன்றவை நடப்பியல் நோக்கில் ஆராயப்பட்டுள்ளன.மனிதன் வாழ்வதற்கு இன்றியமையாத உணவுகள் பற்றியும், அவ்வுணவை ஈட்டுவதற்கான தொழில்கள் பற்றியும் "கள்ளிக்காட்டு இதிகாசம்" நாவலில் ஆராயப்படுகிறது.

**குறிப்புகள் :**

1. தா.ஏ. ஞானமூர்தி, இலக்கியத் திறனாய்வியல், ப. 348.
2. வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப. 83.
3. க. ரத்தினம், தென்னிந்திய மானிட இன இயல் (தமிழாக்கம்) ப. 45.
4. மேலது, ப. 113.
5. மேலது, ப. 27.
6. மேலது, ப. 71.
7. புறநானூறு - 18:21.
8. வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாச், பக் 19 - 20.

# பிரபஞ்சன் சிறுகதைகளில் நடப்பியல்

முனைவர். *பொ. சத்தியபாமா,*
மீனாட்சி மகளிர் கல்லூரி, சென்னை.

## முன்னுரை :

நிகழ்காலத்துச் சிக்கல்களைச் சமகாலத்து வாழ்க்கைப் பிரச்சினைகளை ஆடிபோல் துலக்கிக்காட்ட வல்லன இன்றைய இலக்கியங்கள், இன்றைய இலக்கிய வகைகளுள் ஒன்று சிறுகதை. இருபதாம் நூற்றாண்டில் குறிப்பிடத்தக்க வளர்ச்சி அடைந்துள்ள இலக்கியம் சிறுகதையாகும். இலக்கியத்தை ஒரு வாழ்க்கைத் தரிசனமாக உருவாக்குவதுதான் சிறந்த இலக்கியம். இது எல்லாப் பிரிவுகளைப் போலவே சிறுகதைக்கும் பொருந்தும். கலைநயத்துடன் அமைந்திருக்கும், நல்ல சிறுகதை இயல்பாகத் தெரியவேண்டும் என்னும்போது யதார்த்தம் மட்டுமே இலக்கியமாகிவிடுகிறது. தமிழில் சிறுகதை இலக்கியம் வளர்ந்துள்ள அளவிற்கு அதுபற்றிய திறனாய்வும் வளர்ந்துவருகின்றது. எழுத்துலகில் இன்று பலரின் கவனத்தை ஈர்ததிருக்கின்ற எழுத்தாளர் பிரபஞ்சன் ஆவார். இவருடைய திரை விட்டு விடுதலையாகி என்ற இரண்டு சிறுகதைத் தொகுப்புளே கட்டுரைப் பொருளாக அமைகின்றது. இக்கட்டுரை, முன்னுரை, ஆசிரியர் பற்றிய குறிப்பு நடப்பியல் பற்றிய விளக்கம் சிறுகதைகளில் நடப்பியல் முடிவுரை என்ற பகுப்பாய்வு கொண்டு ஆராயப்படுகின்றது.

## ஆசிரியர் பற்றிய குறிப்பு

ஆசிரியரின் இயற்பெயர் வைத்தியலிங்கமாகும். பிரபஞ்சன் என்பது புனைப்பெயராகும். தமிழ்மொழியின் இன்றைய சிறந்த படைப்பாளிகளில் ஒருவர் பிரபஞ்சன். சிறுகதை, நாவல், சமூக விமர்சனக் கட்டுரைகள் என்று பல துறைகளிலும் சாதனை முத்திரை பதித்தவர். தமிழக அரசும், புதுச்சேரி அரசும் இவரைச் சிறந்த எழுத்தாளராகக் கௌரவித்திருக்கின்றன. "இலக்கியச் சிந்தனை", "கோவை கஸ்தூரி", "ரங்கம்மா பரிசு" என்ற எண்ணற்ற இலக்கிய மரியாதையைப் பெற்றவர். அகில இந்திய இலக்கியப் "பாரதிய பாஷா பரிட்சித்" விருதைப்பெற்ற பெருமைக்குரியவர். அங்கத நடை, அளவான பாத்திரப்படைப்பு, மனித மனத்தை நுணுக்கமாக ஆராயும் தன்மை, படிக்கும் ஆர்வம் குறைவுபடாத தரம், மனித யதார்த்தத்தை உன்னதப்படுத்தும் இலட்சியம் இவையே இவர் எழுத்தின் சிறப்பாகும். இந்திய மொழிகள் பெரும்பாலானவற்றிலும் சில ஐரோப்பிய மொழிகளிலும் இவரது கதைகள் மொழி ஆக்கம் பெற்றுள்ளன.

## நடப்பியல் :

"ரியலிசம்" என்ற ஆங்கிலச் சொல்லை யதார்த்தவாதம் "நடப்பியல்" என்று மொழி பெயர்த்து வழங்குகின்றனர். "ரியலிசம்" எனப்படும் யதார்த்தவாதம் என்பது வாழ்க்கையைப் புறவயமான நேர்மையோடு முழுமையாக உள்ளது உள்ளவாறு வரைந்துகாட்டும் ஒரு கலை இலக்கியக் கொள்கையாகும். புறவயமான நேர்மை என்பது நடைமுறை வாழ்க்கையில் ஒரு கருத்து அல்லது கொள்கை செல்வாக்குப் பெற்றிருக்கிறது என்றால் அதன் உண்மையான பொருளையும் அதன் தோற்றத்திற்கான சமுதாயக் காரணங்களையும் அதன் நோக்கங்களையும் கண்டறிந்து கூறுவது.

அதாவது விதிவிலக்கின்றிப் பொதுமைப் படுத்துவதைக் காட்டிலும் தனிநபரைக் குறிக்காத மறுக்கமுடியாத சான்றாகக் காட்டுவது. காரண காரியத் தொடர்போடு செய்திகளைக் கூறுவது எதார்த்தவாதம்" 1 என்பர். நடப்பியல் என்ற ரியலிசத்திற்கு நடப்பு, நிகழ்வு, உண்மை உள்ளது ஆகியவற்றின் மனம் ஆழ்ந்துள்ள ஒரு பார்வை எனக்கொள்ளலாம். பிரபஞ்சம் பொதுவான (யுனிவர்சல்) அறிவார்ந்த குணாம்சங்கள் மனதுக்கு வெளியே நடப்புகளில் காணப்படுவது. நிஜமான நடப்பு வாழ்க்கையை அனுசரித்துப் படைத்தல், எந்தவித இலட்சிய உயர்த்தல் தொனியும் ஏற்றம் பெறாமல் இருப்பதை நடப்பதை பார்ப்பதை அப்படியே சிறிதும் மிகைப்படுத்தாமல் வாழ்வுக்கு ஒட்டியதாகவே சித்தரித்தல் என்ற கொள்கையாகும்"2 தொடக்கத்தில் நடப்பில்

என்பது நாவலில் புனைவுகள் இடம்பெற்ற விதத்தை விளக்கும் சொல்லாகப் பயன்பட்டது. எனவே, திறனாய்வுலகில் நடப்பியல் என்ற இச்சொல் தோன்றி ஒரு நூற்றாண்டுக்குமேல் ஆகிவிட்டது எனலாம். உதிதியாக எடுத்துக்கொண்ட பொருளைக் கலையில் வெளியாகும் வழி முறையாகக் கருதப்பட்ட காலத்திலேயே படைப்பின் உள்ளடக்கத்தின் தன்மைகளைச் சுட்டவும் இது பயன்படுவதாயிற்று. சில பொருட்கள் மட்டுமே "நடப்பியல்" எனக்கருதப்பட்டன3. மேற்கூறிய நடப்பியல் இலக்கியக் கொள்கை அடிப்படையில் பிரபஞ்சன் கதைத் தொகுப்புகள் ஆராயப்படுகின்றன.

## சிறுகதையில் நடப்பியல் :

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்றை வாழ்க்கை அனுமதிக்கின்றது. அந்த அனுமதியும் எல்லைக்குட்பட்டதாகவே இருக்கிறது. எந்தெந்த அனுபவங்களுக்குக் கட்டுப்படியாகுமோ அந்த எல்லைக்குள் அல்லது அதன் விளிம்பில் நின்று வாழ்ந்து தீரவேண்டியிருக்கிறது. இந்த இடம் மிகச் சிறுபொழுதுகளில் சந்தோஷமாகவும் பெரும்பாலும் துன்பமாகவும் இருக்கிறது. என்றாலும் இந்த வாழ்வின் காயம், வலி, நம்பிக்கை, உற்சாகம் என்று வெவ்வேறு நிலைகளில் புரிந்துவிடுகிறது. எனவே, பிரபஞ்சன் சிறுகதைகளிலும் வாழ்வின் காயத்தை நம்பிக்கையை, வலியை, உற்சாகத்தை, ஏமாற்றத்தைக் காதல், திருமணம், அன்பு, கற்பு, மனிதாபிமானம், நட்பு, பாலுணர்வு என்ற நிலையோடு தொடர்பு படுத்திக்காட்டியுள்ளார். பொதுவாக நடைமுறை வாழ்க்கையில் பொருளாதாரச் சிக்கல் மிக்க அடித்தள மக்களின் வாழ்வில் என்ன பிரச்சனை எல்லாம் இருக்குமோ, அவற்றையெல்லாம் கண்கூடாகக் கண்டு அனுபவித்தவர். எனவே, தம் சிறுகதைகளிலும் அவற்றை இனம் கண்டு சித்தரிக்கின்றார். "சிறுகதை என்னும் கலைப் படைப்பிற்கு மாந்தரையும் கருப்பொருளையும் தருவது சமுதாயம்தான். கலைப்படைப்பை உருவாக்கும் கலைஞன் தான் வாழும் சமுதாயத்தில் காணும் மனிதர்களையும் நிகழ்ச்சிகளையும் கண்டு அவற்றை மனத்தில் வைத்துக்கொள்கிறான். அவனை மிகுதியாகப் பாதிப்பவைகளை அவன் தன்னுடைய சிந்தனையுடன் சேர்த்துக் கலைவடிவமாக ஆக்கித் தருகிறான். சமூகத்தில் காணப்படும் நிறைகுறைகளை வாழ்க்கைப் போக்குகளைக் கண்டு அவற்றைத் தருவது எழுத்தாளன் பணியாகும். இந்த அடிப்படையில் பிரபஞ்சனும் வாழ்க்கையில் அன்றாடம் நடக்கும் நிறைகுறைகளைச் சுட்டித் தீர்வும் தருகிறார்.

## காதல் :

சங்க இலக்கியத்திலிருந்து இன்றைய இலக்கியம் வரை காதலைப் பாடுபொருளாக வைத்துப் போற்றுகின்றார். காலத்துக்கு ஏற்ப உள்ளடக்கப் பொருளைத் தேர்வு செய்வதுடன் அன்றாடம் நடக்கும் நிகழ்வை நம் கண்முன் நிறுத்துகின்றார். இன்றைய இளைஞர் மத்தியில் காதல் எப்படியெல்லாம் அவர்களை மாற்றுகிறது என்பதையும் எது காதல் என்றே தெரியாது வாழ்க்கையில் எப்படி அடிபடுகிறார்கள் என்பதையும் "குழந்தைகள்" என்ற கதையின் வாயிலாகச் சித்தரிக்கின்றார். பிச்சையாண்டி என்பவன் வீணை கற்றுக்கொள்ள ஆசைப்படுகின்றான். ஆனால் வீணை கற்றுத்தரும் வாத்தியார் மகளுக்குக் காதல் கடிதம் எழுதித் தருகிறான். காதல் கடிதம் என்று தெரியாத வயதுடைய ஒரு பெண்ணிடம் இவ்வாறு நடந்துகொள்கிறான். இன்றைய இளைஞர் "காதல்" என்ற போர்வையில் உணர்ச்சிவசப்பட்டு மிக மோசமாக நடந்துகொள்வதாக இக்கதை அமைகிறது. ஆனால் ஆசிரியர் அப்படிப்பட்ட இளைஞர்களைத் திருத்துவதாக கதையின் தீர்வைக் காட்டுகிறார். "எந்தப் புருஷனுக்கும் ஒரு பெண்ணைப் பார்த்து இந்தமாதிரி கேட்கிற உரிமை உண்டு. ஆனால் இதை எல்லாம் புரிஞ்சிக்குற பக்குவத்திலே அந்தக் குழந்தை இல்லையே" ("திரை", "குழந்தைகள்" ப. 38) என்ற வரிகள் மூலம் காதல் என்பது என்ன என்பது தெரியாமலே நடக்கும் இதுபோன்ற இளைஞர்களை இன்னும் நாம் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறோம்.

இதேபோன்று காதலினால் அடிபடும் முத்தையா என்பவனின் நிலையை ஏமாற்றத்தை "பிறை" என்ற கதை உணர்த்துகிறது. ஓர் ஆணும் பெண்ணும் அவங்க ஆண் பெண்ணுங்கறதுக்காகவே இணையறதுதான் உறவு. ஒருத்தர் துணை ஒருத்தருக்கு அவசியம்னு புரிஞ்சிக்கிறதுதான் காதல். நம்ம தலைமுறையில் அது

சாத்தியமில்லை" என்ற வரிகள் மூலம் ஆசிரியர் இதுபோன்ற காதலை மக்கள் புரிந்துகொள்வதில்லை. காதல் என்றாலே ஆணும் பெண்ணும் இணையும் உறவு என்ற தப்பான ஓர் அர்த்தத்துடன் பார்க்கிறது என்பதைச் சுட்டுகிறார்.

**திருமணம் :**

திருமணம் என்னும்போது இன்றைய நடைமுறை வாழ்க்கையில் எவ்வளவு சிக்கல்கள் நிறைந்திருக்கின்றது என்பது கண்கூடு. சங்க இலக்கியத்தில் தலைவன் கையுறைக் கொடுத்து தலைவியைத் திருமணம் செய்தான். ஆனால் இன்று நேர்மாறாக மாப்பிள்ளை வீட்டாருக்குப் பொருள் கொடுத்து பெண்ணைக் கொடுப்பதற்குள் பெண்ணைப் பெற்றவர்கள் படும் அவல நிலையை அப்படியே நேரில் பார்ப்பதுபோன்று அவரது சிறுகதைகள் நம் உணர்ச்சிகளைத் தட்டி எழுப்புவனவாக உள்ளன. "தொலைந்துபோனவள்" என்ற சிறுபாதையில் வரும் சீதா திருமணத்திற்குக் காத்து நிற்கிறாள். வரும் மாப்பிள்ளை வீட்டார்களுக்கு ஒவ்வொரு முறையும் "பஜ்ஜி" செய்து தருவதே வழக்கமாகிவிட்டது. அவள் மனதுக்குள் இந்த இடமாவது நிலைக்கணும் என்ற எதிர்பார்ப்பு.

ஆனால், பெண்வீட்டார் வந்ததும் சீதாவின் அடிப்படைச் சம்பளத்தைப் பற்றிப் பேசுகின்றனர். பெண்ணின் சித்தப்பா மாப்பிள்ளைப் பையன் விஷயத்துல ரொம்பவும் குறியாக இருக்கிறார். அதனால் என்று இந்தத் திருமணத்தை நிறுத்த நினைக்கிறார். ஆனால் மறுபடியும் மறுபடியும் சித்தப்பாவுக்கத் துன்பத்தைத் தராமல் இருக்க இந்த சம்பந்தத்தைப் பேசிமுடிக்கச் சொல்கிறாள். தன் பெற்றோர்களுக்காவே பெண்ணும் பெண்ணுக்காகப் பெற்றோர்களும் படும் துன்பத்தை நேரில் பார்த்தது போன்று இக்கதையைச் சித்தரிக்கின்றார். பெண்பார்க்கும் படலம் ஓர் சிக்கல் நிறைந்தது என்று இன்று நடந்துவரும் பிரச்சனையை அழகாகக் கீழ்வரும் வரிகள் மூலம் படம்படித்துக்காட்டி உள்ளார். "பெண் வீட்டாரைப் பார்க்கையில் அற்பப் பிறவிகள் என்ற அலட்சியத் தோரணைகள் எல்லாம் எனக்குப் பழகி" என பெண் வீட்டார்களின் மன உணர்வை தெரியப்படுத்துகிறார். இதேபோன்று "உறை" என்ற கதையில் வரும் "சுமதி" வேலையில்லாது இருக்கும் கிருஷ்ணமூர்தியைத் திருமணம் செய்வத சமூக அந்தஸ்த்திற்கு இழுக்கு என்றும் எதிர்கால வாழ்வுக்குப் பாதுகாப்பு இல்லாமல் போய்விடும் என்றும் கூறித் தன்னை விரும்பும் கிருஷ்ணமூர்த்தியை விட்டுவிட்டு தாயார் பார்த்து வைத்திருக்கும் மாப்பிள்ளையை மணந்துகொள்கிறாள். எனவே, திருமணம் என்னும்போது ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் நடைமுறையில் படும் அவலங்களை, வலியை உணர்த்துகிறார்.

**கற்பு :**

காலந்தோறும் கோட்பாடுகள் எவ்வளவோ மாறிவருகின்றன. ஆனால் "கற்பு" என்ற கோட்பாடு மட்டும் இன்னும் சமுதாயத்தில் போற்றக்கூடிய உயர் மதிப்பாகக் கருதப்படுகிறது. இப்பழம் மரபு போற்றும் பெண்களுக்கு மத்தியில் சத்யா போன்ற பெண் எப்படி அடிபட்டுத் துன்பப் படுகிறாள், இறுதியில் அவளால் முடியாத ஒரு நிலையில் கணவன் என்ற பந்தத்தையே எப்படி உடைக்கிறாள் என்பதுதான் "இனிய காலம் வரும்" என்ற கதையாகும். இதில் பழம் மரபைப் பெண்ணினம் போற்றுகிறது. ஆனால் இன்றைய நடைமுறையில் இக்காலச் சூழலுக்கு எற்ற ஒரு பெண்ணாக சத்யாவை ஆசிரியர் காட்டுகிறார். கணவன் தன் மனவுணர்வுகளைப் புரிந்துகொண்டு அவளைத் தன் வாழ்க்கைக்குத் துணையாக நடத்தவேண்டும் என்று அவள் எதிர்பார்க்கிறாள். இவள் விருப்பங்கள், ரசனைகள் என்வென்று புரிந்துகொள்ள முயற்சிக்கவில்லை. மாறாக தன் விருப்புகளுக்கு மதிப்புத் தரவேண்டும் என்ற இன்றைய சராசரி ஆணுக்குரிய இயல்புகளோடு சத்யாவைத் துன்புறுத்துகிறான்.

அதையும் சகித்துக்கொண்டு தன் மன உணர்வுகளை அடக்கி வாழ்கிறாள். வேலைக்குப் போகும் பெண் என்பதாலோ என்னவோ? அவள் கணவன் அவளைச் சந்தேகப் படுகிறான். அலுவலகத்தில் உள்ள ஆண்களோடு ஆட்டம் போடலாம்னு வேலைக்குப் போகிறாயா? என மிருகத் தனமாக நடந்துகொள்கிறான். இதனைக் கீழ்வரும் வரிகள் மூலம் காணமுடிகிறது. "என்னடி செய்வே என்று அவள் தலைமயிரைப் பிடித்து இழுத்துக் கழுத்தில் மிருகத்தனமாக அறைந்தான் பிரபு" (வி.வி. இனிய காலம் வரும் ப.71). இதுபோன்ற

மிருகத்தனமாக சராசரி ஆண்களோடு சத்யா போன்ற பெண்கள் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார்கள். சத்யா போன்ற பெண்களுக்கு ஆசிரியர் இரக்கப்படுவது போன்று வாசகர்களையும் இரக்கப்பட வைக்கிறார். பிரபு போன்ற கணவன்மார்களுக்கு ஒரு பாடமாகச் சத்யாவின் மூலம் தீர்வு காட்டுகிறார். எரிந்து கொண்டிருந்த கொள்ளிக்கட்டையைக் கையில் எடுத்தாள் சத்யா. அக்கொள்ளிக் கட்டையால் அவன் முகத்தில் ஓங்கி அடித்தாள்" (வி.வி. இனி காலம் வரும். ப. 71). எனவே, அடங்கி அடங்கிப் போகும் சத்யா போன்ற பெண்கள் இருப்பதால் பிரபு போன்ற ஆண்கள் சுதந்திரமாக நடமாடிக் கொண்டுதான் இருக்கிறார்கள் என்பதை இக்கதையின் மூலம் தெரிந்தகொள்ள முடிகிறது.

## நட்பு :

இன்றைய உலகில் நடைமுறை வாழ்க்கையில் மனிதன் விரும்புவது நட்பு "உறவு" ஆகும். பிரபஞ்சன் சிறுகதைகளில் பெரும்பாலோர் நண்பர்களாகவும், தோழமை உணர்வு கொண்டவர்களாகவும் சித்தரிக்கப்பட்டுள்ளனர். இவ்வடிப்படையில் "விட்டு விடுதலை ஆகி" என்ற கதையில் வரும் சங்கர் சுமதி இருவரும் தோழமை உறவு கொண்டவர்களாகக் காணப்படுகிறார்கள். இருவரும் ஆராய்ச்சி மாணவர்கள். ஒருவர் நலத்தில் இன்னொருவர் அக்கறை உள்ளவர்களாக இருக்கிறார்கள். ஆய்வு மாணவி சுமதியைப் பேராசிரியர் அறைக்கு அழைக்கிறார். இதை அறிந்த சுமதி தன் நண்பனையும் உடன் அழைக்கிறாள். அத்தருணத்தில் அவளுக்குத் துணிவையும், தெளிவையும் ஊட்டும் தோழன் சங்கர் காணப்படுகிறான்.

"நீயும் வாயேன் ப்ளிஸ்
நான் வரமேட்டேன்... எல்லாத்துக்கும்"

ஆண்களோட துணையை நாடக்கூடாது, குழந்தைகளுக்குக் கூட நடைவண்டி கொஞ்ச காலந்தான், என்ன நடந்துடப் போகுது. மிஞ்சி மிஞ்சிப் போனா உனக்கு டாக்டர் பட்டம் தாமதமா கிடைக்கும்" (வி. விடுதலையாகி ப. 401). இந்த வரிகளை நோக்குமிடத்து ஆசிரியர் இன்றைய உலகியல் நடப்பியல் வாழ்வுக்கு அடுத்தவர்களைச் சார்ந்து வாழ்வது தவறு என்ற நடப்பியல் வாதத்தை சுமதி - சங்கர் வாயிலாகத் தெரிவிக்கின்றார். இதுபோன்ற மனித உணர்வுகளை எதார்த்தங்களோடு இணைத்துப் பார்க்கும் "அவனும் அவளும்" என்ற கதையிலும் அன்புக்கு ஏங்கித் "தடம்" புரளும் "மரி என்கிற ஆட்டுக்குட்டி" கதையிலும் காணப்படுகிறது.

## முடிவுரை :

ஒரு மனிதனின் பிறப்பு அவன் வாழும் சூழல், சூழலுக்கேற்ப, அவன் மனத்தில் தோன்றும் ஆசைகளங ஆகியனவற்றைக் காணமுடிகிறது. அவ்வாசைகளுக்காக அவன் மேற்கொள்ளும் செயல்களைச் சமூகத்துடன் தொடர்பு படுத்திக்கொள்ளும் நிலையைக் காணமுடிகிறது. முக்கியமாகக் குடும்ப வாழ்க்கையில் ஏற்படும் பாதிப்புகளையும்இவரது சிறுகதைகளில் நாம் காணும் மனிதர்களாகக் காட்டப்படுகிறார்கள். இன்றைய நடப்பியல் கொள்கைக்கு ஏற்ற நிலையில் இவரது கதைகள் அமைந்திருப்பது மிகவும் குறிப்பிடத் தக்க ஒன்றாகும். மேற்கூறிய சிறுகதைகளின் வாயிலாக காதல், திருமணம், அன்பு, நட்பு போன்ற நடப்பியல் சிந்தனை புலனாகிறது.

## அடிக்குறிப்புகள்

1. ந. பிச்சமுத்து - திறனாய்வும் தமிழும் இலக்கியக் கொள்கைகளும் ப. 14.
2. மீனாட்சி முருகரத்தினம் - மேலை இலக்கியத் திறனாய்வு அறிமுகம் ப. 187
3. கைலாசபதி - நாவல் இலக்கியம், திறனாய்வுக் கட்டுரைகள்
4. கோ. கேசவன் - தமிழ்ச் சிறுகதைகளில் உருவம் ப. 20.

# REALISM IN LITERATURE

Mrs.*P.Chandra, Dr.V.Meenakumari* , Department of English,
A.P.A.College for Women, Palani.

Realism can be defined as the precision and vividness of rendering, in art, of some observed detail. Engels defines "realism" as "typical characters in typical situations" (Lodge 583). 'Realism' as opposed to idealization or caricature deals with an ordinary, contemporary, everyday reality and not with traditionally heroic, romantic or legendary subjects. Realism, in fact, distinguishes literary work from fables and fairy tales.

Realism of presentation and realism of content are the two types of realism found in literature. Realism of presentation is the art of bringing something close to the readers, making it palpable and vivid, by sharply observed or imagined detail. In Chaucer's ***Canterbury Tales*** the action of Chaucer's friar, driving the cat, off the bench where he wants to sit down, can be described as realism of presentation. A literary piece is realistic in content, when it is probable or true to life. Novels of Balakumaran and Janakiraman, exemplify realism of content and there are some literary pieces with hypothetical probability.

Realism of presentation can be substituted for 'form', which includes diction and spatio-temporal realism. Language plays a pivotal role in making a novel realistic by visualizing a situation or a person or his behaviour. In Ambais' short story ***Vallurukal*** the author describes a poor old man who along with his pregnant daughter is starving to death:

> ராமு தாதா கார்த்தாலே வந்தாலே, பார்த்தாயா? தொடைச்சதை எல்லாம் சுருங்கி முகத்திலே பாளம் பாளமாகத் தோல் வெடிச்சு, கை எலும்பு துருத்திண்டு, வந்து உங்க அப்பாகிட்டே பலகீனமான குரல்லே "ஷர்மா பாபு, நிஜமாவே கடையிலே அரிசியோ, கோதுமையோ இல்லையா? என் பொண்ணுக்கு இது பிரசவ சமயும். வெறும் வயிறுதான் உடம்பிலே தெரியறது. சாப்பிட ஒண்ணும் இல்லை" என்றார்.
>
> (சிறகுகள் முறியும் .74)

In Kadhaipithan's ***Kalankadantha Gnanothayankal*** the description of the protagonists' reaction seeing the sudden summer rain makes the reader feel that he is passing through the window of his neighbour:

> ராமநாதன் ஈசிசேரில் சாய்ந்துகொண்டு வெறித்தபடி உட்கார்ந்திருந்தவர், "சடசட" வென்று மழைத்தூறல் பெரிதாகி ஜன்னல் வழியாக அவர்மேல் தெறித்து விழுந்ததும், "சடக்" என்று எழுந்து, சற்றே நிமிர்ந்து உட்கார்ந்து "அடடா" என்று ஏதோ நினைவுக்கு வர நாக்கைக் கடித்துக் கொண்டார். வாசல் வராந்தாவில் அவரது "ஹெர்குலிஸ்" சைக்கிள் கோடை மழையில் குளித்துக் கொண்டிருந்தது.

அப்போதே எடுத்து அதை உள்ளே வைத்திருக்க வேண்டும். ஆயிற்று,
இனிமேல் அதை எடுக்க முனைந்தால் அவரும் குளிக்க நேரிடும். எதுவும்
காலாகாலத்தில் செய்யத் தவறினால் இப்படித்தானோ?

(பழைய சோறும், பார்ன்விட்டாவும் 13)

The employment of conversation which advocates ordinary, everyday contemporary reality in fiction holds it very close to real life.

"என்ன சாம்பு, லவ் லெட்டரா? தேஷ் பாண்டே கேட்டான்.
இல்லை தேஷ்பாண்டே"
"கல்யாணம் பண்ணிக்கொள்ளச் சொல்லிக் கட்டாயப்படுத்துகறீர்களா வீட்டில்?"
சிரித்தான் சாம்பு "ம்ஹீம்"
"சரி. இன்னிக்கு வெச்சுக்கலாமா?"
"வேண்டாம். தேஷ்பாண்டே"
"டேய், நீ ஒரு முட்டாள் மதறாஸி. வாழ்க்கையை ரசிக்கத்தெரியாத மதராஸி".
"இருக்கட்டும்".
"உனக்குத் தைரியம் இல்லை. ஒரு பெக் சாப்பிட்டா நீ டவுன்தான். என்னை சாலஞ்ச்
பண்ணாதே".
"சும்மா பேச்சுத்தான் நீ. அம்மா திட்டுவாளா"?
"சரி, இன்னிக்கு வெச்சுக்கலாம்". (சிறகுகள் முறியும் .21)

The author deceives a reader by fixing the locale and the specific time of occurrence of events in a novel. The description of Vaiyapuri water tank and the foothills of Palani in ***Vazhithunai*** by Late Prof.K S.Ramamurthy renders the reader a sensation of reality. A passerby who crosses the Madhuranthagam water tank in Chennai even now, can hear the hoof sounds of the horse on which Vandiyathevan has travelled in ***Ponniyin Selvan***. The reference of time in novels which intensifies the certainty of the events is a device used by the author to make the reader think that he is telling the truth. There are many novels where direct reference of date, month, and year are made by the writer (for example: Sandilyan's ***Kadal Pura*** and ***Mannan Magal***). In some novels there is an indirect reference to time. In ***Priyam***, a short story by Kathaipithan, the reality of situation is created by including the Tamil programme of Ceylon Radio. The readers are taken back to those days when everyone in Tamilnadu was glued to the Ceylon radio. (T.V. was not in vogue in early seventies)

Novels that have the realism of content can justly be said to have truth to life. A reader after reading it will feel, 'yes', This thus grim, or splendid, or empty, or ironic - is what our life is like. This is the sort of thing that happens. This is how people behave? Realism of content which mainly refers to theme or subject constitutes sociological, political and psychological realism.

Social novel creates a general way of life found in a particular social or working community. Within this limit, characters are sometimes quite carefully drawn Novels related to the theme of untouchability are of this type. Eg ***Thiaga Malarkal*** – Mari Aravazhi. Mining town, hospital, Univer-

sity and a village form the background of a few novels. The problems encountered by a student from a middle class family doing Ph.D. are depicted in Ambai's ***Mileichan***. In some novels, political movements play a vital role in story development As French Revolution has become the theme of many Western novels, Indian war of Independence has become the main source of theme for a few novels in India Widely acclaimed novels ***Alaiosai***, ***Thiagaboomi*** written by Kalki has freedom struggle at its background

The novels which deal with psychological realism can also be called as personal novels where there may be accurate observation and description of persons. The mind of a wife who has married a very calculative husband is explored in the short story ***Siragugal Muriyum***.

> இருப்பதிலேயே விலை உயர்ந்த புடவையை எடுத்துவிட்டுத் திரும்பும் வழியில், பர்ஸில் உள்ள பணத்தை எண்ணி, செலவழித்த பணத்துக்காக அவனை ஏங்க வைக்கும் அந்தக் கேவலமான பழி வாங்குதலுக்காகவே அவள் பட்டுப்புடவை வாங்கினாள். "வேண்டும்" என்று கேட்டு வாங்கும் அளவு தன்மானம் தனக்குச் செத்துவிட்டதா என்று தன் மனத்தின் குறுகலை எண்ணி அவள் வியந்ததுண்டு. ஆனால், அவன் காசை பலவந்தமாகச் செலவழிக்க வைத்துவிட்ட குரூரமான மகிழ்ச்சி அந்த எண்ணத்தை அடித்துவிடும்.
>
> (சிறகுகள் முறியும் .88)

There are also novels with hypothetical probability - what would be probable, if the initial situation occurred. The hypothetical probability is brought in, to make the strange events more fully imaginable Shakespeare's ***Hamlet*** is not faced with a ghost in order that his reactions may tell us more about his nature and therefore about human nature in general, he is shown reacting naturally in order that we may accept the ghost.

Readers demand realism at least a superficial or apparent realism of content. If he is to be deceived, a much subtler and closer resemblance to real life will be required. But without some degree of realism in content, a degree proportional to the reader's intelligence - no deception will occur at all. No one can deceive a reader unless he makes him think he is telling the truth.

******


✦ Ambai - ***Siragugal Muruyum*** Chennai Kalachuvadu Pathippagam, 2003.

✦ Kadhaipithan. ***Pazhiyachorum Bounvitavum*** Sivagangai . annam Pvt Ltd , 1981

✦ Lewis, C S. ***An Experiment in Criticism.*** New Delhi . Vikas Publishing House Pvt. Ltd, 1979.

✦ Lodge, David. ***20th Century Literary Criticism*** London · Longman, 1983.

# சோ.தர்மனின் நிழல்பாவைகள்

*முனைவர் பா.சிங்காரவேலன்*
நாடார் சரசுவதி கல்லூரி, தேனி

## முன்னுரை

நாட்டுப்புற நிகழ் கலைக்களில் ஒன்று தோற்பாவைக் கூத்து ஆகும். பாவைக்கூத்திற்குப் பொம்மைகள் , தோல் பொம்மைகள், மரப்பொம்மைகள் பயன்படுத்தப்படுகின்றன. இதனை "நிழலாட்டம்" என்றும் "பொம்மலாட்டம்" என்றும் கூறுகின்றனர். அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சியும், திரையரங்குகளும் அசுரவேகத்தில் வளர்ச்சியடைந்து, நமத மண்ணின் பாரம்பரியக் கலைகளை அழித்து வருவதோடு, அதனைச் சார்ந்து வாழும் மக்களையும் நலிவடையச் செய்கின்றன என்பதை வாசகர்களுக்குப் படம்பிடித்துக் காட்டுவதே சோ.தர்மன் எழுதிய "நிழல் பாவைகள்" என்னும் சிறுகதையாகும். கலைகளின் நடப்பியல் நிகழ்வை அறிவதும், ஆய்வதும், அறிவுறுத்துவதுமே இதன் நோக்கமாகும்.

## கதாபாத்திரங்கள்

நிழல்பாவைக் கலைஞர்கள் லட்சுமணராவ், ரத்னாபாய், கிராமத்தைச் சார்ந்த முத்துவீரன் தாத்தா ஆகிய மூவரும் ஆவர்.

## பாவைக்கூத்து நிகழ்த்தும் முறை

"சிறுதோல் பதுமைகளை ஒரு விளக்குக்கும், ஒரு வெள்ளைச் சீலைத் திரைக்கும் நடுவே வைத்து ஆட்டி அவற்றின் நிழல் திரையில் விழுமாறு செய்தல் பாவைக் கூத்து" என்று தமிழ்க்கலைக்களஞ்சியம் கூறுகிறது. இக்கலை ஆந்திரா, மைசூர், கேரளா, ஒரிஸா, தமிழ்நாடு ஆகிய இடங்களில் மக்களின் செல்வாக்குப் பெற்றது. இக்கலையை பஞ்சுமிட்டாய்க்காரர்களும், சீனிமிட்டாய்க்காரர்களும், சிறுவர்களைக் கவர்ந்து விற்பனையைப் பெருக்க இவ்வடிவத்தை பெரிதும் பயன்படுத்துகின்றனர்.

பாவைக்கூத்துக் கலைஞர்களான "ரத்னாபாயும்" லட்சுமணராவும் தெய்வங்களைப்போல் வலம் வந்தவர்கள். ஊர்தோறும் சென்று எட்டு முதல் பத்து நாள் வரை ராமாயணம் என்றால் பட்டாபிஷேகம் வரை மகாபாரதம் என்றால் வனவாசம் வரை பாடி மக்களிடம் இதிகாசங்களை அறிமுகப்படுத்தி நம்பிக்கையூட்டி மக்களின் மனதில் நீங்காத இடம் பெற்றவர்கள்.

*திரைக்குப் பின்னால் லட்சுமணராவ் பக்கத்தில் ரத்னாபாய். மலைபோல் குவிந்து' கிடக்கும்* தோல்பாவைகள். கால்விரல்களிலும், கைவிரல்களிலும் பல முனைகளிலிருந்து கயிறுகள் இணைக்கப்பட்டிருக்கும் பாவைகள். கைகளைச் சுண்டிப் பாவைப் பொம்மைகளைத் திரையில் காட்டி, வசனம் பேசி, வசனத்திற்கு ஏற்ப பாவை உறுப்புகளைச் சுண்டி அசைத்து ஆடச் செய்யும் லாவகமும், கத்தி, கதறி, ஆடி, பாடி, பறந்து மறைந்து மாயாஜாலமும் காட்டி ரசிகர்களின் அன்பைப் பெற்றவர் லட்சுமணராவ். கதையோட்டத்திற்கு ஏற்ப என்னபாவை வேண்டுமோ அதைத் தயாராகக் கைகளில் திணிப்பாள் ரத்னாபாய். கலைஞர்களின் விரைவுத் தன்மையும், தொடர்சிந்தனையும், கலைகளைக் காட்சிப்படுத்துவற்கு அவசியம். பாவை உருமாறினால் கதையின் போக்கு மாறிவிடும். இப்படி, துளியும் பிசகாமல் கதை நடத்தி மக்களிடம் வேட்டி, சட்டை, சேலை, தானியம், என்று எண்ணற்ற பொருளைப் பெற்றனர். கூத்து நிகழ்த்தினால் மறுநாள் "மழை பொழியும்" என்பது மக்களின் நம்பிக்கை.

## பாவைக்கூத்து இன்று

சமயத்தோடும், வழிபாட்டோடும், நம்பிக்கையோடும் தொடர்பு படுத்தப்பட்டு வளர்ந்த தோல்பாவைக்கூத்து இன்று மக்களின் புறக்கணிப்பால் தன்சுயம் இழந்து காணப்படுகிறது. இன்று டியூப்லைட் பிரகாசமும், துணியால் கோட்டைச் சுவரும், சினிமாப் பாடல்களும், திரைக்கு முன்னால் வந்த அழகிகளின்

ஆட்டமும், கொச்சை மொழியும், ஆடத்தெரிந்த இளைஞரை மேடைக்கு அழைத்துப் பெண்களுடன் இணைந்து ஆட ரூபாய் இருபது என்று அறிவிப்பதும், கிராமத்துப் பெண்களிடம் சேலையை வாங்கி ஆடல் அழகிகள் அணிவதும், அழகிகளைத் தொட்டு ஆடும் இளைஞர் தன்னோடு ஆடியதாக கற்பனை செய்யும் கிராமத்துப் பெண்களின் மனவோட்டமும் நிகழ்கலைக்குச் சமகாலத்தால் வழங்கப்பட்ட அவலத்தைக் கதையின் வழி அறியமுடிகிறது.

## மண்ணின் மைந்தர் முத்துவீரன் தாத்தா

கடந்த காலத்தை ஒன்றுகூட்டி தன் நெஞ்சுக்குள் வைத்திருப்பவர், புதுமையை ஏற்க மறுக்கும் மரபின்வேர், முத்துவீரன் தாத்தா காதாபாத்திரம். கால நிர்ப்பந்தத்தின் காரணமாய் விரும்பியோ, விரும்பாமலோ நிகழ்த்து பாவைக்கூத்துக் கலைஞர்கள் மக்களின் புதிய ரசனைக்கேற்ப, வக்கிர எண்ணங்களுக்கு விருந்தாக கலைவடிவத்தை மாற்றித்தருகின்றனர். இதனைக் கண்ட முத்துவீரன் தாத்தா கடந்த காலத்தை எண்ணிப் பார்க்கின்றார்.

பாவைக் கூத்தைப் போல் மண்ணில் வேரூன்றிய கூத்துக்கள் எண்ணிலடங்கா. சாமக்கோடங்கி, ராப்பிச்சை, பச்சை குத்துபவர்கள், காவடிப்பாட்டுக்காரர்கள், கிண்ணட்டிக்காரன், மரக்கால் ஆட்டம், மணியாட்டிக்காரன், பொலிப்பாட்டுக்காரன் இவற்றையெல்லாம் காலவெள்ள நாகரீகச் சூறாவளியால் அடித்துச் செல்லப்பட்டு உருத்தெரியாமல் அழிந்து போயின. நாட்டுப்புறக் கலைஞர்கள் தம்துறையில் நீண்ட தேர்ச்சிப் பெற்றவர்கள் என்பதையும் முத்துவீரன் தாத்தாவின் நினைவலைகளின் மூலம் அறிய முடிகிறது.

பொலிப்பாட்டுக்காரன் பிணையலடிக்கும் ஒவ்வொரு மாட்டின் நிறம், சுழி, கள்ளப்பாய்ச்சல், சண்டி, ரத்தக்கண், சுண்டுவாதம், மொட்டைக்காதல், கூட்டவால், மூழி, போர், மயிலை, செவலை, கழிச்சான், கடவாபல் ஓட்டை, குறுங்கால் என்று பலவித குணங்களைச் சரமாகப் பாடுவான். மகசூலில் ஒரு பகுதியைப் பெற்றுச் செல்வான் என்ற பழைய நினைவுகளில் அகப்பட்ட முத்துவீரன் தாத்தாவை மேளக்களத்திலிருந்து மிதந்து வந்த சினிமா பாட்டின் ஒலி நிகழ்காலத்திற்கு அழைத்து வந்தது.

மறுநாள் காலையில் லட்சுமணராவைப் பார்க்க முத்துவீரன் தாத்தா சென்றார். கூடாரத்தில் வேஷம் கலைக்காத பவுடர் பூச்சுக்களுடன் பெண்கள் தூங்கிக் கொண்டிருந்தனர். லட்சுமணராவ் தன் பேரக்குழந்தைகளுக்குக் கதை சொல்லிக் கொண்டிருந்தார். “பாட்டியின் வடையைக் காகம் திருடியதாக போலீஸிடம் சொல்ல, போலீஸ் துப்பாக்கியைக் காட்டிக் காகத்தை அச்சுறுத்த, காகம் கிடைத்த வடையில் பாதி உனக்கென்று பங்கிட்டு கீழே போட” எனக் கதையை நீட்டிக் கொண்டே சென்றார். இதனைக்கேட்ட தாத்தா துயரப்பெருமூச்சுடன் லட்சுமணராவைப் பார்க்காமலேயே திரும்பி நடந்தார். விளையாட்டுப் பொருளாக உபயோகமற்றுக் கிடக்கும் பாவை காலில் இடற, முத்துவீரன் தாத்தா [illegible]கின்றார். அதில் முள் படுக்கையில் பீஷ்மர் முத்துவீரன் தாத்தா விரல்களில் முள் குத்தி ரத்தம் வழிந்தது. தாத்தா, லட்மணராவின் விரல்களை நினைத்தபடியே நடந்தார். அவர் பாஞ்சாலி அழுவது போலவும், சீதை கத்தவது போலவும் கட்டை விரலை இழந்த ஏகலைவன் கதறி அழுவது போவும் உணர்கின்றார். கலைஞர்களின் கடந்தகால மேன்மையையும், நிகழ்கால நிராகரிப்புகளையும் மனதிற்குள் எண்ணிப்பார்க்கிறார். வேதனையின் வெளிப்பாடுகளாய் அமைவது ஏக்கப்பெருமூச்சுகளே ஆகும்.

## முடிவுரை

நடப்புச் சூழலில் நிகழ்த்துக்கலை கலைஞர்களின் எதார்த்த வாழ்வில், தம்மை நிலைநிறுத்திக் கொள்ள, மக்களின் இரசனைக்கு ஏற்ப கலை வடிவத்தை மாற்றி வருகின்றனர். பல நோரங்களில் நாம் புதுமைய ஏற்கும் ஆர்வத்தில் மரபுக்கலைகளை மறந்து வருகின்றோம். இதனால் கலைவாழ்வில் ஈடுபட்டோர் மக்களிடமும், அரசிடமும் அங்கீகாரமில்லாத நிலையில் நாடோடிகளாய் வாழ்ந்து வருகின்ற அவலத்தை சோ.தர்மன் “நிழல் பாவைகள்” என்று சிறுகதையில் சித்தரித்துள்ளார்.

# கதாநாயகியில் நடப்பியல்

முனைவர். *சி. சித்ரா,* எம்.ஏ.,எம்.ஃபில்.,பிஎச்.டி.,பிஜிடிஜேஎம்சி., முதுநிலை விரிவுரையாளர்,
ஆய்வு நெறியாளர் - தமிழாய்வுத்துறை - தேசியக் கல்லூரி,திருச்சிராப்பள்ளி.

## முன்னுரை

மக்கட் சமுதாயம் உயிர்ப்பு நிலையில் இயங்கிக் கொண்டிருக்கும் தன்மை வாய்ந்தது. இலக்கியப் படைப்புக்கள் காலமாற்றத்தைக் கருத்திற்கொண்டே அமைகின்றன. மனித வாழ்வியலை வட்டமிடாத இலக்கியங்களே இல்லை எனலாம்.

"எழுதப்பட்ட காலத்தில் உண்மையான வாழ்க்கையினையும்
பழக்க வழக்கங்களையும் வெளியிடும் ஓவியமே நாவல்" -1.

என்ற கருத்திற்கேற்பத் தம் எழுத்துக்களை வடிப்பவர் ஆண்டாள் பிரியதர்ஷினி.

" ஆண்டாளின் அமைதியான, சாந்தமான, அடக்கமான
உருவத்துக்குள் பெண்களின் அடிமைத்தனம் கண்டு
பொங்கும் சீற்றமும், இயலாமை கண்டு பதறும் இதயமும்
என்றாவது இந்தநிலை மாறாதா என்கிற ஏக்கமும்" -2.

இருப்பதைச் சுட்டிக்காட்டும் வகையில் அவரின் கதாநாயகி புதினம் அமைந்துள்ளது.

கலையார்வம் மிக்க நீலாயதாட்சி, அவளின் தீராத குடும்பச் சிக்கல்கள், அத்தை, அத்தை மகனின் கொடுமைகள், அன்பால் அரவணைக்கும் ஆதிபகவன் - இவர்களைச் சுற்றிக் கதை பின்னப்பட்டுள்ளது.

## நடப்பியல்

மேனாடுகளில் வீரம், தீரம், மாயம், வரலாற்று நிகழ்வுகள் ஆகியவற்றின் அடைப்படையிலான புனைவியல் இலக்கியங்கள் தங்கள் கவர்ச்சியை இழக்கத் தொடங்கிய கால கட்டத்தில் நடப்பியல் இலக்கியம் தோன்றியது. தமிழில் காப்பியம், புராணம், சிற்றிலக்கியம் ஆகியவற்றின் வளர்சிக்குப் பிறகு தோன்றிய புதினமும் சிறுகதையும் உயர்குறிக்கோளை நோக்கமாகக் கொண்டு புனையப்பட்டு, பின்னர் நடப்பியல் கொள்கை பின்பற்றப் பெற்றது.

" வாழ்க்கைச் செய்திகளையும் நிகழச்சிகளையும்
உள்ளபடியே விளக்க வேண்டும்; எனினும் அவற்றுள்
தகுதியுடையவைகளையே இலக்கியத்தில் படைக்க
வேண்டும்; இழிவானவை, அருவெறுப்புக்குரியவை
இடம்பெறக் கூடாது" - 3.

என்று நடப்பியல் பற்றி ஹோவெல்ஸ் குறிப்பிடுகின்றார்.

* மரபென்னும் அடிமைத்தனத்திலிருந்து விடுவித்தல்
* அன்றாட வாழ்க்கை அனுபவங்களை உள்ளவாறு விளக்கல்
* இயற்கைத் தன்மையை வலியுறுத்தல்
* அன்றாட வாழ்க்கையில் காணும் மனிதர்களை, நிகழ்சிகள்ள மதித்தல்
* வாழ்க்கை நிகழ்ச்சிகள் எவ்வாறு நிகழலாம் என்பதைக் குறித்தல்

ஆகியன நடப்பியல் இயக்கக் கொள்கைகளாகும்.

## கதாநாயகியில் நடப்பியல்

கதைநாயகியின் கதை நிகழ்வுகள் நடப்பியல் கொள்கையையொட்டி அமைந்துள்ளன. கதைத்தலைவியின் வாழ்க்கையில் நிகழும் நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பெற்றுள்ள இப்புதினம் நடப்பியல் சமுதாயத்தை நம் கண்டுன் நிறுத்த முனைகின்றது.

நீலாயதாட்சி

* சண்முகம்பிள்ளை
(கண்பார்வையற்ற தந்தை)
* மைதிலி (அக்கா)
* பூரணி (தங்கை)

* ஆதிபகவன்
(இயக்குனர்)

* பேச்சியம்மாள் (அத்தை)
* குமார் (அத்தை மகன்)

ஆகிய உறவுகளுக்கிடையே போராடித் தன் உணர்வுகளுக்கு வடிகால் தேட முனைவதை ஆசிரியர் ஆழகாக வரைந்துள்ளார்.

சொந்த அத்தை மகனை மணந்த அக்கா மைதிலி, மாமியார் கொடுமை, வரதட்சணைக்கொடுமை என்று அவல வாழ்க்கை வாழ்ந்து அவ்வப்போது பணத்திற்காகத் தங்கை நீலாவைத் தேடி வந்து கண்ணீர் சிந்துகின்றாள். விருது பெற்று விழா அரங்கில் பேசும் நீலா அக்காவின் வாழ்க்கையைப் பற்றி வருத்தத்தோடு கூறுகிறாள். நீலாவை மணம்செய்து கொள்ளக் காத்திருக்கும் அத்தையின் இரண்டாவது மகன் குமார், அண்ணனும் அம்மாவும் கொடுமைக்காரர்கள் என்று சொல்லி அவமானப்படுத்திவிட்டதாகக் கோபத்துடன் கூற நீலா,

“அவமானம்னு நினைச்சால், எங்கக்காவை நாலுமாசத்துக்கு
ஒருதரம் சீர்வாங்கி வான்னு விரட்டாதீங்க, பெருந்தன்மையா
நடந்துக்கோங்க; இல்லேன்னா சீர்கேட்டுச்
சீரழிக்கிற ஆம்பளை, பொம்பளை யாராயிருந்தாலும்
முகமூடியைக் கிழிச்சுடுவேன்” -4.

என்று பதிலடி கொடுக்கின்றாள். “ பெண்ணின் மணவாழ்க்கை பணத்தை அடிப்படையாகக் கொண்டு நிர்ணயிக்கப் பெறுகின்றது” என்ற நடப்பியல் சிந்தனையை ஆண்டாள் இதன்வழி வெளிப்படுத்துகின்றார்.

நாடக ஒத்திகையின் போது நீலாவுக்கும் ஆதிபகவானுக்கும் இடையேயான உரையாடல், பாராட்டு, அன்பான கவனிப்பு, மனநிறைவு வெளிப்பாடு போன்றவை இயற்கைத்தன்மையோடு வாழ்க்கையனுபவங்களை உள்ளவாறே விளக்குகின்றன.இல்லாமையை மறைக்கப் போலித்தனமாக நாடகமாடுவது நாகரிகமாவது என்பதை ஆதி நீலாவிடம் கூறும்,

“இதுதான் இந்த நிஜம்தான் எனக்கு ரொம்பப் புடிக்குது
எந்தவிதமான முகமூடியும் இல்லாம, பூசிமெழுகாம பந்தாவுக்காகப்
பொய் சொல்லாம, நிஜத்தை அப்பட்டமா ஒத்துக்கறீங்களே.¿..
அபாரம் இந்த ஞானத்தெளிவுதான் பாரதியோட
புதுமைப்பெண்ணா உங்களை அடையாளம் காட்டுது” -5

.என்ற கூற்று நிறுவுகின்றது. பொங்கணும், திங்கணும், தூங்கணும் - என்பதற்காகவே “மனைவி” எனக்கருதும் குமாரின் வறட்டுச் சிந்தனைகளுக்கு எதிர்ப்புக் குரல் கொடுக்கும் மைதிலியும் நீலாவும் வாழ்க்கை நிகழ்ச்சிகள் எவ்வாறு நிகழ வேண்டுமென்பதையும் வடித்துக்காட்டுகின்றனர்.

மனிதர்களைச் சாதாரணமாகவும், கீழ்த்தரமாகவும் கொள்வது நடப்பியலுக்கு எதிரானது என்றாலும் ஆசிரியர், அண்ணன், அவரின் பெண்கள் ஆகியோரின் உணர்சிகளைப் பற்றிய எந்த அக்கறையும் இல்லாமல், வரம்பற்ற வார்த்தைகளால் அவர்களின் உணர்வுகளைச் சிதைத்துக் கொடுமைப்படுத்தும் பேச்சியம்மாளின் இயல்புகளைத் தோலுரித்துக் காட்டுவது கதையின் போக்கிற்கு அவசியமாகின்றது.

தந்தை - மகள் பாசம், அக்கா - தங்கை பாசம், அத்தை - மருமகள் உறவு, கணவன் - மனைவி உறவு, அன்புள்ளங் கொண்ட தலைவன் - தலைவி காதல், வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக்கொடுக்கும் வழக்கம், உண்மையான திறமையை மதித்துப் போற்றுதல், நாடக ஒப்பனை பற்றிய செய்திகள், பாத்தியதை, உரிமை, உறவுமுறை என்ற பெயரில் நிகழும் அநியாயங்கள், திருமண உறவுக்கு மணப்பொருத்தத்தின் தேவை - ஆகிய கருத்துக்களின் வழி சமுதாயத்தின் அன்றாட நிகழ்வுகளைப் படம்பிடித்துக் காட்டி இயற்கைத்தன்மை விளக்கப்பெறுகின்றது. நடப்பியல், வாழ்க்கை நிகழ்சிகளை வெறும் குவியலாக அமைத்தல் கூடாது; அவற்றை

அழகான ஏழுத்தோவியமாகப் படைக்க வேண்டும் என்பதற்கேற்ப ஆண்டாள் கதைச் சூழலுக்கேற்பக் கலை நயம்பட எழுதியுள்ளார்.

"தேவி திரௌபதி சொல்வாள்..."-6. என்ற பாரதியின் பாஞ்சாலி சபதப் பாடலடிகள், "அடுப்பினிலே விறகாக எரிஞ்சோம்" -7. என்ற அறிவொளி இயக்க விழிப்புணர்வுப்பாடல்கள், "பெண்ணுக்குப் புதிதாய் விதிசெய்வோம்"-8 என்ற "யுத்தகாண்டம்" நாடகப் பாடலடிகள் ஆகியவற்றைச் சான்றாகச் சுட்டலாம்.

## முடிவுரை

ஆண்டாள் பிரியதர்ஷனியின் "கதாநாயகி" புதினத்தில்

* பெண்களின் இன்றைய வாழ்க்கை நிலை

* பெண்களின் தனி உணர்வுகளை, எண்ணங்களை, அறிவார்ந்த சிந்தனைகளை வெளியிடுவதில் உள்ள இடர்பாடுகள்

* உறவுகளால் ஏற்படும் சிக்கல்கள்

* பெண்ணே பெண்ணின் உணர்வுகளை மதித்தல்

* மண வாழ்வில் பணத்தின் தாக்கம்

* பெண்களைத் தவறாக நெறிப்படுத்தும் ஆண்களின் போக்கு

* ஆண்களைத் தவறாக நெறிப்படுத்தும் பெண்களின் போக்கு

* பெண் ஆணையும் ஆண் பெண்ணையும் உணர்ந்து, மதித்துப் போற்றல்

* எல்லாவற்றையும் வேடிக்கை பார்த்துக்கொண்டு சலனமற்று வாழும் மக்கள் கூட்டம்

* தவறுகளையும் அநீதிகளையும் தட்டிக்கேட்டு நல்ல மாற்றங்களைக் கொணர முனையும் செயலாக்கம்

* கலையுலக வாழ்வியல் போக்கு

* அழகியல் வெளிப்பாடு

போன்ற நடப்பியல் கொள்கைகளைக் காண முடிகின்றது. தற்காலப் பெண் எழுத்தாளர்களுள் குறித்த இடம் பெற்றுள்ள ஆண்டாள் பிரியதர்ஷினி, தாம் வாழும் காலத்தின் சமுதாயத்தை அடையாளங் காட்ட எழுதிய புதினமான கதாநாயகியில் நடப்பியல் கொள்கைகள் வருங்காலச் சமுதாயம் மேலும் வளமாக வேண்டும் என்ற நோக்கில் பயின்றுவந்துள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. இரா. தண்டாயுதம், சமூக நாவல்கள், ப. 23.
2. அனுராதா ரமணன், அணிந்துரை, கதாநாயகி, ப. 111
3. ஒர்த்ய் ல்ஹன்ப் ல்ழண்ற்ஶ்ரீட்ப்ஹழ்க், ஶ்ரீழ்ண்ற்ண்ள்ம் ண்ய் அம்ங்ழ்ண்ஶ்ரீஹ, கஹ்ஹப் ஆர்ர்ந் ஈங்ல்ர்; கன்ற்ட்ண்ஹய்ஹ, ட. 164.
4. ஆண்டாள் பிரியதர்ஷினி, கதாநாயகி, ப. 3.
5. ஆண்டாள் பிரியதர்ஷினி, கதாநாயகி, ப. 26.
6. மேலது, ப. 27.
7. மேலது, ப. 33.
8. மேலது, ப. 66.

# ஆகாயத்துக்கு அடுத்த வீட்டில் பார்வை

*மு.சிதம்பரம்,* தமிழ் விரிவுரையாளர்,
நாடார் சரசுவதி கலைக் கல்லூரி, தேனி - 625 531.

"ஆகாயத்துக்கு அடுத்த வீடு" எனும் தலைப்பில் மேத்தா அவர்கள் கவிதை நூலை புனைந்து, ஆகஸ்டு 2004 அன்று வெளியிட்டிருக்கிறார்கள். இக்கவிதை நூலில் அன்றைய வருடத்தில் நடந்த நிகழ்வினை சமுதாயப் பிரதிபலிப்போடு பிரதிபலித்திருக்கிறார். புனைவியல் கோட்பாட்டிற்குப் பலரும் பல விளக்கம் தருகின்றனர். நடப்பியலை அலங்காரமில்லாமல் அப்படியே எடுத்துரைப்பது என்பதனை அக்கோட்பாட்டிற்கு விளக்கம் தருகின்றனர். இக்கோட்பாடு இக்கவிதை நூலிற்குப் பொருத்தமாகும். கவிதையின் நயத்தையும் சமுதாயத்தையும் பிரதிபலிப்பையும் எடுத்தாய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## இன்றைய அரசியல்

இன்றைய சட்டமன்றத்திலும், நாடாளுமன்றத்திலும் தேர்ந்தெடுத்த அனுப்புகின்ற பொது மக்களின் பிரதிநிதிகள் மக்களின் பிரச்சனைகளையும், நல்ல திட்டங்களையும் நிறைவேற்றவிடாமல் எங்ஙனம் செய்கின்றனர் என்பதையும், கூட்டத் தொடரின் பேச்சுக்கள் எந்த விதக் கருத்துக்களும் இல்லாமல் வீணான பேச்சுக்களாகின்றன என்பதையும் உண்மையானவர்கள் கொடுக்கின்ற குரலுக்கு எங்ஙனம் எதிர்ப்புக் குரல் ஏற்படுத்திச் செயல்படுகின்றனர் என்பதை

"உன்/தர்பார் மண்டபங்களில்/நியாயங்கள்
தற்கொலை/செய்து கொள்ளும்/முன்பே
கொலை/செய்யப்படுகின்றன.
சட்டங்கள் விசிலடிக்க/ஜனநாயகம்
கை தட்டுகிறது"./"உன் மைய மண்டலத்தில்
குயில்களின் குரலை/அவைக் குறிப்பிலிருந்து
நீக்க வேண்டுமென்று/காக்கைகள் கலகம் செய்கின்றன".

என்று கவிநயம் பட விளக்கமாக எடுத்துரைக்கின்றார். குயில், காக்கை ஆகியவற்றின் பண்புகளால் மக்கள் ஆட்சியாளர்களின் பண்புநலனை எடுத்துரைக்கின்றார். ஏ இந்தியாவே மக்கள் தொகையில் நூறினை எட்டிய நீ வறுமைக் கோட்டினைத் தாண்டாமல் வழுக்கி வழுக்கி விழுகிறாயே என்பதனை,

"மக்கள் தொகையில்/நூறு கோடியைத் /தாண்டி விட்டாய்.....
ஒரே ஒரு/வறுமைக் கோட்டைத்/தாண்ட முடியாமல்
வழுக்கி விழுகிறாய்...../

என்றுரைக்கின்றார். இன்றைய மனிதர்கள் பாமர எண்ணத்துடன் மதங்களிலும், சாதிகளிலும் சிக்குண்டு சவக்கிடங்குகளிலும் கிடக்கிறார்கள் என்பதனை,

"மதங்களுக்கும்/சாதிகளுக்கும்/மகுடம் சூட்டிவிட்டு
மனிதர்கள் கிடக்கிறார்கள்/மருத்துவ மனைகளின்/சவக் கிடங்குகளில்

என்று எடுத்துப் பகர்கிறார்.

## நம்மின் அறியாமை

நமக்கு அறிவுப் பெட்டகத்தைத் தருவது புத்தகங்களும், பத்திரிக்கைகளும்மாகும், அப்புத்தகத்தை நாம் கடைக்குப் போடுகின்ற போது தான் நம்மின் அறியாமை அறிவு புலப்படுகிறது என்பதனை,

"எடைக்குப் போடும் போது தான்/தெரிகிறது...../பத்திரிக்கைகளில்
படிக்காமல் விட்ட/பயனுள்ள பக்கங்கள்"

என்று எடுத்துரைக்கிறார். வாழ்க்கைத் தத்துவம் நாம் உயிரோடு இருக்கின்ற போது எந்த ஒரு மனிதனும் நம்மைப்

பற்றி பேசுவதில்லை. நாம் இறந்த பிறகு நம்மைப் பற்றிய பேச்சுக்களான நிறை, குறைகளை பேசி தீர்ப்பார்கள் மக்கள் என்பதனை,

"பெட்டி படுக்கைகளைச்/சுமந்தபடி/ஒரு
பிரயாணம்/எப்போது சுமைகளை/இறக்கி வைக்கியறோமோ
அப்போது /சுற்றியிருப்பவர்கள்/நம்மைச்
சுமக்கத் /தொடங்குகிறார்கள்...."

என்று கவி நயம்பட விளக்குகிறார். நியாங்களையும், தர்மங்களையும் எடுத்துச் சொல்ல தைரியம் இல்லாத மனிதர்களுக்கு தலையாட்டித் தலையாட்டியே மாடுகளைப் போல கொம்பு வளர்ந்து விடுகிறது என்பதை நகைச்சுவையாக,

"கொம்பு/முளைத்து விடுகிறது...../மாடுகளைப்போல்
தலையாட்டும்/மனிதர்களுக்கும்"

என்று எடுத்துரைக்கின்றார்

## சமுதாயச் சூழல்

இன்றைய சமுதாயத்தில் நேருக்கு நேராக முன்னால் முகம் சிரிக்கப் பேசி நயவஞ்சமாக முதுகில் குத்தும் மக்கள் அதிகமாக இருக்கிறார்கள் என்பதை புறநானூற்று மன்னன் வரலாறோடு ஒப்பிட்டுக் காட்டுகிறார். இதனை,

"கோபித்துக் கொள்ளாதே/கோப் பெருஞ்சோழனே....
புறப்புண் நாணி/வடக்கிருப்ப தென்றால்/ஒவ்வொரு நாளும்
எத்தனை முறை/வடக்கிருப்பது?/மொத்தமாய் எல்லோரும்
முதுகில் குத்தும்/ஊரில்....."

என்கிறார். சமுதாயத்தில் சமயங்களால் சண்டையிட்ட மனிதம் இறந்து கொண்டிருக்கிறது. இதனை மதத்தின் இறைவர்களே இங்ஙனம் முழக்கமிடுகிறார்கள் என்பதனை,

"உங்களில் யாராவது/ஒரு மனிதன் இருந்தால்/வரச் செல்லுங்கள்
ஒன்றாக நாங்கள்உயிர்த்தெழுகிறோம்"

என்று உரைக்கின்றார். நெய்வேலியில் காவிரி நீர் வேண்டி நடிகர்கள் நடத்திய கூட்டத்தினை கூறிகின்ற போது,

"தண்ணீர் வேண்டி/பிரமாண்டமான/பேரணி....
நடிகர்களைக் காணக்/காத்துக்கிடந்த
கூட்டம்/கவலைப்பட்டது...../மழை வந்து/கெடுத்து விடுமோ

என்று" அங்கத நகைச்சுவைபட எடுத்துரைக்கிறார்.

## மனிதன் இயற்கையிடம் பாடம்

மனிதன் இயற்கையிடம் சில புனிதமான விஷயங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதனை,

"பூக்கள்/சொல்லிக் கொடுக்கின்றன..../எப்படி நாம்
புன்னகைப்பது என்று/கடலைலைகள்/சொல்லித் தருகின்றன ....
எப்படி நாம்/கைகுலுக்குவது என்று/நாம் தாம்/இதயத்தில் வெடி வைத்து
உதயத்தை உலுக்குகிறோம்

என்று எடுத்தியம்புகிறார்.

## முடிவுகள்

மேத்தாவின் இக்கவிதைத் தொகுப்பு புனைவியல் கோட்பாட்டோடு ஒத்திருக்கிறது. சமுதாயத்தையும், நடப்பியலையும், மனிதர்களின் குணநலன்களையும் மிக நகைச்சுவையாக அங்கத நடையில் எடுத்தியம்பி வருங்கால சமுதாயத்திற்கு இன்றைய நடப்பியலினை பதிவாக அமைத்திருக்கிறார்.

# ஜோதிர்லதா கிரிஜா சிறுகதைகளில் நடப்பியல் கூறுகள்

*நீ. சிந்தன்* ஆய்வியல் நிறைஞர் - தமிழியல் துறை
பாரதியார் பல்கலைக் கழகம் கோயம்புத்தூர் - 641 046.

## சிறுகதை - அறிமுகம்

கதை மனித சமுதாயத்திற்கு மிகப் பழமையான சொத்தாகும். அக்கதையில் சிறுகதை என்றும் இலக்கிய வகை முக்கியத்துவம் வாய்ந்தது. வ.வே.சு. ஐயரே முதல் முதலாகச் சிறுகதைக்குரிய வடிவத்தைப் போற்றி, சிறந்த கலைப் படைப்புகளைத் தமிழுக்குத் தந்தவர். பிறகு தான் சிறுகதை என்ற இலக்கியப்போக்கு வளரத் தொடங்கிற்று. வ.வே.சு. ஐயருக்குப் பின் வந்த சொ.விருத்தாச்சலம் என்ற இயற்பெயர் கொண்ட புதுமைப்பித்தனின் புதுமைப்போக்கு, புதுவகையான நடைபோன்றவை சிறுகதை என்ற இலக்கிய வகைக்கு உரமூட்டி நன்கு வளரச் செய்தன.

## நடப்பியல்

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறி வழக்கம் என்ற தொல்காப்பியச் சூத்திரம் கூறும் உலகியல் வழக்கு என்பது நடப்பியலைக் குறிப்பதாகக் கூறலாம்.

இயற்கையை எதிர்த்து ஆதிமனிதன் என்றைக்குப் போராடத் தொடங்கினானோ அன்றைக்கே நடப்பியல் முயற்சி தொடங்கிவிட்டது என்பார் தோதாத்ரி மனிதனுக்கும் இயற்கைக்கும் நடந்த போராட்ட இயக்கத்தினால் மனிதன் சிந்திக்கத் தொடங்கினான். போராட்டமும் சிந்தனையும் சேர்ந்ததன் விளைவாகப் பிரதிபலித்ததுதான் உண்மை அல்லது நடப்பு ஆகும். உண்மை பற்றிய அறிவு நிலையிலிருந்து உருவாகும் இலக்கிய இயக்கம் நடப்பியல் ஆகும்.

நடப்பியல் இலக்கியத்தின் ஒரு கோட்பாடாகப் பயன்படுகிறது. நடப்பியல், யதார்த்தவியல், யதார்த்தவாதம், உண்மைவாதம், மெய்ம்மை இயல், எனப்பல சொற்களால் குறிக்கப்படுகிறது. யதார்த்தவாதம் என்ற சொல்லின் பிரதியாக நடப்பியல் இன்று பெரிதும் கையாளப்படுகிறது. நடப்பியல் என்பது ரியலிசம் என்று ஆங்கிலத்தில் குறிக்கப்படும். நடப்பியல் என்பது அன்றாட வாழ்வில் எவ்விதப் புனைவுமின்றி உள்ளது உள்ளபடி இலக்கியத்தில் கூறும் முறை ஆகும்

## ஜோதிர்லதா கிரிஜா - சிறுகதைகள் - அறிமுகம்

பள்ளிப்பருவத்தில் ரா.கி.ரங்கராஜன் அவர்களால் குழந்தை எழுத்தாளராக அறிமுகப்படுத்தப்பட்டு, தமிழ்வாணன், அழ.வள்ளியப்பா, ஆர்.வி. ஆகியவர்களால் ஆதரிக்கப்பட்டதாலேயே எழுத்துலகில் ஓரளவுக்கு தடம் பதித்தாக ஆசிரியரே கூறுகிறார். இதுவரையில் அறுநூறு சிறுகதைகள், 19 புதினங்கள், 60 மாத நாவல்கள், 3 நெடிய நாடகங்கள், மகாகவி பாரதியாரின் வாழ்க்கை வரலாறு ஆகியவற்றை எழுதி அதிகப் பரிசுகளையும் பெற்றுள்ள இவர், ஆங்கிலத்திலும் 1975 -இல் ஃபெமினா மூலம் அறிமுகமாகி 25 சிறுகதைகள், ஒரு மினி தொடர்கதை ஆகியன எழுதியுள்ளார்.

இவர் எழுதியுள்ள அறுநூறு சிறுகதைகளில் இருபத்தேழு சிறுகதைகள் இக்கட்டுரைக்கு ஆய்வுப்பொருளாக எடுத்துக்கொள்ளப்படுகின்றன. அவையாவன. 1. கோபுரக் கலசம், 2. ஒரு சின்ன வீடு பெரிய வீடு ஆகிறது, 3. அம்மாவின் அந்தரங்கம், 4. அடிபட்ட புலிகள், 5. கடிதம் கிழிந்தது, 6. உடன் பிறவாத போதிலும், 7. வெட்கமறியாத ஆசைகள், 8. தலைமுறை விரிசல், 9. விடிந்த பிறகு தெரியும், 10. தென்னாப்பிரிக்கா மாப்பிள்ளை, 11. கடவுளே உனக்கு ரொம்ப தாங்க்ஸ் !, 12. ஞானம் பிறக்கிறது, 13. கைப்பையில் ஒரு கடிதம், 14. மகள், 15. முதுகு, 16. அது வேறு நியாயம், 17. என்னை மன்னித்து விடு, 18. தீர்ப்பு, 19. உண்மை, 20. மாமோய், பொண்ணைக் கொடு(க்காதே), 21. மாமியார் வேண்டாம், 22. அம்மா, 23. சிறுவாடு, 24. தாத்தாவுக்கு ஒரு வேலை. 25. பிணக்கு, 26. ஒரே ஒரு கேள்வி, 27. விபரீத சோதனை ஆகியனவாகும்.

## ஜோதிர்லதா கிரிஜா சிறுகதைகளில் நடப்பியல் கூறுகள்

ஜோதிர்லதா கிரிஜா சிறுகதைகளில் நடப்பியல் கூறுகள் மிகுதியாகத் தென்படுகின்றன. நடப்பியலோடு

தொடர்புப்படுத்தியே அவரின் களம் அமைந்துள்ளது. நடப்பியல் மனிதனுக்கு அதிக முதன்மை தருகிறது. நடப்பியலில் மனிதனுக்கும், மனிதனுக்கும் உள்ள உறவுகள், மனிதனுக்கும் சூழ்நிலைக்கும் உள்ள உறவுகள் முதலிடம் பெறுகின்றன. மனித உறவுகள் பற்றிய ஆய்வு நடப்பியலில் அதிக இடம் பெறுகிறது. முக்கியமாக மேற்சொன்ன இருபத்தேழு சிறுகதைகளிலும் மனித உறவுகளைத் தெள்ளத் தெளிவாக எடுத்துக்காட்டி நடப்பியலோடு தொடர்புபடுத்தி விளக்கியுள்ளார் ஆசிரியர். ஒவ்வொரு சிறுகதையும் நடைமுறையோடும், யதார்த்த வாழ்க்கை பிரதிபலிப்போடும் படைக்கப்பட்டுள்ளன.

உதாரணமாக - கோபுரக்கலசம் என்கின்ற சிறுகதையில் ராஜசிம்மன் என்கின்ற எழுத்தாளர் அவர் எழுதிய பணம்தான்பெரிது கதையில் வரதட்சணையைப் பற்றிய சோகத்தை விளக்கியுள்ளது. வாசகியானவளுக்கு அந்த எழுத்தாளரை கோபுரக் கலசத்தில் தூக்கி உட்கார வைத்தது. பிறகு, அந்த ராஜசிம்மனே தன்னுடைய கல்யாணத்திற்கு வரதட்சணை வாங்குகிறார் என்பதை அறிந்த அந்த வாசகி, அவனை வெறுக்கிறாள். இது யதார்த்தமான ஒன்றாகும். எழுத்தாளர்களும், படைப்பாளிகளும், அரசியல்வாதிகளும் படைப்பதும். எழுதுவதும், பேசுவதும், சமுதாயத்திற்கும், பார்ப்போர்க்கும், கேட்பார்க்கும் மட்டுமே! தங்களுக்கு இல்லை என்ற எண்ணத்தில்தான் இருக்கின்றனர். இது நடப்பியலைத் தொடர்புப் படுத்திதான் அமைந்துள்ளது. ஏனெனில் பெரும்பாலோர் இப்படித்தான் இருக்கின்றனர். நடைமுறையில் இத்தகையப் பிரச்சினைகளை நாம் அன்றாடம் சந்திக்க நேரிடுகிறது என்பதை மறுக்க இயலாது.

ஒரு சின்ன வீடு பெரிய வீடு ஆகிறது என்கின்ற சிறுகதையில் மருமகள் வேலைக்குப் போகின்றவளாக வந்துவிட்டால், அனைத்து வேலைகளும் தன் தலையில் விழும் என்று எண்ணும் மாமியாராக மங்களத்தம்மாள் பணிக்குப் போகாமலே வீட்டு வேலைகளுக்கு மட்டமடிக்கும் மருமகளாக கவிதா பணி ஓய்வு பெற்ற மாமனாராக சுந்தரேசன், மகனாக மணி. சின்ன வீட்டை பெரிய வீடாக்கலாம் என்றெண்ணும் மகன், சேமிப்புப் பணம் இருக்கும்பொழுதே தன்னையும், தன் மனைவியையும் மதிக்கமாட்டேன்றாங்களே என்று எண்ணும் தந்தை என்று கதையில் வரும் அனைத்துப் பாத்திரங்களுமே நாம் தினமும் சந்திக்கின்ற பாத்திரப்படைப்புக்கள்தான். இச்சிறுகதையும் யதார்த்தவியல், யதார்த்தவாதம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது. வீட்டு வேலைகளைச் செய்வதற்கு மாமியாரும் மருமகளும் போட்டி போட்டுக் கொள்வது வீடு தோறும் நடைபெறும் ஒரு நிகழ்ச்சியாகும். இதுவும் நடப்பியல் கூறுகளை உள்ளடக்கியுள்ளது.

அம்மாவின் அந்தரங்கம் என்ற சிறுகதையில் மகன் தன்னைப்போல் அல்லாமல் இருப்பது கண்டு மனைவியின் நடத்தையைச் சந்தேகிக்கும் கணவன், தன் தாத்தாவைப் போல் தன் மகன் இருக்கிறான் என்ற உண்மை மனைவிக்குத் தெரிந்தும் கணவனிடம் சொல்லவில்லை. ஏனென்று கேட்போருக்கு மகன் தனக்கு பிறக்கவில்லை என்ற எண்ணம் சாகும்வரை கணவனுக்கு உறுத்திக் கொண்டேயிருக்க வேண்டும் அதுவே தன்னை சந்தேகித்ததற்கு தான் அவனுக்கு தரும் தண்டனை என்று கூறி கதை முடிகிறது.

கடிதம் கிழிந்தது சிறுகதையில் கறுப்பான உருவம் கொண்ட பெண்ணை அனைத்து மாப்பிள்ளைகளும் நிராகரிப்பது கண்டு அவள் வேதனையடைவது, மற்றும் கறுப்பான ஆண்களே அவளை நிராகரிப்பது போன்ற நிகழ்ச்சிகள் பெண்களை இழிவுபடுத்தும் ஆண்களின் மனப்போக்கை தெளிவாக்க, எடுத்திருக்கும் நடப்பியல் முயற்சியாகும்.

நடப்பியல் மனிதனுக்கு அதிக முதன்மை தருகிறது. மேற்சொன்ன சிறுகதைகளில் மனிதனுக்கும், மனிதனுக்கும் உள்ள உறவுகள், மனிதனுக்கும் சூழ்நிலைக்கும் உள்ள உறவுகள் முதலிடம் பெறுகின்றன.

மேலும், உடன்பிறவாத போதிலும் , வெட்கமறியாத ஆசைகள் தலைமுறை விரிசல் , விடிந்த பிறகு தெரியும் , தென்னாப்பிரிக்கா மாப்பிள்ளை போன்ற சிறுகதைகளில் உள்ள நடைமுறைச் சிக்கல்களை நடப்பியலோடு தொடர்ப்புப்படுத்தி பார்த்தல் அவசியம். தன் தோழியின் கணவன் தன்னைப் பாதுகாக்கிறான் என்பதனை உடன் பிறவாத போதிலும் எனற சிறுகதையிலும், வயது கடந்த போதும் ஆண்களுக்கு ஆசை குறைவதில்லை என்பதனை வெட்கமறியாத ஆசைகள் என்ற சிறுகதையிலும், பெண் வேலைக்குச் செல்பவளாக இருப்பின் அவள் கணவனைப் பிரிந்து தன்னியலாக வாழ முடியும் (கணவன் தவறு செய்யும் பட்சத்தில்) என்ற நடப்பியல் கருத்தை தலைமுறை விரிசல் என்ற சிறுகதையிலும், ஊருக்குத்தான் உபதேசம்

தங்களுக்கல்ல என்கின்ற மையக்கருத்தினை தென்னாப்பிரிக்கா மாப்பிள்ளை என்கின்ற சிறுகதையும், என்னதான் பெண்கள் வேலைக்குச் சென்றாலும் தன் உறவினரை (தம்பி, தங்கை, அம்மா, அப்பா போன்றோரை) தன்னுடன் வைத்துக் கொள்ள கணவன் அனுமதிக்காமைப் பற்றிய செய்தியை விடிந்தபிறகுதான் தெரியும் என்னும் சிறுகதையிலும், ஆசிரியர் நடைமுறைக்கு ஏற்றவாறும் குடும்பங்களில் கணவன் மனைவிக்கிடையே நிலவும் பிரச்சினைகளை மையமாக வைத்தும் படைத்திருப்பது நடைமுறைக்கு பொருந்துவதாகவே அமைகிறது. இந்த பிரச்சினைகள், ஒவ்வொரு வீட்டிலும், நாட்டிலும் தினமும் நடந்தேறிக் கொண்டுதான் இருக்கின்றன. இவையனைத்தும் மனிதனுக்கும், மனிதனுக்கும் உள்ள உறவுகளைப் பற்றியே அமைகிறது என்பதும் நினைவு கூறத்தக்கது.

மனிதத் தன்மையில் அனைத்து உண்மைகளும் அன்றாட வாழ்க்கையின் பொது அனுபவங்களின் வாயிலாகவே சிறப்பாக உணர்த்தப் பெறுகின்றன என்பது நடப்பியலாரின் கருத்தாக அமைகிறது. இக்கருத்திற்கு ஏற்றவாறு, கடவே, உனக்கு ரொம்ப தாங்க்ஸ் , ஞானம் பிறக்கிறது, கைப்பையில் ஒரு கடிதம், மகள், முதுகு போன்ற சிறுகதைகளின் அடித்தளம் அமைக்கப்பட்டுள்ளன.

தன் அக்காவின் கணவர் வரதட்சணைக் கேட்டு ஒவ்வொரு முறையும் தன் அக்காவிற்கு கடிதம் போட்டு வைர மோதிரம், ரிஸ்ட் வாட்ச், கோல்ட் செயின் வேண்டும் என்று கேட்கும்போது, தம்பியானவன் தான் திருமணம் முடிக்கும்போது இது மாதிரியெல்லாம் கேட்டு பெண் வீட்டாரை துன்புறுத்தக்கூடாது என்று எண்ணும்பொழுது நடைமுறையோடு ஒத்துப்போகிற கதையாக ஆசிரியர் அமைத்துள்ளதைக் காணலாம். ஞானம் பிறக்கிறது என்கின்ற சிறுகதையில் தன் மகள் வேற்று சாதிக்காரனை காதலித்ததை மறுத்த தாயார், தன் மகன் வேற்று மதப் பெண்ணை மணம் முடிப்பது கண்டு மனம் மாறி மகளின் காதலுக்குச் சம்மதம் தெரிவிக்க ஆனால், அச்சமயம் காதலனுக்கு திருமணம் முடிந்துவிட்டிருக்கிறது. இதுபோன்ற தாய்மார்கள் நிறையபேர் உள்ளனர். இக்காலகட்டத்தில்!

தன் மனைவி கைக்குழந்தையைவிட்டு இறந்துவிட்டால், கணவன்மார்கள் உடனே, மனைவியின் தங்கையை திருமணம் செய்ய ஆசைப்படுவது எழுதப்படாத சட்டமாகின்றது. இதனையே ஆசிரியர் கைப்பையில் ஒரு கடிதம் என்ற சிறுகதையில் எடுத்துரைத்து அவ்வாறு திருமணம் செய்ய முற்படும் அக்காவின் கணவனை தங்கை நிராகரிப்பதாக அமைந்துள்ளது, நாயகியின் பானுமதி பாத்திரம். நடப்பியல் கோட்பாடுகளில் யதார்த்தம், யதார்த்தவியல் போன்ற சட்டதிட்டங்கள் வகுக்கப்பட்டதால் மனைவியின் தங்கையை திருமணம் செய்வது என்பது யதார்த்தமாகிவிட்டது.

ஒரு விதவைக்கு மறுமணம் என்பது பற்றி அப்பெண்ணைப் பெற்றெடுத்த குடும்பத்தாராலேயே ஏற்றுக் கொள்ளப்படவில்லை என்ற சமுதாயச் செய்தியை மகள் என்ற சிறுகதையின்மூலம் விளக்கியுள்ளார் ஆசிரியர். கணவனை இழந்த கைம்பெண்ணை மணமுடிக்க ஆண் மகன்கள் இருப்பினும், இந்த மாதிரிக் காரியமெல்லாம் நம்ம குடும்பத்திலே வழக்கமில்லீங்க தயவு செய்து நீங்க போயிட்டு வாங்க என்று தந்தை பாத்திரம் கூறும்போது இப்படிப்பட்ட முறைகளையெல்லாம் பின்பற்றி மகள்களின் வாழ்க்கையைக் கெடுக்கும் தந்தைமார்களையும் நம் கண்முன் நிறுத்துகிறார் ஆசிரியர்!

தான் கல்யாணத்தற்கு முன்பு எப்படி வேண்டுமானாலும் இருந்திருக்கலாம், தன் மனைவி யாரையேனும் காதலித்தது தெரிய வந்தால் அவளை வீட்டைவிட்டு விரட்டியடிப்பது, கொடுமைப்படுத்துவது போன்ற குணங்களையுடைய கணவன்மார்களின் கதையை முதுகு என்ற சிறுகதையின் மூலம் தெளிவாக்குகிறார். இவையெல்லாம் வாழ்க்கை நடைமுறையில் நிகழ்ந்தவண்ணம் இருக்கின்றன என்பதை நடப்பியல் பற்றிய கருத்துக்கள் தெளிவாக்குகின்றன. ஒவ்வொரு குடும்பத்திலும் இதுபோன்ற ஏதாவது ஒரு நிகழ்ச்சி நடந்துவருகின்றன. இவையெல்லாம் நடப்பியலோடு தொடர்புப்படுத்தி பார்ப்பது ஆராய்ச்சியாளர்களின் பணியாகிறது.

சிறுகதைக்கு நடப்பியல் பெரிதும் பொருத்தமுடையதெனக் கருதப்பெறுகிறது. இதற்கு உதாரணமாகத்தான் ஜோதிர்லதாகிரிஜா சிறுகதைகள் அமைந்துள்ளன. மேலும், மனைவியைப்பற்றி தவறான தகவல்கள் தெரிந்தால் உடனே அவளை விரட்டியடிப்பது காலங் காலமாக நடந்து வரும் முறையாகும். ஆனால் அக்கணவன், மனைவியை விரட்டியடிக்கும் தகுதியைப் பெற்றிருக்கிறானா என்ற நிலையை ஆராய முற்படவில்லை இச்சமுதாயம். இக்கருத்தினை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது அது வேறு நியாயம் என்ற சிறுகதை.

அந்நியாயத்திற்கு தீர்ப்பு கூறாவிட்டால் நீதிபதியை மிரட்டி பணியவைப்பதை பற்றி தீர்ப்பு என்ற சிறுகதையிலும், சொந்தங்களுக்குள்ளாகவே திருமணம் செய்தால் பிறக்கும் குழந்தைகள் ஊனமாகவும், உடல் உறுப்புக்கள் குறையாகவும் பிறப்பது பற்றிய செய்தியை மாமோய், பொண்ணைக் கொடு(க்காதே) ! என்ற சிறுகதையிலும் மாமியாரை கவனிப்பது தன் வேலையன்று என்று மருமகள்கள் உதறிவிடுவதையும், அதே மருமகள் மாமியாராக வரும்போது அவளுக்கும் அதே நிலைமைதான் என்ற உண்மையை மாமியார் வேண்டாம் என்ற சிறுகதையிலும், கணவனுக்குத் தெரியாமல் பணம் சேர்த்து அதில் ஒரு நகை வாங்கி போட்டுவிட்டு, கணவன் கேட்கும்போது இது பக்கத்து வீட்டுப் பொன்னுத்தாயோடது என்று கூறும் தங்கம்மாக்களை அன்றாட வாழ்க்கையில் நாம் காணத் தவறுவதில்லை இதைத்தான் சிறுவாடு என்ற சிறுகதையில் உணர்த்துகிறார் ஆசிரியர்.

பட்டணத்திற்குச் சென்றால் நம்முடைய ஆசாரம், அனுஷ்டானம் கெட்டுவிடும் என்று இருந்துவிட்டு, பிறகு மகனையும், மருமகளையும், பேரனையும், பேத்தியையும் காணும்பொழுது தங்கள் சாதி, சம்பந்தமான முறைகளிலிருந்து இவர்கள் வேறுபட்டு நிற்கிறார்களே என்று எண்ணும் முதியவர்களை தாத்தாவுக்கு ஒரு வேலை என்ற சிறுகதையில் உணர்த்துகிறார். நடப்பியல் நோக்கில் பெரியவர்கள் தங்கள் சாதிமுறைப்படியே இறுதிவரை வாழ விரும்புகின்றனர். தங்களைச் சார்ந்தவர்களையும் அவ்வாறே வாழ வற்புறுத்துகின்றனர் என்கின்ற நடப்பியல் கோட்பாடு இச்சிறுகதையில் தெளிவுறுகிறது.

காதலிக்கும்போது தன் காதலியிடம் நான் மேனேஜராக இருக்கிறேன், பெரிய கம்பெனி, கார் என்று உண்மையை மறைத்துப் பொய்கூறும் காதலனை தெளிய வைக்கிறார் ஆசிரியர். காதலியிடம் இவ்வாறெல்லாம் சொன்னால்தான் காதலிக்க முற்படுகின்றனர் பெண்கள் என்பது இப்பொழுது நிலவியுள்ள தவறான கருத்து, நடைமுறையில் பெண்களைக் கேவலமாக எண்ணியுள்ள ஆண்மகன்களுக்கு சூடு கொடுக்கிறார் ஆசிரியர், பிணக்கு என்ற சிறுகதை மூலமாக!

ஒரு பெண் வீட்டிற்குச் சம்பாதித்துப் போட ஆரம்பித்துவிட்டால் அக்குடும்பத்திலுள்ளவர்கள் அவளுடைய திருமணம் பற்றியே எண்ணாதிருப்பது இக்காலக் கட்டங்களில் நடந்து வரும் ஒரு நிகழ்ச்சியாகும். பெண்ணிற்கு அம்மா இல்லாவிட்டால் அந்தப் பெண் ஒரு பொதிமரம் தான் என்ற கருத்தினை நடப்பியல் முறையோடு ஒரே ஒரு கேள்வி என்ற சிறுகதையிலும், பெண்கள் சிரித்து சிரித்து, கல கலவென என்று எல்லோரிடம் பேசிவிட்டால் அவர்கள் எதற்கும் சம்மதித்து விடுவார்கள் என்ற ஆண்களின் எண்ணத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தது பற்றி விபரீத சோதனை என்ற சிறுகதையிலும் விளக்கியுள்ளார்.

## நிறைவுரை

முன்பு கூறியதைப் போலவே மனித உறவுகள் பற்றிய சமூக ஆய்வு நடப்பியலில் அதிக இடம் பெறுகிறது என்கின்ற உண்மை இச்சிறுகதைகளிலுள்ள நடப்பியல் கூறுகள் நமக்குப் புலப்படுத்தும். ஒவ்வொரு சிறுகதையிலும் ஆங்காங்கே தென்படும் முக்கிய நிகழ்வுகள் அனைத்தும் நடைமுறையிலுள்ள மனித வாழ்வுடன் பொருத்தமுடையதாகவே அமைந்துள்ளது. இருபத்தேழு சிறுகதைகளும் மனித வாழ்க்கையின் ஒரு பகுதியாக, பாடமாக நடைமுறைச் சிக்கலோடும், அதே சமயம் நடப்பியல் கூறுகளோடும் அமைந்துள்ளதைக் கதைதோறும் காணமுடிகிறது. வீட்டிற்குள் நடக்கும் மாமியார் - மருமகள் சண்டை, கணவன் - மனைவி சண்டை, கணவன் மனைவியை சந்தேகிப்பது, பெண்ணை கறுப்பு என்று ஆண்மகன்கள் திருமணம் செய்ய யோசிப்பது, வரதட்சணை வாங்குவது, கணவனுக்குத் தெரியாமல் பொருள் சேர்ப்பது என்று சொல்லச் சொல்லப் பட்டியல் நீண்டு கொண்டே போகும். இவையனைத்தும் நடப்பியலிலும், நடப்பியல் கோட்பாட்டிலும் கூறும் உண்மையான யதார்த்தம், யதார்த்தவியல் போன்றவை தாம். இக்கதைகளிலுள்ள நடப்பியல் கூறுகள் அனைத்தும் ஒவ்வொரு வீட்டிலும், நாட்டிலும் நடந்து வரும் பிரச்சினைகளை ஆசிரியர் தன்னுடைய படைப்புகளின் மூலம் வெளிப்படுத்தியிருப்பது மிகுந்த பாராட்டுக்குரியது.

# மு. மேத்தா கவிதைகளில் நடப்பியல்

க. சிவனேசன், விரிவுரையாளர்,
தமிழ் அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி சிவகாசி - 626 124.

## முன்னுரை :

புதுக்கவிதை உலகில் தனக்கென சிறப்பானதோர் இடத்தைப் பெற்றுள்ளவர் கவிஞர் மு. மேத்தா, அவரது கவிதைகளில் காணப்படும் நடப்பியல் போக்கினை ஆராய்வதாக இக்கட்டுரை அமைந்துள்ளது.

## மு. மேத்தா - ஓர் அறிமுகம் :

மதுரைச்சீமையில் தேனிக்கு அருகில் உள்ள பெரியகுளம் என்னும் ஊரில் முகமதுவாலா என்பவரின் மகனாகப் பிறந்தவர் மு. மேத்தா. மதுரை தியாகராசர் கல்லூரியில் பயின்ற இவர், பின்னர் சென்னை மாநிலக் கல்லூரியல் பணியாற்றி, தற்போது ஓய்வு பெற்றுள்ளார். கண்ணீர்ப்பூக்கள், ஊர்வலம் உள்ளிட்ட கவிதை நூல்களையும் சோழநிலா, மகுடநிலா என்னும் புதினங்களையும் ஏராளமான திரைப்படப் பாடல்களையும் எழுதியுள்ளார்.

## நடப்பியல : (REALISM)

இல்க்கிய இசங்களில் குறிப்பிடத்தக்க ஒன்று நடப்பியல். இது ஆங்கிலத்தில் "ரியலிசம்" (REALISM) என்ற பெயரிலும், வடமொழியில் "எதார்த்தவாதம்" என்ற பெயரிலும் குறிப்பிடப்படுகிறது. "வாழ்க்கையை உள்ளது உள்ளவாறு விளக்குவதில் காரண காரியத் தொடர்புடையது. எதையும் விஞ்ஞானக் கண்ணோட்டத்தில், பொருள் முதல்வாத அடிப்படையில் காட்டுவது. கலைஞனின் தன்னுனர்ச்சிப் புலப்பாடாக இல்லாமல் எதார்த்தமான சான்றாதாரங்களால் நிருபணமாகக்கூடிய மறுக்க முடியாத உண்மைகளின் வெளிப்பாடாக அமைவது"1என்ற நடப்பியலுக்கு விளக்கம் அளிக்கிறார் ந. பிச்சமுத்து.

மேலைநாட்டார் எதார்த்தவாதம் என்று கூறுவதை மார்க்சியத் திறனாய்வாளர்கள் விமர்சன எதார்த்தவாதம் (CRITICAL REALISM ) என்பர். இதிலிருந்து உருவானதே சோசலிஸ்ட் எதார்த்தவாதம் என்பதாகும். இவ்வகை எதார்த்தவாதம் எனப்படும் நடப்பியல் கொள்கை, இயற்பண்பியல் வாதத்திலிருந்து (NATURALISM) முற்றிலும் மாறுபட்ட ஒன்றாகும். தொடக்கத்தில் எதார்த்தவாதம் முதலாளித்துவ சமுதாயத்தின் வெறுக்கத்தக்க இழிநிலைகளை வெளிப்படுத்துவதையும், அதன் முரண்பாடுகளைக் களைவதையும் நோக்கமாகக் கொண்டிருந்தது எனலாம்.

## மு. மேத்தா கவிதைகளில் நடப்பியல்வாதம் :

நாட்டின் வேலையில்லாப் பட்டதாரிகள் நிலையினைப் பற்றிக் கூறுகையில்,

" காகிதத்தில் செய்த
பட்டமாவது
பறக்கிறது -
எங்கள் மாணவ மணிகள்
படித்து வாங்கிய
பட்டமோ
....
வேலை தேடி
ஒவ்வொரு படியாய்
ஏறிஏறி
இறக்குகிறது"2

என்கிறார் கவிஞர். மு. மேத்தா. இக்கவிதையில், பட்டம் பெற்றும் முன்னேற்றம் இல்லை வேலை தேடி அலையும் அவலமே உள்ளது என்பது எதார்த்தமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இன்றைய கல்வி நிலையில் பாடச்சுமை

மிகுதி என்பதை,

"கல்வி இங்கே
இதயத்தில் சுமக்கும்
இனிமையாய் இல்லாமல்
முதுகில் சுமக்கும்
மூட்டையாகி விட்டது"3
என்கிறார் கவிஞர்

பிஞ்சுக் குழந்தைகள் கூடப் பாடச்சுமையினை மூட்டை போலத் தூக்கிச் செல்லும் இழிநிலை இந்நாட்டில் உள்ளதையே இக்கவிதை மதிப்பிடுகிறது.

காவிரி நீர்ப் பிரச்சினை :

அந்நியர்கள் நம்மை ஆண்ட போது தியாகசீலர்களால் ஒன்றுபட்ட இந்நாடு, தற்போது காவிரிப் பிரச்சினை போன்ற பிரிவினை வாதங்களால் பிளவு படுமோ? என்றும் என்னும் தோன்ற,

"பகத்சிங்கும்
வாஞ்சி நாதனும்
ரத்தத்தைத் தொட்டு
எழுதிய இந்தியாவை
இவர்கள்
தண்ணீரைத் தொட்டு
அழிந்து விடுவார்களோ"4

என வினவுகிறார் மு.மேத்தா. இக்கவிதையில் இவர்கள் என்பது இன்றைய அரசியல்வாதிகளை சுட்டுகின்றது.

சாலைப் பணியில் ஊழல் :

கவிஞரின் மற்றொரு கவிதையான,
"சாலைகள் இப்போது
குண்டும் குழியுமாய்...
ஒப்பனை கலைக்கப்பட்ட
நடிகைகள் மாதிரி
காண்ட்ராக்டர்களின்
கதை சொல்கின்றன"5

என்பதில், சாலை போடுவதில் ஒப்பந்தக்காரர்கள் புரியும் ஊழலும், ஒப்பனை கலைந்தால் பொலிவிழக்கும் நடிகைகளின் முகத்தோற்றமும் கவிஞரால் அங்கதம் கலந்து நடப்பியலாகக் காட்சி தருகின்றன.

வேலைவாய்ப்பு பதிவகங்களில் பதிவு செய்து வேலைக்காகக் காத்திருப்போருக்கு எளிதில் வேலைவாய்ப்பு கிட்டுவதில்லை நேர்முகத் தேர்வுக்கான அழைப்பும் வருவதில்லை என்னும் உண்மையினைக் கவிஞர் நடப்பியல் கண்ணோட்டத்தில்,

"எம்பிளாய்மெண்டாம் புதைகுழியில்
இண்டர்வியூ கார்டை எழுப்புதற்கு"6

எனக் குறிப்பிடுகிறார். பதிவு அட்டை சென்ற இடம் புதைகுழிக்கு நிகரானது என்று கவிஞர் மதிப்பிடுகிறார்.

சமூக ஒழுக்கக்கேடு :

முறைகேடான முறையில் குழந்தை பெற்றுக் கொள்ளும் சில பெண்கள், தாய்மை உணர்வு சிறிதும் இன்றி பெற்ற குழந்தைகளைத் தொட்டில் குழந்தைத் திட்டத்தின் கீழ் அரசுக் காப்பகங்களில் இட்டுச் செல்கின்றனர். பெண் சிசுக் கொலையினைத் தடுக்கும் நோக்கில் திட்டம் போடப்பட்டாலும் இதுவும்

ஒருவகையில் சமூக ஒழுக்கக் கேட்டினை வெளிப்படையாகத் தெரிவிக்கும் நிகழ்வுதான். இதனை

"அரசாங்கத் தொட்டிலில்
குழந்தை கிடப்பது
திட்டத்திற்குக் கிடைத்த
வெற்றியாய் இருக்கலாம்...
தேசத்திற்குக் கிடைத்த
வெற்றியாகுமா?"7

என வின்வுகிறார் மு.மேத்தா.

**வரதட்சணைக் கொடுமை :**

மணமாகா இளம்பெண்களைப் பார்த்து இரசிக்கும் இளைஞர்களில் பலர், திருமணத்தின் போது மட்டும் வரதட்சணை என்னும் நிபந்தனையினை விதிக்கும் வழக்கம் நடைமுறையில் இன்னும் ஒழிந்தபாடில்லை. இதனை,

"தெருவிலே அந்த
தேவதை நடந்தால்...
லட்சம் விழிகளில்
அவளுக்கு
லட்சார்ச்சனை!
ஆனால் -
அவள்
வாழ வேண்டுமானால்
தரவேண்டுமாம்
வரதட்சணை"8

என்னும் கவிதையின் நடப்பியலாகக் கவிஞர் புலப்படுத்துகிறார்.

**முடிவுரை :**

இவ்வாறு மு.மேத்தா தமது கவிதைகளில் கல்விச் சுமை, வேலைவாய்ப்பினை உருவாக்காத பட்டங்கள், தீராத காவிரி நதி நீர்ச் சிக்கல், சாலை போடுவதிலும் ஊழல், வேலைவாய்ப்பகங்களின் செயல்பாடின்மை, சமூக ஒழுக்கக்கேடு, வரதட்சணை போன்ற நாட்டின் உண்மை நிகழ்வுகளைத் தமது கவிதைகளில் எதார்த்த உணர்வுடன் பதிவு செய்துள்ளார். இத்தைய சமூகச் சீர்கேடுகளைக் களைவதில் நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் அக்கறை செலுத்திட வேண்டும். இல்லாவிடில் இத்தகைய குற்றம், குறைகள் நிரந்தரமாகவே இருந்துவிடும் அபாயம் உண்டு. இவையே மேத்தா கவிதைகளில் வெளிப்படும் நடப்பியல் கருத்துக்களாகும்.

**அடிக்குறிப்புகள் :**

1. ந. பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப. 258
2. மு. மேத்தா, ஒருவானம் இருசிறகு, ப.24
3. மேலது, ப. 23
4. மு. மேத்தா, கனவுக் குதிரைகள், ப.21
5. மு. மேத்தா, என்னுடைய போதிமரங்கள், ப.13
6. மு. மேத்தா, காத்திருந்த காற்று, ப. 28
7. மு. மேத்தா, கனவுக் குதிரைகள், ப. 12
8. மு. மேத்தா, ஒருவானம், இருசிறகு, ப.12

# மு.மேத்தாவின் கவிதைகளில் நடப்பியல் சித்தரிப்புகள்

*எம். துளசிமணி,* எம்.ஏ., எம்.ஃபில், விரிவுரையாளர், தமிழ்த்துறை,
ஸ்ரீவாசவி கல்லூரி, ஈரோடு.

## முன்னுரை

இலக்கியம் மனிதவாழ்வைப் பிரதிபலிக்கும் கருவி. அதில் உள்ள பிரச்சனைகளை இனம் காணும் வலிமை வாய்ந்தது கவிதை. அது கவிஞர்களின் உள்ளக் கருத்தை எடுத்துக் கூறும் கவிஞனுக்கும் கவிஞன் நோக்கும் போக்கும் வேறுபடினும் சமூக நடப்பியல் சித்தரிப்பே கவிதை பாடுபொருளாக பெரும்பாலும் இடம்பெறும். இன்றுள்ள சமூக சமகாலப்பிரச்சனைகளாகிய கல்வி, அரசியல், வேலை வரதட்சணை போன்றவைகள் கவிஞர்களின் கவிதைகளில் நடப்பியல் சிந்தனைகளாக இடம்பெறுகின்றன.

## நடப்பியல்

மேலை நாடுகளில் செல்வாக்குப் பெற்றிருந்த புனைவு இலக்கியங்கள் மக்களிடம் வெற்றி போர் மீக்குயர்ந்த கற்பனை, திடீர் திருப்பங்கள், எதிர்பாராத முடிவுகள், வரலாற்றுத் தொடர்பான நிகழ்வுகள் அமைந்த தன்மை போன்றவை புனைவியல் இலக்கியங்களின் முக்கிய அம்சங்களாகவும் இடம் பெற்றன. இவற்றிலிருந்து முற்றிலும் வேறுபட்டது நடப்பியல் அன்றாட வாழ்க்கை அனுபவங்களை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளவும், உண்மையை உணர்த்தவும் நடப்பியல் சிந்தனை பயன்படுகிறது.

மனித நேயம் கொண்டு சமுதாயத்தைப் புரட்டிப் பார்க்கும் கவிஞர்கள் ஏராளம். தனிமனித ஆதிக்கம் சாதி மதத்தாக்கம், பொருளாதாரச் சிக்கல் போன்றவற்றால் மங்கி வரும் மனிநேயத்தைச் சாடும் கவிஞர்கள் மத்தியல் மு.மேத்தாவும் ஒருவர். அவரது தொலைதூரப்பார்வையில் அமைந்த சில நடப்பியல் கூறுகளைக் கண்டுணர்வோம்.

## 1. தேசப்பற்று

இன்றைய இளைஞர்கள் மத்தியில் வேரோடியிருக்கும் தேசப்பற்றினை நாடிபிடித்துப் பார்க்கும் கவிதை இது. அரசியல் அவலம், ஆதிக்க சிந்தனை; சுயநலப்போக்கு இவையனைத்தும் தேசப்பற்றையோ, முன்னின்ற மகாத்மாவையோ நினைவு கூறவில்லை. விடுதலைபெற்ற தாய்த்திருநாடு இப்போது இவ்வாறு காட்சியளிக்கிறது என ஆதிக்க வெறியர்களின்காட்டு மிராண்டித்தனத்தை கூறும் கவிதை இது.

"அமுத சுரபியைத் தான்/நீ தந்து சென்றாய்
இப்போது/எங்கள் கைகளில் இருப்பதோ/பிச்சைப் பாத்திரம்"

## 2. விழிப்புணர்வு அற்ற நிலை

நடப்பியல் சிந்தனைகளில் ஒன்று நிகழ்கால நிலையைக் காட்டுவது. அமுத சுரபியைப் பிச்சைபாத்திரமாக மாற்றிய மந்திரவாதிகளை நாங்கள் என்ன செய்தோம். நினைத்துப் பார்த்தால் - அறிவு மங்கிய நிலையே தென்படுகிறது. அவ்வாறெனில், தேசப்பிதாவைக் குறிப்பிடுகையில் இவ்வாறு சாடுகிறார்.

"ஆடுகளை/உனக்காக வளர்த்தோம்
நாளடைவில் நாங்களே/மாறிப் போனோம் மந்தை ஆடுகளாய்"

## 3. கலாச்சாரச் சீரழிவு

மேனாட்டு நாகரிகத் தாக்கம் - பண்பாட்டின் மகத்துவத்தைத் தகர்த்துள்ளது. குறிப்பாக மானம், காக்கும் ஆடை காட்சிப் பொருளாக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளது. என்பதனை, காந்தியடிகளை முன்னிலைப்படுத்தி

"ஒரே ஒரு விஷயத்தில் மட்டும்/இந்த நாட்டு மக்கள்
உன்னை/அப்படியே பின்பற்றுகின்றார்கள்

அறைகுறையாகத் தான்/உடுத்துகிறார்கள்”

என்கிறார் நடப்பியல் என்பது அன்றாட வாழ்வில் சந்திக்கும் பிரச்சனைகளையும் நிகழ்ச்சிகளையும் உள்ளதை உள்ளபடி விளக்க வேண்டும் என்பதற்கேற்ப இதனை விளக்கியுள்ளார்.

### 4. காதல் தோல்வி

இல்லறமாகிய நல்லறம் காண மனமொத்த துணை தேவை. காதலின் மூலம் அத்துணை அறிமுகமானால் இரட்டிப்பு மகிழ்ச்சி. அக்காதலே வெற்றி பெறாமல் தோல்வியைத் தழுவினால் நொறுங்கிய இதயத்தின் புலம்பல் தாங்கமுடியாத ஒன்று. புலம்பல் மிகுதியில் இறப்பைத் தழுவும் சூழலும் உண்டு.

“கல்யாண மேடையயை/அலங்கரிப்பதற்காகக்
கனவுகள் கண்ட/கன்னிப்பூக்கள்
சவப்பெட்டியின் மேனியில்/சரிந்து விழுந்தன”

காதல் நிறைவேறாதபோது தற்கொலை செய்து கொள்ளும் பெண்மனதை நடப்பியல் சிந்தனையாகக் காட்டுகிறது இக்கவிதை.

### 5. நம்பிக்கையுணர்வு

காரணகாரியங்களின்றி விரோத மனப்பான்மையுடன் நடமாடித்திரியும் நாச சக்திகளைத் தடுத்து நிறுத்தும் முயற்சி இளைய தலைமுறைக்கே உண்டு என உண்மையாகக் கோபம் கொள்கிறார். உறுதியுடன் மு.மேத்தா இவ்வாறு சவால் விடுகிறார்.

“கண்ணீரைச் சேமித்துக்/கனலாக மாற்றுவோம்
நம்/விழிச்சிரிப்பின் வெம்மைபட்டுச்/சூரியனுக்கும் ஜுரம் வரட்டும்
நெஞ்சுக்குள்ளேயே/நிறுத்திக் குமுறினால்/நெருப்பு கூட நிராயுதபாணிதான்
தேசவரை படத்தைத்/துப்பாக்கி முனைகளால்/எழுதும்
நாகச் சண்டைகளை/நாடுகளிடையே நிறுத்துவோம்”

இயலாமையின் காரணமாகச் சோம்பித்திரியும் இளையதலைமுறை வீறு கொண்டு எழுந்தால் தேசத்தில் சேதம் வராது என்பதனை நடப்பியல் நம்பிக்கையுடன் இவ்வாறு வெளிப்படுத்துகிறார்.

### 6. அரசியல்வாதிகள்

தேர்தல் சமயங்களில் வாக்குறுதிகளை அள்ளிவீசி, பதவியில் அமர்நதவுடன் முன்னுக்குப்பின் முரணாகச் செயல்படும் சில அரசியல்வாதிகளைத் திரும்பிப் பார்கக வைக்கும் சிந்தனை.

“நாற்காலிகள்/காலியாக இருக்கின்றன/யார் வரப் போகிறார்கள்?
அவிழ்க்கத் தயாராகிவிட்ட/ஆயிரம் மூட்டைகளில்
அழகிய பொய்களின்/வாசனை./வருவதற்கான /வழியைப்பற்றி மட்டுமே/
ஒவ்வொரு நிமிடமும்/ஒரு நூறு யோசனை
பரவாயில்லை- வாருங்கள்/காலி செய்யத்தானே/வருகிறீர்கள்”.

நாட்டைச் சுரண்டும் மிகப்பெரிய சக்திகளில் அரசியல்வாதிகளும் ஒன்று எனும் நடப்பியல் சிந்தனை இங்கு பெறப்படுகிறது. சமுதாயம் முன்னோக்கி வளர சோசலிச நடப்பியல் கவனம் கொண்ட கவிஞரின் பார்வை இது.

### 7 திரைப்படம்

இன்று திரைப்படம் என்பது சதைக் குவியலுடன் ஆபாசமான ஆடல் பாடல் கலந்த ஒன்றாக வெற்றி நடை போடுகிறது. நல்ல செய்திகளாக குறிப்பாக வரலாற்றுச் சிந்தனை தழுவியதாக திரைப்படம் எடுத்தால், நஷ்டத்தையே தரும் எனும் நிதர்சனக் கருத்து இக்கவிதைக் கருத்து.

“காந்தி மகானைக்/கதாநாயகனாகப் போட்டுக்

கறுப்பு வெள்ளையில்/சுதந்திரம் என்றொரு
திரைப்படம் எடுத்தோம்/விநியோகஸ்தர்களுக்கு
வெகுவான லாபம்/படம் எடுத்தவர்கள்தான்/பட்டினி கிடக்கிறோம்.

வாழ்கையில் தாழ்ந்த பார்வையை எதிர்ப்பது நடப்பியல் உத்தி என்பதை சினிமாவின் தரம் கொண்டு விளக்குகிறார்.

## 8. காதல் - கற்பனையும் - நிஜமும்

கற்பனைப்படகில் உலா வந்த மனதைக் கடிவாளமிட்டு, சுயத்தை நோக்கி சுண்டி இழுக்க கூவும் முயற்சி இது.

"மும்தாஜே/மோகனலகரியில்/என்னை மூழ்கடித்தவளே
ஓய்வாக/ஒருநாள் வா/இருவரும் ஒன்றாகச் சேர்ந்தே உடைக்கலாம்
உனக்காக/நான் உருவாக்கி வைத்திருக்கும்/தாஜ்மகாலை
தங்கக்கனவுகளைத்/தரைமட்டமாக்கிவிட்டு/சின்னஞ்சிறு
வீடுகட்ட/செங்கல் சேகரிக்கலாம்"

அன்றாட வாழ்க்கை அனுபவங்களைக் கூறுவதாக இடம் பெறும் நடப்பியல் சிந்தனை, காதல் கொண்ட இளைஞன் நிசத்தைத் தரிசிக்கும் முயற்சியாக இக்கவிதை வெளிப்படுகிறது.

## 9. மார்க்சீய சிந்தனை

சுதந்திரத்தின் பலன் ஏழை எளியவர்களுக்கு இன்றுவரை கிடைக்காமல் குறிப்பிடப்பட்டவர்கள் மட்டுமே அனுபவிப்பதாக உள்ளது என்கிறார்.

"அணைக்கட்டுகளில்/திறக்கப்படும் தண்ணீர்
பள்ளங்களை ஏமாற்றிவிட்டு/மேட்டை நோக்கியே/பாய்கிறது.

இதில் சுரண்டப்பட்ட வர்க்கச்சார்புடன் கூடிய மார்க்சீய சிந்தனையைப் புகுத்தி நடப்பியலை எடுத்துக் கூறியுள்ளார்.

## பெறப்படுவன

1. நிகழ்கால அரசியலிலும் சீரழிந்துள்ள நிலை.
2. சீரழிந்த தேசத்தையும் இளைஞர்களால் செம்மைப்படுத்த முடியும் எனும் நம்பிக்கை
3. மேனாட்டுக் கலாச்சாரம் உடைகுறைப்பு செய்த சீரழிவு
4. கவிதைத் துறையில் மார்க்சீயக் கொள்கை தாக்கம் பெறுதல்
5. எவ்விதப்புனைவுமின்றி மு.மேத்தா அவர்களின் நடப்பியல் கூறுகளுடன் நிகழ்வுகாலநிலையைக் கூட்டிக் காட்டுதல்
6. திரைப்படங்கள் இன்று கொண்டுள்ள வியாபார நோக்கம்
7. தேசச் சீரழிவிற்கு அரசியல்வாதிகளின் சுயநலப்போக்கு காரணம் எனல்.

## துணை நின்ற நூல்கள்


1. கண்ணீர்ப்பூக்கள்
2. அவர்கள் வருகிறார்கள்
3. இரு சிறகும் முளைக்காத சிறுபறவைகள்

# பட்டுக்கோட்டை இலக்கியத்தில் சமுதாய சிந்தனைகள்

*மு. துளசிமணி*, தேர்வுநிலை விரிவுரையாளர்,
அ.ப.ம.கல்லூரி - பழனி.

"மக்கள் கவிஞர்" என்ற உயர்பட்டத்தை மக்கள் மூலமே பெற்ற ஒரு மாபெருங்கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்திரம். புதுமை நெறி காட்டிய பாரதியைப் போல் மிகக் குறைந்த வயதில் நிறைந்த கருத்துக்களைத் தமிழ் உலகிற்குக் கொடுத்த பெருமையுடையவர். பணத்துக்கும் பகட்டுக்கும் வெறுந்திரைப் பாட்டெழுதிப் போனவர்களுக்கு மத்தியில் திரைப்பாடல்களின் தொகுப்பு "பட்டுக் கோட்டை இலக்கியம்" ஆகிறது. அவ்விலக்கியத்தில் காணப்படும் சமுதாயச் சிந்தனைகள் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

பணத்தொகை மிகுந்தவர்களின் கனவுத் தொழிற்சாலையான திரைத்துறைக்குள் முற்போக்குச் சிந்தனையாளர்கள் நுழைய முடியாது என்ற நிலையை மாற்றி, தன் திறமையால் நுழைந்து நிலைத்துநின்று அத்துறையைத் தான் இருந்தவரை தன் ஆளுகைக்குள் வைத்திருந்தவர் பட்டக்கோட்டை. வெறுத் தொதுக்கியவர்கள் கூட வெற்றியின் உச்சத்துக்கு வந்தபின் அவரை விரும்பி வேண்டிச் சொந்தம் கொண்டாடினர். கதைச் சூழலும் இசைக்குரலும்கட்டுப்படுத்திய போதும் கூட, தன் கவித்திறத்தால் தன் இயக்கக்கருத்துக்களை கொள்கைகளை உரத்துப் பாடியவர் அவர். எல்லோரும் எல்லாமும் பெறவேண்டும் என்ற பொதுவுடைமைச் சமுதாயக் கருத்தை வலியுறுத்தியவர். தன்கால மக்களின் நல்வாழ்விற்கும் எதிர்கால மக்களின் இன்ப வாழ்விற்கும் ஏற்ற கருத்துக்களை எடுத்துச் சொன்னவர்.

சராசரி மனிதனின் சாதாரண விருப்பு வெறுப்புக்களையும் மன அசைவுகளையும் உணர்ச்சிப் பெருக்குகளையும் எளிமையாகச் சொல்லும் நாடோடிப் பாங்கில் சொன்னார். சிந்து காவடிச் சிந்து, கும்மி குறவஞ்சி, ஆனந்தக் களிப்பு, தெம்மாங்கு கண்ணிகள் லாவணி போன்ற நாட்டப்புற யாப்பு முறையைப் பயன்படுத்தி 55 படங்களுக்குப் பாடல்கள் எழுதியவர். தமிழ் இனப் பெருமையிலும் பகுத்தறிவு அலைகளிலும் ஆரம்ப காலத்தில் ஈடுபட்டிருந்த அவர் மெல்ல மெல்ல பொதுவுடமைப் பாசறைக்கு வந்துவிட்டவர். அதனால் தான் தத்துவம் பாடும் போதும் காதல் கீதம் இசைக்கும் போதும் குழந்தைகளைப் பற்றிப்பாடும் போதும், இயற்கையழகில் தன்னை ஈடுபத்திக்கொண்ட போதும் சமுதாய நலனை, மனித நேயத்தை மறக்காமல் பாடினார்.

சமுதாயம் தான் கலைகளின் தாயகம். சமுதாயத்திலிருந்து விலகிய - சமுதாயத்திற்குப் பயன்படாத எந்தக்கலையும் - எந்தக் கலைஞனும் மறந்தொதுக்கப்படுதல் ஒருதலை. சாகாவரம் பெற்ற இலக்கியத்தைச் சமைப்பவனும் சமுதாயத்தில் நிகழும் அரசியல்; பொருளாதாரச் சமூக உறவுகளுக்கும் இவற்றின் விளைவாக எழுகின்ற சிந்தனைகள், தத்துவங்கள் போராட்டங்கள் ஆகியவற்றிற்கும் கட்டுப்பட்டவனாகிறான். இந்த வகையில் மக்கள் கவிஞர் சமுதாயப் பிரச்சனைகளைப் பாடிய வகையிலும், பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முயன்ற வகையிலும் தனித்துக் காணப்படுகின்றார். பாட்டுக்குப் பாட்டு வரிக்கு வரி - சொல்லுக்குச் சொல் சமுதாய சிந்தனை மிக்க பாடல்களைத் திறமையோடு பாடினார்

## போராட்டம்

சர்வ தேசியத்தில் நாட்டங்கொண்ட மக்கள் கவிஞர் உலகச் சமாதானத்துக்கு வழியைச் சொல்ல வந்த போது

"உழைப்பை மதித்துப் பலனைக் கொடுத்து
உலகில் போரைத் தடுத்திடுவோம் "

என்று பாடினார். உழைப்பை மதிக்கவும், உழைப்பின் பலன் உழைப்பாளர்களுக்கு நேரடியாகச் சேரவும் போரில்லா நிலை ஏற்பட்டால்தான் சாத்தியம் ஆகும் என்று நம்பினார்.

"தேனாறு பாயுது - வயலில் / செங்கதிரும் சாயுது - ஆனாலும் / மக்கள் வயிறு காயிது

அதிசயந்தான் இது"

இந்தச் சமுதாய நிலைகண்டு அதிசயித்து ஆளுந்தலைமுறையினரிடம் தூண்டிவிட்டு உரிமை கேட்க வைக்கிறார். சோகச் சூழலிலே ஏழைச் சருகுகள் கண்ணீர் சொட்டுகிற நிலையைக் கண்டு வருந்தி, உழைப்போரின் உரிமைகள் மறுக்கப்படுவதைக் கண்டு

"ஏமாத்தும் போர்வையிலே / எக்காளம் போடுகிற கூட்டம் - மக்கள்
எதிர்த்துக்கிட்டா எடுக்கவேணும் ஓட்டம்"

என்று பொங்கி எழுந்து மக்களைப் போராட்டத்திற்குத் தயாராக்குகிறார். போராடும் போது இடையூறுகள் பலவரலாம் அப்போது உறுதியாக நிற்க வேண்டும் என்று அறிவுரை கூறுகிறார்.

"நெஞ்சினைப் பிளந்த போதும் / நீதி கேட்க அஞ்சிடோம் / நேர்மையற்ற பேர்களின்
கால்களை வணங்கிடோம்"

என ஏழைகளின் சார்பில் உறுதி மொழி நல்குகிறார்.

## உழைப்பு

போராடினால் மட்டும் போதாது. உழைக்கவும் வேண்டும் என்று கூறுகிறார்.

"செய்யும் தொழிலே தெய்வம் - அந்தத்
திறமைதான் நமது செல்வம்"

என்று தொழிலை வழிபடச் சொல்கிறார். உழைப்பின் மகத்துவத்தை மக்கள் கவிஞரைப் போல் வலியுறுத்திச் சொன்ன கவிஞர் வேறெவரும் இல்லை என்றே கூறலாம்.

## ஒற்றுமை

உழைக்கத் தெரிந்த - உரிமை கேட்கிற ஒரு சமதாயத்தை உருவாக்க நினைத்தார். ஆனால் உழைக்கும் வர்க்கம் சிதறிச் சின்னாபின்னமாகிக் கிடப்பதைக் கண்டார். அதற்கு ஒற்றுமை மிகத்தேவை என்று உணர்ந்து அதன் அவசியத்தை வலியுறுத்தினார்.

"பேதத்தைப் பேசி நேரத்தை விழுங்கும் / பித்தருண்டு - அவர்
பக்கதருமுண்டு"

அவர்களிடத்தில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்கிறார்.

கத்தும் பறவை
கனிமரத்தில் வந்து
ஒற்றுமை காட்டுதே

என்று பறவைகள் ஒற்றுமையாக இருப்பதைச் சுட்டிக் காட்டி உழைப்பாளர்கள் ஒற்றுமையின் அவசியத்தைப் புலப்படுத்துகிறார். அதுமட்டுமல்ல

"பச்சைக் கொடிகள் வேலியிலே / பாகுபாடின்றித் தழைக்குது - அதைப்
பார்த்திருந்தும் சில பத்தாம் பசலிகள் /பக்கம் ஒன்றாய்ப் பறக்குது - அன்புப்
பாலம் பழுதாய்க் கிடக்குது"

என்று மானிட சமூகத்திற்கு ஒற்றுமையின் சிறப்பை இயற்கை மூலம் எளிய முறையில் சொல்லி விளக்குகிறார். ஓங்கி வளரும் மூங்கில் மரத்தின் வளர்ச்சிக்கும் ஒற்றுமை தேவை என்பதைக் காட்டி, மலையில் ஊறும் அருவிகள் கூட ஒன்றாய் ஒரே வழியில் கலப்பதைச் சுட்டி ஒற்றுமையில்லாத மனித குலத்திற்கு ஒற்றுமையின் மகத்தான தன்மையை விளக்குகிறார். "உலகத் தொழிலாளர்களே ஒன்று சேருங்கள்" என்ற தாரக மந்திரத்தைப் பரப்பிடப் பாட்டெழுதியவர் பட்டுக்கோட்டை.

## சாதி

சமுதாயத்தின் முன்னேற்றத் தடைக் கற்கள் ஒற்றுமையின்மையும் சாதி அமைப்பும் தாம் என்று கண்ட

கவிஞர் அடுத்து சாதியில் ஏற்றத் தாழ்வு கூடாது என்பதை எடுத்துப் பாடுகிறார்.

"யாருமேல கீறினாலும்
ரத்தம் ஒன்னுதானே - ஆக
மொத்தம் பிறந்ததெல்லாம்
பத்தாம் மாதந்தானே

என்று சாதியின் ஆணிவேரையே பிடுங்கி எறியக் கூறுகிறார் அதுமட்டுமல்ல

"ஜாதிகள் யாவும் ஒன்றாகமாறும்
தேதியில் தோன்றும் பெருமை" என்று நம்புகிறார்.

## பெண்ணுரிமை

பெண்ணுரிமைக்குக் குரல் கொடுத்த வள்ளுவர், பாரதி, திரு வி.க., பாரதிதாசன் ஆகியோர் வரிசையில் பட்டுக்கோட்டையும் சேருகிறார். கற்பு நிலையை ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவாக்க வேண்டும் என்றார் பாரதி. ஆனால் மக்கள் கவிஞரோ ஆவேசம் பொங்க இதுவரை யாரும் கூறாத புதுக்கருத்தை

"தாலி போட்டுக்கிட்டா ரெண்டு பேரும்
சேர்ந்து போட்டுக்கணும் - உலகம்
புதுசா மாறும்போது பழைய முறைய மாத்திக்கணும்"

என்று ஆணையிட்டுக் கூறுகிறார்.

## குழந்தைப் பாடல்கள்

பிஞ்சு மனதில் ஆழப்பதியும் படி சமுதாயக்கருத்துக்களைப் புதுமையாகச் சொல்லுகிறார். ஆசிரியர் நிலையிலிருந்து அறிவுறுத்துகிறார். மனதில் வலிமையை ஏற்றி வாட்டத்தை உழைப்பால் மாற்றச் சொல்கிறார். சின்னச்சின்னக் கருத்துக்களைக் கூறிச் சிந்தித்துப் பார்த்து ஏற்றுக் கொள்ள வேண்டுகிறார். ஆளும் வளரனும அறிவும் வளரனும் அது உண்மையான வளர்ச்சி என்கிறார். நல்ல மனிதனாக வளர்ந்த நாட்டக்கே வலுது கையாக மாற வேண்டும். சமுதாயத்திற்குத் தீங்கு செய்யும்

"தனியுடமைத் கொடுமைகள் தீரத்
தொண்டு செய்யடா"

என்று எளிய பதங்களில் புரியும் வகையில் நெருக்க நிலையில் இருந்து புத்திமதி கூறுகிறார். வறுமையைப் போக்கத் திருடக் கூடாது. தெரிஞ்சும் தெரியமல் திருடியிருந்தா திரும்பவும் செய்யாமல் பார்த்துக் கொள்ளச் சொல்கிறார். வேப்ப மரத்துப் பேய்களை வேடிக்கையாககக் கூட நம்பிவிடக்கூடாது அது வீணர்கள் கட்டிவிட்ட கதை என்று எச்சரிக்கை செய்கிறார். படிப்பு தேவை, அதோடு உழைப்பும் தேவை என்பதை நயமாக வலியுறுத்துகிறார். இவ்வாறு சின்னப்பயலுக்கும், தூங்கிய தம்பிக்கும், திருடிய பாப்பாவுக்கும் அறிவுரை கூறுகையில் சமுதாயக் கருத்துக்களை மறக்காமல் இணைத்தே பாடுகிறார்.

இவ்வாறு மக்கள் கவிஞர் சமுதாயக்கருத்துக்களை வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் வலியுறுத்திப்பாடுகிறார். ஒப்பிலாத சமுதாயத்தைப் படைக்க ஆசைப்பட்டார். "தானா எல்லாம் மாறும் என்பது பழைய பொய்யடா" என்று அடித்துக்கூறி "நீயே மாற்று" என்று கட்டளை இடுகிறார். அவ்வாறு புதிதோர் உலகம் உருவாக்கிவிட்டால், அங்கு,

"வறுமையில்லே வாட்டமில்லை
வயிற்றிலடிக்கும் கூட்டமில்லே".

# நடப்பியல் பதிவுகளில் ஒப்பனை முகங்கள்.

*கே. தீபா,* உதவி ஆசிரியை - தமிழ்த்துறை,
அ.ப.ம. கல்லூரி, பழனி.

## முன்னுரை

மனிதனாக தோன்றியதிலிருந்தே மனித இனமும், மனமும் ஒன்றுக்கொன்று வேறுபட்டு சாதி, சமய, சமூக குப்பைகளைக் கிளறிக் கொண்டே தான் இருக்கிறது. சிந்திக்கும் திறன் கொண்ட கவிஞன் சமூகத்தில் உள்ள போலித்தனங்களையும், ஊழல்களையும், முரண்பாடுகளையும் வாழ்க்கையை செம்மையாக வாழும் முறையினையும் தனது கவிதைகளின் மூலம் தரம் பிரித்து உணர்த்துகின்றான். இதில் கவிஞர் ரவி சுப்பிரமணியனும் விதி விலக்கல்ல. ஒப்பனை முகங்களும் ஒப்பனையானது அல்ல. மாறாக சமுதாய சீர்கேடுகளை அப்பட்டமாக படம் பிடித்துக் காட்டுகின்றன. "ஒப்பனை முகங்கள்" என்ற புதுக்கவிதை தொகுப்பின் ஆசிரியரான ரவி சுப்பிரணியன், இரும்பு உபகரண வியாபாரி ஆவார். இதனால் இவருடைய கவிதைகளில் சமுதாயத்தில் உள்ள கீழ்த்தட்டு மக்களின் உண்மை நிலை ஆங்காங்கே பிரதிபலிக்கின்றது.

இருபத்தியோராம் நூற்றாண்டை "கணிப்பொறியுகம்" என்று அழைத்தாலும் சமுதாயம் இன்னும் பல அழுக்குகளை அணிந்து கொண்டுதான் இருக்கிறது. இதனைக் களைய நாம் முற்பட வேண்டும் என்று கவிஞர் பல நடப்பியல் நிகழ்வுகளைத் தம் கவிதைகளில் வடித்துக் காட்டுகிறார்.

## நடப்பியலின் தோற்றம்

மேலை நாடுகளில் பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் புனைவியல் செல்வாக்குப் பெற்றிருந்தது. ஆனால் நடப்பியல் இயக்கமாகவோ இலக்கியத்தை வழிவழியாக அடிமைநிலையிலிருந்து விடுவிக்கவே தோன்றியது. இதனைக் கீழ்க்கண்டவாறு கூறலாம், "நடப்பியல் இயக்கம் இலக்கியத்தை மரபாகிய அடிமைத்தளையிலிருந்து விடுவிப்பதற்காகத் தோன்றியதாகும். நடப்பியல் அன்றாட வாழ்க்கை அனுபவங்களை விளக்கிக்கூறி இயற்கைத்தன்மையை விலியுறுத்துகின்றது"1. என்பர். (நா. பிச்சமுத்து - இலக்கிய இயக்கங்கள் - ப. 142)நிகழ்கால நிலையை வார்த்தைகளில் வடித்து சுவைத்துத் தருகிறார் கவிஞர்.

## ஒப்பனை முகங்கள் காட்டும் பன்முகச் சமுதாயம்

போலியான ஒப்பனைகள், மனித நேயம், சமத்துவம், சமூகநிலை, அரசியல் அவலங்கள், சமுதாயச் சீர்கேடுகள், வாழ்க்கை நிலை, சமயப்பொறை போன்றவைகள் நளினமாக சொல்லப்படுகின்றன.

ஒப்பனை முகங்கள் முதல் கவிதையில்,

" ஒப்பனையே
உனக்கேன்
முகமாய்ப்
போனது?
இயல்பு இழிவென்று
யார் சொன்னது?

ஒருநாள்
அழுகை வரும்
எது தடுத்தாலும்
நில்லாது
கண்ணீர்
கலைக்கும் - உன்
ஒப்பனை"2.

(ரவி சுப்பிரமணியன் - ஒப்பனை முகங்கள் - ப. 13)

"உலகமே நாடக மேடை" என்று கூறிய ஆங்கிலக் கவிஞன் ஷேக்ஸ்பியரின் கூற்றை மெய்ப்பிக்கும் வகையில் போலி வேடங்களைக் கடுமையாகச் சாடுகிறார். என்னதான் முகப்பூச்சு பூசிக்கொண்டாலும் ஒருநாள் ஒப்பனையைக் கண்ணீர் கலைக்கும் அதனால் இயல்பாய் இருங்கள் என்கிறார் கவிஞர்.

## மனித நேயம் /சோசலிச மனிதாபிமானம்

"வெயிலை உணர்" என்ற கவிதையில் மேல்தட்டு மக்களின் மெத்தனத்தை சாடி உழைப்பின் அருமையையும் அதனால் ஏற்படும் இனிமையையும் கவிஞர் எடுத்துக் கூறுகின்றார்.

" ஏசி ரூமுக்குள் இருந்துகொண்டு
வெயிலைப் பற்றி

இறங்கி
வெயிலுக்கு

விவாதம் நடத்தாதே
வா
பாதம்கூட
வியர்வை வழிய வழிய
நட"3.

(ரவி சுப்பிரமணியன் - ஒப்பனை முகங்கள் - ப. 15)

என்று கூறி "உழைப்பின் பயனை வியர்வையில் அறி" என்ற ஆன்றோரின் கருத்தை இங்கு முன்னிறுத்தியுள்ளார்.

நடப்பியலின் சிறப்புத் தன்மைகளில் ஒன்றான நிகழ்கால நிலையைக் காட்டுவது என்பதனைக் கூற வந்த கவிஞர், சமூகத்தில் நடக்கும் மரணம், திருட்டு, அடுத்தவீட்டு பெண் ஓட்டம், தகராறு போன்றவற்றில் அக்கறைக் கொள்ளாமல் நமக்கேன் வம்பு என்று மக்களின் நிகழ்காலச் சமுதாய நிலையை "மனிதாபிமானம்" என்ற கவிதையில் பதித்துள்ளார்.மனிதநேயம் மறைந்து சமுதாயம் சீர்கெட்டு மறித்துப் போன மனங்களையும், கேடுகெட்ட நிலையினையும் படம் பிடித்துக் காட்டுகிறார் கவிஞர்.

"ஒரு மரணம் நிகழந்து / அமைதி கிழிந்தது
என் தெருவில்...."4. (மேலது. ப. 48)

துக்கப்பட வேண்டிய ஒன்றிற்காக வருந்தாமல் சாராயம் அருந்தி கும்மாளமிட்டு வீண் ஆரவாரம் செய்வதையும், இங்கேயும் (மரணத்திலும்) கலவரத்தைத் தேடும் நிலையில் மனிதன் இருக்கின்றான். மனிதம் விளைவு,

" சோடா பாட்டில் சொச்சம்
சிறிய திட்டுத் திட்டாய் ரத்தம்
அறுந்த ஒரு செருப்பு
அண்டர் வேரின் கிழிசல் துண்டு
தெறித்து விழுந்த சட்டைப்பட்டன்கள்
சவுக்குக் கழிகள்
சைக்கிள் செயின்கள்
இவைகளோடு
மயான அமைதியாய்
மாறியது தெரு....
ஆனாலும்
இன்னும்
கிடக்குது
பிணம்
மாலையில்லாமல்"5.

(ரவி சுப்பிரமணியன் - ஒப்பனை முகங்கள் - ப. 49)

ஆயுதங்களால் தாக்கிக் கொண்டு இரத்தம் பெருகிக் கலவரமே மூண்டாலும் இறுதியில் "பிணம் மாலை கூட இல்லாமல்" வைக்கப்பட்டிருந்த மனிதநேயமற்ற செயலைக் கவிஞர் பதிக்கிறார். ' Man is a Political Animal என்ற வார்த்தையில் உள்ள "அரசியல் விலங்கு" என்ற கருத்து முன்னிலைப்படுத்தப்படும் கவிதையில் "மனிதத்தனத்தை" மனிதனிடமே காட்டு, விலங்கிடம் காட்டாதே என்று கூற வந்த கவிஞர், "பகுத்தறிவில்லாத" மனிதத்தனம் விலங்கை விட இழிவானது என்கிறார். சாதுவான மிருகத்திடம்,

"உன்
"மனிதத்தை"
ஏன் அதனிடம் காட்டுகிறாய்..........."6. (மேலது, ப. 52)

என்று கூறி கவிஞர் வேதனை அடைகிறார்.

## சமுதாயச் சீர்கேடுகள்

பாரததேசம் மத, இன, சாதி வேறுபாடுகளாலும், கலவரங்களாலும், கற்பழிப்பு, கொலை, கொள்ளைப் போன்ற பயங்கரங்களாலும் காயப்பட்டு புரையோடி உள்ளது. அதனைக் களைய முற்படாமல் அதில் இரத்தம் குடிக்க ஓநாய் கூட்டம் நிற்பதைச் சாடும் கவிஞர்,

"சீழ் பிடித்துப் போனது
என்தேசம்
காயமாய் இருக்கும் போதே
கட்டுப்போடாத
காரணத்தால்
................
வீதியெங்கும்
ரத்தப் பஞ்சின் துகள்கள்
சேவலின் கால்களில்
கத்தி பதித்து
ரத்தம் சுவைக்க நிற்கிறது
ஓநாய்கள் கூட்டம்"7. (மேலது, ப. 16)

இதில் ஏதும் அறியாத அப்பாவி மக்களை சேவல்களாகவும், சுயநலவாதிகளை ஓநாய்களாகவும் கூறும்

கவிஞர் சமுதாயம் சுயநலவாதிகளால் சீரழிக்கப்படுவதை உணர வைக்கின்றார். மேலும் தீவிரவாதத்தை எதிர்த்து முறியடித்து அகிம்சைக்குப் பேர் போன தேசத்தில் இன்று சாதி, சமய, இன வெறியால் ஆயுதங்களை ஏந்தி பிணமாகும் அப்பாவிகளை கவிஞர் வகைப்படுத்துகிறார்.

"சாதியில் சாய்ந்த பிணங்கள்
ஒதுக்கீடு கேட்ட பிணங்கள்
தனிநாடு கேட்ட பிணங்கள்" 8. (மேலது, ப. 17)

என்று கூறி இறுதியாக

"இது - / என்ன மரங்களின் / இலையுதிர் காலமா? / மானுடத்தின்
தலையுதிர் காலமா?"9. (மேலது, ப. 17) என்று சமுதாயத்தை நோக்கி வினா எழுப்புகிறார்.

இன்றைய சமுதாயத்தில் அடிமட்டத்தில் சாதாரண நிலையில் இருந்தால் யாருக்கும் நம்மைத் தெரியாது. நாற்காலி அதாவது பதவி என்று ஒன்று இருந்தால் தான் நிறைய கண்களுக்கு நம்மைத் தெரியும்.

"அடேயப்பா....
என்னைச் சுற்றி
எத்தனை கண்கள்
இத்தனை நாட்கள் ஏன்
இருட்டில் இருந்தன?
ஓ.........
இன்றைக்குத் தானே
கிடைத்த தெனக்கு
நாற்காலி"10. (மேலது, ப. 19)

என்று சமூக யதார்த்த நிலையினை வெளிப்படுத்துகிறார்.

அடர்ந்த காடு, இருள், மிருகங்கள், பறவைகள், அருவிகளில் ஓசைகள் அச்சமூட்டுவன. ஆனால் அக்காட்டில் கூட இருந்து விடலாம். பயம் அற்று, ஏனெனில் மனித இனம் அங்கு இல்லை என்று கூறி மனித குணம் மிருகங்களைவிட அச்சம் தரக்கூடியது என்கிறார்.

"ஆனாலும் மனிதரில்லை / அதனால் பயமுமில்லை"11. (மேலது, ப. 35)

என்று நடைமுறையில் உள்ளதை உள்ளபடி காட்டுவது நடப்பியல் கூறுகளில் ஒன்றாகும்.

நமது நாடானது விடுதலை அடைந்து பல ஆண்டுகள் ஆகியும் கூண்டில் அடைக்கப்பட்ட சிறகு ஒடிந்த பச்சைக்கிளியின் நிலையில் உள்ளதை

"பாவம்
பச்சைக்கிளி
சிறகுகள் வெட்டப்பட்டு
நெல் மணிக்காய் ஜோசியம் சொல்லி
திரும்பவும்
கூண்டுக்குள் அடைக்கப்பட்டு
...................
பாவம்
பச்சைக்கிளி"12. (மேலது, ப. 40)

என்பது அக்கவிதை வரிகள் ஆகும். நல்லது செய்ய நினைப்பவர்களை இந்தச் சமுதாயம் ஏற்காமல் பைத்தியகாரப்பட்டம் கட்டி விடுவதை மழைநீரைக் கொண்டு அழகாக உணர்த்துகிறார். மழைநீரை வாய்க்கால் வெட்டி வழி திருப்பி வயலுக்கு விட்ட பொழுது,

"பைத்தியம் கையில் ஆயுதம் / என்று / பறித்து விட்டார்கள்"13. (மேலது, ப. 41) என்கிறார்.

"ஒரு கேள்வி - ஒரு பதில்" என்ற கவிதையில் போதி மரம் பேசுவதாக,

"வருபவனெல்லாம்
புத்தனாய்ப்
போக எண்ணி
வருகிறானே தவிர
சித்தார்த்தனாய்
எவனுமிங்கு
வருவதே இல்லை..."14.
(மேலது, ப. 54)

அன்றையச் சமுதாய மக்களின் ஒருவனான சித்தார்த்தன் அரசு முதல் அனைத்தையும் முற்றும் துறந்தான். ஆனால் இன்றோ புத்தனாக இருக்க வேண்டும் என்ற நினைப்புடன் வருகிறானே தவிர சித்தார்த்தனைப் போல எதையும் இழக்க தயாராகாமல் சுயநலத்துடன் மனிதன் இருக்கிறான் என்பது இங்கு கோடிட்டு காட்டப்படுகின்றது. மனிதன் என்பவன் பிறப்பு முதல் இறப்பு வரை பிரச்சனைகளோடு தான் வாழ்கிறான் என்பது நடப்பியல் உண்மை. இதனை வலியுறுத்தும் வகையில்

"ஊருக்கு ஊர்
சுடுகாட்டால்
இனி தமிழகத்துக்கே
இரண்டு மூன்று தான்

நிறை பிரச்சனைகள்
யோசித்தது அரசு
(மேலது, ப. 63)

ஒன்று கல்பாக்கம்
இன்னொன்று கூடங்குளம்"15.

ஆகும் என்று பல சமுதாய சீர்கேடுகளை படம் பிடித்துக் காட்டுகிறார்.

## அரசியல் அவலங்கள்

நம்முடைய இன்றைய வாழ்க்கையில் நாம் காணும் மனிதர்களைத் தரம் பிரித்து பட்டியலிட்டு நடைமுறைப் படுத்துகிறார்.

| நேற்று | இன்று |
|---|---|
| கடன்காரர்கள் | முதலாளிகள் |
| ரௌடிகள் | அரசியல்வாதிகள் |
| விலைமாதர்கள் | நடிகைகள் |

.ன்றைய சமதாயம் கீழ்த்தரமான மனிதர்களால் சிதைக்கப்படுவதைச் சாடுகிறார். அதே நேரத்தில்

"நேற்று / ஏழைகள் / இன்றும் / ஏழைகள்" 16. (மேலது. ப. 30)

ஏழைகளின் நிலையில் அன்றும் இன்றும் எந்தவித மாற்றமும் இல்லை என்று ஆதங்கப்படுகிறார் கவிஞர்.

## மனித வாழ்க்கை

பணம், புகழ், பதவி என்று எல்லாவற்றிற்கும் ஏங்கும் நடைமுறைக் கனவினை சுமந்து கொண்டு இருக்கும் மனிதனை,

" மனிதா ! மனிதா ! / என்றேனும் ஒருநாள்/ ஓர் இரவேனும் / மனிதனாக / காண்பாயா கனவு......"17. (மேலது. ப. 29) / என்று வாழ்வியல் யதார்த்தத்தை உணர்த்துகிறார்.

மனித வாழ்க்கை அற்புதமான ஒன்று. அதனை உணராத மனிதன் அறிவியல், விஞ்ஞானம், பொருளாதாரம் என்று இயந்திரத்தனமாய் வாழ்கிறான். முதலில் அவன் தனக்குரிய வாழ்வை தீர்மானித்து இப்படித்தான் வாழ வேண்டும் என்ற கொள்கையோடு வாழ வேண்டும்.

"வா / முதலில்/ வாழ்க்கையைக் / கண்டுபிடிப்போம்"18. (மேலது. ப. 31)

என்று மனிதனை அழைக்கின்றார்.

இவ்வுலகில் நம்முடையது எதுவுமே இல்லை. எல்லாமே இரவல்தான். எதையும் நாம் கொண்டு வரவில்லை இங்கிருந்து எடுக்கப்பட்டது. இதனால் இருப்பதைக் கொண்டு நாம் வாழும் வாழ்க்கையைப் பூசலில்லாமல் வாழ வேண்டும் என்ற கருத்தை உணர்த்துகின்றார்.

"எல்லாம்
இரவல்தான்
பெரும்பாலும்
ஆனாலும் கூட
கூடா வாழ்வைக்
கூடி வாழ்கிறோம்
கூடா மனசொடு"19.
(மேலது, ப. 64)

அதனை உணர்ந்து நாம் கூடி வாழ வேண்டும் என்ற கருத்தை முன்வைக்கிறார் கவிஞர் ரவி சுப்பிரமணியன்.

## சமயப்பொறை

சாதி, சமயம் பாராட்டாமல் வேடனான குகனுடன் நட்புறவு கொண்டான் இராமன். ஆனால் இன்றைய சமுதாயத்தில் உள்ள இராமனோ முஸ்லீமை வெட்டுகிறான் என்பதனை,

"வேடனைச் சேர்த்தான் அந்தக் காலம்
முஸ்லீமை வெட்வான் இந்தக் காலம்
ராமன்"20. (மேலது, ப. 59)

இந்த நிலை சமுதாயத்தில் இன்று மாறவேண்டும் என்ற கருத்தைக் கூற விழைகிறார்.

## முடிவுரை

மனிதன் அன்றாட நடைமுறை வாழ்வில் போலித்தன்மை இல்லாமல் சமுதாயச் சீர்கேடுகளைக் களைந்து சாதி, சமய, பூசல் இல்லாமல் சுயநலமின்றி வாழ்க்கையை வாழ வேண்டும் என்று "ஒப்பனை முகங்கள்" கவிதைத் தொகுப்பு அழுத்தமாகவும், ஆழமாகவும் உணர்த்துகின்றது.

# சமூகநோக்கில் நடப்பியல்

*மூ.பாலகிருஷ்ணன்,*ஆய்வாளர், தமிழியல் துறை,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,திருச்சிராப்பள்ளி - 24.

ஒவ்வொரு காலகட்டங்களிலும் வெவ்வேறான இயக்கங்கள் காலத்தேவை கருதி தோற்றம் பெற்றன. இவ்வியக்கங்கள் இலக்கியங்களிலேயும் பிரதிலித்துள்ளன. தமிழ் இலக்கியமும் அவ்வக்காலங்களின் இயக்கங்களைச் சார்ந்தே படைக்கப்பட்டுள்ளன. மேல் நாடுகளில் ஒரு கோட்பாடு தோன்றி வளர்ந்து வலுவிழந்து அடுத்த கோட்பாடு வளர்ந்து கொண்டிருக்கும்போது, வலுவிழந்த கோட்பாடு தமிழிலக்கியத்திலே புதியதாக இறக்குமதியாகிறது. 1940களில் தமிழ் இலக்கியங்களில் இயற்கையியல், நடப்பியல், அற்புத நவிற்சியியல், குறிக்கோளியல் ஆகிய இயக்கங்கள் இடம்பெற்று வந்தன. இத்தகைய இயக்கங்கள் புதுக்கவிதைகளையும் தொற்றிக் கொண்டன.

கற்பனாவாதத்தில் படைப்புகளை அளித்து வந்த கவிஞர்களை எதார்த்தத்திற்கு அழைத்து வந்த பெருமை நடப்பியல் கோட்பாட்டையே சாரும். கவிதையில் நடப்பியலைப் பதிவு செய்ததில் பாரதியை முன்னோடியாக் கருதலாம். நடப்பியல் இயக்கத்தின் மூலம் படைப்பாளர்கள் சமூகத்தில் மக்களுக்கு எதிராக நிகழ்கின்ற, நிலைப்பாடுகளைச் சமூகக் கண்ணோட்டத்துடன் நோக்கித் தனது படைப்புக்களில் வெளிப்படுத்தினார்கள். அவ்வகையிலே குறிப்பிடத்தக்கவர் கவிஞர் தணிகைச் செல்வன் ஆவார்.

"நிகழ்கால நடப்புகளே அவரது கவிதைகளின் கருப்பொருள் நிகழ்கால மனிதனின் நிகழ்காலப் போராட்டங்களே, நாட்டையும் உலகத்தையும் மாற்றிக் கொண்டிருக்கும் புரட்சிகர நடப்புகளே அவரது மூச்சு" என்று ஏ.பாலசுப்பிரமணியம், கவிஞர் தணிகைச் செல்வனின் கவிதையின் கருப்பொருளைப் பற்றிக் கூறுவதிலிருந்தும் அவரது கவிதைகளை ஆழ்ந்து நோக்கும் போதும் அவரது எதார்த்தப் பதிவுகளையும் சமூகக் கண்ணோட்டத்தையும் அறிந்து கொள்ளலாம். ஆதலால் எதார்த்தமாக, சமூகக் கண்ணோட்டத்துடன் படைத்துள்ள தணிகைச் செல்வனின் கவிதைகளை ஆய்வதாகவே கட்டுரை அமைந்துள்ளது.

அரசியல்வாதிகள் :

நம் இந்தியச் சமூகத்திலும் தமிழ் சமூகத்திலும் அரசியல் ஆதிக்கம் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறது. அரசியில்வாதிகளுள் பெரும்பாலானோர் மக்களுக்கான தேவையை நிறைந்வேற்றுதல் பொருட்டு அரசியலில் ஈடுபடுவதில்லை. பதவி சுகத்திற்காகவும், பணத்தைப் பெருக்கிக் கொள்வதற்காகவுமே அரசியலில் ஈடுபடுகின்றனர். மக்களிடையே இருக்கின்ற வேறுபாடுகளைக் கிளறிவிட்டு அவர்களை மோதவிட்டும் ஆட்டிப்படைக்கின்றனர். இவை நம்மிடையே இன்று நிகழ்ந்து கொண்டிருக்கும் நிகழ்வுள். இத்தகைய நடைமுறை சார்ந்த நிகழ்வுகளைக் கவிஞர் பதிவு செய்துள்ளார்.

"ஆயிரம் ஆண்டாய் அங்கு
ஆண்டவர் எவரும் சாதித்
தீயினை அடக்கத் தண்ணீர்
சிறிதேனும் தெளித்ததுண்டா
இதுவரை சாதித் தீயை
எங்கேனும் அணைத்ததுண்டா?
இடையிலே தேர்தல் வந்தால்
சாதியை "அணைபா" துண்டு" (ப-291)

இவ்வாறு அரசியலில் பவனி வருகின்ற பெரும்பாலான அரசியல்வாதிகள் சாதியினை ஒழிப்போம் என்று வெற்று முழக்கங்கள் மட்டுமே இடுகின்றனர். ஒருவரும் சா (தீ) தியை ஒழிப்பதில் ஆர்வம் காட்டுவதில்லை.

தேவையான போது சாதியின் மூலம் மக்களைத் தூண்டி வாக்கு வங்கிக்காக மட்டுமே பயன்படுத்தி வருகின்றனர்.

அப்துல் ரகுமான் நம் நாட்டில் நடைபெறும் தேர்தல் முறையைப் பற்றி படைத்த கவிதையும் இங்கு ஒப்பு நோக்கலாம்.

"புறத்திணைச் சுயம் வர மண்டபத்தில்
போலி நளன்களின் கூட்டம்
கையில் மாலையுடன்
குருட்டுத் தமயந்தி" (பால் வீதி - ப 70)

என்று அரசியல்வாதிகளின் ஏமாற்றுத்தனத்தையும், மக்களின் ஏமாறக்கூடிய தன்மைகளையும் எள்ளுகிறார்.

### வேலையற்ற நிலை :

நம் நாட்டில் இருக்கின்ற சமூக அவலங்களில் வேலையற்ற நிலையும் ஒன்றாகும். படித்து பட்டம் பெற்ற ரெம்பாலோனர்க்கு வேலை என்பது எட்டாக்கனியாகவே உள்ளது. இத்தகைய இளைஞர்களுக்காக அரசும் பல்வேறு திட்டங்களைத் தீட்டிச் செய்பாட்டிற்குக் கொண்டு வர முனைகிறது. ஆனால் திட்டம் தீட்டியதில் தொடங்கி தேவையானவர்களுக்கு வந்து சேருவதற்குள் இடைப்பட்டவர்களால் சுரண்டப்பட்டு இறுதியில் வந்தடைவது கால் பகுதியே இப்படிப்பட்ட நடப்பியல் நிகழ்வையும் கவிஞர் சித்தரித்துள்ளார் பின்வருமாறு

"பட்டங்களைப் பெற்றும்
பணியேதும் கிடைக்காமல்
பட்டங்களை கிழித்துப்
பட்டங்களாய்க் காற்றில்
விட்டுக் கொண்டிருக்கின்ற
வேலையற்றோர் பட்டாளம்
கோடியையும் தாண்டிக்
கொடி நாட்டி வருகிறது" (ப-103)

### பெண்ணடிமை :

நம் ஆணாதிக்க சமூகம் நிகழ்த்திக் கொண்டிருக்கிற அவலங்களில் குறிப்பிடத்தகுந்தது பெண்ணடிமைத் தனமாகும். ஆணும் பெண்ணும் வேலைக்குப் போனாலும் வேலை முடித்து வீடு திரும்பியவுடன் ஆண்கள் ஓய்வு எடுப்பதும் பெண்கள் வீட்டு வேலைகளைக் கவனிப்பதும் நடைமுறை சார்ந்த மரபு ரீதியான அடக்குமறையாகும். உடல் மன ரீதியாகப் பெண்கள் ஒடுக்கத்திற்கு உள்ளாக்கி வருகிறது நம் ஆணாதிக்க சமூகம்.

"மேட்டுக்குடியின் மனிதனும்
கைநாட்டுக் குடியனும்- தன்
மனைவியிடம் மிருகமாகும்
வகையில் ஓரினம்!
மீசையுள்ள காரணத்தால்
ஆண் அடிக்கலாம் - அவன்
மீதிலுள்ள அச்சத்தினால்
பெண் பொறுக்கலாம்" (ப.523)

இனப்பாகுபாட்டால் பிளவுபட்ட சமூகமாக இருந்தாலும் பெண்களை ஒடுக்குமுறைக்கு உட்படுத்துவதில் ஒன்றுபட்டு நிற்கின்றனர் என்கிறார் கவிஞர். "தினந்தோறும் குடித்துவிட்டு துன்புறுத்திய

கணவனின் கொடுமை தாழாமல் அவனை சேதப்படுத்திவிட்டு காவல் நிலையத்தில் சரணடைந்தாள் பெண்ணொருத்தி" என்ற நாளிதழின் செய்தியின் வெளிப்பாடே மேலே கூறிய கவிதைக்கு கருப்பொருளாய் அமைந்து என்கிறார் கவிஞர்.

ஊடகங்கள் :

"தகவல் தொடர்புச் சாதனமே தகவலாகிறது" எனும் மார்சல் மக்லூகனின் கூற்றை மெய்ப்பிக்கும் வகையில் ஊடகங்கள் மக்களின் வாழ்க்கையில் நீக்கமற நிறந்து அவர்களைத் தன்வயப்படுத்தியுள்ளது. இத்தகைய ஊடகங்களானது சமூகம் நல்முறையில் இயங்குவதற்குத் தேவையான தகவல்களைப் பெரும்பாலும் வழங்குவதில்லை.

ஊடகங்கள் மக்களிடையே பாலியல் வக்கிரங்களைத் தூண்டக்கூடிய வகையில் நிகழச்சிகளை வழங்குவதிலும் பன்முறைக் கலாச்சாரத்தை தினிக்கும் வகையிலும் செயல்பட்டு வருகின்றன. இத்தகைய நடைமுறை சார்ந்த நிகழ்வுகளையும் கவிஞர் தனது சொற்சித்திரத்தில் வடித்துள்ளார்.

"தெருவிலே தொழிலாளி
தேம்பித் தவிக்கையிலே
திரையிலே வரவில்லை அவன்கதை - ஆனால்
*ஜேம்ஸ்பாண்டும் செக்சுமே தமிழ்க்கதை*" (ப.8)
"கஞ்சியல்லாதவன்
கதை நூறிருக்கையில்
பிஞ்சினில் பழுத்திட்ட காதலை - எழுதிப்
பிழைப்பதேன்" (ப-9)
"கொங்கையோடு பெண்கள் பிறந்ததே
கூச வைக்கிற குமுத ஏடுகளின்
அட்டைப்படங்களுக்குத் தானோ" ப.123

என்று ஊடகங்களின் உள்ளீட்டுப் பரிமாணங்களை கவிஞர் வெளிப்படுத்துகிறார்.

முடிவுரை :

இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய இலக்கிய இயக்கங்களுள் குறிப்பிடத்தக்கது. நடப்பியலாகும். மன்னர்களையும் உயர்ந்தோர்களையும் இலக்கியங்களின் நாயகர்களாகப் பாவித்தைக் கட்டவிழ்த்து நடுத்தர வர்க்கத்தினரையும் எளியோரையும் இலக்கியங்களின் நாயகர்களாகக் கட்டமைத்த பெருமை நடப்பியல் இயக்கத்தைச் சார்ந்ததாகும். கற்பனாவாதத்திலிருந்து படைப்பாளர்களை எதார்த்தவாதத்திற்கு மீட்டுக் கொணர்ந்தது நடப்பியலே ஆகும்.

தணிகைச் செல்வனின் கவிதைகளின் கருப்பொருளாகப் பெரும்பாலும் அமைந்திருப்பது நடைமுறை வாழ்வில் மக்கள் சந்தித்து வரும் பிரச்சனைகளே ஆகும்.

இன,மத, வேறுபாடுகள் பெண்பொடுமை வேலையின்மை, வறுமை, அரசியல் மற்றும் பிற சிக்கல்களும் கவிஞரின் பாடுபொருள்களாக அமைந்துள்ள. சமூகத்தில் நிகழ்ந்து வருகின்ற சமூக அவலங்களைத் தனது கவிதைகளில் வெளிப்படுத்தியுள்ளார் தணிக்கை செல்வன். இவை அனைத்தும் நட்ப்பியல் சார்ந்த பெளிப்பாடுகளாகும்.

# டி. குலசேகர் சிறுகதையில் நடப்பியல்

***மதுகேசுவரன்***, முனைவர்பட்ட ஆய்வாளர்,
சென்னைப் பல்கலைக்கழகம்.

## தொடக்கம்

மனித வாழ்க்கையில் விளைகிற மாற்றங்கள் இலக்கியத்தில் இடம்பெறுவது இயல்வு, ஏனெனில் இலக்கியம் மனித வாழ்வோடு நெருங்கிய உறவுடையது, இத்தன்மையில் இன்று மிகுதியாகப் படைக்கப்பெறும் புதினம், சிறுகதை, புதுக்கவிதை போன்றவற்றில் நிறைய மாற்றங்கள் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. குறிப்பாக, நடப்பியல் சார்ந்த நிகழ்வுகளாக அவை காணப்படுகின்றன. இவற்றைக் காட்டும் வகையில் தூத்துக்குடியைச் சார்ந்த டி.குலசேகர் படைத்தளித்த மனதில் ஒரு பிரார்த்தனை என்ற சிறுகதை இவ்வாய்வுக் கட்டுரைக்கு மூலமாக எடுத்துக்கொள்ளப்படுகிறது.

## நடப்பியல் (Realism)

எழுத்து என்னும் சிறுபத்திரிகையே முதன்முதலில் Realism என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையான நடப்பியல் என்னும் கலைச்சொல்லை உருவாக்கியது. சி.சு.செல்லப்பா அவர்கள் தமிழிலக்கிய விமரிசனம் என்னும் நூலில் கு.ப.ரா அவர்கள் Realism என்ற சொல்லிற்குப் பிரத்திய சித்திரம் என்று மொழியாக்கம் செய்துள்ளதைக் கூறுகிறார். இவைபோன்று பல முயற்சிகள் இவ்வியக்கம் உருவானபோது எழுந்தன. இன்று நடப்பியல் என்ற சொல்லே வழக்கில் உள்ளது. நடப்பியல் பற்றிய சிந்தனை இந்தியாவில் வங்கத்தில் "பக்கிம் சந்திர சாட்டர்ஜி" மூலமும் தமிழகத்தில் வேதநாயகம் பிள்ளை மூலமும் பரவியது. நாவல்களில் மட்டுமின்றி இது பிற்காலத்தில் சிறுகதைகளிலும்முகிழ்த்தது. மணிக்கொடி காலகட்ட சிறுகதைகளை இதற்குச் சான்றாகளாகக் கூறலாம். நடப்பியல் என்பது உள்ளதை உள்ளபடியே புனைவுகள் இன்றிக் கூறுவது. இதில் அழகியல் வருணனைகள் கையாளப்படுவதில்லை. இது பற்றி சி.கனகசபாபதி அவர்கள் நடப்பியல் என்பது இயல்பான நிலமைகளுடன் சராசரி பாத்திரங்களையும் சாதாரணப் பின்புலங்களையும் படைத்துத் தருகிற ஒரு கொள்கை அல்லது உத்தியாகும் (பாரதி பாரதிதாசன் கவிதை மதிப்பீடு 122,123) என்கிறார்.

## நடப்பியல் ஆய்வு

நடப்பியல் ஆய்வு இருவகைகளில் நிகழ்த்தப்பெறுகிறது. ஒன்று ஒரு நாவல் அல்லது சிறுகதை போன்றவற்றுள் நடப்பியல் எவ்வாறு இடம்பெற்றுள்ளது என்பது இரண்டு நடப்பியலாக உருவாக்கப்பட்டள்ள நாவல் அல்லது சிறுகதையை ஆராய்வது. இந்த இருவகை ஆய்வுகளில் மேலே குறிப்பிட்டுள்ள டி.குலசேகரின் சிறுகதை இரண்டாவது வகையில் வருகிறது. அதனைமுறையாகக் கீழே காணலாம்.

## மனதில் ஒரு பிரார்த்தனை -கதை சுருக்கம்

உப்பளத்தில் வேலை பார்க்கும் உலகம்மா, செல்லத்துரை இவர்களின் மகள் மேகலா, கைக்குழந்தை இப்பாத்திரங்களைச் சுற்றிக் கதை அமைகிறது. உலகம்மா செருப்பு வாங்கச் சிறுகச்சிறுகப் பணம் சேமிக்கிறாள். அந்தப் பணத்தைக் குடிக்கக் கேட்கிறான். செல்லத்துரை. உலகம்மா பணம் தர மறுக்கிறாள். இதனால் கோபமடைந்த செல்லதுரை தன் கையில் சூடு போட்டுக்கொள்கிறான். செல்லத்துரையின் கையல் உள்ள தீக்காயம் ஆறவில்லை. இந்நிலையில் உலகம்மா மட்டும் வேலைக்குச் செல்கிறாள். மகளுக்குக் கோவில் பூசைக்காக உடை வாங்கித் தருவதாகச் சொல்கிறாள். அதற்குச் செருப்பு வாங்க வைத்திருந்த பணத்தைச் செலவிடுகிறாள். பூசையின் போது அனைவரும் மழை வேண்டிப் பிரார்த்திக்கிறார்கள். உலகம்மா மட்டும் மழை பெய்தால் வேலை இருக்காது பிறகு உணவுக்கு என்ன செய்வது என்று நினைத்து மழை பெய்யக்கூடாது என்று வேண்டுகிறாள். அவள் வேண்தல் புரியாது மேகலா விழிப்பதாகக் கதையை முடிக்கிறார் ஆசிரியர்.

## நடப்பியல் சித்தரிப்பு

மேற்குறிப்பிட்ட கதை உப்பளத்தில் வேலை செய்யும் குடும்பத்தின் நிலையை உண்மை நிலையில் நின்று விளக்குகிறது. இக்கதையில் நாம் காணும் மாந்தர்கள் அனைவரும் நடப்பியலுக்கு மாறுபடாதவர்கள் உப்பளத்தில் வேலை செய்யும் மக்கள். அவர்கள் வாழ்வை அப்படியே நேரில் காண்பதுபோல் நுணுக்கமாகப் பதிவுசெய்துள்ளார், ஆசிரியர். இதனைப் பின்வரும் சான்றுகள் வழி அறியலாம்.

### உப்பளத்தொழில்

செல்லத்துரை, உலகம்மா இருவர் வழி உப்பெடுக்கும் முறையை அப்படியே நம் கண்முன் கொண்டு வருகிறார். ஆசிரியர், "ஆண்பாத்தியில் மீட்டர் வைத்துப் பதம் பார்த்தான். இருபது டிகிரி கச்சிதமாயிருந்தது. மணப்பெண்ணாய்ப் பக்குவத்திலிருந்து பெண்பாத்தி. உலகம்மாவிடம் ஆண் பாத்தியிலிருந்து பெண்பாத்திக்குப் பதமாகியிருந்த தண்ணீரைத் திறந்துவிடச் சொல்லிச் சத்தம் கொடுத்தான் (வானம்பாடி 36) என்கிறார் இன்னொரு பக்கம் பெண்பாத்தியிலுள்ள உப்புமணிகளை ஒரு தாத்தா வாரிப்போடச் சிறுவர்கள் ஓலைக்கூடையில் சுமந்து வந்து தகர செட்டிற்குள் குவித்ததாகவும் குவித்த உப்பை லாரி புழுதியோடு புகையைச் சேர்த்துவிட்டு அள்ளிச் சென்றதாகவும் உப்பெடுக்கும் காட்சியைப் படம்பிடித்துக் காட்டுகிறார். மேலும் மழை நாளில் உப்பளவேலை நடக்காது. அப்போதுதான் உப்பு இருப்பில் வைக்கப்பட்டு விலை உயர்ந்து நல்ல லாபம் கிடைக்கும் என்கிறரர்.

உப்பளத்தில் வேலை செய்வதால் உண்டாகும் துன்பங்களையும் அம்மக்கள் நிலையில் நின்று சுட்டிக்காட்டுகிறார். உப்பளத்தில் வேலை செய்யும்போது பாதங்களில் உப்புநீர் கோர்த்துக்கொள்வதையும் உப்புக்கற்கள் பாதத்தில் குறிபார்த்துப் பதிவதையும் உண்மையான வலியுடன் புலப்படுத்துகிறார். வெய்யிலானது உப்பில் பட்டுத் தெறிக்கும்போது கண்கள் கூசும். இதற்காக வேலைசெய்வோர் கருப்புக் கண்ணாடி அணிவது வழக்கம். ஆனால் அக்கண்ணாடி சிலருக்கு மட்டுமே அளிக்கப்பட்டிருப்பதை இக்கதையில் குறிப்பிடுகிறார். வேலை செய்யும்போது எவ்வளவு நீர் குடித்தாலும் அடங்காத தாகம் ஏற்படுவதையும் சுட்டிக்காட்டுகிறார்.

### உப்பள வாழ்க்கை

உப்பளத்தில் வேலை செய்வோரது வாழ்க்கை நிலைக்கு உலகம்மா, செல்லத்துரை என்ற இணையரின் வாழ்நிலையை இக்கதை நமக்குப் புலப்படுத்துகிறது. இதன்வழி குடும்பத்தில் இருவர் வேலை செய்தாலும் பணப்பற்றாக்குறை ஏற்படுவதை நாம் உணரமுடிகிறது.வேலை செய்யும் இடத்தில் பிறரால் உண்டாகும் சிக்கல் கங்காணி என்ற பாத்திரம் வழி வெளிப்படுகிறது. கங்காணியின் வேலை உப்பளத்தில் வேலை செய்ய ஆட்களை அமைப்பது. இவனைப் பகைத்துக்கொண்டால் அடுத்த சில நாட்களுக்கு வேலை கிடைக்காது. இவனைப் போன்ற ஆட்கள் என்ன சொன்னாலும் பொறுத்துக்கொள்ள வேண்டிய ஒரு நிலை சமூகத்தில் இருப்பதை நாம் உணரலாம்.

உப்பளத் தொழிலாளர்கள் நலனைக் கவனிக்கச் சங்கம் அமைக்கப்பட்டிருக்கிறது. அதனால் எவ்விதப் பயனும் இல்லை என்பதைச் செல்லத்துரையின் வாயிலாக ஆசிரியர் பின்வருமாறு விளக்குகிறார். என்னத்த சங்கம் நடத்துறானவ. இதைக் கேக்கறதுக்கு ஒரு நாதியில்லை... சாதிக்கொரு சங்கம் கட்சிக்கொரு சங்கம்னு வச்சிக்கிட்டு இவனுவ போடற சண்டையெ தடுக்கறதே பெரும்பாடு... இதுலநமக்கு வந்து பேசுவாகளா? எப்பவோ முன்னவொருத்தன் கேட்டிருந்திருக்கான். லாபத்துல சதவீத அடிப்படையில சம்பள உயர்வு, மருத்துவ வசதி, சூலி பொம்பளையளுக்கு பிரசவமானதும் மூனுமாசம் சம்பளத்தோட லீவு. குடியிருக்க வசதி போனஸ்னு கேட்டவன் போய்ச்சேந்துட்டான். ஹூம் இப்ப என்னடானா வருஷத்துக்கு முப்பது பைசா சம்பளம் ஏத்துதாம்யா? பாரு கேக்றாங்க..? அடகு வைக்கறதுக்குக் கூட வேற பாத்ர பண்டம் எதுவுமல்லே.. (வானம்பாடி 42,43) இக்கருத்துகள் உப்பளத்தில் வேலை செய்வோரின் ஒட்டுமொத்த வாழ்நிலையைத் துல்லியமாக விளக்குகின்றன.

### கணவன் மனைவி உறவுநிலை

ஏழ்மை இருந்தபோதிலும் செல்லத்துரை, உலகம்மா வாழ்வில் சிறுசிறு இன்பங்கள் இல்லாமல் இல்லை இவற்றை அவர்களது உறவின்மூலம் புலப்படுத்துகிறார், ஆசிரியர். உப்பளத்தில் வேர்வை சிந்த உழைக்கிறான், செல்லத்துரை. அவனது தோற்றத்தைக் கண்டவுடன் உலகம்மாவும் தன் உடல் வலிகளை மறந்து மகிழ்வுற்றுச் சுறுசுறுப்பாகிறாள். இந்த அளவிற்கு அவர்கள் உறவின் இன்பம் பதிவுசெய்யப்பட்டிருக்கிறது. இதுபோன்றே தான் குடிக்கப் பணம் கேட்டு மனைவி தராத காரணத்தால் சூடு போட்டுக்கொள்ளும் செல்லத்துரையின் நிலையையும் கூறலாம். தீக்காயம் பட்டவுடன் உலகம்மா துடிதுடித்துக் கணவனை மடியில் படுக்கவைத்துக் கோழி இறகில் தோய்ந்த எண்ணெயைத் தடவுகிறாள். சாப்பாடு ஊட்டிவிடுகிறாள். அப்போது செல்லத்துரை "சூடு போட்டுகிறதுல இத்தினி சுகமிருக்கா...? என்று சிரிக்கிறான். இவையெல்லாம் இயல்பாக நிகழக்கூடிய சின்னச்சின்ன சந்தோஷங்கள், அதேநேரத்தில் குடும்பத்தில் சின்னச்சின்ன சண்டைகள் உருவாவதும் இயல்பு, இதனையும் ஆசிரியர் குறிப்பிட்டிருக்கிறார். குடிப்பதற்குப்

பணம் கேட்டுத் தராத நிலையில் ஒரு முறை செல்லத்துரை மனைவியை அடிப்பதை இதற்குச் சான்று காட்டலாம். இதன்மூலம் இன்பமும் துன்பமும் நிறைந்தது வாழ்க்கை என்பதும் அதனைத் தம் கதையில் ஆசிரியர் சரிவர எடுத்துக்காட்டியிருப்பது நடப்பியல் சிந்தனையை விட்டு விலகாது செல்கிறார் என்பது அறிவுறுத்துகிறது.

## குழந்தை மனநிலை

குழந்தை மனநிலைக்கு மணிமேகலா என்ற பாத்திரத்தைப் படைத்தளித்திருக்கிறார் ஆசிரியர். இப்பாத்திரத்திற்கு எட்டு வயது ஆகிறது என்று அறிமுகப்படுத்துகிறார். இப்பாத்திரம் தன் தம்பியைப் பார்த்துக்கொள்வதற்காகப் பள்ளிப்படிப்பைப் பாதியிலேயே முடித்துக்கொள்கிறது. காரணம் தன் தம்பியே இப்பாத்திரத்திற்கு உலகமாகிப் போகிறது. இருந்தாலும் சிறு வயதிற்கே உரிய அதன் ஏக்கங்களும் கனவுகளும் கதையில் இயல்பாக அமைக்கப்பட்டிருக்கின்றன.

வெய்யில் மிகுந்த தார் ரோட்டில் நடக்கும் மேகலாவின் பாதம் பழுத்துக்கொள்கிறது. இந்நிலையில் "நாச்சியம்மா.. என் ஆத்தாதான் செருப்பு வாங்கித் தரமாட்டேங்குது.. நீயும் இப்படிச் செய்யலாமா? பாத்தியா.. காலெல்லாம் கொழுக்கட்டையாட்டம் புஷ்கனு வீங்கிப்போயிருக்குதே.. கொதிச்சகாலு குளூர்றாபப்ல கொஞ்சம் வானத்தே பொத்துக்கிட்டு ஊத்தசொல்லக் கூடாதா? சாமியோவ்.. ஏன் வானத்துக்கு மேலேபோயி தூரமா இருக்கிய.. அதான் நான் பேசறது கேக்கவே மாட்டேங்குது" (வானம்பாடி 45) என்று மேகலா பேசும் வார்த்தைகள் குழந்தைத்தனத்திற்கே உரிய ஒன்றாக நம் கண்முன் விரிகிறது. இதுபோன்றே கடவுளிடம் ஆளாளுக்கு ஒன்று வேண்டிக்கொள்ள மேகலா, "தாயே.. நாச்சியம்மா.. என் தம்பிக்கும் ஒரு கோடிச்சட்டை எடுக்கிறதுக்கு நீதான் கருணை காட்டனும்" (வானம்பாடி 48) என்று கேட்கும் நிலையையும் எடுத்துக்காட்டலாம். இவையெல்லாம் அவளின் நான்கு அல்லது ஐந்து வயதில் நடந்த நிகழ்வாக ஆசிரியர் காட்டுகிறார். இவை இக்கதையைப் படிக்கும் ஒவ்வொருவரின் சிறு வயது நிகழ்வுகளை நினைவூட்டுகின்றன.

செடிகொடிகளின் வளர்ச்சியைக் கவனிப்பது அவற்றிற்குத் தண்ணீர் விடுவதும் என்றுமே அலுக்காத சந்தோஷங்கள். இப்படிப்பட்ட ஒரு மகிழ்ச்சி மேகலாவின் மனதில் பசுமையாகப் பதிந்த ஒன்றாகஇருப்பதையும் எடுத்துக்காட்டுகிறார் ஆசிரியர். வீட்டின் கூரை இற்றுப்போனாலும் குழந்தையின் மனம் என்றும் புதுமையானது. கூரையில் செருகி வைத்துள்ள தீப்பெட்டிகளை இழுக்கும்போது கூரை உதிர்ந்து வானம் தெரிகிறது. அதனைப் பார்க்கும் மேகலாவிற்கு மழை வரும் நாளில் கூரை இடுக்கில் தகர டப்பா வைத்துத் தண்ணீர் பிடித்ததும் அதனால் ஏற்பட்ட ஓசையை ரசித்ததும் மழை நீரை வாயில் பிடித்துச் சப்புக்கொட்டியதும் வரிசையாக நினைவுக்கு வருகின்றன. இப்படி அனைத்து நிலைகளிலும் குழந்தைத்தனத்தோடு ஒன்றிப்போகும்படி மேகலா பாத்திரத்தை இயல்பாக அமைத்துள்ளார், ஆசிரியர்.

## முடிப்பு

எந்த ஒரு திறனாய்வாளனும் ஏதாவது ஒரு திறனாய்வினை மட்டும் கைக்கொண்டு வெற்றிபெற்று விடமுடியாது (தமிழிலக்கியத் திறனாய்வு 16) என்பதற்கேற்ப மனதில் ஒரு பிரார்த்தனை என்ற சிறுகதையில் பல்வேறு பண்புகள் நிறைந்திருந்தபோதிலும் நடப்பியல் என்ற நிலையில் மட்டுமே இக்கதை ஆராயப்பட்டது. இதன்வழி இச்சிறுகதையில் இடம்பெற்ற மாந்தர்கள் நடப்பியலிருந்து மாறுபடாமல் படைக்கப்பட்டுள்ளனர் என்பதும் அவர்களுடையபிரச்சனைகள்நடப்பியலுக்கு உட்பட்டவையே என்பது மேலே எடுத்துக்காட்டப்பட்டன. சித்தரிப்பாளர் என்பதை உறுதிபடுத்துகிறது.

## பயன்பட்ட நூல்கள்


1. தமிழிலக்கியத் திறனாய்வு வரலாறு க.பஞ்சாங்கம் அகரம் வெளியீடு, சரவணா காம்ப்பளக்ஸ், கும்பகோணம் 1996
2. பாரதி பாரதிதாசன் கவிதை மதிப்பீடு, சி. கனகசபாபதி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1988
3. வானம்பாடி, டி.குலசேகர், அன்னம் (பி)லிட், 2 சிவன் கோயில் தெற்குத் தெரு, சிவகங்கை1995.

# துணுக்கு இலக்கியத்தில் நடப்பியல்

*க. மாரிமுத்து,* தேர்வுநிலை விரிவுரையாளர் - தமிழ்த்துறை,
அருள்மிகு பழனியாண்டவர் ஆண்கள் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி, பழனி.

கணிப்பொறி யுகமிது, காலவேகத்திற்கு ஈடுகொடுக்கும் வகையில் இலக்கியங்கள் உருமாறிக் கொள்கின்றன. அவை, சங்கத் தனிப்பாடல்கள், காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள், மீண்டும் தனிப்பாடல்கள், புதினங்கள், சிறுகதைகள், குறுநாடகங்கள், நாடகங்கள், ஒரு பக்கக் கதைகள், நொடிக்கதைகள் எனப் பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து வந்துள்ளன. இன்று "துணுக்கு" - எனப் பெயர் தாங்கி அனைத்து வார, மாத இதழ்களையும் ஆக்கிரமிப்புச் செய்து அனைவரையும் ஈர்த்து ஒரு புதுவகை இலக்கியமாகி, வளர்ந்து வருகின்றது.

அவசர யுகத்திற்கேற்ற வகையில் சொல்ல வேண்டிய கருத்தைக் காவியமாய், புதினமாய் நீட்டி முழக்கிக் கால விரயம் செய்யாமல் காலமீதம் செய்யும் துணுக்குகளை வெளியிடுவதில் ஆனந்தவிகடனும், குமுதமும் முன்வரிசையில் நிற்கின்றன. சுருக்கமாக நகைச்சுவை கலந்த கிண்டல், கேலி, நையாண்டியுடன் அவை வெளிவருகின்றன. சமகால நிகழ்வுகள் வெகு இயல்பாக நடப்பியல் தன்மையோடு துணுக்குகளில் பேசப்படுகின்றன. சலிப்புற்ற மனங்களுக்கு, சலிப்பும் நோயும் விட்டுப்போக வாய்விட்டுச் சிரிக்கும் வாய்ப்புக் கொடுப்பவை துணுக்குகள். எல்லோரையும் இன்புற்றிருக்க வைக்கும் துணுக்குகளை உ. ராஜாஜி, சாரதி டேச்சு, படுதலம் சுகுமாரன், ஆர்.கே. அனுசுபா, எம். பூங்கோதை, வே. சாமிநாதன், கீழை அ. கதிர்வேல், தஞ்சை தாமு, பாஸ்கி போன்றோர் எழுதுகின்றனர். அரசியல், அலுவலகம், காதலர்கள், கணவன் - மனைவி உறவு, மாமியார் மருமகள் சண்டை, மெகா சீரியல், திருடர்கள் தீரம், பிச்சைக்கரர்கள் பணக்காரத்தனம், சாமியார்களின் லீலைகள் போன்ற பல பிரிவுகளில் துணுக்குகள் வருகின்றன. அவற்றில், பெரும்பாலும் கணவன்மார்கள் சமையல் செய்கிறார்கள், துணி துவைக்கிறார்கள், மனைவிக்கு அடங்கிப் போகிறார்கள், அரசு அலுவலகங்களில் அலுவலர்கள் அநியாயத்துக்குத் தூங்குகிறார்கள், அரசியல்வாதிகளின் அட்டகாசங்கள் தோலுரித்துக் காட்டப்படுகின்றன, மெகாசீரியல்கள் சிந்துபாத் கதைபோல் நீண்டு அழவைக்கின்றன, பொது அறிவு இல்லாத நடிகைகள் உளறோ உளறு என்று உளறுகிறார்கள்.

## அரசியல்

அரசியல் கீழ்களது ஆசாரம் - அதாவது அயோக்கியர்களின் கடைசிப் புகலிடம் என்பதை நமது அரசியல்வாதிகள் அன்றாடம் நிரூபித்துவருகின்றார்கள். அவர்கள் அடிக்கும் கொட்டங்களை நடப்பியல் தன்மையுடன் இயல்பாக, உயர்வு நவிற்சியின்றித் துணுக்குகள் படம் பிடித்துக் காட்டுகின்றன. ஆயிரம் பக்கங்களில் விரித்துப் புதினம் எழுதி, கோடிக்கணக்கில் செலவழித்துத் திரைப்படம் எடுத்து அரசியல்வாதிகளைக் கொடுமைக்காரர்களாய்ச் சித்திரிப்பதை, ஆரவாரமில்லாமல் ஓரிரு வரிகளில் துணுக்குகள் செய்து விடுகின்றன.

கட்சிகள் போட்டிபோட்டுக் கொண்டு வன்முறையைக் கட்டவிழ்த்து விடுகின்றன. ஒரு கட்சியின் கட்டுப்பாடு என்ன என்பதையும் அதனை மீறிய ஒரு கட்சித் தொண்டர் பெற்ற தண்டனையையும்,

" கட்சிக் கட்டுப்பாட்டை மீறியதற்காக என்னைக்
கட்சியை விட்டு நீக்கிட்டாங்க....!
என்ன மீறினிங்க.....?
போனவருஷம் பூரா ஒரு ரௌடித்தனம்கூட
நான் பண்ணலையாம்........!" (மீனாகுமாரி, ஆனந்த விகடன், 24.04.1988)

என்ற துணுக்கு எடுத்துக்காட்டுகிறது. அதிகாலையில் வாக்கிங் போகும்போது கொலையாதகம் புரிதல், மணல் கொள்ளையைத் தடுக்க வரும் வட்டாட்சியரை வாகனமேற்றிக் கொலை செய்தல், கல்லூரி மாணவர்களைப் பேருந்துக்குள் தீயிட்டுக் கொளுத்திக் கொல்லுதல், கள்ளச்சாராயம் காய்ச்சுதல், கற்பழித்தல் போன்றவற்றில் நமது அரசியல்வாதிகள் பலே ஆட்கள். அவர்கள் தாதாக்களையும், திருடர்களையும் நல்லவர்கள் ஈக்கிவிடுவார்கள் என்பதற்கு,

"அந்தக் கேடி ரொம்ப நல்லவன்னு எப்படிச் சொல்றே"
கடைசி வரைக்கும் அரசியலுக்கு வராமல் கொலை, கொள்ளை, கற்பழிப்புன்னே இருந்துட்டானே?!"
(வே.ஜே. அனுசுபா, ஆனந்தவிகடன், 22.09.1988)

என்ற துணுக்குச் சான்று பகருகின்றது எனலாம். அடிக்கடி வெளிநாட்டுக்குச் சென்றுவிட்டு வரும் பிரதமரையும் துணுக்கியலாளர்கள் விட்டுவைக்கவில்லை. அனைத்தையும் வெளிநாட்டில் வாங்கிவிட்டு இந்த ஓட்டை மட்டும் உள்நாட்டில்தான் வாங்க வேண்டியிருக்கிறதே என்று கவலை கொள்கிறார் பிரதமர் என்று நையாண்டி செய்கிறது ஒரு துணுக்கு. உச்சகட்டமாய்ப் பிரதமரின் பெயரையே சொல்லி,

“இன்டர்வியூல ரொம்ப கஷ்டமான
கேள்வி கேட்டுட்டாங்க .......
அப்படி என்ன கேள்வி?
இப்ப பிரதமர் வாஜ்பாய்
எந்த நாட்டுல இருக்கிறார்னு?” ( பாளை பசும்பொன், ஆனந்தவிகடன்,30.11.2003)

என்று கேலி பேசுகிறது மேற்கூறிய துணுக்கு. தமிழ்நாட்டுக்கு அவர் வருகை புரிவது கூட, தமிழ்நாட்டை வெளிநாடு என்று எண்ணித்தான் என்றும் நையாண்டி செய்கிறார்கள் துணுக்கு எழுத்தாளர்கள்.

## காதலர்கள்

இன்றைய காதல் வெறும் பொழுதுபோக்கு அம்சமாகிவிட்டது. காதலித்தவரையே திருமணம் செய்துகொள்ள வேண்டிய கட்டாயம் இல்லை.

“டார்லிங்! நம்ம காதல் ரகசியமா இருக்கணும்
எங்க வீட்டுக்குத் தெரிஞ்சா தொலைஞ்சோம்..”
ஏன்? பிரிச்சுடுவாங்களா?
ஐயோ! நமக்குக் கல்யாணம் பண்ணி வெச்சுருவாங்க !”

-தஞ்சை தாமு,ஆனந்த விகடன், 06.06.2004.

காதலிப்பது கல்யாணம் செய்துகொள்வதற்கு அல்ல என்பதை இத்துணுக்கு வெளிப்படுத்துகிறது. அப்படியே கல்யாணம் செய்து கொண்டாலும் அது வித்தியாசமான கல்யாணமாக அமையும் என்பதை,

“காதலித்தீர்கள்! கல்யாணம்
செய்ய முடிவெடுத்ததற்குச் சந்தோஷம்!
எப்போது கல்யாணம்?
எனக்கு இந்தவாரம்
அவளுக்கு அடுத்த வாரம்!”

என்ற துணுக்கு விளக்குகிறது.

“உனக்காக என் உயிரையே கொடுப்பேன் ரமா!
அதெல்லாம் ஒண்ணும் வேணாம்.....
நடக்கப்போற என் கல்யாணத்துல வந்து
கலாட்டா பண்ணாம இருந்தா போதும்!”
இப்படியும் சில காதலர்கள் இருக்கிறார்கள்.
“ரம்யா, நம் கல்யாணத்துக்கு என் பெற்றோர் சம்மதிக்கல
அவர்கள மீறி என்னால ஒண்ணும் செய்ய முடியாது
இப்படித் தத்துபித்துனு உளறுவன்னு தெரிஞ்சுதான்
ஸ்பேர்ல ஒருத்தரக் காதலிச்சு வைச்சிருக்கேன்” -

என்னே புதுமையான காதல். இயந்திரங்களுக்கு ஸ்பேர் பார்ட்ஸ் கிடைப்பது போல் காதலுக்கும் “ஸ்பேர் பார்ட்ஸ் கிடைப்பது ஆச்சரியம்தான்.

“வெண்ணிலவைத் தோழியாக்கவா?
விண்மீன்களை நகைகளாக்கவா?
இமயமலையை இழுத்து வரவா?
பசுபிக் கடலைப் பணியாளாக்கவா?”

என்றான்.

“போனவாரம் ரெண்டு தங்க வளையல் கேட்டேன்
இன்று வரை ஆளைக் காணோம்”

வெட்டிச் சவடால் பேசி இப்படி வசமாய் மாட்டிக்கொள்பவர்களும் உண்டு. இப்படிக் இன்றைய காதலின் பல முகங்களைத் துணுக்கு இலக்கியகாரர்கள் வெளிக்கொணர்ந்துள்ளனர்.

**கணவர்கள்**

காதலர்கள் தாம் இப்படி என்றால் கணவன் மனைவியர் துணுக்குகளில் மாட்டிக்கொண்டு படாதபாடு படுகிறார்கள். கணவர்கள் மனைவிக்குப் பயப்படுவதை - அடிபடுவதை பல துணுக்குகள் குறிப்பிடுகின்றன.

"அம்மா அடிச்சா அழக்கூடாது கண்ணா!
சரிப்பா..... இனிமே உன்னை மாதிரியே சமர்த்தா இருக்கேன்!"( குங்குமம்,17.01.2005.)

என்று தன் அனுபவத்தைக் கொண்டு அறிவுரை வழங்குகிறார் ஒரு கணவர். ஒரு கணவரின் வீரத்தை, "என் மனைவியின் சொல்லை நான் கேட்கவே மாட்டேன்

"பரவாயில்லையே நல்ல தைரியசாலிதான் நீங்கள்! எப்படி?
அவ வெண்டக்காக் குழம்பு வைக்கச் சொன்னா
நான் முருங்கக்கா குழம்பு வைப்பேன்... பயப்படவே மாட்டேன்"

என்றொரு துணுக்கு பேசுகிறது. ஒரு கணவனின் இரண்டாவது முகத்தை,

"கமலாவின் தோழியே
உன்னைக் காதலிக்க ஆசை!
இப்படிக்குக்
கமலாவின் கணவன்"...( நடிகர் விவேக்)

என்று துணுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. கணவன் எல்லை தாண்டும் போது காதைத்திருகும் மனைவியர் கண்டிப்பாகத் தேவை என்பதையும் உணர வைக்கிறது விவேக்கின் துணுக்கு.

"என் மாமனாரோட பக்குவம் இன்னும்
என் கணவருக்கு வரலை.....
எதை வச்சுச் சொல்ற?
சமையலை வைச்சுத்தான்" (சாரதி டேச்சு, ஆனந்த விகடன்,27.06.2004.)

என்று ஒரு மனைவி குறைபட்டுக் கொள்கிறாள். இன்னொரு பெண்ணுக்கு,

"ரொம்பவும் அடக்கமான பொண்ணுங்க அது
உங்க பையன் சமைச்சுப் போடறதைக்
குறை சொல்லாம அப்படியே உட்கார்ந்து சாப்பிடும்!"

என்று தாய் சான்றிதழ்நட் தருவதைப் பாருங்கள். ஒரு மனைவி,

"ஆபிஸ்லயும் வேலை செஞ்சுட்டு வீட்லயும் வேலை செய்யறது கஷ்டமாத்தான் இருக்கு.... இருந்தாலும் என்ன செய்யறது.... என்னடி சொல்றே? நீதான் வேலைக்குப் போவதில்லையே .... ! என்னைச் சொல்லலை....! என் கணவரைச் சொல்றேன்" ( மேல்மங்கலம்பத்ரா, ஆனந்தவிகடன், 04.04.1988.)

என்று கணவனுக்காகப் பச்சாதப்படுகிறாள். எப்படிச் சுற்றி வந்து பார்த்தாலும் கணவர்கள் வீட்டு வேலை செய்வதிலிருந்து மீளவே முடிவதில்லை. இத்தகைய கொடுமைக்குப் பயந்துதான் அவர்கள் கவனம் வேலைக்காரி பக்கம் திரும்பி விடுகிறது போலும். பல துணுக்குகள் வீட்டுக்காரர் வேலைக்காரி உறவைப் பலவாறு பேசுகின்றன.

"எவ்வளவு செலவு ஆனாலும் பராவாயில்லை. எப்படியாவது
இவளைக் காப்பாத்திடுங்க டாக்டர்"
மனைவி மேல இவ்வளவு பிரியமா? ஆச்சரியமா இருக்கே
உளறாதீங்க டாக்டர் .... இது எங்க வீட்டு வேலைக்காரி"

(எஸ். எஸ். பூங்கதிர்,ஆனந்தவிகடன்,11.07.2004.)

"நான் என்மனைவியை வேலைக்காரி மாதிரி நடத்துவேன்!
ஓ! அவ்வளவு அந்நியோன்யமா?" (பா. ஜெயக்குமார், ஆனந்த விகடன் , 29.08.2004.)

மனைவி : வேலை செய்திட்டிருக்கும் போது இப்படி இடுப்பக் கிள்ளாதீங்கன்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்.

வேலைக்காரி : நல்லாச் சொல்லுங்கம்மா எத்தனை தடவை சொன்னாலும் கேட்கமாட்டேங்கறாரு"

இந்த வீட்டுல,

ஒண்ணு உங்க அம்மா இருக்கணும்
இல்ல நான் இருக்கணும்
நீங்க ரெண்டு பேரும் இருக்க வேணாம்
வேலைக்காரி இருக்கட்டும்!"

இவை மிகைப்படுத்தின கூற்றுக்கள் இல்லை. ஏனெனில் வேலைக்காரிகள் வீட்டுக்காரிகள் ஆன கதைகள் பல உண்டு.

### பிச்சைக்காரர்கள்

பிச்சைக்காரர்களின் பணக்காரத்தனம் பல துணுக்குகளில் வெளிப்படுகின்றன.

"ஐயா.... கரண்ட் வசதி இல்லாத் இந்த
ஏழைக்குத் தர்மம் பண்ணுங்கய்யா.....
என்னோட செல்போன ஒரு மணிநேரம்
சார்ஜ் போட்டுக் கொடுங்க தர்மவானே" (குங்குமம், 17.01.2005)

என்று பிச்சைக்காரர்கள் செல்போன் வசதியோடு செல்வாக்காகத் தெருவில் அலைகிறார்கள். ஒரு பிச்சைக்காரர் தன்னுடைய எட்டுச் சவரண் தங்கத் திருவோட்டுக்கு இரண்டு பாதுகாவலர்கள் போட்டுக் கொண்டு பிச்சை எடுக்கிறார்.

"இந்த வருஷம் இதுக்கு மேலே பிச்சை எடுக்கப் போறதில்லை... !

ஏதாச்சும் போலீஸ் தொந்தரவா?!

சேச்சே! இந்த வருஷம் வருமானவரி அதிகமாகக் கட்ட வேண்டி வரும்னு ஆடிட்டர் சொல்றாரு..."

(சிந்தை ஏ. ரகு,ஆனந்த விகடன்,22.05.1988.)

என்று பேசுகிறார் ஒரு பிச்சைக்காரர். ஒருவர் தனக்கு அஞ்சு வருஷம் பிச்சை போட்டதற்கு நன்றிக்கடனா தன்னுடைய தியேட்டர்ல புதுப்படம் பார்க்கப் பால்கனி டிக்கெட்டை இனாமாகத் தந்துட்டுப் போறார். ஒரு பிச்சைக்காரர் தன் ஐம்பது ஆண்டுகாலப் பிச்சைக்கார வாழ்க்கையைப் பத்திரிக்கை அடித்து ஊரையெல்லாம் அழைத்துக் கொண்டாடுகிறார். துணுக்குகளில் வாழும் பணக்காரர்கள், உண்மையில் பிச்சைக்காரர்கள்தாம்.

### அலுவலகம்

அரசு அலுவலகங்களில் நடக்கும் காட்சிகளைத் துணுக்கு இலக்கியங்கள் உண்மையாகவே படம்பிடித்துக் காட்டுகின்றன.

"எங்க ஆபிஸ்ல ஆண்களுக்கும் பெண்களுக்கும்
தனித்தனி செக்ஸன்...
ஏன் இப்படி?
பின்னே ! எல்லாரும் ஒண்ணாவா தூங்கமுடியும்!
அலுவலகத்தில் நடக்கும் கூத்து இது,
ஆபிசுக்கு ஏன்யா லேட்டு?
தூங்கிட்டேன் சார்!
வீட்டிலே கூடவாய்யா தூங்கறா? -(ஏ.ஜி. வல்லபதாஸ், ஆனந்தவிகடன்,16.10.1988.)

எங்கும் நீக்கமறத் தூக்கம் போடுகிறவரை வைத்து என்ன செய்வது?.

"காலை மடிச்சுக்கிட்டே தூங்கினா
தூக்கம் வரமாட்டேங்குது டாக்டர்!
காலை நீட்டிக்கிட்டுத் தூங்க வேண்டியதுதானே
மேனேஜர் மீது கால் படுமே டாக்டர்" (குங்குமம், 17.01.2005.)

இந்தத் தூக்கக் கொடுமை மேனேஜருக்குத் தெரிந்தேதான் நடக்கும் போலும். ஒருவர் ஆபீசு முடிந்து திரும்புகையில் தூக்கக் கலக்கத்தில் அடுத்தவர் வீட்டின் கதவைத்தட்டுகிறாராம். ஒருவர் மதியச் சாப்பாட்டைச் சாப்பிடக்கூட எழுந்திருக்காமல் தூங்கிட்டாராம். இப்படி நிறையக் காட்சிகள் துணுக்குகளில் விரிகின்றன. இதே போல் மருத்துவர்கள், மெகாசீரியல்கள் என அனைத்து நடை4முறை நிகழ்வுகளையும், துணுக்குகள் விமர்சித்துப் பேசுகின்றன.

இவ்வாறு அவசர யுகத்தின் நிறைப்பிரசவமான துணுக்கு இலக்கியம் தொடாத துறையில்லை. தொட்ட துறைகளில் எல்லாம், இலக்கிய வகைகள் செய்யும் இலக்கியப்பணிகளைச் செய்யாமல் விட்டதில்லை.

# குழ. கதிரேசன் பாடல்களில் நடப்பியல் சிந்தனைகள்

*எம். முரளி,* முனைவர் பட்ட ஆய்வாளர் (தமிழ்),
அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (த), சிவகாசி.

## முன்னுரை

நவீன இலக்கிய வளர்ச்சியின் ஒரு கூறாக குழந்தை இலக்கியம் வளர்ந்து வருகின்றது. தமிழில் குழந்தை இலக்கிய முன்னோடிகளில் அழ. வள்ளியப்பா குறிப்பிடத்தக்கவர் ஆவார். அவரைத் தனக்கு வழிகாட்டியாகக் கொண்டு தமிழில் குழந்தைப் பாடல்களை கவிஞர் குழ. கதிரேசன் பாடியுள்ளார். இவருடைய பாடல்கள் குழந்தைகள் படிக்கும் வண்ணம் எளிமையாகவும், இனிமையாகவும், கருத்துள்ள பாடலாகவும் அமைந்துள்ளன. இக்கட்டுரை கவிஞர் குழ. கதிரேசன் பாடலில் அமைந்துள்ள நடப்பியல் சிந்தனைகளை ஆராய்வதாக அமைந்துள்ளது.

## நடப்பியல் விளக்கம்

நடப்பியலாவது, " வாழ்க்கைச் செய்திகளையும் நிகழ்ச்சிகளையும் உள்ளபடியே விளக்க வேண்டும்" என்று ஓவெல்ஸ் குறிப்பிட்டுள்ளார். நடப்பியல் அன்றாட வாழ்க்கையில் நிகழும் அனுபவங்களை உள்ளவாறு விளக்கிக் கூறுவதோடு இயற்கைத் தன்மையையும் வலியுறுத்துகின்றது எனலாம். மேலும் இந்நடப்பியல் மனிதனுக்கு வாழ்வில் ஏற்படும் சிக்கல்களை உணர்த்திக்காட்டுவதோடு சிலசமயங்களில் அதனைத்தர்பதற்குரிய தீர்வுகளையும் கூறுகின்றது.

## கல்வி

"கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர்"

என்று கல்வியின் சிறப்பினைப் பற்றி வள்ளுவர் எடுத்துரைத்துள்ளார். ஆனால் இன்னும் வறுமையின் காரணமாக கிராமப்புறங்களில் பெற்றோர்கள் சிறுகுழந்தைகளை வேலைக்கு அனுப்புகின்றனர். இத்தகைய அவலநிலையினை தவிர்க்கும் பொருட்டு கவிஞர்.

"இளமையிலே அறிவை அடகு
வைத்திவிட மாட்டோம்! நாங்கள்
கூலிக்கலைந்து வாழ்வை நாளும்
கெடுத்திட மாட்டோம்!"

என்று குழந்தை கூறுவதாகப் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது. மேலும் அடிப்படைக் கல்வியினை தாய்மொழியில் கற்பது சாலச் சிறந்தது என்பதை,

"தாய்மொழியில் கல்வியினைக்
கற்றிட வேண்டும்! அம்மா
வாய் குளிரப் பாடி நன்றாய்
மகிழ்ந்திட வேண்டும்!"

என்று குறிப்பிடுகின்றார். இதன் மூலம் குழந்தைகளின் எதிர்கால வாழ்வு சிறப்பாக அமைய அடிப்படைக் கல்வி அவசியம் என்றும் தாய்மொழி வாயிலாக கற்பிக்கப்பட வேண்டும் என்பதைக் குழ. கதிரேசன் வலியுறுத்தி உள்ளார் எனலாம்.

## சேமிப்பு :

மனிதன் வளமான வாழ்க்கை வாழ்வதற்கு பணம் இன்றியமையாதது ஆகும். "சிறுதுளி பெருவெள்ளம்" என்ற பொன்மொழிக் கிணங்க கவிஞர்,

சேமிக்க வேண்டும் - காசு/சேமிக்க வேண்டும்

சிக்கனமாயச் செலவு செய்து/சேமிக்க வேண்டும்
சிறுதுளிகள் சேர்ந்தொரு நாள்/பெருங்கடலாகும் - சிறு
சேமிப்புதான் நமது வாழ்வில்/பெருமுதலாகும்"

என்று குறிப்பிடுகின்றார். இன்றைய காலகட்டத்தில் தனியார் நிதி நிறுவனங்கள் அதிக வட்டி தருவதாகக்கூறி பொதுமக்களின் பணத்தை ஏமாற்றிவிடுகின்றனர். எனவே, நம்முடைய சேமிப்பு பாதுகாப்பாக இருப்பதற்குரிய வழிமுறைகளைக் கவிஞர்,

"கிடைக்கும் காசில் மிஞ்சியதை/உண்டியலில் பேடு - அதை
மறந்திடாமல் அஞ்சலக/வங்கியில் போடு"

என்ற பாடல் வழி குறிப்பிட்டுள்ளார். மேலும், எதிர்காலத் தலைமுறையினருக்கு குடிநீர், மின்சாரம், எரிசக்தி போன்ற வளங்கள் தங்கு தடையில்லாமல் கிடைக்க வேண்டுமானால் அவற்றை நாம் சிக்கனமாக பயன்படுத்த வேண்டும் என்ற வேண்டுகோளினை,

"குடிநீரும் குறைந்திங்கே/போனதனாலே - அதைக்
குடிக்க மட்டும் பயன்படுத்தப்/பழகிட வேண்டும்!
தேவைக்குத்தான் மின்சாரத்தை/எரித்திட வேண்டும்
எரிசக்தி வீணாவதை/மிச்சம் ஆக்குவோம் - நம்
எதிர்காலத் தலைமுறையின்/அச்சம் போக்குவோம்!"

என்ற பாடல் வழி புலப்படுத்தி உள்ளார்.

### நதி நீர் இணைப்பு :

மழைவளம் குறைந்த காரணத்தால் நாடு முழுவதும் தண்ணீர் பற்றாக்குறை நிலவுகிறது. இதனால் மக்கள் பலவித இன்னல்களுக்கு ஆளாகின்றனர். இதனை உணர்ந்த அரசாங்கம் கடலில் வீணாகும் நதிநீரை மக்களுக்குப் பயன்படும் வகையில், நாடு முழுவதும் உள்ள நதிகளை இணைக்கும் திட்டத்தைப் பற்றி பரிசீலனை செய்து வருகின்றது. இத்தகைய அருமையான திட்டத்தைப் பற்றி கவிஞர் குழ கதிரேசன்,

"கோபத்தில் ஓடும் நதிகளை எல்லாம்/கூட்டிநாம் வந்திடுவோம்! - நம்
நாட்டிற்கு அவைகள் நல்லதைச் செய்ய/நாளும் உழைத்திடுவோம்!
இந்திய நதிகள் எல்லோர்க்கும் பொதுவென/நீதியை வகுத்திடுவோம்! - எங்கும்
சுதந்திர ரயில்களாய் நதிகளை நாட்டினில்/உலவிட விட்டிடுவோம்!"

என்ற பாடல் வழி நாட்டுமக்கள் நலமுடன் வாழ நதிநீர் இணைப்பின் முக்கியத்துவத்தை வலியுறுத்தி உள்ளார்.

### போரினைத் தவிர்ப்போம் :

போருக்காக செலவிடும் பணத்தை மக்களின் வறுமையைத் தீர்க்கப் பயன்படுத்தலாம் என்பதை,

"நாட்டைக் காத்திட/ராணுவச் செலவு
கோடானு கோடி ஆகுது! உலகம்/போரை ஒழித்தால்/
ஏழுதலைமுறைக்கு/இதனால் வறுமை தீருது!"

என்ற பாடல் வழிப் புலப்படுத்தி உள்ளார்.

### சாலை விதிகளை மதித்தல் :

தற்காலத்தில் மக்கள் தொகை பெருக்கத்தின் காரணமாக சாலையில் போக்குவரத்து நெரிசல் ஏற்படுவதடன் விபத்துக்களும் நிகழ்கின்றன. எனவே, இதனைத் தடுக்க மக்கள் சாலைவிதிகளை மதித்து பின்பற்ற வேண்டும் என்பதை,

"நடைபாதை நமக்காக/நாள்தோறும் இருக்குது அதைப்
பயன்படுத்தா திருப்பதனால்/பல உயிர்கள் மடியுது!

சிவப்பு விளக்கு எரிகையிலே/பச்சை விளக்கு வந்த பின்னும்
பார்த்துக் கொண்டு நில்லாதே!/உயிர் பறிக்கும் மஞ்சள் கோட்டில்
உலவிடலாமா - நாம்/உயிர் இழந்து போவதற்கும்
முந்திடலாமா?

என்ற பாடல் வழி புலப்படுத்தி உள்ளார்.

**கடல் :**

மக்களின் வாழ்விற்கு பல விதங்களில் உதவிடும் கடலே சில சமயங்களில் அவர்களின் அழிவிற்கு வித்திட்டுவிடுகிறது. இதற்கு 26.12.2004 அன்று கடலில் ஏற்பட்ட ஆழிப் பேரலைகளே சான்றாகும். இத்தகைய கடலின் தன்மையைப் பற்றி கவிஞர். குழ. கதிரேசன்,

"பல உயிர்கள் வாழுவதற்கும்/இடம் ஆகின்றாய் - நீ
பலபல ஊர் சேர்வதற்கும்/தடன் ஆகின்றாய்!
கோபத்திலே புயலாக/உருவெடுக்கின்றாய் - நீ
குறும்பு பல செய்வதிலே/பெயரெடுக்கின்றாய்!
ஆழ்கடலே அமைதியினை/உலகில் தந்திடு!"

என்ற பாடல் வழி சுட்டிக்காட்டியுள்ளார்.

**சமுதாய சீரழிவுகள் :**

சமுதாயத்தைச் சீரழிக்கும் பல காரணிகளுள் போதை மருந்துகள், ஆபாசமான திரைப்படங்கள், முறையற்ற கல்வி போன்றவை திகழ்கின்றன. இவை இளைஞர்களின் வாழ்வினைப் பாதிக்கின்றன. இதனைக் கவிஞர்,

"போதை மருந்துப் பழக்கம் வந்து/புகைந்து கிடக்குதே! - அது
புற்றுநோயின் கொடுமைப் பிடியில்/ஒடுங்கிக் கிடக்குதே!
திரைப்படத்தால் மூளை எல்லாம்/மழுங்கிக் கிடக்குதே! - அதைத்
தீட்டிப்பார்க்க மனது இல்லை/உறங்கிக் கிடக்குதே!
ஏழைக்கிங்கே கல்வி இல்லைஇரும்பாய் இருக்குதே! - அது/
காசு பணம் கிடைச்சவர்க்குக்/கரும்பாய் இருக்குதே!"

என்பதை வேதனையுடன் தம்பாடலில் பதிவு செய்துள்ளார்.

**முடிவுரை :**

இவ்வாறு மேற்கூறியவற்றின் மூலம் கவிஞர் குழ. கதிரேசன் நாட்டில் நடக்கும் நிகழ்வுகளைக் குழந்தைகளுக்குப் புரியும்விதமாக எளிய நடையில் தம்பாடலில் பதிவு செய்துள்ளார். மேலும், அவர் தம்முடைய பாடலில் சமுதாயத்தில் நிகழும் பிரச்சனைகளைச் சுட்டிக்காட்டி அதனைத் தீர்ப்பதற்குரிய வழிமுறைகளையும் புலப்படுத்தியுள்ள விதம் குறிப்பிடத்தக்கது.

**பார்வை நூல்கள் :**


1. குழ. கதிரேசன் - எலிகடித்த பூனை
2. குழ. கதிரேசன் - விடுதலைக்கிளி
3. குழ. கதிரேசன் - பேசும்கிளி
4. குழ. கதிரேசன் - கூட்டாஞ்சோறு
5. தா.ஏ.ஞானமூர்த்தி - இலக்கியத் திறனாய்வியல்

# பட்டாம்பூச்சி விற்பவன் - சமுதாய எதார்த்தம்

*ப.ஜெய்சிங்* ஆய்வுமாணவர் தமிழ்த்துறை,
பூ.சா.கோ கலை அறிவியல் கல்லூரி கோவை-14

"எதுகையும் மோனையும்/வேண்டவே வேண்டாம்
சீரும் கீறும்/சுத்தச் சனியன்கள்
வெண்பாவும் கிண்பாவும்/விருத்தமும் திருத்தமும்
வேண்டாத தொல்லைகள்"

என்று புறப்பாட்டு புதுக்கவிதையில் கால்பதித்து வளர்ந்து வரும் கவிஞர்களில் நா.முத்துக்குமாரும் ஒருவர். இவர் திரைப்படப்பாடலாசிரியர். பல கவிதைத் தொகுப்புகளை வெளியிட்டுள்ளார். அவற்றில் "பட்டாம்பூச்சி விற்பனை" என்ற கவிதைத் தொகுப்பு 1997ஆம் ஆண்டின் சிறந்த கவிதை நூலுக்கான பாரத ஸ்டேட் வங்கியின் முதல் பரிசு பெற்றதாகும். இக்கவிதை நூலில் சமுதாயத்தில் காணப்படும் எதார்த்தமான வாழக்கை நிகழ்வுகள் பதிவு செய்யப்பட்டு இருக்கின்றது. எதார்த்தம் என்பது எதார்த்தமாய் இருக்க வேண்டும் என்பதற்காக ஆங்கிலக்கலப்பு, பேச்சுவழக்கு சொல்லாட்சி முதலியவற்றை எதார்த்தமாகக் கையாண்டிருக்கின்றார் கவிஞர்.

எதார்த்தம் என்கின்றபொழுது நாம் அன்றாட வாழ்வில் காண்கிற நிகழ்வுகளைக் கூறலாம். அந்தவகையில் மனிதம், பிழைப்பு, நினைவுகள், காதல் போன்றவற்றில் எதார்த்தம் கவிஞரால் பதிவு செய்யப்பட்டுள்ளது.

மேலும் கவிஞர், எதார்த்தமான ஒரு நிகழ்வினைக் கூறும் பொழுது கதைபோலக் கூறி ஒவ்வொன்றையும் விளக்கியிருக்கின்றார். இவ்வாறான கதைப்போக்கு கொண்ட கவிதைகள் சமுதாயத்தின் படிப்பினையாகவே சொல்லப்பட்டிருக்கின்றது. ஹைக்கூ கவிதைகளிலும் ஆதங்கம், புலம்பல் போன்றவற்றை அஃறிணைப் பொருள்களுக்கும் பொருத்திப்பார்த்திருப்பது பாராட்டுக்குரியதாகும்.

மனிதம்

மனிதம் மழுங்கி வரும் இக்காலக்கட்டத்தில் இதுபோன்ற நூல்கள் வெளிவருவது சற்று ஆறுதல். நகரத்தில் அண்டை வீட்டுக்காரனின் பெயரே தெரியாமல் எத்தனையோ பேர் வசிக்கிறார்கள். விபத்துக்கள் நிகழந்தாலும் "நமக்கென்ன வந்தது" என்று ஓரஞ்சாரமாய் ஓடுகிற நகரவாசிகள் ஓட்டம் இறுதியில் எங்கே முடிகிறது என்று சொன்னால் அது பணத்தில் தான் எனலாம். மனிதன் பணம் சம்பாதிக்கும் இயந்திரம். உறவுகளிடையே பாசம் கிடையாது, தன் குழந்தைகளைக் கூட வாரம் ஒருமுறை (ஞாயிறு) பார்க்கும் தந்தைகள் தான் இன்று நகரங்களில் ஏராளமானோர் இருக்கிறார்கள். ஆனால் இவையெல்லாம் கிராமத்தைத் தாக்காமல் இருப்பதால் அங்கு மனிதம் என்பது ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் இன்னும் உயிர் வாழ்கிறது.

படித்தவர்களிடையே இல்லாமல் இருக்கும் ஒன்று பாமரனிடம் இருக்கிறதே! இதைக் கவிஞரின்,

"இன்றைக்கும்..../கைக்குழந்தையோடு
பேருந்தில் பயணிப்பவளுக்கு/எழுந்து இடம் கொடுக்க
ஆளிருக்கிறது./இன்றைக்கும்...
பகலில் விளக்கெரியும்/மோட்டார் சைக்கிளுக்கு
சைகை காட்டுகிறார்கள்/இன்றைக்கும்...
சுருதிசேராமல் பாடும்/பிளாட்பார பிச்சைக்காரனுக்கு
சில்லறைகள் விழுகின்றன./இன்றைக்கும்...
புழக்கத்திலிருக்கிறது/ஐயோ பாவம் என்ற வார்த்தை"

கவிதை கூறுவதிலிருந்து உணரமுடிகின்றது.

## பிழைப்பு

இன்றையக் காலச் சூழலில் பிழைப்பு நடத்துவதற்காக மனிதன் போராட வேண்டியுள்ளது. வாழ்கையோடு யுத்தம் பண்ணுகிறான். வெற்றி கிடைப்பதும், தோல்வி பெறுவதும் அவனவன் உழைப்பில் தானுள்ளது. அரைசாண் வயிற்றுக்காக அல்லல்படுபவர்கள் ஆயிரமாயிரம்பேர் எனலாம். குபேரன் போராடுவதும் இதற்குத் தான் கூலிக்காரன் போராடுவதும் இதற்குத்தான். வேண்டுமானால் அவன் உண்பதில் வேறுபாடுகள் வரலாம், உணவுகளில் வேறுபாடுகள் வரலாம் ஆனால் அது வயிற்றுக்குத்தான் என்பதில் இருவருக்கும் வேறுபாடில்லை. இங்கே மட்டுமே சமுதாயத்தில் சமத்துவம் காணப்படுகிறது. இவ்வளவு சிக்கலான சூழலில் பிழைப்பு நடத்துவது அரிது என்றாலும் அதனைக் தவறான முறையில் பெறுவதும்

தவறில்லை என்று தான் தோன்றுகிறது. அதாவத வள்ளுவன்,

"பொய்மையும் வாய்மை யிடத்துப் புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"

என்று கூறியது போல உணவிற்காக, பசியைப்போக்கக் கொள்ளையடித்தாலும் தவறில்லை. ஏனெனில் மணிமேகலை

"அறமெனப்படுவது யாதெனக் கேட்பின்/மண்ணுயிர் வாழ்வோர்க்கெல்லாம்
உண்டி கொடுத்தோர்/உயிர் கொடுத்தோரே"

என்று பசியைப் போக்குவதே தலையாய அறம் என்று கூறுகிறது. இதனையெல்லாம் கவிஞரின்

"பத்து வருடமாய்/மிளகாய்த் தூளுக்கு மத்தியில்
மதுக்குப்பி மறைத்து/பாண்டிச்சேரியிலிருந்து
கடத்தி விற்க முடிகிறது/பேச்சியம்மா கிழவியால்
வாசனையாகப் பேசி/அய்யர் தெருவிலும்
விற்று விடுகிறாள்/கருவாட்டுக்காரி
கைக்கும் வாய்க்குமாய்/வாழத்தான் செய்கிறார்கள்
இவர்களும்"

என்ற கவிதையின் மூலம் பிழைப்பின் சிரமத்தைக் கண்முன் காணமுடிகிறது.

**நினைவுகள்**

ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் புதைந்திருப்பது, வெட்கத்தால் ஒளிந்திருப்பது பழைய நினைவுகள் பள்ளி நாட்களில், கல்லூரி வாழ்க்கையில், பிரிவு நாட்களில் என நம் நினைவுகள் ஒவ்வொன்றினுள்ளும் ஊறிக் காணப்படுகின்றன. இதனை ஆங்கிலப் பழமொழி "Old is Gold" என்று கூறுகின்றது. ஆம், பழைய வாழ்க்கையை மறந்தவனும், தானுண்ட பழைய சோற்றை மறந்தவனும் விருத்தியடைந்ததாக சரித்திரம் இல்லை என்பர். நம் வாழ்வில் நடந்த ஒவ்வொரு நிகழ்வும் ஒரு குட்டிக்கதை. சிறுவயதில் தாத்தாவின் தடியைப்பிடித்து வரப்புகளில் நடந்ததும், ஏர்ப்பிடிக்கிறேன் என்று எருதுகளின் காலில் கலப்பையைவிட்டு தந்தையிடம் திட்டு வாங்கியதும், எருமையின் வாலைப்பிடித்து ஆற்றைக் கடக்க எண்ணி தண்ணீருக்குள் சென்றபின் எருமை படுத்துக் கொள்ள நீந்தத் தெரியாமல் தத்தளித்கும் என ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் எண்ணற்ற நினைவுகள் உறங்கிக் கொண்டிருக்கின்றன.

சேரன் போன்ற திரைப்பட இயக்குநர்கள் தங்கள் நினைவுகளைத் திரைப்படமாக்கிவிடுகின்றனர். அப்பொழுது அவை அழியாமல் பாதுகாக்கப்படுகிறன. கவிஞர்கள் தங்கள் கவிதைகளில் இவற்றைப் பதிவு செய்துவிடுகின்றனர். அந்த வகையில்,

"நீராரும் கடலுடுத்த/பாடத் தொடங்குகையில்
டியூசன் எடுத்த களைப்பில்/கொட்டாவி விடும் வாத்தியார்கள்
மரப்பொந்தில் பெயர் செதுக்கி/முத்திரை பதிக்கும் மாணவர்கள்
பாடத்தில் இல்லாத/பாலியல் கல்வி பாத்ரூமில்"

எனும் கவிதையிலும்,

"நினைவு தெரிந்தென்/சின்ன வயதுகளில்
தாழப்பறந்த/ஹெலிகாப்டர் பின்னால்
ஒடியிருக்கின்றேன்"

என்ற கவிதையிலும் தன் பள்ளிக்கால நினைவுகள், பாலப்பருவ நினைவுகள் போன்றவற்றைக் கவிஞர் பாதுகாத்திருக்கிறார்.

**காதல்**

உலகத்தை உருட்டும் உந்து கருவி காதல். ஒரறிவு உயிர் முதல் ஆறறிவு மனிதன் வரை அனைத்து உயிர்களுக்கும் காதல் இருக்கிறது.காதல் உலகத்தை இயக்கும் தொடங்குகருவி. இன்றும் ஒருசில உண்மைக் காதல் கண்ணில் தென்படுகின்றன. ஆனால் இவற்றைவிட இன்று ஒப்பந்தக் காதல்கள் தான் அதிகமாய் இருக்கின்ற. இவை வாழ்வின் இறுதிவரை வருவதில்லை. இடையில் வேர்பிடுங்கப்பட்டு கருக்கப்படுகிறன பொருளாதாரத்தினால், ஆடம்பரத்தினால் அதிக ஆசையினால் கிராமத்துக் காதல்களில் வீரியம் இருக்கின்றது. கல்லூரிக் காதல், நகரத்துக்காதல்களில் எல்லாம் பெரும்பாலும் ஒப்பந்த அடிப்படையே (contract base) மறைமுகமாகக் காணப்படுகிறது. உண்மையானவர்கள் எல்லாம் ஒழிந்து போனதால் உண்மைக் காதலுக்கும்

பஞ்சம் ஏற்பட்டுவிட்டது. சாதிகளைச் சாகடித்து வெற்றிபெறும் காதல்கள் பொருளாதாரத்தால் நசுக்கப்படுவதால் உள்ளத்தின் ஓரத்தில் அச்சம் அலைமோதுகிறது. மனிதன், மனிதனாக இருக்க வேண்டுமென்றால் காதல் செய்யவேண்டும்.

“காதல், காதல் காதல்/காதல் போயின் காதல் போயின்
சாதல் சாதல் சாதல்/என்பார் பாரதியார்
“காதல் திருமணத்தால்/சாதி செத்தே போகும்”

என்பார் ஈ.பே.ரா பெரியார். இன்றையச் சமூகச்சீர்திருத்தத்திற்குக் காதல் கலப்புத்திருமணம் அவசியமும் இன்றயமையாததுமாகும். கவிஞர் முத்துக்குமாரும் காதலைப்பற்றிக் கூறியிருக்கிறார் அந்த வகையில்,

“நீ தரிசனம் தந்த கோயில்../உன்னைக் காதலித்த
எங்கள் கவிதைகள்/பரணேறிய டைரித்தாளில்
கன்னி கழியாமல”

என்ற கவிதை தன் பள்ளிப்பருவத்தில் காதலிக்கு எழுதப்பட்ட கவிதை அவள் படிக்காததால் இறந்து கிடப்பதைச் சுட்டிக்காட்டுகிறது. மேலும்,

“பொருள் வயிற்பிரிந்த/நண்பர்களின் சந்திப்புகளில்
தற்செயல் சந்திப்புகளில்/கேட்கப்படும் கேள்வி!
“காயத்ரி எங்க இருக்கா மாப்ளே? என் பதில்
“பத்து வருடத்திற்கு முந்தைய
டென்த் ஏ கிளாஸ் ரூம்ல”

என்ற கவிதையில், காதல் என்பதைவிட அப்பருவத்தில் வருவதை ஒரு இனக்கவர்ச்சி என்றுதான் சொல்ல வேண்டும். அதிலும் ஒரு தீவிரம் இருக்கிறது. இனம்புரியாத பாசம் அங்கே மேலோங்கியிருப்பதை உணர்த்தியிருக்கிறார் கவிஞர். தன் காதலியைத் தத்துக்கொடுத்தும், தன் காதலைக் தியாகம் செய்த செயல், அவள் மணமாகிய செய்தியைக் கூறும்பொழுது உணரமுடிகிறது.

தன் காதல் நிறைவேறாமல் நாற்பது வயதாகியும் திருமணமாகாமலிருக்கும் ஒரு ஆடவனின் புலம்பலாக ஆதங்கமாக, வேதனையாக,

“தார் உஷ்ணம்/கால்நுழைய
சூழல் மறைந்து/நடுத்தெருவில் புணரும் நாய்களை
கல்லால் அடித்துக் கலை”
“மழைக்காலத் தவளைகளின்/தாம்பத்தியக் கூச்சலுக்குப்
பாம்புகளின் கனவைப்/பரிசகாத் தா

என்ற கவிதைகள் அமைகிறது. அதாவது இக்கவிதை தனக்கு ரெண்டு கண்ணு போனாலும் பரவாயில்லை எதிரிக்கு ஒரு கண்ணாவது போகனும் என்ற பழமொழிக் கருத்தை நினைப்பூட்டுவதாக அமைந்திருக்கின்றது.

மனிதநேயம் வற்றிவிட்ட பொழுதும், கொலை செய்யாமல் விலைமதிப்பற்ற பல்லாயிரம் உயிர்களை இனாமாகக் கொண்ட சுனாமி அலைகளின் தாக்குதலில் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவிகள் ஏராளம் வந்து குவிந்து கொண்டிருப்பது மனிதம் செத்துப் போய்விடவில்லை என்பதைக் காட்டுகிறது. மனிதன் நிலையாமையை இப்பொழுதுதான் உணர்ந்திருக்கிறான். மரணத்தை உணர்கிறவன் மனிதத்தைக் கொண்டிக்கிறான். கவிஞரின் “தூர்” என்ற கவிதை பெண்களுக்கு இன்னும் சம அந்தஸ்து கிடைக்கவில்லை என்பதை ஒரு வலியோடு கூறியிருக்கின்றது. “சலூன் கண்ணாடிகள்” என்ற ஹைக்கூ கவிதை அஃறிணைமீதும் அன்பு காட்டியிருப்பதை உணர்த்துகிறது. சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகளின் ஏணிப்படியாக இருக்கும் பொருளாதாரத்தை உணர நிலையாமையை உணருங்கள்.

சாதிகளைக் களைந்து வாழ்வினில் சோதிகள் ஏற்றிட காதல் திருமணங்கள் செய்யுங்கள். உண்மைக்காதல் ஒருபோதும் தோற்றுப் போவதில்லை. சுனாமியோ, பூகம்பமோ எந்நேரமும் நம்மைத் தாக்கலாம் அதனால் இதுவரை பார்த்து வந்த வேறுபாடுகளைக் களைந்து இன்று முதலாவது ஒன்றுபடுவோம்.

மனிதன் மனிதனாக மாற மனிதம் வளர்ப்போம்!
“யாதும் ஊரே யாவரும் கேளீர்”

# கவிஞர் புவியரசுவின் "புல்லாங்குழலே" உணர்த்தும் வாழ்வியல் நடப்பியல் நெறிகள்

முனைவர். *சி. ஜெயலட்சுமி*, எம்.ஏ., எம்.ஃபில்., அழகப்பா பல்கலைக்கழகம்,
(தொலை நிலைக் கல்வி இயக்கம்) காரைக்குடி.

இன்பமும் துன்பமும் விருப்பங்களும் வெறுப்புக்களும் ஏக்கங்களும் நிறைந்ததுதான் வாழ்க்கை. இவ் வாழ்க்கையில் பெரும் பகுதியை எதிர்காலம் பற்றிய கனவுகள் ஆக்கிரமித்துக் கொள்கின்றன. எனினும் அக்கனவுகள் யாவும் நடப்பியல் நெறியினின்று விழாத நிலையிலேயே அமைகின்றன. இக்கருத்தை பெரும்பான்மையான படைப்புகளில் காண முடிகிறது. இவ்வண்ணம் அமைந்த நூல்தான் கவிஞர் புவியரசுவின் "புல்லாங்குழலே".

## நடப்பியல் முரண்

இயந்திரமாய் வாழ்ந்து கொண்டிருக்கும் மனிதர்கள் மனமகிழ்வைத் தேடுவது இயல்பு. தாங்கள் செய்யும் பணியின் கடுமையை மறக்கவும், பணி நேரங்களில் பாடுவதும் கேட்பதும் போன்ற மனமகிழ் நிகழ்வுகளை மனித மனம் நாடும். இக்கருத்தை உணர்த்தும் போக்கில் அமைந்தது கவிஞர் புவியரசுவின் "காலப்பகை" என்னும் கவிதை.

இக்கவிதையில் ஓட்டுநர், நடத்துனர், பயணிகள் ஆகியோர் இடம் பெறுகின்றனர். பேருந்தில் உள்ள ஒலிநாடா "காதலி....." என்ற பாடலை ஒலிக்கின்றது. காதல் என்றாலே போதை நிறைந்த மகிழ்வை ஏற்படுத்தும் ஒரு நுண்உணர்வு. இதன் தலைவி காதலியைப் பற்றிப் பாடல் அமைகின்றது. இப்பாடலைக் கேட்டுக்கொண்டே நடத்துநரும், ஓட்டுநரும் தங்கள் பணிகளைச் செய்கின்றனர். ஆனால் பேருந்துக்குள் பயணிக்கும் பயணிகளின் நிலை இக்காதலுக்கு அப்பாற்பட்டதாக அமைகின்றது. அங்கு உள்ளவர்களைக் கீழ்வருமாறு கவிஞர் சித்தரிக்கின்றார்.

"பஸ்ஸீக்குள் -/வாழ்க்கை உழுத சால்களாய்க்/கோடுகள் நிறைந்த முகங்கள்,
நடுவழியில் நட்டாற்றில் கவிழ்ந்த/வாழ்வின் மிச்சமாய் வெள்ளைச் சேலைகள்,
திருமணத்திற்கோ இழவுக்கோ போகும்/காவியேறிய துவைத்த சட்டைகள்,
அழுக்குத் துண்டுகள்/வெயிலின் சூட்டில் /கிறங்கும் நடுத்தரங்கள்"

(கவிஞர் புவியரசு, புல்லாங்குழலே, ப. 12)

இவர்களின் மனம் அப்பாடலைக் கேட்குமா; கேட்டாலும் கவலைகளை மறக்க முடியுமா; பணிக் கடுமையால் ஏற்படும் சிறிது நேரத் துன்பம் போன்றதல்ல இப்பயணிகளின் துன்பங்கள். யாராலும் தீர்க்க முடியாத நிரந்தரமாகிவிட்டவை. இப்பேருந்தில் பயணிக்கின்ற சிறிது காலத்தில் பலரும் ஒரே பாடலைக் கேட்கின்றனர். ஒரே பாடலை பலமுறை ஒருவர் கேட்டாலும் சலிப்புத் தன்மை ஏற்படவில்லை; ஏனெனில் அவர்கள் பாடலை உற்று உணர்ந்து கேட்க வேண்டும் என எண்ணாமல் ஒருவித ஓத்து ஊதும் நிகழ்வையே அப்பாடலைக் கருதுகின்றனர். ஏனெனில் நடத்துநருக்கும் ஓட்டுநருக்கும் பயணிகளைத் தொடர்ந்து செய்யவேண்டிய கட்டாயம் நிலவுகின்றது. எனவே இவர்களுடைய புலனுணர்விற்குப் பாடலின் கருத்து முழுமையாக எட்டுவது இல்லை. அதனால் அப்பாடல் அவர்களுக்கு இன்பத்தைத் தருகின்றதா, துன்பத்தை தருகின்றது. இவ்வேளையில் இப்பாடல் வேண்டுமா, வேண்டாமா என்ற சிந்தனையே இல்லாமல் இயங்கிக்கொண்டிருப்பவர்கள், ஆனால் அவர்களுடன் அதே வேளையில் அதே பேருந்தில் பயணிக்கும் பயணிகளின் மனநிலை அப்படிப்பட்டதல்ல. அவர்கள் பேருந்தில் ஒய்வாக அமர்ந்திருக்கின்ற அந்நேரத்தில்தான் தங்களைப் பற்றி அதிகம் எண்ணிப்பார்க்கின்றனர். அவர்களின் நிகழ்கால வாழ்க்கை மகிழ்ச்சிக்கு உரியதானதால் அப்பாடலும் ஏற்புடையது. ஆனால் கவிஞர் குறிப்பிடும் பயணிகள் அனைவரும் துயரத்தில் ஆழ்ந்தவர்களாகவே உள்ளனர். அதனால் அப்பேருந்தில் ஒலிக்கும் பாடல் அவர்களுக்குப் பொருந்தாததாகவே உள்ளது. எனவே ஒருமுறை கூட அப்பாடலைப் பொறுமையுடன் கேட்கும் மனநிலை அவர்களுக்கு இல்லை. இதை,

"ஒன்றரை மணிநேரம் /யுகப்புழுக்களாய் ஊர்ந்தபின்/அதே டேப்பை
மறுபடியும் போட்டு/ஓட்டினார் ஓட்டுநர்...../"காதலி........"/நல்லவேளை ஊர்வந்தது

தாவி இறங்கி ஓடினேன்/இனி, பாட்டு வண்டியில் /ஏறுவதே இல்லை
என்ற வைராக்கியத்துடன்". (மேலது, ப.14)

என்ற பாடலடியில் அறியலாம். ஆனால் ஓட்டுநரும், நடத்துனரும் புரியாத நிலையில் இருந்தனர். இதனை

"காதலின் சூட்டில் ஓட்டுநர்/ஓட்டிக் கொண்டிருந்தார்.......
காதலின் கிறக்கத்தில் நடத்துநர்/சீட்டுக் கிழித்துக் கொண்டிருந்தார்...." (மேலது)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

"காலம்" எப்பொழுதும் எல்லோருக்கும் ஒரே வித உணர்வை, பயனை நல்குவதில்லை. ஒருபுறம் மகிழ்வும், ஒருபுறம் துன்பமும் ஒரே வேளையில் நடைபெறுகின்றது. இதனையும் மனித மனம் ஏற்றுக்கொண்டு இயல்பாகச் செயல்பட்டுக்கொண்டுள்ளது என்பதைத்தான் "காலப்பகை" என்னும் கவிதை உணர்த்துகின்றது. இது மறுக்க முடியாத உண்மையாகும். இப்பாடல் கவிஞரின் தன்னுணர்ச்சிப் புலப்பாடு அல்ல. வாழ்வின் உண்மையான சான்றாகும். இதைத்தான் எதார்த்தமான இயக்கத்தினர் "கலைஞரின் தன்னுணர்ச்சிப் புலப்பாடாக இல்லாமல் சான்றாதாரங்களால் நிரூபணமாகக் கூடிய மறுக்க முடியாத உண்மைகளின் வெளிப்பாடாக அமைவது" (ந. பிச்சமுத்து, இலக்கிய இயக்கங்கள், ப. 161) எனக் கூறுகின்றனர். இவ்விளக்கம் மேற்கண்ட கவிதைக்குப் பொறுத்தமுற அமைகின்றது.

## இயலாதவர்களின் முடிவு இல்லாமையே

சமுதாயத்தில், நாட்டில், உலகில் வாழும் மக்கள் தொகையில் பாதிக்குப்பாதி வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழ்பவர்களாகவே உள்ளனர். இவர்களுள் பலர் சொந்தத் தொழிலை மேற்கொண்டவர்களாகவும். பலர் பிறரிடம் பணிபுரிபவர்களாகவும் உள்ளனர். இவர்களுள் இரண்டாம் வகையினருக்கே சிக்கல் உருவாகின்றது.

உழைத்த உழைப்பிற்கேற்ற ஊதியம் கிடைக்காத பொழுது எதிர்த்துப் பேசிப் போராட வேண்டியுள்ளது. எல்லா நேரங்களிலும் எல்லாப் போராட்டங்களும் வெற்றியில் முடிவதில்லை. பல நேரங்கள் தோல்வியையே தழுவுகின்றன; சில வெற்றியடைந்தவை போல் தோன்றினாலும் எதிர்பார்த்த முழு பலனையும் பெற்றனவா என்றால் இல்லை என்ற முடிவே கிடைக்கின்றது. இதைத்தான் "ஜீவனம்" என்ற கவிதை உணர்த்துகின்றது.

"வார்த்தைகள்/உள்ளொடுங்கிப் போய்க் கொண்டிருக்கின்றன./பேசிப் பேசி என்ன என்று
நாக்கு சலித்து விட்டது/நாக்கு சலிப்பை மறந்த காலங்களில்/சொற்களுக்குச் சோர்வு
வந்துவிடுகின்றது. /உளறலைவிட /ஊமையாகிவிடுவதே உத்தமம்/என்றிருந்தாலும்
மற்றவர் என்/முகத்தின் மீது /விட்டெறியும் சொற்களை /என்ன செய்ய?/சகித்துக்கொள்ளத்
தொடங்கி /சிறிது சிறிதாக /சாப்பிட ஆரம்பித்தேன்...." (ஜீவனம், ப. 24)

ஆள்பலமும் பணபலமும் உடல் வலிமையும் இல்லாத மக்களுக்கு வாழ்வில் எஞ்சியது துன்பமே என்ற நிலையை தெற்றெனப் புலப்படுத்துகிறது இக்கவிதை.

## தொகுப்புரை

1. இன்பம், துன்பம், வறுமை, செல்வநிலை இவைபோன்ற முரண்பட்ட நிலைகள் உலகில் நாளும் நடைபெற்றுக்கொண்டே உள்ளன. இவ்வாறு காலம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வித உணர்வை வழங்கிக் கொண்டிருந்தாலும் உயர்ந்து இருப்பவர்கள் இறுமாப்புடன் இருப்பதில்லை; தோல்வியைத் தழுவித் தாழ்ந்து இருப்பவர்கள் எப்பொழுதும் துவண்டு போய்விடுவதில்லை என்பதை இக்கட்டுரை உணர்த்துகின்றது.

2. இயலாமை இல்லாமையை ஒரு காலத்தில் ஒரு சிலரிடம் உருவாக்கினாலும் இந்நிலை நீடிக்காது; இயலாதவர்கள் வலிமை பெறுவார்கள்; வளமும் பெறுவார்கள் என்பதையும் இக்கட்டுரை உணர்த்துகின்றது.

3. இவ்வாய்விற்குத் தேர்ந்தெடுத்துக் கொண்ட இரு கவிதைகளும் வாழ்வியலின் துன்ப நிகழ்வுகளை அப்படியே புலப்படுத்தினாலும், இதனை உணர்ந்து மக்கள் தங்களை மேம்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதையே ஆழமாக உணர்த்துகின்றது.

## ஆய்விற்குப் பயன்பட்ட நூல்கள்


1. புல்லாங்குழலே, கவிஞர் புவியரசு, கண்ணதாசன் பதிப்பகம், 1999.
2. இலக்கிய இயக்கங்கள், ந. பிச்சமுத்து.

# சி. ஆர். ரவீந்தரன் நாவல்களில் நடப்பியல் நெறி

*திரு. மு. ஜோதிமணி,* தலைவர். தமிழ்த்துறை (சுயநிதி)
என்.ஜி.எம். கல்லூரி, பொள்ளாச்சி.

வாழ்க்கையின் முரண்பாடுகளே இலக்கியங்களைத் தோற்றுவிக்கின்றன. முழுமையான வாழ்வை நாவல் வழியே தான் தரிசிக்க முடியும். வாழ்க்கையை ஒவ்வொரு படைப்பாளனும் தான் அனுபவித்த அறிந்த விதத்திலேயே வெளிப்படுத்துகிறான். இதனாலேயே படைப்பு வழி வெளியாகும் வாழ்க்கை குறித்த பார்வையும் படைப்பாளனுக்குப் படைப்பாளன் வேறுபடுகிறது. வாழ்க்கையை முன்வைக்கும் விதத்தைப் பல நெறிகளாகப் பிரித்துக்காணலாம். அவற்றிலொன்று நடப்பியல் நெறி. இதனை நடப்பியல், யதார்த்தவியல், எதார்த்தவாதம், உண்மை வாதம், மெய்மைவாதம், மெய்மையியல் எனப் பல்வேறு பெயர்களில் பலரும் குறிப்பிடுகின்றனர். நடைமுறை வாழ்வில் சாத்தியமில்லாத, நடந்தால் நன்றாக இருக்கும் என்று எண்ணக்கூடிய, கற்பனை கலந்து படைக்கும் போக்கிலிருந்து மாறுபட்டு, சமகாலவாழ்வில் சகல பக்கங்களையும் வாசகனின் கண்முன்னே விரியச்செய்வது நடப்பியல் நெறியின் பணியாகும்.

"மனிதன் தன்கால மனிதனாகத் தன்னை உணரும்போது, வாழும போது அவன் எதிர்கொள்ளும் பிரச்சனைகளை வடிப்பதே எதார்த்த வாதம் எனலாம். ஒரு வாசகனின் நிலையிலிருந்து பார்த்தால் அவனின் எதிர்காலக் கற்பனைக் கோட்டைகள் நிகழ்காலத்திலிருந்து தப்பிக்கும் பகற்கனவுகள், விருப்பப்பூர்த்திகள், கடந்த காலத்தில் வாழும் மனோராச்சியங்கள் இவற்றை உடைத்து அவனுக்கு நட்பின் உக்கிரமான தரிசனத்தை உண்டாக்குவது எதார்த்தவாதத்தின் குணம் என்று கூறலாம்" (எஸ். பூரணசந்திரன், எதார்த்தவாதமும் தமிழ் நாவல்களும், ப. 11) "நடப்பியல் என்பது அன்றாட வாழ்வில் எவ்விதப் புனைவுமின்றி உள்ளது உள்ளபடி இலக்கியத்தில் கூறும் முறை" என்பார். தா.வே. வீராச்சாமி (தமிழ்நாவல்கள், ப.13) வெறும் நிகழ்ச்சிகளை மட்டும் காட்டாமல், அவற்றை காரணகாரியத் தொடர்போடு விளக்கிக் காட்டுவதே சரியான நடப்பியல் நெறியாகும். காரணம், நிகழ்ச்சியின் ஒரு பக்கத்தை மட்டும் காட்டும் போது ஆசிரியரின்சுயசார்பு அதில் வெளிப்பட வாய்ப்புண்டு. அல்லாமல், ஆசிரியன் விலகி நின்று விடைதேட முயலும் போது வாசகன் படைப்புச் சிக்கல்களைச் சரியான முறையில் புரிந்து கொள்ள முடியும். படைப்பாளனின் நேர்மைதான் நடப்பியல் நெறிக்கு அடிப்படையாகும்.

தனி மனிதன் சமூகத்தோடு சம்மந்தப்பட்டுள்ளதைப் போலவே தனிமனிதச் சிக்கல்களோடு தொடர்புடையவையே. தனிமனிதப் பார்வையிலிருந்து சமூகத்தைப் புரிந்து கொள்ள முயலும் போது வாழ்க்கை குறித்த தரிசனம் / தெளிவு பிறக்கிறது. இதனடிப் படையில் தனிமனிதச் சிக்கல்களையும், அதற்கு மூலமாக விளங்கும் சமூகச்சிக்கல்களையும் படைப்பாசிரியன் தன் படைப்பு மூலம் வெளிக்காட்டும் போதே நடப்பியல் நெறி வெற்றி பெறுகிறது. "யதார்த்தவாதம் என்பது சமூகம் சம்பந்தமானது... எந்த அளவிற்குப் புறவயமான சமூக யதார்த்தத்தைப் புரிந்து கொள்வது, பிரதிபலிப்பது, விளக்குவது என்பதில்தான் யதார்த்தவாதத்தின் சாரமே அடங்கியுள்ளது என்பார் எஸ். தோதாத்ரி (தமிழ் நாவல் - சில அடிப்படைகள். ப.6). இதையே, "....... குடும்பத்திற்கு வெளியில் நிலவும் சமூக அமைப்பில் மாற்றங்களைக் கோருவது யதார்ததவாதப் படைப்புகளின் போக்கு" என்கிறார் கோவை ஞானி (படைப்பியல் நோக்கில் தமிழ் இகலக்கியம், ப.99).

1. சமுதாயத்தின் நிகழ்வுகளைப் படைப்பாளன் புறவயமாக நின்று அவற்றை அப்படியே தன் கலைவடிவமாக மாற்றி விடுவது, தன் உணர்வுகளையோ கருத்துக்களையோ புகுத்தாது அது சமூகம் சம்பந்தமானது என்ற நிலையில் வெளிப்படுத்துவது இயல்பு யதாத்தவாதம்.

2. சமூகத்தின் போக்கை அப்படியே ஏற்றுக்கொள்ளாது, அதனைக் காரணகாரியத்தோடு விமர்சித்துப் படைப்பது விமர்சன யதார்த்தவாதம்.

3. மனிதன் வேறு, சமூகம் வேறல்ல. சமூகத்தின் நிகழ்வு மனிதனைப் பாதிக்கக் கூடியதே. மனிதர்களின் பிரச்சினைகளைத் தனித்தனியாகப் பாராது,ஒட்டுமொத்த சமூகத்தின் பிரச்சினைகள் கொண்டு

ஆராயப்புகுவது சோசலிச யதார்த்தவாதம் என நடப்பியலை மூன்றாக வகைப்படுத்துகிறார் எஸ். தோதாத்ரி (முற்கூறிய நூல், பக். 8-10). சி.ஆர். ரவீந்திரனின் அனைத்து நாவல்களுமே நடப்பியல் நெறியில் அமைந்துள்ளன. அவற்றுள் ஓடைப்புல், வெயில்மழை ஆகிய இரு நாவல்களும் நடப்பியல் நெறியில் எவ்வாறு படைக்கப்பட்டுள்ளன என்பது இங்கு ஆராயப்படுகிறது.

கல் உடைக்கும் போயர் இனமக்கள், வாழ்வில் எதிர்கொள்ளும் பொருளாதார, பாலியல் சிக்கல்களைப் பற்றிப் பேசும் நாவல் "வெயில் மழை" வேளாண்மையை ஆதாரமாகக் கொண்ட கிராமத்துக்கு அருகில் வரும் தொழிற்சாலை, விவசாயத் தொழிலாளர்களின் வாழ்வில் ஏற்படுத்தும் மாற்றத்தையும், அதைத் தாங்க இயலாத நிலவுடைமையாளர்களின் எதிர்வினையையும் பேசுவதே "ஓடைப்புல்" நாவலாகிறது.

## வெயில் மழை :

படிப்பறிவற்ற, உடல் உழைப்பை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு, குவாரிகளில் கல் உடைக்கும், நாடோடி வாழ்க்கை நடத்டதுபவர்கள் போயர்கள். வாழ்க்கையே வறுமையாகிப் போன இவர்கள், நியாயமான கூலி கிடைக்கப் பெறாது உழைப்புச் சுரண்டலுக்கு ஆளாகிறார்கள். இதனைப் போயர் இனத்தவர்களில் ஒருவனான சண்முகத்தின் நினை வோட்டம் வாயிலாக ஆசிரியர் காட்டுகிறார். "களிக்கும், கூளுக்கும், கஞ்சிக்கும் பட்டபாடு பற்றி நினைக்கையில் அடிவயிறு கலங்குகிறது. எத்தனை பாடுபட்டாலும் வயிற்றுப்பாடு தீரவில்லை. எதுவும் இல்லாமலே பலநாள் பள்ளிக்கூடம் போய் தண்ணீர் குடித்து பசிக்குத் தூங்கியதெல்லாம் நினைவுக்கு வந்தது" (ப.55). குவாரி முதலாளிகளின் உழைப்புச் சுரண்டலையும், கொள்ளை லாபம் அடிப்பதையும் அறிந்தே இருந்தாலும், வாழ்க்கைச் சூழல் அவர்களை அடங்கிப்போகச் செய்கிறது. இதனை,

"கொஞ்ச சேத்துக் குடுக்கச் சொல்லிக் கேக்கணும்
இந்தக் காசக் குடுக்கறதுக்கு மொவத்தைச் சுளிக்கறாங்க"
.........................

அவனுக சம்பாரிச்சு ஊடுமேல ஊடு கட்டறாங்க. காடு மேல காடு வாங்கறானுக ................. நாமதா நாயாட்டா கல்லுக்குழியே கதீன்னு கெடக்கறம்" (ப.62)

உழைப்பைச் சுரண்டுவதோடு இவர்களின் உயிர்களை அற்பமாக எண்ணும்போக்கு முதலாளிகளிடம் காணப்படுவதையும் பதிவு செய்கிறார் ஆசிரியர். பணிக்காலத்தில் விபத்துக்களால் ஏற்படும் உயிரிழப்புகளை சட்டத்திற்குப் புறம்பாக மூடி மறைத்து விடுவதோடு, நஷ்ட ஈடாக சிறுதொகையைக் கொடுத்துப் பிரச்சினையை முடித்துவிடுகிறார்கள். "பத்ரப்பனுக்குத் தலையில செரியான அடி. ரண்டு பாட்டலு ரத்தம கொடுத்திருக்குது... போலீசு.... வந்தா ஒண்ணு சொன்னாப்புல சொல்லோனும். ஆட்டுக்குத் தழை புடுங்கப் போனவெ கைநழுவி உழுந்துட்டான்னு" (ப.67). போதிய விழிப்புணர்வோ,பொருளாதார வசதியோ இல்லாத காரணத்தால் பாதிக்கப்பட்ட தொழிலாளர்கள் முதலாளிகளை எதிர்த்துப் பேசவோ, நீதி மன்றத்திற்குச் செல்லவோ இயலாதவர்களாக இருக்கின்றனர்.

முதலாளித்துவ சமூகத்தில் பாலியல் சுரண்டல் பல வழிகளிலும் வெளிப்படும். குவாரி முதலாளி வேலப்பன், அங்கு வேலை செய்யும் பவானிக்கு வெற்றிலை, பணம் முதலியவற்றைக் கொடுத்துத் தன் விருப்பத்தை வெளிப்படுத்துகிறார் (பக். 42 - 43). குவாரிகளில் நடைபெறும் பாலியல் சுரண்டல்களை சண்முகம் பாத்திரம் மூலம் ஆசிரியர் வெளிக்காட்டுகிறார்.

"........ டிரைவர் பெண்களை வைத்துக் கொண்டு இருப்பார்கள். மேஸ்திரிகள் கூட நிறையப் பெண்களை வைப்பாக வைத்துக்கொள்வார்கள். முதலாளிகளுக்கும் விரும்பினால் ஏற்பாடு செய்வார்கள்... பவானியைப் போல பார்க்கக் கண்ணுக்குக் குளிர்ச்சியாக இரந்தால் தப்பவே முடியாது. எப்படியும் எவனிடமாவதுஅடிபட்டு விடுவார்கள்" (ப.175). அதே போன்று போயர் இனத்துப் பெண்கள், கணவனல்லாத பிறருடன் உறவு கொள்வதும் இயல்பான ஒன்றாக உள்ளதை ஆசிரியர் பவானி வாயிலாகப் படைத்துக் காட்டுகிறார். பவானியின் கணவன் குழந்தையப்பனிடம் சின்னராமன்,

"அட, நம்ம நாதியில இல்லாததா, எனக்கு தெரிய எத்தனையோ பாத்தாச்சு ... போனாப் போவுதுன்னு கூட்டி வெச்சுக்கடா" (ப. 168) எனக் கூறுவதிலிருந்து, உழைக்கும் சமூகத்தில் தவறான பாலியல் தொடர்புகள்

இயல்பானவை, தவிர்க்க முடியாதவை என்பதை அறிய முடிகிறது. இதே சூழலில் பிறந்து, ஓரளவு படித்து சிமெண்டுத் தொழிற்சாலை வேலைக்குப் போகிறவர்கள் சண்முகம், முருகேசன் ஆகிய இருவர் மட்டுமே. சண்முகத்தின் வாழ்க்கைத் தரம் உயர்ந்தது கண்டு, போயரினத்தைச் சேர்ந்த மற்றவர்களும் தங்கள் குழந்தைகளைப் படிக்க வைக்க வேண்டும் என்னும் உந்ததல் பெறுகின்றனர்.

**ஓடைப்புல் :**

ஏதேச்சதிகாரப் போக்குடைய நிலவுடையாளரான சின்னைய கவுண்டர், மாதாரிகளைத் தன் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கிறார். அவரது அடி உதைகளுக்குப் பயந்தே பலரும் அவரிடம் வேலை செய்கின்றனர். சிமெண்டுத் தொழிற்சாலையின் வரவு விவசாயக் கூலிகளின் வாழ்வில் மாற்றத்தை ஏற்படுத்துகிறது. நிரந்தர மாத வருமானம், பணிப்பாதுகாப்பு எனப் பல்வேறு காரணங்களால், தொழிற்சாலை வேலைக்குப் பலரும் செல்கின்றனர். இதனால் தன் ஆதிக்கம்மெல்ல மெல்லத் தகர்வது கண்டு சின்னையகவுண்டருக்கு கோபம் உருவாகிறது. "சிமெண்டுக் கம்பெனி வந்ததிலிருந்து ஆள்தட்டுப்பாடு கூடிக் கொண்டிருந்தது. ..... கல்சுமக்கவோ, லாரியில் மூட்டை ஏற்றவோ போய் வருகிறார்கள்" (ப.21). தொழிற் சங்கத்தின் மூலம் தெரியவந்த முதலாளிகளின் சுரண்டல், தொழிலாளர் குறித்த விழிப்புணர்வு ஆகியவை சின்னைய கவுண்டரின் ஒடுக்கு முறைக்கு எதிராக மாதாரிகளைச் சிந்திக்கவும், குரல் கொடுக்கவும் வைக்கிறது. இதனால் ஆத்திரமடைந்த சின்னைய கவுண்டர், மாதாரிகளுக்கு பக்கபலமாக இருந்து தூண்டிவிடுகிறான் என்ற ஆத்திரத்தில் ரக்கியண்ணனைக் கொலை செய்து விடுகிறார்.

சாட்சிகளைக் கலைத்து விடுதலையாகும் சின்னைய கவுண்டரின் இரு மருமகன்களும் அடுத்தடுத்து இறந்து போனதற்குக் காரணமாக ஊரார்,"சின்னையகவுண்டர் செய்த அக்கிரமத்துக் கடவுள் பலிவாங்கி விட்டதாகப் பேசிக் கொள்கிறார்கள். சின்னத்தாய் நெஞ்செரிய இட்ட சாபம் பொய்த்துப் போகவில்லையென ஊர்க் கவுண்டர் சொன்னதாக" வும் பேசிக்கொண்டனர் (ப.121). திருமண வீட்டில் சின்னைய கவுண்டரைச் சந்தித்த போது, அதுவரை ஆற்றாமையோடு இருந்த மாராத்தாளுக்குள்ளிருந்து ஆவேசம் வெளிக்கிளம்புகிறது.

"வாசலில் கிடந்த விளக்குமாற்றைக் கையிலெடுத்தாள் மாராத்தாள். விறுவிறுவென நடந்து கூட்டத்தை விலக்கிக் கொண்டே பந்தலுக்குள் போனாள். போன வேகத்திலேயே சின்னைய கவுண்டரைஅதால் மாறிமாறி அடித்தாள்" (ப.141)."கல்யாண வீட்டு ரகளைக்குப் பிறகு சின்னைய கவுண்டர் வெளியே தலைகாட்டவில்லை.... சோறு தண்ணியென எதுவும் இல்லாமல் படுத்தபடி கூரையைப் பார்ப்பதும் கண்ணீர் விடுவதுமாகக் கிடந்தார். படுத்தே கிடந்தவர் யாரிடமும் எதுவும் பேசாமலே கண்ணை மூடிவிட்டார்" (ப.143).முறையற்ற உறவைப் பற்றிப் பெரிதும் கவலை கொள்ளாத ஒரு இனத்தைக் காட்டும் ஆசிரியர், அதிலிருந்து மாறுபட்டு நம்பிக்கைத் துரோகம் செய்த பவானியை இறுவரை ஏற்றுக்கொள்ளாமல் ஒதுக்கிவிடுகிற குழந்தையப்பனையும் "வெயில்மழை" நாவலில் காட்டுகிறார். போயர்களின் வாழ்க்கைத் தரம், கல்வியறிவின்மை, குடிப்பழக்கம் போன்றவற்றைக் காட்டும் ஆசிரியர், அதிலிருந்து விடுபட எவ்விதத் தீர்வையும் காட்டவில்லை. அதே இனத்தைச் சேர்ந்த சண்முகம் நல்ல நிலையை அடைந்தபோதும், தன் இனமக்களின் முன்னேற்றத்திற்கு எதுவும் செய்யாதவனாக உள்ளதை உள்ளபடி காட்டிச் செல்லும் நெறிதான் ஆசிரியரிடம் உள்ளது. இதேபோல "ஓடைப்புல்" நாவலிலும் சின்னைய கவுண்டரின் வீழ்ச்சியைப் படிப்படியாகக் கொண்டுவருகிறார். நீதிக்கான கோபம் கண்ணகிக்குள் மட்டுமல்ல, மாராத்தாளுக்குள்ளும் மறைந்திருக்கிறது. தாழ்த்தப்பட்ட மக்களை அடக்கி ஒடுக்கி அதிகாரம் செலுத்தக் கூடிய சின்யைகவுண்டரையும், மனிதாபிமானத்தோடு அவர்களுக்கு ஆதரவு தருகிற ராக்கியண்ணனையும் ஒரே இனத்திலிருந்து தோன்றிய இரு வேறுபட்ட பாத்திரங்களாகக் காண்பிக்கிறார் ஆசிரியர். சின்னைய கவுண்டரை எதிர்ததாலேயே கொலை செய்யப்படும் ராக்கியண்ணனைப் புரட்சியாளனாகக் காட்டாது, சமுதாயத்தில் காணப்படும் இயல்பான மனிதர்களில் ஒருவனாகவே படைத்துள்ளார்.

எஸ். தோதாத்ரி கூறும் மூவகை யதார்தவாதப் போக்குகளில் முதலாவதாகக் குறிப்பிடும் இயல்பு யாதார்த்தவாதப் போக்கையே சி.ஆர். ரவீந்திரன் நாவல்களில் காணமுடிகிறது. வாழ்க்கை முரண்பாடுகளை விமர்சிப்பதையோ, அதற்குத் தீர்வு காண்பதையோ இவருடைய நாவல்களில் காணமுடிவதில்லை.

# மார்க்சியப் பார்வையில் பொன்னீலனின் கரிசல்

*இரா.இலட்சாராமன்,* விரிவுரையாளர் தேர்வு நிலைவிரிவுரையாளர்.,
ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி மயிலம்.

தமிழ்ப்புதினப் படைப்பாளர்களைப் படைப்பியல்பையொட்டி மூவகையினராகப் பகுக்கலாம். அவர்களை (1) எவ்வித சமூக நோக்கமும் இல்லாமல் இன்ப மூட்டுவதற்கென்றே படைப்பவர்கள் (2) சமூகச் சிக்கல்கள், முரண்கள் அவலங்கள் போன்றவற்றை உள்ளது உள்ளவாறே படைப்புகள் (3) அவற்றை நுட்பமாகக் கண்டறிந்து, நடப்பியரோடு காரண காரியங்களோடு புலப்படுத்தி, மாற்றியமைக்கும் நெறிகளையும் படைப்பவர்கள் என வகைப்படுத்தலாம். அவ்வகையில் மூன்றாம் வகையினருள் ஒருவராகக் கொள்ளத் தக்கவர் பொன்னீலன். அவர் சார்புநிலை எழுத்தாளர், மார்க்சிய நெறியைப் பின்பற்றுபவர். அவ்வகையில் நடப்பியலோடு நிகழ்வுகளுக்கான காரணகாரியங்களைக் கண்டறிந்து, மார்க்சிய வழியில் நெறிப்படுத்தும் இயல்பு அவர் புதினங்களில் காணப்பெறுகின்றன.

"வெளிநாட்டு நாவல் ஆசிரியர்களான மார்க்ஸிம் கார்க்கி, ஜீன் லண்டன் மார்க்ட்வைன், அலெக்கி டால்ஸ்டாய், இலியா எனான்பெர்க் போன்றவர்களின் நாவல்களும் இந்திய எழுத்தாளர்களில் பிரேம்சந்தர், சரத்சந்திரர், முல்க்ராஜ் ஆனந்த் போன்றார் நாவல்களும் இத்தகையன" 1 அவ்வகையில் தமிழில் மார்க்சியப் புதினங்கள் படைத்தோருள் தொ.மு.சி.இரகுநாதன் அவர்களை முதலாமவராகக் கூறலாம். கு.சின்னப்பபாரதி, ஜெயகாந்தன் (பிற்காலத்தில் மாற்றம்) பொன்னீலன்,இராஜம் கிருஷ்ணன் போன்றோரை அடுத்த நிலையில் கூறலாம். "மாறுகின்ற சமூகத்தால் படைக்கப் பெறும் இலக்கிய வகைகளுடன் ஒன்றான நாவல்கள் தம்மை வெளிப்படுத்திய சமூகத்தையும் அவ்வப்போது அடைந்து வரும் மாற்றங்களையும் காட்டத் தவறுவதில்லை. தனக்கு முந்திய இலக்கிய வடிவங்கள் அனைத்தையும் விட நாவலே சமூக வாழ்க்கையைக் கூடிய அளவில் சித்தரிக்கிறது."2 என்ற கருத்து மார்க்சிய நெறியினர் இவ்வடிவத்தைக் கையாண்டமைக்குக் காரணமாகக் கூறலாம்.

## கரிசல் புதினத்தின் இலக்கு

"படிப்பில்லா, உலகமறியாத, சுரண்டல் கொடுமைக்கு உள்ளான, பண்டைய பழக்கங்களுக்கு அடிமையாகி, சுயநம்பிக்கையற்று இருட்டில் உழன்று வந்த கூலி விவசாயிகள், சுய உணர்வு பெற்று உலகப் போக்கை யறிந்து, சுரண்டலை எதிர்த்து ஒழிக்க, ஒன்று திரண்டு, ஒருவருக்கொருவர் உதவியாய், தம்மைப் பழமைக்குப் பணியச் செய்யும் இரும்புச் சங்கிலிகளை அறுத்தெறுத்து வருங்கால சமூக விடுதலை என்றும் சூரியானது ஒளிவெள்ளத்தில் நடைபயிலத் தொடங்கிவிட்ட தன்மை மாற்றங்களை இந்நாவல் சித்தரிக்கிறது"3 என்ற நா.வானமாமலை அவர்களின் கருத்து இப்புதினத்தின் இலக்கைக் காட்டக் கூடியதாக உள்ளது.

## வரலாற்றுப் பொருள்முதல் வாதம்

"கண்ணோட்டங்களில் இயக்க இயலை, கண்ணோட்டங்களின் நெளிவுசுளிவு, நகரும் தன்மைகளையும் விவரித்துக் கூறியவர் ஹெகல்தான். ஆன்மீக வளர்ச்சியை கொடுக்கும் விதிகளுக்கான தத்துவத்தை இவர் உணர்வுப்பூர்வமாக, இயக்க இயலாக விரிவுப்படுத்திக் காட்டினார். இம்முறையில் யதார்த்தமான, சடப்பொருளான உலகத்தை இயக்கவியல்படி மிகத் திறமையோடு வரைந்து காட்டினார். மார்க்சும் ஏங்கல்சும் சித்தாந்தத்தில் இருந்த குறைகளை விமர்சனம் செய்தும், திருத்தி மேற்கொண்டும் பொருள் முதல்வாத இயக்க இயலை உருவாக்கினர்"4 என்ற கருத்து அது மார்க்சிய நெறியின் தனித்த கொள்கையாக இருப்பதை அறிய முடிகிறது."காரல் மார்க்ஸ்தான் சித்தாந்த சமூகவியல் தத்துவத்தை வரலாற்றுப் பொருள்முதல் வாதத்தை உருவாக்கியதன் மூலம் தொடங்கி வைத்தார். இத்தத்துவத்தால் படைக்கப்பட்ட அனுபவம் வரலாற்று ரீதியாக சமூக அறிவைப் பெறுவதற்குப் போதுமான அளவிற்கு விஷயங்களை, பொருள்களைச் சேகரித்திருந்தது, சமூக இயலைப் பற்றிய ஒரு பொது தத்துவத்தை உருவாக்கப் போதுமானதாக இருந்தது"5.

சமுதாய வாழ்க்கைக்கு, செயல்பாட்டிற்கு நடைமுறைக்கு சமூக நிறுவனங்களுக்கு, சமயத்திற்கு, அரசியலுக்கு சமூகத்தோடு உறவுகொண்ட எல்லாவற்றுக்கும் பொருகூள அடிப்படையாகும். பொருளே

எல்லாவற்றையும் தீர்மானிக்கிறது.

"வரலாற்றுப் பார்வையில் பொருள்முதல் வாதத்தின் பொருள் என்னவென்றால், சமூகத்தின் பொருளாதார வாழ்வை அங்கீகரிக்கப்பதாகும். முதலில் பொருளாதார உற்பத்தியின் சமூகப் போக்கையும், அதாவது சமூக வாழ்க்கைக்குத் தேவையான இன்னொரு ஆதார விஷயம் என்றால்லாமல் எல்லா சமூகத் தன்மைகளுக்கும் போக்குகளுக்கும் ஊடு இணைப்பாக உள்ள அடிப்படை பொருளாதாரமே என்றும், அதுதான் சமூகத்தின் ஆன்மீகப் பிரிவு உள்ளிட்ட இதர எல்லாச் சமூக வெளியீடுகளுக்கும் இறுதியில் தீர்மானிக்கிற சக்தியாக இருக்கிறது என்பதை அங்கீகரிப்பதாகும்"6 என்ற கருத்து பொருளே அனைத்தையும் தீர்மானிக்கிறது என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

இது செயல்களுக்கான கோட்பாடாகத் திறவுகோல் ஆகிறது. "மார்க்ஸ் கூறினார் வரலாறு என்பதே உழைப்பினால் மனிதன் உருவாக்கப்பட்டதைக் கூறுவதாகும். அதாவது அவனது செயல்கள் மூலமே அவன் உருவாக்கப்பட்டிருக்கிறான் என்பதாகும். அவனது செயல்களுக்கு அப்பால் ஒரு வரலாறும், எந்தவொரு சமுதாயம் ஏன் மனிதனே கூட இல்லை எனலாம்"7 அவ்வகையில் மனிதனின் செயல்ள், அவன் வாழ்க்கை பொருளை மட்டுமே அடிப்படையாகக் கொண்டிலங்குகிறது. பொருள்பெறும் உழைப்பால் மனிதர்கள் அடிமைகளாக்கப் பெறுகின்றனர்.

"மனிதர்கள் இயற்கையாகவே அடிமைகளோ, கொத்தடிமைகளோ அல்லர் கூலித் தொழிலாளிகளோ அல்லர். ரூசோ ஒரு முறை கடுங்கசப்புணர்வுடன்"மனிதன் சுதந்திரமாகப் பிறக்கிறான். ஆனால் எங்கணும் சங்கிலிகளால் கட்டுண்டிருக்கிறான்" என்று கூறினார். தனிச் சொத்துடைமை உறவுதான் இந்தச் சங்கிலிகளை அவன்மீது போட்டுள்ளது. மனிதர்கள் அடிமைகளாகவோ, கூலித் தொழிலாளர்களாகவோ ஒரு குறிப்பிட்ட உற்பத்தி உறவில் இயங்குகிறபோதுதான் ஆக்கப்படுகிறார்கள். இந்த உறவைத் தேர்ந்தெடுக்கலாமா, வேண்டாமா, இந்த உறவை ஒப்புக்கொள்ளலாமா என்பதைத் தீர்மானிக்கக்கூடிய சுதந்திரத்துடன் அவர்கள் இல்லை. ஒரு குறிப்பிட்ட சமுதாய அமைப்பில், இத்தகைய உற்பத்தி உறவில் மனிதர்கள் ஈடபடுமாறு நிர்பந்திக்கப்படுகிறார்கள்"8 என்ற கருத்த முழுமையும் கரிசலுக்குப் பொருந்தும். கரிசலில் வரும் சக்கரைச்சாமி எனும் பண்ணையார், பெருமாள் புரம் எனும் ஊரின் மிகப்பெரும்பகுதி நிலங்களின் சொந்தக்காரர். அவர் நிலப்பகுதி மட்டுமே கரிசல் வேளாண் மாந்தர்களின் உழைப்பிற்குரியதாக உள்ளது. மிகச் சிலருக்கு சிறு சிறு நிலப்பகுதிகள் சொந்தமாயினும் அவரவர்ள் வாழ்க்கைக்கே போதுமானதாக இல்லை. அத்தகையோர் கூலிகளாகச் சக்கரைச்சாமி நிலத்திலேயே உழைக்க வேண்டியவர்களாகின்றனர். "சக்கரைச்சாமி அந்த வட்டாரத்திற்குக் கொஞ்சம் பெரிய மனிதர். சுமார் நானூறு குறுக்கம் புஞ்சைக்குச் சொந்தக்காரர். தலைவர் சக்கரைச்சாமியைத் தவிர அனைவரும் அன்றாடம் காய்ச்சிகளே. ஏதோ ஒரு சிலருக்கு அரையும் ஒன்றுமாகக் கொஞ்ச நிலம் இருந்தது. ஆனால் அதிலுள்ள வருமானம் அவர்களின் நாலுநாள் பாட்டுக்குக்கூட கட்டிவராது"9 அப்பகுதி உழைப்பவர்களின் உழைப்புச் சாதனமாக அந்நிலமே உள்ளது என்பதும் அந்நிலத்தை நம்பியே உழைக்க வேண்டிய கட்டாயத்துக்கு உள்ளாக்கம் பெற்றுள்ளனர் என்பதும் இப்புதினப்பகுதியால் அறியமுடிகிறது. "உண்மையான வரலாறு என்பது பெருவாரி மக்களால் படைக்கப்படுகிறதோ யன்றி, தனி நபர்களால் அல்ல என்பதை (மார்க்ஸ்) நிரூபித்தார். வரலாற்று நடவடிக்கைகளின் குறிக்கோள் மட்டுமல்லாது உட்சக்தியாகவும் மக்களாகவே உள்ளனர் என்பத புரட்சிகர காலக் கட்டங்களில் மிகத் தெளிவாக வெளிக்கொணரப்பட்டுள்ளது"10 என்ற கருத்து லெனிலன் சுட்டும் வர்க்கப் போராட்டத்தால் தெளிவாகிறது.

"நாமெல்லாம் ஒண்ணு சேர்ந்தா இந்த உலகத்தையே மாத்திப் போடலாம். மொதலாளி கிட்ட பணந்தான் இருக்கு. நம்மகிட்டே பலம் இருக்கு. நாம இம்புட்டுப் பேரும் ஒண்ணா இருக்கோம்னு அறிஞ்சாப் போதும் மொதலாளியும் ஓடிடுவாரு. அருவாப்படக்காரனும் ஓடிடுவான். நமக்கு எதிரியே இருக்கமாட்டான்"11 என்று வர்க்கப் போராட்டத்தை முன்னெடுத்துச் செல்லும் கூலித் தெரிலாளி வீரையன் கூற்றால் அதை உணரலாம். "இது கூலிக்கான போராட்டமாகத் தொடங்கி, சமூகத்தை மாற்றும் போராட்டமாக வளருகிறது. புரட்சித் தீ சுவாலை விட்டு எரியத் தொடங்குகிறது. மரப்பொந்தில் அக்கினிக் குஞ்சை வைத்து விட்டார்கள். காடே எரியத் தொடங்குகிறது. இத்தீயில் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக உடைமைச் சமதாயம் வித்துப் போட்டிருந்த அழுக்குக் குப்பைகளெல்லாம் எரிந்து சாம்பலாகின்றன"12 என்ற நா.வனமாமலை அவர்களின்

இப்புதினம் பற்றிய கருத்து தெளிவுப்படுத்துகிறது. வர்க்கப் போராட்டத்தின் தொடர்ச்சியில் "விவசாயிகள் சங்கம்" தொடங்கப் பெற்று அடிமைச் சங்கிலிகள் அறுத்தெறியும் சூழல் பக்கத்து கிராமங்களுக்குப் பரவுவதை அறியமுடிகிறது.

## வரலாற்று இயங்கியல் வாதம்

"மார்க்சியம் இச்சமுதாயமானது வரலாற்றுக் காலந்தொட்டு மாறிமாறி வளர்ந்து வந்துள்ளது. அது மேலும் வளரும். மாறும் .இம்மாற்றங்களும் வளர்ச்சிகளும் ஒரு சில புறநிலை விதிகளுக்கு உட்பட்டு நிகழ்வன என்று அறுதியிட்டுச் சொல்கிறது."13 மேலும் "உலகம் தொடர்ந்து இயங்குகின்றது, மாறுகின்றது, வளருகிறது இந்நிகழ்ச்சிக்குச் சில விதிகள் உண்டு வரலாற்றுக் காலத்திலிருந்து நிகழ்ந்து வரும் மாற்றங்களுக்கும் வளர்ச்சிகளுக்கும் இயங்கியல் விதிகளே காரணம் என்று கூறுகிறது."14 மாறுதலில், வளர்ச்சியில் நம்பிக்கை கொண்டவர்களே இயக்கவியலாளர் எனப்படவர். இயக்க விதிகளுக்கு மூன்று விதிகள் உள்ளன. அவை முரண்பாடுகள், பாய்ச்சல், நிலைமறுத்தலை நிலை மறுத்தல் என்பன. முரண்பாடுகள் இருவகை. அவை பகை முரண்டுபாடுகள், பகையிலா முரண்பாடுகள் என்பன. எஜமானன் அடிமை, நிலஉடமையாளர் விவசாயி, முதலாளி தொழிலாளி ஆகிய இவ்விருசாராராக்கிடையில் நிலவும் முரண்பாடுகள் பகையிலா முரண்கள். நலன்களும் அவ்வாறே. இதன் காரணமாகக் கிள்ர்ச்சிகள், தாக்குதல், எழுச்சிகள், போராட்டங்கள் நிகழ்கின்றன. சுரண்டப்பெறும் வார்க்கங்களிடையே உள்ள மரண்ள் பகையிலா முரண்கள். அவற்றைச் சுமுகமாகத் தீர்த்துக் கொள்ளவியலும்.

ஒரு பொருளின் இருபக்கங்களாக அளவும், குணமும் உள்ளன. அளவு மாற்றத்தால் பொருள் மாற்றம் நிகழாது. குணமாற்றத்தாலேயே பொருள்மாற்றம் நிகழும். முதலாளித்துவம் விரிவடைந்தால் புதியதொரு அமைப்பு வராது. குணமாற்றத்தாலேயே முதலாளித்துவம் வீழ்ந்து சோசலிசம் தோன்றும். இதுவே பாய்ச்சல் ஆகும். பழையன மார்க்சியத்தில் ஆய்வு செய்யப்பெற்று பழையன இடத்தில் புதியனவும் தாழ்ந்ததின் இடத்தில் உயர்ந்ததும் அமைகிறது. பழையது புதியதாதலாலும், தாழ்ந்தது உயர்ந்ததாலும் நிலை மறுத்தலாகும். இத்தகையத சங்கிலித் தொடர்போல தொடர்கிறது. காலவோட்டத்தில் ஏற்படும் மாற்றங்கள் முன்னைய மாற்றங்களை விட உயர்ந்தவை. அவ்வகையில் வளர்ச்சி மீண்டும் மீண்டும் நிகழ்வதில்லை. அடுத்து வரும் வளர்ச்சி புதியது, உயர்ந்தது, மேலானது. இதுவே மார்க்சியத்தின் நிலை மறுத்தலின் நிலை மறுத்தல் ஆகும்.15"வளர்ச்சி, மாற்றம், முன்னேற்றம், இவை பற்றித் தெளிவானதும், சிறந்ததுமான இயக்கவியல் சிந்தனை மார்க்ஸ், ஏங்கல்ஸ், லெனின் தவிர வேறொவராலும் படைக்கப்படவில்லை"16. முதலாளி சக்கரைச்சாமிக்கும் பெருமாள்புர விவசாயிக்கும் இடையே நிலவும் முரண்கள் பகை முரண்களாகும். அடிமை, கூலி உழைப்பு, உழைப்புச் சுரண்டல், பஞ்சாயத்து முறைமை போன்றவை பகை முரண்களே. வேளாண் மாந்தர்களுக்கிடையே அறியாமையாலும் வேறுவழியின்மையாலும் முதலாளித்துவத்தைச் சார்ந்து வாழும் விவசாயிகளைப் பகையிலா முரண்கள் எனலாம். வேளாண் உழைப்பாளர்களின் புறவயச்சூழல்கள் அவர்களைக் கிளர்ந்தெழச் செய்யும் வகையில் குணமாற்றங்களை ஏற்படுத்தி அவர்களை வர்க்கங்களாக ஒரு பக்கத்தில் இணைத்திருக்கிறது. அதுவே பாய்ச்சல் எனும் முறையில் வர்க்கப் போராட்டமாக முன்னெழுகிறது.குணமாற்றங்கள் செயல் மாற்றங்களாகின்றன. கூலி உயர்வு கேட்டல், தானியமாகக் கேட்டல், குழுமியும் மகளிர் இணைந்தும் கேட்டல், உழைப்புரிமையைப் புலப்படுத்தல், பஞ்சாயத்தில் ஒரு சார்பு தீர்ப்பினை மறுத்தல், எதிர்த்தல், விவசாயிகள் சங்கம் தோற்றுவித்தல் என்பவற்றை மூன்றாவதாகக் குறிப்பிடலாம். "இயக்கவியல் பொருள் முதல் வாதத்தில் காணப்படும் பொதுவான விதிகள் சமூகத்திலும் செயல்படுகின்றன. எதிர்மறைகளின் ஒற்றுமையும் போராட்டமும் பற்றிய விதியானது சமூகத்தில் புரட்சியாக உருவெடுக்கிறது. நிலைமறுப்பின் நிலை மறுப்பு என்ற விதியானது பழைய சமூகத்தின் அம்சங்களில் சிலவற்றைக் கொண்ட புதிய சமுதாயம் தோன்றுவதில் நடைமுறையாகிறது"17 என்ற கருத்தின் வழியே கரிசல் புதினப் போக்குகள் அமைகின்றன.

## அந்நியமாதல்

வேளாண் உழைப்பாளர்கள் முதலாக அனைத்து தரப்பு உழைப்பாளர்க்கு உரிய செல்வம் தனியுடைமையாக ஒரு சிலரிடம் மட்டுமே குவிந்துள்ளது. அவ்வகையில் மனித குலமே தனிமனிதர்கள் கையில் சிறைப்பட்டு அடிமையாகக் கிடக்கின்றது. "தனிமையுடைமை என்பது அந்நியமாதலின் மிக உயர்ந்த வடிவம்.

சமுதாய ஆற்றல் ஒரு சிலர் கரங்களில் தனிநபர் ஆற்றலாக மாறியுள்ளது. மூலதனம் என்பத மனிதர்களுக்கு மேலான ஒரு சக்தியாக ஒரு அந்நியமான, மானிட விரோதமான சக்தியாக மாறிவிட்ட மானிட குலத்தின் அந்நியமாக்கப்பட்ட ஆற்றலே தவிர வேறல்ல"18 என்கிறார் எஸ்.வி.இராஜதுரை.

"மனிதன் புறநிலை சாா்ந்த ஜீவி என்று மார்க்ஸ் குறிப்பிடுகிறார். அவன் தனது தேவைகளை நிறைவேற்றும் போக்கில் தன் ஆற்றல்களை வளர்த்துக் கொள்கிறான். ஆற்றல்கள் நிறைவுபெறுவது என்பது புறப்பொருட்களைத் தன்வயமாக்குதல் மூலமே நடக்கிறது என்றோம். மனிதன் புறவியற்கையின் மீது தன் ஆற்றல்களைச் செலுத்தி அதை மாற்றியமைப்பதைப் புறப் பொருளாக்கல் (ஞசூஷத்ங்ஸ்ரீற்ண்ச்ண்ஸ்ரீஹற்ண்ர்ய்) என்று மார்க்ஸ் கூறுகிறார். மானிடச் செயலுக்குரிய உடன்பாட்டுப் பொருள் "பொருளாக்கல்" என்பதாகும். இதன் எதிர்மறைப் பொருளே தொடர்புச் செயல். அவனுக்கும் இயற்கைக்கும் அவனுக்கும் சக மனிதர்களுக்கும் இடையேயும் அவனால் உருவாக்கப்பட்ட பொருள்கள், தனிச் சொத்து, உழைப்பின் பிரிவினை, அரசு, மற்ற நிறுவனங்கள், சமயம், குடும்பம் ஆகியவை குறுக்கிட்டு அவனது ஆற்றல்களுக்கு, சாராம்சத்துக்கு ஊறு விளைவிப்பதுதான் அந்நியமாக்குதல் என்று மாாக்சால் கருதப்படுகிறது ஆகும்."19 "மார்க்ஸ் உழைப்புச் செயலை இரண்டாகப் பிரிக்கிறார். ஒன்று வாழ்வின் புலப்பாடு (ஙஹய்ண்ச்ங்ள்ற்ஹற்ண்ர்ய் ர்ச் கண்ச்ங்) இரண்டாவது வாழ்வின் அந்நியமாதல் (அப்ண்ங்ய்ஹற்ண்ர்ய் ர்ச் கண்ச்ங்) உழைப்புச் செயல் எப்போது வாழ்வை அந்நியமாக்குகிறது?

நான் உயிர்பிழைப்பதற்காக வேலை செய்யும் போது, ஒரு பிழைப்புச் சாதனத்தை உற்பத்தி செய்வதற்காக வேலை செய்யும்போது எனது வேலையே என் வாழ்க்கையாக இல்லாத போது மனிதன் படைக்கிற பொருட்களும் அமைப்புகளும் உறவுகளும் அவனுக்கில்லை என்கிற போது அவனே அவனுக்கில்லை என்பதுதானே பொருள்"20பொதுவாக உழைப்பு என்பதும் உழப்பாளியின் புறப்பொருள் போல உள்ளது. அவன் வாழ்க்கைக்குரியதாக இல்லை. உழைப்பு தன்னை உறுதிப்படுத்திக் கொள்ளவும் இல்லை. அது வலுக்கட்டாயமாகத் திணிக்கப்படும் ஒன்றாக உள்ளது. உழைப்பு அவனுக்கானதாக அல்லாமல் வெறொருவனுக்கானதாக உள்ளது. எல்லாவற்றுக்கும் மேலாக "மனிதனின் உற்பத்திப் பொரள் அவனுக்கு வெளியே சுதந்திரமாக, அவனுக்குப் பகையான ஒன்றாக, அவனை எதிர்த்து நிற்கிற சக்தியாக மாறுகிறது"21

இவையெல்லாவற்றுக்கும் காரணம் உற்பத்தி உறவில் மூலதனப்பங்கில் இணைக்காமையாகும். நிலவுடைமையாளனின் நிலப்பகுதி, அவன் உற்பத்திக்காகச் செலவிடும் பணம் யாவும் உற்பத்திச் சாதனங்களாகி மூலதனம் ஆகிறது. அவ்வுற்பத்திச் சாதனத்தில் தான் உடலுழைப்பாலும் சிந்தனையாற்றலாலம் உழைக்கும் உழைப்பாளன் உழைப்பு மூலதனமாகக் கருதப் பெறுவதில்லை. அவ்வாறு கொள்ளக் கூடாது என்பதற்காகவே, மூலதனப்பாங்காக மாறுதல் கூடாத என்பதற்காகவே, அந்நிலவுடைமையிலிருந்து உரிமைகளை மறுப்பதற்காகவே அவன் உழைப்பிற்குக் கூலி தரப்பெறுகிறது. அக்கூலியே, அக்கூலி உழைப்பே அவனை அந்நிலத்திலிருந்து மூலதனப்பங்கிலிருந்து நிலவுரிமையிலிருந்து உழைப்பு உரிமையிலிருந்து விலக்கி வைக்கிறது. மேலும் நிலவுடைமை மூலதனமும் முன்னோர் உழைப்பாளர்களின் உழைப்பு மூலதனம் என்பதும் கருதத்தக்கது. "உழைப்பாளியின் கண்களுக்கே அவனது உழைப்புச் சக்தியானத அவனிடம் உடைமையாக உள்ள ஒரு சரக்கு வடிவத்தில் தான் தோன்றுகிறத. எனவே அவனத உழைப்பு கூலி உழைப்பாக மாறும்போது அதை இயல்பான ஒன்றாகக் கருதுகிறான். தொழிலாளியிடமிரந்து நடைமுறையிலும் சிந்தனையிலம் அந்நியமாக்கப்பட்டுவிட்ட உற்பத்தி செயலுக்கு முதலாளியச் சமுதாயம் வழங்கும் அடையாளச் சீட்டு கூலி உழைப்பு" 22 என்ற கருத்து அதைத் தெளிவாக்கக் காணலாம்.

சக்கரைச்சாமி கூலி உயர்வை மறுத்தல், தானியமாகத் தராமை, உழைப்பாளரின் உழைப்பு உரிமையுள்ள நிலத்தில் பக்கத்து ஊர்க்காரரை வேலைக்கு அமர்த்தல், நிலத்தில் வேலை செய்ய விடாமை, வேலை செய்த நாள்களில் அனுமதியில்லாமல் வேலை செய்ததாக கூலி மறுப்பு போன்றவற்றை இதன்விளக்கமாகக் கூறலாம்."கூலிய அப்பிடித்தான் தரவேன் கட்டும்னா வேலைக்கிவா நட்டம்னா எங்கயாச்சும் போ"23 என்ற முதலாளியின் பேச்சும். "கையும் காலும் இருக்கிற வரைக்கும் காலந்தள்றதுக்கு என்னய்யா? இப்ப வருசத்துக்கு நாலுகோட்ட தவசம் குடுக்கறாரு மொதலாளி. கலியாணமாயிட்டா ஒண்ணு அரை மேக்கொண்டு போட்டுக் கொடுக்க மாட்டாதா?"24 என்ற வீரையன் எதிர்பார்ப்பும் "வேலை

பறிபோய்விடக்கூடாதே என்ற பயத்தில் வெள்ளைச்சாமி அவசர அவசரமாகச் சொன்னான். அதென்ன முதலாளி அப்படிக்கேட்டுபிட்டீக, பரம்பரைபரம்பரையாக ஒங்க அடிமைகசெய்து வர்ரது தான் இன்னிக்கென்ன புதுசா"25 என்ற பேச்சும் அவ்வூர் மக்கள் உழைப்பில் அந்நியமாக்கப்பட்ட நிலையைத் தெளிவாகக் காட்டுகின்றன. இவ்வகையில் கூலிப் போராட்டமாகத் தொடங்கி விவசாயிகள் சங்கம் எனும் இலக்கை நோக்கிய வளர்ச்சி, மாற்றம், முன்னேற்றம் ஆகியவற்றை மார்க்சிய செல்நெறியில் காணமுடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. மு.குருவம்மாள், சமூகவியலும் இலக்கியமும்,, இ.ப.த.ம. 22வது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, பக் 253, 254
2. மேற்கோள் " மு.நூ.பக், 252
3. நா.வானமாமலை, கரிசல் அணிந்துரை, பக் 11
4. தா.பாண்டியன், மொ.பெ.ஆ., வரலாற்றுப் பொருள் முதல் வாதம், பக் 15
5. " " பக்.22
6. " " பக்.34
7. " " பக்.46
8. " " பக்.77
9. பென்னீலன், கரிசல், பக்10
10. தா.பாண்டியன், மு.நூ.பக்.211
11. பொன்னீலன், கரிசல், பக் 241
12. நா.வானமாமலை, மு.நூ.பக் 6
13. ஆர்.பி.எஸ்.கருத்துக் களத்தில் மார்சியம் - லெனினியம், பக்.14
14. " " பக் 15
15. " " பக் 37, 38
16. " " பக் 39
17. சேதுமணி மணியன், தமிழ் நாவல்களில் மதிப்புகள், பக 28
18. எஸ்.வி.ராஜதுரை, அந்நியமாதல், பக் 51
19. " " பக் 51
20. " " பக் 53
21. " " பக் 60
22. " " பக் 99
23. பொன்னீலன், கரிசல், பக் 51
24. " " பக் 56
25. " " பக் 224 "

# "புதிய தரிசனங்கள்" புதினத்தில் மார்க்சியச் சிந்தனைகள்

*வெ. கலைச்செல்வி* முதுநிலை தமிழ் விரிவுரையாளர்,
அரசு கல்வியியல் கல்லூரி, குமாரபாளையம்.

சமூகச் சூழலால் பாதிக்கப்படாத மனிதன் இருக்க முடியாது. தான் எதிர்கொள்ளும் பிரச்சனைகளால் பாதிக்கப்பட்டு, அதனை உள்வாங்கி, அனுபவமாக ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் மனிதர்களுக்கு உண்டு. எனவே தன்னைப் பாதித்த நிகழ்வுகள் தான் சந்திக்க நேர்ந்த வித்தியாசமிக்க மனிதர்கள், தனக்கும் சமூகத்திற்குமுள்ள முரண்பாடுகள் இவ்றறை மறுஉருவாக்கம் செய்பவனே படைப்பாளியாக இயலும். எனவே படைப்பாளி என்பவன் மனிதர்கள் மீது அன்பும், ஈடுபாடும், அக்கறையும், மனிதநேயமும் கொண்டு பண்பாடுமிக்க சமுதாயத்திற்குத் தனது படைப்பின் வழி அடிகோலுகிறான். அவ்வகையில் தான் சார்ந்த சமூகத்தின் மீது ஆழ்ந்த பிடிப்புள்ள பொன்னீலன் புதிய தரிசனங்கள் புதினத்தில் மனிதர்களிடம் ஏற்றத்தாழ்வையும், சர்வாதிகாரத்தையும், முதலாளித்துவ ஆளுமையையும் அகற்றி நேசமிக்க, சமத்துவ சமுதாயம் அமைத்திட வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துவதன் வழி மார்க்சியச் சிந்தனைக்கு வலுச்சேர்த்துள்ளார்.

## இலக்கியப் படைப்பில் மார்க்சியச் சிந்தனைகள்

மார்க்சிய வழி நின்று இலக்கியத்தை ஆய்வு செய்த கிரான்வில் ஹிக்ஸ் ஒரு மார்க்சிய இலக்கியப் படைப்பு பெற்றிருக்க வேண்டிய தகுதிகளை விளக்கும் போது "வர்க்கப் போராட்டத்தில் தமது பங்கு என்ன என்பதைப் பாட்டாளி வாசகர் உணரும் வகையில் வழிகாட்டுவதே ஒரு மார்க்சிய இலக்கியப் படைப்பின் முதன்மையான நோக்கமாக இருக்க வேண்டும்" என்று வலியுறுத்தியுள்ளார். மேலும் ஒரு மார்க்சிய இலக்கியப் படைப்பு மூன்று இன்றியமையா பண்புகளைக் கொண்டமைந்திருக்க வேண்டும் என்றும் கூறியுள்ளார்.

1. வர்க்கப் போராட்டத்தின் விளைவுகளை நேரடியாகவோ, வெளிப்படையாகவோ சுட்ட வேண்டும்.
2. படைப்பாளி, பாட்டாளி வர்க்கத்தின் தலைமையை ஏற்றுக்கொண்டு பாட்டாளி வர்க்கத்தில் தம்மையும் ஒருங்கிணைத்துக் கொண்டு அப்படைப்பை உருவாக்கியிருத்தல் வேண்டும்.
3. படைப்பில் விளக்கப்பட்டுள்ள நிகழ்வுகளில் படிப்பவர்கள் தாமே பங்கேற்றிருப்பதாக அப்படைப்பு உணரச் செய்ய வேண்டும்.

ஓர் இலக்கியம் படிக்கிறவர்களுக்கு வாழ்க்கையைப் பற்றிய எதார்த்தத்தையும், புரிந்து கொள்ளுதலையும் கற்றுக்கொடுத்து அவர்கள் வாழும் காலத்து சமூகப்பிரச்சனைகளை உணர்த்த வேண்டும். படிக்கும் மக்களிடம் சிந்தனைத் தாக்கத்தை உண்டாக்கி மாற்றத்திற்கு வழிகோல வேண்டும். மனிதர்களுக்குள்ள போட்டி, பொறாமை மூடநம்பிக்கை, நம்பிக்கையின்மை, காதல், மதம், அரசியல், அகங்காரம், குடும்ப உறவுகள் தனிமனிதச் சிக்கல்கள், சமுதாயச் சிக்கல்கள் இவற்றையெல்லாம் வலராற்றுக் காலப் பின்னணியோடு உள்வாங்கி வடிவமைக்கும் படைப்பாளி படிப்பவர்க்கும் வாழ்க்கையைப் புரிந்து கொள்ளத் துணையாகக் கொள்வது மார்க்சியமே.

## புதிய தரிசனங்களில் மார்க்சியச் சிந்தனைகள்

சிக்கலான இந்திய சமூக அமைப்பை, கட்டமைப்புச் சிக்கல்களை, அரசியல், சமூக, கலாச்சாரத் தளங்களைப் பின்னணியாகச் கொண்டு படைக்கப்பட்டிருக்கும் இப்புதினத்திலன் போக்குகளை ஆராயும்போது வாழ்க்கை பற்றிய புரிதலுக்கு நம்மை இட்டுச் சென்றுள்ளார் பொன்னீலன்.

பொன்னீலன் 1920 பக்கங்களில் விதவிதமான மனிதர்கள், அவர்களின் உணர்ச்சிகள், போராட்டங்கள், துக்கம் மகிழ்ச்சி, மனிதநேயம், சித்தாந்தம், மதம், ஆண்மீகம், அரசியல் அனைத்தையும்

உள்ளடக்கிய வாழ்க்கையை அப்படியே படம் பிடித்துக் கொடுத்துள்ளார். மனித நேயமிக்க வாழ்க்கையின் சிறப்புகளையும் படிப்பவர்களிடத்தில் விதைத்துக் கொண்டே செல்கிறார்.

அழகுமிக்க, ஆற்றல் மிக்க, மகிழ்ச்சி மிக்க வாழ்க்கை சர்வாதிகாரத்திற்கு உட்படும்போது, சிதைந்து விடும் போக்கைக் கண்முன் நிறுத்துகிறார். அவசரகாலநிலை இந்திய அரசியலிலும், தமிழக மக்களின் வாழ்க்கையிலும் ஏற்படுத்திய மாற்றங்களே புதிய தரிசனங்கள், அரசியலுக்கும் மனித உறவுகளுக்கும் இடையிலான நெருக்கம் கதை முழுவதும் பின்னப்பட்டுள்ளது.

கதையின் தொடக்கத்திலேயே வர்க்கப் போராட்டத்தினை, சமூக அநீதியை எதிர்க்கும் போராட்டத்தினைச் சொல்லியிருக்கிறார் பொன்னீலன் பெரிய தெருக்காரர்கள் தண்ணீர் குடமெடுத்து வரும் பெண்களிடம் வம்பு செய்வதும் கேலி பேசுவதும் குடத்துத் தண்ணீரில் கையை விட்டு கலக்குவதும் முந்திரி ஆலையில் மேஸ்திரியால் பெண் தொழிலாளர்கள் அவமானப்படுத்தப்படுவதும் முன்னிறுத்தப்பட்டுள்ளன. இதனால் பெண்கள் வேலைநிறுத்தம் செய்கின்றனர். பெண்கள் சமூக நீதிக்கும், வர்க்கப் போராட்டத்திற்கும் குரல் கொடுத்து வாழ்க்கையை அர்த்தமுடையதாக ஆக்குவது இப்புதினத்தில் மட்டுமே சிறப்பாகப் படைக்கப்பட்டுள்ளது.

காதல் இல்லாமல் வாழ்க்கையில்லை காதலை மிகப்பரந்த அளவு மனித உழைப்போடு இணைத்துச் சித்தரித்துள்ளார் பொன்னீலன். காதல், அரசியல் கொள்கை இரண்டும் திரும்பத் திரும்ப உவமிக்கப்படுகிறது. இதில் பல காதல் இணைகள் பேசப்படுகின்றன. இவர்களின் உறவில் உள்ளார்ந்த அன்பையும், நெருக்கத்தையும், போலித்தனமில்லாத தன்மையையும் உணரலாம். குடியிருப்புப் பகுதி மக்களிடம் வறுமையில் அன்பின் செழுமையைச் சுட்டுவதன் மூலம் அன்புதான் எல்லாவற்றுக்கும் மேலானது என்று உணரமுடிகின்றது.

பண்பாடில்லாத பொருளாதாரமும், அரசியலும் ஒரு நாளும் வடிவம் பெறமுடியாது. எனவே மனித வாழ்க்கையின் லட்சியமாகப் பண்பாடு இருக்க வேண்டும். பண்பாட்டு மரபும், ஆண்மீக மதிப்புகளும் பேணிக்காக்கப்பட்டால் தான் வாழ்க்கை சிக்கலற்றதாகும். ஒரு தனி மனிதனின் ஆன்மீக உணர்வுகளையும், மத நம்பிக்கையையும் மதிப்பதும், பண்பாட்டைப் பேண உதவும். மதம் என்பது மனிதநேயத்தை வளர்க்கக்கூடியது. அழிவு சக்தியல்ல என்ற கருத்தை மறைமுகமாக இப்புதினம் எடுத்துரைக்கிறது. மதம் மனிதனைப் பண்படுத்துகிறது. கடமையைச்செய் பலனை பிரம்மத்திடம விட்டுவிடு என்று கீதை கூறுவதன் பொருளை உழைப்பு சமூகத்தோடு பொருத்திச் சொல்லியுள்ளார் பொன்னீலன். கடமை மனிதனுக்குச் சொந்தம் அதன் பலன் சமூகத்துக்கும் சொந்தம் என்று சமூகத்திற்கும் மனிதனுக்கும் உள்ள உறவு சித்தரிக்கப்பட்டுள்ளது.

உழைப்பும், சாபக்கேடும்தான் வாழ்வா? என்ற கேள்வி எழுப்பி உழைப்புத்தான் சமூகத்தின் உயிர்,உழைப்புத் தான் மனித ஆன்மாவின் வெளிப்பாடு, சமூக உழைப்பாக அல்லாது வேறு எந்த வழியிலும் ஆன்மா தன்னை அழகுபடுத்திக் கொள்ளாது. உழைப்பு இயல்பானது அழகானது, இன்பமானது. அதன் மூலமே விடுதலை பெறுகிறது என்று விடையும் அளித்துள்ளார் பொன்னீலன்.

அரசியலில் பண்பாடும், ஒழுக்கமும் தேவை என்று வலியுறுத்துகிறார் பொன்னீலன். ஜனநாயகமும், சர்வாதிகாரமும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள், ஜனநாயக ரீதியாக முடிவெடுப்பதும், சர்வாதிகார ரீதியாக அமுல்படுத்துவதும் திரும்பவும் ஜனநாயகப் பரிசீலனையும் சர்வாதிகார நடவடிக்கையும் இதுதான் சமூக இயக்கம் என்கிறார். அரசியல் பொருளாதார, சமூகப் பண்பாட்டுப் பிரச்சனைகளை வாழ்க்கையின் அனைத்து விபரங்களோடும் சொல்லியிருக்கிறார் பொன்னீலன்.

குடும்ப உறவுகளில் முக்கிய இடம் பெறும் கணவன், மனைவி உறவு பல்வேறு கோணங்களில் ஆராயப்பட்டுள்ளது. கணவன் மனைவிக்கு இடையே ஏற்படும் முரண்பாடுகள், பொருளாதாரச் சிக்கலை மையமிட்டு அமையும் உறவு முறை, பொருந்தா மணம், பாலியல் சிக்கல், ஒழுங்கற்ற உறவு முறைகள் ஆகியன சித்தரிக்கப்பட்டுள்ளன. பொருளாதாரத்தை மையமாகக் கொண்ட குடும்பங்களில் காதலுக்குச் சாதி

தடையாகின்றது. அன்பை மட்டுமே அடிப்படையாகக் கொண்ட குடும்பங்களில் காதல் உறவுக்கு வலுச்சேர்க்கிறது. பணக்காரர்களுக்கு காதல் ஒரு பொழுதுபோக்கு. ஏழைகளுக்கு அது வாழ்க்கையின் அடிப்படை என்று உணர்த்தியுள்ளார். பொன்னீலன். பெரிய தெருக்காரர்கள் போலியான வாழக்கை முறையினால் நிம்மதி இழந்து, வாழ்க்கைச் சிக்கல் உள்ளதாக்கிக் கொள்கின்றனர். ஆனால் குடியிருப்புக்காரர்கள் உழைப்பின் மேன்மையால் வாழ்க்கை உற்சாகமாகக் கொள்கின்றனர். இவர்கள் போலித்தன்மை அற்றவர்கள். மனிதத்தன்மை மட்டுமே கொண்டவர்கள் என்று உழைப்பாளிகளைப் பொன்னீலன் மேன்மைப்படுத்துகிறார்.

"வாழ்க்கை சந்தோஷமானது. அந்த சந்தோஷத்தைக் கொண்டு வருவது உழைப்பு ஒன்றுதான்" என்று கூறி உழைப்பாளர்களின் இயல்பான வாழ்க்கையையும் சிறப்பாய் விளக்கியுள்ளார் பொன்னீலன். மனிதர்களை ஆழமாக கூர்மையாக நுட்பமாகப் பார்த்து பதிவு செய்துள்ள பாங்கு பாராட்டத்தக்கது.

தன்னுடைய படைப்பு அனுபவத்தைப் பொன்னீலன் கூறும்போது வர்க்கப் போராட்டத்தில் தன்னுடைய நேரடிப் பங்களிப்பைச் சொல்லியுள்ளார். சமயங்களின் ஊடாக வாழ்வுக்குப் பொருள் தேடித் துயரத்தோடு, அலைந்த அவருக்கு வாழ்வில் ஆர்வத்தை ஊட்டியதும், மனித மகத்துவத்தையும், சமத்துவத்தையும், சகோதரத்துவத்தையும் ஊட்டியது மார்கசியமே என்கிறார். கேரளாவில் கம்யூனிஸ்ட் ஆட்சி கலைக்கப்பட்ட போது ஜனநாயகத்தின் மீது அவருக்கு நம்பிக்கையின்மை ஏற்படுகிறது. பிற்போக்காளர்களை ஒடுக்கத் தொழிலாளி வர்க்கச் சதிகாரமே சிறந்தது என்ற எண்ணம் ஏற்படுகிறது. தனக்குக் கிடைத்த நண்பர்கள் வழி இடதுசாரி சிந்தனையைப் பற்றி பேசி விவாதித்து முரண்பட்டு புதிய கருத்துக்களை உருவாக்கிக்கொண்டார்.

நேர்மை, வீரம், தியாகம், ஈரம், சாதி, மதம் தாண்டிய மனித உணர்வு கொண்டதலைவர்களால் மார்க்சியத்தின் பால் நம்பிக்கை கொண்டார் பொன்னீலன். மனித ஆன்மாவை நெருக்கிச் சிதைத்த அவசரநிலைக் காலத்துக் கொடுமைகளுக்கு எதிராக குரல் கொடுத்ததன் வழி படைப்பாளனாகிய தனது கடமையைச் செய்திருப்பதாகச் சொல்லியுள்ளாார்.

அரசியல்வாதிகள் பண்பாட்டைப் புறக்கணிப்பதையும் தன்னால் பொறுத்துக் கொள்ள இயலவில்லை என்கிறார் பொன்னீலன். இன்று அரசியலிலிருந்து பண்பாட்டுக் கூறுகள் தூக்கி எறியப்பட்டுள்ளன. இதனால் சமூகத்தின் ஆன்மா சிதைந்து போகிறது. இதற்கு எதிராகவும் படைப்பாளர்கள் போராடக் கடமைப்பட்டவர்கள் என்ற பொன்னீலனின் கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கது.

அரசியலைப் பண்பாட்டுத்தளத்தில் நின்று ஊடுருவி மதிப்பிட முயன்ற இப்புதினம் சமூகம் முப்பரிமாணம் கொண்டது. பொருளாதாரம், அரசியல் பண்பாடு எதில் எந்த ஒன்றைப் புறக்கணித்தாலும் சமூக வளர்ச்சி தடைப்படும் என்பதை முன்வைக்கிறது.

மார்க்சியத்தின் அற்புதமான கொடை மனித உழைப்பு அதன் மூலமே மனித வாழ்க்கை மலர்கிறது என்பது மார்க்சிய அடிப்படை அந்த வகையில் மதிப்பைச் சுட்டும் மார்க்சிய சிந்தனையைப் பன்முகப் பரிமாணங்களில் புதிய தரிசனம் வெளிப்படுத்தியுள்ளது.

# புதுக்கவிதைகளில் மார்க்சியம்

ப. குமரேசன், விரிவுரையாளர், தமிழ்த்துறை,
உருமு தனலட்சுமி கல்லூரி, வடக்குக் காட்டூர், திருச்சி.

**முன்னுரை :**

மார்க்சியக் கோட்பாடுகளின் அடிப்படையில் இலக்கியங்களைத் திறனாய்வு செய்வது மிகுந்து வருகிறது. தமிழ்ப்புதுக்கவிதைகளில் மார்க்சியப்போக்கு மிகுந்துள்ளது. இடதுசாரி சிந்தனையுள்ள கவிஞர்களின் கவிதைகளில் இஃது தவிர்க்கவியலாதது. இத்தகைய கவிஞர்களின் கவிதைகள் சிலவற்றை இக்கட்டுரையில் காண்போம்.

**மாாக்சியம் :**

ஐரோப்பிய நாடுகளை மட்டுமே ஆட்டுவித்த மார்க்சிய பூதம் இன்று உலகநாடுகளையே உலுக்குகிறது. ரஷ்யப் புரட்சிக்குப்பின், கம்யூனிசம் நடைமுறைச் சாத்தியமே என்று உணரப்பட்டு அஃது தவிாக்கியலாத ஒன்றாகிவிட்டது.

"கனவுகளுக்குப் பதிலாக அறிவியலையும், கண்ணீருக்குப் பதிலாக புரட்சியையும் முன்வைப்பதே" மார்க்சியம். மார்க்சியத்தில் முக்கியமான தத்துவம், பொருளாதாரம், விஞ்ஞான சோஷலிசம் என்ற கூறுகள் உள்ளன. இயக்கவியல் பொருள் முதல்வாதமே மார்க்சியத் தத்துவம் ஆகும். பொருளே முதன்மையானது. சிந்தனை இரண்டாம் பட்சமானதே என்பது பொருள் முதல்வாதம் ஆகும்.

"இந்தப்பொருள், சமூகம் உள்ளிட்ட அனைத்துமே இயங்குகின்றன. மாறுகின்றன. மாறாதது எதுவுமே இல்லை. மாறுவதே மாறாதது. இந்த மாற்றங்கள் அனைத்தும் சிலவிதிகளின்படியே மாறுகின்றன" என்பதே இயக்கவியல் பொருள் முதல்வாதம்.

உற்பத்தி முறையே சமுதாய வளர்ச்சியை நிர்ணயிக்கும் தீர்மானகரமான சக்தியாக விளங்குகிறது. உற்பத்தி முறையின் விதிகளை ஆராய்ந்து வரலாற்றுப் பொருள் முதல்வாதக் கோட்பாடுகளை மார்க்சும், எங்கெல்சும் முன்வைத்தனர், மேலும் சுரண்டல் இல்லாத புதிய சமுதாயத்தின் முதல் வடிவமாகிய சோஷலிசத்தையும் முன்வைத்தனர்.

சோவியத்ரஷ்யா உலகின் முதல் சோஷலிச நாடாகியது. ரஷ்யாவின் கம்யூனிச வீழ்ச்சிக்குப்பின் "கம்யூனிசம் தோற்றது. முதலாளித்துவம் வென்றது" என்ற முதலாளித்துவ சிந்தனையாளர்கள் கொக்கரித்தனர். இன்று முத்லாளித்துவத்தின் கோரமுகம் கிழிபட்டு அந்நாடுகளிலேயே மக்கள் செங்கொடி ஏந்தி போராடத் துவங்கி விட்டனர்.

முதலாளித்துவ நர்டுகளின் தவறான பொருளாதாரக் கொள்கைகளினால் உற்பத்தி சக்திகளுக்கும், உற்பத்தி உறவுகளுக்கும் இடையே ஏற்றத்தாழ்வுகள் உருவாகிவிட்டன. இத்தகு தவறான பொருளாதாரக் கொள்கைக்கு இன்று இந்தியாவும் இலக்காகிவிட்டது. இதனைத் தமிழ்ப்புதுக்கவிதைகள் வெளிப்படுத்தும் பாங்கினை இனிக்காண்போம்.

**புதுக்கவிதைகளில் அரசியல் :**

"உலகில் என்று நாகரிகம் தோன்றியதோ அன்றே அரசும் தோன்றியிருக்க வேண்டும்" என்று கூறலாம். மனித சமுதாயம் கட்டுப்பாட்டோடு வாழ அரசு தேவைப்படுகிறது. ஆனால் அரசும், அரசு இயந்திரங்களும் உழைக்கும் மக்களுக்கு எதிராகச் செயல்படும் பொழுது அங்கே புரட்சி தவிர்கக முடியாததாகிறது."ஒவ்வொரு புரட்சியும் பழைய சமுதாயத்தை அழிக்கிறது, எனவே அதற்கு சமுகத்தன்மை உண்டு. ஒவ்வொரு புரட்சியும் பழைய ஆடசியைத் தூக்கியெறிகிறது. எனவே அதற்கு தன்மை உண்டு"2 என்பார் காரல்மார்க்ஸ். பாட்டாளிவர்க்கம் முதலாளி வர்க்கத்தைத் தூக்கியெறிகின்றபொழுது அங்கே புரட்சி கட்டாயமாகிறது. இதனை கவிஞர் காசி ஆனந்தன் "புரட்சி" என்று தலைப்பிட்டு,

"மாடியில் இருந்து/துப்பினால்/குடிசையில் விழும்/குடிசையில் நின்று
துப்பினால்/மாடியே/விழும்"3

என்று முதலாளிவர்க்த்தை எச்சரிக்கிறார்.

"புரட்சி என்பது ஆளும்வர்க்கத்தைப்/புரட்டித்தள்ளி இடம் பிடிக்கிற
உழைக்கும் வர்க்க யுத்த தந்திரம்"4

என்று உழைக்கும்வர்க்கத்தினருக்கு அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றும் யுத்ததந்திரத்தைச் சொல்லிக் கொடுக்கிறார் கவிஞர். 1968-ல் இந்தியாவில் நக்சல்பாரி எழுச்சி தேன்றியது. இதனால் நாடெங்கும் புரட்சி அலைகள் கொந்தளித்தன. இது தமிழ்க்கவிஞர்களையும் ஒரளவு பாதித்தது என்றே கூறலாம். வர்க்கப்போரில் உயிர்நீத்த நக்சல்பாரி இயக்கத்தோழன் பாலனின் சிலைதிறப்பு விழாவில் கரும்பாயிரம்,

"பாலன் சிலைக்கா வழி/கேட்கிறீர்கள்?/வழிகள் யாவையும் அவன்வழி
காட்டுமே!/நாலா திசையிலிருந்தும்/வந்திருக்கறீர்களா?
திசைகள் யாவையும் வழி/சொல்லி இருக்குமே/கிழக்கிலும் மேற்கிலும் சூரியன்
சிவப்பது/வானக் கண்ணாடியில்/அவன் முகம் தெரிவது"5

என்று சொல்லி நம் நெஞ்சை நெகிழ வைக்கிறார்.

### மார்க்சியக்கவிதைகளில் பெண்கள் :

"பெண்கள் வெறும் உற்பத்திக் கருவிகளின் நிலையில் இருத்தப்பட்டிருப்பதை ஒழிக்க வேண்டும்"6 என்பார் காரல்மார்க்ஸ். பெண்களை வெறும் போகப் பொருளாக, கொத்தடிமைகளாக பாவிக்கும் மனப்பாங்கே உலகம் முழுக்க நிலவுகிறது. இதற்குக்காரணம் பெண்கள் இரட்டை நுகத்தடியைச் சுமப்பவர்கள் என்பார் லெனின். பெண்களுக்கு தனிஉடைமை சுரண்டலால் ஒருபுறம் பாதிப்பு, மறுபுறம் ஆண் ஆதிக்கத்தால் பாதிப்பு. இதனை

"உன்/புன்னகையைப்/பறிமுதல் செய்தது
வரதட்சணை அல்ல/வாழும் சமுகச்/சுரண்டல் அமைப்புகள்
பொருள் உற்பத்தி உறவில்/நுகர்வில்...../சமுகமன்றில்
சமபங்கிழந்துவிட்டுச்/சமையல் அறையில் ஒரு/ஆசனம் அறையில் ஒரு
ஆசனம் பெறுகிறாய்"7

என்று பெண்களின் அவலநிலையை வெளிப்படுத்துகிறார் தமிழன்பன். கவிஞர் எஸ். அறிவுமதி தனது கவிதையில்,

"ஒரு வேளை/கற்பிக்கப்பட்ட/காரணங்களோடு...../என்
மரணச் செய்தி/இங்கிருந்து/அதற்காக நீ/உடன்கட்டை ஏறப்போகிறேன்
என்று உளறிவிடாதே !/அப்போது உன்/கையில்/இருக்க வேண்டியது
காற்/சிலம்பல்ல.../செங்கொடி/ஆம்/இனியவனே!"8

எனக்கூறுகிறார். வீட்டுக்குள்ளே பெண்களைப் பூட்டிவைத்து அவர்கள் கையில் சமையல் கருவிகளையும், துடைப்பத்தையும் கொடுத்த ஆண்வர்க்கம், மார்க்சியத் தாக்கத்தால் இன்று செங்கொடியைக் கொடுத்து போராடத் தூண்டுவதை இக்கவிதை வழி நாம் உணர முடிகிறது.

### புதுக்கவிதைகளில் சமுதாயம் :

"இதுநாள் வரையிலுமான சமுதாயங்களின் வரலாறு அனைத்தும் வர்க்கப் போராட்டங்களது வரலாறே ஆகும்"9 வரலாற்றுக் கட்டத்தில் உருவாகின்றன. பெரும்பாலும் உழைக்கும் வர்க்கம் பட்டாளி என்ற வர்க்கம் பட்டாளி வர்க்கமே. அவர்களது உழைப்பைச் சுரண்டி உண்டு கொழுப்பதுதான் முதலாளிவர்க்கத்தின் வேலை. இதனை எங்கெல்ஸ், "ஒட்டுமொத்த உற்பத்தியே சமுகமயமாகிவிட்டது. ஆனால் இதன் பயனமட்டும் சில முதலாளிகளுக்குச் சொந்தமாகிவிடுகிறது. இதுதான் முதலாளித்துவத்தின் அனைத்து முரண்பாடுகளுக்கும், சமூகப்பகைமைகளுக்கும் அடிப்படைக் காரணமான கருவாக உளளது""10 என்கிறார். இக்கூற்றை கவிஞர் இளவேனில் தனது கவிதையில்,

"சொர்க்கத்தை நாங்கள்/நிர்மாணம் செய்கையில்,/நரகமே எங்களுக்கு
நிச்சயிக்கப்படுகிறது !/தேசமே எங்கள்/அமுதைப் பருகும்போது/எங்கள்

பிச்சைப் பாத்திரங்களில்/விஷமே வார்க்கப்படுகிறது !...

பகலிலே நாங்கள்/இருளை விழுங்குகிறோம் !/இரவிலே நாங்கள்

புதிய அடிமைகளை/உற்பத்தி செய்கிறோம் !11

எனப் பாட்டாளி வர்க்கத்தின் அவல நிலையைப் படம்பிடித்துக் காட்டுகிறார்.

இங்கே மக்கள் வர்க்கங்களாக மட்டும் பிளவுபடவில்லை சாதிகளாக, உட்சாதிகளாகப் பிரிந்து கிடக்கிறார்கள். இதற்குத் தீர்வாக,

"பெரிய பண்ணையினை எதிர்த்துப்/போரிடும் போரிலேதான்/பறையனின் தோள்களோடு

படையாட்சித் தோள்களும் சேரும்/பறையனும் சிறியனில்லை/படையாட்சி பெரியனல்ல

இருவரும் கூலி என்னும்/இருப்பிலே பிணைந்த அடிமை !/இரும்பினை உடைப்பதற்கு

இருவரும் இணையும்போது/நொறுங்கிடும் சாதிச்சனியன் !12

என வர்க்கப் போராட்டத்தின் பொழுது உழைக்கும் மக்கள் ஒன்று திரண்டால் சாதிச்சனியன் தூள் தூளாய்ப்போகும் என்கிறது இக்கவிதை.

## புதுக்கவிதையில் நீதித்துறையும், காவல்துறையும் :

ஆளும்வர்க்கத்தினர் தங்களையும், தங்கள் கொள்கைகளையும் மூலதனத்தையும் பாதுகாத்துக்கொள்ளும் கவசங்களாக நீதித்துறையும், காவல்துறையும், இராணுவமும் செயல்பட்டு வருகின்றன. இத்தகைய ஒடுக்குமுறை நிறுவனங்கள் முதலாளிகளின் காலை நக்கிப்பிழைப்பன. ஏகாதிபத்திய வல்லூறுகளின் கட்டளைக்கு இவை பணிந்து வாலை ஆட்டுவன. இன்றையநீதிமன்றங்கள் நிலைகுறித்து,

"கொளுத்தும் நிலப்பிரபுத்துவக்கரங்களைக்/குலுக்கிக் கொண்ட நீதிமன்றங்கள்

காயப்பட்ட எங்கள் கரங்களுக்கே/சட்டவிளக்கம் செய்து சங்கிலிமாட்டியது"13

என்று குறிப்பிட்டு கவிஞர். மேலும்,

"மேட்டுக் குடிகளிலே - எத்தனை/வேசிகள் மறைந்துள்ளார்

காட்டிக் கொடுத்ததுண்டா? இந்தக்/காவல் வெறிநாய்கள்"14

என்று காவல்துறை எந்த வர்க்கத்திற்கு, என்ன வகையான சேவைபுரிகிறது என்று ஆவேசப்படுகிறார் கவிஞர்.

## உலகமயமாக்கல் குறித்து :

உலகம் முழுவதும் உள்ள நாடுகளின் பொருளாதாரங்கள் மேலதிகமாக ஒருங்கிணைந்து வருவதாகவும், இதனால் செல்வவளம் அனைவர்க்கும் பரவலாகும் என்றும் சொல்லிக்கொண்டே உலகமயமாக்கலைப் பிற நாடுகளில் திணித்து வருகின்றன ஏகாதிபத்திய நாடுகள். இதனால் உற்பத்தி உறவுகளிலும், உற்பத்தி சக்திகளிலும் ஏற்றத்தாழ்வுகள் ஏற்பட்டு முதலாளிவர்க்கம் மட்டுமே ஆதாயமடைகிறது. இன்றைய தனியார்மய-தாராளமயமாக்கலின் விளையாக அடிமைநாடுகள் பொருளாதார ரீதியான சீர்குலைவைச் சந்திக்கின்றன. மக்கள் பன்னாட்டு நிறுவனங்களின் தயவால் வாழ வேண்டிய நிர்பந்தம் ஏற்படுகிறது. இதனைக் கவிஞர் சோம.இராசேந்திரன்,

"சொன்ன/வேலையைச் செய்/அரிப்பெடுக்கும்போது/சொறிந்து விடு/எச்சில் கைகளால்/வீசுவதைக்

கவ்விக்கொள்/எட்டி உதைத்தால்/பணிவோடு ஏற்றுக்கொள்/காறி உமிழ்ந்தால்

துடைப்பதற்கு/கைக்குட்டைகள் வாங்காதே/எவர்/முகத்தில் எச்சில்/அதிகமாய் வழிகிறதோ

அவர்களுக்கே/பதவிகள் வழங்கப்படும்/எதற்கும்/எதிர்க்கத் துணியாதே/பழகிக்கொள்

பக்குவமாய் அனைத்தையும்/தனியார்மயமென்று/தவறுதலாய் உளறாதே/எல்லாம் உலகமயம்"15

என்று தனியார்மய - உலகமயத்தின் கோர முகத்தை நம் கண்முன் நிறுத்துகிறார்.

## முடிவுரை :

இன்று உலகம் முழுவதும் வணிகச் சந்தையாகச் சுருங்கி வரும் காலமிது ! இப்புவிப்பரப்பு முழுவதையுமே ஏகாதிபத்திய நாடுகள் ஆக்கிரமித்துக் விழைகின்றன. இவர்கள் இங்குள்ள மக்களின் உழைப்பையும், மூலதனத்தையும் உறிஞ்சிவிட்டு இன்னுமொரு எத்தியோப்பியாவாகவோ, உகாண்டாவாகவோ மாற்றிவிடுவர். இத்தகைய கோரமுகத்தை அழித்தொழிக்க மார்க்சியமே மாற்று என்று மேற்கூறிய புதுக்கவிதைகள் நிருபித்துள்ளன.

# சுபாஷ்சந்திரபோசின் "சிவப்பு நாளங்கள்" சிறுகதைத் தொகுப்பில் மார்க்சியத் தாக்கம்

*இரா. திராவிடராணி,* தமிழத்துறை,
குந்தவை நாச்சியார் அரசு மகளிர் கலைக்கல்லூரி. தஞ்சாவூர்.

## முன்னுரை

திருவையாறு அரசர் கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிந்து வரும் முனைவர் சுபாஷ் சந்திரபோசு அவர்கள் "மாவீரன் வாட்டான்குடி இராணியன்", "சாம்பவான் ஓடைச் சிவராமன்", "பாரதி நமது நதி", "கண்ணந்தங்குடி" முதலான நூல்களும் இன்னும் இரண்டு சிறுகதைத் தொகுப்பும், புதினங்களும் எழுதியுள்ளார். காவிரி பாயும் தஞ்சை மாவட்டத்தில் நன்செய்யும் புன்செய்யும் கொஞ்சித் தவழும், இங்கே மாடுகட்டிப் போரடித்தாலும் மாளாது செந்நெல் என்று யானை கட்டிப் போரடிப்பார்களாம். இத்தகைய செழிப்பு வாய்ந்த மருத நிலப்பகுதியில், மனித இனத்திற்குத் தேவையான உணவின்றி - உடையின்றி - நாயிலும் கேடாக வாழ்ந்த சேரி மக்களின் வாழ்க்கை நிலையையும், அவர்களை அடிமைப்படுத்திய பண்ணையார்களின் அடக்கு முறைகளையும். அந்தச் சேரி மக்களுக்காகப் போராடிய பொதுவுடமைத் தோழர்கள் பற்றிய போராட்ட வரலாற்றையும், சித்தாந்தத் தெளிவோடும், வாழ்க்கை இயல்போடும் எதார்த்தமாக தமது சிவப்பு நாளங்கள் என்றும் சிறுகதைத் தொகுப்பில் பதிவு செய்து இருக்கின்றார். இவருடைய தந்தையார் விடுதலைப் போராட்டக் காலத்தில் சுபாஷ் சந்திரபோசுடன் இணைந்து விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு தியாகி. பிரிக்கப்படாத தஞ்சாவூர் மாவட்டத்தில் 1943இல் விவசாயச் சங்கம் தோன்றிதற்குப் பிறகு பொதுவுடமைச் சித்தாந்தம் எவ்வாறு மக்களது மனத்தைப் பாதித்தது என்பதையும் இத்தொகுப்பில் காணமுடிகிறது.

## மார்க்சீயம் - விளக்கம்

இலக்கியங்கள் சமூக இயக்கத்தையொட்டிப் பல்வேறு போக்குகளைத் தாமாகவே ஏற்றுக் கொள்கின்றன. இலக்கியமும் சமூகத்தின் உற்பத்தி பொருள்தான் என்று மார்க்சீய வாதிகள் கூறுவர். காலத்திற்கேற்ப இலக்கியத்தின் வடிவம், பாடுபொருள், நடை ஆகியவை மாறும், மார்க்சியத் தாக்கத்தால் தமிழ் இலக்கியத்தில் உள்ளடக்கங்களிலும், உத்திகளிலும் பல மாறுபாடுகள் வந்துள்ளன. சமூகப் பொருளாதாரக் கட்டுக்களிலிருந்து விடுதலை பெற்ற மனிதன், சமத்துவ சகோதர உறவுகளுடன் வாழ வேண்டுமென்ற மார்க்சீய அணுகுமுறை, தமிழிலக்கியங்களில் தாக்கத்தையும் ஏற்படுத்தியுள்ளது.

மார்கசீயம் என்பது கார்ல் மார்க்சினுடைய கருத்துக்களின் அமைப்பாகும். மார்க்சீயத்தின் மூலர்கள் கார்ல் மார்க்ஸ், பிடெரிக் ஏங்கெல்ஸ் ஆகியோர் ஆவர். மார்க்சியத்தின் மூன்று கூறுகளாவன. பொருள்முதல்வாதம், மார்க்சீய பொருளாதாரம், விஞ்ஞான சோசலிசம் அல்லது கம்யூனிசம் ஆகியன. மார்கசீயம் என்பது பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைச் சுட்டிக்காட்டி, சுரண்டும் வர்க்கத்தையும், சுரண்டப்படும வர்க்கத்தையும் அடையாளங்காட்டி, தொழிலாளர் வர்க்க மேம்பாட்டிற்காக ஒன்றுபட்ட நிலையில் செயல்பட்டு விடிவு காண வேண்டும் என்ற போக்குடையது. சமுதாயத்தில் குறைகள் உருவாக முடியாதவாறு சமுதாயத்தையே மாற்றியமைப்பது தான் சரி என்ற மார்க்சீயக் கொள்கையின் தாக்கம், இவருடைய சிறுகதைத் தொகுப்பில் காணப்படுகிறது.

## சிவப்பு நாளங்கள்

இச்சிறுகதைத் தொகுப்பில் பத்துச் சிறுகதைகள் இடம் பெறுகின்றன.

1. யானை மணி ஓசை 2. எண்ணெய்க்குடம் 3. ஒன்றே குலம் 4. விடிவெள்ளிகள் 5. யானை இறந்தாலும் 6. தாய்க்கோழி 7. விழுதுகள் 8. தியாகத் தழும்புகள் 9. கட்டுத்தீனி 10. கோடைநிழல்.

மேற்கண்ட பத்து சிறுகதைகளிலும் மார்க்சீயத் தாக்கம் இருந்தாலும் "யானை மணி ஓசை",

எண்ணெய்க் குடம்" என்ற சிறுகதை இரண்டிலும் பொதுவுடமைக் கருத்துக்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இவருடைய சிறுகதைகளில்,

1. மாசிலாமணி, 2. கந்தசாமி, 3. பட்டுராசு, 4. சமுத்திரம், 5. இரகுநாதன், 6. வெங்கடாச்சலம், 7. கந்தசாமி, 8. கண்ணுச்சாமி, 9. தங்கவேல், ரத்தினசாமி

முதலிய கதைமாந்தர்கள் போராளிகளாகச் சித்தரிக்கப்பட்டு உள்ளனர். எதிராளியாக அல்லது முதலாளியாகச் சுரண்டக் கூடியவர்களைப் "பண்ணையார்" என்று தான் பெயரிட்டு அழைத்துள்ளார். மேலும் வர்க்கப் போராட்டத்தின் போது களத்தில் நின்று போராடிய வாட்டிக்குடி இரணியன், சிவராமன், களப்பாள் குப்பு ஆகிய போராளிகளின் பெயர்களைக் கதை மாந்தர்களாகவும் குறிப்பிடுகின்றார். ஆண்கள் மட்டுமல்லாமல் பெண்களும் போராட்டத்தில் நேரடியாக ஈடுபட்டிருந்தனர். "விழுதுகள்" என்ற சிறுகதையில் வரும் கருப்பியும், போராளிகளுக்குப் போலீசு வரும் தகவலைக் கொடுக்க மரத்தின் மீது இருந்து கீழே விழுந்து ஊனமான பெண் கமலமும் சான்றாவர். இவள் "தியாகத் தழும்புகள்" என்ற சிறுகதையிலும் இடம் பெறுகின்றாள். "விழுதுகள்" என்ற சிறுகதையில் கந்தசாமி மனைவி, ரெத்தினம் மனைவி ஆகிய பெண்கள் போராளிக்கு இணக்கமாக இருந்தனர் என்பது விளக்கப்படுகின்றது.

இச்சிறுகதை முழுக்க, முழுக்கச் சேரியைப் பற்றியும், சேரி மக்களைப் பற்றியும் இருந்தாலும் தங்களுடைய விடுதலைக்காகப் போராட அவர்களில் யாரும் முன்வரவில்லை. இவர்களுக்காகப் பண்ணைத் தொழிலாளர்களில் உள்ள, அன்றைக்குக் குடியானவர் என்று சொல்லப்பட்ட, இன்றைய பிற்படுத்தப்பட்ட மக்கள்.. அதுவும் கிழக்காசியாவிற்கு அஃதாவது சிங்கப்பூர், மலேசியாவிற்குச் சென்று அங்கே சுபாஷ் சந்திர போசுடன் இணைந்து இரண்டாம் உலகப் போரில் ஈடுபட்ட, மார்க்சியச் சிந்தனைகளைத் தங்களுள்ளே கொண்டவர்களே போராளிகளாகக் களத்தில் இருந்ததாக இவருடைய கதைகளின் வாயிலாக அறிய முடிகிறது. இரணியன் என்ற போராளி மலேசிய வாழ் தொழிலாளர்களின் குடும்பம் நன்றாக இருக்க வேண்டும் என்பதற்காக "யாரும் குடிக்கக் கூடாது" என்று சட்டம் போட்டானாம். மேலும், "குழந்தைகளைக் கட்டாயமாகப் படிக்கவைக்கவேண்டும்" என்று அறிவுரை வழங்கினானாம். இச் செய்தி "தாய்க்கோழி" என்னும் சிறுகதையில் இடம் பெற்றுள்ளது.

### தண்டனை

உழைக்கக் கூடிய சேரித் தொழிலாளிகள் சரியாக வேலை செய்யாவிட்டால் சாட்டையால் அடிப்பது, சாணிப்பால் கொடுப்பது, தொழிலாளர் வீட்டுப் பெண்களைப் பாலியல் வன்முறைகளுக்கு ஈடுபடுத்துவது, வலது குதிங்கால் நரம்பை வெட்டி விடுவது, சேரிக்குழந்தைகளுக்குப் படிப்பு மறுக்கப்படுவது. தவறு செய்கின்ற சேரி மக்கள் உள்ளே போகாதவாறு அவர்கள் வீட்டு வாசலில் முள் வைத்து அடைப்பது போன்ற கொடுமைகளைச் செய்தனர். மேலும் "தன்பாட்டுக்குப் போகின்ற நாயைக் கல்லால் எடுத்து எறிவது போல" வழியில் போகின்ற சேரி மக்களை வம்புக்கு இழுப்பார்கள், அடிப்பார்கள், சேரிக்கு என்று எந்த உரிமையும் இல்லை. கட்டும் மனைவி, பெறும் பிள்ளை எல்லாமே பண்ணைக்கு உரிமை உடையவை. பண்ணையும், மடங்களும்இந்தப் பகுதயில் படுத்தியுள்ள பாட்டை ஏடுகொண்டு எழுத முடியாது என்று "விடிவெள்ளி" சிறுகதையில் கூறுகின்றார்.

"ஏச்ச மனிதரெல்லாம் இறுமாந்து கொழுக்கிறார்
காச்ச மனிதர் நச்சுக் கனியெனப் பழுக்கிறார்"

என்று ப. ஜீவானந்தம் பாட்டாளி வர்க்கம் பற்றி பாடியுள்ளது இங்கு நினைக்கத் தக்கது. "யானை இறந்தாலும்" என்ற சிறுகதையில் உழைக்கின்ற பாட்டாளி மக்களுக்கு உழைப்புக்கேற்ற ஊதியம் கொடுக்கவில்லை, அவர்கள் வீட்டில் வளர்க்கும் ஆடு, கோழிகளைக்கூட அனுமதியில்லாமல் அடித்துத் தின்பார்களாம். "பண்ணை ஆட்களுக்குக் கூலி கொடுக்கும் போது பூவை அள்ளுவதைப் போல அள்ளுவார்கள். ஆனால் பண்ணைக்கு அளக்கும் போது, வரால் பாய்வது போலப் பாய்ச்சிப் பாய்ச்சி அளப்பார்கள். கண்ணிக்கு

நேராகவே முழு மூட்டையை முக்கால் மூட்டையாக அளந்து விடுவார்கள்". பண்ணையார் சொல்கிற இடத்தில்தான் பெண் எடுக்க வேண்டும். அழகிய பெண்ணாக இருந்தால் முதலிரவைப் பண்ணையாரோடு கழிக் வேண்டும் என்று "விடிவெள்ளி" சிறுகதை மூலமாக அறிய முடிகின்றது. இந்த நிகழ்ச்சிகளை,

"பறையர் செருப்பு போட்டு வந்தா/பஞ்சாயத்து வைக்கிறீங்க - எங்க
பறச்சி கொஞ்சம் அழகாயிருந்தா /ஆண்ட மக்களே - உங்கப்
பல்லைக் கொஞ்சம் காட்டுறீங்க" என்று தெருக்கூத்து வாத்தியார் வே. சடையமுத்து பாடுகிற நாட்டுப்புறப் பாட்டால் அறிய முடிகின்றது. அடிமைச் சமுதாயம், முதலாளித்துவ சமுதாயத்தின் அடிமை நிலையில் இருந்து விடுதலை அடைவதற்கு "களப்பாள் குப்பு" போன்றவர்கள் போராடினார்கள். பொதுவுடமைச் சமுதாயம் உருவாவதற்கு முதற்கட்டமாகச் சமபந்தி போசனம் தேவை என்பதை விளக்கும் வகையில் "ஒன்றே குலம்" என்னும் சிறுகதையில் "பட்டுராசு" திருமணத்தில் முதல் பந்தியில் சேரி மக்கள் உணவு அருந்துவதாகக் காட்டுகிறார். போராளிகளை அரசாங்கம் அடக்குவதற்காக இரவு, பகல் என்று தேடிக்கொண்டு வருகின்ற போதும் அவர்களுடைய தலைக்கு விலை வைக்கின்ற போதும் பொதுமக்கள், தன் மனைவி - மக்களுக்கு இடையில் படுக்கவைத்தும், வீட்டுக்கு விலக்கான பெண்கள் படுத்து இருக்கின்றார்கள் என்று சொல்லியும், அம்மாப்பிள்ளை உள்ள வீடு வேப்பிலையைச் செருகியும் காப்பாற்றியிருக்கிறார்கள்.

பண்ணையார் ஒருவர், வேலை செய்யாத ஆண்களுடைய குதிங்கால் நரம்பை வெட்டுவதும், பெண்களை மானபங்கம் செய்வதும், மானபங்கம் செய்த பெண்களைக் கொன்று கிணற்றில் வீசுவதுமாகிய கொடுமைகளைச் செய்தார். இது கண்டு நெஞ்சம் குமுறிய இளைஞர் கந்தசாமி அந்தப்பண்ணையாரைக் கொன்று அக்கிராமத்திற்கு எதிரான புரட்சியைச் செய்து முடித்தார். அந்த இளைஞர் கந்தசாமி வயதாகித் தாத்தா கந்தசாமி ஆனுபோது, பெண்களும் ஆண்களைப் போல் சரிநிகர் சமமாக வாழவேண்டும். அதற்காகப் பெண்களும் ஆண்களைப் போல் ஏர்பிடித்து ஊழ வேண்டும், ஆண்கள் செய்கின்ற எல்லா வேலைகளையும் பெண்களும் செய்யவேண்டும் என்று வற்புறுத்துகின்றார். இச்செய்தி "எண்ணெய்க்குடம்" என்ற சிறுகதையில் விரிவாகச் சொல்லப்படகின்றது. அந்தக் காலத்தில் ஆண்கள் புலியைக் கொன்று அதன்பல்லைத் தங்கத்தோடு சேர்த்துத் தாலி செய்து தத்தம் மனைவியர்க்கு அணிவிப்பர். விவசாயச் சங்கம் ஏற்பட்டுப் பொதுவுடமைக் கருத்துக்கள் பரவியதற்குப்பின் பெண்கள் பொதுவுடமைக் கட்சியின் சின்னமான அறுவாள் சுத்தியல் பொறிக்கப்பட்ட தாலியை அணிந்து கொண்டனர். இது பொதுவுடமைச் சித்தாந்தத்திற்குக் கிடைத்த பெரும் வெற்றியாகும். முன்னது வீரத்தின் அடையாளத்தையும், பின்னது விவேகத்தின் அடையாளத்தையும் காட்டுகின்றன.

## முடிவுரை

உழைக்கும் சேரி மக்களின் அடிமை வாழ்க்கையையும், செத்தமாடு தூக்குதல், பிணம் சுடுதல், இழவு சொல்லுதல் முதலிய இழி தொழிலைச் செய்து, தானும் தன் மனைவி பிள்ளைகளும், உடுக்கச் சரியான உடை இல்லாமலும் நாயினும் கேவலமாக வாழ்ந்த, கீழைத் தஞ்சை மக்களின் வாழ்ககை நிலையை எதார்த்தமாகவும் உணர்ச்சிபூர்வமாகவும் தம் சிறுகதையில் விளக்கியுள்ளார். மேலும், அம்மக்களின் அடிமைத்தளையை ஒழிக்கவும், மக்களின் உழைப்பைச் சுரண்டிய பண்ணையார்களை அழித்து மக்கள் சுதந்திரக் காற்றைச் சுவாசிக்கவும், இருப்பதை எடுத்து இல்லாதவனுக்குக் கொடுத்து மேடு பள்ளங்களைச் சமப்படுத்திய தியாகத் திரு உருவங்களையும் தம் சிறுகதையில் காட்டியுள்ளார். இச்சிறுகதைத் தொகுப்பு முழுவதுமே மார்க்சீயத் தாக்கங்களைக் கொண்டு விளங்குகின்றது.

## பார்வை நூல்கள்

1. சுபஷ்சந்திரபோஸ் - ச. சிவப்பு நாளங்கள்

# கரிசல் நாவலில் மனித உரிமைச் சிந்தனை

*ந.ச. திருநாவுக்கரசு*, விரிவுரையாளர்,
ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி, மயிலம்.

மக்களின் சமுதாயக் கட்டுணர்வு உணர்சியால் அடிமையுணர்வாகிற தடைகளை அறுத்துக்கொண்டு விடுதலை உணர்வென்னும் புது வெள்ளம் பெருக்கெடுத்துப் பாயும் கரிசல் என்னும் இந்நாவலில் மனித உரிமை எவ்வாறு மறுக்கப்பட்டுள்ளது என்பதை ஆய்வதே இந்த ஆய்வின் நோக்கம். உலக அளவில் மனித உரிமைகள் பற்றி அறிதலும், பரப்புதலும், நடைமுறைப்படுத்தலும், ஆய்தலும் இன்றியமையா இடத்தைப் பெற்றுள்ளன. இவ்வுவமை உலகப் பொதுமை கொண்டவையாக உள்ளன. இவ்வுலகையே ஒரு குடும்பமாக அமைத்துக் கொள்ளும் ஆற்றல் படைத்தவனாக உள்ளன.

"ஆங்கில ஆதிக்கத்தின் பிடியிலிருந்து இந்தியா விடுதலை பெறும் முன்பே (செப்டம்பர் 1946) அரசியல் நிர்ணய சபை தனது பணியைத் தொடங்கியது. இந்திய விடுதலைப்போரில் உயர்ந்த குறிக்கோள்கள் வழிகாட்டி நிற்க உலகெங்கும் விளைந்துள்ள விடுதலைப் பரகடனங்கள், மக்கள் எழுச்சிகள் ஆகியவற்றின் தாக்கங்களும், தார்மீகப் பலமும் துணைநிற்க, இந்திய அரசியல் சட்டம் உருவாக்கும் பணி மேற்கொள்ளப்பட்டது. பொதுவாக மனித உரிமைகளின் முதன்மைச் சாசனம் எனத் தற்பொழுது உலகெங்கும் போற்றப்படும் ஐ.நா வின் மனித உரிமைகள் பிரகடனம் பொதுச் சபையால் நிறைவேற்றப்படுவதற்கு இரண்டு ஆண்டுகள் முன்னரே தொடங்கப்பட்டது. இந்திய அரசியல் சட்டமைப்புப் பணி என்றாலும் உலக மனித உரிமைப் பிரகடனத்தின் உயிர் நாடியாக உள்ள கோட்பாடுகள் பலவும் ஏற்கனவே இந்திய அரசு அமைப்புச் சட்டத்தில் இடம்பெறச் செயல்பட்டுள்ளன". -1. இவ்வாறு அமைக்கப்பட்ட மக்கள் நல்வாழ்வு மனித உரிமை எவ்வாறு பொன்னீலன் தன் நாவலில் மறுக்கப்பட்டதை எடுத்துக் காட்டுகிறார் என்பதைக் காண்போம்.

## வாழ்வுரிமை

மனித உரிமைப் பாதுகாப்புச் சட்டம் 1993ஆம் ஆண்டு 2(1) (4) மற்றும் ( ஊ ) ன்படி வாழ்வு உரிமை இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் மனித உரிமையாக உறுதி செய்யப்பட்டது. அடிப்படை உரிமைகளில் வாழும் உரிமைகளை இந்திய உரிமைச் சட்டம் 21ல் வகுத்துத் தந்துள்ளன. உரிமை என்பது என்ன? வெறுமே உடலில் உயிர் ஒட்டிக் கொண்டிருக்கும் உப்புச்சப்பற்ற வாழ்க்கை மட்டும் தானா? சம்பத்து உச்சநீதிமன்ற தீர்ப்பு இதனை மறுக்கிறது. கண்ணியத்தோடு வாழ -கல்வி, வேலை, ஆரோக்கியம், குடியிருப்பு போன்ற உரிமைகளை உள்ளடக்கியதே வாழும் உரிமை என்கிறது" -2.மனித உரிமைகளில் முதன்மையானது வாழ்வதற்கான உரிமை வாழ்வுரிமை இதில் முதன்மை பெறுவது "பசியின்றி வாழ்வது" -3.

அடிப்படையாக உணவுக்கே பஞ்சம் என்ற நிலையில் இந்த நாவலில் "இரண்டு பிள்ளைகள் அவள் சேலையைப் பற்றிக் கொண்டு கஞ்சி...கஞ்சி என்று குதித்துக் குதித்து அழுதன. கொஞ்சம் தள்ளி ஏழெட்டு வெள்ளாடுகள் வேப்பிலைச் சருகு பொறுக்கிக் கொண்டிருந்தன" -4. குழந்தைகள் நிலையும் ஆடுகள் வேப்பிலைச் சருகளை பொறுக்கும் நிலை மனதை அழவைக்கின்றன. இப்படி அடிப்படை வசதியற்ற நிலை. "ஐயோ.... என்ன செய்வேன் அவரு வந்தா கொன்னுப்புடுவாரே ரெண்டுநா பட்டினியாச்சே"-5. என்னு இந்த நாவலில் பல இடங்களில் உணவே இல்லாத நிலைக் காட்டப்படுகிறது. இதனால் குழந்தைகளைத் தாய் அடிப்பதும் கணவன் மனைவி இருவர் சண்டை இப்படி குடும்பச் சூழலில் பெரும் பாதிப்பை ஏற்படுத்துவதை உணர்த்துகிறது.

## தொழிலாளர்கிளின் நல வாழ்வுக்குரிய உரிமைகள்

தலைமை நீதிமன்றத்தின் பல்வேறு தீர்ப்புகளில் வாழ்வுரிமைக்குப் பரந்துபட்ட நிலையில் விரிவான

பொருட்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இலவச சட்ட உதவி, தொழிலாளர்களின் நல வாழ்வுக்குரிய உரிமைகள், சாலைவசதிக்கான உரிமை, சுகாதார வசதிகள் பெற உரிமை, தகவல் பெற உரிமை, சில கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு ஆயுதம் வைத்திருக்கும் உரிமை, விரைவான விசாரணை பெறும் உரிமை, பொருளாதாரக் கட்டுப்பாடு இல்லாமல் பெயல் பெற உரிமை, சிறைச்சாலைகளில் மனிதாபிமானத்தோடு நடத்தப்படும் உரிமை, விலங்கிடப்படுதல், தனிச்சிறையில் அடைக்கப்படுதல் ஆகியவற்றுக்கு எதிரான உரிமை, செயலாக்கப்பட தக்க மேல் முறையீடு செய்யும் உரிமை, அதிகாரமின்றி வீட்டிற்குள் யாரும் வருவதைத் தடுக்கும் உரிமை, வெளிநாடு செல்லும் உரிமை, சுதந்திரமாக வாழ உரிமை, தூக்கிலிடப்படுவதற்கு எதிரான உரிமை"-6. இவ்வாறு பல்வேறு விரிந்த களங்களில் உச்சநீதிமன்ற தீர்ப்புகளால் வாழ்வுரிமையின் பரிமாணங்கள் தெளிவு படுத்தப்பட்டுள்ளன.

இவ்வாறு வகுத்த உரிமைகளில் ஒன்றுதான் தொழிலாளர்களின் நல உரிமை இது எவ்வாறு மறுக்கப்படுகிறது. "ஒரு மாசமாச் சொல்லுதன்ல ரொம்ப பாவமா இருக்கு மொதலாளி அரப்பட்டினி காப்பட்டினியாக் கிடந்து வதைக்கிறாலுக பழைய மொறப்படி தானியமாவே கொடுத்திருங்க" கொடுத்திருங்க ஒங்களுக்கு மட்டும் என்ன தானியக் கணக்கு". அது என்ன மொதலாளி, தெரியாதது போலச் சொல்றீங்க? ரூவாய்க்கி ஒன்னரப்படி தானியம் விக்கிற போது வச்ச கணக்கு, முக்காப்படிப் புல்லு விக்கிற நேரத்தில் எப்பிடிச் சரிப்டும் மொதலாளி? கூலிக் காரன்னாலும் அவனுக்கும் வகுறு இருக்கில்ல?""எத்தனை வாட்டி சொன்னாலும் ஒனக்கு இந்தத் திமிர்பேச்சு போகல்லியே?" முதலாளி புருவத்தை நெறித்தார்" -7. இப்படி உழைக்கும் மக்களுக்கு சரியான ஊதியம் கிடைப்பது இல்லை, அடிப்படை உரிமைகளில் ஒன்று வேலைக்குத் தகுந்த கூலி பெறுதல் என்பதாகும் இது உழைக்கும் மக்களுக்கு முதலாளிவர்க்கம் தரமறுக்கிறது.

## மருத்துவ வசதிகள் இன்மை

வாழ்வுரிமைகளில் மருத்துவ வசதிகள் பெறுதல் என்பது ஒரு மனிதனுக்கு மிக முக்கியமான ஒன்று அரசியல் சட்டம் 21இல் வகுத்துள்ள கருத்தின் படி பொது நலமாக மருத்துவ நலம் விளங்குகிறது. பொதுமக்கள் உதவிகள் பெறுவதற்காகப் பல மருத்துவமனை இருந்தாலும் எளிய ஏழை மக்களுக்கு மருத்துவமனைகள் உதவுவதில்லை, அங்கு இலவச மருத்துவம் செய்ய வேண்டும். ஆனால் மருத்துவமனையில் பணம் கேட்கின்றனர். அவ்வகையில் ஏழை மக்கள் மருத்துவ நல உதவிகள் பெறுவது கடினமான ஒன்றாகிப் பணியுடனே வாழ்நாளைப் போக்க வேண்டியுள்ளது. " ஆமா தரும ஆஸ்பத்திரித்தான் மருந்தும் நாம வீடுகள்ல தருமங் குடுக்கறாப்லதான் குடுக்கிறாக, நோய் சொகமாகனும்னா டாக்டர் வீட்ல பார்த்து அஞ்சோ, பத்தோ காணிக்கை வச்சாத்தான் முடியும் -8. என்ற பகுதி அச்சூழலைக் காட்டுவதாக உள்ளது. மருத்துவ உதவி பெறுதல் அடிப்படை உரிமையாகும் உயர்நீதிமன்றத் தீர்ப்பின் படி சிறந்த அரசாங்கமாகத்திகழ வேண்டும் என்றால் மக்களுக்குத் தேவையான் மருத்துவம் தேவை.

## பேச்சு உரிமை மற்றும் சிந்தனை வெளிப்பாட்டு உரிமை

"பேச்சுரிமை, சிந்தனை வெளிப்பாட்டுரிமை, அமைதியாய் படையாயுதங்கள் இன்றிக்கூட உரிமை, கழகங்கள், சங்கங்கள் அமைக்க உரிமை, இந்தியாவில் தங்கு தடையின்றி எங்கும் நடமாடும் உரிமை, இந்தியாவில் எங்கும் குடியிருக்க வீடமைத்து குடியேற உரிமை, வாணிகம், தொழில் வாழ்க்கைத் தொழில், பணித் தொழில் எதனையும் கீழ் வழங்கப்பட்டுள்ளன"-9. கரிசல் நாவலில் மனித உரிமைச் சிந்தனைஇந்திய அரசியலமைப்புச் சட்டம் பிரிவு 19,20,21,22களில் இவ்வவை உரிமைகள் பேசப்படுகின்றன. "தன்னுடைய நம்பிக்கையையும் அபிப்ராயத்தையும் தங்கு தடையின்றி வெளிப்படுத்தும் உரிமை ஒவ்வொரு குடிமகனுக்கும் உண்டு. அவர்களது சிந்தனையை வாய்மொழியாகவோ, எழுத்தாலோ, அச்சிலோ, படமாகவே அல்லது வேறெந்த முறையிலோ வெளிப்படுத்தலாம். குடியரசு நிர்வாகத்தில் இந்த உரிமைக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது." (10)

"தன்னுடைய வேலையை உட்டுப்புட்டு வாத்தியார் பின்னாடி எப்பய்யா சுத்தினென் ஒரு நாள்

சொல்லுங்க அவசரமாக நேத்து மடத்துப்பட்டிக்கிப் போச் சொன்னீக ஒழவக் கவனிக்க முடியாமப் போச்சி மத்தபடி என்னிக்காச்சும் வேலையில் கொற வச்சனா? என்று வாதாடினான்."

"சரி, சரி ஒஞ்சோலியப் போய்ப்பாரு" என்கிறார் முதலாளி

"கூலிக்காரன்னாலும் அவனுக்கும் வகுறு இருக்கில்ல?"

"எத்தனை வாட்டி சொன்னாலும் ஒனக்கு இந்தத் திமிர்ப்பேச்சு போகல்லியே முதலாளி புருவத்தை நெறித்தார்".11. என்று, இப்படிப் பேச்சுரிமை மறுக்கப்படுகிறது. அவனுடைய சிந்தனையை அவன் ஒரு கூலித் தொழிலாளி என்பதால் முதலாளி மறுக்கிறார். எனக் கொள்ள வேண்டும். "மொதலாளி நம்ம நன்மை காகத்தான் சொல்லுவான் ஓரம் போட்டாத்தான் வெளச்சல் காணும் ஒழைக்கிறவனுக்கும் வகுத்துக்குக் குடுத்தாத்தான் நல்லா ஒழைப்பானுக"12. தன்னிடம் கூலி வேலை செய்யும் அடிமை ஆள் என்னும் நிலையில் பேசக் கூட உரிமை மறுக்கப்படுகிறது. இத்தகையான இந்நாவல்களில் பல இடங்களில் காணப்படுகின்றன.

## குடிநீர் பெறும் உரிமை

"வாழ்வுரிமை என்கிற பொழுது அது உயிர் வாழ்கிற உரிமையை மட்டும் குறிப்பதாகிவிடாது. அந்த வாழ்வைக்கான அடிப்படை வசதிகளைப் பெறுவதும் அதில் அடங்கும் சாலை, குடிநீர், வடிகால் வசதி, தெருவிளக்கு போன்ற வசதிகளை ஏற்படுத்துவது அரசின் கடமை"13. இப்படி பல நிலைகளில் சட்டம் வகுத்தாலும் குடிநீர் பிரச்சனை இந்தளவும் இந்நாவலில் மக்கள் பட்ட துன்பம் காட்டப்பட்டுள்ளது.

"இங்கு குடிக்கத் தண்ணீர் கெடைக்குதா? நம்மூர்ல பெரிய கஷ்டம் ராவு பூராக் காவல் கெடந்தாலும் ஒரு கொடம் தண்ணி இல்லாம அஞ்சிக்கு மூணு சனங்க ஊரைவிட்டு போயிட்டாக சுப்பிரமணியன் குரலில் உயிர் இல்லை நாட்பட்ட நோயாளி போல அவர் சக்தியற்றுப் பேசினார். இங்கயும் தண்ணிப் பஞ்சந்தான் நல்ல தண்ணி கெணறுவத்திப் போச்சி கம்மாயில ஊத்துத் தோண்டினாலும் ஊறுதில்ல கத்தாளம் பட்டிக்குப் போய்த்தான் தண்ணி கொண்டு வர்ராங்க ! வருசா வருசம் இதே பாடுதான் அரசாங்கம் கவனிக்கனும் என்றார் சுப்பிரமணியன்"14. என்ற இப்பகுதி இக்கிராமத்தில் தண்ணீர்ப்பஞ்சம் உள்ளது என்பதையும் காட்டுகிறது. இவ்வாறு மக்களுக்குத் தேவையான அடிப்படை வசதி குடிநீர் பெறவியலாதவாறு அவலநிலையில் உள்ளதை அறிய முடிகிறது.

## பெண் உரிமை மறுப்பு

தற்கால சமூகத்தில் பெண் உரிமைக்குப் பிற உரிமைகளைக் காட்டிலும் முதன்மை தருகின்றவர். அன்னிபெசன்ட் அம்மையார் சரோஜினி நாயுடு அம்மையார், துர்காபாய் தேசமுக்கு கஸ்தூரிபாய் காந்தி, சகோதரி நிவேதிதா போன்றோர் பெண்ணுரிமைக்கு வலிமை சேர்த்தனர். 1975க்குப் பிறகு இந்தியாவில் பெண்ணுரிமை இயக்கங்கள் பல மக்கள் மத்தியில் பெண்ணுரிமை தொடர்பான விழிப்புணர்வை ஏற்படுத்தின. கிழக்கு மற்றும் மேற்கு ஆப்பிரிக்க நாடுகள் அரேபிய, வளைகுடா நாடுகள் வடஅமெரிக்கா மற்றும் ஐரோப்பா நாடகள் சில பாலின வேற்றுமையை நடைமுறையைப்படுத்தின. இந்தியாவில் பீகார், குஜராத், மத்திய பிரதேசம், உத்திரப்பிரதேசம், மகாராஸ்டிரா முதலான மாநிலங்களும் இதற்கு விதிவிலக்கில்லை அகில உலக குடி உரிமை மற்றும் அரசியல் உரிமை உடன்படிக்கைப் பிரிவு 26 மகளிருக்குப் பாலின சமத்துவத்தை வலியுறுத்தின.

## இந்தியச் சட்டங்கள்

1. உடன்கட்டை மறுப்புச் சட்டம் 1829-ல் கொண்டுவரப்பட்டது. 2. குழந்தை மணம் தடைச்சட்டம் 1929-ல் கொண்டுவரப்பட்டது. 3. வாழ்க்கை வாழ்வுரிமை ஆண்களும் பெண்களும் சமம். 4. இந்து திருமணச் சட்டம் விவாகரத்துக்கு 1975ல் வழிவகுக்கப்பட்டது. 5. வதவை மறுமணம் சட்டரீதியாக 1976ல் ஏற்றுக்கொள்ளப்பட்டது. 6. வரதட்சணை தடைச்சட்டம் 1961ல் கொண்டுவரப்பட்டது. 7. இந்து சொத்துரிமைச் சட்டம் 1937லும் 1956லும் கொண்டுவரப்பட்டது. 8. தமிழ்நாடு பெண்களிடம் குறும்பு செய்வதைத் தடை செய்தல்

சட்டம் ஆளுநரால் 1998ம் ஆண்டு சூலைத் திங்கள் 30ம் தேதி வெளியிட்டது.

இவ்வளவு உரிமைகள் பெண்களுக்குச் சட்டம் அரசாங்கங்கள் வகுத்து இருந்தாலும் இந்தப் புதினத்தில் "என்னளா? நீயும் பத்தினி வேசம் போடுதியா ஒங்க பேத்தி மாதிரி மொதலாளி நான் இது நாயமா ஆமா இது எம்மகபுள்ள பேத்தி நான் உனக்குங் கூட தாத்தா போலத்தான் தோணுதா" என்ற பகுதியை இங்கு குறிப்பிடலாம். முதலாளி வேட்டை நாய் போல் அவள் மேல் பாய்ந்தான். மூக்காயி பிடி கொடுக்காமல் போக்குக் காட்டிப் பார்த்தாள். அவரிடமிருந்து தப்ப முடியாது என்பது அவளுக்கு உறுதியாயிற்று. வேதனை தாங்காது குமுறிக் குமுறி அழுதவாறு அவள் சொன்னாள், இந்தா இந்த உடம்புதான் வேணும் என்ன வேணும்னாலும் செஞ்சிக்கோ. செஞ்சி முடிச்சதும் எங்காயும் தூக்கிக் கொண்டுபோய் *புதைச்சிடு*-15 என்ற இப்புதினப் பகுதி பாலியல் வன்முறையால் பாதிக்கப்பெறுதலைக் காட்டுகிறது.

## முடிவு

*கரிசல் புதினத்தில் வரும் திருநெல்வேலி மாவட்டத்து* பெருமாள்புரம் எனும் சிற்றூர் பல நிலையில் உரிமைகள் ஏதும் இல்லாத வகையிலும் அடிப்படை உரிமைகள் மறுக்கப் பெற்றவகையிலும் உள்ளன. கூலித் தொழிலாளி மனிதர்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவு, உடை, உறையுள், நீர், மருத்துவ நலம், உழைப்பாளர்களுக்கு ஏற்ற கூலி, பேச்சுரிமை, பெண்ணுரிமை போன்ற சூழ்நிலைகளில் இல்லாத நிலையையும் மறுக்கப்பெறும் சூழ்நிலையையும் அறிய முடிகிறது.

## அடிக்குறிப்பு

1. இராஜா முத்திருளாண்டி, மனித உரிமைகள், பக் .20
2. சு.போ. அகத்தியலிங்கம், மனித உரிமைகள், பக். 52
3. இராஜா முத்திருளான்டி, இலக்கியத்தில் மனித உரிமைகள், பக். 54
4. கரிசல், பக்.43
5. கரிசல், பக் 45
6. இராஜா முத்திருளாண்டி, மனித உரிமைகள், பக் .24,25
7. கரிசல், பக். 47
8. கரிசல், பக். 67
9. இராஜா முத்திருளாண்டி, மனித உரிமைகள், பக் .22
10. சி.எஸ். தேவநாத், அடிப்படை மனித உரிமைகள், பக்.29
11. கரிசல், பக். 47
12. கரிசல், பக். 48
13. சி.எஸ். தேவநாத், அடிப்படை மனித உரிமைகள், பக்.40,41
14. கரிசல், பக். 76
15. கரிசல், பக். *151, 152*.

# உருவகக் குறியீட்டு வசன கவிதையில் - மார்க்சியத் தாக்கம்

திருமதி. *பிரீதி காளிமுத்து*, தமிழ்த்துறை,
இணைப்பேராசிரியர், அ.ப.ம. கலைக் கல்லூரி,பழனி.

புதுக்கவிதை என்ற யாப்பு தமிழுக்கு வந்தபோது பழைய யாப்பு முறைகள் பின்பற்றப்படவில்லை. தமிழ்ச்சமுதாயத்தை முன்னேற்ற வேண்டும் என்ற நிலையில் மார்க்சிய, பகுத்தறிவுக் கருத்துக்களைப் புதுக்கவிஞர்கள் தத்தம் கவிதைகளில் புகுத்தினர். கவிதையின் உள்ளீடாகப் படிமங்களையும், குறியீடுகளையும் பயன்படுத்தினர். "ஒன்றின் வழியாக இன்னொன்றை அல்லது பலவற்றைச் சுட்டுவது - உணர்த்துவது படிமம். குறியீடு என்பது படிமங்களின் ஓர் உயர்வகை" (ஞானி. தமிழன்பன் படைப்பும் பார்வையும், ப. 16-17)

புதுக்கவிதை எழுதிய வானம்பாடிக் கவிஞர்களில் தமிழன்பனும் ஒருவர். நயமான நளினமான கவிதைகளைப் படைத்தவர். அவர் கவிதைகளில் பழகுதமிலும் அழகுதமிழும் அக்காவும் தங்கையும் போல் கைகோர்த்துச் செல்கின்றன. செந்தமிழும் பைந்தமிழும் செழுந்தமிழோடு கொஞ்சி விளையாடுகின்றன. இயற்கைப் புனைவுகளில் படிமத்தைப் புகுத்தி நடப்பியலையும், மார்க்சியத்தையும் பாடியவர். பெரியாரிடமும் பாரதிதாசனிடமும் அளவு கடந்த பற்றுக் கொண்டவராதலால்அன்னார்தம் கருத்துக்களும், இவர் கவிதைகளில் பிரதிபலிக்கின்றன. எழுபதுகளில் அவர் எழுதிய "மோர்மேகமும் கார்மேகமும்" என்ற உருவக வசன கவிதையே இக்கட்டுரைக்குக் களமாக அமைகின்றது. இது உருவகமும் உள்ளடக்கமும் கொண்ட கவிதையாகும்.இலக்கியம் என்பது சமுதாயத்தின் பணிப்பெண். பொது மக்களின் புனிதமான பணியாள். சமுதாயச் சீர்திருத்த வழிகாட்டி என்று உருகிய விமர்சகர்கள் கருதுகிறார்கள். (இலக்கியத்தில் சோஷலிஸ்டு எதார்த்தவாதம். ப. ஜீவானந்தம் ப. 4)

ஏனைய நாடுகளில் ஏழை - பணக்காரன், முதலாளி - தொழிலாளி வேறுபாடுகள் இருந்துதான் வருகின்றன. உழைப்பாளிகள் வறியராகவும், இழிந்த சாதியினராகவும் உழைப்பில்லாதவர் செல்வர்களாயும் உயர்ந்த சாதியினராகவும் கருதப்பட்டனர். (பாரதிதாசன் கவிதைகள். தொகுதி 3. ப 190 -191) சாதிப்பிரிவு இருக்கும் வரை மேல்சாதி - கீழ்சாதி என்ற பொருளற்ற முரண்பாடுகள் சமுதாயத்தில் இருக்கத்தான் செய்யும். இவற்றின் குயிறீடுகளாக "மோர்மேகமும் கார்மேகமும்" விளங்குகின்றன. வெள்ளை மேகம் அழகு நடனம் ஆடிய நிலவுப்பெண் விடைபெறும் போது எடுத்து வீசிய வெண்பட்டுத்துணி போல........அசைந்து நகர்ந்து கொண்டிருந்தது... பாலில் மூழ்கி வந்த வெள்ளை மேகம் ..... அதன் உள்ளத்தில் கொள்ளை மகிழ்ச்சி" என்ற வரிகள் உழைப்பில்லாத வீணர் உண்டு கொழுத்து மகிழ்ச்சியாக இருப்பதோடு ஆடம்பர வாழ்க்கை வாழ்வதனைக் குறிக்கின்றது.

"வெயிலில் விறகுடைத்துக் களைத்த பாட்டாளி ஒருவன் உடலைப் போலக் கருத்து மினுத்த முகிலும், நிறைசூல் கொண்ட பெண் படுக்கையில் புரளுவது போலப் புரண்டு கொண்டிருந்தது" என்ற வரிகள் உழைப்பதால் கருத்த மேனியுடைய உழைக்கும் வர்க்கத்தை - ஏழையரைக் குறிக்கின்றன.. "நம் நாட்டுத் தொழிலாளர் அனைவரும் அதாவது, ஆலையில் வேலை செய்வோர், மூட்டை தூக்குவோர், கல்லுடைப்போர், வண்டி இழுப்போர் இன்னும் இது போன்ற உடல் உழைப்பு வேலை செய்வோர் அனைவரும் திராவிட மக்கள் தாமே தவிர வேறுயாருமில்லை என்று தந்தை பெரியார் கூறுகிறார். (விடுதலை. 22.03.1952) தொழிலாளர் இல்லையெனில் இவ்வுலகு அழகுகெட்டு, மக்கள் உயிர்வாழத் தகுதியற்ற நிலைக்கு ஆளாகிவிடும். உழைப்பாளர்கள் தங்களைத் தேய்த்துக் கொண்டு கடும்பசிக்கும், இடையறா நோய்களுக்கும் பலியாகி, பச்சை இரத்தம் பரிமாறி, குன்றா விளையுளும் குறையாத வருவாயும் ஈட்டித் தருகின்றனர். எனினும் "உழைப்பாளர்களுக்கும், உழவர்களுக்கும் வீடில்லை, கல்வியில்லை, உடல்நலமில்லை, உடலில் வலுவுமில்லை" (பெரியார் சிந்தனைகள் ப. 1645)

நீர்த்துளிகளின் திரட்சியாகக் காணப்படும் கார்மேகம் தொழிலாளர் ஒற்றுமையின் குறியீடாக உள்ளது. ஆயிரம் காசு சம்பாதித்துக் கொடுக்கும் தொழிலாளர்களுக்கு, அரைக்காசு கூடக் கொடுக்க மறுக்கிறது அதிகார வர்க்கம். உழைப்பாளர்கள் வயிறாரச் சாப்பிட வழியின்றி, கால்வயிற்றுக் கஞ்சிக்கும் ஏங்கும் நிலையினையும், அவ்வப்போது அவர்களுக்கிழைக்கப்படும்அநீதிகளையும் "பளீர்...பளீர் என வயிற்றில் மின்னல் ஊசிகள் குத்தின. மல்லிகை மொக்கின் மீது கற்கள் விழுவது போல இடிகளின் ....துன்பக் குமுறல்கள்" என்ற வரிகள் எடுத்துரைக்கின்றன. வேலைப்பளு, காப்பீடு இன்மை, மருத்துவ வசதியின்மை, சமூகத்திலும், பொருளாதாராத்திலும், உயர்வின்மை ஆகியனவற்றை அனுபவிக்கும் தொழிலாளர்களின் தாழ்நிலையையும், அவர்கள் அடக்கு முறைக்கு ஆளாவதையும் இவ்வரிகள் உணர்த்துகின்றன. "தமிழகத்தில் அரசரும் அதிகாரிகளும் செல்வரும் புரோகிதரும் நெடுங்காலமாக மக்களைச் சுரண்டி வந்தனர் என்பதைச் ஜான்-டி-பிரிட்டோ எனும் பாதிரியார் 1683ஆம் ஆண்டு ஏழுதிய கடிதத்தால் உணரமுடிகின்றது. ( Sathyanantha Iyar. Tamilagam. P. 204 )

தொழிலாளர்களின் ஓய்வற்ற உழைப்பை, ஏழ்மைநிலையை, தாங்கவொண்ணா துன்பச்சுமையை, "நிறைசூல் கொண்ட பெண் புரளுவது போல" என்ற அடி உணர்த்துகின்றது. ஏழைகள் கடும் உழைப்பால் துயரடைகின்றனர். பணமுடையோர் ஆடிப்பாடி மகிழ்ச்சியில் திளைக்கின்றார்கள். "பாலில் முழுகி வந்த" என்ற தொடர் பணக்காரர்கள் வளமான, வசதியான, வண்ணமிகு வாழ்க்கை வாழ்வதைப் படிமமாக உணர்த்துகின்றது.

விண்ணில் மழையிறக்கி மேதினிக்கு நீர்பாய்ச்சி

வாழ்க்கைப் பயிரிட்டு வாழ்ந்த தொழிலாளி" (தமிழ் ஒளி - மேதினமே வருக. ப. 7)- யின் உடலெல்லாம் வியர்வைத்துளிகள் அரும்பின. உடலைக் கசக்கி உதிர்த்த வியர்வையின் ஒவ்வொரு துளியும் இவ்வுலகு உழைப்பவர்க்குரியது என்பதைக் காட்டுகிறது என்ற பாவேந்தரின் (பா.க. 1 ப. 155) வரிகளும் இங்கு ஒப்புநோக்கத் தக்கன. மேகம் இன்னும் பொழியவில்லை அதற்குள் நிறையுழைப்புத் தோழர்களின் வியர்வை பொழிகிறது.(பாரதியார் கவிதைகள் தொகுதி, ப. 171) ஆம்! உழைப்பாளிகள் உள்ளங்கால் வெள்ளெலும்பு தோன்ற வரப்பு வெட்டி, நிலத்தைப் பண்படுத்தி வைத்தாலன்றோ மழையின் முழுப் பயனை அடைய முடியும்! அவர்கள் உழைப்பைச் சுரண்டுவோர் "நெட்டியைப் போலக் கலையற்று மிதக்க" முடியும்! உழைப்பின் சுமைகளையும் அறியார் !சுவையையும் அறியார் அன்னோர்! கற்கண்டு கலந்த ஆவின்பாலை அருந்துவோருக்கு அன்னப் பாலுக்கும் (கஞ்சி) வழியில்லா ஏழைகளின் துன்பம் புரிவதில்லை! எண்ணிப் பார்க்கும் உள்ளமில்லை. பாரதிதாசனின் "கடல் மேற் குமிகள்" என்ற கவிதையில், கடல் ஏழைப் பொதுமக்களுக்கும் "குமிழ்" விரைவில் அழிந்து போகும் முதலாளிகட்கும் குறியீடுகளாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன.(பாரதியார் கவிதைகள் தொகுதி3, ப. 4) அதுபோல இக்கவிதையில் பட்டுத்துணி, பாலில் குளித்தல், முல்லை நிறம் என்பன மேல் வர்க்கத்தாருக்கும் வருணத்தாருக்கும் குறியீடுகளாக விளங்குகின்றன. கருத்த உடல் துயரத்தூண்டில் கருப்பி என்ற சொற்கள் கீழ் வர்க்கத்தாருக்கும் வருணத்தாருக்கும் குறியீடுகளாக உள்ளன. தொழிலாளர் நலனில் அக்கறையற்றோர் முதலாளிகள் என்பதை "கருமுகிலின் மேல் வெண் மேகத்திற்கு இரக்கவுணர்ச்சி இல்லை" என்ற வரி உணர்த்துகிறது. பாரதிதாசனாரின்,

"குன்றும் இரங்கும் கொடும்பாம்பு தானிரங்கும் / ஏழையரைக் கொல்ல எதிர்இருந்து பார்த்திருப்போர்"

ரத்தவெறி கொண்டலையும், நால்வருணம் ஏனிரங்கும் ( பா.க. தொ.1 - ப. 24-25) என்ற வரிகள் இரக்கமில்லாதிருப்பது அவர்களின் இயல்பு என்பதை உரைக்கின்றன. ஆடு நனைகின்றதே என்று ஓநாய் வருந்துமா?உழைப்பாளர்கள் உழைப்பால் நாடு தழைக்கின்றது. ஆனால் நாடு அவர்களுக்குத் தருவதோ துன்பமும் துயரமும் தான். சூல் கொண்ட மேகம் மழைத்துளிகளாய் உலகை வாழவைக்கின்றது. உழைப்பாளிகளும் உழைப்பின் பயனை உலகோர்க்களிக்கின்றனர். "கருமுகிலின் குழந்தைகளை அணைத்துக் கொள்ளத் துடிக்குக் கூத்தாடும் தரைத்தந்தை" என்பது தொழிலாளர் ஒற்றுமையையும், அவர்கள் உழைப்புக்கு மதிப்பும், சக்தியும், பாதுகாப்பும் தரத் துடிக்கும் சக்திகளையும் குறிப்பதாகும்.

முத்துக்குழந்தைகள் உழைப்பால் வரும் பயன்படு பொருட்களைக் குறிப்பதாகும்.உழைப்பு என்பது சமதாயத்தில் ஒரு பாலார்க்கே என்றில்லாது அனைவருக்கும் பொதுவாக இருந்திருக்குமானால் உழைப்போர் படும்பாடு அனைவர்க்கும் புரிந்திருக்கும்.

"ஈன்று புறந்தருதல் தாயின் கடமை - உழைத்தல்

எல்லார்க்கும் கடனென்று கொட்டு முரசே" (பா.க. தொ2. ப. 160) என்று புரட்சிக் கவிஞர் இதனைக் கூறுகின்றார். தொழிலாளர்கள் மிகுவேலையினாலும், வறுமையாலும் துன்பப்படுவதைக் கூட உணர்ந்து கொள்ளாமல் "உடல் கருத்துக் கிடப்பதால்தான் அது துயரத் தூண்டிலில் சிக்கித் தவிக்கின்றதோ" என்பது வருணத்தின் பேராலும் மக்கள் துன்புறுத்தப்படுவதையே குறிக்கின்றது. கருப்பிக்குத் துன்பம் மிக அதிகமோ என்று விளையாட்டும் ஏளனமும் கொப்புளிக்கும் குரலில் வெள்ளச்சி (மோர்மேகம்)கேட்பது தொழிலாளர் உழைப்புக்கு மதிப்புக் கிடைக்காமல் அது கொச்சைப்படுத்தப்படுவதையே காட்டுகிறது. துன்பம் என்றால் இன்னதென்றே அறியாத "மோர்மேகம்" என்பது உடல் உழைக்காது சுரண்டிப் பிழைக்கும் மேன்மக்கள் - மேல்வர்க்கத்தைக் குறிக்கின்றது.

"நடவு செய்து தோழர்கூலி / நாலணாவை ஏற்பதும் / உடல் உழைப்பிலாத வீணர் / உண்டு கொழுத்து" (பா.க. 1. ப. ) உலாவுவதைக் குறிக்கின்றது. இது நடப்பியல் சமுதாயத்தில் நிலவும் வெறுக்கத்தக்க இழிநிலைகளை வெளிப்படுத்துவதாக அமைகின்றது. தோளின் வலிமையால் தொழிலாளர் படைக்கும் பயன்களை நோகாமல் சுரண்டி, உண்டு கொழுத்து இன்ப வாழ்க்கை வாழும் முரண்பாடுகளைக் களைவதையே நடப்பியல் விரும்புகின்றது. தொழிலாளரிடத்து முதலாளிகள் சில சமயங்களில் காட்டும் பரிவு, கருணை எல்லாம் தன்னலம் சார்ந்தவை. ஏய்த்துப் பிழைப்பதற்காகப் போடும் பொய்வேடம் என்பதனை "வருத்தப்படுவது போன்ற நடிப்பு", "ஓரக்கண்ணால் பார்த்துக் கேலி" என்ற தொடர்கள் விளக்கி நிற்கின்றன.

"காற்று" சமுதாயத்தின் குறியீடாக விளங்குகின்றது. காற்று மோர்மேகத்தைப் பார்த்துக் கூறுகின்றது, "உழைப்பவர்களே உலகை வாழவைப்பவர்கள்! என்று கூறிப் பின், செதுக்காமல் சிலை உருவாகாது, கீறல் பெறாத நிலம் விளைவு தராது!" என்று கூறுவதாக வருகின்றது. தொழிலாளர்களே உலகைச் சீராக உருவாக்கும் சிற்பிகள்! அவர்கள் இல்லையெனில் உலகமில்லை! உயிர்கள் இல்லை! உழவர்கள் நிலத்தை உழுது சேற்றில் கால் வைத்தால்தான் நாம் சோற்றில் கைவைக்க முடியும்! என்பதை நவில்கிறது. "பகட்டு" மட்டுமே வாழ்க்கை என நினைத்த வெண்மேகத்திற்கு, அது மலட்டுக்குச் சமம் என்பதை உணர்த்துகின்றது. வெட்கித் தலை தலை குனிகின்றது மோர் மேகம். கருவுயிர்த்த கார்மேகத்தின் முன் தான் வெறுமை என்பதை புரிந்து கொள்கின்றது. உழைப்பின் பெருமையை மகிமையை வெண்மேகம் உணர்கின்றது. சமுதாயம் உழைப்பவர்களுக்கே உரியது! அவர்கள் ஒற்றுமையின் முன்தான் தூசு என அறிந்து கொள்கிறது.

"மனிதனுடைய சமூகச் செயல்களால் வரலாறு இயங்குகிறது கருத்துக்களால் அல்ல" (ஆ. செகந்நாதன், புதிய கவிதைகளில் மார்க்சியம் ப. 9) என்பதைத் தமிழன்பனின் "மோர்மேகமும் கார்மேகமும்" உணர்த்தி நிற்கின்றது. சமுதாயம் மாற்றியமைக்கப்பட வேண்டிய ஒன்று என்பதைத் தன் கலை இலக்கியத்தின் மூலம் கவிஞர் புலனாக்குகின்றார்.

மூல நூல்

"மோர் மேகமும் கார்மேகமும், தமிழன்பன், தமிழ் இலக்கியப் பேரவை, ஈரோடு, வெளியீடு 9, (25.02.1968)

# புதிய மொட்டுகள் நாவலில் மார்க்சீய வெளிப்பாடு

*ஜெ. பிருந்தாஸ்ரீ*, தமிழ் விரிவுரையாளர்,
சிதம்பரம் மகளிர் கல்லூரி, மணச்சநல்லூர், திருச்சி.

சமூக வாழ்வு பற்றிய மார்க்சீய கோட்பாடு சார்ந்த ஒரு இலக்கிய அணுகுமுறை மார்க்சீய திறனாய்வாகும். இலக்கிய உற்பத்தி. பரவலாக்கம் முதலிய இலக்கிய உற்பத்திப் பின்புலங்கள்யாவும் சமுதாயத்தை எதார்த்த நிலையில் பிரதிபலிக்கும் அணுகுமுறை ஆகும். கார்த்திகேச சிவத்தம்பி (1982 : 8) தமிழ் மரபில் இலக்கியத்துறைதான் மார்க்சீயத்தின் அடிப்படையில் முதலில் ஆய்வு செய்ய முற்பட்டது என்கிறார். இதனை,

" தமிழ்ப் பாரம்பரியத்தினை மார்க்சீய கண்ணோட்டத்தில் விளங்கும், விளக்கும் முறைமை முதன் முதலில் இலக்கியத் துறையிலேதான் ஏற்பட்டது. ஆக்க இலக்கியம் எழுத்தாளர்கள் பலரின் மார்க்கீசிய நிலைபாடும், அவர்களுக்கு உதவியாளர்களாகவும், சில வேளைகளில் அவர்கள் மேற்கொண்டு செல்லவேண்டிய இலக்கியப் பாதைகளின் தன்மையை எடுத்துக்காட்டுபவர்களின் விளங்கிய, விளங்கும் விமர்சகர்ளது மார்க்கீசிய நிலைபாடும், தமிழ் இலக்கியத்தை மார்க்கீசிய நோக்கிற் பாக்கும் பண்பினைத் தோற்றுவித்து அதற்கு வலியூட்டிற்று" என்பதால் அயலாம்.

இலக்கிய உற்பத்தி என்ப து அது கூற விரும்புகின்ற செய்திளைப் பற்றிய வர்ணனை எனலாம். இவ்வகையில் படைப்பு வெளிப்படுத்தும் கருத்துக்கள் படைப்பாளனின் மனவுணர்வு அவன் காண விரும்பும் சமுதாயம் பற்றிய உணர்வு ஆகியவற்றைச் சார்ந்து அமைகின்றன. இவ்வகையில் பொன்னீலன் படைத்த புதிய மொட்டுக்களில் மார்க்கீசிய சமுதாய ஆய்வுமுறைகளைப் பொருத்திக்காண்பதை இக்கட்டுரை பொருளாக கொண்டுள்ளது.

## வர்க்கபேதம்

நிலவுடமைச் சமுதாயத்தில் உழைப்பாளியின் வியர்வையால் முதலாளிகள் உயர்கின்றனர். இருப்பினும் அவர்கள் உழைப்பிற்கேற்ற ஊதியம் கிடைக்கவில்லை. இதனை தி.சு. நடராஜன் (2003 - 183)

"முதலாளித்துவ சமுதாயத்தில் முதலாளி - தொழிலாளி என்பது முதன்மையான வர்க்கப் பிரிவு - தொழில் உற்பத்தியில் உற்பத்தி சாதனங்களை உடமையாகக் கொண்டு உற்பத்தி முறைகள், உற்பத்தி பொருட்களின் விநியோகம் அதன் பலன் ஆகியவற்றை உரிமையாகக் கொண்டவன் முதலாளி என்றால், அத்தைய உற்பத்தி உறவுகளில் உழைப்பும் உழைப்புத்திறனும் கூலியாகத் தருகிறவன் தொழிலாளியாவான்" என்கிறார். பொருளாதார ஏற்றத்தாழ்வால் உள்ளவர்கள் தனிப்பிரிவாகவும் ஏழைகள் அவர்களுக்கு அடங்கி நடப்பதாகவும் சமுதாயம் அமைந்துவிடுகின்றது. பணக்காரர்களுக்கு இணையாக ஏழைகள் வாழ்வதில்லை. இந்நிலை தங்கப்பன் வாயிலாக வெளிப்படுகின்றது. தங்கப்பன் வெற்றிபெருமாளின் கைத்தறி மில்லில் மேஸ்திரியாகச் சேருகிறான். முதலாளியின் மகள் தங்கப்பனை விரும்புவதாக அறிந்து முதலாளி அவனைக்கொன்று விடுகின்றான். தன் செல்வாக்கினால் இந்நிகழ்ச்சியைப் பிறர் அறியாதவாறு மறைத்து விடுகின்றான். இதனை எதிர்க்கும் வகையில் சுதந்திரராஜன் அம்பிகாவதி கதையை நாடகாமாக்கி தங்கப்பனுக்கு நேர்ந்த கதியை வெளிச்சம் போட்டுக்காட்டுகின்றான்.

"ஆளும் வர்க்கமற்ற கலைஞர்கள் இத்தகைய உணர்வுகளின்
அடிப்படையில் கலையில் துன்பத்திற்கு எதிரான
குரல் கொடுக்கின்றனர். கொடுமைகளை கண்டு கொதித்து

எழுகின்றனர். சமூக உலகின் அடிமைத்தனம், கலையுலகில் கொந்தளிப்பாக மாறுகின்றது." என்கிறார் கோ. கேசவன் (1984 - 93) இதனடிப்படையில்தான் கதைத்தலைவன் சுதந்திரராஜன் நாடகக்கலையை வளர்க்க உணர்வின் வெளிப்பாடாகவும் அதன்போராட்டக் கருவியாகவும் பயன்படுத்தியுள்ளமை எண்ணத்தக்கது.

சலவைத்தொழில் செய்பவர்கள் வயதில் மூத்தவராய் இருந்தாலும் சிறுவர்கள் முதல் அனைவரும் மரியாதையில்லாமல் ஒருமையில் அழைப்பதை சிறுவயதிலேயே சுதந்திரராஜன் எதிர்க்கிறான். பள்ளியிலும் முதலாளி மகன் தவறு செய்தால் ஆசிரியர் தண்டிக்காததையும் எதிர்க்கின்றான். இவ்வாறு சிறுவயது முதலே இனவர்க்க பேதங்களை வெறுக்கும் பாத்திரமாக சுதந்திரராஜன் படைக்கப்படுகின்றான்.

## பொருளாதாரச் சுரண்டல்

இருவேறு வர்க்கங்களில் உழைப்பு வேறுபாடுகள், ஒரு வர்க்கத்தின் உழைப்பினையும், உற்பத்தியினையும் உழைப்புகுக் குறைந்த வர்க்கத்தின் சுயநலப் போக்கு ஆக்கிரமித்தல் ஆகியன பொருளாதாரச் சுரண்டலுக்குக் காரணமாகின்றன. புதிய மொட்டுக்கள் நாவலில் முதலாளி வெற்றிப்பெருமாள் கிராமத்துத்திருவிழா என்ற பெயரில் வரிவசூலித்து அதனைத் தானே பெரும் பகுதியை அபகரித்து சிறுபகுதியை ஊர்த்திருவிழாவிற்காகச் செலவு செய்கிறார். ஆனால் இத்தொகையை சமுதாயத்திற்கு பயனுள்ள வகையில் பயன்படுத்தலாமே என கதைத்தலைவன் சுதந்திரராஜன் அங்கலாய்க்கின்றான். முதலாளி அரசியல் பிரமுகரானதும் மக்களுக்கு தொண்டு செய்வது போல் நடிக்கின்றார். ஏழைகளின் நிலத்தை அபகரித்து சொத்து குவிக்கின்றான். இவற்றை சுதந்திரராஜன் எதிர்க்கின்றான். இந்நிலையில் சமுதாயக் குற்றங்களைக் களைய விரும்பும் ஆசிரியரின் கலகக்குரல் கதைத்தலைவன் வாயிலாக வெளிப்படுகின்றது எனலாம்.

கயிற்றுத் தொழிலாளர் சங்கத்தைத் தொடங்கி கதைத்தலைவர் சுதந்திரராஜன் முதலாளிகள், தொழிலாளிகள் செய்த உற்பத்தியின் லாபத்தை எவ்வாறு அபகரிக்கின்றனர் என்பதை உணர்த்துவதுடன் அந்நிலை மாறுவதற்கும் பொருளாதாரச் சுரண்டலில் இருந்து தப்பிக்கவும் வழி செய்கின்றான். தொழிலாளர்களுக்கு கேரளத்தில் ஒரு கூலியும் தமிழகத்தில் ஒரு கூலியும் தருவதை உணர்த்தினான். முதலாளிக்கு வரும் லாபத்தைச் சுட்டிக்காட்டி போராடி தொழிலாளர்களுக்கு ஊதிய உயர்வைப் பெற்றுத் தந்தான். இதனால் வறுமை நிலையிலிருந்த ஊழியர்கள் வசதி பெற்றனர்.

## அரசியல் சூழல்

இந்நாவலில் சுதந்திரத்திற்கு முந்தையநிலை - பிந்தைய நிலை என்ற இருவகை அரசியல் சூழல்களும் சித்தரிக்கப்பட்டுள்ளது. மார்க்சீயம் அடிப்படையில் அரசியல் - பொருளாதார - சமுதாயம் பற்றிய தத்துவம்தான் இலக்கியத்திலும் மார்க்சீய விழிப்புணர்வு அரசியல் விழிப்புணர்வு தரும் ஒரு கருவியாக பரிமளிக்கின்றது. கதைத்தலைவனின் ஆசிரியர் பெரும்பிள்ளை என்பவர் சுதந்திரம் பற்றிய விழிப்புணர்வை சுதந்திரராஜனுக்கு ஏற்படுத்துகிறார். "எசக்கிமாடன்" என்ற அவன் இயற்பெயரை "சுதந்திரராஜன்" என்று மாற்றியமைக்கின்றார். இது அவனுள் ஓர் உந்துசக்தியை ஏற்படுத்துகின்றது. அந்தத் தீப்பொறி பின்னாளில் அவன் லட்சியவாதியாக புரட்சி மிக்க இளைஞனானத் திகழ வழிசெய்கின்றது. சின்னஞ்சிறிய வயதில் அவர் புகட்டிய காந்திய சிந்தனையால் காந்தியின் படத்தை நாற்காலியில் வைத்து ஊர்வலமாய் வருகின்றனர் சிறுவர்கள். அக்கிராம மக்கள் அப்படத்தில் உள்ளவர் "காந்தி" என்பதையே உணராமல் உள்ளநிலையும் வருந்தத்தக்கதாக உள்ளது.

சிறுவர் செயலை வெற்றிப்பெருமாள் மிகவும் கண்டிக்கின்றார். ஆனால் சுதந்திரத்திற்குப் பின்னர் சுதந்திர தினவிழாவில் கொடியேற்றி காந்தியின் உண்மைநிலை உணராது போலித்தனமாக மேடையில் முழங்குகின்றார். இதனை இளைஞன் சுதந்திரராஜன் உணர்ந்து வேதனை அடைகின்றான். இக்தையின் போக்கின் வாயிலாக இருவேறுபட்ட அரசியல் சூழல் விளக்கப்படுகின்றது. கதைத்தலைவன் தொடக்கத்தில் காந்திய இளைஞனாகவும், அடுத்த நிலையில் திராவிட இயக்கத்தாக்கம் பெற்றவனாகவும் கதைவளர்ச்சியில்

பொதுவுடமைச் சித்தாந்தமே சிறந்தது என்னும் முடிவுக்கு உந்தப்பட்டவனாயும் விளங்குகின்றான். இந்திய விடுதலையைப்பற்றி குறிப்பிடுகையில் விடுதலை என்பது காங்கிரஸ் இயக்கத்தைச் சார்ந்த காந்தி, நேரு முதலியோரால் மட்டுமே சாத்தியப்பட்டது என்ற கருத்தியலை ஆசிரியர் கண்டிக்கின்றார். காந்தி போன்ற தலைவர்கள் மட்டுமின்றி மக்களில் பல தரப்பினரும் விடுதலைக்காகப் பாடுபட்டதையும் மறக்கலாகாது என்று உணர்த்துகின்றார். இதனை

"வெள்ளைக்காரன் என்கிற ஒருத்தன், எழுமிச்சம்பலத்த மடியில வச்சிருந்தது மாதிரி சுதந்திரத்தையும் மடியில் கட்டிக்கிட்டுத் திரிஞ்சது போலவும், காந்தியும் நேருவும்எப்படியோ தந்திரமா அதத்தட்டி பறிச்சிட்டது போலவும்............இந்த நாட்டில் ஜனங்கன்னு யாருமேஇல்லாதது போலவும் சுதந்திரத்திற்காக அவங்க எதுவுமேசெய்யாதது போலவும் இருந்தது அவர் பேச்சு" (பக். 48)

என்பதால் அறியலாம்.

## சமுதாயச் சீர் கேடுகள் கண்டித்தல்

கருத்து முதல் வாதம் உற்பத்தி செய்த கலைகள் படைப்புகள் சமுதாயத்தில் வர்க்க வேறுபாட்டை நியாயப்படுத்தும் நிலையில் அமைந்தன. வர்க்க வேறுபாடுகள் உள்ள சமூகத்தில் பிறக்கும் படைப்புகள் அந்தந்த வர்க்கத்தின் கருத்தியலை அடிமை வர்க்கத்தின் மீது திணிக்கும் முயற்சியாகவும் வெளிப்படும். சமுதாயச் சீர்கேடுகள்யாவும் கருத்து முதல் வாதத்தின் விளைவுகளால் பரிணமித்தவையாகும்.

மக்களின் அறிவு வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாய் இருப்பது மூடநம்பிக்கை - கடவுள் வழிபாடு என்னும் பெயரில் அறிவுக்கொப்பாத சடங்குகள் செய்வதும் மக்களிடமிருந்து பணம் பறிப்பதையும் வழக்கமாய் கொண்டிருந்தான் முதலாளி. இதனை எதிர்த்து சுடலைமாட சாமியின் ஏழு கழுமரத்தையும் ஊரெல்லையின் எசக்கி நிலையையும் சுதந்திரராஜன் அகற்றினான். அறியா மக்கள் இது தெய்வக் குற்றமென அழுசினர். ஆவேசம் வந்ததுபோல் நடித்து முதலாளியின் அராஜகங்களை அம்பலப்படுத்தினான். மேலும் கிராமத்துக் கட்டுப்பாட்டை மீறி தங்கரளியைத் திருமணம் (விதவை மறுமணம்) செய்கிறான். இந்நிலையில் பல சமுதாயச் சீர்கேடுகள் களையப்படுகின்றன. மூட நம்பிக்கைகள் அகற்றப்படுகின்றன.

மார்கசீய நோக்கில் இலக்கியம் என்பது வர்க்கத்தின் வெளிப்பாடாகவும் வர்க்கப்போராட்டக் கருவியாகவும் அணுகப்படுகின்றது. புதிய மொட்டுக்கள் நாவலில் பிற்போக்கான கிராமம் ஒன்று பொதுவுடைமைச் சிந்தனைகளால் முற்போக்காக கிராமமாக மாறக்கூடிய நிலையைக் காண முடிகிறது. இதன் படைப்பாளர் பொன்னீலன் மார்க்சீயவாதி என்பதால் மார்க்சீய கருத்தோட்டங்கள் நாவலில் இயல்பாக வெளிப்படுகின்றன.

## துணை நூல்கள்


1. பொன்னீலன் - புதிய மொட்டுக்கள்
2. தி.சு. நடராசன் - திறனாய்வுக்கலை (2003)
3. கார்த்திகேசு சிவத்தம்பி - இலக்கணமும் சமூக உறவுகளும் (1982)
4. கோ. கேசவன் - இலக்கிய விமர்சனம் ஒரு மார்க்சீய பார்வை (1984)

# "பால்மரக் காட்டினிலே" - நாவலில் தொழிலாளர் நிலை

*ந. மஞ்சுளா* எம்.ஏ., எம்.ஃபில் ஆய்வு மாணவி,
பூ.சா.கோ.கலை அறிவியல் கல்லூரி, கோவை - 641 014.

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பக் காலகட்டங்களில் மக்களிடம் ஆங்கிலேயருக்கு எதிரான விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தவும் சாதி, இன வேறுபாடுகளை விடுத்து ஒன்றுபட்டுச் செயல்படவைக்கும் இலக்கியங்கள் படைக்கப்பட்டன. இவைதவிர சமூக மாற்றத்தை வேண்டியும் இலக்கியங்கள் படைக்கப்பட்டன. எனவே, அத்தகைய இலக்கியத்தில் சமுதாயவியலின் தாக்கம் பெருமளவில் இருப்பது என்பது தவிர்க்க இயலாத ஒன்றாகும்.

**நாவலிலக்கியம் :**

"மனிதருக்குள்ளும் மனித சமூகத்துள்ளும் தோன்றும் மோதலை அடிப்படையாகக் கொண்டதே நாவலிலக்கியம்". இக்கால இலக்கியம் மக்களைச் சித்திரிக்கத்தக்க அளவுக்குப் பொதுவான பிரச்சினைகளை விவரிப்பதாகவும் அதே வேளையில் ஒவ்வொருவரையும் கவரத்தக்க அளவுக்கு கவர்ச்சிமிக்கதாயும் உள்ளது.இதில் வாசகர்கள் தங்களை இனம்கண்டு கொள்ளத்தக்க அளவு எளிமையாக உள்ளது. சமூக வாழ்வைச் சித்திரிக்கும் நாவலாரியர்களுடைய படைப்புகளை 1. விளக்க இலக்கியமென்றும் 2. விதி இலக்கியமென்றும் இருவகைப்படுத்தலாம்.

**சமுதாயமும் நாவலும் :**

தனிமனிதனையும் மனித சமுதாயத்தையும் ஆராய்வதே சமுதாயவியலாகும். அது சமூகத்தின் ஆரம்பம், வளர்ச்சி, தனிமனிதனுக்கும் சமூகத்திற்குமுள்ள தொடர்பு, சமூகத்தின் அமைப்பு, அதன் பயன்பாடுகள், சமூகமாற்றம் முதலியவை பற்றிய கோட்பாடுகள் காணப்படுகின்றன. சமூக அறிவியல் துறைகள் பலவற்றுள் இலக்கியத்துடன் நெருங்கிய தொடர்புடையது சமூகவியல் துறையேயாகும். இலக்கிய ஆசிரியர் உருவாக்கம் இலக்கியம் அவர் வாழும் சமூக வாழ்வின் எல்லைக்கு உட்பட்டே இருக்கும். இலக்கிய ஆசிரியர்கள் சமூகத்தை அகக்கண்களாலும், புறக்கண்களாலும் ஆழந்து நோக்குகின்றனர். இதனால் சமூகவியல் வல்லுநர்களைவிட இலக்கிய ஆசிரியருக்கு சமூகத்தை கூர்ந்து நோக்கும் திறமை உண்டு. இதனால் சமூகவியல் வல்லுநர்களுக்கு கிடைக்காத தரவுகள் இலக்கிய ஆசிரியர்களால் கிடைக்க வாய்ப்பு உண்டு.

**சமூகம் - விளக்கம் :**

சமூகம் என்பது மக்கள் ஒருங்கிணைந்து வாழுகின்ற ஒரு அமைப்பு. அது தனியாகவும் ஒரு சிலராகவும் இருந்த மனிதர்கள் தங்களுடைய தன்மையை உணர்ந்து அதன் காரணமாக பொதுவான நோக்கங்களை அடையக்கருதி முயலுகிறபோது உண்டாவது.

"மனித மன ஓட்டங்களோடு சேர்ந்து மனிதனை முழுமையாகப் புரிய வைக்கின்ற கலை நுணுக்கங்களோடு அது எழுத்து ரூபம் பெறுகின்ற போதுதான் நாவல் நல்லதோர் இலக்கியமாகிறது." என்ற கருத்திற்கிணங்க "பால்மரக்காட்டினிலே" நாவல மலேசிய இரப்பர் தோட்டத்து மக்களின் போராட்டங்களை விளக்க வைக்கின்ற நிலையில் அமைந்துள்ளது. இதனால் அச்சமூக மக்களின் வாழ்க்கையை உருவகப்படுத்துவதை உணரலாம்.

**சமூகத்தின் அமைப்பு :**

"சமூகத்தின் முக்கியமான பணி ஒன்றினை மையங்கொண்டு ஒன்றுக்கொன்று இயைபுடன் அமைந்த விதிமுறைகளே அமைப்பாகும்". என்ற "ரோமண்ட மாக்", "கிம்பால் யங்" என்பவர்களின் கூற்றிற்கிணங்க நாவலில் மலேசிய மக்களின் முக்கியமான தோட்டத்துண்டாடல் பிரச்சினையை மையம் கொண்டு அதனோடு

தொடர்புடைய கல்வி, பொருளாதாரம், குடும்பம், அரசியல், சமயம் போன்ற பல்வேறு அமைப்புகளையும் ஆராய்கிறது.

### மார்க்சிய நெறியில் வர்க்கப் போராட்டம் :

நம் சமூக அமைப்பு பொருளாதாரக் கட்டுமானத்தின் அடிப்படையில் உருவானது. உடையவர், உடைமையற்றவர் என்னும் இருவிதமான வர்க்கம் எப்போதும் உண்டு. மார்க்ஸ் மற்றும் எங்கல்ஸ் ஆகியோரின் சமுதாயவியல் கருத்துப்படி உழைப்பாளி வர்க்கத்திற்கும் மத்திதர வர்க்கத்திற்கும் (Bourgeoise) நடுவேயுள்ள போராட்டம் நிச்சயமாக முதலாளித்துவத்தைத் தூக்கியெறிந்து பாட்டாளி மக்களின் சர்வாதிகார ஆட்சியை நிலை நிறுத்துமென்றும் சுதந்திரமான சம அந்தஸ்தையுடைய குடிமக்களைக் கொண்ட ஒரு ஏற்றத்தாழ்வற்ற சமுதாயம் உருவாக்கப்படும் வரைதான் அச்சர்வாதிகார ஆட்சி நீடிக்கும் என்றும் நம்பினார்கள். அவர்களுடைய கருத்துப்படி பால்மதரக்காட்டினிலே நாவலில் முதலாளி - தொழிலாளி போராட்டம் காணப்படுகிறது. தோட்டத் துண்டாடலால் பாதிக்கப்பட்ட தொழிலாளர்கள் ஒருபுறம் என்றோ, ஒருநாள் எதிர்பாரா அதிர்ஷ்டம் வரும் என்று காத்துக்கொண்டிருக்கும் முதலாளிகள் மறுபுறம் என்ற நிலையில் வைத்து ஆசிரியர் விளக்கியுள்ளார்.

### முதலாளித்துவம் :

சமநிலையற்ற சமூகம் பற்றிய இரண்டு கொள்கைகள் மற்ற எல்லாச் சமுதாயக் கொள்கைகளின் ஆதாரமாக அமைந்துள்ளன. அவை, 1. உயர்குடிப்பிறப்புக் கோட்பாடு, 2. சமூக வர்க்கக் கோட்பாடு

என்ற "ஜார்ஜ் வாட்சனின்" கோட்பாட்டின் படி சமுதாயத்தில் சமனற்ற தன்மையென்பது உயர்ந்து செல்லும் பிரமிட் போன்றது. அகிலனின் கருத்துப்படி இன்றைய சமுதாயத்தில் சந்தர்ப்பவாதிகளுக்கும் லட்சியவாதிகளுக்கும் இடைவிடாத போராட்டம் நடந்து கொண்டே இருக்கிறது. "எங்களுக்கெல்லாம் சங்கத்திலே சேர்ரதுக்க இஷ்டமில்லை, பணத்தைத் திருப்பிக் குடத்திட்டாங்க".... "ஆமா, பொண்டு புள்ளைங்க கழுத்திலே காதிலே போட்டிருந்ததை அடகுவச்சு நான் பணம் கொடுத்திருக்கேன் என் வீட்டுக்காரி சத்தம் போடறா"......... இதன் மூலம் பொருள் சூழலின் முக்கியத்தில் நம்பிக்கை கொண்ட மார்க்சிய தத்துவம் அதே சமயத்தில் அச்சூழலை மாற்றுவதில் மனிதனின் பங்கையும் வலியுறுத்துகிறது. வாழ்க்கையின் "மேடுபள்ள" அனுபவங்கள் ஏதையும் ஒதுக்கிவிடாமல், வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் கண்ணாடியான இலக்கியமானது ஒரு நல்லொழுக்க போதனையை கூறும் நாடகமாக மாற்றப்படலாம் என்பதே இவ்வாய்வு மொழியின் குறிப்பீடாகும்.

### பார்வை நூல்கள் :


1. த. ராசு, தமிழ் நாவல்களின் இலக்கியத்தரம்
2. டாக்டர் சேதுமணி மணியம் - தமிழ் நாவல்களில் மதிப்புகள்
3. அகிலன் - "பால்மரக் காட்டினிலே"
4. அகிலன் கருத்தரங்கு ஆய்வுரைகள்
5. ஒப்பிலக்கியம் - சச்சிதானந்தன்.வை

# "ஆயிரம்கைகள் உயரட்டும்" புதினத்தில் மார்க்சியப்பார்வை

**க. மகேசுவரி,** உதவி ஆசிரியை - தமிழ்த்துறை,
அ.ப.ம. கலைக் கல்லூரி, சின்னக்கலையம்புத்தூர், பழனி.

**முன்னுரை :**

இலக்கியம் சமுதாய முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்தப்படும் பிரச்சாரக் கருவி ஆகும். மார்க்சிய இலக்கிய கொள்கைப்படி சமுதாய, பொருளாதார ஆக்கக் கூறுகளே (Socio - economic factors) இலக்கியத்தை நிர்ணயிக்கின்றன. வாழ்க்கை படிப்படியாக வளர்ச்சியுறும் தன்மையுடையது என்பது மார்க்சின் கொள்கை. சமூக மாற்றத்தை முழுமையாக முன் மொழிவது, மனித விடுதலை என்ற மாபெரும் கருவைத் தாங்கும் சக்தி மார்க்சியத்துக்குத்தான் இருக்கிறது. இக்கொள்கையைப் பிரதிபலிக்கும் ஆயிரம் கைகள் உயரட்டும் என்ற புதினத்தை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**மார்க்சியம் - விளக்கம் :**

"மார்க்சியம் என்பது சமநீதி கோருவது சமதருமம் பேணுவது. பொருளாதாரத்துறையில் மட்டுமல்ல சமூகத்துறையிலும்" (செம்மலர், பிப்ரவரி 2005, ப.5).

முதலாளி - தொழிலாளி வர்க்கப் போராட்டம், சமநீதி எனச் சமுதாய வளர்ச்சிப் போக்குகளை, அதன் பல பரிமாணங்களோடு விளக்குவதே மார்க்சீயத்தின் முதன்மை நோக்கமாகும். பொருளாதாரத் தளத்தாலும், பண்பாட்டுத் தளத்தாலும் எழும் இத்தகைய போராட்டங்களை எதிர்கொண்டு, சிக்கல்களைக் களைந்து, மக்களுக்குச் சமநீதி" தருவது மார்க்சியம் என்பதை நாம் உணரலாம். இலக்கியத்தை மக்களோடு நெருங்கச் செய்வது மார்க்சியத் திறனாய்வின் அடிப்படைப் பண்பாகும்.

மார்க்சியம் சமுதாய அமைப்பை ஐந்து வரலாற்றுக் கட்டங்களாகப் பகுக்கிறது. அதில் இரண்டாவதாக இடம்பெறுவது அடிமையுடைமை (Slave - Owning) ஆகும். (தி.சு. நடராஜன், திறனாய்வுக் கலை, பக்171). இவண் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட புதினத்தில் இவ்வடிமை நிலை பரவித் தென்படுகிறது.

**புதினத்தில் மார்க்சியம் :**

"ஆயிரம் கைகள் உயரட்டும்" என்ற புதினத்தை ஆராய்ந்தோமானால், கொத்தடிமைகளாக வாழும் மக்களின் துன்பநிலை தெளிவாகப் புலப்படுகின்றது.

ஆசிரியர் கல்குவாரியில் பணிபுரியும் கொத்தடிமைகளின் வாழ்க்கைத் துயரங்களைக் கண்டு உற்று உணர்ந்து புலப்படுத்தியுள்ளார். ஆய்வின் தொடக்கத்திலேயே புதினத்தின் முகப்பு அட்டையும், தலைப்பும் மார்க்சியத்தை நினைவூட்டுகின்றன. சமநீதி மீட்கப் போராடும் தன்மானச் செம்மல்களுக்கு இப்புதினத்தைப் படைப்பதாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ள செயலானது சமநீதி, தன்மானம் என்ற மார்க்சியக் கொள்கைக்கு ஆதாரமாகின்றது.

**கல்குவாரி மக்களின் துயரநிலை :**

கல்குவாரியில் பணிபுரியும் கொத்தடிமைகளுக்கு, நிர்ணயிக்கப்பட்ட கூலி இல்லை, வேலை செய்வதற்கான எந்தப் பதிவேடுகளும் பராமரிக்கப் படுவதில்லை, விபத்துக் காப்பீடோ, இழப்பீடோ இல்லை. குவாரிகளில் எந்தவித அடிப்படை வசதிகளும் கிடையாது. அத்தொழிலாளர்களின் குழந்தைகள், கல்வி இன்றி, குழந்தைத் தொழிலாளர்களாக மாறி விடுகிறார்கள் என்ற செய்தியை விளக்கி பிரபலமான வாரப்பத்திரிக்கையில் வந்த கட்டுரையே (கல்கி இதழ் 15.02.2004, பக்கம் 2,3) இப்புதினம் தோன்றக் காரணம் என்றும் ஆசிரியர் கூறுகிறார். (தி.வெ.ரா, ஆயிரம் கைகள் உயரட்டும் பக்.4) கல்குவாரிப் பெண்கள் காமவெறிக்குப் பலியாவதும் மிகுந்த துயரத்தை அளிப்பதாக உள்ளது. 1995 ஆம் ஆண்டு உச்சநீதி மன்றம் நியமித்த கமிஷனின் ஆய்வுப்படி மூன்று கல்லுடைக்கும் தொழிலாளர்களில் இரண்டுபேர் "கொத்தடிமைகள்" என்ற அறிக்கை வேதனைக்குரியதாகும். (தி.வெ.ரா, ஆயிரம் கைகள் உயரட்டும், பக். 4)

**போராட்டம் :**

மார்க்சியம், "அடிப்படையில் ஓர் அரசியல் - பொருளாதார - சமுதாய தத்துவமே" என்ற மார்க்ஸ், ஏங்கல்ஸின் கோட்பாட்டின்படி, இப்புதினத்தில் எம்.எல்.ஏ., அவனது கூட்டாளிகள் என அரசியல்வாதிகளும், ஒரு காவல்துறை அதிகாரியும் இடம்பெறுகின்றனர். உரிமைகளை அடைய, அடிமை விலங்கை நீக்க தொழிலாளர்கள் ஆர்பாட்டத்திற்குத் திட்டமிடுகின்றனர். போராட்டங்கள் நடத்தப்பட்டன. (தி.வெ.ரா,ஆயிரம்கைகள் உயரட்டும், பக். 72) இதைக் கண்டு பீதியடைகின்றனர் அதிகார வர்க்கத்தினர். அதன் பிறகே பேச்சுவார்த்தை நடத்தப்படுவதாக புதினத்தில் காட்டப்படுகிறது. இருப்பினும் ஜீவா சித்ரவதைக்கு உட்படுத்தப்பட்டது, தேவகி, வேணி என்ற குமரிப் பெண்கள் காமவெறிக்குப் பலியானது, தேவகி அந்த மனித மிருகங்களைக் கொலை செய்வது ஆகியன புதினத்தில் காட்டப்படுகின்றன. (தி.வெ.ரா., ஆயிரம் கைகள் உயரட்டும், பக். எண் 132). நகரையே இச்சம்பவம் கலக்குகிறது.

## போராட்டத்தின் விளைவு :

போராட்டத்திற்குப் பின் அதிகாரிகள் விழித்துக்கொண்டு செயல்படுகிறார்கள். கல்லுடைக்கும் தொழிலாளர்கள் நிலை உயர்த்த மாவட்டத் தலைவரும் அதிகாரிகளும் முன்வருகின்றனர். புது காண்ட்ராக்டர் நியமிக்கப்பட்டு கூலி உயர்வும், வேலை உத்திரவாதமும் பெறுகின்றனர். கல்வி அறிவில்லாத அவர்களுக்கு இரவுப் பள்ளியை நடத்துகிறார்கள். அவர்களின் கூலியில் ஒரு பகுதியை சேமிக்க உதவுகிறார்கள். கூட்டு முயற்சிகளே உரிமைகளைப் பாதுகாக்கும் என்பதால் அவர்களுக்கு சங்கம் அமைக்க உதவுகின்றனர். இவ்வாறு தொழிலாளர்களின் நிலை உயர்த்தப்பட்டதாக ஆசிரியர் புதினத்தில் காட்டுகிறார். (தி.வெ.ரா. ஆயிராம் கைகள் உயரட்டும், பக். 145).

## மார்க்சிய வெளிப்பாடு :

மார்க்சியப் போக்கிலே சென்ற புதினத்தின் இறுதியில், புதினத்தின் கதாநாயகன் வாயிலாகவே, மார்க்சியக் கொள்கையில் ஈடுபாடு கொண்டவன் என்பதையும், அவன் தந்தை கம்யூனிஸ்ட் இயக்கத்திலே தீவிர உறுப்பினர் என்றும் கூற வைத்துள்ளார் ஆசிரியர். (தி.வெ.ரா. ஆயிரம் கைகள் உயரட்டும். ப. எண்.174).

ஊருக்கு ஊர் எங்கெங்கே அநீதியும், மக்கள் விரோதப் போக்கும், ஊழலும் தலை விரித்தாடுகிறதோ அதையெல்லாம் அந்தந்த ஊர் மக்களே எதிர்கொண்டு முறியடிக் வேண்டும் இதையே மக்கள் போராட்டம் என்று குறிப்பிடும் ஆசிரியர் புதினத்தில் மார்க்சியக் கொள்கைள் மூலம் தன் கருத்தை வெளிப்படுத்துகிறார்.

## முடிவுரை :

இளைஞர்களால் தான் இருட்டுக்கு கூட வெள்ளை அடிக்க முடியும்; இடைவிடாமல் பூமி சுழல்வதைப் போல ஓடியாடி உழைக்க முடியும்; என்ற எண்ணத்தில், ஆசிரியர் குறிக்கோள் சார்ந்த இளைஞனாக ஜீவாவை உருவாக்கி உலவவிட்டுள்ளதாகக் கூறுகிறார். ஜீவா மாதிரி இளைஞர்கள், எங்காவது இந்த நாட்டின் ஒரு மூலை முடுக்கில் இருப்பார்கள்; அவர்கள் விரைவில் வெளிப்பட வேண்டும். அதையே ஆசிரியர் வெகுமதியாகக் கருதுவதாகப் புதினத்தில் குறிப்பிட்டுள்ளது பாராட்டிற்குரியது ஆகும். ஆயிரம் கைகள் உயரட்டும் என்ற புதினத்தை மார்க்சின் கொள்கைப்படி, வாழ்க்கை படிப்படியாக வளர்ச்சியுறும்தன்மையுடையது என்பதால், முதலில் கொத்தடிமைகளின் துயரங்களைக் கூறி அதன் பின் ஆர்ப்பாட்டம், பிறகு தொழிலாளர்களின் நிலை உயர்த்தப்படுதல், தொழிலாளர்களுக்குச் செய்யப்படும் ஆக்கப்பூர்வமான பணிகள் என்ற படிநிலையிலேயே புதினத்தை முடிக்கிறார். மார்க்சியவாதிகள் அடிக்கடி குறிப்பிடும் கோட்பாடு (அல்லது) இலக்கிய நெறி, நம்மைச் சூழ உள்ள சமூக நிகழ்வுகள் ஆகியவற்றை இலக்கியம் பிரதிபலிக்க வேண்டும். சமூகப் பிரச்சனைகளின்பால் படைப்பாளர் இயல்பான ஈடுபாடு கொண்டு, பிரச்சனைகள் தீரவேண்டும் என்ற நோக்கத்தோடு இலக்கியம் படைக்க வேண்டும் (ஞானி. மார்க்சியமும், தமிழ் இலக்கியமும் பக. எண். - 324) என்ற அடிப்படையில் இப்புதினம் அமைந்துள்ளது. முனைவர். தி.வெ. இராசேந்திரன் அவர்கள் பாராட்டுக்குரியவர்.

# தற்காலத் தமிழிலக்கியத்தில் மார்க்சியம்

தி. மைதிலி, தமிழ்த்துறை, நிர்மலா மகளிர் கல்லூரி,கோவை.

இலக்கியம் மனிதனின் சமூக வயப்பட்டபண்பொழுக்கத்தைக் கூறுவதுடன் அவன் சமூக வயமாகும் முறைமையையும் எடுத்தியம்புகிறது. தனி மனிதனின் அனுபவங்களை மட்டுமின்றி அவ்வனுபவங்களின் உட்பொருளையும் இலக்கியம் தெளிவுறுத்துகின்றது என்கிறார் லியோலொவெந்தால் என்ற மேனாட்டறிஞர். மனிதன் தன்னை சமுதாயத்திலிருந்து அப்புறப்படுத்திக் கொண்டு ஒதுங்கிவிடாமல் தனது காலச் சமுதாயத்தின் பழக்க வழக்கங்களையும் நடை உடை பாவனைகளையும் உணாந்து அறிந்து ஏற்று வாழ்தலே சமூகவயமாதல் ஆகும். இங்ஙனம் சமுதாயத்துடன் தன்னை பிணித்துக்கொண்டு வாழும் போது கவலையற்ற நிலை உருவானால் அவ்வின்பத்தை மகிழ்வோடு இலக்கியங்களில் படைக்கிறான் மனிதன். அது அவன் வாழ்ந்த காலத்தின் பதிவாகிறது. அதே சமயத்தில் பல நெருக்கடிகள் எழும் போது அதனை வெளியிட்டே தீரவேண்டும் என்ற எழுச்சி அதிகமாகின்றது. இந்நிலையில் படைப்புகள் முன்னிலும் பன்மடங்கு விரைவாக உருவாகின்றன.

**இன்றைய நிலை**

மேற்கத்திய நிலை தாக்கம் நம்மை வெகுவாக ஆக்கிரமித்துள்ள நிலையில் அறவுணர்வுகள் அழிந்து வருகின்றன. அறவுணர்வுகளை சமுதாயத்திற்குப் போதிக்கும் கருவியாகிய நாட்டுப்புறக்கலைகள் இன்று நலிந்து கொண்டிருக்கும் நிதைல இதற்கு அடையாளமாகும். பணத்தைப் பெரும் பொருளாக மதிக்கும் கேட கெட்ட நிலையை எள்ளி நகையாடிய சமூகம் இன்று பணளமே பிரதானம் என்று கொண்டு மனித வாழ்வின் சிறப்பம்சங்களை இழந்து கொண்டிருக்கின்றது. நமது பண்பாட்டின் முக்கிய அம்சம், எல்லாமே வியாபாரமாகி விடக்கூடாது : அறவுணர்வுகளின் அடிப்படையில் எதுவும் நிகழ்தல் வேண்டும் என்பதாகும். பத்துப்பாட்டில் பட்டினப்பாலையில் வியாபாரம் கூட அறவுணர்வுகளோடு நிகழ்த்தப்பட்ட சிறப்பினை விளக்குகிறது.

கொள்வதுஉம் மிகை கொளாது
கொடுப்பதுஉம் குறை படாஅது

என்ற வரிகள் இங்கு சான்று. ஆனால் இன்று எங்கும் எதிலும் வியாபாரத்துவமே பரவி வருகிறது. கல்வி, மருத்துவம், அரசியல், சமயம், கட்சி, அறிவியல், தொழில்நுட்பம், பொருளியல் அனைத்திலும் வணிகமயமே குடி கொண்டுள்ளது. நமது சமூகம் ஆன்மநேய ஒருமைப்பாட்டையே போற்றும் மதச்சார்பற்ற சமூகம். ஆனால் இன்று நடப்பதென்ன? மதமும், சாதியும், அரசியல் வடிவம் தாங்கி அதிகாரங்களைக் கைப்பற்ற முயலும் சக்திகளுக்கு ஊக்கமளிக்கின்றன. இந்தியாவில் நிலவும் பற்பல சமயங்களும் பக்தியினையே சாரமாய்க் கொண்டிருக்க புல்லுருவிகள் சிலர் சமயத்தை சமுதாயத்திற்கான கருவியாய் மக்களுக்குத் தவறாகக்காட்டி சமயபேதத்தை வளர்க்கின்றனர். குடியாட்சியில் சமத்துவம் மலர்வதற்குப் பதிலாக பட்டமும், பதவியும் பரம்பரைச் சொத்து என்ற முறையே வலுத்து வருகிறது. கல்வி அறியாமையை அகற்றி நேர்வழியில் பிழைக்க உதவும் மாபெரும் கருவி என்பது மாற்றி கல்வி குருட்டாட்டங்களும் குள்ள நரித்தனத்துக்கும் வழி வகுக்கின்றது. இன்று ஏல்லாத்துறையிலும் புரையோடிக் கிடக்கும் இக்கொடுமைகளை வெளிச்சம் போட்டுக்காட்டி மனிதன் உறங்கிக் கிடக்கும் மனசான்றைத் தட்டியெழுப்பும் ஆற்றல் மிகு பணியை இலக்கியத்தில் இடம் பெறும் மார்க்சீயக் கருத்துக்கள் செய்து கொண்டு வருவது போற்றற்குரியது, தலைவணங்கத்தக்கது. "சீர்கெட்ட முதலாளியியமும் செல்லரித்த ஏகாதிபத்தியமும் நமது அன்றாட வாழ்வை அர்த்தமிழக்கச் செய்கின்றன." சமூக விடுதலைக்கு எதிரானதாகவும் புதிதானதாகவும் நமது வாழ்வு கட்டமைக்கப்பட்டு வருகின்றது. சுரண்டலும், ஒடுக்க முறையும். அதிகாரங்களும் நமது காலடியிலேயே வளர்த்தெடுக்கப்படும் கொடுஞ்சூழலில் அன்பையும், பன்பையும், நல்லுறவையும் தனிமனிதர்கள் பேணுவது எவ்வாறு என்று வினாத் தொடுக்கிறார். நம் கல்வி முறையும், குடும்ப சமூகச் சூழலும் நமக்குள் சமதர்மச் சிந்தனைகளைத் தூண்டவில்லை எனக் கவலைப்படுகிறார் மார்க்சீயவாதியாகிய கோவை ஞானி.

அவரது வினாக்களும், வருத்தமும் இன்றைய சமுதாயத்தில் வாழும் ஒவ்வொருவரும் சிந்தித்து விடைகாண்பதற்குரியது. அப்போதே விடியலும் பிறக்கும். சமதர்ம நெறியாகிய அறமே மார்க்சீயத் தத்துவமாகும். "ஆதிப் பொதுமைச் சமூகத்தின் சமதர்ம நெறியாகிய அறமே மார்க்கியத்தின் தத்துவம்" - கோவை ஞானி. இச்சமதர்ம நெறி எல்லாத் துறைகளிலும் இடம்பெற வேண்டும் என்பதை பேராசையுடன் தமிழிலக்கியங்களில் நமது படைப்பாளர்கள் ஆங்காங்கே பொதிந்து வைத்துள்ள மார்க்சியச் சிந்தனைகளை கற்போரின் பார்வைக்கு

கொண்டு வருவதே இக்கட்டுரையின் அடிப்படை நோக்கம். அதன் வழி இச்சமூகத்தைப் பீடித்துக் கொண்டிருக்கும் பொருவியாதியாகிய சுயநலத்தை குறுகிய மனப்போக்கை மாற்றலாம் என்ற நம்பிக்கையுடன் படைக்கப்பட்டது இக்கட்டுரை.

வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர் இங்கு /வாழும் மனிதரெல்லோருக்கும்
பயிற்று உழுதுண்டு வாழ்வீர் - பிறர் /பங்கைத் திருடுதல் வேண்டாம்
உடன் பிறந்தவர்களைப் போலவே/இவ்வுலகினில் மனிதரெல்லாரும்
திடங்கொண்டவர் மெலிந்தோரை இங்குத்/தின்று பிழைத்திடலாமோ.

என்ற பாரதியின் கவிதை எல்லாரும் எல்லாமும் பெற வேண்டும். வலியர், மெலியர் என்ற பாகுபாட்டிற்கு இடமில்லை என்ற மார்க்சிய சிந்தனையை அடியொற்றியதாகும்.

எல்லார்க்கும் தேசம், எல்லாருக்கும்உடைமைஎல்லாம்/எல்லார்க்கும்எல்லாஉரிமைகளும் ஆகுகவே
எல்லார்க்கும் கல்வி சுகாதாரம் வாய்ந்திடுக/வல்லார்க்கும் மற்றுள்ள செல்வர்க்கும் நாட்டுடைமை
வாய்க்கரிசி என்னுநம் மனப்பான்மை போய் ஒழிக./வில்லார்க்கும் நல்ல நுதல் மாதர் எல்லார்க்கும்
விடுதலையாம் என்றே மணி முரசம் ஆர்ப்பீரே. (வீரத்தாய்)

என்ற பாரதிதாசனின் சமத்துவப் பாடல் வரிகள் மார்க்சியத்தை நினைவூட்டுகிறது. ஒரு புறம் செல்வச் செழிப்பு, மறுபுறம் கஞ்சிக்கே வழியில்லாத ஏழ்மை இந்த வேறுபாட்டைக் காட்டி இதை உணராது பிறருக்குச் சேர வேண்டிய பொருள்களைத் தானே துய்க்கும் சுயநலக்கொள்ளைக்காரர்களை வன்மையாகச் சாடுகிற உடுமலை நாராயணகவி பாடல்களிலும் இக்கோட்பாட்டைக் காணலாம்.

குடிக்கத் தண்ணீரில்லாது பெரும் /கூட்டம் தவிக்குது - சிறு /கும்பல் மட்டும் ஆரஞ்சுப் பழ
ஜூஸைக் குடிக்குது./கட்டத்துணியும் இன்றி /கந்தல் பொறுக்கையிலே /மொட்டைக் கதவு ஜன்னல்
எல்லாம்/பட்டாடை போர்த்துகின்றனர்/பானையிலே கஞ்சியின்றிப்/பட்டினியால் வாடுகின்றான்
வீணர்கள் தின்று மிஞ்சி /வீதியிலே போடுகின்றார்

என்று சமுதாயத்தில் பிறருக்குச் சேர வேண்டிய பங்கினை வீணடிக்கும் அநீதியினை அழுத்தமாக இங்கு வெளியிட்டுள்ளார். இப்பாட்டிலே கொதித்தெழுந்த கவிஞர் புகை வண்டியைக் காணும் போது அது செய்யும் சமத்துவத்தில் நெஞ்சம் ஆறுகிறார். "கிந்தன் சரித்திரம்" என்ற தலைப்பிலான பாடலில்

"கர கர கர வென சக்கரம் சுழல /கரும் புகையோடு வருகிற ரயிலே
மறையவரோடு பள்ளுப் பறையரை ஏற்றி/மத பேதத்தை ஒழித்திட்ட ரயிலே

என்று மகிழ்ச்சியடைகிறார்.

### புதுக்கவிதைகள்

உரைநடைக் கவிதைகளாகிய புதுக்கவிதைகளிலும் மார்க்சியம் உலவி வருகிறது. ஈரோடு தமிழன்பனின் கிழக்கு உதைக்கப்படும் என்ற தலைப்பில் அமைந்த கவிதையில்

இது எனது இது எனது இந்தத் தன்னலப் புன்னகையை /மதம் ஆராதிக்கலாம் அரசு அதற்கு முலாம்பூச வாரியம் திறக்கலாம்/சட்டம் அட்சதை போடலாம் மானுட நியாயம்
அந்தப் புன்னகையைச் சமூகப் பூவை அரிக்கும்/புழு என்றே பிரகடனப்படுத்தும், நீதி நூல் வெளிச்சத்தில் /இது எனது நமது இவை என்று மாறி விடாது. ஏனெனில்
நெருப்பின் சூட்டில் மட்டுமே நிகழும் இரசவாதம் அது"

என தன்னலப் பேய் சுட்டெரிக்கப்பட்டு சமத்துவமாகிய மார்க்சியம் மலர வைக்கப்படுகிறது. சிதம்பர நாதனின் ஆதிசங்கரர் என்ற கவிதை காவி உடைதரித்துவரும் தத்துவமேதை ஆதிசங்கரருக்குப் புலையன் ஒருவன் பாடங்கற்பித்த வரலாற்றைச் சொல்கிறது.

"மனிதருணவை மனிதர் பறிக்கும் வழக்கும் இனியுண்டோ/மனிதர் நோக மனிதர் பார்க்கும் பார்வை இனியுண்டோ"என்ற கவிக்குயில் பாரதியின் வரிகளைப் பிரதிபலிக்கும் வகையில் மனிதனை மனிதனாக மதிக்காது விலகிப்போ என்ற சாதி வெறியால் இழித்துக் கூறிய ஆதிசங்கரரை நோக்கி புலையன் ஒருவன் "சுவாமிகளே ! என்னைப் பார்த்தா விலகிப் போ என்கிறீர்கள் எதிலிருந்து எதை விலகச் சொல்கிறீர்கள் ஒரு சாரீரக் கூடு இன்னொரு சாரீரக் கூட்டை விலகிச் செல்வதா? ஒரு ஒளிக்கீற்று இன்னொரு ஒளிக்கீற்றை வழிவிடச் சொல்வதா? ஒரு நெருப்பு இன்னொரு நெருப்பைப் பொசுக்கி விடுவேன் என்பதா?"என்று அடுக்கடுக்கான வார்த்தைகளை அள்ளி வீசி அவரது அறிவுக் கண்களைத் திறந்ததாக வருவது மனிதத்தின் புனிதத்தைக் காப்பாற்றுவதாகும்.

## உரைநடை இலக்கியங்கள்

இரகுநாதனின் "பஞ்சும் பசியும்" என்ற நாவல் உழைக்கும் வர்க்கமாகிய நெசவாளர்களின் போராட்டம் பொருந்திய வாழ்க்கையைக் காட்டி சமதர்ம சமுதாயத்திற்கு அடிகோலுகிறது. "மதலாளி வர்க்கத்தின் லாபம் தொழிலாளர் வர்க்கத்தின் நஷ்டம், தொழிலாளர் வர்க்கத்தின் லாபம் முதலாளிவர்க்கத்தின் நஷ்டம் என்றும் "வேலை நிறுத்தங்களை வெற்றிகரமாக நடத்துவதற்காகத் தொழிற்சாலையில் தொழிற்சங்கம், தொழிலாளரின் பொதுவான ஒற்றுமை ஆகிய இரண்டும் தொழிலாளர் கையிலிருக்கும் பலம் பொருந்திய ஆயுதங்களாகும்". என்றும் வரும் கே. திலக் அவர்களின் கூற்றுக்கு ஏற்ப நெசவாளர்களின் நிலையினை எடுத்துச் சொல்லி நாவலினை நடத்திச் செல்கிறார் இரகுநாதன். இதில் வரும் சங்கர் என்ற இளைஞன் நெசவாளர்களை நோக்கி "ஒரு தாதுலிங்க முதலியார் தான் கைலாச முதலியாரின் பிழைப்பைக் கெடுத்தாரா? இந்த நாட்டிலுள்ள எத்தனையோ தாதுலிங்க முதலியார்கள் நூலைக் கள்ள மார்க்கெட்டில் விற்றுக் கொள்ளையடிக்கும் பணக்காரர்கள் எத்தனையோ நெசவாளர் குடும்பங்களை நாசமாக்கவில்லையா? ஊராரின் மானத்தையெல்லாம் காப்பதற்கு நீங்கள் துணி நெய்து கொடுத்தீர்கள். ஆனால் இன்று உங்கள் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள வழியிருக்கிறதா? என்ற கேள்வியை எழுப்பியதோடு

இன்னிக்குள்ள ஜவுளித் தேக்கம் போகவும் நூல் விலை இறங்கவும் நீங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து சங்கம் வைத்து சர்க்காரின் போக்கைக் கண்டிக்க வேண்டும். உங்கள் ஒற்றுமையும் உறுதியும் தான் உங்களைக் காப்பாற்றும் மருந்து, உங்கள் விதியை மாற்றும் ஆயுதம் என்று தீர்வுசொல்வதும் அந்நாவலில் இடம் பெறும் பாட்டாளி வர்க்கப் போராட்டத்தைக் குறிப்பதாகும்."வர்க்கப் போராட்டத்திலும் தமது பங்கு என்ன என்பதைப் பாட்டாளி வாசகர் உணரும் வகையில் வழிகாட்டுவதே ஒரு மார்க்சிய இலக்கியப் படைப்பின் முதன்மையாக நோக்கமாக இருக்க வேண்டும்". என்ற வரும் கிரான்வில் ஹிக்ஸ் என்ற அறிஞரின் மார்க்சிய கோட்பாட்டிற்குப் பொருந்தி வருகிறது இந்நாவல் எனலாம். அடுத்து பிரபஞ்சன் அவர்கள் எழுதிய "சங்கம்" என்ற சிறுகதையில் சாதியைப் பார்த்தே வேலை வாய்ப்பு கிடைக்கிறதே ஒழிய திறமையைப் பார்த்து வேலைவாய்ப்பு கிடைப்பதேயில்லை என்ற சமூக அநீதி அழகுடன் சித்தரிக்கப்படுகிறது.

"ஜாதி, உறவு, சொந்தம், பந்தமெல்லாம் எதுக்கு ஏற்படுத்தி இருக்காங்க ஒருத்தருக்கு ஒருத்தர் உதவிக்கத்தானே..! ஒன்னை மட்டும் நல்லா ஞாபகத்துல வச்சிக்கோ நீ நல்ல நிலமைக்குப் போனா நம்ப பையன்களாப் பார்த்து கைதூக்கி விடணும். எல்லா ஜாதிக்காரனும், அதான் பண்றான். நாம்பளும் அதான் பண்ணனும் என்று கூறி அவர் ஒரு புஸ்தகத்தை நீட்டினார். இதுல நம்ப ஜாதியாளுங்க எங்க எங்க யாரு யாரு என்ன என்ன பதவி வகிக்கிறாங்கன்னு எழுதியிருக்கு உனக்கு எதிர்காலத்தில் ரொம்ப பிரயோஜனமா இருக்கும்.

அவன் புரட்டிப் பார்த்தான் கலெக்டர், கவர்ண்மெண்ட் செக்ரடரி, ஆபீஸர்கள் பெயர் எல்லாம் முதலியார் பட்டத்தோடு இருந்தன. என்று வரும் வரிகள் சமுதயாத்தில் வேலையில்லாத் திண்டாட்டம் தாண்டவமாடுவதற்கான காரணத்தை மார்க்சியத்தின் வழி நின்று விளக்குகிறது. அறங்கள் தலை தடுமாற்றம் ஆகிக் கொண்டு வரும் இந்நாளில் நேரடியான செயல்முறைக்கு வழிவகுக்கும் சிறப்பு மிக்க கோட்பாடு மார்க்சியம் ஆகிய சமதர்மக் கோட்பாடு ஆகும். மனித நேயமும், உலக ஒருமைப்பாட்டுணர்வும் செழித்ததற்கும், குறுகிய தேசிய வெறியும் இனவெறியும் தொலைந்து "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்னும் பரந்த போக்கு தழைத்ததற்கும் தமிழ் இலக்கியங்களில் விளங்கும் மார்க்சிய கோட்பாடு பற்றிய கருத்து விளக்கங்கள் பெரிதும் துணை செய்யும் என்பதில் ஐயமில்லை.

## பார்வை நூல்கள்


1. இலக்கியமும், மார்க்சியமும் - கி.கி. மறைமலை
2. சோஷலிஸத்தை நோக்கி - கே. திலக்
3. தமிழ்ப்புத்திலக்கியம் கருத்தியல் வளம் - பதிப்பாசிரியர் முனைவர் இரா. சந்திரசேகரன்
4. மார்க்சியமும் தமிழ் இலக்கியமும் - ஞானி
5. மார்க்சிய அழகியல் - ஞானி
6. பஞ்சும் பசியும் - இரகுநாதன்
7. சிறுகதைத் திரட்டு - பாரதியார் பல்கலைக்கழக வெளியீடு.

# பாரதியார் கவிதைகளில் மார்க்சியம்

*திருமதி. சி.யசோதா,* எம்,ஏ,எம்.ஃபில்.,
ஆ.ப.க.ப கல்லூரி, பழனி.

## முன்னுரை :

கலை இலக்கியம் மனிதனின் மறுபக்கம். மனிதனைத் தொடர்ந்து உன்னத மனிதானக்கும் பல பண்புகளுள், சக்திகளுள் கலை இலக்கியமும் ஒன்று எனலாம். மனிதனை அவன் வாழும் சமூகத்தை, அவன் படைக்கும் கலை இலக்கியத்தை, அவற்றின் சாரம் என நிற்கும் மானுடப் பண்பாட்டை, அது தரும் வரலாற்று உண்மைகளை, அவ்வுண்மைகள் வழியே கற்றுக் கொள்ளக் காத்திருக்கும் படிப்பினைகளை ஒரு மாபெரும் மானுட சங்கிலியின் தொடரும் கண்ணிகளாய்க் காணும் முயற்சியே மார்க்சியத் திறனாய்வின் நோக்கம் எனலாம். அந்த நோக்கத்தை நிறைவேற்ற பாரதியைத் துணைக்கு அழைக்கிறது இக்கட்டுரை.

## மார்க்சிய விஞ்ஞானம்

மண்ணுக்கேற்ற விளைச்சலைத் தருவதே மார்க்சியத்தின் தனித்தன்மை, சமூக மாற்றத்திற்கான சாத்தியமாகக் கொண்டிருப்பதாக அமைவதே மார்க்சிய விளக்கம். நவீன காலத்தில் மார்க்சியம் பற்றிய அனுபவச் சேர்க்கைகள், ஆய்வுகள் முதலியவை பற்பல புதிய பரிமாணங்களைப் பெற்று வருகின்றன. அது போலவே மார்க்சியம் தமிழ் இலக்கியத்தில் பயன்படுத்தப்படும் போது தமிழ் இலக்கியத்திலும் பல புதிய பரிமாணங்கள் வெளிப்படுகின்றன. இயற்கை விஞ்ஞானத்திலும், சமூக விஞ்ஞானத்திலும் ஏற்பட்டிருந்த முன்னேற்றத்தையெல்லாம் அடிப்படையாகக் கொண்டு தான் மார்க்சியம் எழுந்தது. மார்க்சியத்தை மூன்று கூறுகளாகப் பிரிக்கலாம் அவை,

| | | |
|---|---|---|
| 1. பொருள் முதல் வாதம் | - | இது மார்க்சிய மெய்யியலைக் குறிக்கும் |
| 2. மார்க்சியப் பொருளாதாரம் | - | இதற்கு உபரியாக திகழ்வது உபரி மதிப்புத் தத்துவம் |
| 3. விஞ்ஞான சோசலிசம் அல்லது கம்யூனிசம் (பொதுவுடைமைத் தத்துவம்) | - | இது மார்க்சிய அரசியலைக் குறிப்பதாகும். |

## மார்க்சியத் திறனாய்வு

இலக்கியம் என்பது நம்மைச் சூழவுள்ள சமூகத்தில் நிகழ்வதைப் பிரதிபலிக்க வேண்டும். அந்த அடிப்படையில் மார்க்சியவாதிகள் அடிக்கடி குறிப்பிடும் ஒரு கோட்பாடு, இலக்கிய நெறி அல்லது எதார்த்தவாதம் அல்லது நடப்பியல். சமூகத்தில் நிகழ்வது என்ற தொகுப்பில் சமுதாயத்தில் உள்ள அனைத்து பிரச்சனைகளும் அடங்கும். இலக்கியம் என்பது தனி மனிதன் சார்ந்தாக இருக்க முடியாது. தனி மனிதன் என்பவன் சமூகத்தின் அங்கம். சமூகத்தின் உறவு இல்லாமல் அவன் பிறக்க முடியாது. வாழ முடியாது இலக்கியம் படைக்க முடியாது. ஆகவே சமூக பிரச்சனையின்பால் அவன் இயல்பான ஈடுபாடு கொண்டு இப்பிரச்சனைகள் தீர வேண்டும் என்ற நோக்கத்தோடு இலக்கியம் படைக்க வேண்டும். இந்த நோக்கத்தோடு பாரதியின் கவிதைகள் திறனாயப்படுகின்றன.

## பாரதியின் பாடுபொருள்

வாழ்கையிலிருந்து பிறந்து வாழ்க்கையை விளக்கி வாழ்க்கைக்கு வழிகாட்டுவதே இலக்கியமாகும். பாரதியின் கவிதைகளும் அடிமை இந்தியாவில் பிறந்து அடிமை வாழ்க்கையை விளக்கி சுதந்திர வாழ்க்கைக்கு வழிகாட்டி உதவி செய்து இலக்கியக் கண்ணாடியாகத் திகழ்ந்து வருகின்றன. எனவே தான் பாடும் காலத்து

மக்களுக்கு வேண்டிய உண்மைகளை விளக்கக் கூடிய பாட்டாக அமைந்தது பாரதியார் பாட்டேயாகும்" என்று பாரதிதாசன் புகழ்கிறார்.

## பாரதியின் லட்சியம்

உன் லட்சியம் என்ன? என்ற கேள்விக்கு பாரதி,

"நமக்குத் தொழில் கவிதை நாட்டுக்கு உழைத்தல்
இமைப்பொழுதும் சோராதிருத்தல்"

எனப் பதில் தருகிறான். மேலும் அவன் ஒரு முறை சிவசக்தியிடம் வரம் கேட்கும் போது

"வல்லமை தாராயோ-இந்
மாநிலம் பயனுற வாழ்வதற்கே"

என்ற சுயநலமில்லாத தன் பொதுவுடைமைச் சிந்தனையை வெளிப்படுத்துகிறான். இவ்வாறு பாரதிக்கு.

1. கவிதை பாட வேண்டும்
2. பாடும் கவிதைகளால் இவ்வுலகை ஆட்சி செய்ய வேண்டும்
3. அவ்வாட்சியால் மாநிலம் பயனுற வேண்டும் என்ற உயரிய லட்சியங்கள் இருந்துள்ளன.

## பாரதியின் பொதுவுடைமைச் சிந்தனை

தனியொருவனுக்கு உணவில்லை எனில் இந்த ஜகத்திற்குத் தீயிடச் சொன்னவன் பாரதி. எனவே தான் சாதி மதத்தால் இந்நாடு சிதையக் கூடாது என்பதில் கவனமாக இருக்கிறான்.

"பாருக்குள்ளே தெய்வம் ஒன்று - இதில்
பற்பல சண்டைகள் வேண்டாம்"

என்றும்,

"தகரென்று கொட்டு முரசே
பெண்மைச் சாதி வகுப்பினை எல்லாம்"

என்றும் சமாதானக் கொடி உயர்த்துகிறான். மேலும் உண்மையான நாட்டுப்பற்றும், மொழிப் பற்றும் உள்ள ஒருவனே சமூகத்தின் மீது அக்கறை உள்ளவனாக விளங்க முடியும். எனவே தான்

Breaths ther the man with soul so dead
Who never to himself hath said;
This is my own; my native land

என்று ஸ்காத்லாந்துப் புலவரான வால்ட்டர் ஸ்காட் கூறியதைப்போலவே பாரதியும்,

"பெற்ற தாயும் பிறந்த பொன் நாடும்
நற்றவ வானினும் நனி சிறந்தனவே என்றும்
"செந்தமிழ் நாடேனும் போதினிலே இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலேயே

என்றும் பாடிப் பரசவமடைகிறான்.

## பாரதியின் பொருளாதாரச் சிந்தனை

பிரெஞ்சுப் புரட்சியின் போது எழுந்த அரசியல் தத்துவங்களாக வலியுறுத்தப்பட்ட ஒரு கொள்கைகள் "ஓர் நிறை" ஓர் விலை" என்பன. இதன்படி ஏற்பட வேண்டிய பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் அற்ற சமநிலையை

பாரதி ஏற்றுக் கொள்கிறார்.

எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் ஓர் இனம்
எல்லோரும் இந்நாட்டு மன்னர்"

என்ற பாடல் மூலம் ஆண்டான் அடிமை (முதலாளி, பட்டாளி வர்க்கம்) நிலை வேண்டாம் எனறு வலியுறுத்துகிறான். அதற்கான போராட்டத்தில் வெற்றி பெற்று,

"முப்பது கோடியும் வாழ்வோம் வீழில்
முப்பது கோடியும் வீழ்வோம்

எனப் போர்க் கொடி உயர்த்துகிறான். அதோடு மட்டுமல்லாமல் பொருளாதார வர்க்க பேதத்தை எதிர்த்துப் போரிட்டு வெற்றி கண்ட ரஷ்ய மக்களை மனதாரப் புகழ்கிறான்.

"மாகளரி பராசக்தி ருஷ்ய நாட்டினில்
கடைக்கண் வைத்தாள்"

என்ற பாடல் மூலம் ஜார் மன்னனின் வீழ்ச்சியில் மக்களாட்சியின் எழுச்சியை எண்ணிக் குதூகலிக்கிறான் பாரதி.

### ஒப்பில்லாத சமுதாயம் (சோசலிசம்)

பாரதி ஒரு விடுதலைக் கவிஞன் மட்டுமல்ல. விடுதலைப் போராட்ட வீரன். அவன் பார்வை இந்த நாட்டின் சுதந்திர உதயத்தைக் காண்பதோடு நின்று விடவில்லை .அதை அவன் நீண்ட பயணத்தின் ஒரு பகுதியாக மட்டுமே கருதினான். அதன் பின் இந்த நாடு வளம்பெற வேண்டிய தேவை பற்றியும், நாம் செய்ய வேண்டிய பணிகள் பற்றியும் சிந்தித்தான். ஏழ்மை ஒரு தீமை இந்த நாட்டின் முதல் குறைபாடு எனவே அதைப் போக்க,

பொருளிலார் பொருள் செய்தல் முதற்கடன்"

என்கிறான். மேலும் வறுமைநிலை காரணமாக ஆற்றல் மிக்க மனிதன் சோற்றுக்கு வாடும் நிலையைக் கண்டு நொந்தான் என்வேதான்

"சொல்லக் கொதிக்குதடா நெஞ்சம்
வெறுஞ் சோற்றுக்கோ வந்ததிந்தப் பஞ்சம்"

என்று உள்ளம் துடிக்கிறான். மேலும் பொதுவுடைமைச் சமுதாயம் அல்லது சோசலிசச் சமுதாயம் என்பது பொருளாதாரச் சமத்துவமுடைய சமுதாயம் மட்டுமல்ல. ஆண், பெண் சமத்துவத்தையும் அடிப்படையாகக் கொண்டது. இதனை பாரதி நன்கு உணர்ந்திருந்தான். எனவேதான் புதுமைப்பெண்ணைப் படைத்து உலவவிட்டான். அப்பெண்ணைப் பட்டங்கள் ஆளவும் சட்டங்கள் செய்யவும் முன்னேற்றினான்.

நாணமும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்"

என்று கூறி நிமிந்த நடையும், நேரியபார்வையும் கொண்ட பெண்களை நடமாட விட்டான். அறிவில் ஆணுக்கு நிகராக்கினான். கற்பைப் பொதுவுடமை ஆக்கினான். காதலைக் கடைப்பிடிக்கக் கற்றுக்கொடுத்தான். இவ்வாறு பாரதியின் சோசலிசச் சமுதாயம் எல்லா வகைகளிலும் உயர்புடையாய், பொதுவுடைமை உடையதாய், பொருளாதார மேம்பாடு உடையதாய் அமைந்திருந்தது.

## முடிவுரை

மாறாத சமுதாயம் வளர்வதில்லை என்ற அடிப்படையில்தான் பாரதி நம்முடைய சமுதாயத்தைக் காலத்திற்கு ஏற்ற அறிவியல் சிந்தனையின் வழிகாட்டுதலோடு மாற்ற முற்பட்டான். நாட்டின் ஏற்ற தாழ்வுகளை மாற்ற எண்ணினான்.

"சோசலிசத்திற்காக உயிரைக் கொடுப்போம்.

உயிருக்காக ஒரு நாளும் சோசலிசத்தைக் கொடுக்கமாட்டோம். ஒருவர் நோக என்ற கொள்கைக்கேற்ப புதிய விதி செய்து அதை எந்த நாளும் காத்தான், ஒருவர் நோக இருவர் பாாக்காத நிலையைப் பாரதம் கண்டிட இலக்கியம் மூலம் வழிவகுத்தான் பாரதி.

## துணைநூற்பட்டியல்


1. இளங்கோ ச.டாக்டர், பாரதிதாசன் பார்வையில் பாரதி, அன்னம் வெளியீடு, சிவகங்கை-60, முதற்பதிப்பு - 1982
2. குழந்தைசாமி. வா.செ, பாரதியின் அறிவியல் பார்வை, பாரதி பதிப்பகம், சென்னை, 2ம் பதிப்பு 1984
3. சண்முகம். இராம(ப.ஆ.குழுவினர்) பாரதியியல், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், முதற்பதிப்பு 1982
4. ஞானி.மார்க்சீயமும் தமிழ் இலக்கியமும், பரிமாணம் வெளியீடு, கோவை-9 முதற்பதிப்பு 1988
5. தியாகு, மார்க்சியம் அனா ஆவண்ணா,புதுமலர் பதிப்பகம், கோவை-45 2ம் பதிப்பு 1999
6. நடராசன் தி.சு. திறனாய்வுக்கலை, நியு செஞ்சுரி புக்ஹவுஸ் சென்னை-98 முதற்பதிப்பு 1996
7. மணி.டி.வி.எஸ், பாரதியார் இதயம், வானவில் பிரசுரம், சென்னை35 1ம் பதிப்ப
8. இராமநாதன் கே, பாரதி படைத்த புதுமை நியூ செஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை98 முதற்பதிப்பு 1982.

# "தமிழ் இலக்கியத்தில் பின் - நவீனத்துவக் கூறுகள்"

முனைவர். *எஸ். அலமேலு மங்காள்*,தமிழ் - விரிவுரையாளர்,
மீனாட்சி மகளிர் கல்லூரி, கோடம்பாக்கம், சென்னை.

வரலாற்றின் வழியேதான் மனிதன் வந்திருக்கிறான். வளர்ந்திருக்கிறான். அந்த வகையில் வரலாற்றின் அனைத்துக் களங்களின் பதிவும், பாதிப்பும் மனிதனுக்கு உண்டு. மேற்கத்திய தத்துவ வரலாறு அ. தொன்மைத் தத்துவம் ( Ancient ) ஆ. மத்திய கால தத்துவம் ( Medieval ) இ. நவீன தத்துவம் ( Modernism ) மற்றும் பின் நவீனத்துவம் ( Post Mordernism ) எனக் காலப் பாகுபாடு செய்யப்படுகிறது.

இன்றைய கால கட்டத்தை குறிக்கும் வகையில் மேலைத் தத்துவ வரலாற்றின் கட்டமாகப் பின் நவீனத்துவம் ( Post Mordernism ) அமைந்துள்ளது என்பது ஆர்னால்டு டாயின்பியின் கருத்து. தத்துவ வரிசையில் எல்லாவற்றிற்கும் இறுதியாக 1950 களில் வந்து நின்றது பின் நவீனத்துவம்.

### தொன்மைத் தத்துவம்

கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. ஆறாம் நூற்றாண்டு வரை கிரேக்க, ரோமானிய அடிமைச் சமூகங்களில் உருவான புராதன தத்துவச் சிந்தனைகள், செயற்பாடுகள் தொன்மைத் தத்துவம் எனப்படுகிறது. இக்காலத்தில் எழுந்த பொருள் முதன்மை (தேல்ஸ், பித்தகோரஸ், ஹெராலிடஸ், எபிகூரல், எடமாக்ரிடஸ்) மற்றும் கருத்து முதன்மைச் (சாக்டீஸ், பிளாட்டோ) சிந்தனைகள் குறிப்பிடத்தக்கவை. பிரபஞ்ச உருவாக்கக் கோட்பாடுகளுக்குப் பதிலாக அறிவியல் மற்றும் அரசியல் கோட்பாடுகள் முக்கியத்துவம் பெறலாயின.

### மத்தியகால தத்துவம்

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் கி.பி. பதினான்காம் நூற்றாண்டு வரையிலான காலகட்டம் மத்திய காலத் தத்துவமாக கருதப்படுகிறது. கிறிஸ்துவ எழுச்சி, தத்துவத்தை முற்றிலும் மதவியுலோடு இணைத்துவிட்டது. ரோமப் பேரரசின் வீழ்ச்சி முதல், முதலாளியச் சமூக அமைப்பின் தோற்றம் வரையிலான இக்கால கட்டத்தில் புனித அகஸ்டின், ஒரிகன், நெமசியஸ், கிரிகோரி மற்றும் தாமஸ் அக்கினோஸ் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். தொன்மைத் தத்துவத்தின் கருத்து முதன்மைக் கூறுகள் உள்வாங்கப்பட்டு பொருள் முதன்மைக் கூறுகள் பின்னுக்குத் தள்ளப்பட்டன. "மதவியலின் வேலைக்காரி" யாக மத்தியகாலத் தத்துவம் செயல்பட்டது. பிரபஞ்ச இயக்கம் குறித்த அம்சங்கள் மதரீதியான விசுவாசத்தின் ( தங்ப்ண்ஞ்ண்ர்ன்ள் ஊஹஹண்ற்ட் ) வெளிச்சத்தில் விளக்கப்பட்டன.

### நவீனத்துவம்

பிரபுத்துவத்தின் வீழ்ச்சி, முதலாளித்துவத்தின் தோற்றம் ஆகியவற்றோடு நவீன காலம் தொடங்குகிறது. பதினைந்தாம் நூற்றாண்டுக்குப் பிந்திய, இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி உள்ளிட்ட காலகட்டத் தத்துவம் நவீனத்துவம் எனப்படுகிறது. பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் நியூட்டன், தெகார்தே, ஹெப்ளர், வெசாலியஸ் போன்றோரின் அறிவியல் கண்டுபிடிப்புகள் குறிப்பிடத்தக்கவை. அறிவியலும், தொழில்நுட்பமும் வளர்ச்சி பெற்ற அறிவொளிக் காலம் இது. பிரபுத்துவக் கோட்டைகள் தகர்க்கப்பட்டன. பதிய புவியியற் புலங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. மாக்கியவெல்லி, தாமஸ் ஹோப்ஸ், ஜீன்போடின் ஆகியோரது அரசியல் தத்துவங்களால் "மறுமலர்ச்சிக்கால" மனிதாயம் முன் வைக்கப்பட்டது. எல்லாவற்றையும் விட மனிதனின் முக்கியத்துவம் பிரதானமாக்கப்பட்டது.

பகுத்தறிவு கோலோச்சிய இக்கால கட்டத்தில், மதவியலின் விசுவாசப் பிடியிலிருந்து மேலைத் தத்துவம் தன்னை விடுவித்துக்கொண்டது. பிரபஞ்ச முழுமைக்கான சிந்தனைகள் என்பதற்குப் பதில் தேசிய அளவில் சிந்தனைகள் முன் வைக்கப்பட்டன. சோதனைகள் மூலம் அனுபவபூர்வமான உண்மைகளை கண்டறிதல், தர்க்க அடிப்படையில் விளக்கங்களை முன்வைத்தல் போன்றவை அறிவியலின் பிரதான செயல்பாடுகளாகப் போற்றப்பட்டன. இது அனுபவ வாதம், அறிவு வாதம் என இரு போக்குகளாகப் பயணப்பட்டன.இக்காலத்தில் தெகர்தேயின் கார்டீசிய அறிவுவாதம் பிரபஞ்ச இயக்கத்திற்கு எல்லாம் அடித்தளமாக இருப்பது கடவுள் என்று கற்பித்தது. இவ்வாதம் பின்-நவீனத்துவ வாதிகளால் கடும் கண்டனத்திற்கு உள்ளானது. கார்ட்டீசிய அறிதல் முறையை மறுக்கிற அதர்க்கவியல் தத்துவங்கள் தோற்றம் பெற்றன. அந்த வகையில் ஷோபன்ஹோர், நீட்ஷே ஃபூக்கோ, தெரிதா, விட்கென்ஸ்டெய்ன் ஆகியோரின் பணி குறிப்பிடத்தக்கது. நீட்ஷே அடிமை அறிவியலை மனிதரில் விதைக்கிற கிறிஸ்துவ மதத்தை மறுத்தார். அய்யவாதமரபு உருவானது. எல்லாப் பழைய அடிமை மதிப்பீடுகளையும், தூக்கி எறியச்சொன்ன நீட்ஷேயின் குரல் "நிகிலிசம்" எனக் குறைகூறப்பட்டது.

இக்கால கட்டத்தில்தான் (பதினொன்பதாம் நூற்றாண்டில்) ஹெகலின் இயக்கியலும், மார்க்சின் பொருள் முதல் வாதமும் முன் வைக்கப்பட்டது. இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் மொழியின் மீது

கவனம் செலுத்திய "அமைப்பியல் அறிதல்" தோற்றம் பெற்றது. மேலைத் தத்துவம் மதவியலின் பிடியிலிருந்து விலகிப் பெருவளர்ச்சி அடைந்த போதிலும், இந்தியத் தத்துவம் இன்றளவும் இறையியலின் எடுபிடியாகத்தான் செயல்பட்டு வருகிறது. மதம் சாரா தத்துவ மரபு இந்தியாவில் வளர்ந்தெடுக்கப்படவில்லை.

## பின் - நவீனத்துவம்

நவீனத்துவத்தின் தொடர்ச்சியாகவும், உச்சமாகவும், அதன் ஒருசில கூறுகளின் நீட்சியாகவும், சிலவற்றின் மறுப்பாகவும் பின் நவீனத்துவம் அடையாளங் காணப்படுகிறது. அறிவு என்பது உண்மையைத் தேடும் முயற்சி என்பதை மறுத்த பின் - நவீனத்துவம் அறிவை ஒரு சமூக நடைமுறையாகக் கண்டது. பின்-நவீனத்துவத்தின் பல்வேறு விதமான போக்குகள் இருந்தபோதிலும் தன்நிலையை முன்னிலைப்படுத்தும், பகுத்தறிவைக் கேள்விக்குள்ளாக்கும் பண்பே பொதுவானதாக விளங்குகிறது. அறிவின் சர்வ வியாபகத்தன்மை, நிரந்தரத் தன்மை என்பன கேள்விக்குள்ளாக்கப்பட்டு எதார்த்தவாதம், புனைவியல், நவீனத்துவம் போன்ற எல்லாவிதமான கோட்பாட்டுருவாக்கத்தையும் சந்தேகக் கண் கொண்டு பார்த்தது. பின்-நவீனத்துவம் நடைமுறை அறிவிற்கு முக்கியத்துவம் அளித்தது. எந்த ஒன்றையும் வெளியிலிருந்து எட்டிப்பார்க்க முடியாது. எதையும் உள்ளிருந்தே பார்க்க வேண்டும் என அறிவித்தது.

பின்-நவீனத்துவம் மொத்தத்துவக் கருத்தாக்கத்தை மறுத்தது, மொத்தத்துவம், பொதுமைப்படுத்தல், தரப்படுத்தல், ஒருமைத்தன்மை, ஒன்றை நோக்கிய கருத்துக் குவிப்பு போன்றவையெல்லாம் எதேச்சாதிகாரத்திற்கே வழிவகுக்கும் எனப்பதால் பின்-நவீனத்துவம் சிதறுண்டு போதல், சிறு குழுக்கள், விலகல், வேறுபாடு, பன்மைத்தன்மை, ஒருமையின்மை, இருபொருட்டன்மை ஆகியவற்றை வலியுறுத்தியது. பெருந்திட்டம் என்பதற்குப் பதிலாகச் சிறிய திட்டங்கள், பேரிலக்கியம் என்பதற்குப் பதிலாக சிறுகதைப் பாடல்கள் முக்கியத்துவம் பெறும் என வாதிட்டது.

## பின்-நவீனத்துவ இலக்கியத்தின் அடிப்படைக் கூறுகள்

1. பன்மைத் தன்மைக்கு ( **Plurality** )அழுத்தமளித்தல்
2. எல்லா விதமான அதிகார ஆதாரங்களையும் (**Authority**) கேள்விக்குள்ளாக்குதல்
3. எல்லா விதமான மொத்தத்துவ முயற்சிகளையும் ( **Universality** ) மறுத்தல்

நவீனத்துவத்தின் உச்ச வெளிப்பாடாகவே பின்-நவீனத்துவம் வெளிப்பட்டாலும், தன்னை வெகுவாக வேறுபடுத்திக் கொண்டுள்ளது. வெளிப்படுத்த இயலாதவை குறித்த மறைகுறிப்புகளை உருவாக்குதல், வேறுபாடுகளை ஊக்குவித்தல், தனித்துவங்களுக்கு மரியாதை செலுத்துதல் போன்றவை பின் நவீனத்துவ இலக்கியப் போக்குகளாகும். எதார்த்தத்தை புரிந்து வெளிப்படுத்த இயலா ஏக்கத்தையும், ஆழங்களை எப்படியாவது எட்டிவிட வேண்டும் என்ற அவஸ்தையையும் விட்டொழித்து, எல்லாவற்றையும் வேடிக்கையாய், விளையாட்டாய், முரண்நிலை உணர்வின் பின்னணியில் மொத்தத்துவத்திற்கு எதிரான யுத்தம் ஒன்றைத் தொடங்கும் வகையில் தோற்றம் பெற்றது பின் -நவீனத்துவம் ஆழத்தை எட்டி எதார்த்தத்தைக் கையகப்படுத்தும் வெட்டி முயற்சிக்கும் பதிலடியாய்த் தோற்றம் கொண்டது.

வரையறுக்கப்பட்ட ஒழுங்குத் தன்மையை நோக்கிய நகர்வாகவே நவீனத்துவம் இருந்தது. ஆனால் பின் -நவீனத்துவமோ, ஒழுங்குநிலைத் தன்மைக்குப் பதிலாக இயக்கத் தன்மைக்கு அழுத்தம் கொடுத்தது. இழந்து போன சொர்க்கத்தைப் பற்றி நவீனத்துவம் கவலைப்பட்டது. இழந்து போனதைப்பற்றி ஏங்கிக் கொண்டிராமல் இருப்பை எதிர்கொள்வதைப்பற்றி பின் -நவீனததுவம யோசிக்கின்றது. இறுக்கமான தர்க்கத்திற்குப் பதிலாக அதர்க்கத்திற்குப் பின் நவீனத்துவம் கட்டியங்கூறியது. இலக்கியச் செயல்பாடுகளின் உண்மைத் தன்மை, ஒழங்குத் தன்மை ஆகியவற்றிற்குப் பதிலாகப் புனைவுத் தன்மையை அது வரவேற்றது. மனிதனது அறிதலில். பிரக்ஞையில் கலந்து போயுள்ள புனைவுத் தன்மையைப் பற்றிய உணர்வை விரட்டிவிட்டு ஒருவகை உண்மைத் தன்மையைப் பதிக்கிறது. எதார்த்தவாதம் இருத்தலுக்கும், அறிதலுக்குமிடையிலான இடைவெளியைத் திரட்டுவதன் மூலமாக "உண்மைத் தன்மை" உருவாக்கப்படுகிறது. "புனைவுத் தன்மை" மறைக்கப்படுகிறது. இந்நிலையில் சிந்திக்கக்கூடிய எதுவும் புனைவாகத்தான் இருக்க முடியும் என்பது நீட்ஷேயின் கருத்து.

பெருங்கதைப் பாடல்களுக்குப் பதிலாகச் சிறுகதைப் பாடல்களே இனி இலக்கியத்தில் சாத்தியம். பேரிலக்கியத் தேடலுக்குப் பதிலாகச் சிறிய திரள்கள், சிதறல்களின் இலக்கியங்களையே இனி ஊக்குவிக்க முடியும். மொத்தத்துவத்திற்குப் பதிலாக சிதறுதல், ஒருமித்த பார்வைக்குப் பதிலாக பிளவுண்ட, பார்வை, தர்க்க வயப்பட்ட சிந்தனைக்கும் பதிலாக அதர்க்க வயப்பட்ட சிந்தனை, "அதுவா இதுவா?" என்கிற கேள்விக்குப் பதிலாக "இரண்டுமே" என்கிற பதில் ஆகியவை இனி முன்வைக்கப்படும்.பின் -நவீனத்துவம் பிந்திய முதலாளித்துவத்தின் கலாசார வெளிப்பாடாகும். மதங்கள் முன்வைத்த "வேதங்கள்", ஆடம்ஸ்மித் முன்வைத்த "சொத்தின் வளர்ச்சி", ஹெகல் முன்வைத்த "இயங்கியல் வளர்ச்சி", மார்க்சியம் முன்மொழிந்த " பாட்டாளி

வர்க்கத்தின் விடுதலை", நவீனத்துவம் முன்மொழிந்த "பகுத்தறிவின் விடுதலை" போன்ற பெருந்தத்துவங்களின் தகர்வைப் பறைசாற்றுகிறது பின் -நவீனத்துவம். எல்லாவற்றையும் வேடிக்கையாக, விளையாட்டாக (ஃபண்டகி) எடுத்துக் கொள்ளும் வாய்ப்பை வழங்கியுள்ளது பின் -நவீனத்துவம். இலக்கியம் என்பதற்குத் தனித்தகுதி இல்லை என்கிறது பின் -நவீனத்துவம். உயர்சாதி இலக்கியம், தாழ்ந்தவர் இலக்கியம் என்பவைகளை எல்லாம் கலைத்துப் போடுகிறது. கதைகள், கவிதைகள், கட்டுரைகள், நாவல்கள் என்ற பேதங்களை உடைத்து விடுகிறது. இலக்கியம் என்ற வடிவத்தைப் பெருமளவு தகர்க்க முயற்சி செய்கிறது பின் -நவீனத்துவம். உண்மை, பொய் என்ற இறுக்கமான வரையறைகளைத் தகர்த்து விடுகிறது. புராணக்கதைகளை விநோதமாகப் பார்க்கிறது. அனைத்தும் விநோதங்கள் நிறைந்தவை. பழைய இலக்கியங்களைத் தாறுமாறாகத் தலைகீழாய்ப் புரட்டும் எதிர் அழகியல் முயற்சிக்குப் பின் -நவீனத்துவம் முன் நிற்கிறது. விநோதப் படைப்புகளைக் கற்பிதங்களின் வழியே உருவாக்கலாம்இ படைப்புலகின் விரிவுக்கும் பின் -நவீனத்துவப் போக்கு பெரிதும் பயன்படலாம். வாழ்க்கை முழுமைகளில் இல்லை. பின்னங்களில் தென்பட்ட வாழ்வு பிறகு அப்படியும் இல்லை என்றாகிவிடும் நிலைமை, வாழ்க்கையில் எல்லாமே குழம்பி விட்டன. வாழ்வின் பல்வேறு பரிணாமங்கள் தாறுமாறாகிக் கிடக்கின்றன. உறவுகள் எல்லாம் சிக்கலாகி விட்டன. எதிலும் நிச்சயமில்லை. எதுவும் நேரலாம். பற்றிக் கொள்வதற்கான எதார்த்தம் என ஒன்றுமில்லை. நிரந்தரம் என எதுவும் இல்லை. இந்தச் சூழலில்தான் பின் -நவீனத்துவம் பேசப்படுகிறது. தெய்வங்களைத் தேடிய மனிதர்கள் பிசாசுகளாய் மாறினர். ஒன்றைத் தேடியவர்களுக்கு இன்னொன்று கிடைத்தது. பின் -நவீனத்துவம் முரண்பட்டு நிற்கும் மரபின் ஒன்றிரண்டு கூறுகளோடு தன்னை இணைத்துக்கொள்ளவும் செய்கிறது. இத்தகைய சூழலில் தான் பின் -நவீனத்துவம் பேசப்படுகிறது.

### தமிழ் இலக்கியத்தில் பின் -நவீனத்துவம்

மனித விடுதலைக்கான புதிய வெளிச்சங்களைத் தருகிற கோட்பாடகப் பின் -நவீனத்துவம் விளங்குகிறது. பெண் விடுதலைக் குரலைப் பின் -நவீனத்துவம் எனப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆணின் மேலாண்மை உடைதல் அல்லது தகர்ப்பு நேர்கிறது. தலித் மக்கள் இந்த இடத்தில் சாதீய ஆதிக்கத்திலிருந்து விடுவித்துக்கொள்வதில் பின் -நவீனத்துவம் உதவக்கூடும். பின் -நவீனத்துவம் என்ற போக்கு தோன்றுவதற்கான உலகளாவிய முதலாளியம் தமிழ்ச்சமூகத்தில் குறிப்பாகத் தலித் சமூகத்தின் மீது எத்தகைய தாக்கங்களை ஏற்படுத்தி வருகிறது. அதன் வீச்சுக்கள் என்ன என்பது பற்றி எல்லாம் திறனாய்வு செய்யப்படவில்லை. சாதிகளைத் தகர்ப்பதின் மூலம் தலித் சமுதாயத்தின் விடுதலை சாத்தியம். சாதீய தகர்ப்பை முழு அளவில் செய்வதாகிப் பின் -நவீனத்துவத்தைத் தலித்தியம் தனக்குரிய பார்வையாக வரித்துக் கொள்கிறது.

பழைய தத்துவங்கள் புறக்கணிக்கப்பட்ட சூழலில் மார்க்சியம் மனிதனை காப்பாற்ற முடியவில்லை. இயங்கியல் போல் இருத்திலியமும் இங்கு மறுக்கப்படுகிறது. நடப்பியல் எடுபடவில்லை. இருப்பினும், மார்க்சிய விமர்சனம் தமிழ்ச் சூழலில் சிறப்பாகப் பயன்பட்டுள்ளது. "சங்க இலக்கியம் புனிதமானது; அக்காலம் ஒரு பொற்காலம்" போன்ற கருத்துக்கள் தலைகீழாக மாற்றப்பட்டு, சங்ககாலச்சமூகத்தில் வாக்க வேறுபாடு இருந்தது; வறுமை தலைவிரித்தாடியது என்றெல்லாம் கருத்துக்கள் முன்வைக்கப்பட்டன. சிலப்பதிகாரம் வணிகச் சமூகத்தின் எழுச்சிக்கான அடையாளம் எனக் கூறப்பட்டது. நந்தனார் சரிதம், பள்ளுப்பாடல் முதலிய இலக்கியங்கள் ஒடுக்கப்பட்ட மக்களின் குரலாக வெளிக் கொணரப்பட்டன.பள்ளர்களின் வாழ்வை மையமாகவும், அம்மக்களையே பிரதான பாத்திரங்களாகவும் கொண்டு கி.பி. பதினேழாம் நூற்றாண்டில் உதித்த "முக்கூடற் பள்ளு" என்கின்ற படைப்புதான் முதன்முதலில் தமிழில் தோன்றிய தலித் இலக்கியம் எனலாம். "கிட்டே பார்த்த உடனேயே தூரப்போ" என்று விரட்டுகிறார்கள்; ஆனால். அவர்களே நான் வேளாண்மை தரும் சோறை மட்டும் விலக்குவதில்லை, என்று கிண்டலாய்ப் பள்ளர் ஒருவர் கூறுவதாக, தீண்டாமை எதிர்ப்பு இலக்கியமாக அமைந்த பாட்டு:

" பக்கம் தூரம் போயும்/தக்க சோறென வேள்ண்மை /பள்ளா பள்ளா என்பர்மெய் கொள்ளாதவர்."

தென்னார்க்காடு மாவட்டம். விருத்தாசலம் வட்டம், நாரையூர் கிராமத்தைச் சேர்ந்த தெருக்கூத்து வாத்தியார் வே. சடையமுத்து பாடுகிற நாட்டுப்புற பாட்டு ஆண்டை மக்களைக் கிண்டடித்துக் கிழித்துப் போடுகிறது.

"பறையர் செருப்புப் போட்டு வந்தா/பஞ்சாயித்து வைக்கிறீங்க - எங்க
பறச்சி கொஞ்சம் அழகாயிருந்தா /ஆண்ட மக்களே - ஒங்கப்/பல்லை கொஞ்சம் காட்டுறீங்க

பகுத்தறிவின் துணை கொண்டு மதம் சார்ந்த நம்பிக்கைகளை முதன்முதலில் கேள்விக்குள்ளாக்கியது ஈ.வே.ரா. பெரியார்தான். பெரியாரியத்தில் பின் நவீனத்துவ அம்சங்களின் இழைகள் ஓடுவதைக் காண முடிகிறது. கடவுள், மதம் முதலியவை வரலாற்றுச் சூழலில் மனிதர்களால் கட்டமைக்கப்பட்ட கருத்தாக்கங்கள். தெய்வங்களும், பிசாசுகளும் மனிதர்கள் தமக்குள் தாமாக ஏற்படுத்திக் கொண்ட பிம்பங்கள். இவற்றைத் தகர்ப்பதன் மூலம் மனிதன் தன்னைப் பற்றி உணர்வு கொள்கிறான். கடவுள் என்ற கருத்தாக்கத்தின் கூறுகளைப் பகுத்து ஆய்வதன் மூலம் தான் கடவுளை மனிதன் கடந்து செல்ல முடியும் என்பது பெரியாரின் வாதம்.ஏற்றத்தாழ்வான ஆதிக்கக் கருத்தியலை எதிர்ப்பதே பின் நவீனத்துவத்தின் நோக்கமாகும்.

# மீள்தன்மைகள் வழி அசோகமித்திரனின் சிறுகதைப் படைப்பாளுமை

முனைவர். *இரா. அறவேந்தன்,* முதுநிலை விரிவுரையாளர் - முதுகலை தமிழாய்வுத்துறை,
பிஷப் ஹீபர் கல்லூரி, திருச்சிராப்பள்ளி.

இலக்கியப் படைப்பாளி ஒருவர், குறிப்பிட்ட கதைக்கரு - கதை நிகழ்வு - கதை மாந்தர் - கதைப் பின்புலம் - கதை உத்தி போன்றவற்றை மீண்டும் மீண்டும் கையாளுவதை, பலமுறை கையாளுவதை மீள்வருதன்மை எனப் பொதுவாகக் குறிப்பிடலாம். படைப்பாளி தம் படைப்புகளில் குறிப்பிட்ட பெயர் உடைய, குறிப்பிட்ட பண்புடைய கதை மாந்தரைத் தொடர்ந்து பயன்படுத்தும் வழக்கை மு.வ., சுஜாதா போன்றவர்தம் படைப்புகள் வழி அறியலாம். குறிப்பிட்ட இடப் பின்னணிக்கே முதன்மை அளித்துப் படைக்கும் முறையைத் தி.ஜா., கி.இரா. போன்றவர்தம் படைப்புகளில் அறியலாம். இந்த இருவகைப் படைப்பாக்க முறைகளுமே படைப்பாளியால் முன்கூட்டியேத் திட்டமிடப்பெற்றுத் தொடர்ந்து கையாளப் பெற்று வருபவை. இதனால் குறிப்பிட்ட பெயர், பண்பு, இடம் தொடர்பானவற்றில் அவர்கள் அழுத்தமான விருப்பம் உடையவர்கள் என்பது வெளிப்படையாகும்.

அசோக மித்ரன் சிறுகதைகளிலும் குடும்பம், குடிபெயர்வு, வீடு, அப்பா இறத்தல் போன்ற கதைக் கருக்களும், ஆந்திர - சிகந்தராபாத், பிராமணக் குடும்பம், இரயில்வே குடியிருப்பு, வாழ்வியல் பின்னணிகளும் மீண்டும் மீண்டும் பல்வேறு கதைகளில் பயன்படுத்தப் பெற்றுள்ளன. இப்படைப்பாக்கமுறை பொதுவான சிறுகதைப் படைப்பாக்க முறைகளில் ஒன்றுதான். இத்தன்மைக்கு அப்பால் அசோகமித்திரன் சிறுகதைகளில் வேறு ஒரு வகையான மீள்வறாதன்மை வாய்ந்த படைப்பாக்க முறையைக் காணமுடிகிறது.அசோக மித்திரன் சிறுகதையில் காணலாகும் அந்தப் படைப்பாக்க முறை தனி ஒரு படைப்பை அடிப்படையாகக் கொண்டது அன்று. அவர்தம் சிறுகதை இலக்கிய முயற்சியை ஒருங்கு வைத்துத் தொகுத்துப் பார்க்கையில் தான் அந்த மீள்வருதன்மை வாய்ந்த படைப்பாக்க முறை இடம்பெற்றுள்ளதை உணர முடிகின்றது. அசோகமித்திரன் 1956 முதல் 2000 வரை எழுதிய 187 சிறுகதைகள் இருதொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. இத்தொகுதியில் இடம்பெற்றுள்ள 11 சிறுகதைகளுக்கிடையே காணலாகும் மீள்வரு தன்மை வாய்ந்த படைப்பாக்க முறையை மூவகையாகப் பகுக்கலாம். அவை,

### மீள்தன்மை -1

குறிப்பிட்ட நிகழ்வே இரு வேறு கதைகளில் வளர்நிலையில் மீள்வுருதல்.

ஒரு சிறுகதையில் கதையாக்கப் பெற்ற ஒரு நிகழ்வு பல ஆண்டுகளுக்குப் பின்னர், வேறு ஒரு சிறுகதையில் அந்நிகழ்வின் தொடர்ச்சி - வளர்ச்சி நிலை கதையாக்கப் பெறுவதை அசோக மித்திரன் சிறுகதைகளில் இரு இடங்களில் ( க.எ. 11-68, 12-147 ) காண முடிகின்றது. சான்று ஒன்று,

இந்திராவுக்கு வீணை கற்றுக்கொள்ள வேண்டும். இந்திராவுக்கு வீணை கற்றுக்கொள்ள *முடியவில்லை எனும் இரு சிறுகதைகளும் முறையே 1959, 1980* ஆம் ஆண்டுகளில் வெளிவந்துள்ளன. இரு கதைகளிலும் இந்திரா எனும் கதைமாந்தரைச் சுற்றியே கதை நிகழ்வுகள் அவிழ்கின்றன. முதல் கதையில் இந்திரா எஸ்.எஸ்.எல்.சி. மாணவி, இரண்டாவது கதையில் இந்திரா இரு மகன்களுக்குத் தாய், குடும்பத் தலைவி இருவருக்கும் ஒரு தம்பி, இரு தங்கையர் இளையோர், இரண்டாவது கதையில் தம்பி -தங்கையர் மணமாகித் தனிக்குடும்பம் நடத்துபவர்கள். அதாவது இந்திராவைப் போன்றே வயது வளர்ச்சி உடையவர்களாகப் படைக்கப் பெற்றவர்கள். இந்த வயது வளர்ச்சியை “எல்லாம் போய் இருபது வருடமாகிறது” (648) எனும் இந்திராவின் கருத்துவழித் துல்லியமாக அறிய முடிகிறது. கதைகள் வெளிவந்த ஆண்டுகள் 1959, 1980 என்று அமைந்து இருப்பது கவனத்திற்குரியது.

இரு கதைகளிலும் இந்திரா வீணை விரும்பியாகத் திகழ்கிறாள். இந்த விருப்பம் இரு கதைகளிலும் நிறைவேறா ஆசையாகிறது. முதல் கதையில் அப்பா அண்ணன் ஆசைக்குத் தடையாக திகழ்கின்றனர். இரண்டாவது கதையில் மகன் தடையாகத் திகழ்கின்றான். அவளுள், அவளுக்கு விருப்பமான வீணை ராமச்சந்திரன் வீணை மீட்டிய முறை "ஒரே இரத்தக் களறியாகப் பயங்கரமாகக் காட்சியளித்ததுபோல்" (647) தோன்றிய மன மாற்றத்திற்கும் ஆண் (சங்கரன்) தான் காரணம். மேலும் அவள் விரும்பிய சங்கரனை மணந்து கொள்ள இயலாமல் போனமைக்கு அண்ணன் - ரங்கன் - ஆண்தான் (647) காரணம் எனவே, இந்திரா எனும் பெண் கதை மாந்தரின் நிறைவேறா ஆசைகளுக்கு எல்லாம் ஆண்கள்தான் காரணம் என்பது இரு கதைகளிலும் இழையோடும் ஒற்றை நூலிலையாக அமைகின்றது எனலாம்.

இரு கதைகளையும் இணைத்து வாசிக்க வேண்டும் எனும் குறிப்பை அசோகமித்திரன் அளிக்காவிடினும், கதைகளில் இடம் பெற்றுள்ளன.

வெகுநேரமாகியும் இந்திராவுக்குத் தூக்கம் வரவில்லை, ஒரு முறை

புரண்டு அம்மாவை அணைத்தவாறு படுத்தாள்.....(103)

அந்தத் துக்கம் தீர இந்திரா நாட்கணக்கில் இரவு படுக்கும் போது

அம்மாவைக் கட்டிக்கொண்டு அழுதிருக்கிறாள் (646)

எனும் பதிவுகள் முதல் கதையின் தொடர்ச்சியே இரண்டாவது கதை என்பதையும், இந்திரா எனும் ஒற்றைக் கதைமாந்தரின் வளர்நிலை வாழ்வியலே இரு கதைகளிலும் கதையாக்கப் பெற்றுள்ளன என்பதையும் உறுதிசெய்கின்றன. இந்த கருத்தாக்கத்திற்குச் சிறு தடையாக அமைபவை இரண்டு அவை,

1. முதல் கதையில் இந்திராவுக்கு அண்ணன் ஒருவர் தான், பெயர் சக்தி என்ற சக்ரவர்த்தி (94) இரண்டாவது கதையில் இந்திராவிற்கு அண்ணன்கள் இருவர், பெயர்கள் வரது, ரங்கன் (646)

2. முதல் கதையின் இந்திராவின் அண்ணனின் கல்லூரி நண்பன் பெணர், ரங்கநாதன் (94), இரண்டாவது கதையில் இந்திராவின் அண்ணன்களின் நண்பன் பெயர் சங்கரன் (646)

**மீள்தன்மை -2**

குறிப்பிட்ட நிகழ்வு இருவேறு கதைகளில் வளர்நிலைத் தன்மையற்று மீள்வருதல்.

ஒரு சிறுகதையில் கதையாக்கப் பெற்ற ஒரு நிகழ்வு பல ஆண்டுகளுக்குப் பின்னர், வேறு ஒரு சிறுகதையில் அந்நிகழ்வே கதையாக்கப் பெறுவதை அசோகமித்திரன் சிறுகதைகளில் இரு இடங்களில் (க.எ.54-148, 82-151) காண முடிகின்றது. சான்று ஒன்று,

மாறுதல், சாயம் எனும் இரு சிறுகதைகளும் முறையே 1977,1991ஆம் ஆண்டுகளில் வெளிவந்தவை. இரு கதைகளும் சாயனா எனும் பணியாள் வெள்ளித் தட்டு திருடியதை, சிறைக்குச் சென்றதை மையமிட்ட கதை நிகழ்வுகளை உடையவை. முதல் கதையில் சாயனா நேரடியாகப் பேசும்-செயல்படும் கதைமாந்தராகத் திகழ்கின்றார். இரண்டாவது கதையில் அவர் தொடர்பான நிகழ்வுகள் கதையாக்கப் பெற்றுள்ளன. இதனால் அவர் மூன்றாம் மனிதராகத் திகழ்கின்றார். இரு கதைகளிலும் இடம்பெறும் சாயனா எனும் பெயர் வெள்ளித் தட்டு திருடுதல், சிறைச்செல்லல், அதிகம் அடிக்க வேண்டாம் என்ற சொல்லாடல். பொய் சொல்லல் என்பன ஒத்த தன்மையினவாக அமைவதால் இரு கதைகளும் குறிப்பிட்ட ஒருவர், சாயனா தொடர்பானவை என்பது தெளிவு. எனினும் கதைத் தலைப்புகளுக்கு ஏற்ப அக்கதைகளில் இடம் பெற்றுள்ள சிறுசிறு நிகழ்வுகள் சூழல்கள் மாறுபட்டு அமைகின்றன. இரு கதைகளிலும் ஒருவர் தொடர்பான ஒத்த தன்மை வாய்ந்த நிகழ்வுகள் இடம்பெறுவதால் அந்நிகழ்வுகளுக்கிடையே வளர்ச்சி நிலை காணப்பெறவில்லை. முதல் கதை நிகழ்வுகளின் தொடர்ச்சியானவையாக இரண்டாம் கதை நிகழ்வுகளைக் கருத இயலவில்லை.

## மீள்தன்மை -3

குறிப்பிட்ட கதைகளின் தொடக்க முறை, கதைக் கூறின் சிறு அளவு மீள்வருதல்

ஒரு சிறுகதையில் கையாளப் பெற்றுள்ள கடை தொடங்குமுறை, பெயர், கதைக் கூறின் சிறு அளவு ஆகியவை வேறு சில கதைகளிலும் பயன்படுத்தப் பெறுவதை அசோகமித்திரன் சிறுகதைகளில் (க.எ.93-95-101) காண முடிகிறது. சான்று,விருந்து, முறைப்பெண், பெரியவருக்காக ஒரு காலைக்காட்சி ஆகிய மூன்று கதைகளும் முறையே 1983, 1983, 1984 ஆம் ஆண்டுகளில் வெளிவந்தவை. மூன்று கதைகளுமே சதுரங்கா சொன்னார் என்று தொடங்கப் பெற்றுள்ளன. முதல் இரு கதைகளில் சதுரங்கா ஓர் எழுத்தாளர். மூன்றாவது கதைகளில் சினிமா தயாரிப்பாளர். இவ் கலைத்தன்மை ஒற்றுமைகளைத்தவிர கதைநிகழ்வு முறையிலோ பிற வகையிலோ எவ்வித ஒற்றுமையும் காணப்பெறவில்லை.

## மீள்தன்மைகள்வழி அசோக மித்திரனின் படைப்பாளுமை

அசோகமித்திரன் சிறுகதைகளில் காணலாகும். மூவகை மீள்வரு தன்மைகளும், அசோகமித்திரன் எனும் படைப்பாளியின் ஆழ்மனத்தை ஆளுமையை அறிய துணை நிற்கின்றன. முதல் இருவகை மீள் தன்மைகளும் பல ஆண்டுகள் இடைவெளி, காலநீட்சி உடையனவாகத் திகழ்கின்றன. மூன்றாவது வகை மீள்வருகை மிகக் குறுகிய கால இடைவெளி உடையதாகத் திகழ்கிறது. இந்தக் கால இடைவெளி தொடர்பான வேறுபாடே மீள் வருதன்மைகளில் காணலாகும் ஒற்றுமை. வேற்றுமைகளை நிர்ணயித்துள்ளது. இதை, மிகுந்த கால இடைவெளிக்கு உட்பட்டு எழுதப்பெற்ற சிறுகதைகளுக்கிடையே காணலாகும் மீள்வருதன்மை வேறு ஒரு வகையினதாகவும் அமைந்துள்ளதன் வழி அறிய முடிகின்றது. மீள்வருதன்மை ஒன்றில் காணப்பெறும் ரங்கன், சங்கரன் எனும் பெயர் வேறுபாடுதான், அண்ணன் ஒருவர், இருவர் எனும் எண்ணிக்கை வேறுபாடுதான் அசோகமித்திரன் எனும் படைப்பாளியின் தனித்துவத்தை நிலைநாட்டுகின்றன. இவ்வேறுபாடுகள் இன்றிக் கதைமாந்தர் பெயர்களும் எண்ணிக்கையும் கவனமாகப் படைக்கப்பெற்று இருப்பின் முன் கதையின் தொடர்ச்சியாகப் படைப்பாளி கவனத்தோடு மேலும் ஒரு கதையைப் படைக்க விரும்பிப் படைத்தார் என்று அர்த்தப்படுத்திக்கொள்ள வேண்டியிருக்கும். இவ்வேறுபாட்டால்,

அசோகமித்திரன் எனும் படைப்பாளியின் ஆழ் மனத்தைப் பெரிதும் பாதித்த, ஆழ்மனத்தில் வடுவாகப் பதிவாகிவிட்ட நட்புநிலைப்பட்ட, உறவு நிலைப்பட்ட பொருண்மைதான், ஒருவரின் வாழ்வியல் நிகழ்வுதான் ஒரு முறைக்கு இரு முறையாகவும் ஒன்றன் தொடர்ச்சியாக மற்றொன்றாகவும் கதைகளாக்கப்பெற்றுள்ளன என்று அர்த்தப்படுத்திக்கொள்ள முடிகின்றது. அசோகமித்திரன் என்னும் சிறுகதைப் புடைப்பாளியின் படைப்பாளுமையில் இந்தப் பொருண்மை, இந்தக் கதைமாந்தர் முக்கிய இடம் வகித்துள்ளது, வகித்துள்ளார் என்று பொருள் கொள்ள முடிகின்றது. இக்கருத்தியலுக்கு மேலும் அரண்சேர்ப்பவையாக மீள்வருதன்மை இரண்டிற்குரிய கதையாக்க முறையில் காணலாகும் வேறுபாடுகள் அமைகின்றன.

# தமிழவனின் "ஜி.கே. எழுதிய மர்ம நாவலில்" பின் நவீனத்துவப் பொருத்தப் பாடுகள்

*தி. அன்புச்செல்வன்,* முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழியற்புலம், புதுவைப் பல்கலைக் கழகம்.

இரண்டாம் உலகப்போரின் நிச்சயமற்ற தன்மையும், தொழிற்புரட்சியின் பொருளியல் சிந்தனைகளும் மேற்கத்திய நாடுகளில் நவீனத்துவத்தைத் தோற்றுவித்தன. நவீனத்துவம், பலதரப்பட்ட வாழ்வியல் சிக்கல்களுக்குத் தீர்வுகாண முடியும் என நம்பியது. இதைக் கலைகள் மூலம் சாத்தியப்படுத்த முனைந்தது.

நவீனத்துவம் கூறிய சிக்கல்களுக்கான தீர்வுகள் யாவும் வேறு சிக்கல்களுக்கான தோற்றுவாயாய் அமைந்தன. இவற்றைக் கூர்ந்து நோக்கிய நவீனத்துவச் சிந்தனையாளர்களில் ஒரு பகுதியினர் வாழ்வியல் சிக்கல்களும், நிச்சயமற்ற தன்மையுமே நிரந்தரம் என உணர்ந்தனர். எனவே, எந்த ஒன்றிற்கும் தீர்வுகாண முடியாது என்றும் அவ்வாறு தீர்வு கண்டதாகக் கூறுவது அறிவீனம் என்றும் கூறலாயினர். இவர்களின் சிந்தனைப் போக்கே பின் நவீனத்துவமாகத் தோன்றலாயிற்று. இவர்களின் சிந்தனைகளில், 1. பிரதி பொருளற்றது 2. நேர்கோட்டுத் தன்மையற்ற எழுத்து 3. குழப்பத்தன்மை 4. காலம், இடம், சுட்டாமை ஆகியன இன்றியமையாதனவாகக் குறிக்கப் பெறுகின்றன.

தமிழவன் எழுதிய "ஜி.கே. எழுதிய மர்ம நாவல்" என்னும் பிரதி, பின் நவீனத்துவச் சிந்தனைகளை மனத்தில் இருத்தி எழுதப்பட்டதாகும். இப்பிரதியில் பின் நவீனத்துவச் சிந்தனைகள் வெளிப்பட்டுள்ளமையைக் காண்பதே எழுதப்பட்ட படைப்பில் அச்சிந்தனையைப் பொருத்திப் பார்ப்பதன் மூலம் இரண்டு பயன்பாடுகளைப் பெற முடியும். 1. ஒரு கொள்கை, அக்கொள்கையால் உருவான படைப்போடு இணைத்துப் பார்க்கும் பொது அக்கொள்கையை எளிதாகப் புரிந்து கொள்ள முடியும்.

2. கொள்கையை அதனளவில் வாசிக்கும் பொழுது அதனை உணர முடியாது. ஆனால் படைப்பை வாசிக்கையில் அக்கொள்கையை உணர முடியும்.

**இந்நிலையில் இப்பிரதியில் பின் நவீனத்துவப் பொருத்தப்பாடுகளைக் காணலாம்.**

**1. நேர் கோட்டுத் தன்மையற்ற எழுத்து :**

எந்த வித இடையீடுகளோ தடைகளோ இன்றிப் பிரதி சொல்லப்படுகிறது என்ற கருத்தை மறுத்து எல்லாப் பிரதிகளும் தடைகளாலும், குறுக்கீடுகளாலும் ஆனது என்பதே நேர்கோட்டுத் தன்மையற்ற எழுத்து என்பதாகும்.

"ஜி.கே. எழுதிய மர்ம நாவல்" என்ற பிரதியில் இந்த நேர்கோட்டுத் தன்மை அறுபட்டுள்ளமையைக் காண முடியும்.

நாவல், துப்பறியும் தன்மையோடு விறுவிறுப்புடன் சென்று கொண்டிருக்கும் போதே இடையில் இந்த புதினத்தை எழுதிய ஜி.கே. யார்? என்ற, கதையிலிருந்து முற்றிலும் மாறுபட்ட மற்றொரு செய்தி விவாதிக்கப்படுகிறது. அதுவரையிலும் துப்பறியும் புதினத்தை ஆர்வமுடன் படிக்கும் வாசகனின் நேர்கோட்டுத் தன்மை இங்கு அறுபடுகிறது. இவ்வாறு அறுபட்டு வேறொரு செய்தியில் வாசகனின் கவனம் குவிகிறது. படைப்பாளி யார் என்ற சர்ச்சையில் வாசகன் கவனம் செலுத்தும்போது மீண்டும் வாசகனின் நேர்கோட்டுத் தன்மை அறுக்கப்பட்டு நாவல் தொடர்கிறது.

இதுபோல் புதினம் முழுவதும் பதினோரு இடங்களில் தொடர்பறு நிகழ்வு நிகழ்த்தப்பட்டுள்ளது. இதன் மூலம் தமிழவன் எல்லாப் பிரதிகளும் இதுபோலவே தொடர்பு அறுபட்டு உள்ளன என்ற பின் நவீனத்துவக்

கொள்கையை நிலைநாட்டியுள்ளார்.

**2. பெருங்கதையாடலின் மறுப்பு :**

பெரும்பான்மையானோருக்கான ஒன்றைப் பின்நவீனத்துவ வாதிகள் பெருங்கதையாடல் என்கின்றனர். சான்றாக மார்க்ஸியம் என்ற ஒரு சிந்தனை பெரும்பான்மையான மக்களுக்கான விடுதலையைப் பேசுகிறது. எனவே, மார்க்ஸியம் என்பது ஒரு பெருங்கதையாடல். அதேபோலத் தலித்தியம், நாட்டுப்பற்று, சுதந்திரம், உரிமை, மதம், வரலாறு, கல்வி போன்றவையனைத்தும் பெருங்கதையாடல்கள் தாம். பின் நவீனத்தும் இப்பெருங்கதையாடல்களை மறுக்கிறது. அதாவது எல்லோருக்குமானது என்று எதுவும் இருக்க முடியாது. அப்படி ஒரு தீர்வு சொல்ல முடியாது என்பதே பின் நவீனத்துவம்.

இப்புதினத்தில் வரலாறு என்னும் பெருங்கதையாடல் மறுக்கப்பட்டு, அதன் உண்மை நிலை உணர்த்தப்படுகிறது. நாவலில் "சுருங்கையின்" வரலாறு முக்கியப்பங்கு வகிக்கிறது.

சுருங்கையின் வரலாறு மத்திரி, புவனநந்தி, கபிலன் ஆகிய மூவரால் சொல்லப்படுகிறது. இம்மூவரும் மூன்று வகையான வரலாற்றைச் சொல்லுகிறார்கள். இதோடு யுனசேனன் என்ற வரலாற்றாசிரியர் எழுதிய வரலாறு சாருவாகர்களுக்கு எதிரானதாகக் குறிக்கப்படுகிறது.

இவ்வாறு வரலாறு என்ற பெருங்கதையாடல் நிரந்தரமற்றதாகவும், மனிதர்களுக்கு ஏற்ப மாறக்கூடியதாகவும் உள்ள தன்மையை இப்புதினம் விளக்குகிறது. "வரலாறு என்பது நம்பப்பட்ட பொய்களின் தொகுப்பு" என்ற நெப்போலியனின் கூற்றும் இங்கு இணைத்து நோக்கத்தக்கது.

**3. மரபு முறைகளின் சிதைவு :**

மரபாக உள்ள கருத்தாக்கங்களைச் சிதைப்பதும் பின் நவீனத்துவத்தின் ஒரு தன்மையாகும். இப்புதினத்தில் இடையிடையே இடம் பெறும் "குறிப்புகள்" என்ற பகுதி ஓர் இலக்கிய ஆராய்ச்சியை நிகழ்த்துவதாக உள்ளது.

இந்த நாவலை எழுதிய ஜி.கே. யார்? என்ற கேள்வியை எழுப்பிக்கொண்டு முறையான தரவுகளின் அடிப்படையில் ஆய்வு நிகழ்த்துவது போலத் தோற்றமளிக்கிறது. ஆனால் உண்மையில் நிகழ்த்தப்பட்டது அர்த்தமற்ற ஆய்வாக உள்ளது. இதற்குச் சான்றாக ஒரு பகுதியைக் காட்டலாம்.

"இந்த நாவலை எழுதியிருக்கலாம் என்று இதுவரை பார்த்து வந்த நபர்களான சி. பெரியநாயகம் பிள்ளை, ஜீலியன் வென்சன், பூவராகவன் முதலியார் முதலிய 19 ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த மூன்று பேரில் ஒருவர் ஜி.கே. என்று சந்தேகப்பட்டாலும் வேறு பெரிய ஆதாரங்கள் இல்லை. முக்கியமாக, சி. பெரியநாயம் பிள்ளையின் தலைமுடியில் கட்டியிழுக்கப்பட்ட கார் பற்றிக் கிடைக்குமளவுக்குக் கூட அவரது எழுத்துப் பழக்கம் பற்றி தகவல்கள் இல்லை".

இந்தப்பகுதியில் புதினத்தை எழுதியவர் யார்? என்ற ஆய்வை மிகக் கவனமாகத் தொடங்கினாலும், படைப்பாளிகள் குறித்த அபத்தமான தகவல்களால் அவர்கள் நிராகரிக்கப்படுகிறார்கள்.

அது மட்டுமின்றி, ஆய்வுக்கு உட்படுத்தப்படும் சி. பெரியநாயகம் பிள்ளை, பூவராகவன் முதலியார் ஜீலியன் வென்சன் போன்ற பெயர்கள் தமிழுலகம் அறிந்ததுபோல் தோன்றினாலும் அவை உண்மையல்ல. இவை சிற்சில மாற்றங்களுடன் உண்மையைப்போல நம்பவைக்கும் முயற்சியே.

"ஜீலியன் வென்சன் பற்றியும் இப்படி சில கிடைத்தன. அவர் நகம் வெட்டமாட்டார். கைகளால் நிழித்தெடுத்துக் கொண்டிருப்பார். நடக்கும் போது சப்பாத்து தரையில் உராய்ந்தபடியே நடப்பார்" என்பன போன்ற குறிப்புகள் மரபாகப் பின்பற்றப்படும் ஆய்வு முறைகளைச் சிதைப்பதாகக் கொள்ள முடியும்.

**4. காலம், இடம் இன்மை :**

நவீனத்துவக் காலங்களில் பெரிதும் வலியுறுத்தப்பட்ட காலமும், இடமும் (Time and Space) பின் நவீனத்துக் காலத்தில் மறுக்கப்பட்டது. இதனைப் பின் நவீனப் பிரதியான ஜி.கே. எழுதிய மர்ம நாவலிலும் காண முடிகிறது.

நாவல் முழுவதிலும் எந்த இடத்திலும் கதை நடைபெறும் இடமும் காலச் சூழலும் குறிப்பிடப்பெறவில்லை. சான்றாக நாவலில் சுருங்கை பற்றிப் பலவாகப் பேசப்படுகிறது. எனினும் சுருங்கை எந்த நாட்டின் பகுதி என்றோ அது எங்குள்ளது என்றோ குறிக்கப்படவில்லை.

இதே போல நாவல் நடைபெறும் காலம் பற்றிய குறிப்பும் எவ்விடத்திலும் கிடைக்கவில்லை. அவர் கூறுகின்ற "லிபி" பற்றிய செய்திகளிலிருந்தோ, எண்களைக் குறிப்பிடுவதன் மூலமோ கதையின் காலம் அறியக் கூடவில்லை. இந்த நாவலில் காலமும் இடமும் சுட்டப்பெறாவிடினும் நாவலின் போக்கிற்கு எந்தவிதமான பாதிப்பும் இல்லை. இதையே பின்நவீனத்துவம் வலியுறுத்துகிறது. காலமும் இடமும் குறிப்பிட்டு எழுதப்படும் நாவலில் இடம் அதே விறுவிறுப்பும் வேகமும் மற்ற தன்மைகளும் காலம் இடம் மறுக்கப்பட்ட இந்நாவலிலும் உள்ளதைக் காண முடிகிறது.

இதன் மூலம் ஒரு பிரதியில் இடம்பெறும் காலம், இடம் ஆகியவற்றின் முக்கியத்துவம் இலக்கியங்களில் மறுக்கப்பட்டது அறியமுடிகிறது.

**முடிவுகள் :**

1. முன் இலக்கியங்கள் நேர்கோட்டுத் தன்மையிலிருந்து மாறுபட்டு நேர்கோட்டுத் தன்மையற்ற இலக்கியங்கள் எழுதப்படுவதன் மூலம் இலக்கியத்தின் நிச்சயமற்ற தன்மை விளக்கப்படுகிறது.

2. காலம் காலமாக நம்பப்படும் பெரும்பான்மை கருத்தாக்கங்களும் (அ) பெருங்கதையாடல்களும் மறுக்கப் படுவதன் மூலம் தனிமனித வாழ்வியல் மையப்படுத்தப்படுகிறது.

3. காலம், இடம், போன்ற முன் இலக்கியங்களின் அடிப்படைக் கூறுகளாகச் சொல்லப்பட்டவை. பின்நவீன இலக்கியங்களில் உடைக்கப்படுகிறது. இதன் மூலம் இவற்றின் அவசியம் கேள்விக்குட்படுத்தப்படுகிறது.

4. தமிழவனின் "ஜி.கே. எழுதிய மர்ம நாவல்" என்ற பிரதி இத்தன்மையான பின்நவீனக் கூறுகளை உள்ளடக்கியதாகக் காணமுடிகிறது.

# தமிழ் நாவல்களில் நம்பிக்கை முறையில் மாற்றம்

Dr. ***இசக்கியம்மாள் ஆறுமுகம்,*** தேர்வுநிலை விரிவுரையாளர், தமிழ்த்துறை,

ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம்.

## முன்னுரை:

உலகம் எங்கும் சமூக வாழ்க்கையில் ஏற்பட்டு வரும் பெண்களின் விடுதலைச் சிந்தனைகளில் ஒன்று நம்பிக்கை முறையில் மாற்றமாகும். தொடக்க காலத்தில் தனியுரிமை தேவையில்லை எனக் கருதிய பெண்கள், இன்று கால மாற்றத்தினால் மரபு கொள்கைகளை உடைத்து எறிந்து தமது தனியுரிமைகளையும் தமது தனித்தன்மைகளையும் நிலைநாட்டுகின்றனர். சமூக ஆவணங்களான தமிழ் நாவல்கள் இதனைச் சித்தரிக்கின்றன. பெண் எழுத்தாளர்கள் சிலரின்நாவல்கள் ஆய்வுக்களனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

## நம்பிக்கை முறையில் மாற்றம்:(Changes in Belief Systems)

மக்கள் தொன்றுதொட்டுப் பின்பற்றி வரும் நம்பிக்கைகள் காலப்போக்கில் மாறுவது இயல்பு. தம்முடைய பரம்பரை நன்றாக இருக்க வேண்டும் என்பதற்காகப் பெரியவர்கள் நம்பிப் பின்பற்றி வந்த பழக்கங்களில் ஏற்படும் மாற்றங்களே நம்பிக்கை முறையில் மாற்றம் எனப்படும். தொன்று தொட்டு திருமணத்தில் தாலி அணிதல் மிகப் புனிதமாகக் கருதப்பட்டு வந்தது. கருச் சிதைத்தல் பாவம், அது உயிர்க்கொலை என்று நம்பப்பட்டு வந்தது. இத்தகு நம்பிக்கைகள் காலப்போக்கில் மாறின.

## தாலியின் புனிதம்:

தாலி பெண்ணுக்குத் திருமணத்தின்போது போடப் பெறும் மங்கல அணிகலன். எனவே அது மிகப் புனிதமாகக் கருதப்படுகிறது. கணவன் இறப்பிற்குப் பின்னர்தான் பெண் தாலியைத் தன் கழுத்திலிருந்து கழற்றுகிறாள். காலப்போக்கில், தாலி புனிதமானது என்ற நம்பிக்கையும் மாற்றம் பெறத் தொடங்கியது.

புருஷன் என்பவன் பந்தமாக, பாரமாக, விலங்காகப் பிணிக்கும் நிலையில் அதை உதறிவிட்டுத் தன்னால் மகிழ்ச்சியாக இருக்கமுடியும், தன் காலால் ஊன்றி நிற்க முடியும். சமூகம் என்னை ஒன்றும் செய்யாது (இராஜம் கிருஷ்ணன், 1989, ப.104)

என்ற எண்ணம் பெண்களிடத்துத் தோன்றிய பின்னர்த் தாலி புனிதமாகக் கருதப்படவில்லை.

இராஜம் கிருஷ்ணனின் புதிய சிறகுகள் நாவலில் கணவனின் தீய நடத்தையால் வெறுப்படைந்த சுஜா,

இந்த மஞ்சக் கயிறு மகத்துவம் எல்லாம் வடி இருந்தாதான், இல்லேன்னா வெறும் கயிறு - இது கழுத்தை அறுக்கிற கயிறு (ப.51)

என்ற கழுத்தில் கிடக்கிற தாலிக் கயிற்றை வெறுப்புடன் கழற்றி எறிந்துவிட்டு கணவன் மனைவி உறவை விலக்கிவிட்டுச் சென்றுவிடுகின்றாள்.

## கருச்சிதைத்தல்:

சமுதாய வளர்ச்சிக்கும் மாற்றத்திற்கும் ஏற்ப மாறி வரும் நம்பிக்கைகளில் ஒன்று கருச்சிதைத்தலாகும். கரு என்றால் உயிர் என்ற நிலையில் அதனை அழித்தல் பாவம் என்று கருதினர். சங்க இலக்கியத்தில்,

மாணிழை மகளிர் கருச் சிதைத்தோர்க்கும்

..................................................

உய்தி இல்லென அறம் பாடிற்றே (புறம் 342, 2-7)

என்ற செய்தி காணப்படுகிறது. ஆனால் சமுதாயம் மாறும்பொழுது கருச் சிதைத்தல் பாவம் என்ற நம்பிக்கையும் மாறத் தொடங்கியது. இதற்கு பெருகி வரும் மக்கள் தொகை காரணமாகக் காணப்படுகிறது.

பாரதிதாசன் குடும்பக் கட்டுப்பாடு இல்லாமையால் பெருகிவரும் மக்கள் தொகையைக் குறைக்க,

காதலுக்கு வழிவகுத்துக் கருப்பாதை சாத்தக் கதவொன்று
கண்டறிவோம் இதிலென்னக் குற்றம்? (பாரதிதாசன் கவிதைகள், 1994, ப.124)

என்று வாதாடினார்.

தந்தை பெரியார் கருத்தடையைச் சட்டமாக்கி நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும் என்று வற்புறுத்தினார்.

பெண்கள் விடுதலையடையவும் சுயேச்சை பெறவும்
கர்ப்பத் தடை அவசியமென்று நாம் கூறுகிறோம் (ஈ.வெ.ரா., 1989, ப.3)

என்று தெளிவுபடுத்தினார். இதனைச் சட்டமாகப் பெறவேண்டும் என்று வலியுறுத்தினார்.

படைப்பாளிகள், திருமணத்திற்கு முன்னும் திருமணத்திற்கு பின்னும் பெண்கள் செய்து கொள்ளும் கருச் சிதைத்தலைச் சித்திரிக்கின்றனர். திருமணத்திற்கு முன் கல்லூரி மாணவியர் ஒழுக்கம் தவறிய நிலையில் தம் கருவைச் சிதைப்பதை வாஸந்தியின் மௌனத்தின் குரல், பறவைகள் பறக்கின்றன ஆகிய இரு நாவல்களும் சித்திரிக்கின்றன.

மௌனத்தின் குரல் நாவலில், ரேகா ஷெட்டி கல்லூரியில் படிக்கும்போது தனது தவறான நடத்தையால் கருவுற்று டைஃபாய்டு என்று விடுப்பு எடுத்துக் கொண்டுபோய்க் கருவைக் கலைத்து வருகிறாள். பறவைகள் பறக்கின்றன நாவலில் ராதா, கருக் கலைப்புப் பற்றிச்சில பெண்களின் ஒரு மாதிரியான பெண்களின் அரைகுறைப் பேச்சைக் கேட்டிருக்கிறாள். தங்கள் பிரச்சினையைத் தீர்த்துக் கொண்ட பெருமையை ரகசியமாகப் பகிர்ந்து கொள்வதைக் கேட்டிருக்கிறாள் (ப.93) என்பதன் மூலம் கல்லூரி மாணவியருக்குக் கருச் சிதைத்தல் என்பது சாதாரண ஒரு செயலாகக் காணப்படுகிறது என்ற உண்மை புலப்படுகிறது.

திருமணத்திற்கு பின் மிகுதியான குழந்தைப் பேற்றைத் தடுப்பதற்கும், தீய கணவனின் குழந்தையைப் பெறுவதில் விருப்பமில்லாமல் போகும் நிலையிலும் பெண்ணின் நாகரிக நடத்தையாலும், பணி நிரந்தரம் ஆவதற்குக் குழந்தை தடையாக இருக்கிறது என்ற நிலையாலும் பெண்கள் கருச் சிதைவுக்கு உடன்படுகின்றனர்.

### மிகுதியான குழந்தைப் பேறு:

அடிக்கடி தாய்மைப் பேறு அடைவது பொருளாதார வசதியில்லாத நிலையில் குடும்பச் சிக்கலுக்கு காரணமாகிறது. இதனால் கணவன் வற்புறுத்தலின் பேரில் கருச் சிதைத்தல் நடைபெறுகிறது. இத்தகு நிலையை வாஸந்தியின் நிஜங்கள் நாவல் சித்திரிக்கின்றது. விமலா தனது கணவன் சங்கரின் வற்புறுத்தலால் அடிக்கடிக் கருச்சிதைவிற்கு ஆளாகின்றாள். கருச் சிதைத்தல் பாவம் என்ற பழைய நம்பிக்கைகளும், கருச் சிதைவு தவறில்லை என்ற புதிய கொள்கைக்கும் இடையில் ஏற்பட்ட போராட்டம் விமலாவின் அழிவிற்குக் காரணமாகிறது.

### தீய கணவன் மீது வெறுப்பு:

வாஸந்தியின் வீடு வரை உறவு நாவலில் இரத்தத்துக்கு இரத்தம் பழிக்குப் பழி என்பது போலக் கணவனின் திருட்டுத் தொழிலைத் திருத்துவதற்காக ஒரு பெண் தனது இரண்டு மாதக் கருவை அழிக்கிறாள்.

வாஸந்தியின் பறவைகள் பறக்கின்றன நாவலில் ராதா தன் பெற்றோரை எதிர்த்து விரும்பி மணம் செய்துகொண்ட கணவன் ரகு, அவனுடன் பணிபுரியும் வெளிநாட்டுப் பெண்ணைத் திருமணம் செய்ததோடு, தன்னைப் புறக்கணித்து, வெளிநாட்டில் தங்க முடிவு செய்தமையை அறிந்து அவன்மீது கொண்ட வெறுப்பால்,

ரகுவின் அடையாளச் சின்னத்தை
அவன் செய்த துரோகத்தை சதாசர்வ காலமும்
ஞாபகப்படுத்தும் சின்னத்தை அழிக்கிறாள் (ப.93).

### பெண்ணின் நாகரிகப் போக்கு:

திருமணமான பெண் திருமணத்திற்குப் பின் நாகரிகப் போக்கால் மற்ற ஆடவர்களுடன் பழகிக் கருச் சிதைத்தலுக்கும் ஆளாவதும் உண்டு. இதனை அனுராதா ரமணனின் அந்தரத்தில் ஓர் ஊஞ்சல், வாஸந்தியின் தீக்குள் விரலை வைத்தால் ஆகிய இரு நாவல்கள் சித்திரிக்கின்றன.

அந்தரத்தில் ஓர் ஊஞ்சல் நாவலில், உமா திருமணத்திற்குப் பின்னும் தனது கணவன் கீர்த்தியுடன் வாழாது, பழைய காதலுடன் வாழ்கிறாள். அடிக்கடிக் கருவைச் சிதைக்கிறாள். கணவனின் வற்புறுத்தலால் செய்யப்படும் கருத்தரிப்பு என்று பொய் சொல்லித் தப்பித்துக்கொள்கிறாள். இவளது கருச் சிதைத்தல் கர்ப்பப் பையில் கட்டியை உண்டு பண்ணி அவளை நோயாளி ஆக்குகிறது.

தீக்குள் விரலை வைத்தால் நாவலில் ரேகா அகர்வால் கணவனைத் தவிரப் பிற ஆடவர்களுடன் தொடர்பு கொண்டு பலமுறை கருச்சிதைத்தலைச் செய்கிறாள். இதனால் தாய்க்கும் மகளுக்குள் மனச்சிக்கல் ஏற்படுவதோடு மகளையும் இழக்கிறாள். தமது மகிழ்ச்சிக்காகத் தகாத உறவு மூலம் உருவான கருவினை அழிப்பது பாவம் என்ற உணர்வு தீய நடத்தையுடைய பெண்ணிடத்துக் காணப்படவில்லை.

### பணி நிரந்தரம்:

பணியில் புதிதாகச் சேர்ந்திருக்கும் பெண்ணுக்குக் குறிப்பிட்ட கால எல்லை வரை மருத்துவ விடுப்பு எடுக்க இயலாது. அது பணி நிரந்தரத்திற்குத் தடையாகும் என்பதால், பெண் கருவுற்றதை அழித்துக் கொள்கிறாள்.

இராஜம் கிருஷ்ணனின் ஓசைகள் அடங்கிய பிறகு நாவலில் சாரங்கள் மனைவி மீனா பணி நிரந்தரமாவதற்கு முன்னால் மருத்துவ விடுப்பு எடுக்க இயலாது என்பதனால் கருவைக் கலைத்துக் கொள்கிறாள். இதனை அறிந்த கணவன் அவளைத் திட்டுகிறான். மீனாவின் நியாயம் அவள் கணவனிடம் எடுபடவில்லை.

> உனக்கு மனசாட்சி உறுத்தியிருக்கு, எவனுக்கோ உண்டானதை
> எம்புள்ளேன்னு சொல்லக் கூசியிருக்கு... நீயே எனக்குத் தெரியாம டாக்டரிடம்
> ஏதோ வாடிக்கையாகப் போகிறது போல் போயி (ப.239)

என்ற வார்த்தைகளால் அவள் நடத்தை கெட்டவள் என்று திட்டுகிறான். இதனால் இருவருக்கிடையே பிரிவு ஏற்படுகிறது.

### பெண் சிசுக் கொலை:

கருவை அழித்தல் உயிர்க் கொலையாகும் என்ற நம்பிக்கையில் ஏற்பட்ட மாற்றத்தின் வளர்ச்சியே பின்னர்ப் பெண் சிசுக் கொலையாகிறது. இந்துக் குடும்பங்களில் ஆண் குழந்தைகளுக்குத்தான் மதிப்பு அதிகம். இதில் மதத் தொடர்பான காரணங்கள் மிக முக்கியமானவை ஆகும். இந்துக் குடும்பங்களில் பெற்றோர் இறந்தவுடன் அவர்களுக்கு இறுதிக் கடன்களைச் செய்யவும், இறந்து போனவரின் ஆன்மா சாந்தி அடைய ஆண்டுதோறும் கிரியைகள் செய்யவும் ஆண் மக்களே தகுதி உள்ளவர்களாகக் கருதப்படுகின்றனர். தந்தை வழிக் குடும்ப முறை என்பதால் குடும்பப் பெயரும் சொத்துரிமைகளும் ஆண் மக்களுக்கே சென்றடையும். குடும்பம் வழிவழித் தழைத்தோங்க ஆண் மக்களே தேவை எனக் கருதப்படுகிறது. ஆண் மக்கள் பிறந்து, வளர்ந்து, ஆளாகி, சீர் சிறப்புக்களோடு திருமணம் செய்துகொண்டு மற்றொரு வீட்டிற்குப் போய் விடுகிறாள். மருமகன் இறந்தாலோ அவனால் மகள் கைவிடப்பட்டாலோ அவளை ஆயுட்காலம் முழுமையும் காப்பாற்றுவது பெற்றோரின் கடமையாகிறது. எனவே பெண் பிறந்து வளர்ந்து தன் வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் துன்பங்களை அனுபவிப்பதற்கு மாறாக பிறந்தவுடன் அவளைக் கொன்றுவிடுவதே மேல் என்று பலர் எண்ணுகின்றனர். இதனை,

> பெண் என்று பூமியில் பிறந்து விட்டால்
> பெரும் பீழை இருக்குதடி தங்கமே தங்கம் (பாரதியார், ப.300)

என்று பாரதியும் பெண் படும்பாட்டைக் குறிப்பிடுகின்றார். பெண் குழந்தை பெற்றோருக்குக் கவலையையும். பொறுப்பையும் தருவதால் பெண் சிசுக்கொலை சில இடங்களில் சாதாரண நிகழ்ச்சியாகக் காணப்படுகிறது. பெண் குழந்தைக்குப் பெற்றோர் செய்யும் நன்மை என்ற நம்பிக்கையில் பெண் சிசுக் கொலை இடம் பெறுகிறது.

படைப்பாளிகள் அனுராதா ரமணன், இராஜம் கிருஷ்ணன், வாஸந்தி ஆகிய மூவரும் பெண் சிசுக்கொலை பற்றிச் சித்திரிக்கின்றனர்.

அனுராதா ரமணன் எத்தனை காலம் உனக்காக நாவலில்,
கிராமப்புறங்கள்லே பொண் குழந்தைகள் அதுவும் இரண்டாவது
பொண்ணாப் பொறந்தா பெத்தவ பார்த்துட்டா பாசம் விட்டுப் போகாதுன்னு
குழந்தை நச்சுக் கொடியோட விழுந்ததும் நச்சுக் கொடிய அறுத்திட்டு
குளிப்பாட்டின கையோட பெரிய கனமானக் கம்பளத்தாலே குழந்தையை
இறுகச் சுத்திடுவா நரசம்மா (ப.36)

என்று மூர்த்தியின் பெண் சிசுவை ஆயா கொலை செய்ததற்கான காரணத்தை இந்நாவல் சுட்டுகிறது.

இராஜம் கிருஷ்ணனின் மண்ணகத்துப் பூந்துளிகள் நாவலில் வெள்ளைச்சாமி அழகாயி தம்பதியினரின் பெண் பிள்ளைகளான பூவு, ராக்கு, பொன்னு என்ற மூவரின் கனவுகள், கற்பனைகள் காசு பணம் இல்லாமல் வாழ்வியற் சிக்கலுக்கு ஆளாகி தம்மை மாய்த்துக் கொள்கின்றனர். தன் பெண் பிள்ளைகளை ஆசையாக வளர்த்து ஆளாக்கி அவர்கள் வாழ்க்கையில் வசந்தத்தைக் காண விரும்பிய அழகாயி, தன் பிள்ளைகளை இழந்த ஏமாற்றத்தினால் சிசுக்கொலை செய்யும் கொலைகாரியாகிறாள்.

அழகாயியா? எங்க போயி கரிக்கய்ய வச்சுட்டு வாரே? (ப.212)
என்று ஊரார் பழி சொல்லும் அளவிற்கு மாறுகிறாள். தன் செயலுக்கு நியாயம் கற்பிக்கும் எண்ணத்தில்,
அப்படிச் சொல்லாதீங்க தாயி.... தெய்வம் என்னிய இதுக்குத்தான்
வுட்டிருக்கு? ஆத்தா பாரம்னு அவெதலையில போட்டிடுற (ப.212)
என்று விளக்கம் தருகிறாள். பெண் சிசுவைக் கொல்லும் போது,
நீ போயிட்டு மன்னாளைக்கு ஒரு ஆம்புளயாத் திரும்பி வா
(இராஜம் கிருஷ்ணன், 1988, ப.211)

என்று தீர்வு கூறுகிறாள். பாவம் என்று கருதப்பட்ட ஒரு செயல் கால பண்பாட்டு மாற்றத்தால் புனிதமாகிவிட்டது எனலாம்.

## முடிவுரை:

கால மாற்றத்தின் முதல் வெளிப்பாடு நம்பிக்கை முறையில் மாற்றம் ஆகும். கணவன் எத்தகையவனாக இருப்பினும் அவன் அணிந்த தாலி புனிதமானது என்ற மரபியல் சிந்தனை மாறி அன்பும், பாதுகாப்பும் தருகின்ற கணவன் அணிவித்த தாலி மட்டுமே புனிதமானது என்ற பெண்களின் விழிப்புணர்வும், குழந்தை வேண்டாம் என்று தீர்மானிக்கிற உரிமை பெண்களுக்கும் உண்டு என்ற விழிப்புணர்வும் நம்பிக்கை முறை மாற்றங்களின் வெளிப்பாடுகளாகும்.

பெண்ணாகப் பிறந்து வாழ்க்கைச் சிக்கல்களை அனுபவிப்பதைக் காட்டிலும் அதனைச் சிசுவிலேயே கொன்றுவிடுதல் பாவம் இல்லை என்ற மரபியல் சிந்தனை அழிப்பு நம்பிக்கை முறை மாற்றத்தின் மாபெரும் அடையாளமாகும்.

# "சமையலறைக் கலயங்கள்" - பின் நவீனத்துவம்

*சௌ. உஷா* எம்.ஏ., எம்.ஃபில் ஆய்வு மாணவி,
பூ.சா.கோ.கலை அறிவியல் கல்லூரி, கோவை - 641 014.

**முன்னுரை :**

"பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல
கால வகையினான"

என்ற நன்னூலாரின் வாக்கிற்கேற்பப் பல துறைகள் நுழைந்துள்ளன. அவற்றில் ஒன்றாக விளங்குவன இயக்கங்கள் (இசங்கள்). ஒவ்வொரு இயக்கமும் கோட்பாட்டினை வலியுறுத்திப் பல இலக்கியப் படைப்புகளை வழங்கியுள்ளன. அதில் ஒன்றாக விளங்கும் பின் நவீனத்துவம் என்னும் இயக்கத்தின்படி உருவாக்கப்பட்டது. "சமையலறைக் கலயங்கள்" என்னும் கூற்றினை ஆராயும் வண்ணமாக இக்கட்டுரை அமைகிறது.

**பின்நவீனத்துவம் :**

"பின்னை நவீனத்துவம் என்பது மிக முக்கியமாக மேற்கு நாடுகளில் கலை இலக்கிய உலகில் நிலவும் ஒரு சமீபத்திய மனோபாவம். கலை இலக்கிய எல்லைகளைக் கடந்து தத்துவம், அரசியல், வாழ்க்கைமுறை எனப் பிற வட்டாரங்களை நோக்கி அது பரவியும் வருகிறது. பின்னை நவீனயுகம் என்ற புதிய வரலாற்றுக் காலகட்டத்தை அது குறிக்கிறது". - எனப் பின்னை நவீனத்துவத்தின் கருத்தாளர்கள் சுட்டுகின்றனர்.

"பின்னை நவீனத்துவ சிந்தனை சில தீவிரமான நிலைப்பாடுகளை முன் வைக்கிறது. மரபுரீதியான பழைய சமூகங்கள் கொண்டிருந்த கருத்து நிலைகளையும் நவீன முதலாளிய சமூகம் அறிவித்திருந்த பல்வேறு சமூக இலக்குகளையும் இது அடிப்படையான மறுபரிசீலனைக்கு உட்படுத்தப்படுகிறது".

**சுப்ரபாரதி மணியன் பார்வையில் பின்நவீனத்துவம் :**

பின்நவீனத்துவமானது, இந்தியாவில் குறிப்பாக தமிழகத்தில் இலக்கியத்தில் நுழைந்துள்ளது. பின்நவீனத்துவத்தின் முகவரிகளில் ஒன்றாக சுப்ரபாரதி மணியனின் "சமயலறைக் கலயங்கள்" விளங்குகிறது. சமூகத்திலும் இத்தகைய தத்துவங்கள் நுழைகிறது என்பதைப் படம் பிடித்துக் காட்டும் நாவலாக விளங்குகிறது. பின்நவீனத்துவத்தின் தத்துவமான

"குடும்பத்தைக் கட்டுடைப்பது
நெறிபிறழ்வு வாழ்க்கையை மேற்கொள்வது
என்ற வகையில் வாழ்வது"

இதை விளக்கும் தன்மையில் அமைந்த நாவலாக விளங்குவது

"சமயலறைக் கலயங்கள்" ஆகும்.

குடும்பத்தைக் கட்டுடைப்பது" :

சமூகத்திலுள்ள மொத்தத் தத்துவத்தைக் கட்டுடைக்கும் வகையில் அமைந்த இசம் பின் நவீனத்துவமாகும். இது குறிப்பாக சமூகம் ஏற்படுவதற்குக் காரணமாக விளங்கும் குடும்பத்தைக் கட்டுடைக் முனைகிறது. அது இரண்டு நிலைகளில் ஏற்படுகிறது.

ஆணாதிக்க நிலையில்
அதிதீவிரவாதப் பெண்ணிய நிலையில்

என்ற இரண்டு நிலைகளில் குடும்பத்தைக் கட்டுடைக்கும் முயற்சியில் பின் நவீனத்துவம் முயல்கிறது. இவ்விரண்டு நிலையினாலும் குடும்பம் கட்டுடையும் தன்மையினைச் "சமையலறைக் கலயங்கள்" ஆனது படம் பிடித்துக் காட்டுகிறது.

1. சாந்தா

2. பூரணி

ஆகிய இருவரின் வாழ்க்கையினை மையமாகக் கொண்டு இந்நாவல் நகர்கிறது. தொடக்கத்திலே இவ்விருவரின் வாழ்க்கை (குடும்பம்) கட்டுடைந்த நிலையிலேயே தொடர்கிறது. அதற்குப் பின் அவர்களின் பின்போக்குத் தன்மையில் (பிளாஸ் பேக்) அவர்களுடைய வாழ்க்கை கட்டுடைந்த தன்மையினை விளக்குகிறது.

சாந்தாவின் வாழ்க்கை - ஆணாதிக்க நிலையில் கட்டுடைகிறது

பூரணியின் வாழ்க்கை - அதிதீவிரவாதப் பெண்ணியத்தால் கட்டுடைகிறது

இவ்விரண்டு கட்டுடைப்புகளையும் சமயலறைக் கலயங்கள் காட்டுகிறது.

### அதி தீவிரவாதப் பெண்ணியம் :

பெண்ணுரிமைக்காகப் போராடுவது "பெண்ணிய இயக்கம்" ஆகும். இது சோசலிசப் பெண்ணியம், ஆன்மீக வாதப் பெண்ணியம், மிதவாதப் பெண்ணியம், தீவிரவாதப் பெண்ணியம், அதிதீவிரப் பெண்ணியம்

இப் பெண்ணிய வகைகளுள் அதி தீவிரவாதப் பெண்ணியமானது

ஆணாதிக்கத்தை வெறுப்பது

ஆணாதிக்க நிலை ஏற்படுவதற்குக் குடும்பமும், குழந்தைகளும் காரணமாக விளங்குவதால் இது குடும்பத்தையும், தாய்மைப் பேற்றையும் ஏற்றுக்கொள்ள மறுக்கிறது.

குடும்பத்தைக் கட்டுடைப்பது பின் நவீனத்துவத்தின் கொள்கையாக இருப்பதால் அதிதீவிரவாதப் பெண்ணியம் பின் நவீனத்துவத்தைத் தன் கொள்கையாக விரித்துக்கொள்கிறது.

சமயறைக் கலயங்களில் வரும் பூரணி பாத்திரமும் அதிதீவிரவாதப் பெண்ணியத்தின் வெளிப்பாடாக விளங்குகிறது. இப்பாத்திரம்,

ஆணாதிக்கத்தை முற்றிலும் வெறுக்கிறது

குடும்பம் தான் ஆணாதிக்கத்தை உண்டு பண்ணுவதால் குடும்பத்தையே கட்டுடைக்கும் வகையில் பூரணி பாத்திரம் அமைந்துள்ளது.

### நெறிப்பிறழ்வு வாழ்க்கை :

1. கடவுள் இல்லை 2. குடும்பம் தேவை இல்லை 3. நெறிப்பிறழ்வு வாழ்க்கை என்னும் வகையில் வாழ்வது. இதே தன்மையில் இருப்பது தான் பின் நவீனத்துவம் ஆகும். இதே கொள்கையின் படி "சமயலறைக் கலயங்கள்" நாவலில் சாந்தா, அவள் கணவன் சடகோபன், கிருஷ்ணன் முதலியோரை நெறிப்பிறழ்வு வாழ்க்கை வாழ்பவர்களாக இந்நாவல் சித்திரிக்கிறது.

1. இவர்கள் ஒரு குடும்ப உறவோ 2. வாழ்க்கையின் அர்த்தமோ எதுவும் இல்லாதவர்களாக வாழுகின்றனர்.

சமூகத்தைக் கெடுக்கின்ற மொத்த தத்துவங்களின் உருவமாய் விளங்குவது பின் நவீனத்துவமாகும். நவீனத்துவம் என்ற பெயரில் பிற்போக்குச் சிந்தனையை நெறியினையும் கெடுக்கிறது.

இந்தத் தத்துவத்தைப் பின்பற்றி மேல நாட்டினர் பலர் தங்களுடைய பண்பாட்டையும், வாழ்க்கையும் தொலைத்து விட்டுத் தேடுகின்றனர். அந்த மோசமான தத்துவம் நம் சமூகத்தில் நுழைந்துவிட்டால் ஏற்படும்மோசமான விளைவுகளை "சமையலறைக் கலயங்கள்" நாவலில் காணலாம்.

### பின் நவீனத்துவத்தின் பலியாடு :

பின் நவீனத்துவத்தின் பலியாடுகள் பெண்கள்தான். இத்தத்துவத்தைப் பின்பற்றிய ஆண்கள், பெண்களைக் குடும்ப உறவை விட்டு வெளியே வரவேண்டும் என்றும், விருப்பம் கொள்ளும் நபருடன் வாழலாம் என்றும் கூறி அவர்களையும் இந்தத் தத்துவத்தில் நுழைய வைக்கின்றனர். நுழைந்த பின் அவர்கள்

வாழ்க்கையை அவர்களே தொலைத்துத் தேடி அலையும் நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். இந்நாவலிலும் அத்தகைய நிலையினை சாந்தா பாத்திரத்தில் நாம் காணலாம். இவள் குடும்ப உறவை விட்டு வெளியே வந்தபின், கிருஷ்ணனின் பேச்சில் மயங்கி அவனுடன் வாழ முற்படுகிறாள். அவனின் போதை நடுக்கத்தைப் போக்க தன் கற்பையே வேறு ஒருவனுக்கு விற்றுவிடுகிறாள்.

"பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பெண்ணும்
திண்மை உண்டாகப் பெறின்" - குறள்

என்ற நம் பண்பாட்டையே விற்றுவிடுகிறாள். பின் நவீனத்துவத்தின் போக்கால் இந்நிலை தோன்றுகிறது எனலாம்.

இறுதியில் தன் குடும்பத்துடன் கிருஷ்ணன் இணைகிறான். சாந்தா பலியாடாக நிறுத்தப்படுகிறாள்.

இவ்வாறு பின் நவீனத்துவத்தின் தத்துவத்தினையே தன்னகத்தில் கொண்டு விளங்குகிறது "சமயலறைக் கலயங்கள்".

**முடிவுரை :**

கார்பன்-டை-ஆக்சைடு உடலுக்கு எவ்வளவு கெடுதிகளை விளைவிக்குமோ அத்தகைய நிலையினைச் சமுதாயத்திற்கு அளிக்கும் கொடிய விஷம் பின் நவீனத்துவமாகும் என்பதை இக்கட்டுரையின் மூலம் அறியலாம்.

**பார்வை நூல்கள் :**

1. சமையலறைக் கலயங்கள் - சுப்ரபாரதி மணியன்
2. பின்னை நவீனத்துவம் கோட்பாடுகளும் தமிழ்ச் சூழலும் - தி.சு. நடராசன், அ. ராமசாமி

# திருத்தப்பட வேண்டிய தீர்வு

புலவர், முனைவர். *தொ. கமலா,* இணைப் பேராசிரியர் - தமிழ்த்துறை,
அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி, பழனி.

இன்றைய உலகில் அறிவியலின் சாதனைகள் அனைத்துத் துறைகளிலும் தடம் பதித்துள்ளன. உணர்வுபூர்வமானதும் படைப்பாற்றலின் வெளிப்பாடுமான இலக்கியத்துறையிலும், அறிவியல் பெரிய அளவில் தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கிறது. அதன் காரணமாக பல்வேறு அறிவியல் துறைகளோடு இலக்கியத்தை ஒப்பிட்டுப் பார்க்கக் கூடிய திறனாய்வு முறைகள், அணுகுமுறைகள் தோன்றி வளர்ந்து வருகின்றன. அவற்றுள் ஒன்றாகும் பின் நவீனத்துவம் படைப்புத் துறையிலும், திறனாய்வுத் துறையிலும் அளப்பெரும் சாதனைகளைச் செய்திருக்கிறது.

“பிளவுபட்ட கூறுகள் பற்றிப் பேசுவது பின் நவீனத்துவத்தின் முக்கியமான பண்பு. அது போன்று புனிதம் என்பதை மறுப்பதும் இதனுடைய முக்கியமான பண்பாகும்”1. “பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவலகால வகையினானே.” என்பது தொல்காப்பியர் கருத்து. அதற்கேற்ப பின்நவீனத்துவத்தின் இந்த முக்கியப் பண்பை அடிப்படையாகக் கொண்டுள்ள நீல. பத்மநாபனின் இரண்டாவது முகம் எனும் சிறுகதைத் தொகுப்பில் உள்ள “இரண்டாவது முகம்” என்ற கதையில் காட்டப்பட்டிருக்கிற பெண்ணியப் போக்கை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தமிழிலக்கிய மறுமலர்ச்சியுகத்தில் நாவல்கள் - சிறுகதைகள் படைப்பதில் ஒரு புதிய பாணியையும் நடையையும் தமிழுக்கு அளித்திட்ட பெருமைக்குரியவர் திரு. நீல. பத்மநாபன் அவர்கள். “இரண்டாவது முகம்” என்ற கதை, கல்யாணமாகிப் பத்தாண்டு காலத்தில் நான்கு பிள்ளைகளுக்குப் பெற்றோர் ஆகிவிட்ட நிலையில், கணவன் மனைவிக்கிடையே ஏற்பட்ட அன்றைய சண்டையின் தொடர்ச்சியாக ஆரம்பமாகிறது. “அப்பாவும் அம்மாவும் பார்த்துக் கொண்டு வரும் பெண் எனக்கு பரிபூரண சம்மதம்தான்” என்று சொல்லி, திருமணத்திற்கு முன் ஒருமுறை கூட பார்க்க ஆர்வம் காட்டாத, மனைவியாக வரப்போகிறவளின் முகம் கல்யாணமான பின் கடந்த பத்து ஆண்டுகளாக பல சமயங்களில் பலவாறாகப் புகழப்பட்ட அவளின் முகம், இன்றை சண்டையின் போது,

“உன் முகத்தை எங்கிட்ட காட்டாதே.....பேசாமல் உள்ளே
தொலைஞ்சு போ”2. - என்று

காரியாலயம் செல்ல பஸ்ஸூக்காக விழந்தடித்துக் கொண்டு ஓடிய கணவனால் சொல்லப்பட்ட வார்த்தை வீச்சுக்களின் தாக்கத்தினால் மிகவும் பாதிப்புக்கு ஆளான மனைவியின் நிலையை, கதையாசிரியர் பெண்ணின் பல்வேறு பிரச்சனைகளை, பணிகளைத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகிறார் கதையாசிரியர்.

(அ) கணவன் இல்லாதபோது வீட்டிற்கு யாராவது வந்து போனால், அவன் வந்தவுடன் அதனைத் தெரிவித்துவிட வேண்டியது.

(ஆ) வந்தவரிடம் நிகழ்ந்த உரையாடலை ஒன்று விடாமல் அவனிடம் சொல்ல வேண்டியது.

(இ) அவன் பேசும் பொழுது எதிர்வாக்குப் பேசாது இருக்க வேண்டியது.

(ஈ) குழந்தைகளை அழ விடாதிருப்பது.

(உ) வீட்டில் அவன் ஒழுங்குபடுத்தி வைத்திருக்கும் பொருட்கள் அப்படி அப்படியே எப்போதும்

ஒழுங்காக இருக்க வேண்டும்.

(ஊ) வீட்டில் ஓரிடத்திலும் ஒரு போதும் குப்பை கூளங்கள் எதுவும் கிடைக்கலாகாது.

(எ) அவன் எள் என்று சொன்னால் எள்ளைத்தான் கொண்டு கொடுக்க வேண்டும் தவறிப்போய் கூட எண்ணெய் ஆகிவிடக் கூடாது.

(ஏ) ஒவ்வொரு நாள் ஒவ்வொரு மூடில் அவன் வருவான்.

இதற்கெல்லாம் தகுந்தவாறு தன்மூடையும் அட்ஜஸ்ட் பண்ணிக் கொண்டு குறிப்பறிந்து அவனுக்குப் பணிபுரிய வேண்டும்.

"இப்படி இப்படி இன்னும் சொல்லித் தீராத எத்தனை எத்தனையோ கொள்கைகள், இந்தக் கெடுபிடிகள் நாள் செல்லச் செல்லக் கூடிக் கொண்டே செல்லும் நிலையில், வாழ்க்கை நரகமாக ஒரு பெண்ணுக்கு இதைவிட வேறு எதுவும் வேண்டாம்"3. என்று மனைவியிடம் கணவன் எதிர்பார்க்கும் எதிர்பார்ப்புகளை பெண்மீது சுமத்தப்படும் சுமைகளை, மனைவியின் வார்த்தைகளாலேயே கதையாசிரியர் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

பெண்ணுக்கு எதிராக இழைக்கப்படும் இத்தகைய துன்பங்களைச் சித்தரித்துக் காட்டும் ஆசிரியர், இத்துன்பங்களால் பாதிக்கப்பட்ட பெண்ணின் மன உளைச்சலுக்கு, மனப்புண்ணுக்கு மருந்தாக தீர்வினைத்தர எண்ணும் பெண்ணிய வாதியாக, பெண்ணுணர்வுக்கு மதிப்பளிக்கும் படைப்பாளி ஆகிறார்.

"உன் முகத்தைப் பார்க்கவே பிடிக்கல்லபோ....போ... தொலைஞ்சுபோ" என்று கணவனால் சுட்டிக்காட்டப்பட்ட இந்தமுகம் "இப்போது இருக்கும் இந்த அலங்காரம் எதுவும் இல்லாத தோற்றத்தில் வேறு யாருக்காவது பிடிக்குமா?" 4. என்று பரீட்சை செய்து பார்த்துவிடும் வைராக்கியத்துடன், வீதியையே துழாவிக் கொண்டு ஜன்னலருகில் நின்று கொண்டிருந்தாள், அப்போது தூரத்தில் ஒருவன், அசிங்கமான நடை உடையுடன் வந்து கொண்டிருந்தான். "இதுவும் தனக்கு ஒரு சவால்தான், அதை ஏற்றுக் கொண்டே தீருவது என்ற ஒரு வெறியில், பலமாகத் தள்ளித் திறந்த ஜன்னல் சுவரில் போய் மோதியதால் எழுந்த ஓசை கேட்டு திடுக்கிட்டு, திரும்பிப் பார்த்த அவனுக்கு தன் முகம் முழுவதையும் நன்றாகக் காட்டி பல் முழுவதும் வெளித் தெரிய சிரித்த அவளைக் கண்டு, ஒரு கணம் தயங்கி, பின் சிரித்துக் கண் சிமிட்டுகிறான். இவள் வெளியில் வந்து அடைத்துக் கிடந்த கதவின் தாழ்ப்பாளை விலக்கி, நன்றாகத் திறந்து விடும்போது, கணவனைப் பழி வாங்கி விட்ட ஒரு ஆத்ம திருப்தி அவள் உள்ளத்தில் நிறைந்திருந்தது" 5. இக்கதைத் தலைவிக்கு ஏற்பட்ட பிரச்சனைக்கு ஆசிரியர் தரும் தீர்வு இது. தமிழ் இலக்கியப் படைப்பு உலகிற்குப் புதிய பாணியையும் நடையையும் அளித்த ஆசிரியர், தன் கதையில் வரும் பெண்ணியப் பிரச்சனைக்கும் புதிய பாணியிலே அளிப்பதே இந்தத்தீர்வு.

ஆனால், ஆசிரியர் காட்டும் பிரச்சனைக்கான தீர்வு இந்தியப் பெண்ணியத்துக்கு - மரபுப் பெண்ணியத்துக்கு பொருத்தக்கூடியதாக இல்லை நம் நாட்டுப் பண்பாட்டினையும் நாகரிகத்தையும் மரபையும் அடிப்படையாகக் கொண்டதாகவே பெண்ணிய அணுகுமுறை அமைய வேண்டும். "இயற்கைப் படைப்பின் படி ஆணும் பெண்ணும் வெவ்வேறு இயல்புடையவர்களே. இதை ஆணும் பெண்ணும் ஏற்று, எனக்கென்று குடும்பத்திலும் சமுதாயத்திலும் உள்ள பொறுப்புக்களை உதறித்தள்ளாமல், அதே சமயம் நான் நானாக இருக்க அவசியமான தனித்தன்மையைக் காப்பாற்றிக் கொண்டு எனக்கு உரிய இடம், மரியாதை, அந்தஸ்தைப் பெறுவேன்" என்பதே "பழமை எண்ணங்களில் நம்பிக்கை கொண்ட பெண்ணுரிமையின் சித்தாந்தம்; இந்த நிலை இன்று இந்தியாவுக்கும் வேண்டும்"6.

பெண்ணியப் பிரச்சனைக்குத் தீர்வுகாண விழையும் அதே வேளையில் தான் சுட்டிக் காட்டும் தீர்வு, குடும்பத்துக்கும் சமுதாயத்துக்கும் - ஏன் அந்தப் பெண்ணுக்குமே கூட மீண்டும் நினைத்துப் பார்க்கும் போது ஏற்புடையதுதான் என்கின்ற விதத்தில் தீர்வைச் சுட்டிக்காட்டலே சிறப்புடையது. மாறாக பின்நவீனத்தின் முக்கியப் பண்பான மரபுமீறல் - உடைத்தலை கருத்தில் கொண்டு தீர்வு கூறுதல் பொருந்தாததே. "ஒருவர் பொறை இருவர் நட்பு" நட்புக்கே, ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை அடித்தளமாகும் போது, வாழ்க்கையில் ஒருவர் ஆதிக்க மனப்பாங்கினாலோ, அறியாமையினாலோ, பிற புறக்காரணிகளாலோ மற்றவரைப் புண்படுத்தும் போது, அவர் செய்த அதே தவற்றினை மற்றவரும் செய்வது அப்புண்ணுக்கு மருந்தாகாது. தவறே தவறுக்குத் தீர்வாதல் எங்ஙனம்?

மக்களின் மனோபாவங்களை ஆய்வு செய்வதற்கான வரலாற்று ஆவணங்களாக அமையும் படைப்புக்களால் தான் மக்களின் வாழ்க்கைச் சலனங்கள், மாறுதல்கள், வளர்ச்சிகளை உடனுக்குடன் பட்டியலிட்டுக்காட்ட முடியும். எனவே தான் ஆண்களிடம் அடிபட்டு, திட்டு வாங்கிச் சீரழிகிற பெண்களைவிட தன்னுடைய அணுகுமுறைகளால் அன்பால் அவர்களைச் சீர்திருத்தும் பெண்களைக் கதைகளில் படைத்துக் காட்டினால் மிக்க பயன்கிட்டும். சோகமும் சுமையும் மட்டுமே பெண்கட்குச் சொந்தமாயிருக்கும் கொடுமையை மாற்ற வேண்டும் என்ற நல்லெண்ணத்துடன் பேசியும் எழுதியும் வரும் பெண்ணியவாதிகள் - படைப்பாளிகள் - பெண் பிரச்சனைகளுக்குத் தீர்வு சொல்லும் போது அத்தீர்வு புதுமையாய் மட்டும் இருக்க வேண்டும் என்று எண்ணாமல், பொருத்தமானதாக - ஏற்புடையதாக, மரபு மீறாததாக இருக்க வேண்டும் என்ற விதத்தில் தீர்வினைக்காட்ட வேண்டும் என்ற எதிர்பார்ப்பு இக்கட்டுரை மூலம் புலப்படுத்தப் பெறுகிறது.

**பயன்பட்ட நூல்கள் :**


1. நீல. பத்தமநாபன், இரண்டாவது முகம்
2. தி.சு. நடராசன், திறனாய்வுக் கலை
3. சிவசங்கரி, இந்தியா டுடே, ஜனவரி 92

# ராஜம் கிருஷ்ணனின் மானுடத்தின் மகரந்தங்கள் நாவலில் மரபு மீறல்

திருமதி. *மு.கமலா,* தேர்வுநிலை விரிவுரையாளர், தமிழ் - உயராய்வு மையம்,
பாத்திமா கல்லூரி, மதுரை-18.

## முன்னுரை

எழுத்தாளர் ராஜம்கிருஷ்ணன் அவர்களுக்கு, தங்கச்சி நீ இந்த வாழ்வை விடுத்து நேரான குடும்ப வாழ்வு வாழ வேண்டும் என்று பாரதியார் கூறியதாகக் கிடைத்த செய்திதான் மானுடத்தின் மகரந்தங்கள் என்ற நாவலின் கரு என்று பதிப்புரையில் கூறப்பட்டுள்ளது. மேலும் கதை சொல்லியே மானுடத்தின் மகரந்தங்கள் என்ற நாவலின் முன்னுரையில், பாரதியின் வாழ்க்கை பற்றிய விவரங்களைச் சேகரித்து ஆராயும்போது அவரது வாழ்க்கையில் நிகழ்ந்ததாகக் கேள்விப்பட்ட ஒரு நிகழ்ச்சியிலிருந்து இந்த நாவலுக்கான வித்து என்னுள் விழுந்தது என்று குறிப்பிட்டுள்ளார்.

அவர் பெண்ணுரிமை மலர்ச்சிக்குக் குரல் ஒலிப்பவர். மரபு வழிப்பட்ட பெண்மைச் சிந்தனைகளுக்குள் தன்னை வரையறைப்படுத்திக் கொள்ளாமல், புதிய, மாற்றுச் சிந்தனைகளோடு செயலாற்றும் திறம்மிக்க பெண்மாந்தர்களைப் படைத்துத் தருவதில் வல்லவர். அவருடைய மானுடத்தின் மகரந்தங்கள் என்ற நாவல் வழியாக அமைதியும், இனிமையும் நிறைந்த, சமத்துவம் உடைய சமுதாயம் மலர அவர் கருத்துக்களைக் கூறுகின்றார்.

தேவதாசி குலத்தைச் சார்ந்த மதுராம்பாள், அவளது 35-ஆம் வயதில் அக்குலமரபை மீறி குடும்ப வாழ்வு பெறும் புரட்சிகரமான முயற்சியில் ஈடுபடுகின்றாள். பெண்ணடிமைத்தனத்திற்கு எதிரான முதல் தாக்குதல் நிகழ்கின்றது. இந்நாவலில் தமிழ்ச் சமுதாயத்தில் பெண்கள் நிலையையும் - அவர்களின் சிந்தனை ஓட்டங்களையும், அரசியல், பொருளாதார சூழ்நிலைகளால் ஏற்பட்டுள்ள பாதிப்புக்களையும் மிகச் சிறப்பாகப் படம்பிடித்துக் காட்டியுள்ளார். மேலும் மரபு மீறல், புதுவழிக்காணல், கல்வி, தற்சார்பு, பொருளாதார விடுதலை எனப் பலநிலைகளில் தனது நாவல் முயற்சியைத் தொடர்கிறார் கதைசொல்லி.

சமுதாய விடுதலை பெண் விடுதலையுடன் பின்னிப் பிணையப்பட்டுள்ளதால் சமுதாயத்தின் ஒருங்கிணைக்கப்பட்ட வளர்ச்சிப்படி நிலைகளில் பெண் ஏற்கும் பங்கு இன்றியமையாதது. தேவதாசி குலப்பெண் மதுராம்பாள் - அவள் மரபு மீறுகிறாள் என்ற கருத்தாக்கத்தை மட்டும் எடுத்துக்கொண்டு விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம்.

## தேவதாசி - சொற்பொருள் விளக்கம்

தேவதாசி என்ற சொல்லுக்கு, இறைவனுக்குப் பணி செய்யும் பெண் என்பது பொருளாகும். பழமையான தமிழ் இலக்கியங்களிலும், கல்வெட்டுக்களிலும், பதியிலார், தளிச்சேரிப் பெண்டுகள், மாணிக்கம் போன்ற பெயர்களில் அவர்கள் குறிப்பிடப்படுகின்றனர்.

சுப்பராயலு என்பவர், உண்மையிலேயே விலைமதிப்பற்ற மாணிக்கங்களாவர். அதனால்தான் அவர்களைப் பற்றி நான் தமிழில் எழுதிய நூலுக்கு மரபு தந்த மாணிக்கங்கள் என்று பெயரிட்டேன் என்று குறிப்பிட்டுள்ளார்.

ஹெய்ரோ துலாய் என்ற கிரேக்கப் பெயரிலும் (கடவுளின் பணிப்பெண் என்று பொருள்) எந்து (இறைவனின் மணமகள்) என்ற பாபிலோனியப் பெயரிலும் அவர்கள் மகிழ்வுற்றனர். மேலும் ஆகமங்கள் அவர்களைக் கணிகை அல்லது ருத்ரகணிகை என்றழைக்கின்றன என்பது புலப்படுகிறது.

தேவதாசி என்ற சொல்லை முதன்முதலில் குறிப்பிடும் கல்வெட்டு கருநாடகத்தில் உள்ள அலனஹள்ளியில் காணப்படுகிறது. (கி.பி.1113, கருநாடகக் கல்வெட்டு ஞானூா-97) பி.எம். சுந்தரம் ஆங்கிலத்தில் பேசியதை, தமிழில் இரா.சுப்பராயலு தேவதாசி மரபு என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

## தேவதாசி யார்?

தேவதாசி ஒருத்திக்குப் பிறந்துவிட்டால் மட்டுமே ஒருபெண் தேவதாசி ஆகிவிடமுடியாது. பொட்டுக்கட்டுதல் என்ற நிகழ்வின் வழி ஒரு கடவுளுக்கு அவளை அர்ப்பணிப்பதன் வழியாகவே அவள் தேவதாசி ஆகமுடியும் என்று அறிஞர் குறிப்பிடுகின்றார்.

தேவதாசி குலம் ஒரு சாதி அல்ல. பல்வேறு சாதியைச் சேர்ந்தவர்களும், அல்லது சில சமயங்களில் யாருமற்ற அனாதைகளும் தேவதாசிகளாக ஆக்கப்பட்டிருக்கின்றனர். குடும்பத்தில் முதலில் பிறக்கும் பெண்ணைக் கோயிலுக்கு அர்ப்பணிப்பது என்ற வழக்கம் சாதி வேறுபாடின்றி பெரும்பாலான மக்களிடம் இருந்து வந்திருக்கின்றது. சிலர் நேர்ந்து கொண்டதற்கு ஏறப தங்கள் மகளையோ, மகளிரையோ கோயிலுக்கு அர்ப்பணித்துள்ளனர். தங்களுக்கு மகள் பிறக்காதபோது ஏழைப்பெண் ஒருத்தியை விலைக்கு வாங்கியும் அவளை அர்ப்பணித்துள்ளனர்.

## பொட்டுக்கட்டுதல்

ஒரு பெண்ணை தேவதாசியாக்குவது பொட்டுக்கட்டும் சடங்காகும். வழக்கமாக குடும்பத்தில் வயதான பெண்மணியால் கோயிலின் மூலவர் சன்னிதானத்தில் இச்சடங்கு நிறைவேற்றப்படும். சில சமயங்களில் கோயில் அர்ச்சகராலும் நிறைவேற்றப்படுவதுண்டு. பொட்டு என்பது திருமாங்கல்யத்துக்கு இணையானதாகும். ஒரே ஒரு வேறுபாடு அதைக் கட்டுபவர் வேறுபடுவது தான் என்பது புலனாகிறது.

## தேவதாசி நிலை

கோவில்களில் கடவுளர்களின் பெயரால் பெண்களுக்குப் பொட்டுக் கட்டப்பட்ட தேவதாசி இனத்தவர் பாலியல் தொழிலாளி இனத்தவரினின்றும் சமூகத் தகுதிநிலைகளில் மேம்பட்டவராகக் கருத முடிகிறது. இருப்பினும் அடிப்படையில் ஒரே தொழிலைச் செய்கின்றனர் என்பது உண்மையாக இருக்கிறது. தேவதாசி விலைமகள், பொதுமகள், பாலியல் தொழிலாளி என்ற சொற்களின் பொருள் பற்றிப் பெரியார்,

விபச்சாரம் என்பது பெண்கள் அடிமைகள் என்பதைக் காட்டும் ஒரு குறிப்பு வார்த்தை என்று தான் சொல்ல வேண்டுமேயொழிய வேறல்ல – என்று கூறுகின்றார்.

மானுட மகரந்தங்கள் என்ற நாவலில் இடம்பெறும் மதுராம்பாள் என்ற பெண் தேவதாசி இனத்தைச் சேர்ந்தவள் தேவதாசியர் குலத்தொழிலை முழுவதும் வெறுப்பவள். அதாவது குலத் தொழில் என்ற காரணம் காட்டி ஆண்களின் பாலியல் விருப்பங்களை நிறைவு செய்பவளாகப் பெண் உருவாக்கப்படுவதை வெறுக்கிறாள். அதனால் கடவுள் பெயரைச் சொல்லி பெண்ணை அடிமையாக்கும் இத்தொழிலைத் தெரிந்து உணர்ந்து கொண்டு அவள் அதிலிருந்து வெளிவரத் துடிக்கிறாள் அதன் வெளிப்பாடுதான் இந்த நாவல்.

கடவுளுக்குத் தாலி என்ற அருவருப்பான பொய்யைக் கழற்றிவிட்டபின் அவளும் ஒரு உத்தமமான பெண், ஒரு தாயாகும் பாக்கியம் உடையவள். அந்தராத்மா நூற்கும் மெல்லிய இழைகளாகிய நேயங்களினால் குடும்பத்தைத் தாங்கக் கூடிய பெண் என்பதை உறுதிசெய்து இளவயதில் தான் கனவு கண்ட இனிய இல்லறவாழ்வை நடத்திக் காட்டுகிறாள். (மா.ம.ப.83)

என கதை சொல்லியின் கூற்றால், தேவதாசி குலப்பெண் பாலியல் பொருளாக வாழ்வதிலிருந்து விடுபட்டுக் குடும்பப் பெண்ணாக வாழ வேண்டும் என்றும் ஆசிரியரின் உள்ளார்ந்த எதிர்பார்ப்பை உணர முடிகிறது. பெண்கள் ஆண்களுக்குரிய பாலியல் நுகர்பொருள் என ஆணாதிக்கப் பண்பாடு வரையறுத்திருப்பதால், பொதுமகளாகத் திகழும் தேவதாசி குலப்பெண் மதுராம்பாள் அதிலிருந்து மீண்டு வருவது சிறப்பாகக் கருதப்படுகிறது. ஆனால் மதுராம்பாள் பாலியல் நுகர்பொருளாக இருக்கிறோம் என்ற உணவு இன்றியும், தேவதாசியாக, வாழ்வதினின்று விடுபட்டு குடும்பப் பெண்ணாக நுழைதல் என்பது மீண்டும் ஆணாதிக்கப் பண்பாட்டுப் பாலியல் நுகர்பொருளாகும் நிலையையே சுட்டுகிறது. எனவே ஆண் சமூகப் பண்பாட்டைத்தான் எதிரொலிக்கிறாள் மதுராம்பாள் என்று கருத இடமுண்டு.

## சமுதாய நோக்கு

தேவதாசி குலப்பெண் மதுராம்பாள் குடும்பப் பெண்ணாகிறாள் என்பதை ஏற்றுக்கொள்ள இயலாத ஆணாதிக்கச் சமுதாயத்தைக் காண முடிகிறது என்பதை,

நான் சொல்றேன்னு நினைச்சுக்காதே மதுராம்பா, எனக்கு அன்னிக்கே புடிச்சித் தோணின்டே இருக்கு. லோகத்துல என்னென்னவோ பண்றா. அவால்லாம் எப்படி எப்படியோ பேர் சொல்லிண்டு முன்னுக்கு வந்துடறா. ஆனா, பெரியவா, பரம்பரையா ஒண்ணு ஈசுவரார்ப் பணம்னு வச்சு, அதை மீறினா மட்டும், தெய்வம் கைமேலதான் குடுக்கறது. எனக்குத் தெரிஞ்சு, ஒரு கோவில் குருக்கள் குலம்கூட முன்னுக்கு வந்ததில்ல. சிவன் சொத்தை அவன் தொட்டாலே போரும்... அப்படி...

குருசாமியின் கூற்றால் (மா.ம.பக்.227-228). அறிய முடிகிறது. மேலும் அவன் கூறுதையெல்லாம் கேட்ட மதுராம்பாள்.

இதெல்லாம் எதுக்கு இப்ப சொல்ற, குருசாமி எதேது எப்படி எப்படி நடக்கணும்னு இருக்கோ அப்படி நடந்துட்டு போகட்டும். உனக்கெதுக்கு இப்ப இந்த விசாரம்? (மா.ம.ப.228).

நீ இப்படிச் சொல்லிட்டா சரியாயிடுமா? உனக்கு நான் சொல்றது பிடிக்காவிட்டாலும் எனக்கு இது சூசகமாத் தோணிண்டிருக்கு. நானும் பார்க்கறேன். உன் குடும்பத்துக்கு ஒண்ணு ஒண்ணா வரது. உன் தலைமுறை நீ நினைச்ச மாதிரி வரவேயில்ல. உன் மாட்டுப்பொண் ஒதுங்கி இருக்கறதுக்கு காரணம் கூட இதுதான், பயம். அதது வம்சம் வழி தலைப் பெண்ணை ஈசுவரார்ப் பணம்னு விடறது. அப்படி விட்டு அந்த ஈசுவரப் பிரக்ஞயை மீறி நீ குடும்பம் வச்சிண்டே, இப்ப, ஆண்டாளு, சாமிக்கண்ணு, பொங்களெல்லாரும் சட்டம்னு வந்தப்புறம்கூட, மூத்த பெண்களுக்கு அந்த சாங்கியம் செய்யாமலிருக்கல. கல்யாணம பண்ணிச் செய்யாமலிருக்கல. பின்னால்தான் கல்யாணம் பண்ணிக் குடுத்தா.... குட்டி எப்படிச் சிரிச்சிண்டு வருவ? கண் பார்த்ததைக் கை ஒரே நிமிஷத்தில் செய்யும் அது ஒரு நிமிஷத்திலே சாசகறதாவது?... (மா.ம.பக்.228-229).

மேற்சொன் கருத்துக்களிலிருந்து, மதுராம்பாள் தேவதாசி குலத்திலிருந்து விடுபட்டுக்குடும்பப் பெண்ணாக மாறியதால்தான் அவளுடைய குடும்பத்தில் பல இன்னல்கள் அடுக்கடுக்காய் வந்துகொண்டே இருக்ன்றன என்று சுட்டப்படுகிறது.

## முடிவுகள்

மானுடத்தின் மகரந்தங்கள் என்ற நாவலில் இடம்பெறும் மதுராம்பாள் என்ற தேவதாசி குலப்பெண், தேவதாசி இறுக்கம் தவிர்த்து குடும்பப் பெண்ணாக மாறுவதை சமுதாயம் ஏற்கவில்லை என்பது புலனாகிறது. தேவதாசி குலமரபிலிருந்து, மதுராம்பாள் என்ற பெண் மரபு மீறுவது புதிய வழி என்பதை அறியமுடிகிறது. மதுராம்பாள் போல் பல பெண்கள் அம்மரபிலிருந்து வெளிவருதல் பெண் சமுதாயத்திற்கு நலன் விளைவிக்கும் என்பது உறுதி.

# "பூக்கள் நாளையும் மலரும்" நாவலில் பின் நவீனத்துவம்

*மா.களஞ்சியம்மாள்,*
ஸ்ரீ பாராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம்.

## 1.0 முன்னுரை

இரண்டாம் உலகம் போருக்குப் பின்பு மேற்கத்திய கலை இலக்கியங்கள், மரபு, சாராத, யாதார்த்த வாதச் சாயல் இல்லாத தன்மையில் தோன்றின. இவற்றை விமரிசனம் செய்த அறிஞர்கள் மத்தியில் புழக்கத்தில் வழங்கிய சொற்களே நவீனத்துவம், பின் நவீனத்தும் என்னும் கலைச்சொற்களாகும். இச்சொற்களுக்கு இதுவரை சரியான வரையறைகள் தரப்படவில்லை. இவை நாடு, கால எல்லை, இலக்கிய வகைமை, கட்டுக்கோப்பு போன்ற எல்லைகளைக் கடந்தவனாக உள்ளன. 1950க்குப்பின் ஏற்பட்ட முதலாளிய வளர்ச்சியின் காரணமாகச் சாதாரண மக்களின் மனவுணர்வுகளை வெளிப்படுத்துவதற்கு இச்சொற்கள் பயன்பட்டன. இவை தமிழர்களுக்குத் தாக்கத்தால் ஏற்பட்டவை. ஆயினும் இந்திய தமிழ்ச்சூழலுக்கு ஏற்ப வடிவமைக்கப்பட்டுக் கையாளப்படுகின்றன. பிரபஞ்சனின் "பூக்கள் நாளையும் மலரும்" நாவலின் பின் நவீனத்துவக் கோட்பாடு பயன்படுத்தப்பட்டுள்ள விதம் குறித்த ஆய்வாக இக்கட்டுரை அமைகிறது.

## 1.1 நவீனத்துவம் பின் நவீனத்துவம் - விளக்கம்

நவீனத்துவம் என்பது நடப்பியல் தன்மையோடு ஏற்கனவே உள்ள கலை, இலக்கிய, மொழி பற்றிய நிலைப்பாடுகளை ஏற்றுக்கொண்டது. பின் நவீனத்துவக் கோட்பாடு இதிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. இக்கோட்பாட்டின் படி இலக்கிய வகை, மொழி, சொல்லாடல், உத்தி, படைப்பாளி என்ற மையம் கட்டழிக்கப்படுகிறது. புற உலக யதார்த்தத்தோடு தொடர்புடைய வரலாறு, பண்பாடு, நாகரிகம், குடும்பம் ஆண், பெண் பாலுறவு, சமயம் போன்ற அனைத்து அதிகார மையங்களும் அழிக்கப்படுகின்றன. படைப்பு என்பது வெறும் பிரதியாகமட்டும் தரப்படும். படைப்பாளி, வாசகன், திறனாய்வாளன் ஆகிய மூவரும் சேர்ந்தே பொருளை உருவாக்கிக் கொள்ளுமாறு அமையும்.

## 1.2 மையமற்றது

நவீனத்துப் படைப்புளில் மரபு வழிப்பட்டதும், நேர்கோட்டு எழுத்து என்றும் நிறுவப்பட்ட கதை கூறு மரபு உண்டு. படைப்பிலக்கிய உத்தியோடு கூடிய படைப்பாக்கமும், சமூக நடப்பியலை வெளிப்படுத்தும் திறனும் இருக்கும். பின்நவீனத்துவத்தில் எழுத்து என்பது ஒரு பிரதி என்ற அளவில் தான் குறிக்கப்படுகிறது. மையம் என்ற ஒன்றே இருக்காது. மையத்தை உடைக்கும் எழுத்தாக மையமற்றதாக அமைந்திருக்கும். நிறுவப்பட்ட கதை கூறுமரப்பிற்கு மாறுப்பட்ட நேர்கோடற்ற எழுத்துமுறை என்ற கதை சொல் உத்தி இடம் பெறும் அடிப்படையில் கதையோ கதைப்பின்னலோ இருக்காது. பிரபஞ்சனின் "பூக்கள் நாளையும் மலரும்" நாவலில குறிப்பிடட கதை என்று எந்த அமைப்பும் கூறப்படவில்லை. நேரு காலனியில் குடியிருக்கும் பலதிறப்பட்ட மக்களின் மனவோட்டங்கள், செயல்கள், வாழ்க்கைச் சிக்கல்கள் என்ற பல்வேறு வினைவுநிகழ்வுகளின் தொகுப்பாவவே நாவல் அமைந்துள்ளது.

## 1.3 பல நிகழ்வுளின் தொகுப்பு

கண்வானால் ஒடுக்கப்பட்டு அவனின் இறப்பிற்குப்பின் புதுமை எண்ணங்களோடு ஜானுமாமி வாழ்ந்து வருதல், ஊழல் பெருச்சாளியான கணவனிடமிருந்து வள்ளி பிரிந்து செல்லுதல், தன் உணர்வுகளைப்புரிந்து கொள்ளாத கணவனை விட்டுவிலகி, பிந்து தனியாக வாழ்ந்து வருதல், முன்னோர்கள் வகுத்துத் தந்த மரபினைத் தன் மகள் மதிக்காததல் சுந்தா தற்கொலை செய்து கொள்ளுதல், ஜனனி ஆல்பர்ட் காதல் போராட்டம் என்று பல நிகழ்ச்சிகள் நேர் கோடற்ற தன்மையில் குறுக்கும் நெடுக்கமாகச் செல்வதைக் காணமுடிகின்றது. இங்கு படைப்பாளி கதை கூறு மரபு என்ற மையம் கட்டழிக்கப்படுகிறது.

## 1.4 மரபு வழிப்பட்ட பண்பாடு உடைபடுதல்

கலை இலக்கியப் படைப்புகளின் நோக்கமே மக்கள் அனைவரும் சாதி, மதம், மொழி என்ற எல்லைகளைக் கடந்து மானுடம் என்ற மகாநதியின் பிரவாகத்தில் ஒன்றாக இணைய வேண்டும் என்பதே. சமூக நெறிமுறைகளுக்கு உட்பட்டு சக மனிதனுக்குத் துன்பம் விளைக்காமல், முடிந்தால் தன்னாலான உதவிகளைச் செய்து வாழவேண்டும், என்பதே. "கவிதைள் காவியங்கள் எல்லாம் நல்லவர்களை மேலும் நல்லவர்களாகவும், அயோக்கியவர்களாக வாழநேர்ந்து விட்டபரிதாபத்துக்கு உரியவர்களை நல்லவர்ளாக மாற்றவுமே ஏற்பட்டிருக்கின்றன என்பது என்பணிவான கருத்து "(பூக்கள் நாளையும் மலரும், முன்னுரை ப.5) என்ற பிரபஞ்சனின் இலக்கியம் பற்றிய எண்ணித்தின் பிரதிபலிப்பாக அமைந்துள்ள பாத்திரம் ஜானுமாமி. நெல்லை வாயில் வாங்கிக் கொண்டு ஏதாவது ஒரு சீட்டை எடுத்துக் கொடுத்து விட்டுக் கம்பி போட்ட கூண்டுக்குள் ஒடுங்கிக் கொள்கின்ற பச்சைக்கிளியைப் போன்று தன்னை அடக்கி வைத்திருந்த கணவன், கண்குத்திப் பாம்பாக மோப்பம் பிடிக்கும் மாமியர், நடு யாமத்திலும் தனக்குப் பணிவிடை செய்யச் சொல்லும் மாமனார் என்று பிறருக்காவே வாழ்ந்து கொண்டிருந்தவள் ஜானுமாமி. " எங்களுக்கேதடி தேனும் நிலவும், எனக்குக் கல்யாணம் ஆறச்சே, பத்து முடிஞ்சு பதினொன்னுதான் வயசு... மாமாவோட பல்வரிசை இத்தனை அழகுன்னு அவர் செத்துக் கிடந்தப்போதாண்டி நான் முழுசா பார்த்தது". (பூ.நா.ம.ப.51) என்று அவள் அங்கலாய்த்துக் கொள்வது வாழும் பொழுது கணவனின் முகத்தைக்கூடப் பார்க்க முடியாத ஒடுக்கப்பட்ட ஒரு பெண்ணின் குரலாக வெளிப்படுகிறது.

பரிதாபத்திற்குரியவளாக வாழ்ந்து வந்த ஜானுமாமியே கணவன் இறந்துவிட்ட பின் புதுமைச் சிந்தனைகள் கொண்ட பெண்ணாக, பிறருக்கு நல்லது செய்ய வேண்டும் என்ற நற்பண்புகள் நிறைந்தவளாக வலம் வருகின்றாள். அண்டை வீட்டில் யார் குடியிருக்கின்றார் என்பதைக் கூட அறிந்து கொள்ளாத நகர வாழ்க்கையில் புதிதாகக் காலனிக்குக் குடிவரும் அனுவிடம் சென்று "ஊர் புதுசு, உனக்கு ஹெல்ப் தேவைப்படுமோல்லியோ... வர்றேன்" (பூ.நா.ம.ப.10) என்று தானே முன்வந்து உதவுகின்ற சேவை மனம் உள்ளவளாக உருமாறுகிறாள் "சாயங்காலம் ஆனா குளிச்சு சுத்தமா, மணமா, லட்சணமாக இருந்தா என்ன... ரெண்டாயிரம் வருஷமா புருஷனை மாதவி வீட்டுக்கு விரட்டுகிற கண்ணகிளா இருந்தா எப்படி" (பூ.நா.ம.ப.56) என்று கணவனுடைய தறொன போக்கால் வருத்தப்படும் லட்சுமிக்கு ஆலோசனை கூறுகின்றாள். ஜனனி, ஆல்பார்ட் ஆகியோரின் காதல் வெற்றி பெற நடுநாயகமாகச் செயல்படுகின்றாள். சேட்டுக் கடைக்காசு மாதிரி இருந்த பிந்துவை, அவளுடைய கணவன் தனக்கு விருப்பமான வடிவில் ஆக்கிப் பார்க்க நினைத்தான். அவளுக்கென்று ஒரு மனம், விருப்பம், உணர்வுகள், இருக்கும் என்பதனைச் சிறிதும் சிந்திக்காதவன். அதனால் அனைவிட்டுப் பிரிந்து செல்கிறாள் பிந்து. தாலி கட்டிவிட்டதாலேயே பிடிக்காத ஒருவனோடு காலமொல்லாம் தன் சுயத்தை அழித்துக் கொண்டு அவனுக்காக சமைச்சு, அவன் துணிகளைத் துவைத்து, அவன் மூலம் தன்னைப் பார்த்து வாழவிரும்பவில்லை அவள். பணம் தான் வாழ்க்கை என்று வாழ்ந்து தரும் தன் கணவனின் தப்பான வழியில் வந்த பணத்தில் வாழ விரும்பாமல் நற்பண்புகள் நிறைந்த சண்முகத்தை விரும்பிய வள்ளியிடம் முடிஞ்சவரைக்கும் கட்டினவனுக்கு விசுவாசமா இருக்க முயற்சி பண்றதுதான் அழகு. முடியவே முடியலைன்னா இதுக்கு முற்றுப்புள்ளி வச்சிட்டு அடுத்ததைத் தொடங்கு ஏக காலத்துல இதுக்குத் தெரியாம அதையும் அதுக்குத் தெரியாம இதையும் போஷிக்காக் கூடாது" என்று அறிவுரை கூறுகின்றாள். கணவன் மனைவி இருவரும் மனமொத்தவர்களாக வாழ வேண்டும். ஒத்துப் போகாத நிலையில் இருவரும் பிரிந்து தங்கள் விருப்பம் போல் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளலாம் என்று பிரபஞ்சன் உணர்த்த நினைக்கும் கருத்து இவ்விருபாத்திரங்கள் வழி புலனாகின்றது. மேலும் மரபு வழிச் சார்ந்த ஆண், பெண் உறவு நிலை, குடும்பம், ஆணாதிக்கம் என்ற அதிகார மையங்கள் சிதைக்கப்படுவதனையும் அறிய முடிகிறது. அதிகாரத்திற்கு எதிரான கலகக் குரலாகவும் பிந்துவின் அறிவுரை அமைகிறது.

புறத்தில் தாசு தும்பு இருக்கக்கூடாது என்றும் சுத்தம், சுகாதாரம் என்று கூக்குரலிடும் சுந்தா மாற்றான் மனைவி மீது மோகம் கொள்கிறார். அவருடைய மகள் ஜனனி ஒரு கிறிஸ்தவ இளைஞனை விரும்புகின்றாள்

என்பது தெரிந்த பொழுது தற்கொலை செய்து கொள்கிறார். "உண்மையில், ஜனனி ஒரு கிறிஸ்தவப் பையனைக் காதலிச்சது அல்ல, சுந்தா சாரோட பிரச்சனை. மாறாகத் தன் முன்னோர்களோட வழியை, அவர்கள் போட்டுக் தந்திருக்கிற பாதுகாப்பு வளையத்தை அவள் உடைச்சிட்டாளேன்னுதான் சுந்தா அசந்தா போனார்" (பூ.நா.ம.பா.58) என்று ஜானுமாமி கூறுவது போல் மரபு தகர்ந்து விட்டதே என்பதுான் அவருடைய சாவுக்குக் காரணம் எனலாம். அக வாழ்க்கைக்கும், புற வாழ்க்கைக்கும் தொடர்பில்லாத சில மனிதர்களின் இரட்டை வேடத்தைத் தோலுரித்துக் காட்டுகிறது இந்நாவல்.

### 1.5 சமயம் கட்டழிக்கப்படுதல்

சுந்தாவின் மனைவி தேவகி முதலில் தன் மகளின் விருப்பத்திற்கு முட்டுக்கட்டை போட்டாலும் பின்பு அவள் விரும்பியவனுக்கே அவளைத் திருமணம் செய்து வைக்கிறாள். "மதம் மனசைச் சுத்தமாகக் கழுவி, கசடு, அழுக்கு இல்லாமே புரட்டி வைக்கிறதுதான். அதை விட்டுட்டு கத்தியைத் தூக்கிறது. தூஷணம் பேசறது. பகைக்கிறது எல்லாம் யானைக்குப் பிடிக்கிற மதம்" (பூ.நா.ம.ப.133) என்ற ஜானுமாமியின் கூற்றுவழி இந்து, கிறிஸ்து, முஸ்லீம் என்ற மத வேறுபாடுகள் மனிதர்களுக்குள் வேண்டாம். மனச்சுத்தமே சிறந்த மதம் என்ற கருத்து எடுத்துரைக்கப்படுகிறது.

### 1.6 படிப்பவனின் புரிதலுக்கு ஏற்ப அர்தப்படுதல்

பின் நவீனத்துவப் கோட்பாட்டின்படி இதற்கு இதுதான் பொருள் என்று நிறுவப்பட்ட மையம் உடைபடுகிறது. படிப்பனின் அனுபவத்திற்கும், புரிதலுக்கும் ஏற்ப அர்ததப்படுத்திக் கொள்ளுமாறு பிரதி அமையும். "பூக்கள் நாளயைும் மலரும்" என்ற நாவலின் தலைப்பே இதற்கு எடுத்துக்காட்டாக அமைகிறது. ஜன்னியை விரும்பிய ஆல்பர்ட் பின்பு பணக்காரப் பெண் ஒருத்தியை மணந்து கொள்ள நினைக்கின்றான். இந்நிலையில் ஜனனியிடம் அவள் மனம் சோர்ந்து விடக்கூடாது என்று அவளைத்தேற்றும் விதமாக "பூக்கள் நாளையும் மலரும்" என்று பிந்து கூறுகிறாள். பூக்கள் நேற்றும் மலர்ந்தன. இன்றும் மலர்ந்துள்ளன. நாளையும் மலரும் என்ற பொருளில் அவள் கூறுவதில் ஆல்பர்ட்டோடு ஜனனியின் வாழ்க்கை முடிந்து விடாது. ஆடவர்களில் நல்ல குணமுடையவர்களும் இருப்பர். அவர்களில் ஒருவன் ஜனனியை மணந்து கொள்வான் என்ற பொருள் மறைந்துள்ளதனை அறியலாம். மேலும் பூக்களில் பலவண்ணங்கள் உண்டு. இது மனிதர்களில் நல்லவர்கள், கெட்டவர்கள் என்று இனம் பிரித்துக் காட்டுவதைக் குறிக்கிறது. மலர்கள் பொதுவாக நறுமணம் உடையன. அதுபோல் மனிதர்கள் அனைவரும் மனிதநேயம் என்ற உணர்வுடன் வாழ வேண்டும் என்ற உன்னதத் தன்மையினை உணர்த்துகிறது என்று பல வகைகளில் பொருள் கொள்ளுமாறு தலைப்பு அமைந்துள்ளது.

### 1.7 முடிவுரை

பிரபஞ்சனின் "பூக்கள் நாளையும் மலரும்" என்ற நாவலில் பின் நவனீத்துவக் கோட்பாடுகள் இடம் பெற்றுள்ளன. ஒடுக்கப்பட்ட மனிதவுணர்வுகளின் கலகக் குரல் ஒலிக்கிறது. கதைப்பின்னல், கதை கூறு மரபு என்று மையம் எதுவுமில்லாமல் படைப்பு அமைந்துள்ளது. ஆணாதிக்கம், சமயப்பற்று என்ற கட்டுமானங்கள் கட்டழிக்கபடுகின்றன.

# ஆண்-பெண் உறவுகளில் பண்பாட்டு வேறுபாடுகளால் ஏற்படும் விளைவுகள்

*வே. செந்தாமரை,* முனைவர் பட்ட ஆய்வாளர்,
பாத்திமா கல்லூரி, மதுரை – 18.

## முன்னுரை

குடும்ப அமைப்பிற்கு அடிப்படையாக அமைவது உறவு முறையாகும். அவ்வுறவு முறைக்கு ஆண் – பெண் என்ற இரு அங்கத்தினர் தாம், அடித்தளமாக உள்ளனர். ஆண் – பெண் உறவுகளில் பண்பாட்டு வேறுபாடுகளால் ஏற்படும் விளைவுகள் ராஜேஸ்வரியின் வசந்தம் வந்து போய்விட்டது, நாளைய மனிதர்கள் ஆகிய புதினங்களில் வெளிப்படுவதை எடுத்துக் காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## உறவுமுறை – விளக்கம்

மனித சமுதாயத்தின் முதன்மையான வளர்ச்சிக் கட்டமாக உறவுமுறை உள்ளது.தக்ஷிண் இனத்தை நிலைநிறுத்த இனப்பெருக்கம் செய்ய முற்பட்டமை முதல்வகைப் பிணைப்பிற்கு வழிகோலியது. இனப்பெருக்கத்திற்கு மனத்துணையைத் தேர்ந்தெடுத்து இணைய வேண்டிய திருமண நிகழ்வு இரண்டாம் வகைப் பிணைப்பிற்கு வழிகோலியது. திருமணத்தால் உண்டான குழந்தை புதிய உறுப்பினராகக் குடும்பத்தில் சேர்ந்ததால் அது மூன்றாவது வகையான பிணைப்பிற்கு வழிகோலியது. அவ்வனைத்துப் பிணைப்புகளும் ஒன்று சேர்ந்து உறவுமுறை என்ற அமைப்பாக மக்களிடம் செயல்படுகிறது '.

என்று வாழ்வியல் களஞ்சியம் உறவுமுறைக்கு விளக்கம் அளிக்கிறது.

## பண்பாடு – விளக்கம்

பண்பாடு என்பது கலை, அறிவு, நம்பிக்கை, ஒழுக்க நெறிகள், சட்டம் ஆகியவை உள்ளடங்கிய ஒன்றாகும். ஒரு மனிதன் சமுதாயத்தில் இருந்து கற்கும் பழக்கவழக்கங்களும் திறமைகளும் பண்பாடாகக் கருதப்படுகின்றன.

பண்பாடு என்பது மககளால் ஆக்கப்பெற்ற கருவி. இந்த ஊடகத்தைக் கொண்டே மக்கள் அவர்களின் தேவைகளை நிறைவு செய்து கொள்கின்றனர் என்பார்மாலினோசுக்கி தலைமுறை தலைமுறையாக மக்கள் குழுவாகச் சேர்ந்து கற்ற நடத்தைமுறைகளும், பழக்கவழக்கங்களும், மரபுகளும் சேர்ந்த ஒரு தொகுதியே பண்பாடு என்பார் இலப்பியர்

## பண்பாட்டு வேறுபாடுகளால் ஏற்படும் விளைவுகள்

ராஜேஸ்வரி பாலசுப்பிரமணியத்தின் புதினங்களின் கதைக்களம் இங்கிலாந்து நாடாக இருந்தாலும் கதைப் பாத்திரங்கள் இந்தியத் தமிழர், இலங்கைத் தமிழர், ஆங்கிலேயர் என்று வெவ்வேறான பண்பாடுகளுக்கு உரியவர்களாக இருபபதால் காதல் மற்றும் திருமணம் குறித்த அவர்கள் அணுகுமுறைகளும் வேறுபடுகின்றன. இவ்வேற்றுமைகள் இருபாலாரும் நெருக்கமாகப் பழகக் கூடிய சூழலில் ஏற்படுகின்றன. இவை,

1. திருமணத்திற்கு முன்
2. திருமணத்திற்குப் பின்

என்ற இரு பகுப்புகளாக இக்கட்டுரையில் பகுக்கப்பட்டு உள்ளன.

## திருமணத்திற்கு முன்

இந்தியாவில் பதின்மைப் பருவத்திலேயே இரு பாலாரும் கலந்து பேசுவதோ,இணைந்து பேசுவதோ வன்மையாகக் கண்டிக்கப்படுகிறது.

அண்ணனுடைய நண்பர்களுடன் பேசினால், அது வேறு சாதி பிள்ளை இல்ல... அதோடு நீ பேசியதை ஊர் பார்த்தால் நம்ம குடுமப கௌரவம் என்னாவது

என்ற அதிகாரக் குரலில் பெண்ணை அடக்கும் நிலை உள்ளது. ஆனால், இங்கிலாந்தில் இருபாலரும் நெருங்கிப் பழகக்கூடிய பண்பாடே மேலோங்கிக் காணப்படுகின்றது. இத்தகைய பண்பாடு திருமணத்திற்கு முன்னும் பின்னும் காணப்படுகிறது. திரும்ணத்திற்கு முன்னால் இருபாலரும பழகுவதால்,

1. திருமணத்திற்கு முன்பே சேர்ந்து வாழுதல்
2. கரு உருவாதல்

3. பலரோடு பாலியல் உறவு கொள்ளல்

4. திருமணத்தை வலியுறுத்த விரும்பாமை.

ஆகிய விளைவுகள் ஏற்படுகின்றன.

### திருமணத்திற்கு முன்பே சேர்ந்து வாழுதல்

இந்தியாவில் திருமணத்திற்கு முன்பு சேர்ந்து வாழுதல் என்ற முறை காணப்படவில்லை. ஆனால் இங்கிலாந்தில் இருவர் சில மாதங்கள் (அ) வருடங்கள் கூடி வாழ்ந்து பின்பு தங்களுக்குள் ஒத்துப் போகாது என்று கண்டால் பிரிந்து போய்விடலாம் என்ற நிலை காணப்படுவதை படைப்பாளர் ராஜேஸ்வரியின் புதினங்கள் வெளிப்படுத்துகின்றன. பனி செய்யும் இரவுகள், என்ற புதினத்தில் திருமணம் நிச்சயித்த தியாகுவும் ராதிகாவும் சேர்ந்து வாழ்கின்றனர்.

சட்டப்பூர்வமாகத் திருமணம் நடப்பது வேண்டாத ஒரு வெறும் சடங்காச்சாரம், அதற்காகக் கொடுக்கப்படும் சான்றிதழ் தேவையில்லாத ஒரு குப்பைக் காகிதம்... அன்பு, பால் உறவு ஆகிய இரு கோணங்களும் இருந்தால் போதும் [4]...

என்று வளர்ந்து வரும் எண்ணப்போக்கு நாளைய மனிதர்கள் என்ற புதினத்தில் டேவிட் ஜேன் இருவரும் திருமணம் என்ற சடங்குமுறை இல்லாமலே சேர்ந்து வாழ்கின்றனர். என்பதில் வெளிப்படுகிறது.

### கரு உறுதல்

இந்தியாவில் மணமாகாத பெண்ணுக்கு ஒரு குழந்தை பிறந்துவிட்டால், அவளுடைய நிலை கவலைக்கு இடமாகிவிடும். எந்தவொரு பெண்ணும் கருவுற்றுவிட்டாள் என்று தெரிந்தால், அவளை வற்புறுத்தி இன்னொரு திருமணத்திற்கு ஏற்பாடு செய்து விடுவார்கள். இங்கிலாந்தில் கருவுற்றுவிட்டது குறித்து, ஜேன் வருத்தமடைகிறாள்.

சித்திரா நான் கர்ப்பமாயிருக்கிறேன். ஜேனின் குரலிலிருந்த பரபரப்பு, சித்திராவை ஆச்சரியப்படப் பண்ணியது . (நா.ம. ப.20)

...டேவிட் எப்போதும் காண்டோம் பாவிப்பான்... தற்செயலாக, தவறிப்போய், திட்டம் போடாமல் கர்ப்பமாகிவிட்ட குற்ற உணர்வு குரலில் தொனித்தது . (நா.ம.ப.33)

என்ற சித்திரிப்பும், சேர்த்து வாழ்ந்தாலும், கருவுறுதலை, எதிர்பாராத தம்பதியரின் நிலையை நாளைய மனிதர்கள் என்ற புதினம் வெளிப்படுத்துகிறது. இந்தியாவில் குழந்தையை எதிர்பார்த்த மண வாழ்வு காணப்படுகிறது. ஆனால், இங்கிலாந்தில் இணைந்து வாழ்தலுக்கு மட்டுமே முதன்மை தரப்படுகிறது. ஜேன், டேவிட் இருவரும் சேர்ந்து வாழத் தீர்மானித்தவர்கள். அதன் மூலம் உண்மையாக வாழ்கின்றனர். ஆனாலும் திருமணச் சடங்கில்லாமல் சேர்ந்து வாழ்வது ஜேனின் மனத்தில் பாதுகாப்பற்ற உணர்வைத் தருகிறது.

### பலரோடு பாலியல் உறவு கொள்ளல்

மேலைப் பண்பாடு, திருமண உறவில் பாதுகாப்பை விட உரிமையை அதிகம் வேண்டுகிறது. திருமணம் செய்தபின் பிரிதல் என்பது சட்டரீதியாகக் கடினமாக இருப்பதால் திருமணம் செய்யாமலே ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழுகின்ற நிலை உள்ளது. ஆனால் இந்தியாவில் பலரோடு உறவு கொள்ளல், என்ற நிகழ்வு வெளிப்படையான நிகழ்வாக இல்லாமல் மறைமுகமாக நடக்கிறது.

பார்பரா பலரோடு உறவு கொள்ளலுக்கு, தான் வளர்ந்த சூழலைக் காரணமாகக் காட்டுகிறாள்; அது உண்மையல்ல அப்படிப்பட்ட வாழ்க்கையை அவள் தேர்ந்து கொண்டிருப்பதே உண்மையான காரணம் என்பது படைப்பாளரின் கீழ்வரும் கூற்றால் வெளிப்படுகிறது.

பச்சை மண்ணான தன்னை யாரோ ஒருவர் கையில் ஒப்படைத்துப் போனதால் கோபம், தன் கருத்தைக் கவர்ந்து தன்னை உதாசீனம் செய்யும் டேவிட்டின் ஆத்திரம், அவனைத் தன்னுடையவனாக்கிக் கொண்ட அலிஸனின் பொறாமை (வ.வ.போ.ப.97) என்ற பல உணர்வுகள், பார்பராவின் கட்டுப்பாடற்ற பாலியல் வாழ்விற்குக் காரணமாகின்றன.

பலரோடு பாலியல் உறவு கொள்ளும் பார்பராவின் அலிஸன், டேவிட் பிரியவும் காரணமாகிறான்.

### திருமணத்திற்குப் பின்

பண்பாட்டு வேறுபாடுகளால் திருமணத்திற்குப் பின் ஏற்படும் விளைவுகளுள் ஒன்றாக ஓரினச்சேர்க்கையை

ராஜேஸ்வரி பாலசுப்பிரமணியம் புதினங்கள் வெளிப்படுத்துகின்றன. இந்தியாவில் ராஜேஸ்வரியின் புதினங்கள் திருமணத்திற்கு அப்பாற்பட்ட பாலியல் உறவுக்கு வெளிப்படையான தடை சமூகத்தில் உள்ளது என்பதை இந்தியாவில் உணர்த்துகின்றன. ஆனால் இங்கிலாந்தில் இதற்குத் தடை இல்லை. அங்கு தன் துணையைத் தானே தேர்ந்து கொள்ளும் சமூக மரபு இருபாலாரும் சந்தித்துப் பழகுவதற்கான சூழ்நிலைகளை ஏற்படுத்தித் தருகின்றது. ஆகவே திருமணத்திற்கு முன்னரே சேர்ந்து வாழுகிற நிலை உள்ளது. இதே போல நிறைவான மண உறவு இல்லாத போதும் மண வாழ்வில் சிக்கல்கள் ஏற்படும் போதும் மாற்று பாலாரோடு பழகும் சூழல் பாலியல் உறவின் மரபு சார்ந்த வரன்முறை தகர்ந்திடக் காரணமாகின்றது.

## ஓரினச்சேர்க்கை

ஒரே பாலாரின் கண், பால் கவர்ச்சியுள்ள, பாலுறவு கொள்கிற என்று ஓரினச்சேர்க்கைக்கு ஆங்கில அகராதி பொருள் தருகிறது. ஆணும் பெண்ணும் இயற்கையாகக் கொள்ளும் பாலுறவை விடுத்து ஆணும் ஆணும் இணைந்தோ, பெண்ணும் பெண்ணும் இணைந்தோ, இயற்கைக்கு மாறாகக் கொள்ளும் பாலுறவு ஓரினச் சேர்க்கை எனப்படும். இந்தியாவில் வெளிப்பட்டுத் தெரியாத ஓரினச்சேர்க்கை இங்கிலாந்தில் சட்டபூர்வமான இசைவு பெற்றுள்ளதால் அச்சூழலில் எழுதப்பட்டு உள்ள ராஜேஸ்வரியின் படைப்புகள் அவ்வொழுக்கத்தைக் கைக்கொண்ட பல பாத்திரங்களைச் சுட்டுகிறது. வசந்தம் வந்து போய்விட்டது என்ற புதினத்தில்,

இங்கிலாந்தில் வாழும் பிரமிளாவின் மகன் தினேஷ், தான் இன்னொரு ஆணுடன் வாழப் போவதாகத் தன் தாயான பிரமிளாவிடம் கூறுகிறான்.

இதே போன்று, அலிஸனும் பார்பராவும் லெஸ்பியன் என்று ... (வ.வ.போ.ப. 186)

எமிலி டேவிட்டிடம் கூறுகிறாள். அலிஸன் டேவிட்டை விட்டுப் பிரிந்து வருவதற்கான காரணங்களில் இதுவும் ஒன்று எனலாம்.

ராஜேஸ்வரியின் நாளைய மனிதர்கள் என்ற புதினத்தில் மெலனியும் ரவியும் நெருக்கமான நண்பர்களாய் உள்ளனர். அது குறித்து ரவியின் மாமன் மகளான சித்திரா அவனிடம் மெலனியைத் திருமணம் செய்வாயா என்று கேட்கிறாள். ஆனால் அவனோ நாங்கள் நண்பர்கள் மட்டுமே என்கிறான்.

சித்திரா நீ நினைக்கும் உறவு எங்களுக்குள் இல்லை. அவள் லெஸ்பியன் (நா.ம.ப.160)

என்றும் கூறுகிறான். இது கதையின் இறுதியில் வெளிப்படும் செய்தி, கதை முழுவதும், கடமையுணர்வும், உடன் பணியாற்றுவோரைப் பண்பாட்டோடு நடத்தும் நல்லியல்பும், நட்பு உள்ளமும் கொண்டவளாக மெலனி காட்டப்பட்டு உள்ளாள். அவள், லெஸ்பியன் என்று காட்டாமலே கதையைப் படைப்பாளர் முடித்திருக்கலாம். அப்படி அமையவில்லை.

## முடிவுகள்

1. திருமணச் சடங்கின்றி இங்கிலாந்தின் கட்டற்ற பாலியல் சூழல் திருமணத்திற்கு முன்பே ஆணும், பெண்ணும் இணைந்து வாழ்வதற்கு வாய்ப்புத் தருகிறது.

2. திருமணச் சடங்கின்றி சேர்ந்து வாழ, பலர் முடிவெடுக்கும் சூழல், பாதுகாப்பற்ற உணர்வை ஏற்படுத்துகிறது. மகப்பேற்றை மகிழ்ச்சியாய் வரவேற்கத் தடையாகிறது.

3. இந்திய இலங்கைத் தமிழ்ச் சமூகத்தில் அதிகமாய் அறியப்படாத ஓரினச் சேர்க்கை ராஜேஸ்வரியின் புதினங்களில் பண்பாட்டு மாற்றங்களுள் ஒன்றாக வெளிப்படுகிறது.

## மூல நூல்கள்:

1. வசந்தம் வந்து போய் விட்டது.
2. நாளைய மனிதர்கள் - ராஜேஸ்வரி பாலசுப்பிரமணியம்

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ப | - | பக்கம் |
| நா.ம | - | நாளைய மனிதர்கள் |
| வ.வ.போ | - | வசந்தம் வந்து போய் விட்டது |

# தமிழ் இலக்கியத்தில் நவீனத்துவ- பின்நவீனத்துப் போக்குகள்.

முனைவர். *பீ. டாக்டர் நசீம்தீன்,* பேராசிரியர் -
கேரளப் பல்கலைக்கழகம், காரியவட்டம் - 695 581, திருவனந்தபுரம், கேரளா.

ஆங்கிலேயர்களின் வருகைக்குப் பின் இந்திய இலக்கிய மரபிலும், சிந்தனை மரபிலும் பலவித மாற்றங்கள் தோன்றலாயின. ஏடுகளில் இலக்கியங்களை எழுதி வந்த நிலையிலிருந்து அச்சு இயந்திரங்களால் காகிதங்களில் பதிக்கத் தொடங்கிய போது இலக்கிய வடிவங்களிலும் புதுமையை ஏற்கத் தயாராகிறது நமது சமூகம். மேல்நாட்டாரின் மொழியைக் கற்று அதில் தோன்றிய இலக்கிய வகைகளை அறிமுகப்படுத்திக் கொண்ட படைப்பாளிகள் அவைபோல, இந்தியச் சூழலை மையமாக்கி இலக்கியங்களைப் படைக்க முற்பட்டனர். இம்மயற்சிகளை மூன்று காலகட்டமாகப் பாகுபடுத்தலாம்.

1. முதற்கட்டம் - பண்பாட்டுக்கு முக்கியத்துவம் தரும் முயற்சி.

(1876 - 1900) மலையாள மொழிகளில் (1882 - 1920)

2. இரண்டாம் கட்டம் - நவீனயுகம், சமதாய விமரிசனத்துக்கு முக்கியத்துவம் தரும் முயற்சி..

(1900 - 1940) மலையாள மொழிகளில் (1920 - 1940)

3. மூன்றாம்கட்டம் - நவீனத்துவகாலம் - இலக்கிய உணர்வுகள் பேசப்பட்டகாலம்.

(1940- முதல் தொடக்கம்) மலையாள மொழிகளில் (1950 முதல்)

முதல் கட்ட நாவல்களில் முதன்மையாகத் தோன்றியது. வேதநாயகம் பிள்ளையின் "பிரதாப முதலியார் சரித்திரம்" சமுதாய சீர்திருத்தம், நீதி போதனை ஆகியவற்றை வலியுறுத்துவதாக அமைந்தது. இலக்கியச்சுவையும், நகைச்சுவையும் ஒருங்கே அமைந்தது அந்நாவல். இதைத் தொடர்ந்து தோன்றிய ராஜம் ஐயரின் "கமலாம்பாள் சரித்திரம், மாதவையாவின் "பத்மாவதி சரித்திரம்" ஆகிய நூல்களில் பெண் மானம், பெண் கல்வி, பெண்ணுரிமை, சாதிவேற்றுமை, இளமைத்திருமணம்,விதவைத்திருமணம் ஆகியவை கதைப்பொருளாயின. மலையாள மொழியில் தோன்றிய முதல் நாவலான "இந்துலேகா" (1889) சந்துமேனனால் எழுதப்பட்டது. பீக்கன்ஸ்ஃபீல்டு பிரபுவின் "ஹென்ரிட்டா டெம்பிள்" என்ற நாவலைப் படித்துத்தான் இந்நாவல் இந்நாவல் எழுதத் தூண்டுகோலாயிற்று என "சந்துமேனன்" குறிப்பிடுகின்றார். அக்காலத்திலிருந்த சமூகசீர்கேடுகளை எடுத்துக்காட்டுவனவாக இவ்விரு மொழி நாவல்களும் அமைந்தன. மலையாளத்தில் 1887ல் அப்புநெடுங்கா இயற்றிய "குந்தலத" முதல் நாவல் எனப்பட்டாலும் வால்டர் ஸ்காட்டின் கீதைப்பின்னலை ஒட்டியமைந்தது என்பதைத் தவிர சமூக நோக்கம் உள்ள படைப்பெனக் கருதத்தக்கதல்ல. தமிழில் இரண்டாம் கட்டத்தில் தொடங்கும் கல்கியின் வரலாற்று நாவல்களும் இத்தன்மையுடையனவாகிருந்தன. உலகப்போருக்குப் பின் மனித உரிமைகள் முதலானவை சிந்தனைக்குள்ளாக்கப்பட்டன. சமூகச் சீரழிவுகள் களையப்பெற்று நவீன உலகம் தோன்ற வேண்டுமெனும் உணர்வு பெருகியது. அடிமைத்தளையிலிருந்து விடுபட நோக்கம் முன்வைக்கப்பட்டது.

பாரதி, கனவுநிலைக்கற்பனை, புறமனக்கற்பனை ஆகியவற்றின் தளத்தில் தன் கவிதைகளை உலவவிட்டான்.. "இளைப்பாற்றல்", மெருகூட்டிக் காணும் ஆற்றல், வழித்துணையாகும் ஆற்றல் ஆகியவற்றைப் பாரதியும், தாகூரும் முன்னிலைப்படுத்தினர்."தனியொருவனுக்குணவில்லை யெனில் இச்சகத்தினை அழித்திடுவோம்" எனப் பாரதியும், "ஓடப்பராயிருப்பர் உதையப்பராகிவிட்டால் ஒப்பப்பர் ஆயிடுவாரெனப்" பாரதிதாசனும் பொதுவுடமைக் கருத்துக்களைப் பாடுபொருளாக்கினர். இவர்கள் காலத்திலேயே தலித்திய, பெண்ணியக் கொள்கைகளுக்குத் தொடக்கம் குறிக்கப்பட்டது. நவீனத்துவ இலக்கியங்களில் யதார்த்தவியல் அமைப்புகள் உள்ளடக்கப்படடன. மனிதனை மையப்படுத்திய பொதுவுடமைக் கொள்கை, சோசலிசம்,

பெரியாரியம் ஆகியன மனித மதிப்புகளை மீட்கும் முயற்சிகளாக இலக்கியங்களில் இடம்பெற்றன.

இரண்டாம் காலகட்டத்தில் (நவீன காலம்) மனிதனின் வாழ்வியல் பல பரிணாமங்களுடையதாக இருந்தது. நல்லதும் கெட்டதும் நிறைந்த சாதாரண மனிதன் எழ்மை, தீண்டாமை எனும் சோதனைக்குள்ளாக்கப்படும் போது எதிர்வினை காட்டுகிறான். இதனால் உலகையே கேள்விக்குட்படுத்தும் மனப்பான்மையில் வளர்கிறான். இதுபோன்ற வாழ்வியல் முறை இலக்கியங்களில் பிரதிபலிக்கப்பட்டன. புதுமைப்பித்தன், மௌனி, கு.ப. ராசகோபாலன், பி.எஸ். ராமையா போன்றோரின் மணிக்கொடிக்காலச் சிறுகதை முயற்சிகள் இக்காலகட்டத்தை எடுத்துக்காட்டுகின்றன. கே.எஸ். வேங்கட்ராமனின் நாவல்கள் சுதந்திரத்தின் பயன் எளிய மக்களின் வாழ்வில் ஒளியூட்டுவதாக இருக்க வேண்டும் எனும் கருத்தை வலியுறுத்தின. மலையாள மொழியில் கேசவ தேவ், தகழி, பஷீர், எஸ்.கே. பொற்கோடு போன்றோரின நாவல்களில் நவீனயுகக் கருத்துக்கள் கதைப் பொருளாயின. கேசவ தேவ் "அயல்காரி", தகழியின் "செம்மீன்", "ரெண்டடங்கழி" வைக்கம் முகமது பஷீரின் "பால்யகால சகி" போன்ற நாவல்களில் பெண்மையின் பன்முகப் பாவங்களும், அவர்களது துன்பங்களும், ஆசைகளும், ஆசைபங்கங்களும் எடுத்துக்காட்டப்பட்டன.

1950களில் உலகச் சமுதாயங்களைப் பற்றியும், உலகியல் பற்றியும், அவ்வப்போது அறிவிக்கின்ற மக்கள் தொடர்புச் சாதனங்களும், இதழ்களும் அறிமுகப்படுத்தப்பட்டன. இந்திய சமுதாயத்தில் இதனால் பல மாற்றங்கள் நிகழ்ந்தன. மனித சிந்தனையும் விரிவடையத் தொடங்கியது. பிற நாட்டுக் கருத்தாக்கங்கள் நம்நாட்டுச் சமூக மதிப்பீடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கப்பட்டன. விளிம்பு மனிதர்களாயிருந்த பெண்களும், தலித்துகளும் புத்துருக் கொண்டனர். இலக்கிய வடிவங்களும், பாடுபொருட்களும் இதுபோன்று சமூக மக்களால் ஒதுக்கப்பட்டோரை முன்னிறுத்தின. மையநிலை கட்டுடைக்கப்பட்டது. பின் நவீனத்துவப்போக்கு தலைதூக்கியது. இருநூறு ஆண்டுகால வரலாற்றின் சமூகப் பதிவுகளை உள்ளடக்கிய படைப்புகளாகத் தமிழில் கி. ராஜநாராயணின் "கோபால்ல கிராமத்து மக்கள்" நாவலும், மலையாளத்தில் தகழியின், "கயறு" நாவலும் புதிய உத்திமுறையில் கூறப்பட்ட பதிவுகளாகக் கொள்ளலாம். புதிய வாசிப்புக்கு உள்ளாக்கப்பட்ட இலக்கியப் படைப்புக்கள் மரபுகளைக் கட்டுடைத்துக் கொண்டு வளரத் தொடங்கின. "இவ்வாறு சமூக மாறுதலைச் சித்தரிக்கும் யதார்த்தவாதம் முதலானவற்றை உள்வாங்கிக் கொண்டதாக நவீனத்துவக் கோட்பாடு பிரகடனம் ஆகிறது. இதனுடைய அடுத்த கட்டப் பரிணாமமே பின்நவீனத்துவம் என்று பிரித்தறியப்படுகின்றது என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இதற்குத் தொடக்ககால இலக்கிய இதழ்களும் தம் பங்களிப்பைச் செய்துள்ளன. "தனியொருவனுக்குணவில்லை யெனில் இச்சகத்தினை அழித்திடுவோம்" எனப் பாரதியும், "ஓடப்பராயிருப்பர் உதையப்பராகிவிட்டால் ஒப்பப்பர் ஆயிடுவாரெனப்" பாரதிதாசனும் பொதுவுடமைக் கருத்துக்களைப் பாடு பொருளாக்கினர். இவர்கள் காலத்திலேயே தலித்திய, பெண்ணியக் கொள்கைகளுக்குத் தொடக்கம் குறிக்கப்பட்டது. நவீனத்துவ இலக்கியங்களில் யதார்த்தவியல் அமைப்புகள் உள்ளடக்கப்படடன. மனிதனை மையப்படுத்திய பொதுவுடமைக் கொள்கை, சோசலிசம், பெரியாரியம் ஆகியன மனித மதிப்புகளை மீட்கும் முயற்சிகளாக இலக்கியங்களில் இடம்பெற்றன.

இந்த இலக்கியப் போக்குகள் தமிழ், மலையாள மொழிகளில் ஒரே நேர்கோட்டுப் பாங்குடையனவாக அமைகின்றன. இதனைச் சில எடுத்துக்காட்டுகளால் விளக்கிக் கொள்ளலாம். பெண்ணியச் சிந்தனைகளைப் பேசும் ராஜம் கிருஷ்ணனின் "கூட்டுக்குஞ்சுகள்" நாவலும், மலையாள எழுத்தர் சாராதோமஸின் "நாமடிப்புடவ" நாவலும் கொண்டு இச்சிந்தனை மரபை புரிந்து கொள்ளலாம். "கூட்டுக் குஞ்சுகள்" நாவலில் மாமியார், விஜியிடம் "இந்தப்பாரு நீ வீணா இப்ப இதுக்கெல்லாம் பேச்சு வளர்த்திட்டுப் போவாத. பெரியவங்க சொன்னா சரின்னு கேக்கனும். சீலய உடுத்திட்டு உங்க வீட்ல போட்ட நெக்லசையும், கைவளையல்களையும், தோட்டையும் போட்டுட்டு லட்சணமா வா. நெத்தியில காசு மாதிரி ஒரு செந்தூரப் பொட்ட எடுப்பா வச்சிட்டு வா. அவன் ஆம்பிள நீ கொஞ்சம் அச்சப்பட்டு ஒடுங்கியிருந்தா என்ன கொஞ்சி போச்சி?" என்கிறாள். மருமகள் விஜி," அச்சப்பட்டு ஒடுங்கி அடிபடறதுக்குத்தான் கல்யாணம், இதுதான் இல்லறம்னு இத்தினி நாள் தெரியாம

இருந்திட்டேன். நாளக்கே உங்க மகளக் கொடுப்பீங்க. இப்படி அவள ஒரு புழுவப் போல மருமகன் நடத்தினாலும் இப்படித்தான் விளக்கம் கொடுப்பீங்களா?" என்கிறாள். பின்னர் மாமியார் தொல்லை பொறுக்காமல் வீட்டை விட்டு வெளியேறுகிறாள்.

சாராதோமஸின் "நார்மடிப்புடவ" நாவலில் விதவை கனகாவிற்கு, மாமியார் சில கட்டுப்பாடுகளை விதிக்கிறார் "விதவை அவள். இனிமேல் எப்படியெல்லாம் இருக்கனும்னு ஆச்சார முறைகள் இருக்கு. படிப்பு, உத்தியோகம் என்றெல்லாம் சொல்லி அவள் மனசை கலக்காது இருந்தால் போதும். கனகா, மாமியாரின் கட்டுப்பாட்டையும் மீறிப் படித்துப் பட்டம் பெற்று வாழ வழி காணுகின்றாள். இதுபோல் ஜெயகாந்தனின் பெண் பாத்திரப் படைப்புகளையும், எம்.டி. வாசுதேவன் நாயரின் பெண் பாத்திரப் படைப்புகளையும் ஒப்பிட்டு ஒப்புமை காண முடியும். நாவல் இலக்கிய வடிவத்தில் சோதனை முயற்சியாக சுந்தர ராமசாமியின் "ஜே.ஜே. சில குறிப்புகள்" அமைகிறது. சாதாரண மக்களை மையமாகக் கொண்ட நாடகங்கள் மேடையேறி வரவேற்பைப் பெற்றன. சில சோதனை நாடகங்களை சே. ராமானுஜம், மு. ராமசுவாமி, கே.ஏ. குணசேகரன் ஆகியோர் அரங்கேற்றி வருகின்றனர். இவ்வாறு உலக மக்களின் வாழ்வியல் போக்கு மாறுகின்ற போது அதனைப் பிரதிபலிக்கின்ற இலக்கியப் போக்கும் மாற்றம் அடைந்து வருவதனை வரலாறு காட்டுகிறது. "உலக மயமாக்கல்" கருத்துக்கள் வளர்ந்து வல்லரசுகளின் அடிமைகளாக, மறைமுகக் காலனிகளாக வளரும் நாடுகள் மாறிவரும் இன்றையச் சூழலில் இலக்கியம் இன்னும் பல பரிணாமங்களை எடுக்கலாம். உலக மையமாக்கலில் தனிமனிதச் சிந்தனை, குழுச்சிந்தனை ஆகியன அழிக்கப்பட்டு அடிமை மனநிலை பரப்பப்படும் அபாயமும் இருக்கிறது. இதற்குப் புதிய இலக்கிய முயற்சிகள் துணை போகாமல் இருக்குமா? பொறுத்திருந்து பார்க்கலாம்.

### பயன்பட்ட நூல்கள்


1. George Luykes - The ideology of Modernism - 20th century Literary criticism - Edi. David Lodge longman, London - 1972.

2. ஞானி - தமிழில் நவீனத்துவம், பின் நவீனத்துவம், காவ்யா, பெங்களூர் - 1997.

3. A. sebastin Dravyam pillai - Post Modernism -an intruduction' - Theresa Publications, Triuchy - 1997.

4. Abhai Maurya (ed) - India and World Literature - Indian council for cultural relations- New Delhi, 1990.

5. Somalay - European impact on modern Tamil writting and literature, DLA, Thiruvananthapuram, 1972.

6. A.Poddar-Indian Literature, IIAS, Shimla, 1972.

# பின் - நவீனத்துவ கவிதை

*முனைவர். க. நாகநந்தினி* தமிழ் விரிவுரையாளர்,
எம். வி. எம். அரசு மகளிர் கலைக் கல்லூரி. திண்டுக்கல்.

தமிழ்க் கவிதை மரபு மிக நீண்டது. சங்கக் காலப் பாடல்கள் அனைத்தையும் தொடங்கிச் சிற்றிலக்கிய வரை வடிவமாற்றம் அனைத்தையும் உள்ளடக்கியது கவிதை மரபு. இம்மரபில் சொல் புதிது, சுவை புதிது, சோதி மிக்க நவ கவிதை படைக்கத் துடித்த பாரதியார்தான் புதிய வசன கவிதையாய்ப் படைத்தார்.

நவகவிதை, யாப்பற்ற கவிதை, விடுபா, கட்டற்றயாப்புக் கவிதை, வசன கவிதை என்று பல்வேறு பெயர்களுடன் எழுதப்பட்ட கவிதை வடிவம் மரபான பார்வையாளர்களால் கடுமையாக விமர்சிக்கப்பட்டது. "மணிக்கொடி", "எழுத்து", "நடை" போன்ற பத்திரிகைகள் தமிழில் கவிதை வடிவம் பெறுவதற்கான சூழலை விமர்சனங்கள் எழுந்தபோதும் உருவாக்கித்தந்தன.

வசனம் நடந்தால் உரைநடை நடனமாடினால் கவிதை என்றும், அழகிய சொற்கள் அழகிய வரிசையில் நிற்றல் என்றும் உணர்ச்சிகளின் பிரவாகம் என்று கவிதை பல்வேறு நிலைகளில் விளக்கப்பட்டது என்றாலும் கவிதை எழுதப்பட்டபோது அதற்கான காரணம் பின்வருமாறு கூறப்பட்டது.

"வசனமும் கவிதையும் வெவ்வேறு வகையைச் சோர்ந்தவைதான். வசனம் நமக்குச் செய்தியைத் தெரிவிக்கிறது. தம்முடைய அறிவுக்கு உணவாகப் புதிய விசயங்களைக் கொண்டு வந்து சேர்க்கிறது. எனவே தபாலைப்போல் இயங்குகிறது. கவிதை நம்முடைய அறிவுடன் தொடர்பு கொள்ள முயல்வதில்லை. நம்முடைய உணர்வுடன் உறவாட முயல்கிறது. தனக்குள் எரியும் சுடர்கொண்டு மற்றொரு மனத்தையும் சுடர் கொள்ளச் செய்கிறது. வசனம் சோகாயுத உண்மையை அடிப்படையாகக் கொண்டது. கவிதை மனநெகிழ்ச்சியை, மன அசைவை அடிப்படையாகக்கொண்டது. என்ற ந. பிச்சமூர்த்தி அவர்களின் கருத்து இங்கு குறிப்பிடத்தக்கது. மனதுடன் தொடர்புடைய அகவய அனுபவமாக வெளிப்பட்ட கவிதை மரபில் ந. பிச்சமூர்த்தி, சி. மணி, எஸ். வைத்தீஸ்வரன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

உலப்போரின் விளைவாக ஏற்பட்ட அவநம்பிக்கை, மனமுறிவு, வாழ்க்கையில் ஏற்பட்ட ஏமாற்றம் புறநிகழ்வால் தன் வாழ்க்கை நிர்ணயிக்கப்பட்ட ஆற்றாமை, இதுவரை கட்டிக்காத்த மதிப்பீடுகளின் சரிவு, மேற்கத்திய இலக்கியம் ஏற்படுத்திய பாதிப்பு தமிழ்க்கவிஞர்களையும் எழுதத் தூண்டியது.

"வாழ்வின் வினையேதும்
அறியாத இருள் ஊடே
உலகத்தின் சாலையில்
ஊடாகும் சாலையில்
ஊடாகும் நிழல்கள்" - ந. பிச்சமூர்த்தி
"திருமனிதா
தெருவில் சாவோலம்
மிக நெருங்கி வருகிறது

ஓடு இருட்டுக்கு காட்டுக்கு

எங்காகிலும் ஓடு
உலகத்தைவிட்டு - எஸ். வைத்தீஸ்வரன்
பின்னாலும் போகவில்லை

முன்னாலும் போகவில்லை
நடுக்கிணற்றில் நிகழ்காலம் - ச. மணி

வாழ்க்கையின் மீது கொண்ட இத்தகைய நம்பிக்கையின்மை. எங்கிருந்து பெறப்பட்டது? என்ற கேள்வி எழுகின்றது. பத்தொன்பதாம் நூற்றாண்டு பிரெஞ்சுக் கவிஞர் வெல்லேன் கூறுகிறார்

"நம்பிக்கை
அது
இருண்டவானத்திற்குள்
ஓடி ஒளிந்துகொண்டது"

உலகப் போரின் பிளைவாக ஏற்பட்ட நம்பிக்கை வறட்சியே இதற்குப் பதிலாகும்.

அதன்பிறகு வானம்பாடி இயக்கம் முதல் கவிதை வெகுஜன மக்களுக்கும் புரியும் வடிவமானது. வானம்பாடி பாரதியாரை முன்னோடியாகக் கொண்டு கவிதை எழுதுவதாக அறைகூவியது.

"இனியொரு விதி செய்வோம் அதை எந்நாளும் காப்போம்" எனத் தன் சமகால விடுதலை விரும்பிகளுக்கு வருங்காலப் பொதுமை விரும்பிகளுக்கும் வெடிப்புறப் பேசியும், நயம்படச்சொல்லியும், அறைகூவல் விடுத்த தமிழ்ச்சாதியின் நிர்மாணச் சிற்பியும், ஆசியாவின் ஒப்பற்ற மனிதாபிமானிகளுள் ஒருவனும் இருபதாம் நூற்றாண்டின் உலகமகா கவிஞர்களுள் ஒருவருமான பாரதிக்கு, அவன் விட்ட பயணத்தைத் தொடர வந்த பறவைகள்" என்று வானம்பாடிக் கவிதை இயக்கம் தொடங்கியது.

நம்
கரங்களின் உழைப்பைக்
காலம் அலட்சியப் படுத்தும் போது
நிறங்களின் சிவப்பையே
நாம்
நிச்சியக்கமுடியும்"

என்ற சிலப்புச்சிந்தனை, பொதுவுடமை கொள்ளை முழக்கமாக வெளிப்பட்டது கவிதை

அதன்பிறகு படிமக் கவிதை, உருவக் கவிதை, எள்ளல் கவிதை என்று கவிஞர்களின் தனித்தன்மை வெளிப்பாடாக கவிதை உருவெடுத்தது.

எண்பதுகளில் நடுவில் கவிதை என்பது பாரதி எழுத்து ரீதியான ஒரு பொருள் என்று சொல்கிற நிலையில் புரிந்து கொள்ளப்பட்டது. இந்நிலையில் கவிஞன் என்ற மனிதன் ஆளுமை கொண்டவனாக தரிசனம் மற்றும் உள்ளொளி கொண்டவனாக சித்தரிக்கப்படவில்லை. படைப்பாளியை விட படைப்பே முக்கியத்துவம் பெற்றது. எனவே, படைப்பு மொழி பற்றிய சிந்தனையும் மாறியது. தினசரி மொழியின் பெரும்பாலான கூறுகள் பத்திரிக்கைச் செய்தி, விளம்பர மொழி, சின்னத்திரை, பெரியதிரை, நாடகம், நகைச்சுவைமொழி, வெகுஜன வார மாத இதழ்கள், பாக்கெட் நாவல்கள் என்ற பல்வேறு தளங்களில் மொழிதன் கூர்மை மழுங்கி நிலையில், இந்த மொழி எனக்குத் தேவையில்லை என்றனர் சில படைப்பாளிகள். தன் சுயம் இழந்த மொழித்தளத்தை மீறிய மொழித்தளத்தில் கவிதை எழுத நினைத்த இவர்கள் சாதாரண வாசகரின் பங்கு பற்றிய சிந்தனை மறந்து போய் கவிதையை சிக்கலான மொழியில் எழுதினர். அமைப்பியல் ஆய்வாளர் கூறுவதன்படி கவிதைமொழி சொல்லாடல்களாக உருவாகிறது. கவிதை மொழியைப்புதைநிலையில் புரிந்துகொள்ளக்கூடிய வடிவமாக எதிர்கவிதை, காண் கவிதை தொடர்பற்ற வார்த்தை வடிவம் சொல்லாக்க கவிதை வடிவம் போன்ற மாற்றங்கள் கவிதை வடிவத்தில் ஏற்பட்டன.

இதற்க்கடுத்த காலகட்டத்தில்தான் பின்நவீனத்துவ மரபு எழுகின்றது.

கவிதையில் மையமிழந்த தன்மையும் (ஆசிரியன் இறந்துவிட்டான்) பல குரல்களும், வாசிப்பு அனுபவத்தை பல்வேறு அனுபவங்களுக்கு இட்டுச்செல்கின்றன. கவிதை என்பது ஒரு கட்டமைப்பு என்றே பார்க்கப்படும். ஒரே கவிதையில் ஒன்றுக்கொண்று முரணான உணர்வுகளும் தர்க்கங்களும் தூண்டப்படலாம். அவை இயைப்பிக்கபட வேண்டிய அவசியமிராது.

கவிதை என்பது பல்வேறு படிமங்கள் அடுத்தடுத்து வைக்கப்பட்டுள்ள அமைப்பு அவ்வளவுதான் என்றுநவீனகவிதை இயல்பு குறித்த விவாதங்கள் முன்வைக்கப்பட்டன.

கவிதை வேறெதையும் குறிக்கவில்லை
தன்னையே குறித்துக்கொள்கிறது. அர்த்தம்
சொற்களால் உருவாகவில்லை. சொற்களின்
இடைவெளியில் - மௌனங்களில் தோன்றியது
என்று விளக்கம் தரப்பட்டது.

“புதைமணல் கனவை போலத் தான் துழாவுகிறது
நிஷ்சிந்தையில் மலரும் ராட்சதக் காளான்
மௌனநிறம் போல
என் மூளையின் பின்னாலே நினைவூட்டாது
ஏதுமின்றி
என் மேலதீத நானிடமே
துமில்லாமல்...” -ஞாபகச்சிற்பம்

என்ற கவிதை தொகுப்பிலுள்ள கவிதைகள் எழுதிய பிரம்மராஜன் கதைத்தளத்தை திறந்த வெளிக்கு எடுத்துச் செல்கிறார். அதாவது கவிதைகளின் அர்த்தங்கள் குறுகாமல் விரிவடைந்து இவைபேசும் பொருட்கள், நிலைகள், மௌனங்கள் ஆகியவை சிதையாமல் அமைவதற்கு இவற்றின் திறந்தவெளி அமைப்பே காரணமாகும். இப்படிப்பட்ட கவிதைகளைவாசித்துப் புரிந்து கொள்ள பிறதுறைஅறிவும், பயிற்சியனுபவமும் தேவையாகவுள்ளது. இத்தகைய முயற்சிகளை புரியாத கவிதையென்று ஒதுக்க முடியாது.

# தமிழ் நாவல்களில் பின் நவீனத்துவம்

*மு. புவனேஸ்வரி,* விரிவுரையாளர்,
தமிழ்த்துறை - கொங்கு கலை அறிவியல் கல்லூரி, ஈரோடு.

மேலை இலக்கியக் கொள்கைகளைப் பின்பற்றி படைக்கப்படும் இலக்கியங்களில் நாவல் இலக்கியம் முக்கிய இடம் பெறுகின்றது. யதார்த்தவியல் (ரியலிசம்), மிகையதார்த்தம் (சர்ரியலிசம்) அமைப்பியல் (ஸ்ட்ரக்சுரலிசம்) எனப் பல்வேறு இசங்களும், கோட்பாடுகளும் வளர்நது வரும் வேகத்தில் நவீனத்துவத்திற்கு எதிராகப் பின்நவீனத்துவம் (போஸ்ட் மாடர்னிசம்) என்ற கோட்பாடும் மிக அதிகமாகப் பேசப்படுகின்றது. பின் நவீனத்துவ அடிப்படையில் எழுதப்பட்ட நாவல்களில் சாரு நிவேதிதாவின் "0" டிகிரி, எம்.ஜி. சுரேஷின் "அட்லாண்டிஸ் மனிதன் மற்றும் சிலருடன்" ஆகிய இரு நாவல்கள் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன. இவ்விரு நாவல்களும் தொண்ணூறுகளில் வெளியான நூல்கள்.

## நவீனத்துவம்

இலக்கியம் என்பது வாழ்வின் அர்த்தத்தையும், அனுபவங்களின் சாரத்தையும், தொகுத்துத்தரும் ஒரு ஆய்வு நூல். மனித வரலாற்றின் ஆவணமாகத் திகழ்வது. வாழ்க்கைப் போக்குகளில் மனிதன் புனையும் வடிவங்களுக்கேற்ப இலக்கியம் தன்னையும் நவீனப்படுத்திக் கொள்கின்றது. "வாழ்வின் ஓட்டத்துடன் ஒழுகிச் செல்லும் எழுத்துத்தான் தன்னைத்தானே புதுப்பித்துச் செல்லும் எழுத்துத்தான் நவீன இலக்கியம் எனப்படும்". (இரா. நஞ்சப்பன், நவீனத்தமிழ் இலக்கியம் சில பார்வைகள், ப. 32).

யதார்த்தம் என்பதும், நவீனத்துவம் என்பதும் வேறு வேறு என்றும், நவீனத்துவத்தின் ஒரு போக்கு யதார்த்தவாதம் என்றும் கூறுகின்றனர். நவீனம் என்பது நம் காலத்திற்கு உரியது. வாழ்க்கை நவீனப்பட்டிருப்பது போல கதையின் உருவமும், உள்ளடக்கமும் நவீனப்பட்டிருக்கின்றன. நவீனத்திற்கு எதிரான போக்கில் எல்லாவற்றையும் கேள்விக்கும், சிதைவிக்கும் உள்ளாக்கிப் பார்க்கும் பார்வையில் தோன்றியது பின்நவீனத்துவம் எனலாம்.

## பின்நவீனத்துவக் கோட்பாடு

நவீனத்துவம் என்ற போக்குக்குப்பின் எண்பதுகள் முதல் தமிழக்கு வந்த இன்னொரு இயக்கம் பின்நவீனத்துவம், ஒருவனுக்கு வாழ்க்கையாக இருப்பது இன்னொருவனுக்கு வாழ்க்கையாக இருக்க வேண்டியதில்லை. எனக்கானதொரு சுயம் இல்லை. எல்லாமும் கற்பிக்கப்பட்டவை கட்டமைக்கப்பட்டவை. நிரந்தரம் என்பதற்கு அர்த்தம் இல்லை. இப்படிப் பார்ப்பது பின்நவீனத்துவம். இது நவீனத்துவம் என்பதை மறுப்பது. யதார்த்தம் என்பது கட்டமைப்புதான் என்று விளக்குவது பின்நவீனத்துவம். வாழ்க்கை என்பதனுள் எத்தனையோ கூறுகள். வாழ்க்கை என முழுமை என ஒன்று இல்லை என்று கூறுவது பின்நவீனத்துவம்.

"கவிதை இருக்கிறது, கவிஞன் இறந்து விட்டான். கவிதை என்பது உற்பத்தி. படைப்பு அன்று என்கிறது பின் நவீனத்துவம். சைவம் தொடங்கி மார்க்சியம் உள்பட எந்தத் தத்துவமும் முழுமையானது அன்று என்கிறது பின்நவீனத்துவம்" (ஞானி, மறுவாசிப்பில் தமிழ் இலக்கியம், ப. 185)மொழியின் உள்ளியக்கத்திலிருந்து வெளிப்பட்ட இந்தப் போக்கு குறிப்பான், குறிப்பீடு, குறி என்று புதிய சில கலைச் சொற்களைத் தமிழுக்குத் தந்ததோடன்றி வாழ்க்கை, வரலாறு, மெய்யியல் முதலிய பல்வகை கருத்தோட்டங்களையும் கட்டுடைத்தல் என்ற முறையில் தீவிரமான ஆய்வுக்குட்படுத்தியது."பின் நவீனத்துவம் என்பது கலையின் செல்நெறிகள் பற்றியது. நவீனத்துவ கலைக்கு எதிரான நிலைப்பாடுகளைக் கொண்டது.

பின்நவீனத்துவம் என்பது ஒரு சிந்தனைச் செல் நெறியாகும். அந்தச் சிந்தனைச் செல்நெறி மேற்குலகின் அறிவொளிக்காலம் ( Age of Enlightement ) என்று சொல்லப்படுகிறது என்று தம் கட்டுரையில் (1986) ஜூன் : ஃபிரான்சுவாலியாதோ குறிப்பிடுகின்றார்" (கார்த்திகேசு சிவத்தம்பி, நவீனத்துவம் தமிழ் - பின்

நவீனத்துவம். ப. 168)"1980 களுக்குப் பின்பு குறிப்பாக இன்று பின் நவீனத்துவம் எக்பது வெறும் கலை வெளிப்பாட்டு உத்தி என்கிற எல்லையைத் தாண்டி அறிதல் ( Congnitive ), அறிவியல் ( Scientific), அரசியல் ( Political ), அறவியல் ( Moral ), என்று சகல புலங்களுக்குள்ளும் அத்துமீறி நுழைந்துவிட்டது". என்கின்றனர் திறனாய்வாளர்கள். (அ. மார்க்ஸ், பின்நவீனத்துவம் இலக்கியம் அரசியல், ப. 45)

## ஆய்வு நாவல்களில் பின் நவீனத்துவக் கூறுகள்

தமிழில் கதை கூறும் முறையில் தொடர்ந்து மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. கதையே கூடத் தவிர்க்கப்படுதலும் இப்பொழுது நடைபெறுகின்றது. இன்று எல்லாப் பரிமாணங்களும், எல்லாக் கோணங்களும் ஒன்றோடு ஒன்று மோதி ஒன்று மற்றதை உடைத்து எந்த நொடியில் எந்தக் கோணம் என்று தெரியாத வகையில் நம்மை நொறுக்கிக் கொண்டிருக்கின்றன. எல்லாவற்றையும் தகர்த்தும், உடைத்தும் பார்க்கும் பின் நவீனத்துவம் போக்கு தொண்ணூறுகளில் அதிக அளவில் பேசப்படுகின்றது.

## கியூபிச நாவல்

எம். ஜி. சுரேஷின் "அட்லாண்டிஸ் மனிதன் மற்றும் சிலருடன் (1999)" என்ற நாவல் பன்முகத் தன்மை கொண்ட கியூபிச நாவல். ஒரு மனிதனுக்கு ஒரு முகமே உண்டு என்பது உண்மையில்லை. அவனுக்குள் அவனே மறைக்கின்ற முகங்களும் உண்டு. ஒரு மனிதனைப்பற்றி சொல்லப்படுவது ஒரு கதை என்றாலும் அந்தக் கதைக்கு மாறான கதைகளும் அவனுள் இருக்க முடியும். ஒன்றை மறுக்கின்ற இன்னொரு கதையையும் ஒரு மனிதனைக் கொண்டே சொல்ல முடியும். சாத்தியப்பாடுக்ளை வெளிப்படுத்தல் என்ற முறையில் இந்த நாவலில் 12 இரட்டைக் கதைகள் இடம் பெறுகின்றன.

மனைவி விமலாவுடன் வாழ்வதாகக் கூறி ஆப்ரிக்கா சென்று, அங்கிருந்து நவோமியுடன் திரும்பி வரும் வெங்கடபதிராஜூவின் கதை, சினிமா தயாரிக்கும் ஆசையில் மனைவியை பிறரிடம் விட்டுக்கொடுக்கும் சந்திரசூடன்கதை, பாஸ்கரன் கிரடிட் கார்டு மூலம் கடனாளியாதல். பத்திரிக்கையாளன் ரகுநாத் தாயால் மதிக்கப்படாமை, நேர்மையான அதிகாரி அஜித் சந்திக்கும் இடர்பாடுகள், ஆடிட்டர் கமலேசனின் நடவடிக்கை, எக்ஸிகியூட்டிவ் குலோத்துங்கன் பற்றிய கதை என இப்படி பல கதைகள் இடம் பெறுகின்றன. இந்தக் கதைகளுக்கு வேறு சாத்தியப்பாடுகளாக மாறுபட்ட கதைகளில் இவர்களின் தீர்வுகள் சொல்லப்பட்டிருக்கின்றன. எந்தவொரு கதையும் அதனளவில் முற்றுப் பெறுவதில்லை. இந்நாவலில் கே. கமலேசன், அட்லாண்டிஸ் மனிதன் மூவரும் முக்கிய பாத்திரங்களாக இருந்து கதையை நகர்த்துகின்றனர். குலோத்துங்கனுடன் கொல்லிமலை சென்ற கமலேசன் அட்லாண்டிஸ் மனிதனான மினோவாவைச் சந்திக்கிறான். மினோவா வரலாற்றுக்கு முற்பட்ட புராதன பொதுவுடைமை காலத்து மனிதன். கமலேசன் கதை சொல்வதாக எழுந்தாளன் கே, காலத்தின் குறுக்கு வெட்டுப் பாதையில் உண்மை என்பது பொய்யாகவும், பொய் என்பது உண்மையாகவும் மாறி நிற்கும் அதிசயத்தை எழுதும் போது "ஒரு சாத்தியப்பாட்டில் உண்மையாக இருக்கும் உண்மை இன்னொரு சாத்தியப்பாட்டில் பொய்யாக இருக்கும். பொய் வேறொரு சாத்தியப்பாட்டில் உண்மையாகும்" (ப.40) என்கிறான். குலோத்துங்கன் இறந்து போனவன். பைத்தியமாகி அலைந்தவன். கடைசியில் கமலேசனுடன் வருவது எப்படி? என்ற கேள்வி எழுகிறது. "அவன் இறப்பதும். பைத்தியமாவதும் எதிர்காலத்தில் வர இருக்கும் வாழ்க்கையைப் பற்றிய சாத்தியப்பாடுகள்".

நவீனகால சமூகத்தில் மனிதன் துண்டுகளாகச் சிதறுண்டு போகும்போது அவனைப் பற்றிய கதைவடிவமும் பல துண்டுகளாகிப் போய்விடுவது இயல்பு. சிதறுண்ட மனிதனின் உடைந்த கதைத்துண்டுகள் பன்முகத்தன்மையை எய்துகின்றன. சிதறுண்ட நவீன மனிதனின் வாழ்க்கையைப் பற்றிய சிதறுண்ட வாழ்வின் வடிவம் இதுதான் என்பதையும் நாவல் உணர்த்துகிறது. பின் நவீனத்துவ உத்தியில் இந்நாவலின் உருவம் உள்ளடக்கம் தகர்க்கப்பட்டிருக்கிறது. ஒரு நிகழ்வு + சாத்தியப்பாடு என்ற தலைப்பில் கே கதை எழுதிச் செல்கிறான். பிரதியின் விடுபட்ட சில பக்கங்கள் என்ற தலைப்பில் மினோவா - அட்லாண்டிஸ் மனிதன் கூறும் பொதுவுடைமைக் கருத்துக்கள் இடம் பெறுகின்றன. நிகழ்வுக் குறிப்புகள் என்றும், பின் குறிப்பு என்றும் சில சில இடங்களில் குறிப்புகளை எழுதுகிறார். வெங்கடபதிராஜூவின் டைரிக் குறிப்பும் இடம் பெறுகிறது.

## "0" டிகிரி (1998)

பின்நவீனத்துவ எழுத்திற்கு முன் உதாரணமாக விளங்கும் நாவல். பெருமளவு விமர்சனங்களை எதிர்கொண்ட நாவல். இந்நாவலின் உருவ, உள்ளடக்க உத்திகளும் புதிய போக்கின் அடிப்படையிலேயே அமைந்திருக்கின்றன. பிறழ் முறை அமைப்பாக, குறியீடுகளைப் பயன்படுத்தி எழுதப்பட்ட நாவல். கதை எழுதுவதும் கூட ஒரு ஆசிரியர் தான் என்ற எண்ணத்தை வாசகர்களுக்கு ஏற்படுத்த வேண்டியதில்லை. நடைமுறைகளை மாற்றிக்கொள்ளலாம். கதைக்குள் கவிதைகள், வரலாற்று நிகழ்ச்சிகள், கனவுகள், கடிதங்கள், உரையாடல்கள், குறியீடுகள் என எவையும் இடம் பெறலாம். இப்படி மரபு முறைக் கதையை அழிக்க முயலும் பின் நவீனத்துவக் கூறுகளை உடையது "0" டிகிரி நாவல்.

உலக நாடுகளின் வாழ்க்கை, கலாச்சாரம், பண்பாடு இவற்றையெல்லாம் அறிய வேண்டுமெனில் அப்பிரதேச மொழிகளை நாம் அறிந்திருக்க வேண்டும். நாடுகளுக்கிடையே எல்லைகள் மாறுபடினும் அடிமைத்தனம், மதச்சண்டைகள், பெண்வதை, போலியான சினிமா வாழ்க்கை, கொலை, கொள்ளை, ஏமாற்றுதல், மனிதனை மனிதனே சித்தரவதை செய்யும் காட்டுமிராண்டித்தனம், அரசியல், பித்தலாட்டங்கள், வன்முறை முதலானவை சமூகத்தில் இயல்பானவையாக நடந்து கொண்டிருப்பதை நாவல் புலப்படுத்துகிறது. கதை சொல்லும் ஆசிரியர் முனியாண்டியாகவும், மிஸ்ராவாகவும், வாசுகியாகவும், சாருநிவேத்திதாவாகவும் மாறி மாறி அவதாரமெடுப்பது தன்னை எல்லாமுமாகக் காணும் முயற்சியே. மனித மனம் நிலையற்றது. நலனுமுடையது. எல்லாத்தரப்பு மனிதர்களின் உணர்வுகளையும் ஒட்டு மொத்தமாய் இங்கே கொண்டு வந்து காட்டவே இந்தக் கூடுவிட்டு கூடுதாவும் முறையைக் கையாண்டிருக்கின்றார். கோட்டிக் குப்பனின் மொழிபெயர்ப்புத் திறனே தனக்குப் பின்னொரு நாளில் உதவியாக இருந்தது என்கிறார். மதத்தின் பேராலும், இனத்தின் பேராலும் கார்மீனியர்களை, கஸர்மேனியர்கள் கொன்று குவிக்கும் வரலாற்று நிகழ்ச்சியையும் விவரிக்கின்றது நாவல். மக்களை வலைவிரித்துப் பிடிக்கும் சினிமா மூலம் சுயலாபம் தேடும் மனிதர்களைப் பற்றியும் விவரிக்கின்றது.

தீவிரவாதியின் கோரப்பிடியில் சிக்கித்தவிக்கும் அப்பாவி மக்களின் எதிரொலியாக தாயுமானவளின் செய்கைகள் சித்தரிக்கப்படுகின்றன. நாளேடுகள் அரசியல் மொழியாகி விட்டதையும் சுட்டிக்காட்டுகிறார். இப்படி எத்தனையோ முரண்பாடுகள் நாவலில் இடம் பெறுகின்றன. நாவல் சூர்யா தன் மகள் ஜெனீக்கு எழுதிய கடிதக் கவிதையோடு முடிவடைகிறது. கும்பகர்ணன் தன் தம்பிக்காக இராமனிடம் வேண்டிய அன்பை இன்றைய உலகில் நிலவச் செய்வது சாத்தியமில்லை என்று கூறும் ஆசிரியர் "மொத்த மனித வர்க்கமே காதலையும் அன்பையும் புறக்கணித்துவிட்டு பேரழிவில் ஈடுபட்டிருப்பதாகத் தோன்றுகிறது. ஜெனீ தேசங்களுக்கிடையே எல்லையும் ராணுவமும் மனிதர்களுக்கிடையே கண்ணுக்குப் புலப்படாத எண்ணற்ற தற்காப்புத் தந்திரங்களும் தாக்கும் உபாயங்களும்" (ப. 207) என்று ஒவ்வொரு மனிதனின் எதிர்பார்ப்பையும் கேள்விக்குறியாக்கி விடுகிறார். வித்தியாசமான கதைப்போக்கில் பாத்திரங்கள் கதைகூறுகின்றன.

## பிற நாவல்கள்

இந்நாவலைப் போலவே மின்மினிகளின் கனவுக்காலம், காலமற்ற காலம் என்றொரு நாவல், நிழல் முற்றம், சுடுமணல், எட்டாவது கடல், பாலிதீன் பைகள், வாக்குமூலம் முதலான நாவல்களிலும் உருவ, உள்ளடக்க, உத்தி முறைகள் பின் நவீனத்துவப் போக்கில் அமைந்திருக்கின்றன.

## தீர்வுகள்

1. யதார்த்தம் என்பது கட்டமைக்கப்பட்டது. சுயம் என்பது ஒற்றுமை இல்லை
2. வாழ்க்கையை சிதைவுக்குள்ளாக்குவது
3. ஒரு கதைக்குள் பர கதைகள், கவிதைகள், உரையாடல்கள், முரண்பாடுகள் கொண்டது
4. நேர்கோட்ட முறையிலிருந்து மாறுபட்ட பிழழ்முறை அமைப்பினைக் கொண்டது
5. உருவ, உள்ளடக்க, உத்திகளில் மாறுதல் முதலான கருத்துக்கள் கொண்டது "பின் நவீனத்துவப் போக்கு" என்பதை இவ்வாய்வு வழி அறிய முடிகின்றது.

# தமிழ்க்கதையாடல்களில் விளிம்புநிலை மனிதர்கள் குறித்த கருத்துருவாக்கம் பின்னை அமைப்பியல் - பின்னை நவீனத்துவ நோக்கிலான வரைவு

*ஆ.பூமிச்செல்வம்,* ஆய்வாளர், இலக்கியத் திறனாய்வுத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை – 21.

## தோற்றுவாய்

நவீன யுகத்தில் விஞ்ஞான அறிவின் பெருக்கமும் பிந்தைய முதலாளித்துவத்தின் அதீத வளர்ச்சியும் மனித வாழ்வின் இருப்பு-நகர்வு என்றளவில் பல வியத்தகு மாறுதல்களை ஏற்படுத்தியுள்ளன. அறிவாளி-முட்டாள், செல்வந்தன்-ஏழை, உயர்ந்தவன்-தாழ்ந்தவன், ஒழுக்கம்-ஒழுக்கமின்மை, மேல்-கீழ் எனப் பல பிளவுகளும் தீவுகளும் உருப்படுத்தப்பட்டுள்ளன. இதன் எதிரொலி இலக்கியம், அரசியல், சமூகம், மொழி, வரலாறு, கலாச்சாரம், பண்பாடு என விரிந்தும், இம்மேலாதிக்கப் பண்புகளானவை தன்னை நவீனப் புனிதங்களாகக் காட்டி, அதிகார நிறுவனங்களாகச் செயல்பட்டு, தம் கோர முகங்களை உக்கிரங்களாக வெளிப்படுத்தியும் வருகின்றன. இச்சூழலின் நிர்பந்தத்தில் எழுந்ததே விளிம்புநிலை மனிதர்கள் குறித்த பதிவுகள். இதுவரைத்தான பதிவுகள் யாவும் மையங்களின் (Centre) மேன்மைகளைச் சுட்டிக்காட்டினவே தவிர, புவியியல் அடிப்படையிலும், அரசியல், பொருளாதார ரீதியிலும், கருத்தியல் கலாச்சார மட்டங்களிலும் இருந்து தூர விலக்கி வைக்கப்பட்டிருந்த விளிம்புகளைக் (Periphry) கவனத்தில் கொள்ளவில்லை.

நடப்புநாள் வரை விளிம்புகளை தமக்குள் இழுப்பதே மையங்களின் முயற்சியாகவும், அதனிடமிருந்து தப்பியோடுதலே விளிம்புகளின் செயல்பாடாகவும் அமைவதை வரலாறு தொடங்கி அனைத்துக் கருத்தியல் தளங்களின் மூலம் அடையாளங் காணமுடியும். விளிம்புகளின் நோக்கிலிருந்து இதுவரையிலான கதையாடற் பதிவுகளை நோக்கும்போது, தப்பியோடல் மற்றும் தப்பித்தோடியவர்களின் வரலாறுகளைப் பதிந்திருத்தல் போன்றவற்றை மட்டுமே காணமுடிகிறது. இத்தகு சூழலில், கட்டுமானம் பெற்ற அமைப்பு திமிறி-முரண்பட்டு எல்லைகளை விரிவாக்கம் செய்திடல், கட்டுமானத்தை அவிழ்த்து உள்ளும் புறத்திலும் ஒளி தேடுதல் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு அமைந்த பின்னை அமைப்பியல், அதிகாரமற்ற, மையமற்ற நிலையை முன்வைத்திடும் பின்னை நவீனத்துவம் போன்ற கோட்பாடுகளின் வரவால் நடப்புக்காலக் கதையாடற் பதிவுகளில் வியக்கத்தகு மாறுதல்கள் எற்பட்டுள்ளன. இக்கதையாடல்கள் விளிம்புக்கும் மையத்திற்கும் இடையில் உள்ள மோதல்களை, விளிம்பினர் மையத்தைக் நோக்கிக் கலகக் குரலெழுப்புவதைப் பதிவுசெய்துள்ளமை போன்றிருப்பதால் விளிம்போரம்வாழ்க (Hail to the Edges) என்று போற்றிடும் பின்னை நவீனத்துவ, பின்னை அமைப்பியல் நோக்கில் அணுகுவதாக இவ்வாய்வு அமையப்பெறுகிறது.

இதுவரை புனையப்பட்ட கதையாடல்கள் அனைத்தும் வரையறுக்கப்பட்ட ஒழுக்கம் என்னும் மையங்களின் வரலாறுகளாக உள்ளன. வரையறைகளைத் தளர்த்தியிருப்பின் அவை நிராகரிப்பிற்குள்ளாக்கப்பட்டு இருட்டடிக்கப்பட்டுள்ளன. இத்தருணத்தில், தமக்கான உரிமைகளைக் கோரிடும் உதிரிமனிதர்களின் கோரிக்கைகளை முன்மொழிந்திடும் விதத்தில், மாற்றுச் சிந்தனாமரபுடன் பிரேதா பிரேதன், ச.ராஜநாயகம், இரா.நடராசன் போன்ற கதையாளிகள், மனவெளி நாடகம், யுரேகா, மதி எனும் மனிதனின் மரணம் குறித்து என்னும் கதையாடல்களைப் பனுவல்களில் பதிவு செய்துள்ளனர். இப்பனுவல்களை ஆய்வுக்குட்படுத்தி, விளிம்பினரின் உரிமைக் கோரல்களை, உணர்வு நுட்பங்களை வரைவு செய்வதற்காக இவ்வாய்வு நிகழ்த்தப்படுகிறது.

## மையம் - விளிம்பின் பொதுக்கூறுகள்

விளிம்பு என்பது ஒருபடித்தானதல்ல. ஒற்றைக் கருத்தியல் கொண்டதுமல்ல. விளிம்பு என்பது ஓர் ஒப்பீடான கருத்தாக்கம். ஒரு மையத்திற்கு விளிம்பாக இருக்கும் ஒன்றானது அதனினும் விளிம்புடன் ஒப்பிடும்போது மையமாகச் செல்படுகிற வாய்ப்புண்டு. விளிம்பில் இத்தகைய வேறுபாடிருப்பினும் மையத்தை எதிர்ப்பது, மையத்திலிருந்து விலகுவது என்கிற அடிப்படையில் பொதுக்கூறு அமையும் எனவும், சமூக அமைப்பில்

மையம்-விளிம்பு என்ற முரண்பட்ட நிலைகள் உள்ளன. அதிகார அமைப்பு, மேலாதிக்க நிறுவனத்தன்மை உடையது. விளிம்பு (சி ஆள்) ஒடுக்கப்பட்ட நிலையில் இருப்பது எனவும் வரையறுப்பர். இதன்வழி மையம் ஆதிக்கத் தன்மையுடையது எனவும், விளிம்பு வர்க்க அடிப்படையிலான வரையறை மட்டுமல்ல, வர்க்கம்/சாதி/பால்/நிறுவனம் எனப் பல்வேறு கூறுகளில் கீழ்நிலைப்படுத்தப்பட்ட சக்தியாக இருப்பது எனவும் அனுமானிக்கலாம்.

## விளிம்புநிலை மனிதர்கள் – அடையாளங்கள்

பின் நவீனத்துவக் கூறுகளில் தலையாயது விளிம்புகள் மீதான கவனம் என்பது. இதனை, உதிரிகள்-மற்றதுகள் எனக் குறிப்பிடும் பிராங்பர்ட் பள்ளியைச் சேர்ந்த ஹெர்பர்ட் மார்க்யூஸ் தட்டை மனிதன் அல்லது ஒற்றைப் பரிமாண மனிதன் என்னும் தன் நூலில் வர்க்கப்போராட்டம் பொருளற்று போய்விட்ட நிலையில் விளிம்பு நிலை மனிதர்களுக்கான போராட்டமே இக்காலகட்டத்தில் நிகழ்த்தப்பட வேண்டிய போர் எனக்கூறி ஓரினப் புணர்ச்சியாளர்கள், கரமைதுனக்காரர்கள், கைதிகள், கருப்பர்கள், பெண்கள், பைத்தியக்காரர்கள், வேலையில்லாதவர்கள், மாணவர்கள் போன்றோரை விளிம்பு நிலையினர் என அடையாளப்படுத்துகிறார். இந்தியச் சூழலில் தலித்துகள், உதிரித் தொழிலாளிகள், பிச்சைக்காரர்கள், திருடர்கள், விபச்சாரிகள், அலிகள், போதைமருந்து உட்கொள்வோர், நிரந்தர நோயாளிகள் மற்றும் பூம்பூம் மாட்டுக்காரர்கள், நாடோடிகள், அகதிகள், பழங்குடிகள் போன்றோரையும் விளிம்பினராகப் பட்டியலிட்டு அடையாளப்படுத்துகின்றனர். இவர்களில் அலிகளும் ஓரினப்புணர்ச்சியாளர்களும் இவ் ஆய்வுக்காகத் தேர்ந்து கொள்ளப்படுகின்றனர்.

## அலி (மதி) என்னும் மனிதனின் மரணம்

ஆண், பெண் என்ற இருபால்களை எதிரெதிர் நிறுத்தி, இவ்விரு பாலினரையும் கடுமையான வரையறைக்குட்பட்ட விதிகளின் அடிப்படையில் குடும்பம் என்னும் நிறுவனத்தின் கீழ் இணைய அனுமதி தரும் சமூகச்சூழலில், அலிகளைச் சமூகம் எவ்வாறு எதிர்கொள்கிறது எனக் காணுதல் அவசியமான ஒன்று.

ஒருவரை அவரது பிறப்புறுப்பை வைத்து ஆணா, பெண்ணா என அடையாளங் காணும் சமூகம், அவரது உணர்வுப்பாடுகளை நுண்ணிதின் நோக்கிக் கவனத்தில் கொள்வதில்லை. பிரதியில் வரும் வறையறுக்கப்பட்ட உணர்வில் பிறழ்வு கொட் மதி எனும் அலிக்கும் இத்துயர்நிலை நேர்கிறது. மூடி மறைத்து வைக்கப்பட்டிருக்கும் ஒன்றைத் திறந்து பார்ப்பதில் சுகங்காணும் வழக்கங்கொண்ட மனித மனக்குரூரம் மதியிடத்தும் தன் வேலையை நிகழ்த்துகிறது.

அலிக்குப் பாலுருப்பு இருக்கும் இடத்தில் என்ன - எப்படி இருக்கும் எனக் காணும் குரூர ஆவலில் ஈடுபட்டு ஏய் காட்றா... அலிநாயே... மட்டும் இருக்குதுடா என்று கண்டு களிப்படையும் மானுட விலங்குகளைப் பிரதி அடையாளப்படுத்துகிறது. அலிகளுக்கான பிரத்யேகக் கழிவறை, இடுகாடு, வாகனத்தில் இருக்கை என்ற எதுவும் ஒதுக்கித்தராத அரசு, அலி செத்தால் எறிப்பதா-புதைப்பதா என விவாதத்திலீடுபடும் சமூகம், அலி புகுந்த வீடு உருப்படாது என அஞ்சி பெற்ற பிள்ளை அலியானதால் விஷம் வைத்துக்கொன்று வரும் பெற்றோர் என ஒட்டு மொத்த உலகமே அலியெனும் இனத்திற்கு எதிராகச் செயல்படுவதைப் பிரதி சுட்டிக் காட்டுகிறது.

அலிகளை தகாப்புணர்ச்சி, பார்வைநுகர்ச்சி, காட்சிப் பொருளெனதான் அணுகுதல் நிகழ்கிறதேயொழிய அவர்களது உடலியற்கூறுகளை, உணர்வுகளை, உள்ளக்குமறல்களை உணர்ந்து, அவற்றை இயல்பானவைதான் எனப் புரிந்து, அலிகளும் சகமானுடம்தான் என அங்கீகரித்துச் செல்லும் நிலை நடப்புச் சமூகத்தில் நிகழ்வதில்லை.

மனித செல்லிலுள்ள 23 இணை குரோமசோம்களில் இறுதியான 23ஆவது குரோமசோம் இணையே ஆண் பெண் எனத் தீர்மானிக்கிறது. பெண் கருமுட்டை பெண்பால் தன்மைகளை ஏற்படுத்தக்கூடிய X குரோமசோம் மட்டும் கொண்டுள்ளது. ஆணின் விந்து பெண்பால் தன்மையை ஏற்படுத்தக்கூடிய X குரோமசோம், ஆண்பால் தன்மையை ஏற்படுத்தக்கூடிய Y குரோமசோம் என்ற இரண்டில் ஏதேனும் ஒன்றைக் கொண்டதாக இருக்கிறது. XX பெண்ணாக XY இணைச்சேர்க்கை ஆணாக உருவாகிறது. மரபணு உருவாக்கத்தின்போது ஏற்படும் எதிர்பாராத

சில மாற்றங்களால், பெண்ணின் கருமுட்டையிலேயே ஒரு X குரோமசோம் அதிகமாகவோ அல்லது ஆணின் விந்திலிருந்து வரும் Y குரோமசோமுடன் மேலதிகமாக ஒரு யீ குரோமசோமோ அல்லது Y குரோமசோமோ கருவில் இணைந்துவிட்டால் பிறக்கும் குழந்தை ஆணாகவோ அல்லது பெண்ணாகவோ இல்லாமல் இரண்டுமாகவும் இரண்டுமில்லாமலும் அலியாகப் (Hermophrodite) பிறக்கிறது. என்ற எளிய கருத்தை விளங்கிக் கொண்டால், அதிர்ஷ்டவசமாக நாம் இரண்டில் ஒன்றாக அவதரித்துள்ளோம் என்பதையும் அலிகளும் நம்மில் ஒருவர்தான். அவர்களை அருபப்படுத்தி, அவமதிக்க வேண்டியதில்லை என்ற கருத்தையும் உணர்ந்து கொள்ளலாம்.

யுரேகா-மனவெளி நாடகம் கவனப்படுத்தும் விளிம்புநிலையினரின் கருத்தாக்கங்கள்

உலகில் உயிர்களாகப் பிறப்பெடுத்துவிட்ட பட்சத்தில், பாலியல் தேர்விக்கான இணைதேடுதல் உயிரியல் தேவையாகிறது. மனிதம், விலங்கு, பிற உயிரினம் என்ற ஈடுபாடு இவ்விடத்தில் மட்டும் இல்லை. ஒருவர் தன் பாலுறவுக்கான இணையைத் தெரிந்தெடுத்தலின்போது சமூகத்தின் பிற உறுப்பினரோடு அவரது உறவு நிர்ணயிக்கப்படுகிறது. எவ்வொரு சமூகத்திலும் பிறந்து வாழத் தொடங்கும் ஒருவர், அச்சமூகம் அங்கீகரிக்கும் ஏதேனும் ஒரு பாலியல் வரையறைக்குள் தன்னைப் பொருத்திக் கொண்டேயாகவேண்டும். மறுத்து மாற்றுநடவடிக்கை மேற்கொள்ளின் நிராகரிப்புக்குள்ளாகப்படுவர். இவ்வகைப்பாட்டினில் அடங்குபவரை ஓரினப் புணர்ச்சியாளர், தகாப்புணர்ச்சியாளர் என்று அடையாளப்படுத்தி அச்சமூகம் அவர்மீது நிராகரிப்பை உமிழும். இத்தகு அடையாளத்தை ஏந்தி வருபவளாக கல்லூரி விடுதியொன்றில் இருக்கும் ராணி யுரேகாவில் பதிவு பெற்றுள்ளாள். சகதோழியை ஓரினச் சேர்க்கையின் பொருட்டு (லெஸ்பியன்) பாலாத்காரம் செய்து, அவளால் நிராகரிப்பைப் பெற்றுழல்வதாகப் பிரதி கதையாக்கப்பட்டிருக்கிறது. தன்பால் ஈர்ப்பு, குமரப் பருவத் தடுமாற்றம், உள்ளப் பிறழ்வு, பாலியல் நோய், செக் பெர்வர்ட், கைசெக்ஸுவல், மென்லினெஸ் என்ற குணங்களின் கலவைக் கலமாக ராணி சித்தரிப்புப் பெற்றுள்ளாள். எலக்ட்ரா என்னும் உளவியல் கூறும் இவளுக்கான பிரச்சனையாக முன்வைக்கப்படுகிறது.

எனக்கு அப்பா என்றால் உயிர். அப்பாவை இமிடெட் செய்ய ஆசை என விரும்பிடுவாள், தன் அப்பா-அம்மாவுடன் தினந்தினம் பாலுறவு கொள்ளும் காட்சியைக் கண்ணுற்று, அதுபடி அப்பாவில்லா சமயம் அம்மாவுடன் உறவு கொள்ள முயன்று, அதில் தோற்றதும், அம்மாவை வஞ்சந் தீர்க்க அவளுருக்கொண்ட பெண்ணுடன் பாலுறவு கொள்ள முயன்றிடும் நடத்தை மாற்றமே அவளது ஓரினச் சேர்க்கைக்கான செயலுந்துதல் என்பதாகப் பிரதி கட்டமைக்கப்பட்டிருக்கிறது.

ஒரு ஜீவனின் மனதில் பதிவாகிவிடும் கடந்தகால ஏமாற்றவுணர்வின் அழுத்தங்கள் நிகழ்காலத்தில் தன்னையும் அறியாது பீரிட்டு வெளிப்பட்டுவிட நேர்வதால் சகமானுடத்துடன் ஒட்டுதலற்றுப் போய், நிராகரிப்பிற்குள்ளாக்கப்பட்டு, அது விளிம்பாகிப் போவதைப் பிரதி முன்னிருத்துகிறது.

அடுத்து, என்னை யாரேனும் நேசித்திருக்கிறார்களா? - இன்றுவரை என்ற வினாவுடன் தொடங்குகிறது மனவெளி நாடகம். தன் பெற்றோர்களே தன்னைப் புரிந்து கொள்ள முன்வராதபோது, தன் உணர்வுகளுக்கு மதிப்பளிக்கும் சக ஆண்களைக் கூடக் காதலிக்கும் அளவிற்குப் போய்விடும் நிலையை இப்பிரதி சுட்டிக்காட்டுகிறது.

எனக்கு அவனுடன் உள்ள உறவு காதல். எனக்கும் அவனுக்கும் இடையில் உடல் தடையாக இருக்கும்போது அதை மீறும் எத்தணிப்பின் விளைவே காமம். ஆனந்தன் என்னும் அவன் வெறும் ஆனந்தன்தானே தவிர அவன் ஒரு ஆணில்லை, பெண்ணுமில்லை. அவன் வெறும் அவன்தான். என்னை அவனிடமே ஒப்படைத்துவிட்டேன். எனத் தம் உள்ளக்கிடக்கையை பிரதிவழி முன்வைக்கிறான் இளங்கோ. உலகில் ஒரு ஜீவன் தான் யாராலும் நேசிக்கப்படாமையால் எய்தும் அவலத்தையும், அதன் நீட்சியாக தினந்தினம் இந்திரியங்களால் மந்திரிப்புக் குள்ளாக்கப்படும் துர்நிலையை எட்டிவிடும் குரூர சம்பவ நேர்வையும் பிரதி கவனப்படுத்துகிறது.

### பனுவல்களில் விளிம்பினருக்கான உரிமைக்கோரல்கள்

நிறுவப்பட்ட விதிகளைக் கட்டவிழ்ப்பதைப் பின்னை அமைப்பியலும், அதிகார மையங்களுக்கு எதிராகக்

கேள்வி கேட்பது, வரையறுக்கப்பட்ட ஒழுக்கவிதிகளையும், புனிதங்களெனக் கொள்ளப்பட்டனவற்றையும் சிதைப்பது, மாற்றினைக் கோருவது என்பனவற்றைப் பின்னை நவீனத்துவமும் தம் அடிப்படையியல்புகளாகக் கொண்டுள்ளன. இவற்றின் வழி பனுவல்களை அணுகிடுமிடத்து, அரவாணிகளுக்குரிய அங்கீகாரம் தராத அரசைக் கேள்வி கேட்பது, நையாண்டி செய்வது, தம்மீதான கவனத்தை-நேசிப்பை-அரவணைப்பைக் கோரிடும் ஓரினப்புணர்ச்சியாளர்களை நிராகரித்தல், மரணிக்கச்செய்தல் போன்ற செயல்களை மேற்கொள்கின்ற குடும்பத்தைச் சிதைப்பது, தனி நபர்களின் ஒழுக்கவிதிகளைக் கேள்வி கேட்பது போன்ற செயற்பாடுகள் பிரதிகளில் நிகழ்த்தப்பட்டுள்ளன. இப்பிரதிகளின்வழி இவ்விளிம்பு நிலையினர் எதிர்பார்க்கும் சுய நசிவின்மை, அரவணைப்பு, அங்கீகாரம், கவனம் போன்றவற்றை மறுக்காது தருதல் மானுடப்பிறவியாக அவதரித்துள்ள அனைத்து நிலையினரின் கடமை என்ற கோரல் முன்வைக்கப்படுகிறது.

## நிறைவாக

எந்த ஒரு சமூக அமைப்பும் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட இருமை எதிர்வுகளைக் கொண்டதாக உள்ளது. இதில் ஆதிக்கம் செய்வது-அடக்கியாளும் குணம் கொண்டது மையமாகிறது. இவற்றால் அலைக் கழிப்பிற்குள்ளாக்கப்படுவது விளிம்பாகிறது. மையம் தன்னைத் தற்காத்துக்கொண்டு மற்றவைகளை நிராகரிப்பதால், பின்னை அமைப்பியல் மற்றும் பின்னை நவீனத்துவம் போன்ற சிந்தனைகள் மையத்திற்கெதிராக எதிர்வினையாற்றுகின்றன. இதனை உட்கிடையாக்கிக் கொண்ட ஆய்வுப் பிரிதிகள் அரவாணிகள் மற்றும் ஓரினச் சேர்க்கையாளர்களைத் தம் மையப் பொருட்களாகத் தேர்ந்து கொண்டுள்ளன. இவற்றுடன் மனிதனின் புறவாழ்வை மட்டும் உட்பொருளாகக் கொள்வதை விடுத்து, அவனது அகவாழ்வின் எண்ணங்களையும் செயற்பாடுகளையும் உள்ளடக்கமாகவும் பெற்றுள்ளன. குறிப்பாக, சமகாலத்தில் மனித ஜென்மமாக உருவிருந்தும் அலிகளாக, ஓரினப் புணர்ச்சியாளர்களாக இருப்பின் நிராகரிப்புக்கு உட்படுத்தப்படுவதைப் பிரதிகள் அடையாளப்படுத்திக் காட்டுகின்றன. விளிம்பினரின் உணர்வுநுட்பங்கள், உள்ளக் குமுறல்கள், சுயநசிவுகள் போன்றவற்றைத் தம்மைய இழைகளாகக் கொண்டியங்குவதால் இப்பிரதிகள் சமகால மனிதருடன் நெருங்கி வருகின்றன.

## குறிப்புகள்

1. தி.சு.நடராசன், திறனாய்வுக்கலை, ப.162.
2. அ.மார்க்ஸ், விளிம்புநிலை ஆய்வுகளும் எழுதுதலும், ப.21.
3. தி.சு.நடராசன், முன்னூல். ப.162.
4. வெ.கிருஷ்ணமூர்த்தி, பின் நவீனத்துவனத்தின் அடிப்படைக்கூறுகள், ப.31.
5. ஆஷ்வகோஷ், பின் நவீனத்துவம் - பித்தும் தெளிவும், பக்.167-188.
6. ஆ.செல்லப்பெருமாள், விளிம்புநிலையினரின் அடையாள வெளிப்பாடுகள், (வல்லினம் - இதழ் 6-7), ப.7.
7. இரா.நடராசன், மதி எனும் மனிதனின் மரணம் குறித்து,பக்.7-8.
8. மேலது. ப.7.
9. அருணன், அலிகள் என்னும் விளிம்பு நிலை மனிதர்கள், ப.91.
10. ச.ராஜநாயகம், யுரேகா, கடைசிப்பொய், ப.132.
11. மேலது, ப.133.
12. ரமேஷ்-பிரேம், மனவெளி நாடகம், முன்பு ஒரு காலத்தில் நூற்றி எட்டுக் கிளிகள் இருந்தன, ப.35.

# நவீன எழுத்தும் எழுத்தாளர்களும்

முனைவர்.கு. *மகுடீஸ்வரன்*, தமிழ்த்துறை தலைவர்,
கோபி கலை அறிவியல் கல்லூரிகோபி - 638 453

## நவீனத்துவ அரசியல்

1577ஆம் ஆண்டு இந்திய மொழிகளில் அச்சான முதல் நூல் என்ற பெருமையோடு "தம்பிரான் வணக்கம்" என்ற தமிழின் முதல் அச்சுப்புத்தகம் வெளிவந்து, நானூறு ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது. அதன் பின் வளர்ச்சி பெற்ற புத்தக வெளியீடு, பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் காலனியாதிக்கத்தின் தாக்கத்தால் ஏற்பட்ட நவீன சமூக மாற்றங்களால் பெரிதும் மாறுபட்டது.

கவிதையிலிருந்து உரைநடைக்கு மாறிய, தமிழ்ப் படைப்பாளிகள் நாவலை, நவீனம் என்றே அழைத்தார்கள். முதல் நாவல் தோன்றிய போதே தமிழில் நவீன எழுத்தும் தோன்றிவிட்டது எனலாம். அன்றிலிருந்து இன்றுவரை எழுதிவரும் படைப்பாளிகள் அவர்கள் படைப்பின் பின்னணி, அரசியல் ஆகியவனவற்றை இனிக் காண்போம்.

## நவீனத்துவ குருபீடம்

நவீனத்துவ எழுத்து என்ற பாகுபாடு பிரிப்பது, அதிகமாகச் சிறுபத்திரிக்கைகள் தோன்றி வளர்ந்த பின்புதான். அறிவு ஜீவிகள் எனத் தம்மை நினைத்தக் கொண்ட எழுத்தாளர் சிலர் தங்களைச் சார்ந்தவர்களை நவீனத்துவ எழுத்தாளர்களாக முடி சூட்டி மகிழ்ந்தனர். இந்தக் கும்பலில்லாதவர்கள் "அ-நவீனத்துவ எழுத்தாளர்களானர்கள். தற்சமயம் நவீனத்துவக் குருபீடமாக ஜெயமோகன் கொலுவீற்றிருக்கிறார். தமிழகத்தில் நவீனத்துவ எழுத்தாளர் "பட்டா"வை அவர்தான் அணிந்து வருகிறார்.

அவர் எழுதிய "நவீனத்துவத்தின் முகங்கள்" என்ற நூலில் நவினத்துவம் தமிழில் புதுமைப்பித்தன், மௌவி கு.ப.ரா. மூலம் அறிமுகமாயிற்று என்று கூறலாம். நவீனத்துவம் முதிர்ச்சியடைந்த காலம் என் சா.கந்தசாமி, ந.முத்துச்சமி, சுந்தர ராமசாமி, அசோகமித்திரன், ஜி.நாகராஜன், இந்திரா பார்த்தசாரதி, ஆதவன், ஆ.மாதவன் ஆகியோரின் காலகட்டத்தைக் குறிப்பிடலாம்" (ப.41) என்பார்.

## ஆரம்பகால எழுத்தாளர்கள்

தமிழின் ஆரம்பகால எழுத்தாளர்கள் பெரும்பாலும் மேற்குடியாளர்கள். ஒழுக்கம், விதி, பண்பாடு, கட்டுப்பாடு என்பதையே வலியுறுத்தி எழுதியவர்கள். ஆனால் அவர்களுக்குச் சமூகம், எளிய மக்கள் என்பனவெல்லாம் சம்பந்தமில்லாத விஷயங்கள் அக்ரகார வீதிகள், வீட்டுத் திண்ணைகள் காவேரியாற்றில் குளிப்பது கர்நாடக சங்கீகத்தில் கரைவது, எந்நேரமும் சூடாகக் காப்பி குடிப்பது... இவைகளை எழுதியே, பிறவிப் பெரும் பயன் பெற்றனர்.

வடுவூர் துரைச்சாமி அய்யங்கார், வை.மு.கோதை நாயகியம்மாள் போன்றவர்களின் நாவல்கள் ஒருகாலத்தில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தன. இது பற்றி அக்காலத்தில் செந்தமிழ்ச்செல்வி இதழில் "சென்னையிலும் கும்பகோணத்திலும் சோம்பிக் குந்தியிருந்து கொண்டு திண்ணையிற் சாய்ந்து வண்ணம் ஆங்கிலக் கதைகளைப் படித்து, பின் அவற்றைத் தமிழில் - அப்பனே கொடு தமிழில் - பெயர்ந்தெழுதி விளம்பரப்படுத்தி, விற்று முதலாக்கி வயிறு வளர்க்கும் வாழ்வைக் காட்டிலும் இழிந்த நிலையைவேறில்லை" என்று விமர்சனம் (ஆ.இரா.வே.நாவலும் வாசிப்பும் ப.24) செய்திருந்தார்கள்.

உ.வே.சாமிநாதய்யரின் "என் கதை"யைக் கூட நவீன எழுத்தின் தொடக்கம் எனக் கூறுவதுண்டு. "என் கதையின்" பெரும்பகுதி கி.வா.ஜகந்நாதனல் எழுதப்பட்டதை வையாபுரிப் பிள்ளையிலிருந்து பலர்

சுட்டியுள்ளனர். "இந்த 400 பக்கச் சுயசரிதையில் ஒரே ஒரு பக்கம் - இல்லை ஒருவரியில் கூட அவர் மனைவி பற்றி இல்லை - ஏன்? 1,20,000 சொற்களில் ஒரு சொல் மனைவி பற்றி இல்லை. ஆண் வர்க்கமே தலையில் செருப்பால் அடித்துக் கொள்ளலாம். மனைவி என்று ஒருத்தி இருப்பத மறந்து போகவில்லை. அது மரத்துப் போய் விட்டது" என்பாற் சி.எஸ்.லட்சுமி என்ற அம்பை (சிந்தனையாளன், மார்ச் 2003)

பொதுவாக, ஆரம்ப கால எழுத்தாளர்கள் ஆங்கில நூல்களைத் தழுவியும், துப்பறிதல், அதீத கற்பனை என்ற நிலையிலேயே தங்கள் படைப்புகளை எழுதிக் குவித்தனர்.

## அடுத்த கட்ட எழுத்தாளர்கள்

ஆரம்ப காலத்தைத் தொடர்ந்து எழுத வந்த பெரம் பாலான படித்தவர்க்க எழுத்தாளர்களும், மேற்குடியாளர்கள் தான், ஒழுக்கத்தையே உயிர்நாடியாகக் கொண்ட அவர்களின் நவீனங்கள் பெரும்பாலும் பெண் உடலையே மையமாகக் கொண்டிருந்தன. "மௌனி, கு.ப.ரா.லா.ச.ராமாமிர்தம், தி.ஜானகிராமன் என இவர்களில் பலருக்கும் அகத்துறைதான் பேசுபொருளாக உள்ளது. அக உணர்வுகளை உக்கிரமாகவோ அல்லது அடக்கமாகவோ வெளிப்படுத்துவத எப்படி என்ற சவாலே இவர்களுடைய புனைவின் சாரமாக உள்ளது. இவர்களைப் பாதித்த இன்னொரு விஷயம் கர்நாடக இசை. இவை இரண்டுக்குள்ளுமே இவர்களின் படைப்புகள் தத்தளித்தன. மொழியளவில், தமிழ் குறித்து இவர்களுக்கு ஓர் இழிவான பார்வையே இருந்தது.

இதுகுறித்து ஜெயமோகன் மேலும் கூறும்போது, "ஸ்மார்த்தர்கள் எனப்படும் சைவப்பிராமணர்களுக்கும் பொதுவாகத் தமிழ் மீதுள்ள ஆழமான உதாசீன மனநிலைதான் அது, ந.பிச்சமூர்த்தி, கு.ப.ரா.மௌனி, தி.ஜானகிராமன், லா.ச.ரா.சி.சு.செல்லப்பா, க.நா.சுப்பிரமணியன், நகுலன், சுந்தரராமசாமி, அசோகமித்திரன், ஜி.நாகராஜன் என்று நீளும் வரிசை எம்.யுவன் வரை நீளுகிறது. இவர்களுடைய எளிய கவனம் கூடத் தமிழ்ப் பேரிலக்கியங்களில் விழவில்லை. இவர்களுடைய எழுத்தில் அவற்றில் மேலோட்டமான பாதிப்புக் கூட இல்லை" (ப.92 சென்றதும் நின்றதும்) என்பார்.

பெண் குறித்தும், சாப்பாடு குறித்தும் எழுதச் சலிக்கும் போது வேதாந்த விசாரங்களில் மூழ்குவது இவர்களின் வேலையாக இருந்தது. "சமஸ்கிருத காவிய மரபிலும், இந்து மெய்ஞான மரபிலும் கு.ப.ராஜகோபாலனுக்குப் பயிற்சி இருந்தது என்பதில் நம்பிக்கை இல்லை" எனக் கூறும் ஜெயமோகன், (கனவுகள் இலட்சியங்கள் ப.66) ராஜம் அய்யர் படைப்புகளில் வரும் வேதாந்த நோக்கு, அன்று சென்னைப் பிராமண அறிவு ஜீவிகளிடம் பிரபலமாக இருந்த ஒன்று எனக் கேலி செய்கிறார்.

ந.பிச்சமூர்த்தி கதைகளில் "பிராமண அக்ரகாரங்களும்", மௌனி கதைகளில் "தாசிகளும்", தி.ஜானகிராமன் கதைகளில் "தாட்டிகமான வெள்ளைப் பெண்களும்" பெரும்பாலும் இடம் பிடித்தனர்.

படைப்பாளிகளாகவும் விமர்சகர்களாகவும் இவர்களே இருந்ததால், இவர்கள் தங்களுக்குத் தாங்களே ஒழுக்கத்தில் உயர்ந்த பிம்பங்களைப் படைத்துக் கொண்ட கதாநாயகர்களாக விளங்கினர். ஆனால் இவர்கள் படைப்போ சமையல்கட்டைப் புறந்தாண்ட முடியாமல் நொண்டியடித்தது.

## இன்றைய நவீன எழுத்தாளர்கள்

போலியாகவும், மேட்டிமையாகவும் காட்டிக் கொண்ட தமிழ் எழுத்தாளர்களிடையே, கூலி விவசாயிகளும், வேலையில்லாதவர்களும், தள்ளுவண்டியில் பழங்கள் விற்பவர்களும் இன்று எழுத வந்துள்ளனர். கி.ராஜநாராயணன், பிரபஞ்சன், பூமணி, ப.சிங்காரம், இமையம், கோணங்கி, பாமா, ராஜ் கௌதமன், எஸ்.இராமகிருஷ்ணன் எனப் பலரின் பாசாங்கற்ற எழுத்துக்கள் பரவலாகத் தமிழ்வாசகர்களை எட்டியுள்ளது.

ராஜ்கௌதமனின் சிலுவைராஜ் சரித்திரம், காலச்சுமை எனும் இருநாவல்களும் ஒரு தலித்தின்

மனக்குமுறல்களை எடுத்துரைக்கின்றன. கால் நூற்றாண்டுகளுக்கு மேலாக அப்பாவை, அப்பா என்று அழைக்காத வைராக்கியமுடைய ஒரு மகனின் நிஜவாழ்வாகச் சிலுவைராஜ் சரித்திரம் உள்ளது.

"கோவேறு கழுதைகள்", "ஆறுமுகம்", போன்ற நாவல்களைப் படைத்த இமையம், தன் எழுத்து வாழ்க்கை பற்றிக் காலச் சுவடில் எழுதும் போது தன் குடும்ப வாழ்க்கை பற்றியும் வெளிப்படையாக, " அப்பாவுக்கும் பெரியம்மாவுக்கும் ரகசிய உறவு ஏற்பட்டது. ரொம்பக் காலமாக விசயம் தெரிந்தாலும் தெரியாது போல அம்மா இருந்தாள்" என எழுதுவதோடு, தன் பள்ளி வாழ்க்கை பற்றிப் பேசும் போது" எங்களுடைய பள்ளியில் ஒரேஒரு கரும் பலகைதான் அதை ஒட்டி ஆசிரியருடைய நாற்காலி இருக்கும். அதற்கு முன்னால் குடித்தெருப் பிள்ளைகள் உட்கார்ந்து கொண்டிப்பார்கள். கடைசியில் நாங்கள் (தலித்துகள்) உட்கார்ந்து கொண்டிருப்போம்" என்கிறார்.

இதற்கு ஒரு படிமேல் போய் சாருநிவேதிதா தன் "கோணல் பக்கங்களில்" என் தங்கை நீண்ட காலம் செக்ஸ் ஒர்க்கராக வாழ்ந்தாள் எனது எழுத்தின் முதல் ரசிகை அவள்தான் என்று அதிர்ச்சியூட்டுகிறார். (கோணல் பக்கங்ள், ப .82) நவீன கவிதைகளும் இன்று, "கவிதை புனிதமானது", "கவிஞன் வாக்கு கற்ற மகான்" என்ற மரபு வழிப்பட்ட சொல்லாடல்களைக் காலாவதியாக்கிவிட்டது. என்.டி.ராஜ்குமார், சல்மா, குட்டி, ரேவதி, மனுஷ்ய புத்திரன் எனப்பவர் நவீனக் கவிதைகளின் எல்லைகளை விரிவாக்கியுள்ளனர்.

"பேச்சு மொழியில் கவிதை எழுதுவது ஏற்கனவே தமிழில் வழக்கிலிருப்பினும் ராஜ்குமார், அவர்களது தடத்தை விட்டு விலகி உக்கிரத்துடன் புதிதாக மொழிகிறார். எரியும் கொள்ளியிலிருந்து தெளித்து விழும் கங்குகளாக ராஜ்குமாரின் கவிதைகள் உள்ளன" என்கிறார் ந.முருகேச பாண்டியன் (பிரதிகளின் ஊடே பயணம், ப.98) அதனால் தான் அவை வழக்கிலுள்ள சகலமும் குறித்துக் கேள்வியெழுப்புகின்றன. சிலவரிகள் உயரிய அங்கதத்துடன் விழுமியங்களைச் சிதைக்கின்றன.

"சூரியன் எப்படி ஒருத்திக்கு
கணவனாக முடியும்
எந்தத் தெம்மாடி ஏமாற்றிச் சென்றானோ
குந்தி தேவியை.."

எனும் கவிஞரின் அங்கதப் பார்வை "பாரதத்தை"யே கேலி செய்கின்றது.

சமூக அக்கறையின்றி, நகர்ப்புறங்களில் சொகுசாய் வாழ்ந்து கொண்டு எழுதி வந்த போலி எழுத்தாளர்களை நவீன எழுத்தாளர்கள் என்று சொல்வதை விட்டு, எளிய மக்களை, எளிய மொழியில், தனது வாழ்வைக் கூட ஒளிவு மறைவில்லாமல் வெளிப்படுத்தும் இன்றைய எழுத்தாளர்களையே "நவீன எழுத்தாளர்கள்" என்பதுதான் பொருத்த முடையதாக இருக்கும்.

# பின் நவீனத்துவம் - எதிர்கலாச்சாரம்?

டாக்டர். *ச. முத்துலட்சுமி.* எம்.ஏ., எம்.ஏ., பிஎச்.டி.,துறைத் தலைவர்,உயராய்வு மையம்,
தமிழ்த்துறை, அ.ப.ம. கல்லூரி. பழனி.

## முன்னுரை

தொல்காப்பியம் தொடங்கி இன்றைய சென்ரியு வரையிலான நீண்ட நெடிய இலக்கிய வளமை உடையது தமிழ்மொழி. பாரதிக்குப் பின்னரே நவீன இலக்கியங்கள் தமிழில் தோன்றின என்பது இலகக்கியத் திறனாய்வாளர்களின் துணிவு. நவீனத்துவம், பின் நவீனத்துவம் என்ற இலக்கியப் போக்குகள் தோன்ற பல்வகையான சமூக, அரசியல், பொருளாதாரக் காரணிகள் ஏதுக்களாயின. அதில் நவீனத்துவம் மறுத்தது பின் நவீனத்துவமா? அல்லது நவீனத்தின் நீட்சி, பின் நவீனத்துவமா? என்ற கேள்விக்கு இன்னமும் விடை இல்லை. நவீனத்தில் பாடுபொருள் மக்களியமாக இருந்தது என்றால் பின் நவீனத்துவம் நீண்ட நெடிய ஆழங்கால்பட்ட நமது இலக்கிய கட்டமைப்பை உடைத்துத் தகர்த்து அத்தகர்ப்பின் வழியே எல்லாவற்றையும் எதிர்ப்பதும், சிலவற்றைத் தீவிரப்படுத்துவதுமாய் அமைகிறது. மக்கள் - வரலாறு - சமூகம் இவற்றிலிருந்து இலக்கியத்தைப் பிரித்து, வெறும் தனிமனித அலசல்களையும் அவசியங்களையுமே உள்ளடக்கமாகக் கொண்டு இயங்குகிறது. சமூக ஒழுங்கமைவுகள் மிகவும் சிதைந்து கலாச்சாரச் சீரழிவுகள் வேகமான கீழ்நிலையை நோக்கி விரையும் மனித உறவுகளும் நாசமடைகின்றன. அதிகார வர்க்கத்தின் அடக்குமுறையைச் சகித்தபடி வளரும் எதிர்கலாச்சாரம் பழைய கலாச்சார போக்குகளின் மீதமிருந்த வெறுப்பின் அம்சங்களை வளர்த்து கலாச்சார ஆக்கிரமிப்புக்கான போக்குகளாக அது வெளிவந்தது. உயர் கலாச்சாரத்தின் ஆக்கத்திற்கு மறைமுகமாகப் பாடபட்ட, உழைக்கும் மக்கள் நேரடியாக உருவாக்கும் ஒரு கலாச்சாரமாகவே இந்த எதிர்கலாச்சாரம் உள்ளது. இப்போது இந்த எதிர்கலாச்சாரத்தின் திடகாத்திரமான குரலாக ஒலிப்பது தலித்தியமும் பெண்ணியமுமே.

## நவீனத்துவம்

1. பாரதியிடம் இருந்து தொடங்கும் இந்த நவீனத்துவம் வலுப்பெற்று பாரதிதாசன் காலத்தில் பின்நவீனத்துவமாக வளர்ச்சி பெற்றது. உணர்வை அடித்தளமாக, சுயமரியாதை கொண்ட "பெரியாரும்" சமூகத்தின் சீர்கேடுகளை தீண்டாமை ஒழிப்பு, விதி வேறுபாடுகளைத்தகர்தல், தமிழ் மொழியை - இனத்தை - நாட்டை முன்னிறுத்தல் என்ற தளத்திலேயே இயங்கினார். பாரதி - பாரதிதாசனின் அடியொற்றியே சுரதா, முருகுசுந்திரம் மற்றும் வாணிதாசன் போன்றோர் தோன்றினர். இதே காலகட்டத்தில் நாமக்கல் கவிஞர், கவிமணி போன்றோர் தமிழ் மரபுக் கவிதைகளின் செழுமையை உள்வாங்கி மரபினைப் போற்றிய நிலையையும் காணமுடிந்தது.

2. புதுக்கவிதை என்ற இயக்கம் நவீனத்துவத்தின் புதுப்பரப்பாக இயங்கியது. பழமையை உதறி பழைமைக்குள் புது வெளிச்சத்தை பாய்ச்சிட, வாழ்க்கை ஒரு புதிய தீட்சண்யத்துடன் வெளிப்பட்டது. யாதார்த வாதம் மார்க்சியத்தின் கைக்குள் வந்தபோது அரசியல் குரல் மேலோங்கியது. அழகியல் மறுக்கப்பட்டது. யதார்த்தம் இறுகிய தன்மையை அடைந்தது. முதலாளியத்துவத்தைக் கேள்விக்குள்ளாக்கும் சில கூறுகள் நவீனத்துவ இலக்கியங்களில் காணப்பட்டன. மனித வாழ்வை மனித உணர்வு தீர்மானிக்கவில்லை, மாறாக பொருளாதார அடித்தளந்தான் தீர்மானிக்கிறது என்பது மார்க்ஸியம். அரசியல் இலக்கிய வளமாகவே இலக்கியப் பொருள் முதல் வாதத்தை முன்னிறுத்தியே "யதார்த்த வாத இயங்கியல்" நவீனத்துவத்தின் வெளிப்பாடுகளாய் சமூகத்தை சீர்திருத்துவது, மேம்படுத்துவது என்ற புதிய அலையாய்க் கிளம்பின முற்போக்கு இலக்கியங்கள். முதலாளித்துவப் போக்கை கேள்விக்குள்ளாக்கும் சில கூறுகள் நவீனத்தில் இயங்கின.

3. ப்ராய்டிஸம், இருத்தலியல், யதார்த்தவாதம், மிகை எதார்த்தவாதம், ஸர்ரியலிசம், இயங்கியல், நனவோடை போன்ற பல புதிய தளங்களின்ஊடே இலக்கியத்தை திறனாய்வாளர்கள் அனுகினர். உருவம்,

உள்ளடக்கம் பெரிதும் விவாதிக்கப்பட்டது. புதினம், சிறுகதை என்ற இலக்கிய வகைகள் செழித்து வளர்ந்து பல்வேறு சமூகப் பொருளாதார உணர்வு நிலைகளைப் புதிய தளத்தில் புதிய வீறார்ந்த சொற்களில் முழு வீச்சுடன் வெளிப்படுத்திய நிலையில் குறியீடு, முரண், அங்கதம், இருண்மை போன்றவற்றை உத்திகளாய்க் கொண்டு படைப்புத்திறனுக்கு ஆற்றலையும் அழுத்தத்தையும் சேர்த்தனர். மனிதனுக்குள் இருக்கும் கலைஞனைப் புதுக்கவிதை இனங்கண்டது. இலக்கியம் துடிப்பும், வீச்சும் ஆழமும் பெற்றது. சோசலிச எதார்த்த வாதம், உருவத்திலும் உள்ளடக்கத்திலும் புதிய சமூகத்தைப் படைக்கும் மக்களைச் சித்தரிக்கும் இயங்கியல் சார்ந்ததாக அமைந்தது. எண்பதுகளில் மார்க்ஸியம் மிகுந்த அளவில் பேசப்பட்டது. க. கைலாசபாபதி, கார்த்திகேயன் சிவத்தம்பி, அ. மார்க்ஸ், கோவை ஞானி, கோ. கேசவன், சின்னப்ப பாரதி, எம்.ஜி. சுரேஷ், கே. டானியல், பெருமாள் முருகன், சி.ஆர். ரவீந்திரன், பொன்னீலன் ஆகியோர் குறிப்பிடத்தக்க மார்க்ஸிய இலக்கியத்தையும், திறனாய்வையும் முன்னேற்றிச் செல்பவர்களாவும் விளங்கினர்.

4. எதார்த்தப் பார்வைகளுடன் கீழ்த்தட்டு மனிதர்களைச் சித்தரிக்கத் தெரிந்த ஜெயகாந்தன் என்றைக்குமே பல விமர்சனங்களுக்கு ஆட்பட்டிருப்பவர். மன உணர்வுகளை அடிப்படையாகக் கொண்டு சில புதிய போக்குகளை " கங்கை எங்கே போகிறாள்" , " ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்" போன்ற புதினங்களை எழுதிய ஜெயகாந்தன், ப்ராய்டிசக் கருத்துக்களை வரவேற்று "ஈடிபஸ் காம்ளெக்ஸ்" என்ற ஒரு மனச்சிதைவின் விளைவுகளை "ரிஷிமூலம்" என்ற புதினத்தில் எடுத்தாண்டுள்ளார். உளவியல் ரீதியான நூல்களாக. ல.சா.ரா - வின் நூல்கள், நகுலனின் புதினங்கள் ஆகியவற்றைக் காணலாம். நீலபத்மநாபனின் படைப்புக்கள் அக்காலச் சமூகத்தின் உரைநடை வரலாற்றுப் பதிவுகளாகும்.

வானம்பாடி, மணிக்கொடி, சரசுவதி போன்ற இதழ்கள் சிறுகதை வளர்ச்சிக்குப் பெரிதும் துணை நிற்கின்றன. புதுக்கவிதை உலகில்தடம் பதித்தவர்களில் ந. காமராசன், மு. மேத்தா, சிற்பி, ந. பிச்சமூர்த்தி, அப்துல் ரகுமான், தாமு சிவராம், ஆத்மாநாம், பிரமிஸ், கலாட்பிரியா, கல்யாண்ஜி, வைரமுத்து, ஈரோடு தமிழன்பன், தணிகைச் செல்வன் போன்றோரின் புதிய அணுகுமுறைகள், முயற்சிகள் சொற்களின் எளிமையை வீறார்ந்த உள்ளீட்டுடன் வெளிப்படுத்தி, ஆத்தங்களை அழகுபடைத்தி வாசகர்களை புரிந்து கொள்ளவே கூடாது என்ற ஒரே நினைப்புடன் தங்கள் மேதாவிலாசத்தை பழங்களாலும், குறியீடுகளாலும் புதுப்புது, "பதப்பிரயோகங்களாலும்" விளக்கிக்காட்டிய படைப்பாளர்களும் உண்டு.

5. திறனாய்வுக்கலை நவீனத்தின் கொடை என்றே சொல்ல வேண்டும். எனினும் இன்னும் அந்தத் துறையில் போதிய வளர்ச்சி ஏற்படவில்லை என்பதை நாம் சற்றுக் கவலையுடன் அவதானிக்கத்தான் வேண்டும். எனினும் இத்துறையில் க.ந.சு., க. கைலாசபாபதி, கோ. கேசவன், சிவத்தம்பி, ந. மான், தி. நடராசன், க. பஞ்சாங்கம், வெங்கட் சாமிநாதன் போன்றோரின் பணி குறிப்பிடத்தக்கதாக அமைகின்றது. நாட்டார் வாழ்வியலை கி. ராஜநாராயணன் கதைகளாகவும், கட்டுரைகளாகவும் படைத்துத் தந்தார். ஆர். ராமநாதன், பக்வத்சலம், திரு. சக்திவேல், மா. லூர்து போன்றோர் வழக்கியல் பற்றித் திறனாய்வு செய்து தொன்மம், குறியீடுகள், தொல்லியல் பற்றிய புதிய பொருட்களின் புரிதலோடு இலக்கியங்களுக்குப் புதிய தெளிவையும் உளி வீசுகையும் தந்தனர். தமிழ் இலக்கிய வளர்ச்சி வரலாற்றில் சிற்றிதழ்களின் பங்கை நாம் மறுதளிக்க இயலாது. வணிக இதழ்களும் கூட நமது இலக்கிய வளர்ச்சியில் பெரும் பங்கேற்றுள்ளது என்பதை ஒப்புக் கொண்டே தீரவேண்டும். நவீனத்துவத்தை குறுக்கு வெட்டுத் தோற்றமாக, பருந்துப் பார்வையாக அக்கால இலக்கியச் சூழல் பற்றி விளக்க வேண்டியது பின் நவீனத்துத்தைப் புரிந்து கொள்வதற்கான முன்னோடி என்ற நிலையில் அவசியமாகிறது. நவீனத்துவம் பாரதி தொடங்கி தொண்ணூறுகள் உரை என்று நாம் வரையறுத்துக் கொண்டால் கட்டுரை நன் நோக்கில் தெளிவு பெறும்.

6. திரைப்படப் பாடல்கள் இலக்கியப் போக்கை மாற்றின. கவிஞர் உடுமலை நாராயணகவி, மருதகாசி, கண்ணதாசன், பட்டுக்கோட்டை கலியாண சுந்தரம் ஆகியோரின் கருத்தாளம் மிக்க பாடல்கள் மக்கள் மனதில் தடம் பதித்தன. அதன் பின்னர் வந்த புதுக்கவிஞர்களுக்கெல்லாம் திரையுலக நுழைவு ஒரு

கனவாகவே பரிமளித்தது. திரு. வைரமுத்து அவர்களின் சாகித்ய அகாடமி விருதும் புகழும் திரையுலக அங்கீகாரம் பெற்றாலே சிறந்த கவிஞனுக்குரிய அத்தனை தகுதியும் வருவது போன்ற மாயத் தோற்றத்தை ஏற்படுத்தி விட்டது. திரை உலகில் கால் பதிக்க அத்தனை பேருள்ளும் ஒரு போட்டி இருந்தே வந்தது எனலாம்.

### பின் நவீனத்துவக் காரணிகள்

பின்நவீனத்துவம் என்ற கருத்தை வரலாற்றாசிரியர் "ஆர்னால்டு டாயின்பீ" என்பாரே முதன்முதலில் பயன்படுத்தினார். நவீனத்துவத்தின் தொடர்ச்சியாகக் கருதப்பட்ட இந்தப் பின் நவீனத்துவம் 1980களுக்கு பின்பு வெறும் கலை வெளிப்பாட்டு உத்தி என்பதையும் தாண்டி அறிதல், அறிவியல், அரசியல், அறயியல் எனச் சகல பண்புகளையும் ஊடுருவி பரவி நிற்கின்றது. பற்றிக் கொள்ள எதுவுமற்ற ஒருவகையான கையறு நிலையில் நவீனத்துவ மனிதன் வாழ்கிறான். அடித்தளங்கள் ஏதுமின்றி மிதந்து திரியும் மையமிழந்த மனநிலையாளனாய் நிற்கின்றான். அவன் எதிர்கொள்ளும் உலகம் முதலாளிகளுக்கும் பணம் படைத்தவர்களுக்கும் சாதகமானது.. உலகப் பொதுமை என்றே கூறி அவர்களுக்கு ஒத்து இயங்கவும், சேவகம் செய்யவும் கடைத்தெரு நுகர்வுகளில் இவனைக் கட்டிப் போட்டும், வாழ்க்கை வசதிகளில் இவனை மயக்கி அதனைத் தேடுவதற்காகவே முதலாளித்தை ஏற்றுக் கொள்ளவும், அவர்களின் அதிகாரத்தை கேள்வியின்றி ஏற்றுக் கொள்ளவும் அவர்கள் சுரண்டலைச் சகித்துக் கொள்ளவும் சாமானிய மனிதனை அது அடிமைப்படுத்தியது. உலக அளவிலேயே தொழிலாளவர்க்கத் தலைமையிலான எழுச்சி அலை வடிந்து போக அமெரிக்க மேலாதிக்கம் உருவெடுத்தது. "நுகர்பொருள்" பெருகி சந்தைக் கலாச்சாரம் வணிகமயமாதல் உலகமயமாதல் என்று அவனைப் பொதுமைப்படுத்தி அவனது வேர்களையே அழிக்க முற்பட்டன. அதை எதிர்த்து போர்க்குரலாக கலகக் குரலாகவே இந்தப் பின்நவீனத்துவம் ஒலிக்கத் தொடங்கியது. பின நவீனத்துக்குப் பல போக்குகள் இருப்பினும் அவற்றுள் பெருங்கதையாடல்களின் சிதைவு, மொத்த தத்துவத்தை மறுத்தல், பண்டைத் தன்மைகளை வலியுறுத்துதல், தத்துவங்களின் அடிப்படையை கேள்விக்குறி ஆக்குதலே பின் நவீனத்துவம் ஆகும். இன்றைய வணிக கலாச்சாரத்தால், நுகர்பொருள் தன்மையால் பரிமாணங்களை இழந்து தடுமாறும் வாழ்க்கையை எந்தக் கோணத்தில் இருந்து பார்ப்பது என்று சிந்திக்கும் போதுதான் பின் நவீனத்துவம் என்று சொல்கிறது. இது முன்னைய பார்வைகளின் அழகும் சுகமும் வசதியும் நம்பிக்கையும் அற்றது. முதலாளிகளும் உயர்சாதியினரும் உருவாக்கி வைத்திருக்கும் உலகம் எங்களுடையது அல்ல. அது எங்களுக்குச் சில உரிமைகளை சலுகைகளாகத் தருமே ஒழிய எங்கள் விடுதலையை ஏற்றுக் கொள்ளாது. ஆகவே உங்கள் உலகத்தை நாங்கள் தந்ததாக வேண்டும். அறுபதுகளில் பிற்பகுதி தொடங்கி உலகெங்கிலும் கிளர்ந்த இயக்கங்கள் பெருங்கதையாடல்களை மன் வைக்காமல், எதிப்பு இயக்கங்கள், மனித உரிமை இயக்கங்கள், மாணவர் இயக்கங்கள், சூழல் பாதுகாப்பு, ஜனநாயக இன உரிமை, பெண்ணிய இயக்கங்கள் என பரவகைப்பட்டதாக அமைந்துள்ளது. கருத் தொகுப்பு என்பது இதிகாசத்தின் குரலாக இருக்கிறது. பின் நவீனத்துவம் கருத்தொருமிப்புக்குப் பதிலாக கருத்து வேறுபாட்டை உயர்த்திப் பிடிக்கின்றது. விரிந்த தளத்தின் வன்முறையின்மையை உணர்த்தும் பெரும் கதையாடல்களுக்குப் பதிலாக சிறுகதையாடல்களே இனி சாத்தியம். பேரிலக்கியத் தேடல்களுக்குப் பதிலாக சிதறல். ஒருமித்த பார்வைக்குப் பதிலாக பிளவுண்ட பார்வை என முன்வைப்பதை எவரும் புரிந்து கொள்ளுதல் இயலாது. இதுவா அதுவா என்பதற்குப் பதிலாக "இரண்டுமே" என்கிற பதிலின் சாத்தியத்தை நாம் புறக்கணித்துவிட முடியாது! தர்க்கரீதியிலானவற்றை மறுத்து தர்க்க வகைப்பட்ட அறிவும் இனி சாத்தியமே.

### தலித் இலக்கியங்கள் - இயக்கங்கள்

தமிழகத்தைப் பொறுத்தவரை தலித் இலக்கிய வளர்ச்சி பெரியாரின் தூக்கத்தில் இருந்தும் மார்க்சியத்தைப் பார்வையொடு நடத்த பொருளாதாரப் போராட்டங்களும், தாழ்த்தப்பட்ட மக்கள் அமைப்புகளின் செயல்பாடுகளும் ஒரு வளமான தளத்தை அமைத்துக் கொடுத்து இருக்கின்றன. தலித் என்ற சொல்லுக்கு இன்று மிகப் பரந்த தளத்தில் பொருள் சொல்லப்படுகின்றது. சாதிக்கும் அப்பாற்பட்டு அனைத்து மக்களின்

ஒடுக்கு முறைக்கு மலிந்த வாழ்க்கையை கணக்கில் எடுத்துக்கொண்டதன் விளைவாக அனைத்து ஒடுக்கப்பட்ட மக்களை அடையாளப்படுத்தும் ஒன்றாக தலித் இயக்கம் ஏற்பட்டுள்ளது. இது ஒரு சாதியைக் குறிக்கின்ற ஒன்றாகக் கருத்தக் கூடாது. சுரண்டல் மற்றும் கொடுமை அக்கிரமங்களை எதிர்க்கிற சொல்லாக, அவமானம், பாதுகாப்பின்மை, எதிர்ப்பு என்ற பொருளைத் தருவதாக அமைய வேண்டும்.

## தலித் இலக்கியம்

1. எதிர்மறையான சொல்லாடல்களால் ஒரு அதிர்ச்சியைத் தருவது.
2. தாமே புதிய தொன்மங்களைப் படைத்துக் கொள்வது.
3. பரபுகளைச்சிதைப்பது
4. இலக்கிய வரையறைகளை மீறி எல்லாவிதமான இலக்கண இலக்கிய அத்து மீறல்களைச் செய்வது.
5. தங்களது பேச்சு மொழியில் தங்களது நாட்டுப்புறக் கலை மரபுகளின் வழியே பேசுவது.

என்ற ஒரு புது இலக்கணமாகக் கொண்டுள்ளது.

நாட்டுப்புறக்கதைகளில் தலித் மக்களை கேலி செய்கிற மேல்சாதிக்காரர்களின் கதையாடல்களும், மேல்சாதிக்காரர்களை கிண்டல் செய்கிற தலித் கதைகளும் உள்ளன. பாலியல் ஒழுக்கு நெறியில் பிறழாது நின்ற பெண்டிரைக் குறித்து மட்டும் செவ்வியல் இலக்கியங்கள் புகழ்ந்து பேசுகின்றன. ஆனால் அடித்தள மக்கட் பிரிவைச் சேர்ந்த பெண்டிர் எதிர்கொண்ட பாலியல் வன்முறை அவ்விலக்கியங்களில் இடம்பெறவில்லை. பெரியார் சொன்னது போல் இலக்கியம் கடவுள் மதம் எல்லாமே சாதி அடிப்படையில்தான் இயங்கின. திரு. சிந்தலிங்கையா நாட்டுப்புறத் தேவதைகள் பற்றிய ஆய்வின் போது கீழ்சாதி மக்களின் தெய்வங்கள் வீடற்று, கூரையின்றி இருந்து. அது ஏன் என்று கேட்டபோது ஒருவன் மீது சாமி வந்து உங்களுக்கே கூரை இல்லை, எனக்கெதுக்கு கூரை என்றதாம். வலுக்கட்டாயமாக கோயில் கட்டியபோது கதவு வைக்கும் போது உங்களப் போல நானும் மழையில நனஞ்சு, வெயிலிலே காய வேண்டும் என்று சொன்னதாம். இதுதான் கீழ்தட்டு மக்களின் சாமியாகும் குல தெய்வ வழிபாடும் தெய்வங்களும் மனிதர்களைப்போல சீற்றம் கோபம் அன்பு கருணை எல்லாம் கலந்தது. இதில் பிரபஞ்சத்தைப் படைத்து, அதைக் கடந்து நிற்கின்ற ஏகமான ஒரே தெய்வம் "அத்வைத" தெய்வம் அவர்களுக்கு இல்லை.

## பெண்ணியம்

எதிர்காலச் சாரத்தின் இன்றியமையாக் குரலே பெண் விடுதலைதான். தாழ்த்தப்பட்டோரும் மேல் சாதியில் பெண்களும் கூட ஒன்றாகவேதான் மனு தர்மத்தில் பார்க்கப்பட்டனர். இரண்டு பேருக்கும் ஒரே தண்டனை தான் விதிக்கப்பட்டது. பெண் நில உடைமையாளர்களின் [illegible]ப்பொருளாக என்று நினைக்கப்பட்டாளோ அன்றே பெண் அடிமைத்தனம் புகுந்துவிட்டது. வீரம் செறிந்த வீரயுகத்தில் பெண் வெற்றி பெற்றவனுக்குச் சொந்தமானவள். அவள் ஆணுக்காக ஆணைச் சார்ந்தவளாகவே இருக்க வேண்டும் என்பதனை இலக்கியங்களும், அறநூல்களும், தரும சாஸ்திரங்களும் வற்புறுத்தின. அவளைத் தன்கட்டுப்பாட்டிலேயே வைத்து இருக்க ஆண் கற்பு என்கிற ஒன்றை அவளது கழுத்தில் நுகர்த்தடியாக மாற்றினான். இலக்கியங்கள் பத்தினிப் பெண்டியரை மழை பெய்யச் செய்யும் பெண் என்று உணர்த்திப் பிடித்தது. புராணங்கள் தெய்வமாக்கியது. ஆனால் அவளை மட்டும் மனுசியாக மட்டும் பார்க்கவில்லை. பெண் ஓர் தனி உயிரி என்பது மட்டுமல்ல அவளுக்கு எனத் தனி ஆளுமை, தனி உலகம் உண்டு என்ற முறையில் ஆண்களினால் உருவாக்கப்பட்ட உலகிலிருந்து வரலாற்றிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள தனது தனித்துவத்தைப் பிரகடனம் செய்வது பெண் விடுதலையின் முதற்குரல். ஆண்களால் உருவாக்கப்பட்ட உலகை மாற்றியமைப்பது அல்லாமல் தனக்கென உரிய சிந்தனைப் போக்குகளையும் வளர்த்துக் கொள்வதுதான் பெண்ணியம் அல்லது பெண்விடுதலை ஆகும்.

உடல்ரீதியாக ஆணுக்குரிய நேர்கோட்டு அனுபவங்கள் பெண்ணுக்குச் சாத்தியமில்லை. தொடர்பற்ற உயிர்தூபம் பெண்ணிற்கு உடற்கூறு ரீதியாகவே தவிர்க்க இயலாததாகிறது. இதுவரை புழங்கிவரும் முறையியல்களுக்கு பெண்ணியம் பெரும் சவால்களை முன்வைக்கிறது.

மரபு என்ற பெயரில் ஆண்கள் விடுத்த சமூகக் கட்டுப்பாடு பண்பாட்டைத் தளையாகி, பெண்களின் தனித்த செயல்பாட்டுக்கு தடையாகாது. ஆணின் ஆளுகையை, கொடுமையை பொருளாதார அடிப்படையில் வாழ வழியின்றி ஆதரிப்பார் இன்றித் துன்புறுவோம் என்ற யதார்த்தம் அவர்களை அச்சுறுத்தியது. பெரும்பாலான பெண்கள் இதுதான் தலையெழுத்து என்றெண்ணி வாழ்ந்து மறைந்தனர். பெண்ணியம் என்பது அடிமைப்பட்டு சித்ரவதைப் பட்டு வாழும் பெண்களை அடிமைத் தளையில் இருந்து மீட்பதாகவே அமையும்.

## முடிவுரை

நவீனத்துவம் நம்மோடு ஒட்டிய அளவு பின் நவீனத்துவம் நம்மோடு ஒட்டவில்லை. நமது கலை, இலக்கியம் முதலியவற்றுள் நுழைந்திருந்த போதும் இதைப்பற்றிய பலத்த வினாக்களும் இடையூறுகளும் நம்முன்னே உள்ளன. வாழ்க்கையில் அசல் என்று ஒன்றுமில்லை. எல்லாமே நகல்கள் மற்றும் நகல்களின் நகல்கள் என்பதற்குத் தரும் அழுத்தம் பார்பிணியத்துக்கு இட்டுச் செல்லும் வாய்ப்பும் இருக்கின்றது. எனினும் பின்நவீனத்துவம் எல்லாவற்றையும் கலைத்துப் போடுகின்றது. உண்மை - பொய், உயர்ந்தவர் - தாழ்ந்தவர் என்பவைகள எல்லாம் கலைத்துப் போடுகிற இலக்கியம் என்பதற்குத் தனித் தகுதி இல்லை என்கிறது. பழைய புராணக்கதைகள் முதலியவற்றைத் தலைகீழாகப் புரட்டிப் போடவும் பின் நவீனத்துவம் பயன்படும். யதார்த்தத்தின் தேவைகளை முன்வைத்து வேறுபாடான, முரண்பட்ட, மாறுபாடான, படைப்புக்களில் ஈடுபடலாம். இது படைப்புலகை விரிவு படுத்த நமக்குப் பயன்படும். பொருளையும் அதிகாரத்தையும் மதிக்காதவர்கள் உயர்வகை உயிர்களுடன் கலந்தது கரைந்தது. பிரபஞ்சம் என்பதை ஆழ உணர்ந்தவர்கள் பின்நவீனத்துடன் முரண்பட முடியாது.

## உதவிய நூல்கள்


1. தமிழில் நவீனத்துவம் - பின்நவீனத்தும் - ஞானி.
2. கலாச்சாரம், எதிர்கலாச்சாரம், புதிய கலாச்சாரம் - ந. ரவீந்திரன்.
3. மறு வாசிப்பில் தமிழ் இலக்கியம் - ஞானி.
4. பின்நவீனத்துவம், இலக்கியம் அரசியல் -அ. மார்க்ஸ்.
5. பெண்ணியம் அணுகுமுறைகள் - இரா. பிரேமா.
6. தலித் சிந்தனை விவாதம் - தே. ஞானசேகரன்.

# <u>நிழல் தராமரம் - பெரிய புராணத்தின் மறுவாசிப்பு</u>

முனைவர். *கு. லீலாவதி,* விரிவுரையாளர்,
அருள்மிகு மீனாட்சி அரசு மகளிர் கலைக்கல்லூரி, மதுரை.

தற்காலத்தில் இலக்கியமானது வெறும் ஜனரஞ்சகத்துக்கப் பதில் தீவிரமான வாசிப்புக்கு உள்ளதாக மாறியுள்ளது. தீவிர வாசிப்புக்காக நாவல்களில் தத்துவ தரிசனத்தை எதிர்பார்க்கும் போக்குள்ளது. வெறும் பாத்திரச் சித்தரிப்புக்காக மட்டும் நாவல்கள் வேண்டியதில்லை என்கிற கருத்து உலாவுகிறது. இலக்கிய இன்பத்தோடு ஒரு சமூகச் செய்தியும் வேண்டும் என்பது பழைய நோக்கு. இலக்கிய ரசனையோடு தத்துவச் சிந்தனையைத் தருவது தற்போதைய போக்கு. இதன் மற்றுமொரு கூறே வரலாற்றை மறுவாசிப்பு செய்வது. இது வெறும் சரித்திர நாவல் படைப்பாக்கம் அல்ல. மாறாக ஏற்கெனவே இலக்கியமாகியுள்ள வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்தல். புராணங்களை அடிப்படையாகக் கொண்டு புதியது படைத்தல் இந்த வகை.

பெரிய புராணத்தில் வரும் கூன் பாண்டியன், திருஞான சம்பந்தர், குலச்சிறையார், மங்கையர்கரசியார் -- முதலியோர் வரலாற்று மனிதர்களே. இவர்கள் அங்கே இலக்கிய மாந்தர்களாகவும் ஆகியுள்ளனர். அருணனின் "நிழல் தரா மரத்" தில் இவர்கள் மீண்டும் மறுவாசிப்புக்கு உள்ளாகிறார்கள். சைவ இலக்கியமான பெரியபுராணம் தரும் செய்திகளில் ஒளிபாய்ச்சப்படாத அடுத்த பக்கம் -- சமணர் தரப்பு வாதம் -- என்னவாக இருந்திருக்கும் என இந்நாவலில் ஆசிரியர் யூகிக்க முயன்றிருக்கிறார்.

மத மோதல்கள் அண்மைக் காலத்தில் உண்டானவை அல்ல. வர்ணங்கள் எப்போது உண்டாகிக் கறார்படுத்தப்பட்டனவோ, அப்போதிருந்தே இவை வந்துள்ளன. இந்நாவலாசிரியர், அருணன் கூறுவது போல "அதில் (மத மோதலில்) காலூன்றி எனது கற்பனைச் சிறகை விரித்திருப்பதன் நோக்கம் மத வெறியின் அஸ்திவாரம் எவ்வளவு ஆழமானது என்பதனைத் தமிழர்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்பது. புரிந்து கொண்டு அதற்கேற்ப மனித நேய அணிவகுப்பை ஒழுங்கமைத்துக் கொள்ள வேண்டும் என்பது" ("நிழல் தராமரம்", "என்னுரை" ப3)

இதுவே இம்மறுவாசிப்பின் நோக்கம்.

தமிழகத்தில் சமணம் கோலோச்சிய காலத்தில் அரசர்கள், உதாரணமாக மகேந்திர பல்லவன், அரிகேசரி மாறவர்மன் போன்றோர், சமணம் சார்ந்தவர்களாக இருந்துள்ளனர். மகேந்திர பல்லவனை திருநாவுக்கரசரும், அரிகேசரி மாறவர்மனை ஞானசம்பந்தரும் சைவத்துக்கு ஈர்த்து வந்துள்ளனர். இது தமிழக வரலாற்றில், கி.பி. 7ம் நூற்றாண்டில் , ஒரு முக்கியமான திருப்புமுனையாகும். ஆனால் "பெரிய புராண"த்தில் உள்ளபடி இவ்விரு மாற்றமும் அவ்வளவு எளிதாக நடந்தவை அல்ல. "தமிழரின் தத்துவ மரபு" எனும் நூலில் கூறப்பட்டுள்ளது போல

"ஒருபுறம் சமண, புத்த சமயங்களில் இருந்த பலவீனங்க[illegible]படுத்திக் கொள்ளப்பட்டன. மறுபுறம், அவற்றின் மீது பலமுனைத் தாக்குதல் தொடுக்கப்பட்டது." (பக்கம் 202).

சமண புத்த சமயங்களை இவ்வாறு அடக்கி ஒடுக்க சைவக் குரவர்கள் கிளம்பியதன் நோக்கம் அச்சமயங்களில் இருந்ந இல்லற வெறுப்பு குறைகள் மட்டுமல்ல, துறவு நிலைக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்த இச்சமயத்தவர் மேல் தமிழக மக்களிடையே ஒரு அலட்சிய மனோபாவம் வந்திருக்கலாம். அதை நன்கு பயன்படுத்திக் கொண்ட சைவ சமயக் குரவர் மூவரும் இல்லற வாழ்வைப் போற்றி, சிவனை "உமையொரு பாகன்", "பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே" என்றும் "ஒப்புடைய மாதர்" என்று பெண்களைப் போற்றியும் மக்கள் மனதில் இடம் பிடித்து அதன் மூலம் வேத மரபை -- வேள்வி முறைகள் மற்றும் வர்ணாசிரம அமைப்பை -- மீண்டும் நிலை நிறுத்த நோக்கம் கொண்டனர்.

தங்களின் அன்பு நெறிக்கு நேர் எதிரானது வேத மரபு என உணர்ந்தே அதை மறுத்தன சமண, புத்த சமயங்கள், வேத மரபானது வேள்வி என்பதன் மூலம் நேரடியான உயிர்ப்பலியையும், வர்ணாஸ்ரம அமைப்பு என்பதன் மூலம் மறைமுகமான உயிர்வதையையும் செய்தது. சுருங்கச் சொன்னால்,

"சங்கம் மருவிய காலம் துவங்கி பல்லவர் காலம் வரை நடந்த தர்க்கவியல் ரீதியான தத்துவ மோதல்களுக்குப் பதிலாக, ஒரே கடவுளிடம் சரணாகதி அடைந்து விடுகிற, பகுத்தறிவுக்கு இடம் தராத, நம்பிக்கை பால்பட்ட, ஆனால் இகவாழ்விற்கு முக்கியத்துவம் தருகிற சைவ மதம் ஒருபுறம் தமிழ் கொண்டும், இசை கொண்டும், மறுபுறம் அரசு வன்முறை மூலமாகவும், பல்வேறு சூழ்ச்சிகள் மூலமாகவும் தமிழகத்தில் புகுத்தப்பட்டது என்பதே பக்தி இயக்கத்தின் சாரமாகும்."

ஆகவே வருணாசிரம கீழடுக்கில் இருந்த வைசியர் மற்றும் இழிசனர்களின் சமயங்களாகிய சமணம் மற்றும் பௌத்தத்தை வேதியர், ஆதிக்க பலமுள்ள அரசர்களைத் தம்பால் ஈர்த்துக் கொண்டு, வீழ்ச்சியடையச் செய்துள்ளனர்.

திருஞான சம்பந்தர் தங்கியிருந்த மடத்திற்குத் தீவைக்கப்பட்டதால், "திருமடப்புறம்பு பழுது செய்வதோ". எனவே "பையவே சென்று பாண்டியர்க்காகவே" என சம்பந்தர் வேண்டிக் கொண்டதாலேயே பாண்டியனுக்கு வெப்புநோய் தாக்கியதாக "பெரியபுராணம்" கூறுகிறது. சமணர்களின் தவறுக்காக அந்தத் தீயை பாண்டியன் மீது ஏவியதன் மூலம் சம்பந்தரின் மன்னிக்கும் குணம் கேள்விக் குறியாகிவிடுகிறது.

மேலும் தான் சார்ந்திருந்த சமண சமயத்தின் உதவியால் அந்நோய் தீர்க்கப் பெறாதபோது, சம்பந்தரின் திருநீற்றுப் பதிக உதவியால் நோய் நீங்கி, நம்பிக்கையின் பலனாய் சைவத்தை நோக்கித் திரும்பினார் கூன்பாண்டியன் என்றும் "பெரிய புராணம்" கூறுகிறது.

சமய மோதல் என்பது அடிப்படையில் வருணமோதல் தான். இதை நாவலாசிரியர் "நிழல் தரா மர"த்தில் சில உள்கட்டமைப்பினால் சாதித்திருக்கிறார். பெரிய புராணத்தில் எந்த வருணத்தைச் சேர்ந்தவர் என்று குறிப்பிடப்படாத குலச்சிறையார், இந்நாவலில் வேதிய குலத்தைச் சார்ந்தவராக கற்பனை செய்யப்பட்டுள்ளனர். குலச்சிறையாரின் மகள் புவனநாயகி (இவள் ஒரு கற்பனைப் பாத்திரம்), வைசிய இளவலாகிய அபிநந்தனை விரும்புகிறாள். காதலுக்கான முட்டுக்கட்டையில் சமய மோதலைக் காணமுடிகிறது. புராண மாந்தர்களாகிய மங்கையர்க்கரசி, குலச்சிறையார் மற்றும் திருஞானசம்பந்தர் ஓரணியாகவும், கற்பனைக் கதாமாந்தர்களாகிய அபிநந்தன், புவனநாயகி, திருமேனிபிரியாதான், விமலநாதன், கனக நந்தி, புட்பநந்தி போன்றோர் எதிரணியாகவும் உள்ள இந்நாவல் சமயமோதலை நோக்கியே படம் பிடிக்கிறது. சைவமும், வைணவமும் இணைந்து சமணர்களை வென்றழித்ததை இந்நாவல் தெளிவாகச் சித்தரிக்கிறது.

நாவலின் கதை நடக்கும் அந்தக் காலத்தில் சமயங்களின் வளர்ச்சிக்கு தத்துவவாதமே பிரதானமாக இருந்துள்ளது. உதாரணமான, "மணிமேகலை", "குண்டலகேசி", "நீலகேசி". ஆனால் தத்துவ விசாரணைக்கு உடன்படாத சம்பந்தர் நம்பிக்கையின் அடிப்படையிலும், அனல்வாதம், புனல்வாதம் எனும் புது உத்திகள் மூலமாகவும் வாது செய்தார் என்பது பெரியபுராணத்தின் மூலம் தெரிகிறது.

கூன் பாண்டியனின் வெப்புநோய் தீர்ந்து அவரின் நம்பிக்கையைப் பெற்று மதமாற்றம் செய்யும் திருஞான சம்பந்தர், அதே நம்பிக்கை மற்றும் அதீத மாந்திரீக யுக்திகளின் மூலம் சமணர்களை மனத்தளவில் செய்ய முடியவில்லை. ஏனெனில் தத்துவ ரீதியாக தோற்றிருந்தால் சமணர்கள் தங்கள் தத்துவத்தை விட்டிருப்பார்கள். ஆனால் நம்பிக்கை சார்ந்து வேறொரு மதத்தை தழுவுவதற்குப் பதில் கழுவிலேறி உயிர்விடத் தயாரானார்கள் எண்குன்றத்துச் சமணர்கள், எண்ணாயிரம் பேரும் கழுவிலேறி உயிர்விடும் காட்சி எவரின் மனசாட்சியையும் உலுக்கும் காட்சி. இக்காட்சி ஞானசம்பந்தர் மௌன சாட்சியாக இருந்ததை பெரியபுராணம் இவ்வாறு கூறுகிறது:

" புகலியல் வந்த ஞானபுங்கவர் அதனைக் கேட்டும்
இகவிலர் எனினும் சைவர் இருந்து வாழ்மடத்திற்கு தீங்கு
தகவிலாச் சமணர் செய்த தன்மையால் சாலும் என்றே
மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடாது இருந்த வேலை"

இதை நாவல் உணர்ச்சிகரமாக வருணிக்கிறது.

" எண்ணாயிரம் சமணர்களும் ஏறும் வரை பொறுமையாக இருந்து கவனித்து கொண்டிருந்தார் சம்பந்தர். கர்ப்பகிரகத்திற்குள் பூஜை முடியும் வரை வெளியே காத்திருக்கிற பக்தன் போலக் காத்திருந்தார். சிலர் கால்களை ஆசனம் போட்டுத் தட்டில் அமர்ந்ததையும், சிலர் இரு கால்களையும் தொங்கவிட்டு அமர்ந்ததையும் ... சிலர் வயிற்றின் வழி நெஞ்சில் ஏற்றியதையும் கவனித்துக் கொண்டே இருந்தார். கழுமரம் ஏற இத்தனை முறைகள் உண்டா என்று ஆச்சியரித்தோடு பார்த்துக் கொண்டிருந்தார்... பீச்சியடித்த் ரத்தம் மரத்தைச் சுற்றித் திட்டுத் திட்டாக நின்றது... ஏதோ நினைவு வரப்பெற்றவராய் பக்கத்தில் திரும்பிப் பார்த்தார். நின்ற சீர் நெடுமாற பாண்டியன் மயங்கிக் கிடந்தான்." (ப.300).

கூன்பாண்டியன் கானச் சகியாமல் மயங்கிய நிலையிலும், மௌன சாட்சியாய் சம்பந்தர் அதைக் கண்டு நிற்பதையும் காணும் போது, மீண்டும் அவரது மன்னிக்கும் குணம், மனிதநேயப் பண்பு கேள்விக் குறியாகிவிடுகிறது.

நிழல்தரா மரங்களை சமணர்கள் தழுவுவது மிகக் கொடூரமான நிகழ்வு. அதைக் காணச் சகியாத சமணர்களில் ஒருவனே - அபிநந்தனே - சம்பந்தரின் திருமணவீடு தீக்கிரையாகக் காரணமாக இருந்தவனாக இந்நாவல் சித்தரிக்கிறது. பெரியபுராணம் கூறும் ஞான சம்பந்தர் திருமண நிகழ்ச்சியில் தோன்றிய ஜோதியில் கலந்தார் எனும் செய்தி நிழல்தராமரத்தில் இவ்வாறு மறுவாசிப்புக்கு உள்ளாகி உள்ளது.

ஒன்று சொல்ல வேண்டும் "நிழல் தராமரம்" எனும் இந்நாவல் வறட்சியாக சமய மோதலை மட்டும் சொல்லுவதல்ல மாறாக புவனநாயகி அபிநந்தன், திருமேனி, பிரியாதாள், மாறன் எயினன், விமலநாதன் ,குணமாலை போன்றோரின் காதலைச் சொல்லும் கதை. இவர்களது தனி மனித வாழ்வின் ஊடே தான் சமயமோதல் சொல்லப்படுகிறது.

பெரியபுராணம் சைவ சமயச் சார்புள்ளது என்றால் நிழல் தராமரம் சமணச் சார்பு நாவலோ என சில சமயங்களில் எண்ணத் தோன்றுகிறது. தோற்றம் எப்படியிருந்தாலும், வெளிச்சத்துக்கு வராத ஒரு பகுதி வெளிச்சம் போட்டுக் காட்டப்பட்டுள்ளது என்பதே உண்மை.

இக்கதையைச் சொல்வதற்கு ஆசிரியர் பயன்படுத்தியுள்ள உத்தியும் சற்றே புதுமையானது. கதை முழுமையுமே ஒரு வயசான கதைசொல்லியின் மூலமாக வெளிப்படுகிறது. கதைகேட்பவரின் கண் முன்னமே அந்தக் கதைசொல்லி, தான் ஆயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன் நடந்த இக்கதையின் ஒரு பாத்திரம் என்று சொல்லி குளத்து நீரை கலக்கிக் காணாமல் போகிறார். அது தான் கேட்டது அனைத்தும் மெய்யா பொய்யா என்றொரு குழப்பத்தை - கலக்கத்தை - கதை கேட்டவருக்கு உண்டாக்குகிறது. இதுவரை எதார்த்தவாதத்தில் சென்று கொண்டிருந்த நாவல் மாயாஎதார்த்தவாதத்திற்குள் பிரவேசிக்கிறது. மிரண்டு போன கதை கேட்டவருக்கு மலையாகப் படுத்திருந்த யானையும் மடக்கிய கால்களை உதறி எழும்பத் தயாரானது போல ஒரு தோற்றம்படுகிறது.

## நாவலின் புனைவு மற்றும் சித்தரிப்புக்கு ஓர் உதாரணம்

"நெருப்பு சூழும் திருமண வீட்டில் சம்பந்தர் சுற்றத்தாரும் தொண்டர் குழாமும் வெந்து கருகுவதைத் தனது ஊனக்கண்ணால் பார்த்தார். சமணர் ரத்தம் நெருப்பாய் தாவியது. பஞ்சபூதத்தில் ஒன்று இன்னொன்றாய் மாறியது .. அனைவரும் ஜோதியில் கலந்தார்கள் ஜோதியில் வர்ணங்கள் கரைந்தன கரைந்ததால் ஜோதி மாகஜோதியானது" (ப.304)

இதுபோன்ற காட்சிப் புனைவுகளில் விவரிப்புகளில் ஆசிரியரின் திறமை வெளிப்படுத்துகிறது.

## துணைநூற் பட்டியல்

சேக்கிழார் - பெரியபுராணம்

அருணன் - நிழல்தராமரம், (மதுரை வசந்தம் வெளியீட்டகம்)

தமிழரின் தத்துவ மரபு 2003, மதுரை வசந்தம் வெளியீட்டகம் 2004)

# நேர் கோட்டு வாசிப்பும் குழைப்பும்

*ந.வேலுமணி,* தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ கிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரி, கோவை - 641008.

மனிதன் சமூகமாகத் தோன்றிய காலம் தொட்டு தான் சார்ந்த செய்திகளைக் குறியீடுகளாக, சைகைகளாக, நடிப்புகளாக, கதைகளாக, பாடல்களாக வெளிப்படுத்தியிருக்கிறான். கதை சொல்வதென்பதும் கதை கேட்பதென்பதும் காலங்காலமாக நிகழ்ந்து வரும் நிகழ்வுகள் தான் என்றாலும், அந்தக் கதை சொல்லல் மரபில் காலப்போக்கில் மாற்றங்கள் நிகழ்ந்தே வந்திருக்கின்றன. நவீனத் தமிழ்ச் சூழலில் பெரும்பான்மை வாசிப்பு முறைகளுக்கு மாற்றாக புதிய வாசிப்பு முறைகளை புனைவு எழுத்தாளர்கள் சோதனை முறையில் இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலம் முதலே செய்து வந்துள்ளனர். அந்த வகையில் தமிழிலக்கியப் புதின வகைகளில் நகுலன், சுந்தர ராமசாமி, நீல பத்மநாபன், ராஜநாயகம், கி.ராஜநாராயணன் போன்றோரின் புதினங்கள் காலம், வெளி பற்றிய பிரக்ஞையில் புதிய சோதனை முயற்சிகளோடு படைக்கப்பட்டுள்ளது. மேலும், நவீனத் தமிழிலக்கியச் சூழலில் மேலை நாட்டுக் கல்வி முறையின் தாக்கமும், மேலை இலக்கியப் புனைவுகளின் மொழி பெயர்ப்புகளும் நவீனத் தமிழிலக்கியப் புனைவுகளூடாகத் தமிழ்ச் சமூகம் சார்ந்த வாசிப்பு மற்றும் பொருள்கொள்ளல் முறையில் மாற்றுச் சிந்தனையை முன்வைத்தன. அது மேலைக் கோட்பாட்டு இயக்கங்களோடு இணைந்து நான்லீனியர், மெட்டாபிக்ஷன், மேஜிக்கல் ரியலிசம், கதாச் சுருள் எழுத்து, கதைப் பரப்பைக் கலைத்துப் போடல் என்பதாகத் தமிழ் வாசகர்களுக்கு அறிமுகப்படுத்த முயன்றன. அந்த வகையில் தமிழில் தீவிர எழுத்து - வாசிப்பு - விமர்சனம் போன்ற தளங்களில் அறியப்பட்ட எழுத்துலக இரட்டையர்களான பிரேம்-ரமேஷ் குறிப்பிடத்தகவர்கள். அவர்களின் புதினமான சொல் என்றறொரு சொல் குறித்துக் கட்டுரை பேச முற்படுகிறது.

மேற்கின் நவீனத்துவக் கோட்பாட்டுப் போதாமைகளின் வெளிப்பாடாகக் கண்டறியப்பட்ட பின் நவீனத்துவக் கோட்பாடு, நவீனத் தமிழிலக்கியச் சூழலில் உள்வாங்கப்பட்டுப் பெரும்பான்மை அறிவியல் சிந்தனை மரபுகளுக்கு மாற்று மரபுகளைத் தேடுவதும், மையக் கருத்தாக்கம் சார்ந்த ஒற்றைப் பரிமாணங்களைக் கேள்விக்குட்படுத்தியும், சிதைத்தும் வருகின்றன.

அந்த வகையில் பிரேம்-ரமேஷ் சொல் என்றொரு சொல் புதினத்தை சீமியாட்டிக் நாவல் என்றும், பின் நவீனத்துவ நாவல் என்றோ, பின் நவீனத்துவச் சிறுகதை என்றோ உலகில் எங்கும் எதுவுமே உருவாக்கப்பட்டதே இல்லை. பின் நவீனத்துவ வாசிப்பு, பின் நவீனத்துவ விமர்சனம், பின் நவீனத்துவ ஆய்வு போன்றவை மட்டுமே உண்டு என்று கூறுகின்றனர்.

புனைவின் சொற்பரப்பிற்குள் சொற்கள் பலவாறாக குவித்து வைக்கப்பட்டு பல்வேறு நிலைகளில் அர்த்தமுடையதாகவும், அர்த்தமற்றதாகவும் புதினத்தின் நெடுகக் கையாளப்பட்டுள்ளன. பல புதிய சொற்கள் கண்டறியப்பட்டுள்ளன. தொன்மையானத் தமிழ்ச் சொற்களூடாகவும், கதைகளூடாகவும், சொற்களே மாந்தர்களாக வந்து போகின்றனர். புதினத்தில் பாத்திரங்கள் பல மாதிரிகளாக படைத்துக் காட்டப்பட்டுள்ளனர். அதீதன், பிரபஞ்சனா, பிரேதா, விமோசனா, அரூபதர்சினி, ஆத்மார்த்தி போன்றவர்கள் புனைவில் உலவுகின்றனர். அதீதனின் உடலில் பல பகுதிகள் தசைத் தன்மையிழந்து பிளாஸ்டிக்காக மாறியிருக்கின்றன. சில இடங்களில் உடல் அழுகியிருக்கின்றன. அவரது உடலில் ஓடும் ரத்தம் நீலம், பச்சை நிறங்களில் இருக்கின்றன (ப.18) இவன் மாந்திரீகர்களாலும், போதகர்களாலும் வளர்க்கப்பட்டவன். இவனுக்குக் கனவுகளைக் கொடுப்பவர்கள் வேத கன்னிகள். இவன் கனவுகளை உடலில் வலியும் உணர்வில் இசையும் நூல் வழியாக வெளிப்படுத்துபவன். இவன் இருள் நகரத்தில் உள்ள தேசிய நூலகத்தில் பணி புரிந்தவன். அங்கு அந்த நூலகத்தைத் தீயிட்டுக் கொளுத்தி தீக்கிரையாக்கியவன். (ப.22)

அதீதன் தன் நண்பனுடன் உடல் தாபத்தைத் தீர்த்துக் கொள்பவன். இருவரும் வெகு இயல்பாக உருவை மாற்றிக் கொண்டு உலவுவதும் ஒருவருக்காக மற்றொருவர் சிறைத் தண்டனை அனுபவிப்பதுமாய் உள்ளனர். (ப.61) தோலுக்கு உட்புறம் முழுமையான ஒரு பெண்ணாகவும் அவனுக்குள் ஒரு கருக்கோளம் இருந்ததாகவும் புனையப்பட்டுள்ளது. (ப.140) அதீதன் பிறந்த நேரத்தில் அருகில் உள்ள காட்டில் புலியும் குட்டியீன்றது. அதீதனின் தாயிடம் புலியின் குட்டி பாலூட்டியதும், அதீதன் புலியிடம் பாலூட்டியதும் சொல்லப்படுகிறது. ஆறாம் வயதில தனக்கென எழுத்து வடிவத்தை உருவாக்கிக் கொண்டு படிக்கத் தொடங்கியவன். அடிமைகளிடமிருந்து தப்பிக்க

உறுப்புக்களைச் சிதைப்பவனாகவும், சிறைக் காவலிலிருந்து தப்பிக்கச் சிறைக் காவலர்களுக்கு உடலின்பம் தருபவனாகவும் இருக்கிறான். (ப.142-147). அதீதன் பதினெட்டுத் தலைப்புகளில் நூல்களைப் படைத்துள்ளான். அவை கவிதை, நாவல், சிறுகதை, நாடகம், கட்டுரைத்தொகுப்பு முதலியன. *அவை தாண்டி அதீதனால் எழுதப்பட்டு அரசால் தடை செய்யப்பட்டவையும் உண்டு.* (ப.197)

அதீதன் தனித்த ஒருவனல்லாதவனாகவும், எழுதும்பொழுது பெண்ணாகி விடுபவனாகவும், மற்ற சமயங்களில் பல விதமான ஆண்களாகப் பிரிந்து விடுபவனாகவும் உள்ளான். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான வகை அவன் இருந்த போதும் அனைவருக்குமான ஒரே பெண்ணாகவும் இருந்திருக்கிறான். அந்த பெண் பிம்பம் பிரபஞ்சனி, பிரேதா, விமோசனாவாகவும் இருக்கலாம். அதீதனின் மரணத்தை கணச் சமன்பாட்டிற்கு உட்படுத்தி *அதீதன் மரணமுறவில்லை* என்று அவன் பிரேதாவாக கடற்கரையில் ஒதுங்கியிருக்கலாம் என்றும் முடிவுகள் பெறப்படுகின்றன. (ப.190)

சொற்களைக் கலைத்துப் போடுதல் முயற்சியின் ஊடாகா பெரும்பான்மை தமிழ் வாசகப் பரப்பின் மீதான நுன்மையான விமர்சனங்களையும் புதினம் முன்வைக்கிறது. *தமிழ் வாழ்க்கை முறையில்* கடந்த பல ஆண்டுகளாக தமிழர்களின் வாழ்வில் தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கும் தமிழ்ச் சினிமாவின் போக்கோடே புதினம் தொடங்குகிறது. தமிழ்க் கதாநாயகிகள் திரைகளைக் கிழித்துக கொண்டு தெருக்களில் அலையத் தொடங்குவதும் இதனால் மனிதர்கள் தங்களது உடலுக்குள் இருந்து வெளியேறி விடுவதா, உடலுக்குள் அடைபடுவதா என்ற கேள்வியையும் முன்வைக்கிறது.

இந்தியப் பெரும்பான்மை அரசியல் மதிப்பீடுகளின் மீதான நீதிமன்றச் செயல்பாடுகள், போதாமைகளாகவும், உண்மைக்குப் புறம்பாகவும் செயல்படுவதை தாம் சொல்வதெல்லாம் பொய் (ப.4) என்பதாக புதினம் பொய்யை கொண்டாடுகின்றன.

அறிவு ஜீவிகளும் அவர்கள் சார்ந்த அறிவுப் போலிகளும் பதினெட்டு வகையினராகப் பிரிக்கப்பட்டு சமூகம் சார்ந்த இயங்கியல் பொருள் முதல் வாதத் தத்துவங்களும் அவை இந்திய அரசியலில் பெற்ற போதாமை நெறிகளும், தங்களுக்குள்ளான பிரிவுகளும், முரண்பாடுகளும் நுண் தளத்தில் புதினத்தில் கேலிக்குள்ளாக்கப்படுகின்றன.

ஆண். பெண் சார்ந்த ஆதிக்கக் கட்டமைப்புக்களைக் கற்பு நெறி சார்ந்த தளத்தில் உருவாக்கி வைத்திருக்கும் இந்தியச் சமூகம் பெண் உடல் மீதான இயற்கையான பாலியல் தேவை மறுப்பு புதினத்தில் பாண்டசா மலையினப் பெண்கள் தங்கள் தேவைக்காகப் பக்கத்து இனக்குழுக்களைத் தேடிச் செல்வதாய் காட்டப்பட்டுள்ளது . (ப.6)

சங்க இலக்கிய தலைவன் - தலைவி காதல் வாழ்வு மீதான கட்டுடைப்பும, சித்தர்களின் பாடல்களில் தாய் பற்றிய மதிப்பும் பெண் (மனையாள்) பற்றிய வெறுப்பும் இங்கு கேலி செய்யப்பட்டு காணாததைக் கண்டால் கண்டதெல்லாம் காணாது, எண்ணாததை எண்ணினால் எண்ணியவை தோன்றாது, தேடாததைத் தேடினால் தேடுவது தொடர்ந்திடாது, நுழையாததற்குள் நுழைந்தால் நூதனந்தான் ஆண்டாவளி (ப.7) என்பதாக முன்வைக்கிறது.

கதையாடலில் பிணமும் மனிதனும் ஒன்றாக வாழ்தல் குறித்த சொல்லாடலானது தமிழர்களின் பாலியல் சார்ந்த ஒற்றைத் தன்மைகளையே முன்மொழிகின்றன. காதல் என்பது, காதல் தோல்வி என்பதும், பெண் தற்கொலை செய்து கொள்வதென்பதும், *சராசரித் தமிழ்ப் பெண்ணின் பாலியல்* ஒடுக்குமுறையாகவே கொள்ள வேண்டியிருக்கிறது. அதன் வழி தான் ஆசைப்பட்ட பெண் பிணத்தை புணர்தல் என்பது பாலியலில் பெண் ஆணுக்கானவளாகவே கட்டமைக்கப்பட்டிருப்பதும் உறவில் பெண் பிணமாக இருப்பதுமே நுண் வாசிப்பில் அர்த்தப்படுகிறது.

நவீன உலகில் தமிழ் இளைஞர்களின் வாழ்வு (உடலானது) நெருக்கடிக்குள்ளாக்கப்பட்டு மிகுந்த கேள்விகளுடன் உடல்கள் பெண் ஸ்பரிசமற்று பாறையாக மாறிக்கொண்டிருப்பதாக உணர்த்தப்படுகிறது (ப.85).

புனைவு தொல்படிமச் சிந்தனைகளினூடே பெருந் தெய்வங்களானத் தேவ கணங்கள், அசுரர்கள், முனிவர்கள், யோகிகள், சிவன், பிரம்மன், திருமால் போன்றவர்களின் தோற்றக் கதையாடல்களும், சிறு தெய்வங்களான கன்னி முலைச்சி - காளியன் உறவு, நாட்டார் தெய்வங்கள் பற்றிய கதைகள், மனிதர்கள் புராதன ஆவிகளுடன் உலாவுதல், நாயுடன் போகம் துய்த்தல், யோகிகள் சிறுமியர்களுடன் சல்லாப முயக்கம் கொள்வது என்பதாக சொற்பரப்புகளிடையே சம்பவங்கள் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன.

சமூக இனக்குழுக்கள் சார்ந்த பல்வேறு சிறுகுழுக்கதையில் மரபுகள் இந்தியத் தொலைக்காட்சியில் ஒற்றைத் தொடராக ஒளிபரப்பப்பட்டுக் கதைகளின் பன்மைப் பிம்பங்கள் மறுக்கப்பட்டு ஒற்றைப் பிம்பங்களாக ஒருவளிக்கப்பட்டதும் (இராமாயணம், மகாபாரதம்) அது பின்னர் இந்திய அரசியலில் மிகப் பெரும் தாக்கத்தை உண்டாக்கியதும், தொடர்களில் நடித்த நடிக நடிகையர்கள் அரசியலில் அதிகாரத்தைக் கைக்கொண்டதும், பின் தன் உண்மைப் பிம்பங்களில் தோல்வியுற்றதும் புனைவில் விமர்சனமாக முன்வைக்கப்படுகிறது. அது வியாசனைக் கொல்வதிலிருந்து இந்தியப் பன்மை மரபுகளையும் கதை கூறல்களையும் உருவாக்குவதன் மூலம் இந்திய தேசிய இனங்களை இனக்குழுக்களை விடுதலை செய்யமுடியும் என்று தீவிரமாக நம்பினான் (ப.14) என்பதாக புதினம் முன்வைக்கிறது.

தமிழ்ச் சிறுபான்மை இனத்தின் மீதான மிகக் கொடூரமான தாக்குதல் அவனது நிலப்பரப்புகளை ஆக்கிரமிப்பதும், உடல் தொகுதிகளைச் சித்ரவதை செய்வதும், நூலகங்களை அழித்தொழிப்பு செய்வதுமே வரலாற்றின் நிகழ்வுகளாகும். அது அதீதனின் உடலில் வலியும் உணர்வில் இசையும் நூல் வெளிப்படுத்துகிறது.

தமிழர்களின் இலக்கிய வரலாறுகள் கட்டமைக்கப்பட்ட சூழலும் அதில் மறைக்கப்பட்டு பிரக்ஞைப் பூர்வமான தகவல்களும் புனைவில் விசாரணைக்குட்படுத்தப்படுகிறது. விளிம்பு நிலை மக்களின் மீதான ஒடுக்குமுறைகளும் சமண பௌத்த வளர்ச்சியினூடே களப்பிரர்களின் வரலாறும் திட்டமிட்டு மறைக்கப்பட்டுள்ளது (ப.53)

புதினம் கட்டமைப்பில் பல மாற்றங்களை உடையதாய் காப்பிய வடிவம் போன்று அமைப்பில் காதைகளாக (பூர்வீகம் உணர்ந்த காதை, நூல் பொருள் உணர்ந்த காதை) என்பதாக பன்னிரு காதைகள் பற்றிப் பேசப்படுகின்றன. இடையே பின் பகுதியில் அதீதன் படைப்புக்கள் பற்றிய பட்டியலும், படைப்புக்களின் கதைச் சுருக்கங்களும் வந்து ஒரு புதினத்துக்குள் பல்வேறு புனைவுக் கதைகள் சொல்லப்பட்டுள்ளது. புதினத்தில் கதைகளினூடே பேட்டிகளும், வேறு வேறு சம்பவங்களும் எண்கள் கொடுக்கப்பட்டு சுட்டப்பட்டுள்ளன. ஒரு அத்தியாயத்தின் அனைத்தில் முதல்வரிகளும் புராதனமான புத்தகங்களைப் போல் மர்மம் நிரம்பியது வேறில்லை என்பதாக ஒற்றை வரி மீண்டும் மீண்டு வருகின்றன.

கொலை செய்வது, சுய இன்பம், தற்கொலை, மரணத்தில் லயித்தல், போகம், முழுமையடையாத கலவி, கலவிக்காக மன்றாடுதல் என்ற தன்மைகள் புனைவில் வெகு இயல்பாகப் பேசப்பட்டும் முன்னெடுத்தும் சொல்லப்படுகின்றன.

1. புதினம் வாசகனுக்கு ஒரு வாசிப்பு சார்ந்த விளையாட்டுக் களமாக செயல்படுகிறது.

2. காலம், வெளி சிதைக்கப்பட்டுக் கதை மாந்தர்களின் முக்கியத்துவம் மறுக்கப்படுகிறது.

3. சொற்குவியல்கள் சார்ந்த கதையாடல் பரப்பானது வாசகனைப் பிரதியோடு ஒன்றவிடாமல் நுண் வாசிப்புக்குத் தூண்டுகிறது.

4. காலமற்றதும், பரிமாணமற்றதுமான வெளி, பிரபஞ்சம், மொழி, உடல், தத்துவமார்க்கம் ஆகிய அனைத்தும் வரைமுறையற்றுக் கேள்விக்குட்படுத்தப்படுகிறது.

5. புத்தகங்கள் மர்மங்கள் நிறைந்ததாகவும் அந்தப் புத்தகங்களுக்குள் கொலைகளும், தற்கொலைகளும், சதிகளும், வஞ்சகங்களும் நிரம்பியுள்ளதாகவும், அவற்றுள் சாத்தானும், கடவுளும் சதுரங்கம் ஆடிக்கொண்டிருப்பதாகவும் புனைவு கூறிச் செல்கிறது.

6. பாத்திரங்கள் பற்றிய குழப்பம், உடல்களற்ற உருவ வெளிகள் அவை நிழல்களாக, பிம்பங்களாக, சமிக்ஞைகளாக, மொழியாக வெளிப்படுகின்றன.

7. வாசிப்பின் மீதான ஒற்றை அர்த்தத் தன்மையும், எளிமையான புரிதல் உத்திகளும் கட்டுடைக்கப்பட்டுள்ளன.

## பயன்பட்ட நூல்கள்

1. சொல் என்றொரு சொல் - பிரேம் - ரமேஷ் . 2. அமைப்பு வாதமும் பின் அமைப்புவாதமும் - க.பூரணச்சந்திரன்.
3. தீராநதி - டிசம்பர் 2003 - பிரேம் - ரமேஷ் கட்டுரை 4. பன்முகம் - ஏப்ரல் - ஜுன் - 2002 - முருகப்பாண்டியன்.

# தற்காலக் கவிதைகளில் நவீனத்துவக் கூறுகள்

*சு. ஜெயசீலா,* முனைவர் பட்ட ஆய்வாளர்,
காந்திகிராம பல்கலைக்கழகம்.

ஆரம்ப கால கட்டத்தில் இலக்கியங்கள் கவிதை நடையில் தான் தோன்றின. இவ்வகைக் கவிதைகள் உவமை, உருவகம், மோனை, எதுகை, இயைபு, அணி, பாவகை போன்றவற்றைப் பெற்று வந்தன. இம்முறையிலிருந்து இன்று மாறி மரபுக் கவிதைக்குரிய எதையும் பின்பற்றாமல் தற்கால கவிதைகள் வெளிவருகின்றன. வளர்ந்து வரும் இன்றைய கவிதைகள் நவீனத்துவத்தைப் பின்பற்றி வருகின்றன. "நவீனத்துவம் என்பது அரசியல், தத்துவம், பொருளியல், அறிவியல், கலை இலக்கியம் எனச் சகல துறைகளையும் ஒரே சமயத்தில் பிரமிக்கத்தக்க விதத்தில் பாதித்த ஒன்று. நவீன அரசமைப்பு, சனநாயகம், தேசிய உருவாக்கம், நகரநிர்மாணம், மத்தியதரவர்க்க உருவாக்கம், நீதிவழக்குமுறை, கல்வி, மருத்துவம், குடும்ப அமைப்பு என நவீனத்துவம் பாதிக்காத துறைகளே இல்லை" எனலாம்.

(அ. மார்க்ஸ் - உடைபடும் புனிதங்கள் - பக். 7,8)

தற்காலக் கவிதைகள் பின்வரும் நவீனத்துவக் கூறுகளைப் பெற்று வருகின்றன.

1. கவிதை மரபைப் புறக்கணித்தல்.
2. படைப்பாளனுக்கும் வாசகனுக்கும் உள்ள உறவு.
3. வாசகனுக்கு சிந்திக்க இடம் அளித்தல்.
4. பூடகத்தன்மை.

## கவிதை மரபைப் புறக்கணித்தல்

தற்காலக் கவிஞர்கள் தனக்கென்று விதிக்கப்பட்டிருந்த உவமை, உருவகம், அணி, பாவகை, எதுகை, மோனை, இயைபு போன்ற மரபுகளை நீக்கி கவிதை இயற்றுகின்றனர். உரைநடையைச் சிதைத்துக் கவிதையாக எழுதுகின்றனர். நேரில் பேசுவது போன்ற ஒரு நேர்முகத்தன்மையுடன் இருக்கிறது. இன்றைய நவீனக் கவிஞர்கள் பலரும் இம்மறையைப் பின்பற்றி எழுதுகின்றனர்.

"என் வீடு
ரொம்பச் சின்னது
யாராவது நண்பர்கள் வந்தால்
தங்க வைக்க முடியாது" (விக்ரமாதித்தன் - உள் வாங்கும் உலகம்)

இக்கவிதை வரிகள் ஆசிரியர், வாசகர்களிடம் நேரிலே பேசுவது போன்று உள்ளன. இதில் கவிஞருக்குரிய மரபு இலக்கணங்கள் எதுவுமில்லை. வீடு மிகச் சிறியது. யாரு வந்தாலும் தங்குவதற்கு முடியாது என்பதை அப்படியே உரைநடையைப் பிரித்துக் கவிதையாக எழுதியுள்ளார் ஆசிரியர்.

## படைப்பாளனுக்கும் வாசகனுக்கும் உள்ள உறவு

படைப்பாளனுக்கும் வாசகனுக்கும் மரபுக் கவிதைகளில் ஒரு பெரிய இடைவெளி இருக்கும். நவீனக்கவிதைகளில் இடைவெளிக் குறைகிறது. கவிஞன் தன் குடும்ப நிலையையும், தன்னையும், குடும்பத்திலுள்ளவர்களையும் கூறுவதன் மூலம் படைப்பாளனுக்கும் வாசகனுக்கும் இடையே இடைவெளி மிகவும் குறைந்து விடுகின்றது.

"அம்மா சொன்னாள்
ஐம்பது ரூபாய் ரேஷனுக்குப் புரட்ட முடியாத
நீயென்ன பிள்ளை?
வீட்டுக்காரி கேட்டாள்
எப்படி வாழப்போகிறீர்கள்" (விக்கிரமாதித்தன் - உள் வாங்கும் உலகம்)

என்ற இக்கவிதை வரிகளில் கவிஞரின் வறுமை பற்றியும், வீட்டிலுள்ளோர் பற்றியும் அறிந்து கொள்ள முடிகிறது. ஒரு கவிஞன் தன் நண்பருடைய வீட்டினைப் பற்றி இவ்வாறு கூறினார்.

"கறுப்பேறிப் போன
உத்திரம்
வீட்டின் வளர்ந்த பிள்ளைகளுக்கு
கையெட்டும்
உயரத்தில்" (கலாப்ரியா - உலகெங்கும் சூரியன்)

பொதுவான பிரச்சனையை விடத் தனிமனிதனது நிலையினைக் கூறுவதால் படைப்பாளனுக்கும் வாசகனுக்கும் இடையேயுள்ள உறவு மிகவும் நெருக்கமாகிறது.

## வாசகனுக்குச் சிந்திக்க இடமளித்தல்

படைப்பாளன் ஒரு மையத்தினை வைத்துக் கூறி வாசகன் அதை அப்படியே அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற நிலைமாறி படைப்பிலிருந்து எந்தவொரு கருத்தினைக் கொண்டும் வாசகன் மையத்தைச் சிந்திக்க முடியும். என்பதன் மூலம் வாசகனுக்கும் படைப்பில் முக்கியத்துவம் தரப்படுகிறது.

"வாடாமல்லிப்பூ மாலைக்கு
வசீகரமில்லை
தனிப் பூவுக்கோ
தாங்க முடியாத அழகு
மண் புழுக்களை நேசிக்கிற
மனம்
இன்றும் இருக்கிறது" (கல்யாண்ஜி - முன் பின்னில்)

இவைகளிலிருந்து வாசகன் நேரடியான மையத்தினைப் பெற முடியும். அல்லது வாசகனின் மனநிலைக்கு ஏற்ப வேறொரு மையத்தைப் பெற இடமளிக்கிறது.

"அந்தி (போன்ற) நேரங்களில்
மிகச் சுறுக்காகவும்
கறுக்காகவும்
அடிக்கடி திருப்பிக் கொண்டும்
தினந்தோறும் - அது
பறக்கக் காண்கிறேன்" (கலாப்ரியா - உலகமெலாம் சூரியன்)

இக்கவிதையில் படைப்பாளன் குருவியைப் பற்றிக் கூறினாலும் வாசகன் வேறு பலவற்றைச் சிந்திக்க முடியும்.

## பூடகத்தன்மை

நேரடியதக மையத்தினைப் பெற முடியாமல் மறைமுகமாகப் பெறுவது, ஏதாவதொரு குறியீட்டின் மூலமாக உணர்த்துவது பூடகத்தன்மை எனலாம்.

"ரத்தம் சுண்டிய
கரப்பான்களும்
ஒட்டுப்பூச்சிகளும்
ஏலக்காய்ச் செடிகளைக்
கெட்டியாய்ப் பற்றிக் கொண்ட
வெளிரிப் போன பல்லிகளும்
இன்னும் சில
ஜீவராசிகளும்
கூட்டணிகள் அமைத்துப்
போராடத் தயாராயின
ஓட்டுச் சீட்டைக்
கையில்
தயாராய் வைத்துக் கொண்டன" (ஆத்மநாம் - ஆத்மநாம் கவிதைகள்)

"வகுப்புக்கு வரும் எறும்புக் கூடு" என்னும் கவிதையில் வரும் மேல்கண்ட வரிகளை மேலோட்டமாகப் பார்த்தால் இதன் மையத்தைப் புரிந்து கொள்வது கடினமாக இருக்கும். உற்று நோக்கிப் பார்த்தால்தான் இதன் கருவைப் புரிந்து கொள்ள முடியும். இன்றைய சமூகத்திற்குச் சட்டத்தை மதித்து நடக்கும் மக்கள் தான் தேவை. அநியாயத்தை எதிர்த்துக் கேட்கும் எளியவர்கள் நசுக்கப்படுகின்றனர். எனும் கருத்தை மையமாகக் கொண்டு இக்கவிதை உள்ளது.

இவ்வாறு நவீனத்துவக் கவிதைகள் மரபுக்கவிதைகளிலிருந்து வேறுபட்டு நிற்கின்றன. எந்தவொரு சிறு விசயத்தைப் பற்றி கூறுவதற்கும் இடமளிக்கின்றது. வாசகனும் ஒரு படைப்பாளன் நிலைக்குச் சிந்திக்க இடமளிப்பதால் தற்கால கவிதைகள் வரவேற்பைப் பெறுகின்றன.

# சு-லுவின் மூவடியாரில் இயற்கை - ஒரு பார்வை

*முத்து. அருணகிரி,* தமிழ்த்துறைத் தலைவர்,
பொன்னையா ராமஜெயம் கல்லூரி, தஞ்சாவூர்.

காலம் மாறியுள்ளது. வாழ்க்கை முறை மாறியுள்ளது. மனிதனும் மாறியுள்ளான். மனிதனின் வளர்ச்சி நிலை நாளுக்கு நாள் மாறிக்கொண்டே மகத்தான உயர்நிலைக்குச் சென்று கொண்டிருக்கும் காலம்இது. கணத்துக்குக் கணம் மாறும் கணினி யுகம், மனிதர்களின் மனதில் அழகுணர்ச்சியையும், பண்புகளையும் நிறையவே மாற்றி அமைந்துள்ளது. நின்று, நிதானித்து, இரசிக்கும் நிலை இன்று காணாமல் போய்விட்டது. உடனுக்குடன் எதையும் அடைய வேண்டும் என்ற அவசர யுகத்தில் நீண்ட இலக்கிய வடிவத்திற்கு உரிய வரவேற்பு இப்போது கிடைப்பது அரிது. "வாமன" வடிவில் இலக்கியம் படைத்து "விஸ்வரூபம்" போன்று பொருள்தரும் இலக்கிய வடிவம் இன்று பலரிடமும் வரவேற்பைப் பெற்றுள்ளது. அந்த வகையில் இலக்கிய உலகில் இன்று ஏற்றம் பெற்று விளங்கும் "வாமன" இலக்கிய வடிவம் "ஹைக்கூ".

இயற்கையுடன் கலந்த ஜப்பானியர்களின் வாழ்வியல் வடிவத்தின் இலக்கிய வெளிப்பாடுதான் "ஹைக்கூ" கவிதைகள். "1890-ல் மாஸாக்கா ஷிக்கியின்" காலத்தில் ஹைக்கூ எனும் குட்டிக் குழந்தை "குவா குவா" சப்தத்தோடு பிறந்தது. பதினைந்தாம் நூற்றாண்டில் ஹைக்கூவின் பெயர் "ரெங்கா". அப்புறம் "ஹைக்கை" பிறகு "ஹொக்கூ" பின்பு "ஹைக்கூ" என உலகின் சொத்தானது."

"பண்டைய இலக்கியங்களில் நல்ல உணர்ச்சிகள் மட்டுமே அதிகமாக இடம் பெற்றன." இன்றோ உள்ளதைச் சொல்கிறோம் என்ற பெயரில் எப்படி வேண்டுமானாலும் இலக்கியம் படைக்கின்றனர். இவ்வாறு உருவாகும் இக்கால இலக்கியங்கள் பல வந்த சுவடு தெரியாமல் மறைந்தும் போகின்றன. கவிஞனுக்கு அல்லது இலக்கியப் படைப்பாளிக்குக் கடந்த காலத்தின் மரபை நிகழ்கால நடைமுறைச் சிந்தனைகளோடு கோர்த்து எதிர்காலச் சந்ததிக்கு வளமான வாழ்வைக் காட்டக்கூடிய வகையில் இலக்கியத்தை அளிக்க வேண்டும் என்ற எண்ணம் இருக்க வேண்டும். அப்போதுதான் இலக்கியமும் அதனை உருவாக்கும் இனமும் நிலைத்து நிற்கும். "வாழ்க்கையின் நோக்கத்திற்காக வாழ்க்கையை உருவாக்குகிறது இலக்கியம்" என்பர் ஆஸ்கார் ஒயில்டு. இவ்வாறு இலக்கியம் படைக்கும் போக்கு இன்று சிலரிடம் மட்டுமே காணப்படுகிறது. அந்த வகையில் தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் முதுநிலைத் துணைப் பதிவாளராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற திரு (சு-லு) என்கிற இரா. சுப்பராயலு அவர்கள் எழுதிய "மூவடியார்" என்ற "ஹைக்கூ" கவிதை நூலில் காணப்படும் "இயற்கை"ச் சிந்தனைகள் பற்றி ஆய்வதே இக்கட்டுரை நோக்கமாகக் கொண்டமைகிறது.

ஒரு சிறந்த ஹைக்கூ கவிதை அனுபத்தின் வெளிப்பாடாய் அமைந்தால்தான் படிப்போர் மனதில் பதிந்து நிமிரும். இயற்கையாக எழும் எண்ணத்தின் வெளிப்பாடு இயல்பாக அமைந்து இருந்தால் எளிமையும், இனிமையும் தரும் இலக்கியமாக அது புகழ் பெறும். அப்படி உருவான ஜப்பானியரின் ஹைக்கூ, நம் நாட்டுத் தற்கால மக்களைப் போல் அன்றி இன்றும் ஜப்பானியர்கள் நாட்டின் மீதும், நாட்டின் இயற்கைச் சூழல் மீதும்அதிகமான ஈடுபாடு கொண்டவர்கள். இன்றும் அதைத் தங்கள் நாட்டின் மரபுப் பண்பாகவே கடைப் பிடித்து வருகின்றனர். மூவடியார் ஆசிரியர் சு-லு இதனை நன்கு உணர்ந்து இருப்பதால்தான், இவர்தம் கவிதைகளில் இயற்கை உணர்வு உன்னதமாக இடம்பெற்று இருக்கிறது.

வெட்டியவன் போய்விட்டானா?/எட்டிப் பார்த்தது/வாழைக்குருத்து

வாழைமரத்தின் மேல்பகுதியை வெட்டி நல்ல நிகழ்ச்சிகளுக்கு அலங்காரமாகக் கட்டுவது என்பது இயல்பான ஒரு நடைமுறை. அதே போல் வெட்டப்பட்ட வாழைமரம் மீண்டும் துளிர்ப்பதும் இயல்பு. ஆனால், அந்த இயல்பை, படிப்போர் மனம் தன்னம்பிக்கையுடன் செயல்பட வேண்டும் என்கிற விதத்தில் எழுதி இருப்பது போற்றத்தக்கது.

தென்கையின் சீப்பு அருகிருந்தும்/பரட்டைத் தலையுடன்/ஆலமரம்!

வாடகை இலவசம்,/எத்தனை குடிகள்/மரக்கிளையில்!/தொங்கும் வீடுகள்

வௌவாலைப் பாத்ததுவோ/தூக்கணாங்குருவி?

மேற்கண்ட கவிதைகளைப் பார்த்தோமானால் முறையே தென்னை மரத்தைப் பரட்டைத் தலையுடன் காட்டிடாமல் பரந்து விரிந்து விழுதுகள் தாங்க நின்று நிழல் தருவதோடு நிலத்திற்கும் அணிகலனாக விளங்கும் இக்காட்சி, இயற்கையின் செழிப்பைக் காட்டுவதோடு, உயர்ந்த தென்னை மரங்கள் நிறைந்திருப்பின் மேகங்களைத் தடுத்து குளிரச் செய்து மழைபெய்ய ஏதுவாக இம்மரம் பயனாகிறது என்ற சுற்றுச் சூழல் வல்லார்கள் கூற்றை மெய்ப்பிக்கும் அதே நேரத்தில் பொழியும் மழைநீர் வேகமாக சூரிய வெப்பத்தால் ஆவியாகாது நிலம் விரைவில் வெப்பமடையாது குளிர்வோடு இருக்க ஆலமரம் போன்ற பரந்துபட்டு விரிந்த மரங்கள் நிறையத் தேவை என்பதையும், மறைமுகமாகக் காட்டியுள்ளமை, நாம் இயற்கையை அழிக்காது காக்க வேண்டிய அவசியத்தை வலியுறுத்தியுள்ளது. கடவுளின் பெயரால், சமயத்தின் பெயரால் பொய்மைகள் மிகுதியாகப் பரப்பப்பட்டு, மக்களைச் சாதி, இன அடிப்படையில் வேறுபடுத்திக் காட்டும் நிலை இன்றும் தொடர்ந்து கொண்டுதான் உள்ளன. ஆனால், எல்லோரும் ஓரினம், ஓர்குலம் என்ற பொதுத் தன்மையோடுஇருக்க வேண்டும். அப்போதே சமதர்ம சமுதாயம் பேதமின்றிச் செயல்படும். அதுவே வலிமையானது, வளமையானது என்ற கருத்தை மரக்கிளையில் அமர்ந்துள்ள புள்ளினத்தின் கூட்டம் கண்டு உணர்த்திய விதம் சிந்திக்கத் தக்கது.

"இழிகுலம் என்றே இனத்தை வெறுத்தது/அந்தக் காலம்; மக்களை/இணைத்து அணைக்க முயற்சி பண்ணுவது/இந்தக் காலம்"./"சாதி மதம் இல்லை யென்ப தெதனாலே - மனம்

சமத்துவம் தானடைந்த தன்மையாலே" (உடுமலை நாராயணகவி)

என்ற பாடல் வரிகள் மக்கள் மனநிலை மாறிவருவதைக் காட்டுவதுபோல் மூவடியார் பாடலும் உள்ளன என்பதை உணரமுடிகிறது. ஒன்றை ஒன்றைச் சார்ந்துதான் உலகம் இயங்குகிறது என்பது இயற்கையின் நியதி. அதுபோல் தொங்கும் வௌவால் கண்டு தூக்கணாங்குருவி தன் கூட்டை அமைத்துள்ளதோ என்ற வினா? சார்ந்து வாழ்வதால் சாதனை படைக்கும் வல்லமை கூடும் என்பதை உணர்த்துகிறது.

"எத்தனை முயன்றும்/கரையேர முடியவில்லை/இன்னும் முயலுகின்றன கடலலைகள்"

முடியாதது எதுவும் இல்லை, முயன்றால் முடியும் என்ற சிந்தயினை வள்ளுவர் "முயற்சி திருவினையாக்கும்" என்ற வரிகளால் உறுதிப்படுத்தி உள்ளார் என்பதை அறிவோம். ஆனால், பலமுறை முயன்றும் கரையேற முடியாமல் தவிக்கும் கடலலைகள் தன் முயற்சியைக் கைவிடாமல், சோர்ந்திடாமல் இன்றும் முயன்று கொண்டுள்ளன என்ற பாடலால் ஏ! மானிடா! வாழ்வில் தோல்விகள் வருவது இயல்பான ஒன்று. அத்தகு தோல்விகள் கண்டு துவண்டு விடாமல் தொடர்ந்து முயன்று கொண்டே இரு. வெள்ளி உன் வீடு தேடிவரும் என்ற தன்னம்பிக்கையைத் தருவதாக அமைந்திருப்பது வரவேற்கத்தக்க சிந்தனையாகும்.

துன்பம் வரும்போது துணிவுடன் எதிர்கொண்டால் துன்பம் நம்மைக் கண்டு துன்பப்படும். "இடுக்கண் வருங்கால் நகுக" என்றார் வள்ளுவர். ஆனால், பிறர் துன்பம் கண்டு இன்பம் கொள்ளுதல் கூடாது. வருத்தமுற்று அத்துன்பம் போக்க முயல்வது மனிதப் பண்பு. ஆசிரியர் சு-லு வயற்காட்டு வழியே சென்றபோது கோடையில் வயல்களில் விளைந்து பழுத்து வெடித்துக் கிடக்கும் வெள்ளரிப் பழத்தைப் பார்க்கிறார். உடனே,

சிரிக்கலாம் வெள்ளரியே!/ஆனாலும் இப்படியா?/வயிறு வெடிக்கும்படி.

என்ற சிந்தனைப் பாடலை எழுதுகிறார்.சிரித்து வாழலாம். அதிலும் அளவு வேண்டும். அளவுக்கு அதிகமாகச் சிரித்தால் பிறர் நம்மைக் கண்டு ஏளனமாய்ச் சிரிக்கும் நிலைக்கு ஆளாவோம். அவை நமக்கு தீரா துன்ப வடுவைத் தரும் என்பதை உணர்த்துகிறார். இதனை,

குளக்கரையில் தாளக்கச்சேரி/தவளையின் கொண்டாட்டம்/அமர்ந்திருப்பது பாம்பின் வாய்

என்ற அவர்தம் பாட்லால் உணர முடியும். கொன்றை மலர் மஞ்சள் நிறம்அதிகம் கொண்டது. மஞ்சள் பூசிக்

குளிப்பது தமிழகப் பெண்களின் பழக்கம். ஆனால், பூசிய மஞ்சளைக் கழுவாமல் மறந்து போனதால் தன் இயல்பான நிறம் இழந்துகொன்றை இவ்வாறானதா என்று கேள்வி எழுப்பிய விதத்தால் இயற்கையை அவர் ஆழ்ந்து நேசிக்கும் விருப்பம் வெளிப்படுகிறது.

மணி அடிக்காமலேயே/வகுப்பு கலைந்து/மரக்கிளையில் பள்ளிக் கூடம்./முள்ளில் மலர்ந்த மலரோ?

கருவேல மரத்தில்/குருவிக்கூடு.

என்ற பாடல்கள் அவர் இயற்கையை இயல்பாக இரசிக்கும் விதத்தை எடுத்துக் காட்டுகின்றன.

இயற்கையைப் பேணிக்காப்பது மனிதனின் கடமை. அதை மீறினால் காக்கத் தவறினால் அதன் சீற்றத்திற்கு ஆட்பட்டுச் சீரழிவது உறுதி. இதற்கு அண்மையில் வந்த "சுனாமி" சிறந்த சான்று. மரங்களை வெட்டியதன் காரணமாய் பல கடற்கரை கிராமங்கள் கடல் கொண்ட நிலை அறிவோம். "இன்னா செய்தார்க்கும் இனியவே செய்" என்று கூறிய தமிழ் மறையின் கருத்தை மறந்ததால் துன்பம் நம்மைப் புரட்டிப் போடுகிறது. எனவே, மனித குலத்திற்கு உதவும் மரங்களை நன்றியுடன் காப்போம். கொடுங்குணம் விடுவோம் என்ற நிலையை உணர்த்தும் விதமாக,

இளைப்பாறிய பின்னரும்/மனம் எப்படி வந்தது/நிழலை வெட்ட?

வெயிலுக்கு இதமாய்/முள்மரத்தின் நிழல்/உறுத்தவே இல்லை.

இத்தகு பாடல்கள் உள்ளதை உணர முடிகிறது.

புதுப்புது எண்ணக் கோலமுடன் புத்துணர்வுடன் இயற்கை உணர்வுகளை மதித்து ஜப்பானியர்கள் எழுதும் கவிதை நடை சு-லுவுக்கும் ஓரளவிற்கு இயல்புடன் வந்துள்ளமை பாராட்டத்தக்கது. மனதில் எழும் உணர்வுகள் சில சமயம் உணர்ச்சிவசப்பட்டு வளமான கவிதை படைக்க ஏதுவாகிறது. அந்நிலைகளையும் மீறி ஒன்றை அறிவுரையாகக் கூறி வெளிப்படுத்துவதில்தான் ஹைக்கூவின் வெற்றி உள்ளது என்பதை உணர்ந்து கொண்டால் தமிழில் ஹைக்கூ வளமுடன் வலம் வரும். மரபுவழி மாறி, புதுக்கவிதை வடிவம் கொண்டு இன்று சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்ற அடிப்படையில் இலக்கியம் வளர்ந்து வருவது கண்கூடு. எனவே, காலமாற்றம் கருதி கவிதைகளும் புதுக்கோலம் காணவேண்டிய நிலைக்கு ஆட்படுத்தப்பட்டுள்ளது. இதனடிப்படையில் உருவானதே ஹைக்கூ என்ற கவிவடிவம். புதிய திசை நோக்கிப் புதிய சிந்தனையுடன் உலாவரத் தொடங்கி இருக்கும் ஹைக்கூ இலக்கியக் களத்தில் நிச்சயம் தடம் பதிக்கும்.

# கண்காணிப்புச் சமுதாயப் பார்வையில் ஹைக்கூ கவிதைகள்

முனைவர். *அழகம்மை*, M.A , M .Phill., M.A., (Eco), M.Ed , Ph.D.,

இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை

ஜ.கே.கே. நட்ராஜா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, குமாரபாளையம்.

இந்தயுகம் தகவல்யுகம், இணைய யுகம், தகவல் தொழில்நுட்ப யுகம் என்று மதிப்பீடு செய்யப்படுவதனுடன் கண்காணிப்புச் சமூகமாக்கப்படும் காலமாகவும் உருக்கொண்டு வருகிறது. அற்றை நாள் போலன்றி இன்று கண்காணிப்பு, தொழில்நுட்ப ரீதியாகிக்கொண்டிருக்கும் நிலையில் சூழல் காரணமாக அதைச் சர்வ சாதாரணமாகவும் எடுத்துக் கொள்கிறோம். இதனை இப்போது இந்தியா உட்படப் பலநாடுகளில் பெரும் வணிக நிறுவனங்கள் அக்கறை காட்டும் ஒரு தொழில்நுட்பம், ரேடியோ அலைவரிசை, அடையாளம் காட்டும் தொழில் நுட்பம், ( RFID, Radio, Frequency, Identification Devices) இதன் மூலம் ஒரு சில்லை ஒரு பொருளில் வைத்துவிட்டால் அச்சில்லிலிருந்து வெளிப்படும் அலைவரிசை மூலம் அது எங்கு உள்ளது என்பதைக் கண்காணிக்க முடியும். இது பொருட்களின் உற்பத்தி முதல் நுகர்வோரை அடையும் வரையான செயல்பாடுகளை அறிய இயலும். இதன் அடிப்படை, பொருட்களுக்கு என்றாலும் கூடவே மனிதர்களின் நடமாட்டத்தையும் கூடக் கண்காணிக்க முடியும். ஆயின் மனிதருக்கு, தாம் கண்காணிக்கப்படுகிறோம் என்ற உணர்வு எழுவதில்லை. காலத்தின் தொடர் வரலாற்றில் கண்காணிப்புப் புதிதல்ல என்றாலும் அதன் பின்னணியிலுள்ள தத்துவம், அரசியல் ஆகியன உலகளாவிய நிலையில் சாத்தியமாகிக் கொண்டிருக்கின்றன. இது மனிதனை மட்டுமின்றி அதனுடன் தொடர்புடைய அத்தனை நுணுக்கங்களையும் ஆவணமாக்கக் கூடிய அளவுக்கு வளர்ந்துள்ளது. 1985ல் காரிமார்க்ஸ் தன் கட்டுரையில் கண்காணிப்பு என்பது உடல் குறித்த கண்காணிப்பாக மட்டுமல்லாமல், ஆளுமை, சுயம் குறித்த கண்காணிப்பாகவும் இருப்பதை எடுத்துரைக்கின்றார். -1. இப்பின்னணியில் இன்றைய ஹைக்கூ கவிதைகளின் வடிவம், கருத்தமைப்பு ஆகியன இகட்டுரையின் கருத்தூன்றலாக அமைகின்றது.

ஒவ்வொரு காலகட்டத்திலும் சமூக இயங்கியில் அரசியல், பண்பாடு, கல்வி என அனைத்து நிலைகளிலும் சிறு சிறு அசைவுகளை நாளுக்கு நாள் தன்னையறியாமல் உருவாக்கிக் கொண்டே இருக்கிறது. ஆயின் எந்த அசைவும், எந்தக் காலத்தும் மனிதனை நிறைவு செய்ததற்கான தடங்கள் மட்டும் இலக்கியங்களில் தென்படவில்லை. வெளிப்புனைவு சற்றே நிறைவு போல் மாயையை உருவாக்கினும், உள்ளீடென்னவோ எதிர்நிலைப் போக்கைத்தான் உள்ளிருத்தி வைத்திருக்கின்றன. இம்மாறுபட்ட போக்குகள் சமூக நல விரும்பிகளால் அவ்வக் காலங்களில் கண்காணிக்கப்பட்டு அதனை அறிவியல் கண்டுபிடிப்புகளுக்கேற்ப விரிவாகவோ அன்றிச் சுருக்கமாகவோ மக்களுக்குக் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் உணர்த்திக்கொண்டுதானிருக்கின்றன. மாற்றம் - வடிவமைப்பாலும், கருத்தாடல்களாலும் புதுமையாக உருவெடுப்பினும் அகமன உணர்வுகள் நல்லதன் எதிர்நிலைப் போக்குகள் காலத்தின் கோலத்திற்கேற்ப மாறுபட்ட வழிகளில் புற்றீசல்களாகப் புறப்பட்டுக் கொண்டுதானிருக்கின்றன. சமூகத்தில் அநீதிகள் நிகழ்வுறுவதை, சமுதாயச் சிதைவுகளை மனிதனின் அவசரச் செயல்பாடுகளுக்கேற்ப அதன் குறுகிய வடிவில் ஒரு சொல்லில், ஏன் ஒரு புள்ளியில் கூட விளைவு எப்படி எத்தனை மாற்றங்களை உருவாக்கும் என்பதை ஊகித்து உணரத்தக்க அளவில் நிதர்சனப்படுத்திக்கொண்டிருக்கின்றன. சமுதாயத்தின் செயல்பாடுகளில் தனி ஒரு மனிதன் பெற்ற மனத்தாக்கத்தால் ( Psychic disturbance ) கவிதை உருவாகிறது. சமுதாய நிகழ்வுகள் தனிப்பட்ட ஒருவன் வாழ்வோடு பின்னிப் பிணைய அதுவே அனுபவம் கலந்த உணர்வாகிக் கவிதையாகிறது, கவிஞனாகவும் தடம் அமைக்கிறது. இக்கவிதைக்கான தடங்களை நான்காக வகைப்படுத்துகிறார் சீனிச்சாமி. -2. 1) கூவலும் கற்பித மகிழ்தலும், 2) காட்சி ஆக்கமும் நடப்பனுபவமும், 3) எள்ளல், 4) சிதைவியல்.

## கண்காணிப்பில் உருவாகிய கூவலும் கற்பித மகிழ்தலும்:

இன்றைய சமுதாயத்தில் நிச்சயம் என்பது எதிலும் எங்கும் இல்லை. அதே சமயம் நிலையாமை உணர்வும் இற்றுக் கொண்டே போகிறது - பொருள் சேர்ப்பென்னும் பேய் பிடித்த வெறித்தனத்தால். ஆயின்

இந்தச் சூழலிலும் மனிதன் - உண்மையான மனிதநேயம் படைத்த மனிதன், சக மனிதனைப் பற்றி அவனது அவல நிலையைப் பற்றிக் கண்காணித்து சிந்திக்கின்றான். அவனே கவிஞன். தன் மனப் பாதிப்பை மற்றவர்களும் உணரவேண்டும், உணர்ந்தாலே திருத்தலுக்கான வேர்பிடித்து முளைவிட்டுச் செழிக்கும் என்ற எண்ணத்தில் விழிப்புணர்வைத்தூண்ட

1

வானத்தில் ராக்கெட்
வட்டமிடும் இன்சாட்
வயல்வெளிகளில் பவர்கட்
(குங்குமம் - 22-28 மே.92. ப. 67)

2

கடலுக்குள் குதித்தேன்
அலை ஒதுங்கியது
கரையில் கடன்காரன்
(பிரசன்னகுமார், பாக்யா.15-28 5-92)

என்ற கவிதைகளில் கருத்துக்களைப் பதிக்கின்றன.

இவற்றில் முதல் கவிதை நம் அரசு, எதற்கு முதன்மை கொடுக்க வேண்டும் என்று கணிக்காத நிலையை, அவசியத்தின் அவசியத்தை உணராத நிலையைக் கண்காணித்து வார்த்தையெனும் பொறிகளால் எடுத்தியம்புகின்றது. குடிக்க கஞ்சிக்கு வழியில்லை. இதிலென்ன ராக்கெட் வேண்டிக்கிடக்கிறது? இதுவே தொடர்வுறின் சமுதாயத்தின் நிலை என்னவாகும்? எனப் பல்வேறு தளங்களில் யோசிக்க வைக்கிறது. திறனுடைய அரசு என்றெண்ணி மாயையில் வாழ்ந்து கொண்டிருக்கும் மக்களுக்கு விழிப்புணர்வை உருவாக்குவதாக அமைகிறது. இரண்டாவது கவிதை பொருளாதார தன்னிறைவற்ற சூழலையும், அதில் மனிதன் அமிழ்ந்து முழுகிய நிலையையும், அப்படி முழுக நினைத்தாலும் விடாத நிதிநிறுவனங்களையும் குறியீடாக்கிக் காட்டுகிறது. இது மேலோட்டமான பொருள் என்றாலும் நிதி நிறுவனங்களின் அரக்கத் தனத்தை அரசின் தாராளமயத்தின் கோரத்தாண்டவத்தை, தோலுரித்துக் காட்டுவதாக உள்ளது. இதுவும் கவிஞன் தன்னை மையப்புள்ளியில் வைத்து கண்காணித்ததன் தொடர் சிந்தனைக்கான கருவேயாகும்.

கடலுக்குள் குதிக்கும் நிலைக்குக் கடன் என்றால் மனிதனின் வாழ்வமைப்பு எப்படி உருவாக்கப்பட்டிருக்கும்? அதில் அரசின் பங்கு, அரசியல் கொள்கைகளின் பங்கு என்ன? எப்படி அமைந்தால் இக்கொடுமைகள் உருவாகாதிருக்கும் என்பதற்கான பதில்களின் கிளைத் தேடல்களாகவும் இக்கவிதையின் பொருண்மை அமைகிறது. இப்படி அன்றாட நிகழ்வுகளை எழுத்துக்களின் விறைப்பினால் மக்களுக்கு எடுத்துச் சொல்ல முயலும் இக்கொள்கைப்பரப்பல் உத்தி, கவிஞன் சமுதாயத்தைக் கண்காணித்ததன் விளைவாக, எழுந்த கற்பதமகிழ்வாக ( Wishful fantasy) த் தோற்றம் தருகின்றது.

### காட்சி ஆக்கமும், நடப்பனுபவமும் :

மனிதனைச் சமூக விலங்கு என்கிறது சமூகவியல். அம்மனிதன் தன் விலங்குத்தனத்தினின்றும் பண்பட்டுச் சமுதாயத்துடன் ஒத்திசைந்து வாழ வழிவகுப்பது குடும்பம். அன்று குடும்ப அமைப்பென்றது இரு உள்ளங்களின் இணைவாக, இரு குடும்பத்தாரின் உறவுக்கலப்பாக இருந்தது. நாளாக ஆக ஆரோக்கியமான அன்பின் உருவாக்கம் ரொக்கமாக வணிக உறவாக, உருவாக்கமாக மறக்கடிக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன. இந்நிலையில் மனிதனே நீ உன் கணிப்பை மாற்ற முயற்சி செய். இன்றெனில் மனித சமுதாயம் அழிவுப் பாதையை நெருங்கி விடும். பெண் கருவை அழிக்கும் கொடுமைகள் தொடர்வுறும். தாய்மையெனும் அன்பும் தொலைந்துவிடும் என்பதைத் தன் கண்ணோட்டத்தில்

1

பாவம் பெண் குழந்தை
பரிதாபப்பட்டது
ஸ்கேன்
(ப. ஜீவானந்தம். தாய். 10.05.92)

2

அன்பிற்கும் உண்டோ
அடைக்குந்தாழ்
அந்தத் தாழ் இல்லாததால்
என் வாழ்க்கை பாழ் (ஜீ.கே.எஸ். மூர்த்தி. தாய் 17.05.92)

என்று கவிதைகளைப் படைத்துள்ளனர். முதல் கவிதை வரதட்சணையை மையப்படுத்தியும், கருவையே அழிக்கும் முன் யோசனையைக் கொடுக்க இன்றைய அறிவியல் வளர்ச்சி, பயன்படும் நிலையையும் உணர்த்துகிறது. மனித ஆக்கத்திற்கு உதவாத அல்லது அதற்கு மட்டுமே பணன்படுத்தப்படாத இந்த வளர்ச்சி தேவைதானா? உணர்வற்ற ஸ்கேன் கூடப் பரிதாபப்படுகிறது என்றுரைக்கும் வழி மனிதனே உன் உணர்வு மரத்துப்போய்விட்டதா? என்று உள்ளீடுகளைப் பொதித்துக்கொண்டிருக்கின்றது.இரண்டாவது கவிதையும் இன்னொமொரு கோணத்தில் பணப்பிரச்சனையையே சுட்டுகிறது. காதலிருவர் கருத்தொருமித்திருந்தால், சமூக கோட்பாட்டுக்கு உட்பட்டிருந்தால் தடைப்படுத்தும் தாழ் உருவாகியிருக்காது. இங்கு சமூக அந்தஸ்து எனக் கருதப்படுவது எல்லாம், அடையாத் தாழால் - தாழாக விட்டது. இதில் தொன்மை வார்ப்புக்கள், வாழும் சூழலுக்கேற்ப ஆங்காங்கு சில மாற்றங்களைச் செய்து, சம காலதத்திற்கேற்ப அர்த்தப்படுத்தி எழுதப்பட்டுள்ளது. இவையும் கவிஞனின் சமுதாயக் கண்காணிப்பில் எழுந்த விழிப்புணர்வேயாகும். இவ்விரு கவிதைகளில் கவிஞன் நடப்பியலை தான் கண்ட, கேட்ட, கண்காணித்த அனுபவங்களை உலகிற்க்குணர்த்தி விழிப்படையவைக்க முயற்சிக்கின்றான். சுருங்கச் சொல்லி விளங்கவைத்தலில் கவிஞனின் கருத்துச் செறிவு வெளிச்சத்திரளாய்ப் பளிச்சிடுகிறது.

எள்ளல் :

இந்த நவீன அறிவியல் வளர்ச்சிக் காலத்திலும் இன்னும் பழைமையை நம்பி ஏமாறும் மூடர்களும் இருக்கத்தான் செய்கின்றனர் என்பதைத் தமது சமுதாயக் கண்காணிப்பில் காசி ஆனந்தன் பதிவாயிருக்கிறார். முயற்சி திருவினையாக்கும் என்ற வள்ளுவமும், உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ என்ற பட்டினத்தாரின் பொன்மொழிகளும் மறக்கப்பட்டுவிட்டன. உழைக்காமல் பொருள்பெற நேரத்தை வீணடிக்கும் சமுதாயத்தை, நுண்மாண் நுழைபுலமற்ற நிலையில் இயங்கிக் கொண்டிருக்கும் மனித உருவங்களை

| 1 | 2 |
|---|---|
| என் | மரத்தடியில் |
| கையில் | கைரேகை பார்ப்பவரின் |
| அவன் | கைகளில் |
| தனரேகை | வறுமைக் கோடுகள் |

(காசி ஆனந்தன் நறுக்குகள் தமிழ்நேயம் 21) (இ.கமலாமாலினி, பாக்யா.1-7 மே92)

என்ற இரு கவிதைகளில் காட்சிப்படுத்துகின்றனர்.

சோதிடம் பார்ப்பவனுக்கு உண்மையாகச் சோதிடம் தெரிந்தால் அவன் ஏன் நம் ரேகையைப் பார்க்க வேண்டும். வழி தெரிந்து முன்னேறியிருப்பானே? ஆயின் அவன் புத்திசாலி, ஏமாற்றும் வித்தை தெரிந்தவன். அதனால் தான், கொஞ்சம் கொஞ்சம் உன்னிடம் இருக்கும் தனத்தையும் சோதிடத்திற்குக் கூலியாக பெறும் விதத்தை, அவன் தனரேகை என் கையில் என எள்ளி நகையாடுகிறான்.

## சிதைவியல் :

| 1 | 2 |
|---|---|
| சிமெண்டைத் தின்று | திரைப்படச் |
| வீடுகளாய் மாறும் மனிதர் | சுவரொட்டியை |
| பீதியுறுங்காலம் தின்ற கழுதை | |
| கலப்பையில் விதைத்தால்கொழுத்து | |
| கலப்பையே முளைக்கும் காலம் | பார்த்த கழுதை /புழுத்தது |
| ( பிரம்மராஜன், முன்றில் -4 ) | (காசி ஆனந்தன், நறுக்குகள்) |

இக்கவிதைகள் இந்திய சமுதாயத்தில் சிதைவுபட்டுக் கொண்டிருக்கும் பண்பாடுகளைச் சமூகச் சீரழிவுகளைத் தொலைக்கப்பட்ட பாரம்பரியங்களை, அமைதியை அப்படியே ஊன்றிக் கண்காணித்து எடுத்துரைக்கின்றன. மனிதன் தனக்குத்தானே அந்நியமாகி விட்டான். இயந்திரமாகி உள்சிதைந்து, பொறுமை இழந்து தவிக்கின்றான். அறிவியல் வளர்ச்சி, தகவல் தொடர்பு, நகரமயமாக்கல், அலுவல், சட்டங்கள், அதன் ஓட்டைகள், கெடுபிடிகள், அரசியல் சதுரங்கம் எனப் பல்வேறு பின்புலங்களுக்கிடையே மனிதன் தன்னையே இழந்து சிக்கலுக்கு நடுவே சிக்கி வெளிவர இயலாது, அவிழ்க்கவும் இயலாது தடுமாறும் நிலையில் வாழ்ந்து கொண்டிருக்கின்றான் என்பதும் மேற்கவிதைகளில் உள்ளோட்டமாய்ப் புலப்படுகிறது. சுருங்கச் சொல்லி விளங்க வைக்க வேண்டிய அவசரமான காலகட்டத்தில் கருத்துக்களுக்கு முதன்மை கொடுத்து எழுதப்பட்டு வரும் இந்த ஹைக்கூ கவிதைகள் இன்றைய அவசர வாழ்விடையே அவசரமாகவாவது படிக்கப்பட்டால் மக்களிடையே விழிப்புணர்வை உருவாக்கும். நல்ல கொள்ளைகளைப் பரப்புதலுக்கான களத்தை குறைந்த வரிகளில் அமைத்துக் கொண்டு, சமுதாயம் கருத்தூன்றும் நிலையில் விருட்சவிடியலுக்கான தேடலைக் கருக்கொள்ளச் செய்கின்றநன. இவற்றிலும் சில தள்ளத் தக்கனவாயும், வக்ரங்களுக்கு வடிகால்களாகவும் உள்ளன. தள்ள வேண்டியவற்றை விடுத்துக்கொள்ள வேண்டியவற்றை ஏற்பின் சமுதாயம் விழிப்புறும்.

கம்ப்யூட்டரில் ஜாதகம், பேஜரில் தினபலன்/ஃபேக்ஸில் வாழ்த்து, ஈ மெயிலில் எதிர்காலம்

கேஸட்டில் ஆயுள்பலன், தகடுகளில் அதிர்ஷ்டம்/யாகங்களில் ஆட்சி பீடம், இன்டர்நெட்டில் வழிபாடு

தொலைக்காட்சித் தொடரில் பில்லி சூனியம்/விடியலைத் தேடி - இந்தியர்

இந்தியா 2002. கே.கே.பி. மணியன். ஜூன் 2.08.02. இக்கவிதையும் உணர்த்தும் கருத்து இவைதான். பதிவாக்கப்பட வேண்டிய அனைத்துப் பண்பட்ட பழமைகளும் மறந்து கொண்டிருக்கும் காலகட்டம் இது. இச்சூழலில் விடுக்கப்பட வேண்டியவற்றை இறுக்கிப் பிடித்துக் கொள்வதால் கிட்டும் பயன் என்ன? விட்டு விடுங்கள் நாச வேலைகள் ஒழியும். முன்னேறலாம் உச்சத்தை நோக்கி என்று விழிப்புணர்வு ஊட்டுவனவாக மனிதனை கண்காணித்து இளமை வேகத்துடன் எழுந்து நிற்கின்றன. எத்தனை தொழில் நுட்பம் உருவானால் என்ன? எத்தனை "சில்"கள் பின் தொடர்ந்தால்தான் என்ன? முதலில் மனிதன் தன்னைத்தான் உணர்ந்தால் மட்டுமே உய்வு பெறலாம். சமுதாயத்தை நன்னிலைப்படுத்தும் சக்தி அன்றிலிருந்து இன்றுவரை வார்த்தையெனும் வலைபின்னலுக்கு மட்டுமே உண்டு. இற்றைச் சூழலாம் அவசரத்திற்குகந்தாக ஹைக்கூவின் பொருண்மை பொதிந்த சொல்லாக்கங்கள் இக்கண்காணிப்பு முறையில் இன்னும் நுட்பமாகப் பயன்படுத்தப்படின், "சில்"லுக்குரிய அத்தனை பணிகளையும் செயலுறுத்திச் சமுதாயத்தை செழுமையுறச் செய்யும்.

ஹைக்கூ வடிவமைப்பு காலத்திற்குகந்தது.

"சில்" - அலைவரிசைப் பணிக்கு இணையானது - பொருள் பொதிந்த வார்த்தைகள்

கண்காணிப்புப் பணியைச் சமுதாயத்துக்கும் உருவாக்கும்

நேரடிப் பயன், தொடர்புபட்ட கிளை வழிப்பயன்களைக் கண்காணிப்பு எழுத்துக்கள் செயலுறுத்தும்.

ஒரு கவிஞர், அன்றி ஒன்றுக்கு மேற்பட்ட கவிஞர்கள் அல்லது பிற மாறுபட்ட வடிவக் கவிதைகளுடன் ஒப்பிட்டு ஆய்வுப் பரப்பை விரிவுபடுத்தின் - கண்காணிப்புச் சமுதாயப் பார்வை முழுமையுறும். புதிய பல கருத்தாக்கங்கள் கிடைக்கும்.

அடிக்குறிப்பு :

1. ரவிஸ்ரீநிவாஸ், கே. கண்காணிப்புச் சமுதாயம், உயிர்மை, டிச.2004, ப.34-40,

2. சீனிச்சாமி. து. இருபதின் கவிதைகளில் சமூக நீதிக் கோட்பாடு. ப. 19.

# ஹைகூவைப் புரிந்து கொள்ளல்

முனைவர். *க. அன்பழகன்,* விரிவுரையாளர் - தமிழ்ப் பிரிவு,
தொலைதூர கல்வி இயக்ககம்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,அண்ணாமலை நகர் - 608 002.

## முன்னுரை

படைப்பிலக்கியப் பிரிவில் கவிதை நீண்ட வளர்ச்சியை உள்வாங்கி மாற்றம் பெற்று வந்திருக்கிறது. ஹைகூ என்பது ஜப்பான் மண்ணில் கிளைத்து தமிழுக்கு வந்து பூத்திருக்கிற வடிவம். ஹைகூவிற்கு இலக்கணம் உண்டு. தெரிந்து எழுதுகிறவர்கள் உண்டு, தெரியாமல் எழுதுகிறவர்கள் உண்டு. இதை அவர்கள் ஹைகூ கவிதைகள் என்ற அடையாளப்படுத்துகின்றனர். ஹைகூ கவிதையைப் புரிந்து கொள்ளல் என்பது இக்கட்டுரையாக அமைகிறது.

## எது ஹைகூ?

படைப்பு என்பதே புதுமையைக் குறிப்பது. மொழி பழமை மிக்கது எனினும் புதிய படைப்பு அதன் உயிருக்குப் புது மெருகேற்றுகிறது என்று சொல்லலாம். கவிதையும் இப்படித்தான்.

புதியதைச் சொல்ல வேண்டும்; பழையதைச் சொல்ல
நேரிட்டால் புதுமையாகச் சொல்ல வேண்டும் என்பது
புதுக்கவிதையின் இலக்கணம்

என்பார் கவிக்கோ. இதை விரிவுபடுத்தி ஹைகூவிற்குப் பொருத்திப் பார்க்கலாம். இந்தப் புதுமை எப்படி இருக்க வேண்டும் என்றால் மனத்துள் சலனத்தை உருவாக்க வேண்டும், வாழ்வின் மேன்மையை உணர்த்த வேண்டும். கவிதை உணர்த்தாது. நாம்தான் உணர்நது கொள்ள வேண்டும். உணர்தல் முடிவில்லாத ஆழம்போல ஒரு தேடலையும், தாகத்தையும் ஏற்படுத்த வேண்டும். ஹைகூவும் இப்படித்தான் என்று அடையாளப்படுத்தலாம்.

## ஹைகூவைப் புரிந்து கொள்ளல்

கவிதையைப் புரிந்து கொள்ளல் ஒரு கலையாகும். ஹைகூவைப் புரிந்து கொள்ளல் ஒரு நுட்பமாகும். இந்த நுட்பம் கவிதைக்கு கவிதை மாறுபடும். கட்டுரையின் விரிவஞ்சி சில ஹைகூ கவிதைகள் மட்டும் சான்றுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டன.

ஹைகூவின் தந்தை என்றழைக்கப்படும் பாஷோவின் கவிதை இது,

பழைய குளம்
தவளை குதித்தது
நீர் ஒலி

மேலோட்டமாகப் பார்த்தால் இது ஒரு காட்சி. உள்ளுக்குள் பார்த்தால் வாழ்வின் உயர்ச்சி வெளிப்படும். சந்தை இரைச்சல் மிகுந்திருக்கையில் ஒரு குழந்தையின் கால் கொலுசொலி கேட்கும் நுட்பம் மேலேயுள்ள கவிதையைப் புரிதல் வேண்டும். இப்படிப் பல நுட்பங்கள் கவிதைக்குள் ஒளிந்து கிடக்கும். பல அர்த்தங்கள் படைப்பாளனுக்கே பிடிபடாத அர்த்தங்கள் படிப்பவனுக்குத் தோன்றலாம். தோன்றும், தோன்ற வேண்டும். இப்போது கவிதைக்குப் பொருளைப் பார்ப்போம்.

அமைதியான குளத்தில் தவளை குதிக்கச் சலனம் ஏற்பட்டு விரிந்து போகும். பின் அது மறைந்து போகும். சலனம் இல்லாது குளம் இருக்கும். இது ஒரு காட்சி. இது உணர்த்துவது என்ன.? நடந்து கொண்டே இருக்கிறது இச்சம்பவம் நாள்தோறும் குளத்தில். ஆனால் யாரும் இதைப் பொருட்படுத்த மாட்டார்கள். ஏனெனில் இது இயல்பு. இப்போது புரிதலுக்கு வருவோம். குளம் பிரபஞ்சம். நாமெல்லாம் தவளை உயிர்கள். தரையில்

கொஞ்ச நேரம் தவளை தாவுவது போல் நம் வாழ்க்கை முறை. எந்தக் குளத்தில் இருந்து வந்தோமோ அங்கே மீண்டும் செல்லல். இது உணர்த்துவது என்ன. எல்லாம் ஒரு மூலத்தில் தோன்றி மீண்டும் அந்த மூலத்திற்கே சென்றுவிடல் என்பதுதான். இக்கவிதையைப் பொறுத்த மட்டில். படைப்பாளன் மிக ஆழமான உணர்த்துதல் பண்பைக் கொண்டவன். வாசகன் இந்த நுட்பத்திற்கு வந்து கவிதையைப் புரிந்து கொள்ள காலம் பிடிக்கும். சாதாரண ஒன்றில் மிகப்பெரிய வாழ்வின் உண்மையைத் தரிசிக்கிற நுட்பம் பார்க்கத் தெரிய வேண்டும். படைப்பாளன் ஒன்றை மட்டும் சொல்லி நிறுத்திக் கொள்வான். வாசகனுக்குத்தான் வேறு பொருள்கள் கிடைத்துக்கொண்டேயிருக்க வேண்டும். பழைய குயம் என்னும் போது குதிக்கிற தவளை புதிதாகிறது. நீரின் ஒலி புதிய தவளைக்குப் பழக வேண்டும். தான் உண்டாக்கும் ஒலியைக் கண்டு தவளைக்கு நீர்ஒலி மகிழ்ச்சியை ஏற்படுத்தலாம். குளத்திற்கு ஏற்படாது. குளத்தின் பிருமாண்டம் புரியும் போது தவளை ஒலியை அலட்சியப்படுத்தி இயல்பெனப் போகும். வாழ்க்கையும் அப்படித்தான். பிறந்து தவழ்ந்து வளர்கிற குழந்தைக்குப் பார்க்கிற எல்லாமமே பிரமிப்பையும் மகிழ்ச்சியையும் தரும். பின் எல்லாம் இயல்பாகிப் போகும். பிறப்பு, இறப்பு, மகிழ்ச்சி, அழுகை, துன்பம் ஏற்படுத்தும் மாற்றங்களைப் போலவே.

இன்னொரு கவிதையைப் பாருங்கள்,

பாவம் தூண்டில்காரன்
தக்கை மீது
தும்பி !

இது தூண்டில் போட்டு காத்திருக்கிற ஒரு காட்சி. பாவம் தூண்டில்காரன் என்று ஏன் சொல்ல வேண்டும்? தக்கை மீது தட்டான் எனப்படும் தும்பி ஏன் அமர்ந்திருக்க வேண்டும்? ஏன் இதை சொல்ல வேண்டும்? மீன்கள் இல்லாத இடத்தில் தூண்டில் போட்டிருக்கிறான். மீன்கள் கிடைக்கவில்லை. மீன் இருந்து தூண்டிலைக் கவ்வினால் தக்கை அசைந்து உள்ளிழுக்கப்படும். எனவே அசையாத தக்கை மீது தும்பி இளைப்பாறுகிறது. அழகான காட்சி துயரத்தை, ஒரு வறுமையின் துயரத்தைப் படம்பிடிக்கிறது. இங்கு மீன்கள் கிடைக்குமா கிடைக்காதா எனக்கூட அறிய முடியாத ஒரு முடிவின்மையைப் படம்பிடிக்கிறது. நீர் இருக்கும் இடமெல்லாம் மீன் இருக்கும் என்ற ஒரு மாயை இங்கு உணர்த்தப்படுகின்றது. மேலும் பல சமயங்களில் பலருக்கு பல விஷயங்கள் பிடிபடுவதே இல்லை. புரியாமல் காத்திருந்து ஏமாந்து போகிறார்கள். இதையும் வாழ்வின் உயர்ச்சியாக இக்கவிதைப் புலப்படுத்துகிறது.

ஒரு ஹைகூவைப் புரிந்து கொள்ளல் எனும்போது ஒரு நுட்பம் தேவைப்படுகிறது. படைப்பாளன் மற்றவர்களைக் காட்டிலும் வேறுபட்டு நிற்கிறான். ஆனால் வாசகன் படைப்பாளனைக் காட்டிலும் விஞ்சி நிற்கிறான். தொடர்ந்த வாசிப்பும் அனுபவமும் காலமும் கற்றுத்தந்த பாடம், இது. கவிக்கோ குறிப்பிடுவதை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். "உணர்வலைகள் உண்டாக்கும் ஒரு சம்பவத்தை மட்டும் சொல்லி நிறுத்திக் கொள்ளும் போது அது குறியீடாகிவிடுகின்றது. குறியீடு பன்முக ஆற்றல் உடையது. அது வாசகனுடைய பக்குவத்திற்கேற்றபடி பல அர்த்தங்களைத் தந்து கொண்டே இருக்கும். ஏன், கவிஞனுக்கே தோன்றாத அர்த்தம் கூட வாசகனுக்குத் தோன்றலாம்."படைப்பாளன் ஒரு கருத்தை மனதுள் இருத்திப் படைக்கும் படைப்பைத் தாண்டி வாசகன் பல கருத்துக்களை அந்தப் படைப்பிலிருந்து எடுத்துப் பார்க்கிறான். இது கவிதையைப் புரிந்து கொண்டது மட்டுமல்ல கவிதைக்குக் கிடைத்த வெற்றியும் கூட.

நுட்பம் இல்லாமல் நேரடியாகப் பொருள் உணர்த்திப் பிரமிக்க வைக்கும் ஹைகூக்களும் உண்டு. இவற்றின் பொருளையும் இரண்டு மூன்று முறை படிக்கும் போதே பிடிபடும்.

யாசிக்கச் செல்வோரிடமே/யாசகம்/கோயில் வாசலில் பிச்சைக்காரன்
விபத்தில் மரணம் /பத்துப் பொருத்தம் பார்த்து /முடித்த மாப்பிள்ளை
உண்டியல் நிறைய காசு/கோயில் வாசலில்/பசியுடன் பிச்சைக்காரன்

முதல் கவிதை இறைவனிடம் யாசிக்கப் போகிறார்கள். அவர்களிடமே யாசகமா கிடைக்கும்? என்பதைச் சொல்லுவது. நீயே பிச்சை கேட்கப் போகிறாய் ஆண்டவனிடம். உன்கிட்டே நான் பிச்சை கேட்கிறேன். எல்லோருமே யாசிக்கிறோம். யாரையும் கேலி பேசக்கூடாது என்பதை உணர்த்துவது, மேலும் வழிபடுதல் என்பது இன்றைக்கு வேண்டுகோளை முன்னிருத்துவது என்பதான நிலைக்குத் தள்ளப்பட்ட அவலத்தையும் அவ்வாறு உள்ள சூழலில் வெளியில் கையேந்தும் பிச்சைக்காரனுக்கு கோயில் உள்ளே செல்லும் உனக்கும் வேறுபாடு இல்லை என்பதையும் உணர்த்துகிறது. இயற்கை, விதி வலிமை பற்றியது இரண்டாவது கவிதை. உண்மையான இறைவன் தொண்டு ஏழைக்கு உதவுதல், பசியுடன் இருக்கும் பிச்சைக்காரனுக்குப் பசி தீர்ப்பதைவிட உண்டியலில் காசு போடுவது பெரிய தொண்டு ஆகிவிடாது. உண்டியல் நிறைய இருக்கும் காசை இறைவனுக்குச் செலவிடுவதை விட பிச்சைக்காரன் பசியைப் போக்க செலவிடலாம் என்பதை உணர்த்துகிறது மூன்றாவது கவிதை.

வாய்ப்பு வழங்கப்படும் போது எல்லோரும் வாழ்க்கையில் ஜெயிப்பார்கள் என்பதை நம்பிக்கையோடு சொல்லும் பின்வரும் கவிதை.

பதக்கம் பெறாத / மல்லேஸ்வரிகள் /செங்கல் சுமக்கும் பூக்கள்!

மல்லேஸ்வரி பற்றித் தெரிந்தால்தான் இக்கவிதையைப் புரிந்து கொள்ள முடியும் என்பது ஒரு சிறு குறை இக்கவிதையைப் புரிந்து கொள்வதில்.

காட்சி, நுட்பம், பின்னணி, சூழல், சமூகம் போன்றவை கவிதையைப் புரிந்து கொள்ளலில் உதவுகின்றன. மேலும் சில கவிதைகள் பின்வருமாறு :

சின்ன சைக்களில்
பயமற்ற சிறுவர்கள்
கைத்தடியுடன் நான்

வெட்ட வெட்ட
துளிர்த்தது
சாதி

இரண்டு லாரிகள் மோதல்
இரண்டின் முகப்பிலும்
அம்மன் துணை

சிதாரும் கிணறும் ஒன்று
நீரின் இடத்தில்
காற்று

ஐயனார் தோளில் அமர்ந்து
வாலை ஆட்டும்
குருவி

குல்லா அங்கு பூணூல்
எல்லாம் புதைந்து கிடக்கின்றன
பருத்திச் செடிக்குள்

பகலில் சூரியன்
இரவில் நிலா
தங்கிட ஒரே கிணறு

ஹைகூவுக்கு உருவம் ஆகாது. கற்பனை ஆகாது. பார்த்த காட்சியாக இருக்க வேண்டும். அதில் ஓர் அற்புதம் இருக்க வேண்டும். சமூக விமர்சனம் இருந்தால் தற்செயலாக மறைந்து இருக்க வேண்டும். The Strangeness concealed behind the banel என ஹைகூ பற்றி சுஜாதா குறிப்பிடுகிறார். இது பிடிபடின் ஹைகூ கவிதையைப் புரிந்து கொள்வதிலும் சிரமம் இருக்காது எனலாம்.

# ஒரு வண்டி சென்ரியு - ஓர் ஆய்வு

*மு. இளங்கோ,* எம்.ஏ.எம்ஃபில்.,
ஸ்ரீ பாலமுருகன் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, சாத்தப்பாடி, மேச்சேரி.

இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உலக அளவில் பரந்த புகழையும், கவனிப்பையும் பெற்ற இலக்கிய வடிவம் ஹைக்கூ. கடுகு சிறுத்தாலும் காரம் குறையாது என்ற பழமொழிக்கேற்ப மூன்றடிக்குள் வாழ்வியலை அழகாக எடுத்துரைக்கும் தன்மை கொண்டது. ஹைக்கூவின் இலக்கணங்களுடன் அங்கதத் தன்மையுடன் வெளிவரும் இலக்கியம் சென்ரியு எனப்படுகிறது. தமிழின் முதல் சென்ரியு தொகுப்பு என்ற அறிவிப்புடன் ஒரு வண்டி சென்ரியு என்ற நூலை வெளியிட்டுள்ளார் கவிஞர் ஈரோடு தமிழன்பன். அந்நூல் இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப் படுகின்றது.

## சென்ரியு - பொதுத்தன்மை

"ஹைக்கூவின் அங்கத வடிவம் சென்ரியு. ஹைகூ இயற்கை உலகில் பார்வை செலுத்துகிறது எனில், மக்கள் பொருள்கள், சம்பவங்கள் ஆகியவற்றின் மீது பார்வையை குறிப்பது சென்ரியு. 5+7+5 = 17 என்னும் அசைகள் அமைப்போடு ஒழுங்கு வகைப்பட்டு ஒவ்வொரு கவிதையும் இருக்கும். மறைபொருள் தன்மை உடையவையாய் இருப்பதால், ஒரு சமயத்தில் ஒன்றிடண்டு மட்டும் என்று கொஞ்சம் கொஞ்சமாகப் படிப்பதே பயனுடையதாக இருக்கும்" (ஈரோடு தமிழன்பன், ஒரு வண்டி சென்ரியு, ப.7) இங்கு கூறப்பட்ட அசை எண்ணிக்கையைப் புறக்கணித்துவிட்டு மூன்று வரிகளில் எழுதப்படுபவை எல்லாமே ஹைகூ என்றும் சென்ரியு என்றும் ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. ஆழமான கருத்தைச் சொன்னாலும் வேடிக்கைக் கவிதையாகச் சொன்னாலும் சென்ரியுவில் நகைச்சுவையோ, அங்கதமோ ஒட்டிக்கொண்டிருக்கும்.

## நகைச்சுவை

"நகையே அழுகை இளிவரல் மருட்கை/அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று அப்பால் எட்டாம் மெய்ப்பா டென்ப" (தொல்காப்பியம்)

எட்டுவகை மெய்ப்பாடுகளில் நகைச்சுவைக்கே முதலிடம் தருகின்றார் தொல்காப்பியர். மனித இனத்திற்கு மட்டுமே உரியது நகைச்சுவை. இது வாழ்வின் இன்றியமையா தேவையும் கூட ஒரு வண்டி சென்ரியு நூலில் நகைச்சுவைக் கவிதைகள் ஏராளம் இடம் பெற்றுள்ளன.

"கட்சி மாநாடு /உறுப்பினர்கள் புறக்கணிப்பு/உணவு ஏற்பாடு சரியில்லையாம்" (ப. 154)

"ஆயிரம் பேரோடு/வேட்பு மனுத்தாக்கல் /ஐம்பது வாக்குகள்" (ப. 30)

இங்கு கட்சி மாநாடு குறித்தும், அரசியல்வாதிகள் (வேட்புமனுத்தாக்கல் செய்ய) கூட்டி வரும் கூட்டம் குறித்தும் கவிஞர் கூறும் உண்மை நம்மை நகைக்க வைக்கின்றது. புகழ்பெற்ற இலக்கிய வரலாற்றுப் பாத்திரங்கள் பொருந்தாத நடிகர்க்கு சிலநேரம் வலிந்து பெருகுவதுண்டு. அதை எள்ளல் செய்து கூறுகின்றார் ஈரோடு தமிழன்பன்,

"ஒரு நடிகன்/சாகும் தருணம் /பிழைத்து பாத்திரம்" (ப. 16)

ஒலிபெருக்கியில் பேசுமிமுன் சரியாக செயல்படுகிறதா என்பதை சோதிப்பதுண்டு சில நேரங்களில் பேச்சாளர்கள் மக்களின் பொருமையை சோதிப்பதுண்டு. இதனைச் சொல்ல வந்தக் கவிஞர்,

"ஒலி பெருக்கிச் /சோதனை முடிந்ததும்/பேச்சாளர் சோதனை" (ப. 54)

என்கிறார். இவர் பாடல்களையும் விட்டு வைக்கவில்லை.

"ஒரே சமயத்தில் வேண்டாம் என்று /பாடகர் முடித்ததும்/வாய்விட்டழுதது குழந்தை" (ப. 67)

என்று சொல்கிறார். இயற்கை மனிதனுக்கு அளித்த மிகச் சிறந்த கொடை என்பது நகைச்சுவையே. இதன் மூலம் மன அழுத்தம் குறைந்து லேசாகிறது. சோர்வு நீங்குகிறது. ஒரு வண்டி சென்ரியுவில் சமூக நிகழ்வுகள்

நகைச்சுவையாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

### அங்கதம்

தொல்காப்பியர் காலத்திலேயே அங்கதம் குறித்து கூறப்பட்டுள்ளது. இடைக்கால இலக்கியங்களில் வசைப்பாடல்களாக உருவெடுத்த அங்கதம் புதுக்கவிதைகளில் சிறப்பாக வெளிப்பட்டது. "குற்றங்களைச் சுட்டிக்காட்டி அதனைத் திருத்தும் நோக்கம்கொண்டது அங்கதம். கொடுமையையும் முட்டாள்தனத்தையும்கண்டிக்கும் கவிதையே அங்கதக் கவிதையாகும். குற்றங்களைச் சுட்டித் திருத்துவதே அங்கதத்தின் நோக்கமாகும். சுருங்கச் சொன்னால் அங்கதத்தின் நோக்கம் சீர்திருத்தமே1(டாக்டர் சபாபதி வேணுகோபால், கருத்தரங்கக் கட்டுரைகள், பக் 144, 145) இதற்கு அங்கதத்தால் புகழ்பெற்றவை சென்ரியுக்கள்.

"சட்டம் ஒழுக்கைக்/காப்பாற்ற முடியவில்லை/சட்டசபையில் (ப. 31)

சட்டசபையிலே சட்டம் ஒழுங்கு காக்கப்படவில்லை? எனில் நாட்டு நிலை சட்டம் ஒழுங்கை மதித்து நடப்பவர்களை நல்லவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற விழிப்புணர்வை உண்டாக்குகின்றார் ஈரோடு தமிழன்பன்.

"விலங்குகளில் ஒரு வகை/எழுதப் படிக்கத் /தெரிந்தது" (ப. 88)

மக்கட்பண்பு இல்லாதவனை மரத்தோடு ஒப்பிட்டார் வள்ளுவர். கல்வி கற்றாலும் மக்கள் பெரும்பான்மை மாக்களாகவே இருக்கின்றனர் என்பதை சுட்டுகிறார்.

"எட்டுப் பந்தயங்களில் /பூஜ்யம் போட்டவன்/கிரிக்கெட் பயிற்சியாளன்" (ப.23)

விளையாட்டுத் துறையின் அரசியலை இங்கு அம்பல(அங்கத)ப்படுத்துகின்றார்.

"இரண்டு வருடங்களாய் /நோயில் முடியாதது /மருத்துவத்தால் ஒரே நாளில்" (ப. 31)

ஒரே நாளில் மருத்துவத்தால் மரணத்தை வழங்க முடிந்ததை காட்டுகிறார் கவிஞர். அங்கதச் சென்ரியுக்கள் சிரிக்கவும், சிந்திக்கவும் வைக்கின்றன.

### விடுகதைப் போக்கு

"விடுதலை என்பது விடுவிக்கப்பட வேண்டியது.மறைபொருளினின்றும் விடுவிக்கப்பட வேண்டிய கதையே விடுகதையாகும். வினா எழுப்பும் வகையாகவும் விடையிறுக்கும்தன்மையாகவும் விடுகதைகள் உள்ளன.(டாக்டர் சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு. ப. 123) சென்ரியுக்கள் விடுகதைப் போக்கிலும், வினா விடை அமைப்பிலும் அமைந்துள்ளன.

"பக்தர்களிடம் /கடவுள் கேட்ட வரம்/அரசியலுக்கு இழுக்காதீர்கள்" (ப. 31)

பக்தர்கள் தான் கடவுளிடம் வரம் கேட்பார்கள். இங்கு கடவுள் வரம் கேட்பதாக புதிர் போட்டு அரசியலுக்கு இழுக்க வேண்டாம் என கேட்டுக் கொள்வதாகக் கூறுகின்றார்.

"சிலைக்கு வெளியே போய் வந்த /கடவுள் சிலையாய் நின்றார்/சிலையைக் காணோம்" (ப. 40)

இங்கு விடுகலைப் போக்கில் வந்த சென்ரியு சமூக களவு நிலையைத் தோலுரித்துக் காட்டுகிறது.

"தலைவர் /வெளிவர முடியவில்லை/பத்திரிக்கை வெளிவந்து விட்டது" (ப. 29)

ஒரு குற்றம் அல்லது பாவம் செய்தபொழுது வெளியே தலைகாட்ட இயலாது. இங்கு தலைவர் வெளியே வரமுடியவில்லை காரணம், அவர் குறித்த செய்தி பத்திரிக்கையில் வெளிவந்துவிட்டது.

விடுகதைத் தன்மையில் தன்னை வெளிப்படுத்தும் கலை சென்ரியுக்களுக்கு எளிதாக உள்ளது.

### பொன்மொழி போன்றவை

மூத்தோர்கள் சொன்ன அனுபவ மொழி பழமொழி. அதுபோல் அறிஞர்களால் உதிர்க்கப்பட்டவையும் சிறந்தமொழியாகப் போற்றப்படுகின்றது.

"அது வராவிட்டால் இது/இது வராவிட்டடால் அது/எதுவும் வராவிட்டால் அரசியல்" ( ப. 66)

"நரிகள் தேசம் ஆடுகள் அமைச்சர்களாகித்தான் /என்ன பயன்?" (ப. 33)

இந்த சென்ரியுக்கள் அரசியல் குறித்தும், ஆள்வோர் குறித்தும் உதிர்க்கப்பட்ட பொன்மொழியாக காட்சி

தருகின்றன.

"மரணம் நிச்சயம் /மருந்தாவது இருக்கக்கூடாதா

இனிப்பாக" (ப. 98)உயிரைப் போக்க நஞ்சை நாடினால் கசப்பாக இருக்கிறது. இனிக்கும் நஞ்சானால் நன்றாக இருக்குமென்று நகைச்சுவையுடன் கூறிய பொன்மொழியாகிறது. வாழத் தெரியாதவர்கள் வாழும் நாட்டில் ஆளத் தெரியாதவர்கள்தான் ஆட்சி செய்வார்கள் என்பர் அறிஞர். இங்கு ஜனநாயகம் குறித்து தமிழன்பன்,

"தேர்ந்தெடுக்கத் தெரியாத /ஜனங்களின் சாதனை /ஜனநாயகம்" (ப. 74)

இங்ஙனம் பொன்மொழி போன்றவற்றை ஒரு வண்டி சென்ரியுவில் காண முடிகின்றது.

## வேடிக்கைச் சிறுகவிதை

புதுக்கவிதையில் சில துணுக்குத் தோரணங்களே கவிதையாக அமைவதுண்டு. அவற்றை வேடிக்கைச் சிறுகவிதைகள் என்றும் கூறலாம்.

"கட்டிடத் திறப்பு விழா/அமைச்சர் இடிந்து போயிருந்தார் /திடீர் பதவிப் பறிப்பு" (ப. 33)

இது முரண்தொடையில் வேடிக்கை அமைந்துள்ளது. மழை பொழியும் என்று வானிலை அறிக்கை கூறும்பொழுதெல்லாம் சரியாக மழை பெய்வதில்லை. இதனை,

மழையின் கவலை/வானிலை அறிக்கைப் படி/பெய்ய முடியுமா?" (ப. 56) என்கிறார்.

"அடடே /இந்தப் பழம் இனிக்கும் /ஏணியுடன் அதே நரி" (ப. 45)

என்று பழங்கதையை நவீனப்படுத்துகிறார்.

"அதர்மங்கள்/அஞ்சிய கடவுள்/அவதார நிறுத்தம்" (ப. 32)

என்று வேடிக்கையாகக் கூறினாலும் அதர்மங்கள் பெருகிவிட்டதை ஆழமாக உணர்த்துகின்றார்.

ஒரு வண்டி சென்ரியுவில் சில வேடிக்கைச் சிறுகவிதையாய் வெளிப்பட்டு நிற்பதைக் காண முடிகின்றது.

## முடிவுரை

ஹைகூவைப் போன்றே ஜப்பானிலிருந்து உலகமெங்கும் பரவிய இலக்கிய வகை சென்ரியு. தமிழின் முதல் சென்ரியுத் தொகுப்பு எனப் போற்றப்படும் ஈரோடு தமிழன்பனின் ஒரு வண்டி சென்ரியு அங்கதத்தாலும், நகைச்சுவையாலும் நிரம்பி காணப்படுகின்றது. வினா விடை அமைப்பிலான விடுகதைப் போக்கும், பொன்மொழி போன்றவையாகவும், வேடிக்கைச் சிறுகவிதைகளாகவும் அமைந்துள்ளன. இவை அனைத்திலும் மெல்லிய நகைச்சுவையும் சிந்தனையைத்தூண்டும் செயலும் இடம்பிடித்துள்ளன. தமிழில் சென்ரியுக்களுக்கு நல்லதொரு எதிர்காலம் உண்டு.

# சென்ரியு கவிதைகள் காட்டும் சமுதாயம்

*த. இளஞ்செழியன்,* எம்.ஏ., எம்.ஃபில், விரிவுரையாளர், தமிழ்த்துறை
பொன்னையா ராமஜெயம் கல்லூரி தஞ்சாவூர்.

ஈரோடு தமிழன்பன் தமிழ்ப் புதுக்கவிதை உலகில் குறிப்பிடத்தக்கவர். "தோணி வருகிறது", "ஊமை வெயில்", "சூரியப் பிறைகள்" போன்ற இருபதுக்கும் மேற்பட்ட புதுக்கவிதை நூல்களை வெளியிட்டவர். இவை அனைத்தும் யதார்த்தமான வாழ்வியல் உண்மைகளை வெளிப்படுத்தக் காணலாம். தான் வாழும் சமூகம் அனைத்துத் துறைகளிலும் மேம்பட வேண்டும் என்ற உயர்ந்த சிந்தனையைக் கொண்ட இவர் தமது கவிதைப் போக்குகளால் இலக்கிய வடிவத்தில் பலவகை மாற்றங்களை விரும்பியவர். ஜப்பானில் மதுக்கடைகளிலும், தேநீர் நிலையங்களிலும் தோன்றி வளர்ந்து புகழ்பெற்ற "சென்ரியு" என்ற கவிதை வகையைத் தமிழ் மொழியில் அறிமுகம் செய்து "ஒரு வண்டி சென்ரியு" என்ற முதல் சென்ரியு கவிதைத் தொகுப்பு நூலை வெளியிட்டவர். இந்நூல் இருநூறு சென்ரியு கவிதைகளை உள்ளடக்கியது. இந்நூலில் காணலாகும் சென்ரியு கவிதைகளை நோக்கின் கவிஞர், இன்றைய வாழ்க்கைப் போக்கின் குற்றங் குறைகளை மென்மையாக நகைச்சுவை உணர்வுடன் கிண்டல் செய்துள்ளதை அறியமுடிகிறது. இவற்றை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## சென்ரியு - விளக்கம்

சென்ரியு கவிதை இலக்கியம் ஜப்பானில் வளர்ந்த கவிதை வகை. நடுத்தர மக்களின் அனுபவம், உணர்வு போன்றவற்றையும், அவர்களின் வாழ்க்கை அழுக்கை அகற்றும் சாதனமாகவும், சுய அறிவுக்கு ஏற்றதாகவும், மனித வாழ்வை அங்கதப்படுத்தும் தன்மை வாய்ந்த கவிதை வகை சென்ரியு கவிதைகள் எனப்படுகின்றன. இக்கவிதை உணர்த்தும் பொருள், சொல்லால் விளக்க இயலாத சூட்சமப் பொருளாகும். அதாவது மறைபொருள் தன்மை உடையனவாய் இருக்கும். 1980-இல் மேரி கேசல் என்பவர் வெளியிட்டுள்ள அன்றாடமை என்னும் தலைப்புள்ள சென்ரியு அங்கதக் கவிதைகள் நூலின் முன்னுரை மிகச் மிகச் சுருக்கமாக சென்ரியு பற்றிக் குறிப்பிடுகின்றது. "ஹைகூவின் அங்கத வடிவம் சென்ரியு. ஹைகூ இயற்கை உலகில் பார்வை செலுத்துகிறது எனில் மக்கள், பொருள், சம்பவங்கள் ஆகியவற்றின் மீது பார்வையைக் குறிப்பது சென்ரியு. 5+7+5=17 என்னும் அசைகள் அமைப்போடு ஒழுங்கு வகைப்பட்டு ஒவ்வொரு கவிதையும் இருக்கும்". இச் சென்ரியு கவிதைகள் மறைபொருள் தன்மை உடையனவாய்இருப்பதால் ஒரே சமயத்தில் ஒன்றிரண்டு என்று கொஞ்சம் கொஞ்சமாகப் படிப்பதே பயனளிப்பதாகவுள்ளது.

## வழிபாடும் மனிதனும்

தன் மனம் மகிழும்படியாகக் கடவுள் மேல் வெளிப்படுத்தும், அன்பும், பாசமும், நடப்பும் கலந்த உணர்வை வழிபாடு எனலாம். கடவுளின்மேல் கொண்ட பக்திக்கு அளவேதும் கிடையாது. இன்றைய சமூகத்தில் கோயில் அர்ச்சகராகப் பணிபுரியும் பலர் சமயத்தின்பால் பற்றும், இறை உணர்வும் அற்றவர்களாகக் காசு ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு இறைப் பணியாற்றுவதைக்

குருக்களாகிவிட்ட கடவுள்/மறுபடியும் கடவுளாகவில்லை

தட்டு நிறைய காணிக்கை (27-2)/என்ற சென்ரியு கவிதை உணர்த்துகிறது. மேலும்,

கடவுள்/கடைசி ஆசையைச் சொன்னார்/பூசாரியாய் பிறக்க் வேண்டும் (66-1)

என்ற சென்ரியு கவிதையில் கடவுளைக் காட்டிலும் பூசாரியாய் இருப்பதே பயனளிக்கக் கூடியது என்ற கருத்து வெளிப்படுகிறது. மேற்கூறிய இரண்டு கவிதைகளும் இறைப்பணிஎன்பதுபொருளாதாரம் சார்ந்த வருவாய் ஈட்டும் தொழிலாக மாறியுள்ள நிலையை அங்கதச் சுவையோடு வெளிப்படுத்துகின்றன.

### வாழ்வியல் நெறி

மனிதன் மற்ற உயிரினங்களிடமிருந்து மேம்பட்டவன். தன்னுடைய உயர் பண்புகளால் காட்டுமிராண்டி வாழ்க்கையிலிருந்து விடுபட்ட பக்குவப்பட்ட பண்பட்ட நிலையில் வாழ்வதற்கு அவனுடைய நற்பண்புகளே காரணமாக அமைகின்றன. இன்றைய மனித வாழ்வியல் நிலை உலக நடைமுறைகளை அறிந்து அதன்வழி வாழ்வதற்கு வேண்டிய நற்பண்புகளிலிருந்து விலகி கவலை கொள்ளும் வகையில் அமைந்துள்ளன. முறையான வாழ்க்கை என்பது பேச்சளவிலேயே உள்ளது. மனிதன் தான் வாழும் அனைத்து நிலைகளிலும் முறையற்ற வகையில் வாழும் நிலையை,

வரி செலுத்தி வாழும்/ஒரே ஒரு விலங்கு/மனிதன் (20-3)

என்ற சென்ரியு வெளிப்படுத்துகிறது. மனிதன் அறிவு நிலையிலும், பண்பு நிலையிலும் விலங்குகளிலிருந்து வேறுபடாமல் வரி செலுத்தும் நிலையில் மட்டுமே வேறுபட்டிருப்பதை இக்கவிதை அழகாகச் சுட்டுகிறது.

### பகுத்துண்ணல்

உலகம் போற்றும் உயர்ந்த அறங்களுள் ஒன்று பகுத்துண்ணல். இது தமிழர்கள் போற்றும் தலைசிறந்த அறமாகப் போற்றப்பட்டது. அறநூல்கள் உரைத்த அறங்களுள் தலைமைச் சார்ந்தது இதுவே. கிடைத்தற்கரிய பொருளாயினும் பிறர்க்கும் கொடுத்து உண்ணுதலே சிறப்புக்குரியது என்று பழந்தமிழ் இலக்கியங்கள் சுட்டுகின்றன. ஆனால் இத்தகைய பகுத்துண்ணல் பண்பின் நிலையை,

சாப்பாட்டு நேரமாக/வந்துவிட்டார் சாப்பிடலாம்/அவர் போன பின் (23 - 3)

என்ற சென்ரியு புலப்படுத்துகிறது. பகுத்துண்ணல் பண்பு கெட்டுத் தனித்துண்ணும் பண்பு மேலோங்கியிருக்கும் இன்றையச் சமூகத்தை இக்கவிதை படம் பிடித்துக் காட்டுகிறது.

### பொறுப்பின்மை

சமூக வளர்ச்சியில் அக்கறை கொண்ட அனைத்துக் கவிஞர்களும் சமூகத்தில் நடைபெறும் தவறுகளைச் சுட்டிக் காட்டத் தயங்க மாட்டார்கள். அரசாங்கத்தின் ஆணிவேராக அரசு அலுவலர்கள் திகழ்கிறார்கள். ஆனால் அவர்களுக்குரிய தேவைகளை முறையான நேரத்தில் அரசு வழங்குவதில்லை என்ற கருத்தமைந்த,

மூன்று வருடங்களுக்குப்பின்/முதல் ஓய்வு ஊதியம்/ஈமக் கடனுக்கு (10-2)

சென்ரியு கவிதை அரசு அலுவலர்களின் பொறுப்பின்மையைக் கவலையோடு சித்தரிக்கின்றது. இதைப் போலவே மருத்துவத்துறை சார்ந்தவர்களும் தமக்குரிய கடமைகளைப் பொறுப்புடன் செய்வதில்லை என்பதை,

அறுவை சிகிச்சை/முடிந்ததும் தெரிந்தது/நோயாளி மாறிப்போனது (68-3)

தூங்கிய மருத்துவருக்குக் கோபம்/தூக்கம் வரவில்லை என்று எழுப்பிய/நோயாளி (82-3)

என்ற சென்ரியு கவிதைகள் புலப்படுத்துகின்றன.

### அரசியல் :

சமூக வளர்ச்சியில் அக்கறை கொண்ட கவிஞர்கள் மக்களோடு நேரடித் தொடர்புடைய அரசியல் கட்சிகள் செய்யும்தவறுகளைச் சுட்டிக் காட்டும் கடமை வாய்ந்தவர்களாகவும், அரசியல் சீர்திருத்தவாதியாகவும், நல்ல ஜனநாயகத்தை உருவாக்கும் சிந்தனை வாய்ந்தவர்களாகவும் விளங்குவர். மேலும், தமது படைப்புகளின் வழி மக்களுக்கு இத்தகைய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவதையே தமது நோக்கமாகக் கொண்டு விளங்குவர். இன்றைய அரசியல்வாதிகள் நாட்டு மக்களுக்காக உழைக்க வேண்டும் என்ற இலச்சியம் இல்லாமலும், தெளிந்த கொள்கைப் பிடிப்புகள் இல்லாதவர்களாகவும் சுயலாபம் பொருட்டேஅரசியலில் ஈடுபட்டு வருகிறார்கள் என்ற கருத்தை விளக்கும் வகையில்,

பதவி பறிக்கப்பட்ட/தலைவர் சொன்னார்/இது போனால் இன்னொன்னு (20-1)

அது வராவிட்டால் இது/இது வராவிட்டால் அது/எதுவும் வராவிட்டால் அரசியல் (66-1)

இக்கவிதைகள் அமைந்துள்ளன.

மக்கள் ஆதரவு இல்லாத வேட்பாளர்கள் தேர்தலில் தோற்பது உறுது என்ற கருத்தையும்,

தொகுதிதான்/முடிவாகவில்லை/தோல்வி முடிவாகிவிட்டது

ஆயிரம் பேரோடு/வேட்பு மனுத்தாக்கல்/ஐம்பது வாக்குகள்

அரசியல்வாதிகளில் பலர் பலத்தையும், ஆள் பலத்தையும் நம்பியே தேர்தலைச் சந்தித்து வருகின்றனர் என்ற உண்மையையும் தெளிவுறுத்துகின்றன.இன்றைய சூழலில் அரசு ஆரோக்கியமாகச் செயல்பட வேண்டுமானால் ஆளும் கட்சி, எதிர்க்கட்டி என இரண்டு கட்சிகளே இருக்க வேண்டும். ஆனால் இன்றோ வீதிக்கொன்றாக, சாதிக்கொன்றாகக் கட்சிகள் பல்கிப் பெருகி வருவதைக் கேலி செய்யும் நோக்கில்,

மழைநாள் கவலை/காளான்களை எண்ணுவதா?/கட்சிகளை எண்ணுவதா?

மேற்கண்ட சென்ரியு கவிதைகள் கேலியோடு சித்தரிக்கின்றன. இதைப்போலவே வானியல் ஆய்விலும் போதிய வளர்ச்சிப் பெறவில்லை என்பதை,

மழையின் கவலை/வானிலை அறிக்கைப்படி/பெய்ய முடியுமா? (56-3)

என்ற கவிதை அங்கதச் சுவையோடு புலப்படுகத்துகின்றன.

## முடிவுரை :

நிகழ்காலச் சமூக நடப்புகளை அங்கதச் சுவையோடு விமர்சனம் செய்ய சென்ரியு என்னும் கவிதை வடிவம் பிற கவிதை வடிவங்களைக் காட்டிலும் மிகப் பொருத்தமானது. இந்த இலக்கிய உண்மையை ஈரோடு தமிழன்பன் தமிழுலகுக்குத் தந்துள்ள "ஒரு வண்டி சென்ரியு" கவிதைத் தொகுப்பு உறுதி செய்கிறது.

## அடிக்குறிப்புகள் :

1. ஈரோடு தமிழன்பன், ஒரு வண்டி சென்ரியு, முன்னுரை.

# ஹைக்கூ (ஐக்கூ) கவிதைகள் - ஓர் ஆய்வு

*மை.கண்மணி* ,முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை, அரசு கலைக்கல்லூரி, சேலம் -7.

கவிஞர்கள் ஈன்றெடுத்த நூல்கள் கணக்கில் அடங்கா அவற்றில் சிலநூல்கள் படிப்பவர் மனதில் நீங்கா இடம் பிடித்துள்ளன. கவிஞர்களின் எண்ணம் குறிக்கோள், கோட்பாடு முதலான அவர்களின் படைப்பின் மூலம் காணலாம். மரபுகள் வழி மறந்தும், புது வழி புரிந்தும் கவிதைகள் காட்டாற்று வெள்ளம்போல பெருகி வருகின்றன. அவற்றில் ஐக்கூ கவிதைகள் இந்த ஆய்வுக் கட்டுரைக்கு கருவாகும்.

### ஐக்கூ பெயர்க்காரணம்

"சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்னும் கருத்தை உள்ளடக்கிய பெயரே ஐக்கூ, ஐக்கூ என்பதில் பகுதியாகிய "ஐ" கடுகையும் விகுதியாகிய "கூ" பூமியையும் குறிக்கும். "க்" என்னும் ககர ஒற்றுமிகுந்து "ஐக்கூ" என்றாயிற்று (1) ஐக்கூவின் வடிவம் கடுகுபோல் சிறிய தாயினும் அதன் உட்பொருள் பூமியைபோல் பரந்து விரிந்து என்பதற்கு சான்றாகக் கவிதை திகழ்கின்றன.

### ஐக்கூ கவிதை தோற்றம்

"ஜப்பானில் 16 ஆம் நூற்றாண்டில் தொடங்கிய ஐக்கூ கவிதை 17,18,19 ஆம் நூற்றாண்டுகளில் வளர்ந்து பெரும் செல்வாக்குப் பெற்றது. ஐக்கூ கவிதை பாரதியின் சிந்தையைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது. 1916 ஆம் ஆண்டில் சுதேசிமித்திரன் இதழில் யூஸோன், யோஸாகா, ஹைகூஷி ஆகியோரின் ஹைக்கூ கவிதைகளைத் தமிழில் பெயர்த்து வெளியிட்டார்" (2) எழுபது ஆண்டுகட்குப்பிறகு தமிழ்நாட்டில் கடந்த சில ஆண்டுகளாக ஜப்பானிய ஹைக்கூக்களைத் தமிழில் பெயர்ப்பதையும் ஹைக்கூ வடிவில் தமிழில் கவிதைகள் எழுதுவதையும் காண முடிகிறது. ஐக்கூ வடிவில் இன்று புதுக்கவிதைகள் நிறைய வருகின்றன எனலாம். ஜப்பானில் தோன்றிய ஐக்கூ கவிதைகளையும் ஐக்கூ போன்ற ஏனைய கவிதைகளையும் ஜப்பானியர்கள் ஐக்கை என்று குறிப்பார்கள், பிரஞ்சு, ஸ்பானிஷ் ஆகிய மொழிகளில் ஐக்கூவையே ஐக்கை என்ற சொல்லால் குறிக்கிறார்கள். ஜப்பானிலேயே பழைய இறுக்கமான கட்டுப்பாடுகளிலிருந்து நீங்கி ஹைக்கூ சென்ரியூ, என்னும் புதிய வளர்ச்சியைப் பெற்றுள்ளன. சென்ரியூ அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளை உள்ளடக்கமாக எடுத்துக் கொண்டது.

### ஐக்கூ - இலக்கணம்

"ஐக்கூவிற்கு இலக்கணம் 5,7,5 என்ற அசை கணக்கு உண்டு. மூன்டிகள் இருக்க வேண்டும். ஜப்பானியக் கவிதைகளில் உயிரொலி ஒவ்வொன்றும் ஓர் அசையாகும்" (3)

### சிறுவர் சுமக்கும் புத்தகங்கள்

ஒன்றாம் வகுப்பிற்கு செல்லும் மாணவர்கள் நூல்களை பையில் மூட்டையாக சுமந்து செல்லும் நிலையை,

"வலிக்கிறது நெஞ்சம்/எத்தனை புத்தகங்கள்
சுமக்கும் குழந்தை முதுகு" (4)என்ற கவிதையால் அறியலாம். சிறிய வயதில் சுமக்கும் பாரமே நாளை பெரியவன் ஆனதும் குடும்ப சுமையைச் சுமப்பதற்கு எடுத்துக் கொள்ளும் பயிற்சியாகும் என்ற உட்பொருளை விளக்குகிறது.

### தண்டனை

காந்தியை நேசித்தவனுக்கு/கடுங்காவல் தண்டனை/கையில் சிக்கியதோ கள்ளநோட்டு
என்ற கவிதையில் முதல் இரண்டு வரிகளை மட்டும் படித்தால் வேறு பொருளையும் கடைசி வரியில்

தான் அக்கவிதையின் சாரம் அமைந்திருப்பது அறிய முடிகிறது. மேலும்,

"மனைவிக்கு முதல் பிரசவம்/துடிதுடித்தான் கணவன்/பிறந்ததே பெண் குழந்தை" (5)

என்ற கவிதையும் மேல் உள்ள கவிதையின் சாயலில் இருப்பதைக் காண முடிகிறது. கடைசி வரி இல்லாமல் இக்கவிதை இருக்குமானால், மனைவி மீது கணவனுக்கு அளவு கடந்த பாசம் என்ற பொருள் படலாம், கடைசி வரியில் தான் பெண் குழந்தைக்காக துன்பப்படுகிறான் என்பது புலனாகிறது.

### சிலைகள் (பொம்மைகள்)

ஒரு பெண்ணை ஓர் ஆண் தொட்டுவிட்டான் என்றால் நாட்டார் வழக்காற்றில் (கிராமபுரத்தில்) கற்பழித்து விட்டான் என்று பொருள்படும். ஆனால், பல பேர் தொட்டும் கற்பழிக்கவில்லை என்பதை,

பலபேர் தொட்டும் கற்பழிக்கவில்லை/சேலை கடையில்/மாடல் பொம்மைகள்

என்ற கவிதையின் மூலம் அறியலாம்.

### தொழில்

கொத்தனார் (வீடு கட்டுபவர்) பெரிய பெரிய வீடுகளையும், வானளாவிய கட்டிடங்களையும் கட்டுகிறார். ஆனால், அவன் வசிக்கும் இடத்தைப் பார்த்தால் சிறிய மண் குடிசை என்பதை,

கோபுரம் கட்டினான் கொத்தனார்/குட்டிச் சுவரில்/குடியிருந்து

என்ற கவிதையால் அறியலாம். இதனால் கொத்தனார், வாழ்க்கைத் தரம் மிகவும் மோசமான அவல நிலையில் இருப்பதை அறியலாம். மேலும்,

"கொட்டும் மழை/வீதியில் நனைந்தபடி/குடை ரிப்பேர்/குடை ரிப்பேர்"

என்ற கவிதையில் தனக்கு குடையில்லாத நிலையிலும் பிறருக்காக குடைரிப்பேர் செய்யும் மனிதனை இந்த கவிதை காட்டுகிறது.

### சமூகம்

சமூகத்தின் வாழும் மக்கள் ஏதோ ஒரு காரணத்திற்காக பிழைப்புத் தேடி பிற இடங்களுக்குச் செல்லும் வழக்கம் இருப்பதை,

"நூறு திசைகளில் பாயும்/குதிரைகள் பூட்டியத் தேர்/சமூகம்" (7)

### எள்ளல்

சில கவிதைகள் எள்ளல் தன்மை கொண்டதாக இருப்பதை அறியமுடிகிறது. ஆளைப் பார்த்து எடைபோடுதல் கூடாது என்பதை,

"கிழிந்த சட்டைதான்/கேலி வேண்டாம்/பை நிறைய பணம்" (8)

கவிதை மூலம் அறியலாம். மேலும்

"தண்ணி போடாமல் தள்ளாட்டம்/கிராமத்து சாலையில்/டவுன் பஸ்" (9)

என்ற கவிதை அரசு பேருந்து குண்டும் குழியும் நிறைந்த சாலையில் செல்வதை அறியமுடிகிறது.

### முடிவுரை

கவிஞர்கள் தம் எண்ண நினைவோட்டங்களை தத்தம் படைப்புகளால் அறிய முடிகிறது. கவிஞன் ஐக்கூ என்பதற்கு குறும்பா என்றும், சுருங் சொல்லின் விளங்க வைத்தல் போன்ற பொருள் தருகிறது. சிறிய வயதில் குழந்தைகள் நூல்களை சுமக்கும் நிலையை அறிய முடிகிறது. கள்ளநோட்டு அடித்ததால் தண்டனை பெற்ற நிலையும் பெண் குழந்தை பெற்ற தந்தையின் மனநிலையையும் அறிய முடிகிறது. பலபேர் தொட்டும் கற்புக் கெடாத பொம்மையும், தொழிலாளர்கள் படும் அவலநிலையும் அறிய முடிகிறது. எள்ளல் சுவையுடன் சில கவிதை இருப்பதை ஆய்வின் மூலம் அறிய முடிகிறது.

# ஈரோடு தமிழன்பன் கவிதைகளில் காணப்படும் பாவகைகளும் சமூகமும்

*இரா. காயத்திரி*, ஆய்வு மாணவர்,
அ.ப. கலை பண்பாட்டுக் கல்லூரி, பழனி.

ஈரோடு தமிழன்பன் கவிதைகளில் காணப்படும் பாவகைகள் குறித்தும், சமூகம் குறித்தும் இவ்வாய்வு அமைகின்றது. கவிஞன் தான் கூறவந்த பொருளுக்கேற்ப கவிதை வடிவத்தை அமைத்துக் கொள்கின்றான். அதிகம் சொல்லிக் கொஞ்சமாக சிந்திக்க வைப்பதை விடவும், கொஞ்சமாகச் சொல்லி நிறையச் சிந்திக்க வைக்க கவிஞன் விரும்புகின்றான். புதுக்கவிதைகளில் பல்வேறுவகையான பாவகைகள் காணப்படுகின்றன. ஒருசில புதுக்கவிஞர்கள் குறுங்கவிதைகளை எழுதுகின்றனர். கவிஞர் சிற்பி முதலானோர் நெடுங்கவிதை, கதைக் கவிதை என்று எழுகின்றனர். ஈரோடு தமிழன்பன் பல்வேறு பாடல் வடிவங்களைக் கையாள்கின்றார். ஈரோடு தமிழன்பன் கவிதைகளை அமைப்பியல் நோக்கில் பின்வருமாறு வகைப்படுத்தி ஆராயலாம்.

1. மூன்று வரி அமைப்புடைய கவிதைகள் 2. நான்கு வரி அமைப்புடைய கவிதைகள் 3. ஐந்து வரி அமைப்புடைய கவிதைகள் 4. ஆறு வரி அமைப்புடைய கவிதைகள் 5. நெடுங்கவிதைகள்

## 1. மூன்றுவரி அமைப்புடைய கவிதைகள்

சிறந்த நூலுக்குரிய இலக்கணங்களில் ஒன்றாக தொல்காப்பியர் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தலை உத்திகளில் ஒன்றாகக் குறிப்பிடுகின்றார். இதைத் தமிழன்பனின் மூன்றுவரி அமைப்புடைய கவிதைகளில் காண முடிகின்றது.

### அ) கல்வி

இன்றைய கல்வி நிலை ஏட்டளவிலேயே உள்ளது.

"கற்க கசடற கற்பவை கற்றபின்/ நிற்க அதற்குத் தக"

எனும் வள்ளுவரின் குறளுக்கேற்ப கல்வி அமைவது எப்போது என்பதை

"படிப்பை விடுவதற்கு /மனிதன்/எப்போது படிப்பான்?" (க.கா.வி. - ப. 78)

என்கிறார். அவ்வாறு படித்தவர்களுக்குத் தாம் கற்ற கல்வியைப் பயனுள்ள வகையில் பயன்படுத்தாமல் அதைக் குடத்திலுள்ள விளக்குப் போல வைத்திருப்பதைக் கவிஞர் தம் கவிதைகளில்

"இருளைப் பற்றி /பேசிக் கொண்டிருப்பதா/விளக்குகளின் வேலை?" (க.கா.வி - ப. 81)

என்று சமுதாயத்தின் இன்றைய கல்வி நிலை குறித்து வேதனைப்படுகின்றார்.

### ஆ) மனித ஆற்றல்

ஒரு நாட்டில் பொருளாதார மற்றும் அறிவியல் வளர்ச்சிக்கு அரசியல் நிலைப்புத் தன்மைன்னும் அந்நாட்டில் மனிதவள மேம்பாடே வழிவகுக்க முடியும். மனித ஆற்றலை ஒவ்வொருவரும் உணர்தலே மனித வள மேம்பாட்டின் முதல்நிலை ஆகும். இயக்க விதியைக் கண்டுபிடித்த ஐன்ஸ்டீனை யார் இயக்கியது? அவருள்ளிருந்த மனித ஆற்றலே என்பதை

"இயற்பியலின் /எந்த நூற்பா/ஐன்ஸ்டீனை இயற்றி வைத்தது?" (க.கா.வி - ப. 119)

## 2. நான்கு வரி அமைப்புடைய கவிதைகள்

### (அ) ஆன்மீகம்

கடவுளின் பெயரால் நாட்டில் நடக்கும் சீர்கேடுகளைத் தன் கவிதையில் கூறத் தயங்கவில்லை கவிஞர். ஆசைகள் அற்று மவுனத்தில் இருக்க வேண்டும் என போதித்தார் புத்தர். ஆனால் அவருடைய சீடர்கள் புத்தரின் பெயரில் மடாலயம் எழுப்பி, மந்திரம், சடங்குகள் செய்தனர். இறுதியில் புத்தரும், அவருடைய போதனையான மவுனமும் விற்பனைப் பொருளாகிவிட்டன. இதனை

"மவுனத்தை /விற்ற பணத்திலா/புத்தர்/மடாலயம் நிறுவுகிறார்?" (க.கா.வி. - ப. 56)

என்று அவருடைய சீடர்கள் மதத்தை விற்பனைப் பொருளாக்கிவிட்டதைக் கூறுகின்றார். மேலும் புத்தர் தன்னுடைய சிலையை எரித்துக் குளிர்காய்பவனைக் கண்டு மகிழ்ச்சியடைவார், இதற்காவது தன்சிலை பயன்பட்டதே என்று. மேலும் தன்னை முடக்குவதற்காக நிறுவப்பட்ட சிலை இல்லாது போனது அவருக்கு நிம்மதியைத் தந்திருக்கும் என்பதைத் தன் கவிதையில்

"புத்தர் /சினமடைவாரா/புத்தர் சிலையை எரித்துக்/குளிர்காய்ந்து கொண்டால்?" (க.கா.வி - ப. 56)

என்று வினாத் தொடுக்கின்றார்.

(ஆ) இயற்கைச் சீரழிவு

இந்தப் பூமி இயற்கை நலம் கெட்டுப் பல வகைகளிலும் மாசுபட்டு அழிந்து கொண்டிருக்கிறது. இயற்கையை வாழ்க்கையை மனிதன் அதிகார வெறியால், தொழில் நுட்பங்களின் பெருக்கத்தால் தன்னைத்தானே அழித்துக்கொள்கின்றான். மனிதன் பூமியில் வாழ்வதால் பூமி இறந்து கொண்டிருக்கிறது என்பதை

"இந்தப் /பூமி /மனிதனைச் சுவாசித்து /இறந்து கொண்டிருக்கின்றதா?" (க.கா.வி - ப. 99)

என்று பூமியின் வாழ்க்கை கொஞ்சம் கொஞ்சமாக இறப்பை நோக்கிச் செல்கிறது என்கிறார் கவிஞர்.

(இ) கல்வி

"பறவைகளின் /பாடத் திட்டத்தில் /உரைநடைக்கும் ஒரு வகுப்பு/ஒதுக்கப்படுமா?" (க.கா.வி - ப. 54)

என்று மழலைச் செல்வங்களுக்கு கணிதம், ஆங்கிலம் எனப் பாடங்களைப் போதிக்காமல் விளையாட்டு முறையிலான கல்வியையே கற்பிக்க வேண்டும். குழந்தைகளும் பறவைகளைப் போல, பறவைகளைப் பார்த்தாவது குழந்தைகளுக்கு எது கல்வியாக இருக்க முடியுமென்று நம்மவர்கள் சிந்திக்கட்டும் என்று தற்போதைய கல்வித்திட்டம் மாற்றத்திற்குட்பட வேண்டுமென்பதைக் கூறுகின்றார்.

3. ஐந்து வரி அமைப்புடைய கவிதைகள் :

(அ) மனிதனின் வாழ்க்கை நிலை :

இன்றைய உலகச் சூழலில் மனிதர்கள் எப்படியோ தனியுடைமை, அதிகாரம், மதம் முதலியவற்றிற்கு ஆட்பட்டு இவற்றின் ஆதிக்கம் வளர்வதற்குத் தம்மை, தம் உழைப்பை, தன் ஆன்மாவை விற்றுக் கொண்டு இருக்கிறார்கள். இறுதியில் தன்னையே விற்றுவிடும் இவர்களால் எதனை வாங்க முடியும்? என்பதை

"தான்/விற்கப்பட்டதை/அறியாதவன்/எதை விலைக்கு வாங்கச்/சந்தைக்கு வந்தான்?" க.கா.வி. - ப.81)

என்று ஒவ்வொரு மனிதனும் தன்னை உணர்ந்து, தன் வாழ்க்கையை வாழ வேண்டும் என்கிறார்.

(ஆ) நீதி :

சுதந்திர இந்தியாவின் நீதி பல புதுக்கவிஞர்களின் கவிதைகளில் விமர்சனத்துக்குள்ளாகியுள்ளது. மேத்தா,

"சட்டக் கட்டிடங்களில்/ஓட்டைகள் விழுந்து விட்டன/வயதாகிப் போனதால்/தர்மஸ்தூபிகள் தள்ளாடுகின்றன" 1/என்று நீதியின் போக்கைச் சொல்கிறார். நீதி உண்மையின் பக்கம் இல்லை. எங்கு பணபலம், அதிகாரம் உள்ளதோ அங்கே உள்ளது நீதி என்பதை,

"விவாதங்களின்/முடிவில்/வெற்றி தோல்விகள்/மனிதர்களுக்கா?/உண்மைகளுக்கா? (க.கா.வி. ப 60)/என்று வினவுகிறார் கவிஞர்.

4. ஆறுவரி அமைப்புடைய கவிதைகள் :

(அ) அரசியல் :

எல்லோரும் நம்பும்படி சொல்லும் திறனிருந்ததால் அந்தச் சொல்லிலே உண்மையில்லை என்றார் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம். இன்றைய சில அரசியல்வாதிகள் கவர்ச்சியாகப் பேசி மக்களை நம்பச் செய்து நம்பிக்கைத் துரோகம் செய்கின்றனர். பதவிக்கு வந்தபின் வாக்களித்த மக்களை மேம்படுத்துவதை விட தாங்கள் மேம்படுவதிலேயே அக்கறை காட்டுகின்றனர்.

"ஏழைகளே!/எங்கள் கட்சி/உங்களுக்காகவே!/நீங்கள்/ஏமாற்றி விடாதீர்கள்
இப்படியே இருங்கள்" (தோ.வ. - ப 110)

என்று வாக்களித்த மக்களின் வாழ்க்கையில் எவ்வித மாற்றமும் இல்லை என்பதை கவிஞர் எடுத்துரைக்கின்றார்.

(ஆ) பொருளாதார நிலை :

மாதச் சம்பளம் பெற்று மாதக்கடைசியில் பற்றாக்குறையோடு அவதிப்படும் நடுத்தரக் குடும்பங்களின் சராசரி மனிதர்களின் அவல நிலையை புதுக்கவிஞர்கள் பல்வேறு நிலைகளில் சுட்டிக் காட்டுகின்றனர்.பிறை நிலாவைப் பற்றி கேள்வி கேட்கும் மகனிடம்,

"அதுக்கும் நம்மைப் போல்/மாசக் கடைசியோ/என்னவோ மகனே" 2

என்று பொருளாதார நிலையுடன் ஒப்பிட்டுக் கூறுகிறார் வைரமுத்து. இதே போல் நடுத்தர மக்களின் வாழ்க்கை நிலையை தமிழன்பன்,

"மாங்கல்ய மகிமையை/மனைவி அறிவாள்/மணாளன் அறிவான்/இவர்கள் இருவரைவிட

மார்வாடியே/அதிகமாய் அறிவான்" (தோ.வ- ப.116)

என்று மாங்கல்யத்தின் பெருமையை மனைவியும், மணாளனும் அறிவார்கள். ஆனால் மார்வாடி அதில் உள்ள தங்கத்தை அறிவான் என்று நடுத்தர மக்கள் மாங்கல்யத்தை அடகு வைத்து குடும்பம் நடத்தும் அவல நிலையைக் கூறுகிறார்.

### 5. நெடுங்கதைகள் :

புதுக்கவிதைகளில் வாமன வடிவம் கொண்ட குறுங்கவிதைகளும் உண்டு. ந.பிச்சமூர்த்தியின் - "வழித்துணை", சி.மணியின்- "நரகம்" போன்ற நெடுங்கவிதைகளும் உண்டு.3 கவிதையின் அளவு எப்படியிருந்தாலும் நடையும், பொருளுமே முக்கியத்துவம் பெறுகின்றன. இனி தமிழன்பன் கவிதைகளில் ஆறுவரிக்கும் மேற்பட்டவைகளை நெடுங்கவிதை எனும் பிரிவில் அடக்கி அதில் கூறலாகும் சமூகநிலையைக் காண்போம்.

### (அ) விடுதலை :

மனிதன் மனிதனுக்குள்ளேயே வாழ்க்கையை காரண, காரியம், காலம், உறவு இவற்றால் புதைத்துக் கொண்டிருக்கிறான். இதிலிருந்து அவன் விடுதலை பெற வேண்டும். அதற்குச் சரியான ஆயுதமாக

"வென்ற பிறகும் மனிதனை விட்டு/விலகாத ஆயுதம்.../அன்பு" (வ.வ. - ப. 56)

என்று அன்பால் மனிதன் வாழ வேண்டும் என்கிறார். மேலும்,

"நீ/தெய்வமாக வேண்டாம்/மிருகமாகவும் வேண்டாம்/மனிதனாக இரு!" (ந.தி.- ப. 157)

*என்று மனிதன் மனிதனாக இருக்க வேண்டும் என்கிறார்.*

### (ஆ)விலை மகளிர் வாழ்க்கை :

விலைமகளிர் தம்முள் எவரும் அவ்வாழ்க்கையை விரும்பி ஏற்பதில்லை. அந்த வாழ்க்கைக்கு அவர்கள் நிர்பந்திக்கப்படும் சமுதாயச் சூழல்கள் மாறவேண்டும். வறுமைக்குப் பண்ட மாற்றாகப் பெண்மை போற்றும் கற்பு இருக்கக் கூடாது. மேலும் அவர்களின் அவ்வாழ்க்கை நிலைக்கு அவள் மட்டும் காரணம் அல்ல, ஆணுக்கும் அதில் பங்கு உண்டென்பதை,

"பிணம் கொத்திச்/சுகம் பொறுக்கும் ஆண்களைக்/காப்பாற்றத் துடிக்கும் நீங்கள்...
எங்களைக் காப்பாற்ற/எங்களை மீட்க ஏதும் சொன்னீர்களா?" (வ.வ.- ப.126)

என்றும் அவர்களது வறுமையை புலப்படுத்தும் விதமாக

"எந்த விலைமாது/இரவுகளை விற்றுக்/கிழக்கைக் கிரையம் செய்து கொண்டாள்..." (வ.வ. -ப.128)

என்று கேட்கிறார். இவ்வாறு சமூக நிலைகளைத் தன் கவிதையில் கூறும் தமிழன்பன் இச்சமுதாயம் மாறுவது எப்போது? எனக் கேள்வி தொடுக்கிறார். இதை சமுதாயத்தை பிரதிபலிக்கும் கண்ணாடியான செய்தித்தாளிடம் கேட்கிறார்,

"கைந் நிறையச்/சோறள்ளி வருவாயா?/இந்தா இந்தா என்று/இருமல் மனிதர்க்கு
மருந்து கொண்டு வருவாயா?/உண்மையாய் எப்போது/வருவாய்? செய்தியே எப்போது
வருவாய்?" (ந.கி. - ப. 21)

### முடிவுரை

மனித வாழ்க்கையில் கவிதை எல்லா இடங்களிலும் ஒளிந்து கிடக்கிறது. அதனைத் தேடி எடுத்துத் தருபவன் தான் கவிஞன். இக்கூற்றுக்கு ஏற்ப அமைகின்றது தமிழன்பனின் கவிதைகள்.

### குறிப்புகள்

1. Quot by சுபாசு, எது புதுக்கவிதை? - ப. 110
2. Quot by சுபாசு, எது புதுக்கவிதை? - ப. 71
3. ஹரி, விஜயலட்சுமி, தமிழ் இலக்கிய வரலாறு - ப. 425.

### *துணை நூற்பட்டியல்*


1. தமிழன்பன், கனாக்காணும் வினாக்கள், விழிகள் பதிப்பகம், 2004, சென்னை.
2. தமிழன்பன், தோணி வருகிறது, பூம்புகார் பதிப்பகம், 2002, சென்னை.
3. தமிழன்பன், நடைமறந்த நதியும், திசை மாறிய ஓடையும், பூம்புகார் பதிப்பகம், 1998, சென்னை.
4. தமிழன்பன், வணக்கம் வள்ளுவ! பூம்புகார் பதிப்பகம் 2000
5. சுபாசு, எது புதுக்கவிதை?, சுபாலிகா பதிப்பகம், 1997, திருச்சி.
6. விஜயலட்சுமி, ஹரி, தமிழ் இலக்கிய வரலாறு, என்னெஸ் பப்ளிகேஷன்ஸ், உடுமலை.

# தமிழ் ஹைகூ : தோற்றமும் வளர்ச்சியும்

*இ. சீதா செல்வம்,* ஆங்கிலத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

ஹைகூ கீழ்த்திசை பௌத்த சிந்தனையில் முகிழ்த்துச் சீனத்துப் பண்பாட்டில் திளைத்து, ஜப்பானிய அழகுப் பார்வையில் மலர்ந்து மணம் வீசும் ஓர் இலக்கிய வகையாகும். இது தன் சின்னஞ்சிறிய வடிவம், நுட்பமான வெளியீட்டுமுறை, தத்துவப் பார்வை மொழிநடை மற்றும் எளிமைத்தன்மை போன்றவற்றால் உலகளவில் பலரின் கவனத்தைத் தன்பால் ஈர்த்துள்ள பெருமைக்குரியது. இத்தகு சிறப்புமிக்க ஹைகூ கவிதை ஜப்பானில் தோன்றி, தமிழில் இறக்குமதியான ஒரு புதிய இலக்கிய வகையாகும்.தமிழ்க் கவிதை உலகில் ஹைகூ பெறுமிடம் மற்றும் அதன் வளர்ச்சி ஆகியவற்றை மதிப்பிடுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

ஹைகூ கவிதை மூன்று அடிகளால் ஆன ஒரு கலை வடிவம். ஹைகூவின் முதல் இரண்டடிகள் ஒரு கூறு. அதன் ஈற்றடி தனிக் கூறாகும். ஈற்றடி பெயர்ச் சொல்லாய் முடியும் ஹைகூவின் அழகும் ஆற்றலும் அதன் ஈற்றடியில்தான் உள்ளது. இது திருப்புமுனையாக, திடீர் வெளிப்பாட்டினைத் தந்து, முழுக் கவிதையினையும் வெளிப்படுத்தும் திறன் கொண்டது. ஹைகூவின் மொழியமைப்பு வியக்கத்தக்கது. இது தந்தி மொழியினைப் போல அவசியமற்ற இணைப்புச் சொற்களை நீக்கி, தேவையான சொற்களை மட்டும கொண்டிருக்கும். தலைப்பின்றி அமைவதே ஹைகூவின் தனிச்சிறப்பாகும். இவ்வாறாக மூன்றடி வரையறை, ஈற்றடி மின்வெட்டுத் தன்மை, தந்தி மொழியமைப்பு மற்றும் தலைப்பின்றி அமைதல் முதலான கட்டமைப்பினை ஹைகூ கவிதை கொண்டுள்ளது.

## தமிழில் ஹைகூ :

இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஹைகூ தமிழில் அறிமுகமானது. தமிழ்ப்பாக்களில் மிகவும் குறுகிய வடிவுடைய குறள் வெண்பா ஹைகூவினைப் போன்றதேயாகும். குறளின் வடிவம் மற்றும் பொருட்செறிவு போன்றே ஹைகூவு கவிதைகளும் திகழ்கின்றன. எனவே, வடிவக்குறுக்கத்தில் பொருள்விரிவினைக் காட்டும் ஹைகூவின் போக்குத் தமிழுக்குப் புதிதன்று. எளியவடிவமைப்பு மற்றும் பொருட்செறிவு ஆகியவற்றால் தமிழ்க் கவிஞர்கள் மற்றும் வாசகர்களின் கவனத்தைத் தம்பால் ஈர்த்துள்ள தமிழ் ஹைகூ கவிதைகள் தமக்கென ஒரு வடிவமைப்பைக் கொண்டுள்ளன. ஜப்பானிய ஹைகூவினைப் பின்பற்றித் தமிழில் எழுதப்படும் ஹைகூ கவிதைகள் 5,7,5 என்ற அசை மரபில் அமைந்தவை, பெரும்பான்மைக் கவிதைகள் மூன்றடி மரபில் அமைந்தவை. பெரும்பான்மைக் கவிதைகள் மூன்றடியிலும், சில நான்கடி அல்லது இரண்டடியிலும் அமைந்தவை. ஜப்பானிய ஹைகூ தமிழில் தடம்பதிக்கக் காரணியாக இருந்தது ஹைகூ குறித்த திறனாய்வு மற்றும் மொழிபெயர்ப்பு நூல்களாகும். தி. லீலாவதியின் "இதுதான் ஹைகூ" என்னும் நூல் ஜப்பானிய ஹைகூ குறித்து எழுதப்பட்ட முதல் அறிமுக நூலாகும். நெல்லை சு. முத்துவின் "தமிழில் ஹைகூ" என்னும் நூல் தமிழ் ஹைகூ கவிதைகளின் மதிப்பீட்டு நூலாகவும், சுஜாதாவின் "ஹைகூ ஒரு புதிய அறிமுகம்" என்ற நூல் ஜப்பானிய ஹைகூ குறித்த விளக்க நூலாகவும் அமைந்தது. தமிழில் ஹைகூ கவிதை வளர வழிவகை செய்துள்ளன. தி. லீலாவதியின் "ஜப்பானிய ஹைகூ" என்னும் மொழிபெயர்ப்பு நூல் ஜப்பானிய ஹைகூ கவிதைகளைத் தமிழில் அறிமுகப்படுத்தி பரவச் செய்ததுடன் ஜப்பானிய ஹைகூவின் தாக்கம் தமிழில் இடம்பெறக் காரணமாகவும் அமைந்தது. கவிஞர் மித்ராவின் "ஹைகூ என் தோழி" என்னும் மொழிபெயர்ப்பு நூலே தமிழில் ஹைகூ வளர வழிவகை செய்தது என்றும் கூறலாம். இவ்வாறு ஹைகூ குறித்து தமிழில் வெளிவந்துள்ள திறனாய்வு மற்றும் மொழிபெயர்ப்பு நூல்கள் ஹைகூவினைத் தமிழ்மெழியில் அறிமுகப்படுத்தியதுடன் அதன் வளர்ச்சிக்கும் பெரிதும் உதவி செய்துள்ளன.

தமிழில் ஹைகூவினை அடையாளங்காட்டிய பாரதியார் சுதேசமித்திரன் நாளிதழில் "ஜப்பானியக் கவிதை" என்னும் பொருளில் எழுதியுள்ள கட்டுரைகளில் "ஐரோப்பியக் கவிதையில் சொற்களை மிகுதியாகக் கொண்டுள்ளன என்றும், ஜப்பானிய கவிதைகயில் அப்படியில்லை என்றும், அது வேண்டாத சொல் ஒன்றைக் கூட சேர்ப்பது கிடையாது" என்றும் குறிப்பிட்டுள்ளார். கணையாழி மாத இதழ் ஹைகூ கவிதைகளுக்கெனச் சிறப்பிதழ்களில் வெளியிட்ட ஹைகூ குறித்த விளக்கக் கட்டுரைகளைத் தொடர்ந்து வெளியிட்டுத் தமிழில் ஹைகூ

வளர்வதற்குப் பெரிதும் உதவி புரிந்துள்ளன. சிறுபத்திரிகைகளான "நடை", "தாராமதி" மற்றும் "அரும்பு" போன்றவை ஹைகூ குறித்த விளக்கக் கட்டுரைகளைத் தொடர்ந்து வெளியிட்டுத் தமிழில் ஹைகூ வளர்வதற்குப் பெரிதும் உதவிபுரிந்துள்ளன. ஹைகூ கவிதைகளுக்கென தனி இதழ்களாக வெளிவந்த "பட்டாம்பூச்சி" மற்றும் "கரந்தடி" ஆகியவை ஜப்பானிய ஹைகூ கவிதை மொழிபெயர்ப்புகளையும், தமிழ் ஹைகூ கவிதைகளையும் வெளியிட்டுள்ளன. அப்துல் ரகுமான் ஜூனியர் விகடன் வார இதழில் "மின்மினிகள்" என்னும் தலைப்பில் ஹைகூவின் வடிவம் குறித்து "அது சின்னதாக இருக்கும்" பெரிய அற்புதம் என்றும், வடிவத்தைப் பார்த்தால் வாமனன் மாதிரி; ஆனால் தாரை வார்த்தாலோ விசுக்கென்று விண்ணுக்கும் மண்ணுக்குமாய் விசுவரூபமெடுத்து மூவுலகையும் அளந்துவிடும் திரிவிக்கிரமன் மாதிரி" என்றும் குறிப்பிட்டுள்ளார்.

கணையாழி மாத இதழ் சுஜாதாவின் ஜப்பானிய ஹைகூ கவிதை மொழிபெயர்ப்புகளையும், மனோன்மணியின் ஜப்பானிய ஹைகூவின் வரலாற்றினை விளக்கும் வண்ணம் அமைந்த "தத்துவம் தந்த கவிதை" என்ற கட்டுரையினையும் வெளியிட்டுள்ளது. தீபம் மாத இதழ் தமிழ்நாடனின் "ஜப்பானிய கவிதை வடிவங்கள்" என்ற கட்டுரையினையும் காலாண்டு இதழான காந்தள் மீராவின் "ஹைகூ ஒரு குறும்பார்வை" என்ற கட்டுரையினையும் முறையே வெளியிட்டுள்ளன. தமிழ்ச் சிறுபத்திரிகைகளான "நடை", "தாராமதி" மற்றும் "அரும்பு" போன்றவை ஹைகூ குறித்த விளக்கக் கட்டுரைகளைத் தொடர்ந்து வெளியிட்டுத் தமிழில் ஹைகூ வளர்வதற்குப் பெரிதும் உதவி புரிந்துள்ளன. 1980களில் தமிழில் கலந்த ஹைகூ கவிதை 2000 வரையிலான 20 ஆண்டுகாலங்களில் சுமார் அறுபதுக்கும் மேற்பட்ட கவிதைத் தொகுப்புகளை வெளிக்கொண்டு வந்துள்ளன. அமுதபாரதியின் "புள்ளிப்பூக்கள்" தமிழில் வெளிவந்த முதல் ஹைகூ கவிதைத் தொகுப்பு ஆகும். இதனைத் தொடர்ந்து பல்வேறு படைப்பாளர்களின் கவிதைத் தொகுப்புகளான காற்றின் வகைகள், கூடைக்குள் தேசம், நிரந்தர மின்னல், விரல் நுனியில் வானம், தீயின் பிணம், நட்சத்திர விழிகள், ஐக்கூ அந்தாதி, ஹைகூ பறவைகள், முதலில் பூத்த ரோஜா, பூக்கள் பறிப்பதற்கில்லை, கிண்ணம் நிறைய ஹைகூ, என் இனிய ஹைகூ, சேரிக்குள் தேர், இமய மலர்கள், மலைப் பூக்கள், சின்ன நதிகள், சூரியச் செதில்கள், நினைவுகளுக்குப்பின்..., மற்றும் தீயின் முகவரி போன்ற கவிதைத் தொகுப்புகள் ஹைகூ கவிதையின் வளர்நிலையினைக் காட்டுவதாக அமைந்துள்ளது. மேலும், அதிக பிரதிகள் விற்பனை செய்யும் வார இதழ்களான குமுதம், குங்குமம் ஆகியவற்றில் ஹைகூ கவிதைகள் வந்த வண்ணம் இருக்கின்றன. இதுவும் தமிழில் ஹைகூ கவிதையின் வளர்நிலையை பிரதிபலிப்பதாக அமைந்துள்ளது.

மேலும், மூன்றடிகளைக் கொண்ட ஹைகூ கவிதைகளில் கருத்துச் செறிவு இருப்பதால் மக்களின் வரவேற்பைப் பெற்றுள்ளன. ஈற்றடியின் மின்வெட்டு அமைப்பு படிப்போரைக் கவர்ந்திழுப்பதாக அமைந்துள்ளது. உதாரணமாக 18.02.2005 வெளிவந்த குங்குமம் வார இதழில் வெளிவந்த சில ஹைகூ கவிதைகள் தங்கள் மேலான பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன.

1. "வெள்ளை என்பது சமாதானமல்ல
   பேசிக்கொண்டன மீன்கள்
   கரையில் கொக்கு!"

2. "நிலத்தடி நீரை உறிஞ்சிட
   போட்டா போட்டி
   மனிதனும் மரமும்!"

3. "அழகிப் போட்டி நடுவருக்கு
   அழகாய்த் தெரிந்தார்கள் எல்லோரும்
   மனைவியைத் தவிர!"

தமிழில் வெளிவரும் வார, மாத இதழ்கள் மற்றும் நாளிதழ்கள் போன்றவைளில் வெளிவரும் ஹைகூ கவிதைகள் வாசகர்களின் பேராதரவைப் பெற்றிருப்பதால், தமிழில் ஹைகூ கவிதைகள் மேலும் வளர வாய்ப்பிருப்பதில் எந்த ஐயப்பாடும் இல்லை.

# கவிஞர் மித்ராவின் குடையில் கேட்ட பேச்சு

*எம்.ஆர்.தேவகி,* முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழியல்துறை அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

**முன்னுரை :**

ஜப்பானியக் கவிதை வகையினுள் ஒன்றான ஹைகூ இன்று புதுக்கவிதை போன்றதொரு வளர்ச்சி நிலையை அடைந்து வருகிறது. ஹைகூ கவிதைப் பற்றி ஆராய்ந்த முனைவர்.தி.லீலாவதி அவர்கள் "கீழ்திசைப் பௌத்த சிந்தனையில் முகிழ்த்து, சீனத்துப் பண்பாட்டில் திளைத்து, ஜப்பானிய அழகுப் பார்வையில் மலர்ந்து, கவிதை மணம் வீசுவது ஹைகூ"1 என்று கூறுகிறார். எளிமை என்பது ஹைகூவின் மிக முக்கியமான இயல்பாகக் கருதப்படுகிறது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் தமிழியல் துறையில் பேராசிரியராகப் பணியாற்றும் கவிஞர் மித்ரா அவர்கள் ஹைகூ கவிதை மூலம் பரிணமித்துள்ளார். "ஹைகூ என்ற பெயரில் பிஸாஸ்டிக் பூக்களைப் பார்த்துப் எரிச்சலடைந்த நேரத்தில் உண்மையாகவே தமிழில் மலர்ந்த இந்தப் பூக்கள் அழகாக ஆறுதலாக இருக்கின்றன"2 என்ற கவிக்கோ அப்துல் ரகுமானின் பாராட்டு இவரது கவிதைகளுக்குக் கிடைத்தப் பரிசாகும்.

**ஹைகூ - விளக்கம் :**

ஜப்பானிய வரவான ஹைகூ கவிதைகள் ஜப்பானிய ஸென் புத்த மதத்தத்துவங்களை உள்ளடக்கமாக கொண்டிருக்கும். ஹைகூவில் சொல்வதைக் காட்டிலும் சொல்லாமல் விடுவதே அதிகம். இக்கவிதை வரிகள் ஒவ்வொன்றும்5, 7,5 அசைகளைப் பெற்றிருக்கும். ஒரு காட்சியைக் காட்டுவதோடு ஹைகூவின் வேலைமுடிந்து விடும். அதில் பொதிந்துள்ள பொருளை தன் மனவளத்துக்கேற்ப அறிந்து கொள்ள வேண்டிய பொறுப்பு சுவைஞனைச் சார்கிறது. "துண்டு துணக்குகளாகக் சிதறிக் கிடக்கும் உண்மைகளுக்கு வடிவம் கொடுப்பது ஹைகூ கவிஞன் வேலை. எல்லாவற்றையும் ஒருங்கிணைத்துப் பார்த்துப் பொருள் கொள்வது படிப்பவரின் வேலை. எனவே இங்கு கவிஞனும், சுவைஞனும் ஒரே நிலையில் நிற்கின்றனர். எனவே ஒன்றின் பாதியை கவிஞன் தர, அதன் மீதியைச் சுவைஞன் உணர, முழுமை அனுபவம் கிடைக்கிறது"3 என்ற முனைவர் லீலாவதியின் கருத்துக்கள் ஒரு வாசகன் ஹைகூவை எவ்வாறு துய்க்க வேண்டும் என்பதை உணர்த்துவதாக உள்ளன.

**இயற்கை :**

ஹைகூவின் பாடுபொருள்களுள் பொரும்பங்கு வகிப்பது இயற்கைதான். "அன்று ஜப்பானில் ஆணும் பெண்ணும் செர்ரி மலர் பார்த்தல் பற்றிப் பேசி மகிழ்வார்கள். மேபில் இலைகள் தளிர்விட்டு மரத்தில் அசைந்து ஒளிவிடுதலைப் பற்றி நாள் கணக்கில் சொல்லி இன்புறுவா[illegible] [illegible]கை அழகுகள் அவர்கள் மனத்தில் பண்பட்ட, மெல்லிய நயப்புணர்வுகளைத் தோற்றுவித்தன. இவற்றின் விளைவாக அவர்கள் ஆழ்மனத் தோட்டத்தில் ஆயிரம் ஆயிரம் ஹைகூக்கள் மலாந்தன. அழகின் பூரிப்பில் மலர்ந்தவை, அறிவுத் தெளிவில் ஆயிரம் அர்த்தங்கள் காட்டின" என்ற முனைவர் லீலாவதியின் கருத்துக்கள் இங்குக் குறிப்பிடத்தக்கது.

"லேசான தூறல்/தார்ச்சாலையில் ஒவியங்கள்

மரங்களின் மகிழ்ச்சி"/மரத்தின் அசைவினால் கீழே சிந்தும் தூறல் தார்ச்சாலையில் விழும்போது கவிஞருக்கு பல ஒவியங்கள் கண்ணுக்குத் தெரிகின்றன என்பதை இக்கவிதை விளக்குகின்றது.

சோழி விளையாடும் காற்றும்/குளத்தில்/தாமரை இலை"

தாமரை இலையின் மீது தண்ணீர்த்துளிகள் ஒட்டாமல் உருண்டோடுவது சோழி விளையாட்டை நினைவுப்படுத்துவதாக கூறியிருப்பது கவிஞரின் கற்பனைத் திறனுக்குச் சான்றாக அமைந்துள்ளது.

"தழைத்த மரம்/காலடியில் ஒவியம்/உச்சியில் வண்ணக் கிண்ணம்"

இறைவன் படைத்த இயற்கையின் அற்புதத்தை விளக்கும் மற்றொரு கவிதை. உச்சியில் உள்ள

வண்ணக் கிண்ணம்(சூரியன்) தழைத்த மரங்களினூடே ஊடுருவிச் செல்வதால் காலடியில் ஓவியம் தோன்றுவதை இக்கவிதை உணர்த்துகிறது.

**இரக்க மனம் :**

கவிஞர் மித்ரா அவர்கள் இயற்கையை ரசித்ததோடு மட்டுமின்றி அதில் மனம் ஒன்றித் திளைத்திருக்கிறார். இதனை,

"குளம்/முகம்பார்க்கும் நிலா/குளிக்காமல் திரும்பினேன்"

என்ற கவிதை குளத்தில் தெரிந்த நிலவின் அழகைக் கலைக்க எண்ணாத, மனம்வராத ஒரு படைப்பாளராக மித்ரா அவர்கள் விளங்குவதை உணர வைக்கின்றது.

"மெதுவாக வீசு காற்றே/கிளைகளில்/பறவை முட்டை"/

என்ற கவிதையும்,

"காற்றே தளும்பவிடாதே/குளத்தை/கோரையில் தும்பி"

என்ற கவிதையும் கவிஞரின் இரக்க மனத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. தலைவியைக் காண விரையும் தலைவன் கானகத்தில் வரும்போது கூடியிருக்கும் வண்டினங்கள் பிரியக்கூடாது என்று தன் தேரின் மணி நாவினை கட்டச் சொன்னதாகக் கூறும் சங்க இலக்கியப் பாடல் ஒன்றும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

"அவன்/வனத்தில் நுழையும்போது/புற்கள் நசுங்குவதில்லை/நீரில் இறங்கையில்
சிற்றலையும் எழுவதில்லை"/என்ற ஜப்பான் கவிஞர் அக்கஹிட்டோவின் கவிதைகள் எவ்வளவு மென்மை உள்ளம் படைத்தவானக இருந்திருந்தால் புற்கள் கூட நசுங்காத வண்ணம் நடக்கவும், அலை எழா வண்ணம் நீரில் இறங்கவும் தெரிந்தவனாக கவிதைப் படைத்திருப்பான் என்று வியக்கத் தோன்றுகிறது.

"நீ/பூவை ரசித்தது போதும்/பாவம்/புல்லுக்கு தலைவலிக்கிறது
காலை எடு"/என்ற கவிதையின் சாரமும் இயற்கையின்பால் கொண்ட இரக்கத்தை உணர்த்துவதாக உள்ளது.

**தனிமை :**

"ஸென் கோட்பாட்டின் நிலைகளுள் தனிமையும் ஒன்று. ஸென் கோட்பாட்டில் வார்த்தைகளின் பயன்பாடு குறிக்கத்தக்கது. இங்கு மௌனமும் பேச்சும் ஒன்றுதான். சுயமற்ற தன்மை என்று குறிப்ட்டால் அது சுயத்தையும் குறிப்பதாகும். எனவே இங்குத் தனிமை என்பது எல்லாப் பொருள்களிலும் ஊடுருவிநிற்கும் கலப்பு நிலை யையும் குறிக்கும். ஸென் தத்துவப்படி மகிழ்ச்சியும் துன்பமும் ஒரே நிலைதான்" என்ற டாக்டர் லீலாவதியின் கருத்துகள் இங்குக் குறிப்பிடத்தக்கது.

"நதிக்கும் குயிலுக்கும்/என்ன உறவு/தனிமையில் புலம்ப"

என்ற கவிதையும்,

"மணற் பரப்பு/விரிந்த வான்/வெறுமையில் நான்"

என்ற கவிதையும் தனிமையில் காணும் வெறுமை நிலையை விளக்குவதாக உள்ளது. இதனை,

"ஆற்றின் மேல்/பளபளக்கும் நிலவு/ஊசியிலை மரங்களில்/காற்றின் பெருமூச்சு
நீளும் இரவு மழுவதும்/சாந்தமாய் விழித்திருப்பது/எதற்காக?/யாருக்காக?

என்ற ஹான்ஷான் என்ற ஜென்ஷகவிஞரின் கவிதையோடு ஒப்பிடலாம். ஜன்பானியக் கவிஞர் மட்ஜீவோ பாஷோவின்,

"இலையுதிர் கால அந்தி/வெற்றுக் கிளையில்/காகம்"

என்ற கவிதையும் தனிமையை சித்தரிப்பதாக உள்ளது. இக்கவிதை வாழ்வின் இறுதி நிலையை விளக்குவதாக உள்ளது. மரமானது பசுமையாக இருந்தபோது பழங்களுக்காவும், நிழலுக்காகவும் வந்து தங்கிய பறவைகள் இலையுதிர் காலமாகிவிட்டடால் மரத்தைத் திரும்பிப் பார்ப்பதில்லை. இந்த வாழ்வியல் தத்துவத்தை விளக்குவதாக உள்ளது இக்கவிதை. அற்ற குத்து அறுநீர் பறவை போல" என்ற நாலடியார் வரிகளும் இங்கு நினையத்தக்கது.

**புதுப்பார்வை :**

மற்றவர்களின் பார்வைக்கும் கவிஞனின் பார்வைக்கும் வேறுபாடுண்டு. எதிலும் புதுமையைக் காண விழையும் மனம் படைத்தவன் கவிஞன். இப்பார்வை எல்லோர்க்கும் அமைவதன்று. ஆனால் மித்ரா அவர்களின் பார்வைக்கு அந்த ஆற்றல் உண்டு. அதனால் தான் அவருக்கு எறும்புகள் நடந்த தடம் பம்பரம் சுற்றும் கயிறாகக் காட்சி அளித்திருக்கிறது. ஒடை நீரில் முகம் பார்க்கும் கருவேலமரத்தையும் தாவணிச் சிறுமியையும் ஒப்பிட வைத்திருக்கிறது.

**சமுதாயப் பார்வை :**

நடப்பியல் உண்மைகளை கவிதைகளில் புனைவது கவிஞனின் கடமை. எதிர்பார்ப்பது நடக்காமல் போவதும், எதிர் பாராதவை நடப்பதும் வாழ்கையின் நியதி. கவிஞரின் பார்வையில்,

"தலைமுறைக் கோபம்
அடிவிழ..அடிவிழ
அதிரும் பறை"

என்ற கவிதையில் சாதிக்கொடுமையினால் ஏற்படும் உணர்வின் வெளிப்பாடு பறையோலியாக ஒலிப்பதாகக் குறிப்பிட்டுள்ளமை, அவ்வின மாந்தர்களின் உணர்வினை உணர்ந்தவராக கவிஞர் விளங்குவதை நமக்குப் புலப்படுத்துகிறது.

"மதகுநீர்ப் பாய்ச்சல்
எதிர்க்கும் மீன்கள்
இரசிக்கும் கொக்குகள்"

என்ற கவிதை வாழ்க்கை முன்னேற்றத்திற்காகப் போராடும் ஏழைத் தொழிலாளர் நிலையும், அவர் உழைப்பும் உண்டு கொழிக்கக் காத்திருக்கும் முதலாளி நிலையும் விளக்குவதாக உள்ளது.

**ஏற்பு நிலை :**

நம்மைப் பற்றியும், நம்மைச் சுற்றியும் உள்ள வாழ்வுச் சூழல்களில் நம்முடையதும், பிறருடையதுமான குறைபாடுகளை இயல்பாகவும், நல்ல வண்ணமும் ஏற்றுக் கொள்ளும் மனநிலை ஸென் கோட்பாடுகளும் ஒன்று என்ற டாக்டர் லீலாவதியின் கூற்று இங்குக் குறிப்பிடத்தக்கது.

"எத்தனை நாள் சிரிக்கும்
பூத்த மலர்
நாளை இறந்த காலம்"

மரணம் என்பது எல்லோர் வாழ்க்கையிலும் ஏற்படும் ஒரு இயற்கை நிகழ்வு. நாளைய மரணத்தை எண்ணி இன்றைய வாழ்க்கையைத் தொலைக்க எண்ணாமல் சிரிக்கும் பூத்த மலர்கள் வாழ்க்கையின் நிலையாமையை உணர்த்துகின்றது.

**முடிவுரை :**

கவிஞர் மித்ரா அவர்களின் "குடையில் கேட்ட பேச்சு" என்ற இந்த ஹைகூ கவிதைத் தொகுப்பு அவரின் ஹைகூ பார்வை பல பரிணாமங்களில் இயற்கை நிகழ்வுகளையும், வாழ்வியல் உண்மைகளையும், சமுதாயப் புனைவுகளையும் படமெடுத்திருப்பதை உணர்த்துகின்றது. இக்கவிதைத் தொகுப்பு கற்குந்தோறும் புதுப்புதுப் கருத்து வளம் நல்கும் கற்பக விருட்சமாக அமைந்துள்ளது புதுமை. தொடரட்டும் இவரது ஹைகூ பார்வை பணி.

**குறிப்புகள் :**

1. இதுதான் ஹைகூ, டாக்டர் தி.லீலாவதி
2. குடையில் கேட்ட பேச்சு, அப்துல் ரகுமான் (அணிந்துரை)
3. இதுதான் ஹைகூ, டாக்டர் தி.லீலாவதி

# கவிஞர் இளங்கோவனின் ஹைகூ கவிதைகளில் சமுதாயம்

*முனைவர் அரங்க. பாரி* ,விரிவுரையாளர்,
தமிழியல் துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

**முன்னுரை :**

மேலே இலக்கியத் தொடர்பின் மூலம் தமிழில் பூத்த இலக்கிய மலர்களில் ஹைகூ கவிதையும் ஒன்று. புதுக்கவிதை தற்போது வளர்ச்சிப்பெற்று வருவதைப் போன்று ஹைகூ கவிதைகளும் வளர்ச்சியடைந்து வருகின்றன. "மூன்றடியில் உலகை அளந்த வாமன அவதாரம் போல, மூன்றடியில் அமைந்த பாவடிவமே ஹைகூ" என்ற இராம.சௌந்திரவல்லி அவர்களின் கருத்தும் இங்கு குறிப்பிடத்தக்கது. மூன்றே வரிகளில் சமுதாயத்தின் அத்தனை நடப்புகளையும் புகுத்திவிட முடிகிறது இதன் சிறப்பாகும். கவிஞர் இளங்கோவனின் "ஹைகூ கவிதைகளில் சமுதாயம்" என்ற தலைப்பில் கவிஞரின் கவிதைகளில் கூறப்பட்டுள்ள சமுதாயக் கருத்துக்கள் ஆராயப்படுகின்றன.

**ஹைகூ - பாடுபொருள் :**

எந்தவகை இலக்கியமாயினும் அந்தக் காலச் சமுதாயத்தைத் தழுவியதாக இருக்க வேண்டும் என்பது இலக்கிய நியதி. அன்றாடம் மக்கள் எதிர்க்கொள்ளும் வாழ்க்கைப் போராட்டங்களும், சந்திக்கும் பிரச்சினைகளும், சமுதாயத்தில் நிகழும் அவலங்களும், அரசியல் வாழ்க்கையும், போலி நடப்புகளும் ஹைகூவின் பாடுபொருள்களாக அமைகின்றன. இளங்கோவனின் கவிதைகளிலும் இத்தகைய பாதிப்புகள் காணக்கிடக்கின்றது.

**வறுமை :**

"தனியொருவனுக்கு உணவில்லை எனில்/ஜகத்தினை அழித்திடுவோம்"என்றான் பாரதி. ஆனால் மூன்றில் ஒரு பங்கு மக்கள் வறுமைக் கோட்டிற்குக் கீழே வாழ்ந்து வரும் நிலையும் நம்நாட்டில் காணப்படுகிறது. எதிர்கால இந்தியாவின் மன்னர்களாக விளங்கக்கூடிய சிறுவர்கள் வறுமையின் காரணமாக தெருவோரத்தின் உணவிற்காக அடித்துக் கொள்ளும் நிலைக்கு ஆளாகிவிட்டார்கள் என்பதை,

"நாயோடு சண்டை/இந்நாட்டு மன்னர்/எச்சில் இலைக்கு"

என்ற கவிதை உணர்த்துகிறது. மேலும் கல்விச் செல்வம் பெறுவதற்காக பள்ளி சென்ற காலம் போய் தற்போது சத்துணவிற்காக பள்ளி செல்லும் அவலம் நேர்ந்ததை,

"மகிழ்ச்சியோடு மலமைலைகள்/பள்ளி சென்றன/சத்துணவுக்காக"

சிறார் தொழிலாளர்கள்/பள்ளி சென்று பாடம் பயிலும் வயதில் வேலை செய்து கூலி பெறும் நிலையில் இன்றைய சமுதாயத்தில் பல சிறார் தொழிலாளர்கள் காணப்படுகின்றனர். குறிப்பாக பட்டாசு மற்றும் தீப்பெட்டித் தொழிற்சாலைகளில் பணிபுரியும் குழந்தைகள் தங்கள் உடல்நலனையும், மனநலனையும் இழந்து வெந்து போகின்றனர். இதனை, "விளையாடித் திரியும் வயதில்/வெடியும் திரியும் கையில்/சிவகாசிச் சிறுவர்கள்" என்னும் கவிதையால் உணர்த்துகிறார்.

**போலி பக்தி**

வாழ்க்கையைப் பண்படுத்தும் பக்தியானது இன்று சிலரது போலிப் பக்தியின் காரணமாக பழிப்புக்கும் பரிகாசத்திற்கும் இடமாகிவிட்டது. சாதிகளின் பேராலும் மதங்களின் பேராலும் இன்று சண்டைகளும் குழப்பங்களும் மலிந்து விட்டன. இதற்கு வழிபாட்டுத் தலங்களும் பலிகளாகிறது. இதனை,

"வயிற்றில் புளி/கரைத்தது/விநாயகர் ஊர்வலம்"

என்ற கவிதை நடப்பியல் உண்மைகளை விளக்குவதாக உள்ளது. உண்மையான இறையடிகள் எவ்வுயிர்க்கும் தீங்கிழைக்காத எளிய வாழ்க்கையை மேற்கொண்டு முக்தியடைதலையே பெரிதும் விரும்புவர். தற்போது சமுதாயத்தில் காணப்படும் சாமியார்கள் ஆடம்பர வாழ்க்கையை விரும்பும் நிலையை காணமுடிகிறது. இது அவர்களின் போலி பக்தியையே உணர்த்துகிறது. கடவுள் அனைவர்க்கும் பொதுவானவன். ஆனால் அவனைக் காண்பதிலும் தடை ஏற்படுவதனை,

"கடவுளின் முன்னே/அனைவரும் சரி/சிறப்பு தரிசனம்"

என்ற கவிதை சமுதாயத்தில் பக்தியின் பெயரால் பணம் பறிக்கும் நிலையை எடுத்துக்காட்டுகிறது.

### அரசியல்வாதி :

சமுதாயத்தை சீர்படுத்தவும் முன்னேற்றவும் வேண்டிய அரசியல்வாதிகள் அதை மறந்து சுயநலத்தோடு செயல்படும் நிலையை பல கவிதைகளில் சாடியுள்ளார். இக்கவிதைகள் இன்றைய அரசியல்வாதிகளின் பொதுநலமில்லா ஆடம்பர மோகத்தையும், அதனால் மக்கள் அடையும் விரக்திநிலையையும் தானும் இந்நாட்டு குடிமகன் என்ற நிலையில் அனுபவித்து எழுதியுள்ளார். இதனை,

"எடைக்கு எடை அன்பளிப்பு/நாணயமில்லாத தலைவருக்கு/நாணயம்"

என்றும்,/"அமைச்சர் வருகை/நூறு காரில் பவனி/எரிபொருள் சிக்கன விழா"

என்ற கவிதை நம் இன்றைய நாட்டின் அரசியல் வாதிகளின் செயல்களைப் படம்பிடித்துக் காட்டுகிறது. மேலும் இலட்சங்களுக்காகவும், கோடிகளுக்காகவும், கொள்கைகளை விற்று, கட்சி விட்டு கட்சித்தாவும் அரசியல்வாதிகளின் நிலையை தோலுரித்துக் காட்டுகிறார் இளங்கோவன்.

"உண்மையிலும் உண்மை/குரங்கிலிருந்து மனிதன்/அரசியல் வாதிகள்"

என்றும்,

"இலட்சியம் காற்றில்/இலட்சம் வீட்டில்/அரசியல்"

என்றும்,

"அடிக்கடி தாவும்/அடுத்தவரிடமிருந்து பறிக்கும்/மந்தி (ரி)"

என்ற கவிதைகள் இன்றைய அரசியல்வாதிகளுக்கு சாட்டையடிகளாக விளங்குகின்றன. இவருடைய கவிதைகள் சமுதாய முன்னேற்றத்திற்கு பாடுபட வேண்டிய அரசியல்வாதிகள், ஆடம்பர வாழ்க்கைக்கு ஆசைப்பட்டு சுயநலத்தோடு கலந்து கொள்ளுவதை ஆத்திரத்தோடும் ஆதங்கத்தோடும் சாடியிருப்பதை உணரமுடிகிறது.

### ஒற்றுமை :

"ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு - நம்மில்/ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வு"

என்றான் பாரதி. ஆனால் இன்று குடும்ப நபர்களிடையே ஒற்றுமை காண முடியா நிலையை அழகாக எடுத்துரைத்துள்ளார்.

"ஒற்றுமையாய்/குடும்ப உறுப்பினர்கள்/குடும்ப அட்டையில்"/என்ற கவிதையில் விளக்குகின்றார்.

### தேர்தல் :

மக்களின் வாழ்க்கை நிலையை மேம்படுத்த வரும் தேர்தலானது அன்று ஒரு நாள் மட்டுமே மக்களை மன்னர்களாக்கிவிட்டு, பிறகு மக்களை மறந்துவிடும் அரசியல்வாதிகளைத் தந்துவிடுகிறது. இதனை,

"ஒரு நாள் மன்னர்கள்/ஆய்ந்து வருட அடிமைகளே/வாக்காளர்கள்"/

என்று வரும் கவிதை உணர்த்துகிறது.

**சமூக அவலங்கள் :**

நாட்டில் நடக்கும் அவலங்களையும் சுட்டிக்காட்டத் தவறவில்லை இக்கவிஞர். பசிக்கும் குழந்தைக்கும் உணவூட்ட மனமில்லை. புசிக்காக பாம்புக்கு பாலை ஊற்றும் அப்பாவிப் பெண்களை,

"குழந்தை அழுதது/குடிக்காத பாம்புக்கு/புற்றில் பால்"

என்ற கவிதை சமூகத்தில் கடைபிடிக்கப்படும் மூடபழக்கத்தினைக் காட்டுகிறது. அழுகின்ற குழந்தைக்கு பாலைக் கொடுத்தால் குழந்தை பசியாறும். குடிக்காத பாம்புக்கு பாலை ஊற்றுவதால் யாதொரு பயனும் இல்லை என்பதையே கவிஞர் குறிப்பாகக் கூறியுள்ளார்.

**திரைப்படம் :**

இன்று மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்று வளர்ந்து வரும் துறை திரைப்படத்துறையாகும். இது கற்பனையை உண்மை போலக் காட்டுவது. ஆனால் திரைக்கு அப்பால் நடக்கும் அவலங்கள் மக்களை சென்று சேர்வதில்லை. இதனை சுருக்கமாக,

*"கற்பை இழந்து/கண்ணகி ஆனால்/திரைப்படத்தில்"*

என்ற கவிதை பெண்கள் திரைப்படத்துறைக்கு செல்லும்போது நேரும் கொடுமைகளை விளக்குவதாக உள்ளது.

**தொலைக்காட்சி :**

மக்களை ஒருமூலையில் முடங்கச் செய்து அவர்களின் மூளையைச் சத்தமில்லாமல் திருடிவிடுகிறது தொலைக்காட்சி. இன்று பெரும்பாலான குடும்பத் தலைவிகளை தொலைக்காட்சித் தொடர்கள் ஆக்ரமித்துள்ளன. மக்களின் பொன்னான நேரத்தை கொள்ளையடிப்பதை,

"விட்டிற்குள்ளேயே/மூளையைத் திருடும்/தொ(ல்)லைக்காட்சி"/என்ற கவிதையால் உணர்த்துகிறார்.

**நியாய விலைக் கடை :**

பெயரில் மட்டுமே நியாயத்தை வைத்திருக்கும் இன்றைய நியாயவிலைக் கடையின் நிலையை,

"விடுபட்டு விட்டதோ?/அ என்ற முதலெழுத்து/நியாயவிலைக் கடை"/

என்ற கவிதையால் உணர்த்துகிறார்.

**முடிவுரை :**

உருவத்தாலும் உள்ளடக்கத்தாலும் தனக்கென்று ஒரு தனியிடம் பெற்றுத் திகழும் ஹைகூ கவிதைகள், மக்களின் அன்றாட வாழ்க்கை நிகழ்வுகளை பிரதிபலிப்பதாக, சமுதாய நிகழ்வுகளின் தாக்கமாக அமைகின்றன. கவிஞர் இளங்கோவனின் கவிதைகள் இன்றைய சமுதாயச் சூழலைப் படம்பிடித்துக் காட்டுவனவாக உள்ளன. அதிகம் அரசியலைச் சார்ந்த கவிதைகள் இடம்பெற்றுள்ளன. வறுமையின் சோகம், சமுதாய அவலம், கலை நெகிழ்வு என்று பல பரிமாணங்களில் கவிதைகள் படைத்துள்ளார். இக்கவிதைகள் அவரின் சமுதாயப் பற்றிற்கு சான்றாக விளங்குகின்றதை உணரமுடிகிறது.

# சென்ரியு கவிதைகளில் சமுதாயச் சிந்தனை

*ஏ. பால்பிரபுசாந்தராஜ்,*
சென்னை கிறுத்துவக் கல்லூரி,தாம்பரம்.

தமிழ் இலக்கிய உலகில் கவிதை இலக்கியம் காலந்தோறும் புதுப்புது மாற்றங்களைக் கண்டுவந்துள்ளது. சமூகப் பொருளாதார அரசியல் சூழல்களே இம்மாற்றங்களுக்குப் பெரிதும் காரணம் எனலாம். அறிவியலின் நவீன வளர்ச்சி உலகின் பரப்பை சுருக்கிவிட்டது. இந்த நவீன அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சியினாலும் மொழிபெயர்புக் கலையின் வளாச்சியினாலும் பிற நாட்டு இலக்கியக் கொள்கைகள், திறனாய்வுகள், வடிவங்கள் போல்வன தமிழில் தலை எடுக்கத் தொடங்கின. இவ்வகையில் தமிழுக்குக் கிடைத்த புதிய இலக்கிய வடிவம் தான் "சென்ரியூ" கவிதை வடிவம்.

**"சென்ரியூ" - தோற்றம்**

சென்ரியூ கவிதைகளின் தோற்றம் குறித்துப் பொதுவாகச் சொல்வதெனில் இஃது ஹைகூ கவிதையிலிருந்து தோன்றியது என்று கூறிவிடலாம் என்றாலும் ஹைகூவிலிருந்து சென்ரியு தன்னைத் தனித்துவப்படுத்திக் கொண்டதற்கு ஒரு நீண்ட கால வரலாறு உண்டு. 1980 ஆம் ஆண்டு "அன்றாடமை" என்னும் த லைப்பில் சென்ரியூ அங்கதக் கவிதைகளின் தொகுப்பு வெளியானது. இதன் தொகுப்பாசிரியர் மேரி கேசல் என்பவர். இந்நூலின் முன்னுரையில் "ஹைகூவின் அங்கத வடிவம் சென்ரியூ. ஹைகூ இயற்கை உலகில் பார்வை செலுத்துகிறது எனில், மக்கள், பொருள்கள், சம்பவங்கள் ஆகியவற்றின் மீது பார்வையைக் குவிப்பது சென்ரியூ. 5+7+5 = 17 என்னும் அசைகள் அமைப்போடு ஒழுங்கு வகைப்பட்டு ஒவ்வொரு கவிதையும் இருக்கும்" என்று பொதுவான கருத்தை மட்டும் வெளியிட்டிருக்கிறார். இதில் சென்ரியூவின் தோற்ற வரலாறு தெளிவாகப் புலப்படவில்லை. எனினும் ஹைகூ கவிதையிலிருந்து தோன்றியதே சென்ரியூ என்பது மட்டும் புலப்படுகிறது.

ஹைகாய் - நொ - ரெங்கா என்னும் இணைப்புக் கவிதை அல்லது தொடர் கவிதையிலிருந்து தான் ஹைகூ தோன்றியது. இதேவிதக் கவிதையிலிருந்து தோன்றியதே சென்ரியூ வகைக் கவிதையும். இதன் வரலாற்றை நோக்கும் போது இதனை ஒரு கவிதை விளையாட்டு என்றே கூறலாம். இக்கவிதைகள் பெரும்பான்மையும் நகைச்சுவை உணர்வுமிக்கதாகவே இருக்கும். ஹைகாய் -நொ - ரெங்கா எனப்படும் நகைச்சுவை இணைப்புக் கவிதைகளில் "பாஷோ" என்பவர் முதன்மைப்பெற்று விளங்கினார்.

தேநீர் கடைகளிலும் மதுக்கடைகளிலும் இக்கவிதைகள் எழுதப்பட்டன. "கவிதையின் இவ்வகைமையில் வள்ளலார் என்று முத்திரை பதித்த ஒருவர் - இத்தகைய கவிதைகளை ஆராய்ந்து தீர்ப்பளிக்கும் திறமை பெற்றவர் என்று புகழ் பெற்ற ஒருவர் - இதற்கெனப் பணியில் அமர்த்தப்படுவோர் அவருக்கு ஜப்பானிய மொழியில் "டென்யா" என்று பெயர். அவர் தான் - தேநீர், மதுக்கடைகள் பக்கம் "மாக்கூ" என்னும் முன் கவிதைகளை (போட்டிக்கு அழைக்கும் அறைகூவல் வரிகளை) ஒருதிங்களின் சில வாரங்களில் எடுத்துக் கொண்டு போய்க் கொடுப்பார். அடுத்த சுற்று - அக்கடைகளுக்குச் சென்று அவரோ அவருடைய முகவரோ - மாக்கூ கவிதைகளுக்குப் பதிலாக வந்த கவிதைகளைத் திரட்டி வருவார். இவ்வாறு கொடுக்கப்படும் பதில் கவிதைகளுக்கு "இட்சுகேகூ" என்று பெயர். அப்போதே அடுத்த சுற்றுக்கான முன் கவிதைகளை அக்கடைகளில் ஒப்படைப்பார். பதில் வரிகளைத் தருபவர்கள் கூடவே சிறிதளவு கட்டணம் செலுத்துவர். "இட்சுகேகூ" கவிதைகளில் சிறந்தவை தேர்ந்தெடுக்கப்பட்டு அவற்றுக்குப் பரிசு தர அந்தத் தொகையைப் பயன்படுத்திக் கொள்கிற பழக்கம் கவிதைக் கலைக்குச் சாமரம் வீசுவது போல் அமைந்திருக்கிறது. வெற்றி பெற்ற கவிதைகளை அச்சிட்டு - அப்போதே அக்கடைகளில் விற்பனைக்கு எனக் கொடுத்து விடுவார்கள்"2. இப்படிப்பட்டத் தொடர் கவிதைகளில் பதிலாக வந்த கவிதைகளில் சிறந்ததை எடுத்துத் தொகுத்து வெளியிட்டனர். அவ்வாறு தொகுக்கப்பட்ட கவிதைகளே ஹைகூ கவிதைகளும் சென்ரியு கவிதைகளும் ஆகும். ஹைகூ கவிதை வடிவத்திலேயே சென்ரியு கவிதைகளும் எழுதப்பெற்றன. என்றாலும், இரண்டின் உள்ளடக்கங்களும் எதிர் எதிரானவையாகும். எனவே ஹைகூ வேறு சென்ரியு வேறு.

**ஹைகூ - சென்ரியு**

ஹைகூ வடிவத்தில் சென்ரியுஅமைந்திருந்தாலும் இரண்டும் வெவ்வேறானவை. ஹைகூ - சென்ரியு

இவற்றிற்கு இடையேயுள்ள வேற்றுமைகளாக முப்பத்து மூன்று வேற்றுமைகளைச் சுட்டுகின்றார், நிர்மலா சுரேஷ் "ஒரு வண்டி சென்ரியு" என்னும் நூலின் முன்னுரையில் தானும் தமிழன்பனும் வேறுபடுவதைக் குறிப்பிடுகின்றார். இவற்றை வைத்துப் பார்க்கும் போது ஹைகூ - சென்ரியு இரண்டும் ஒன்றல்ல என்று உணரலாம்.

ஹைகூவைப் போன்றே சென்ரியுவும் ஜப்பானில் முகிழ்த்ததுதான். ஹைகூ ஆழமானது. சென்ரியு மேலோட்டமானது. ஹைகூ இயற்கையைப் பற்றியும் ஆழ்நிலைத் தத்துவங்களைப் பற்றியும் பேசும். சென்ரியு மனிதனைப் பற்றியும் மனித உணர்வுகளைப் பற்றியும் பேசும். ஹைகூ கட்டுப்பாட்டுக்கு உட்பட்டது. சென்ரியு கட்டுப்பாடற்றது. ஹைகூ முழுக்க முழுக்கக் கவிதை. சென்ரியு கவிதையாக இல்லாமலும் இருக்கும். இது போன்றே வடிவத்தைத் தவிர்த்து எல்லா வகையிலும் ஹைகூவும் சென்ரியுவும் வெவ்வேறானவை என்பது உணரத்தக்கது.

### "சென்ரியு" என்னும் உச்சரிப்பு :

"சென்ரியு" கவிதைகளின் தாயகம் ஜப்பான். "சென்டியு" என்பதுதான் ஜப்பானி ஒலி உச்சரிப்பு. ஆங்கிலத்தில் நங்ய்ழ்ஹ்ன் "த" சேர்வதைப் பார்த்து அதனைத் தமிழில் சென்ரியு என்று "ரி" ஒலியோடு உச்சரிக்கத் தொடங்கினோம். உண்மையில் "த" என்பது ஜப்பானிய மொழியில் மௌனம் கொண்டது. அது தமிழின் "க" என்பது போலவே அங்கு ஒலிக்கப்படுகிறது. மற்றொன்று, இறுதி எழுத்தாகிய ம வின் ஒலி நீட்டம். ஆங்கிலத்தில் ம விற்கு மேல் ஒரு சிறிய கோடிட்டு, ம என அதனைப் புலப்படுத்துகிறார். ஜப்பானிய மொழியில் "சென்டியு" என்பதே சரியான உச்சரிப்பு நிலை"3. ஆங்கில மொழியாக்கம் பெற்று மீண்டும் தமிழுக்கு வரும்போது "சென்ரியு" என்ற உச்சரிப்பைப் பெற்றது.

### சென்ரியு - பெயர்க்காரணம்

சென்ரியக் கவிதைகள் ஜப்பானில் இரண்டு கோடிக்கும் மேற்பட்டவர்களால் எழுதப்பட்டு வருகிறது. சென்ரியூ என்றால் "ஆற்றோரத்து வில்லோ மரம்" என்று பொருள். சென்ரியு "காரைஹாச்சிமோன் என்னும் கவிஞரின் புனைப் பெயராகும். 1718- 1790 வரை வாழ்ந்த அவர் காரைசென்ரியு என்று புனைப் பெயர் சூட்டிக்கொண்டார்"4. காரையின் தந்தையார் நிர்வாக அதிகாரியாகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றார். அவருக்குப் பின் காரை அப்பணியில் அமர்ந்தார். கவிதை எழுதும் ஆற்றல் கைவரப் பெற்ற இவர் 1757-இல் "மேகுசுகு" என்னும் கவிதையின் தேர்வாளர் ஆனார். இப்பணி செய்கின்றவர்களை "ஆசான்" என்றும் "டென்யா" என்றும் அழைத்தனர். இவர் ஆயிரக்கணக்கான கவிதைகளைப் பதிப்பித்து வெளியிட்டார். இவர் பதிப்பித்து வெளியிட்ட கவிதைகள் இவர் பெயரிலேயே சென்ரியு கவிதைகள் என வழங்கலாயின.

### தமிழில் சென்ரியு

ஜப்பானில் சென்ரியு கவிதைகள் அடங்கிய முதல் தொகுப்பு 1765ஆம் ஆண்டு வெளியானது. இதன் பெயர் யானாகிதாறு என்பதாகும். அதன்பின்பு ஏராளமான கவிதைத் தொகுப்புகள் ஜப்பானில் வெளிவந்து விட்டன. இன்று ஜப்பானில் சென்ரியு கவிதைகளுக்கென்றே இதழ்கள் நடத்தப்படுகின்றன. மனநலத்திற்கு உரிய விளையாட்டுப் போட்டிகளில் ஒன்றாக, கணினி இணையம் சென்ரியுவைச் சேர்த்திருக்கிறது. தமிழில் ஹைகூ பரவிய அளவுக்கு சென்ரியு பரவவில்லை என்ற உண்மை ஒத்துக்கொள்ளப்பட வேண்டியதே. தனித்தனிக் கவிதைகளாகப் பலர் எழுதி வருகின்றனர். நூல் தொகுப்பாக வெளிவந்திருப்பது மகச் சிலவே. 2001 ஆம் ஆண்டு கவிஞர் ஈரோடு தமிழன்பன் முழுக்க முழுக்க சென்ரியூ கவிதைகள் அடங்கிய தொகுப்பினை வெளியிட்டார். "ஒரு வண்டி சென்ரியு " என்னும் இந்நூலே தமிழில் முதல் சென்ரியு கவிதை நூலாகும். இந்நூலின் கவிதைகளே இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

### சென்ரியு கவிதைகளில் சமுதாயச் சிந்தனை

ஹைகூ கவிதையின் அங்கத வடிவம் தான் சென்ரியு என்னும் மேலோட்டமான கருத்து ஏற்புக்குரியதன்று. தொடக்க காலத்தில் அங்கதச் சுவை கொண்ட கவிதைகளே எழுதப்பட்டதனால் இக்கருத்து உருவானது. இன்றைய நிலையில் சென்ரியுவில் சமுதாயச் சிந்தனைகள் பெருமளவில் காணப்படுகின்றன. என்றாலும் இதற்கே உரிய பண்பான நகைச்சுவையை இக்கவிதை வடிவம் விட்டுக்கொடுக்கவில்லை. எதைச் சொன்னாலும் அதில் கொஞ்சம் நகைச்சுவை கலந்து சொல்லும் நிலை நிலைத்துவிட்டது. போலி மருத்துவம்,

போலிபாசம், கல்வி நிலை போன்ற சமுதாயம் சார்ந்த கருத்துக்கள் சென்ரியு கவிதைகளில் இடம் பெற்றுள்ளன.

**வறுமை :**

வறுமை என்பது ஒரு காலத்தில் இந்தியாவின் தேசிய அடையாளமாகவே இருந்தது. வறுமை இல்லாத நாடே உலகில் இல்லை எனலாம். தனது தேசத்து வறுமையைப் பற்றிக் கவலைப்படாதவன் கவிஞனே இல்லை. சென்ரியு கவிதைகளில் வறுமை நயமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. மகனைக் கல்லூரிக்கு அனுப்பிப் படிக்க வைக்கும் அப்பாவிற்கு விடுதியிலிருக்கும் மகன் எழுதும் கடிதம் வருகிறது. தந்தை படிக்கிறார். இந்த ஒரு நிகழ்ச்சியிலேயே வறுமை மிகவும் அழகாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

கல்லூரியிலிருந்து/மகன் கடிதம்

கடன்களால் படிக்கும் அப்பா (ப.15)யு/ஏராளமாகக் கடன் வாங்கி மகனைப் படிக்க வைக்கிறார் தந்தை. மகனிடமிருந்து கடிதம் வந்தால் படிக்கும்போது கடன் தான் முன்வந்து நிற்கிறது.

**சமூக அவலம் :**

நாம் வாழும் சமுதாயம் பல துறைகளாக இயங்கிக் கொண்டிருக்கிறது. இவ்வாறு இயங்கும் எல்லாத்;துறைகளிலும் சீர்கேடுகள் உள்ளன என்பதை சென்ரியு குறிப்பிடுகிறது. ஆயிரமாயிரம் நீதி நூல்களைப் பாடி வைத்திருக்கும் நம் இந்திய மண்ணில் குறிப்பாகத் தமிழ் மண்ணில் சாராய வியாபரம் கொழுத்திருக்கிறது என்பதை தகுந்த குறியீடுகள் விளக்குகின்றன.

**பசுவின் மடியில்**

சாராயம்/நீதி நூலுக்கும் ஓர் ஆழாக்கு (ப.18)

அரசு அலுவலகங்கள் சோம்பிக் கிடப்பதைப் பின்வரும் கவிதை சித்திரிக்கிறது.

மூன்று வருடங்களுக்குப் பின்/யுமுதல் ஓய்வு ஊதியம்/ஈமக் கடனுக்கு (ப.19).

ஓய்வு பெற்றவர்களுக்கு வழங்கப்படும் ஓய்வூதியம் அவர்கள் வாழும் போது அவர்களுக்குப் பயன்படாமல், அவர்களது ஈமக் கடனுக்குப் பயன்படுமளவிற்குக் காலதாமதமாயக் கிடைக்கிறது. இது அரசு அலுவலகங்களின் காணும் அவலம். நமது கிரிக்கெட் தேர்வுக் குழுவிலும் பயிற்சிக் குழுவிலும் தகுதியற்றவர்களுக்குத்தான் முன்னுரிமை வழங்கப்படுகிறது என்பது இங்கு நகைச்சுவையோடு சுட்டப்படுகிறது.

எட்டுப் பந்தயங்களில்/பூச்சியம் போட்டவன்/கிரிக்கெட் பயிற்சியாளன் (ப.23).எந்தத் துறை எப்படி இருந்தாலும் நீதித் துறை பழுதில்லாமல் இருக்க வேண்டும். அப்படிப்பட்டத் துறையே இன்று அவலநிலை அடைந்திருக்கிறது.

நீதிபதி சொன்னபடி நின்றது/நீதி சொன்னபடி நிற்காத/தராசு முள் (ப.26)

நமது ஊர்களில் நூலகங்கள் இருக்கின்றன. அவற்றைப் பயன்படுத்துவோர் வெகு சிலரே. பெரும்பாலோருக்கு நூலகம் என்ற ஒன்று இருப்பதே தெரியாது. நூலகத்திலும் படிப்பவர்களைவிட தூங்குபவர்களே அதிகம். நூல்வாசிக்கும் வழக்கம் இல்லாதது ஒரு சமுதாயத்தின் மிகப் பெரிய அவலம் இது.

வாசகர் நூலகம்/தூக்கம்/விழித்திருக்கும் நூல்கள் (ப.43)

**அரசியல் :**

அரசியலைச் சாக்கடை என்று சொல்லுவாரும் உண்டு, புனிதமானது என்று சொல்லுவாரும் உண்டு. எப்படியிருந்தாலும் அரசயில் விமர்சனத்திற்கு உரியதாகவே இருந்து வருகிறது சென்ரியுவின் விமர்சனம் நகைச்சுவையானது.

பக்தர்களிடம்/கடவுள் கேட்ட வரம்/"அரசியலுக்கு இழுக்காதீர்கள்" (ப. 21)

கடவுளே கண்டு அஞ்சும் நிலையில் அரசியல் இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

பதவி இழந்த அமைச்சர்/அறிக்கை/இனிநாட்டுக்கு உழைப்பேன் (ப. 63)

அமைச்சர் பதவியிலிருந்து வரை நாட்டுக்கு உழைக்கவில்லை. இனி நாட்டுக்கு உழைப்பேன் என்கிறார். அது வராவிட்டால் இது/இது வராவிட்டால் அது/எதுவும் வராவிட்டால் அரசியல் (ப. 66)

**மக்கள் நிலை :**

வாழ்கின்ற காலத்தில் இப்படித்தான் வாழ வேண்டும் என்ற கொள்கையுடையவர்கள் இருக்கின்றனர். எப்படி வேண்டுமானாலும் வாழலாம் என்ற எண்ணமுடையவர்களும் இருக்கின்றனர். இப்படித்தான் வாழ

வேண்டும் என்ற கொள்கையோடு வாழும் மனிதனை உலகம் போற்றுகிறது. மற்றவர்களைத் தூற்றுகிறது. எப்படியும் வாழலாம் என்கிற மனிதரை கேலியோடு பார்க்கிறது சென்ரியு.

பணம்/எதையும் செய்யும் தெரிந்தவர்கள்/பணம் செய்தார்கள் (ப. 26)

அதிகாரி பிறந்த நாள்/வீடு முழுக்க/இலஞ்ச அலங்காரம் (ப. 60)

கை நீட்டி வாங்காத/அதிகாரி மனைவி/கை நிறைய வளையல்கள் (ப. 46)

இக்கவிதைகள் மனிதனின் தவறான வாழ்க்கை முறையினைக் காட்டுகின்றன.

**பக்தி :**

கடவுள், கோயில் இவற்றைப் பற்றிய உயர்வான எண்ணம் சமூகத்தில் நிலவுகின்றது. அவ்வாறு இருப்பினும் சில விரும்பத்தகாத செயல்களும் நடைபெற்றுக் கொண்டுதானிருக்கின்றன. ஆதலால் கடவுள், பக்தி இவற்றைக் குறித்த ஒரு எதிர் விமர்சனம் கவிதைகளில் இடம் பெறுகின்றது.

அதர்மங்கள்/அஞ்சிய கடவுள்/அவதாரநிறுத்தம் (ப. 32)

இப்போதெல்லாம் இறைவனின் அவதாரம் நிகழ்வதில்லை. காரணம் அதர்மங்கள் அதிகமாகிவிட்டன என்கிறது இக்கவிதை. கடவுள் சிலைகளைத் திருடுகிற இந்த நாட்டில், கடவுள், பக்தி இவைகளைப் பற்றிய கேலியும், நகைச்சுவையும் கவிதைகளில் இடம் பெறுகின்றது.

சிலைக்கு வெளியே போய் வந்த/கடவுள் சிலையாய் நின்றார்/சிலையைக் காணோம் (ப. 40)

பூசாரி கையில் கட்சி/வெளியேற்றப்பட்டார்/கடவுள் (ப. 48)

கோயிலில் கூட அரசியல் கலந்துவிட்ட பரிதாபநிலையைக் காட்டுகிறது இது. இன்றைய பூசாரிகளிடம் இருந்து பக்தியும் போய் நலமும் போய் சுயநலம் வந்துவிட்டது இக்கவிதை எடுத்துக்காட்டு.

**குழந்தை வளர்ப்பு :**

தாய், தந்தை இருவரும் பணியில் இருக்கும் குடும்பங்களில் குழந்தைகள் கவனிப்பாரற்றுத் தவிக்கின்றனர். அதோடு கருவிகளின் தொழில் நுட்பம் பெருமளவில் வளர்ந்துவிட்டதால் குழந்தைகளிடம் பொம்மைகள் பேசிக் கொண்டிருக்கின்றன.

**குழந்தையோடு**

யாரும் பேசவில்லை/பேசும் பொம்மை (ப. 38)

உண்மைக் குழந்தைகளை விட பொம்மைகள் கவனத்தைக் கவரும் வகையில் இருப்பதால் ஒரு குழந்தை

அம்மா !/இந்தப் பாப்பாவை விற்றுவிட்டு/வேறு பொம்மை வாங்கலாம். (ப. 40)

என்று சொல்கிறது. அந்த அளவிற்கு உண்மையை நிழல் விழுங்கிக் கொண்டிருக்கிறது.

**மீட்டுருவாக்கம் :**

அகலிகை, சீதை போன்ற தொன்மங்கள் சிறு கதைகளிலும் புதுக்கவிதைகளிலும் மீட்டுருவாக்கம் செய்யப்படுவது போல் சென்ரியூவிலும் செய்யப்பட்டுள்ளது.

அடடே !/இந்தப் பழம் இனிக்கும்/ஏணியுடன் அதே நரி (ப. 45)

சீச்சீ இந்தப் பழம் புளிக்கும் என்று காலம் காலமாக சொல்லப்பட்டு வந்த நரிக்கதை இங்கே மறுவாசிப்புக்குள்ளாக்கப்பட்டுள்ளது. சென்ரியு கவிதை அங்கதங்களை மட்டும் சொல்வதாக இல்லாமல் சமுதாயத்தில் பல்வேறு துறைகளில் புரையோடிப் போயிருக்கும் அவலங்களையும் சுட்டிக்காட்டுகிறது. மென்மையான நகைச்சுவையோடு சமூகத்தின் ஆழ்ந்த அவலங்களை எடுத்துக்காட்டும் சென்ரியு கவிதை வடிவம் இச்சமுதாயத்தைப் புணரமைப்புச் செய்யத் தமிழன்னையின் கையில் கிடைத்திருக்கும் ஒரு புதிய ஆயுதம் என்றே சொல்லலாம்.

**அடிக்குறிப்புகள்**

1. ஈரோடு தமிழன்பன், ஒரு வண்டி சென்ரிய. ப.7
2. மேலது ப. 10
3. நிர்மலா சுரேஷ், சிரிக்கும் வில்லோமரம் சென்ரியூ, ப.33
4. மேலது ப. 35

# தமிழில் லிமரைக்கூ கவிதைகள் - அறிமுகம்

*பேரா.ஞா. பெஸ்கி,*
தூய வளனார் கல்லூரி, திருச்சிராப்பள்ளி - 2.

இரண்டாயிரம் வருட தமிழ் இலக்கிய மரபில் காலந்தோறும் பல மாற்றங்கள் பொருண்மை நிலையிலும், வடிவநிலையிலும் ஏற்பட்டுள்ளன. ஐரோப்பியர் வரவால் தமிழில் விளைந்த மலர்ச்சியின் வெளிப்பாடுகளுள் ஒன்றான புதுக்கவிதையும் மாற்றங்களின் போக்கிற்குத் தப்பவில்லை. வசன கவிதைகள், புதுக்கவிதைகள், ஹைகூ கவிதைகள், சென்ரியூ கவிதைகள் எனப் பல படிநிலைகளைத் தாண்டிய தமிழ்க்கவிதை உலகம், லிமரைக்கூ என்ற மற்றொரு தடத்திலும் தடம் பதித்துள்ளது. தமிழ்க்கவிதையின் மற்றொரு பரிமாண வளர்ச்சியான லிமரைக்கூ தமிழில் பெற்றுள்ள அறிமுகம் இங்கு விளக்கப்பெறுகிறது.

## லிமரைக்கூ - விளக்கம்

"ஆங்கிலக் கவிதை வகைகளில் சந்தச் சிறப்புடைய லிமரிக்கும், ஜப்பானியக் கவிதை வகைகளில் நுண்மையும் மென்மையும் கொண்ட ஹைகூவும் கைத்தலம் பற்றிக் கடிமணம் பூண்டு பெற்றெடுத்த கவிதை இது" என்கிறார் கவிஞர் ஈரோடு தமிழன்பன். லிமரிக்கும் ஹைகூவும் சேர்ந்த ஒரு கலப்பினக் கவிதை வடிவத்தை டெட்பாக்கர் என்பவர் முதன்முதலாக ஆங்கிலத்தில் உருவாக்கினார். ஜப்பானிய ஹைகூவின் 5-7-5 என்னும் அசையமைப்புடைய மூவடி எல்லையும் லிமரிக் ஓசை அமைப்பும் கொண்ட அதற்கு லிமரைக்கூ என்று பெயர். லிமரிக் எனப்படும் குறும்பாவும் ஹைகூ எனப்படும் துளிப்பாவும் இணைந்த லிமரைக்கூ எனப்படும் துளிக்குறும்பாவைப் பற்றிய புரிதலுக்கு லிமரிக், ஹைகூ ஆகிய கவிதைகள் பற்றிய அறிவு இன்றியமையாததாகிறது.

## லிமரிக் - அறிமுகம்

ஐந்து அடிகளால் ஆகிய இக்கவிதையின் முதல், இரண்டு, ஐந்தாம் அடிகளின் இறுதிச்சீர் ஒரு வகையான இயைபுத்தொடை பெற்றனவாகவும், மூன்றாம், நான்காம் அடிகளின் இறுதிச்சீர்கள் மற்றொரு வகையான இயைபுத்தொடை உடையனவாகவும் அமைந்துள்ளன. மேலும் முதல், இரண்டு, ஐந்தாம் அடிகள் சமன்பட்ட சீர் அமைப்புகளோடு நீண்டிருக்கும். அவ்வாறே மூன்று, நான்காம் அடிகள் சமன்பட்ட சீர் அமைப்புகளோடு அமைந்திருக்கும். அதாவது மூன்றாம், நான்காம் அடிகளின் சீர் அமைப்பு மற்ற அடிகளின் அமைப்பை விடச் சுருங்கியிருக்கும்.

லிமரிக்கின் முதல் அடி முதன்மைப்பாத்திரத்தையும் அதன் பின்புலத்தையும் அறிமுகம் செய்கிறது. செயலின் தொடக்கத்தை இரண்டாம் அடியும் செயலின் பரந்த தன்மையை மூன்றாம், நான்காம் அடிகளிலும் காணமுடிகிறது. ஐந்தாவது அடி எதிர்பாராத திருப்பத்தோடு திடீரென்று ஒளிர்வதாக அமைகிறது. இத்தகைய பொருண்மைநிலையிலான வரையறையை அமெரிக்கானா கலைக்களஞ்சியம் விவரிக்கிறது. ஆக்ஸ்போர்டு ஆங்கில அகராதி, "வீண் வேடிக்கைத்தனமான தரமற்ற பாட்டு" என்று லிமரிக்கை விளக்குகிறது.

## லிமரிக்கின் வரலாறு :

லிமரிக் கவிதைகள் கி.பி. பதினோராவது நூற்றாண்டிலேயே தோன்ற ஆரம்பித்தன. பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் எலிசபெத், ஹெரிக் ஆகியோர் இதனை வளர்த்தெடுத்தனர். எட்வர்டு லியர், டென்னிசன், ஸ்டீவன்சன், தாமஸ் தார்னிலே, கில்பர்ட், கிப்ளிங் ஆகிய பெருங்கவிஞர்களின் பங்களிப்பில் இக்கவிதைகள் வளர்ந்து வந்தன. ஐரோப்பாவின் களியாட்டக் கூடங்களில், விளையாட்டு மையங்களில், ஓய்வு அறைகளில் பொழுது போக்காக, வேடிக்கைத் தன்மையோடு - வாய்மொழியாக வளர்ந்து வந்த கவிதை வடிவமேலிமரிக் ஆகும். இருபதாம் நூற்றாண்டில் லிமரிக் பெரும் செல்வாக்கைப் பெறுவதற்குக் காரணம் மக்களிடையே செய்தித்தாள்கள் லிமரிக்கின் இறுதி வரிகளை எழுதுமாறு அறிவுறுத்தி அறைகூவல் விட்ட போட்டிகளே ஆகும். இவற்றில் சிறந்த கவிதை வரிகளுக்கு வழங்கப்பெற்ற பரிசுகள், இதன் வளர்ச்சிக்கு முக்கிய தோற்றுவாயாக அமைந்தன. இதனால் சமூகம், அரசியல், இலக்கியம், திரைப்படம் உள்ளிட்ட அன்றாட நிகழ்வுகளைத் தெறிக்கும் நடையில் வெளியிடும் கவிதைகள் பெருகி வந்தன.

தமிழில் லிமரிக் முயற்சியை முதன் முதலாகச் செய்தவர் ஈழத்து மகாகவி ஆவார். இவர் 1966 இல் "குறும்பா" என்ற தலைப்பில் நூறு லிமரிக் வகை கவிதைகளைப் புனைந்துள்ளார். 1984 இல் த. கோவேந்தன் "குறும்பா" என்ற தலைப்பிலேயே லிமரிக் கவிதைகள் அடங்கிய நூல் ஒன்றை வெளியிட்டார். எனினும் தமிழ்

இலக்கிய உலகில் இவ்விரு முயற்சிகளும் பெரிதளவில் பேசப்படாமல் மறக்கடிக்கப்பட்டன என்பது இங்கு நினைவு கூறத்தக்கது.

### ஹைகூ - அறிமுகம்

ரெங்கா, டாங்கா போன்ற ஜப்பானிய மரபுக் கவிதை வடிவங்களின் இறுக்கமான இலக்கணக் கட்டுப்பாடுகளிலிருந்து விடுதலை பெற விரும்பிய போதுதான் ஹைகூ தோன்றியது. கி.பி. 15 ஆம் நூற்றாண்டில் தோன்றிய இக்கவிதைகள் 5+7+5 = 17 என்ற அசை அமைப்புடன் கூடிய மூன்றடிகளைப் பெற்று வரும். "ஹைகாய் - நொ - ரெங்கா" என்னும் இணைப்புக் கவிதை அல்லது தொடர் கவிதையிலிருந்து தன் ஹைகூ தோன்றியது. இணைப்புக் கவிதையின் முன் தொடக்கமாக அமைந்த ஹொக்கு அவ்விணைப்புக் கவிதையிலிருந்து பிரிக்கப்பட்டதும் "ஹைகூ" எனப் பெயர் பெற்றது.

### ஹைகூ - இயல்புகள்

ஹைகூவின் இலக்கணம் என்பது வெறும் புறநிலையான யாப்பு வடிவ இலக்கணம் மட்டுமல்ல, அதன் உள்ளக்கருத்திற்கும் வெளியீட்டு முறைக்கும் கூட இலக்கணம் உண்டு. ஜப்பானிய ஹைகூ பெரும்பாலும் பௌத்த சமயப் பிரிவாகிய ஜென்சமயத் தத்துவத்தின் பின்னணியில் அமைந்தது. மேலும் தனிமை, வெறுமை, நிலையாமை, வறுமை ஆகிய நான்கு மனநிலைகளில் ஏதேனும் ஒன்றைப் பெற்றிருக்கும். ஆனால், இந்த மனநிலையை வருணிப்பதில்லை. மாறாக அம்மனநிலையில் பெற்ற காட்சிகளை மட்டுமே உணர்த்தும். ஒவ்வொரு ஹைகூவிலும் இரண்டு படிமங்கள் பெரும்பாலும் இருக்கும். மேலோட்டமாகப் பார்த்தால் அந்த இரண்டிற்குமிடையே தொடர்பு எதுவும் இருப்பதாகத் தெரியாது.ஆனால் ஹைகூவின் ஈற்றடியில் தான் இரண்டு படிமங்களுக்கு இடையே மின் இணைப்பு ஏற்பட்டு ஹைகூ திடீரென்று ஒளிர்வது போல் தோன்றும். வேண்டாத சொற்களை மட்டுமில்லாது வேண்டிய இணைப்புச் சொற்களைக் கூட விலக்கி விடுவது ஹைகூவின் தனித்தன்மையாகும்.

### லிமரைக்கூ - இயல்புகள்

தத்துவத்தளங்களில் இயங்கிய ஹைகூவின் தன்மையையும், அங்கத வடிவில் இயங்கிய சென்ரியூவின் பாடுபொருள் நிலையையும் தன்னகத்தே கொண்டதாக லிமரைக்கூ அமைந்துள்ளது. வடிவ நிலையில் ஹைகூவின் இயல்பையும், பொருண்மை நிலையில் லிமரிக்கின் இயல்பையும் கொண்டு அமைந்துள்ள லிமரைக்கூவில் இயைபுச்சந்தம் என்பது தனித்துவமான இடத்தைப் பெறுகிறது. லிமரிக், சென்ரியூ ஆகிய இரண்டிற்கும் உரிய கூறுகள் இருப்பினும் ஹைகூவின் தனித்துவமான காட்சிகள், உணர்வுகளை இவ்வகைக் கவிதையில் காணமுடிகிறது. ஏதேனும் ஓர் ஊரை முதன்மைப்படுத்தியோ, அந்த ஊரின் கற்பனையான ஒரு பாத்திரத்தை முதன்மைப்படுத்தியோ ஒரு சம்பவத்தை அல்லது காட்சியை நகைச்சுவையாய், அங்கதமாய்ச்சொல்லும் லிமரிக்கின் கூறுகளையும் இவற்றில் அடையாளம் காணமுடியும்.

### தமிழில் லிமரைக்கூவின் அறிமுகம்

வளர்ச்சிகளையும் மாற்றங்களையும் தனது உயிர்நிலையாகக் கொண்டுள்ள தமிழ்மொழி லிமரைக்கூவையும் ஈன்றெடுத்துள்ளது. சென்ரியூவைத் தமிழில் அறிமுகம் செய்த ஈரோடு தமிழன்பனின் முயற்சியால் உருவெடுத்துள்ள "சென்னிமலைக் கிளியோப்பாத்ராக்கள்" தமிழின் முதல் லிமரைக்கூ கவிதை நூலாகும். 138 லிமரைக்கூ கவிதைகளை உள்ளடக்கிய இப்படைப்பில் கருத்துக்களை எளிதாகப் புலனாக்கும் வகையில் வரையப்பட்ட ஓவியங்களும் இடம் பெற்றுள்ளன. சென்னை பாப்லோ பாரதி பதிப்பகத்தால் 2002 இல் வெளியிடப்பெற்ற இப்படைப்பில் லிமரிக்கின் இயைபுச்சந்தமும் ஹைகூவின் வரியளவும் தவறாமல் இடம் பெற்றிருக்கின்றன. இத்தொகுப்பின் படைப்பாக்கத் திறன் - வடிவம், பொருண்மை, உத்திகள் போன்ற பல்வேறு இலக்கிய கூறுகள் அடிப்படையில் ஆராயப்படுவது இன்றியமையாததாகிறது.

### படைப்பின் வடிவம்

யாப்புமுறையில் ஹைகூவும் சென்ரியுவும் பெறாத இயைபுச் சந்தம் லிமரைக்கூவின் சிறப்புத்தன்மையாகும். சென்னிமலைக் கிளியோப்பாத்ராக்களின் இத்தயை இலக்கிய வடிவின் வீச்சிற்கு,

"திண்டுக் கல்லுப் பூட்டைத்/திறக்க முடியவில்லை; திருடன்/திருடிப் போனான் வீட்டை" (ப.77)

என்ற வரிகளைச் சான்றாகக் காட்டலாம். முதல் மற்றும் மூன்றாம் அடிகளின் இறுதிச்சீர் இயைபுச் சந்தம் பெற்று அமைந்துள்ளதெனினும் இரண்டாம் அடி மற்ற அடிகளை விட நீண்டதாகவும், கூடுதலான சீர்களைப் பெற்றுள்ளதாகவும் அமைந்துள்ளது இங்குக் குறிப்பிடத்தக்கது.

### படைப்பின் பொருண்மை

"சென்னிமலைக் கிளியோப்பாத்ராக்கள்" என்ற இப்படைப்பில் சமூகம், அரசியல், சமயம், தத்துவம், உளவியல், இயற்கை போன்ற பொருண்மைகளைக் கண்டறிய முடிகிறது.

"தாடி வளர்த்த ஈரோடு/தமிழர் பூமி முழுதும் பரவி/மாற்றம் செய்தது வேரோடு" (ப. 76)

என்ற லிமரைக் கூவைச் சமூகச் சிந்தனைக்குச் சான்றாகவும்,

"மக்களை மயக்கிய பேச்சு/மயக்கம் தெளிந்த பின்/தென்பட்ட தரிதாரப் பூச்சு" (ப.25)

என்ற கவிதையை அரசியலுக்குச் சான்றாகவும் குறிப்பிடலாம். மேலும்,

"பாடுவது அருட்பாப் பதிகம்/அன்றாடம் உணவில் ஆடு கோழி/
மீன் நண்டு வகையே அதிகம்" (ப. 28) என்ற வரிகள், சமயம் குறித்த சிந்தனையையும்,

"பொம்மையுடன் குழந்தை உறக்கம்/பிரித்தெ டுததாள் தாய்
முடிய வில்லைபிடி இறுக்கம்" (ப.32)

என்ற வரிகள் உளவியல் சிந்தனையையும்,

"பறவை யோடு சேர்ந்துபற/சிறகுகள் தேவை இல்லை மனிதன்
என்பதை மட்டும் நீமற" (ப.17)

என்ற வரிகள் தத்துவச் சிந்தனையையும்,

"மரத்தின் காலில் வெட்டுக்கள்/கொண்டையில் மைனாக் குருவிக் கூட்டில்
புதிய பாடல் மெட்டுக்கள்" (ப.73) என்ற வரிகள் இயற்கைச் சூழலையும் எடுத்துரைக்கின்றன. எனினும் அனைத்து வகைக் கவிதைகளிலும் அங்கதப் பொருளை உணரமுடிகிறது.

## படைப்பாக்க உத்திகள்

லிமரைக்கூ கவிதைகளில் நகைச்சுவைத் தன்மையையும், ஒரு நிகழ்வைக் கதைப்போக்கில் எடுத்துக் கூறுகின்ற உத்தியையும், முரண்களின் செல்வாக்கையும் காணமுடிகிறது. நகைச்சுவைத் தன்மை என்பது பெரும்பாலான கவிதைகளில் பொதுமையான உத்தியாகக் காணப்படுகிறது. இலக்கிய வகை என்ற போதிலும் பேச்சு வழக்கின் வீச்சையும் ஒரு சில கவிதைகளில் காணமுடிகிறது. கதைப்போக்கில் அமைந்த கவிதைகளுக்கு,

"தாமரைப் பூவில் நின்று/வண்டை விரட்டித் தவளை சொன்னது
இசைமிக நல்ல தென்று" (ப.18)

என்பதைச் சான்றாகக் காட்டலாம்.

"ஊது வத்திச் சின்னம்/கட்சி வென்றும் கோட்டை பிடித்தும்
நாற்றம் போகலை இன்னும்" (ப. 47)

என்ற கவிதையை முரணுக்குச் சான்றாகக் குறிப்பிடலாம்.பேச்சு வழக்குகள் கையாளப்பட்டுள்ளமைக்கு,

"கோயிலுக் கென்று சூசை/சொல்லிப் பாபா பார்க்கப் போனான்
பூசை மேலே பூசை" (ப.79)என்ற வரிகளை எடுத்துக்காட்ட முடிகிறது.

## தொகுப்புரை :

ஜப்பானிய ஹைகூ கவிதைகளையும், ஆங்கில லிமரிக் கவிதைகளையும் உள்ளடக்கிய கலப்பினக் கவிதையாகிய லிமரைக்கூ - ஹைகூவின் வடிவத்திலும், லிமரிக் கவிதைகளின் இயைபுச் சந்தத்திலும், சென்ரியூவின் பாடுபொருளோடும் அமைந்துள்ளது. ஈரோடு தமிழன்பனின் "சென்னிமலைக் கிளியோப்பாத்ராக்கள்" வழியாகத் தமிழில் தடம் பதித்துள்ள இக்கவிதை சமூகம்,சமயம், அரசியல், உளவியல், தத்துவம், இயற்கை போன்ற பொருண்மைகளைக் கொண்டு விளங்குகிறது. எனினும் படைப்பாக்க நிலையில் கதை கூறும் தன்மை, நகைச்சுவை, பேச்சுவழக்கு, முரண் போன்ற உத்திகளைக் கொண்டும் அமைந்துள்ளது. இவ்வாறாகத் தமிழில் வளர்ந்து வரும் புதுக்கவிதைகளின் வளர்ச்சிப் படிநிலையை எடுத்துக்காட்டும் ஒரு வகையாக லிமரைக்கூ அமைந்துள்ளது.

## துணை நூல்கள் :


1. தமிழன்பன், ஒரு வண்டி சென்ரியு, மருதா பதிப்பகம், சென்னை. முதற்பதிப்பு, 2001.
2. முத்து சு. நெல்லை, தமிழில் ஹைகூ, அன்னம் (பி) லிமிடெட், சிவகங்கை, முதற்பதிப்பு, 1994.
3. லீலாவதி. தி., ஜப்பானிய ஹைகூ, அன்னம் (பி) லிமிடெட்., சிவகங்கை, முதற்பதிப்பு, 1987.
4. லீலாவதி. தி., இதுதான் ஹைகூ, பூங்கொடி பதிப்பகம், சென்னை. முதற்பதிப்பு, 1990.

# ஹைக்கூ கவிதைகளில் சமுதாயம்

*த. ராஜ்குமார்,* முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை,
நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி, பொள்ளாச்சி - 1.

உலகில் நாம் காணுகின்ற காட்சிகளைக் கவிஞனின் கவிதை உள்ளமானது புதிய கோணங்களில் புதிய முறைகளில் காண்கின்றது. அத்தகைய வேறுபட்ட பார்வையினார் தான் கவிஞனின் உள்ளத்தில் கவிதை வெளிப்படுகின்றது. அந்த அனுபவத்தினைப் பகிர்ந்து கொள்ள அந்த அனுபவத்திற்கு உருவங்கொடுப்தே கவிதையாகின்றது. தமிழில் இன்று மிகுதியாகப் பேசப்படும் புதுக்கவிதை வடிவம் ஹைக்கூ எனலாம்.

**ஹைக்கூ :**

ஹைக்கூ என்பது ஜப்பானியக் கவிதை வகையினுள் ஒன்றாகும். ஹைக்கூ என்பதை ஐக்கூ என்று தமிழில் மாற்றி அதற்குச் "சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்" என்ற பொருளைத் தருகிறார் கவிஞர் அமுதபாரதி. மேலும் ஐக்கூ என்பதற்கு ஐ-கடுகு, கூ-பூமி, ஐ+கூ = ஐக்கூ என்று விளக்கம் தருகிறார். அதாவது கடுகளவுள்ள பாடல் நிலமளவுள்ள பொருளைத் தருகிறது என்பதால் ஐக்கூ எனலாம் என்னும் இவரது கருத்து பொருத்தமுடையதே. அவ்வகையில் சமுதாய நிகழ்வுகள் ஹைக்கூ கவிதைகளில் வெளிப்படும் பாங்கினைக் காண்போம்.

**வரதட்சணை :**

பெண்ணுக்கு, பெற்றோர் கொடுக்கும் பொருட்களை இன்று கட்டாயமாகக் கேட்டுப் பெறுகின்ற நிலை வந்துள்ளது. அதுமட்டுமல்லாது மாப்பிள்ளையின் படிப்பு, வேலை, சொத்து போன்றவற்றிற்கு ஏற்றவாறு விலை பேசும் நிலை வருந்தத்தக்கமாகும்.

"அம்மி மிதித்தவளை/திரும்பி மிதித்தார்கள்
கிரைண்டர் வராததால்" (ந. முத்து,எடை குறைவாய)
"துளித்துளியாய்ச் சேமிப்பு/சேர்ந்தது பெருந்தொகை
சீச்சீ.... வரதட்சணைக் கொள்ளை" (அமுதபாரதி, ஐக்கூ அந்தாதி)

மேற்கண்ட கவிதை வரிகள் வரதட்சணைக் கொடுமையைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. இதனால் பல பெண்களின் வாழ்க்கை சிக்கலுக்குள்ளாவதை இன்றும் காணமுடிகிறது.

**விதவை நிலை :**

சமுதாயத்தில் இன்றளவும் விதவைப் பெண்கள் ஒதுக்கி வைக்கப்படுகின்ற நிலையைக் காணமுடிகின்றது. அவர்களை வேதனைப்படுத்தி வேடிக்கை பார்க்கின்ற கூட்டம் இன்னும் இருந்து கொண்டுதான் உள்ளது.

"பூக்களால்/அலங்கரிக்கப்பட்டது
விதவையின் பிணம்" (ந. முத்து, எடை குறைவாய்)

வாழ்கின்ற காலத்தில் அவர்களின் உணர்வுகளைப் புரிந்து கொள்ளாமல் வாட்டி வதைக்கும் சமூகம், இறந்த பின்பு செய்கின்ற இத்தகைய செயல்களால் எவ்விதப் பயனும் இல்லை என்பதை அறியமுடிகின்றது.

**உறவு நிலை :**

இன்றைய நாகரிக உலகத்தில் மனித உறவுகள் சிதைந்து சீரழிந்து வருகின்றன. ஒரு காலத்தில் தகவல் தொடர்பு சாதனங்களால் மிகுந்த பயன் இருந்து வந்தது. ஆனால் இன்று அவை மனிதர்களின் பண்புகளைப் பாழடையச் செய்து வருகின்றன.

"டிவி பார்க்கும் நேரம்/விருந்தினர் வருகை விசாரிக்க

வராமலா போகும் விளம்பரம்"/(ந. முத்து, எடை குறைவாய்)

விருந்தினரை வரவேற்று உபசரிக்கும் விருந்தோம்பலில் சிறந்தவர்கள் என்ற சிறப்பு சீரழிந்து வருகின்ற நிலையைச் சுட்டுகின்றது. அண்டை அயலாருடன் நல்லதொரு உறவு வைத்து இன்ப துன்பங்களில் கலந்து கொள்ளும் பொழுது உறவுகள் மேம்படும். அதை விடுத்து அவர்களுக்கு ஏற்படும் துன்பங்களை எண்ணி மகிழ்வது சிறப்பன்று.

"இரட்டிப்பு மகிழ்ச்சி/இப்படியே இருக்கட்டும்

பக்கத்து வீட்டுக்காரன் துக்கம்"/ (சென்னிமலை தண்டபாணி,கொஞ்சம்ஹைக்கூ கொஞ்சும் சென்ரியு).

மேற்கண்ட வரிகளின் மூலம் மக்களின் மனநிலை மாறுபட்டு வருகின்றதையும் உறவுகள் சிதையும் நிலையும் அறியமுடிகின்றது.

**கல்வி நிலை :**

சந்தையில் தரம் பிரித்து விற்கும் பொருட்களைப் போன்று இன்றைய கல்வி மாறிவிட்டது. மேற்படிப்புக்களைப் படிக்க பணம் இருந்தால் போதும் என்ற நிலை வந்துவிட்டது. இன்று தரமான கல்வி என்ற பெயரில் பிஞ்சுகளின் நெஞ்சைப் பதம் பார்த்து, வருமானத்தைப் பெருக்கிக் கொண்டிருக்கும் கல்வி முறையைச் சாடும் விதமாக,

"புல்லாங் குழலுக்குள்/

புழுதிக் காற்றுநர்சரி பாடம்" (ந. முத்து, எடை குறைவாய்)

"அறிவின் துளிர்/சுமக்க முடியவில்லை

புத்தகச் சுமை"/(சென்னிமலை தண்டபாணி, கொஞ்சம் ஹைக்கூ கொஞ்சும் சென்ரியு).

"வலிக்கிறது நெஞ்சம்/எத்தனை புத்தகங்கள்

சுமக்கும் குழந்தை முதுகு"/(அமுத பாரதி, ஐக்கூ அந்தாதி)

மேற்கண்ட கவிதை வரிகள் குழந்தைகளின் நிலையைக் கூறுவதோடு,இன்றைய கல்வி முறையையும் சாடுவதாக அமைந்துள்ளது.

**அரசியல் :**

அன்றைய ஆட்சி முறைகள் மக்களை நல்வழிப்படுத்தி நல்வாழ்வு வாழ வழிசெய்தது. ஆனால் இன்றோ அது தலை கீழாகி விட்டது. கட்சி என்ற பெயரில் மக்களுக்குள் சாதிப்பிரிவினைகளை ஏற்படுத்தி சமுதாயமும் அரசியலும் சாக்கடையாக மாறியுள்ளன.

"சன்னலைத் திறந்தேன்/செய்தித்தாள்

சட்டசபை அசிங்கம்"/(அமுத பாரதி, ஐக்கூ அந்தாதி).

மக்களின் குறைகளைப் போக்க நல்ல திட்டங்களை நிறைவேற்றி நாட்டு வளத்தைப் பெருக்க வேண்டிய அரசியல் வாதிகள் தங்களின் போட்டி பொறாமைகளை சட்டசபையில் அரங்கேற்றி வருவது பற்றி இக்கவிதைத குறிப்பிடுகின்றது.

"புதுக் கட்சி தொடக்கம்/ஜாக்கிரதை

கோவணம்" (ந.முத்து, எடைகுறைவாய்)

கட்சித் தலைவர்கள் தங்களின் ஆக்கப்பூர்வச் செயல்களால் மக்களின் தேவையை நிறைவேற்றி அவர்களின் வாழ்வை மேம்படுத்த வேண்டுமே தவிர கட்சி, சேவை என்ற பெயரில் அவர்களை வேதனைக்குள்ளாக்குவது சுட்டப்படுகின்றது.

**ஊழல் :**

நியாய விலைக் கடை என்ற பெயரில் மக்களின் நலனைச் சுரண்டிக் கொண்டிருக்கும் சிலரைப் பற்றிக் கீழ்க்காணும் கவிதை குறிப்பிடுகின்றது.

"ரேசன் கடைக்காரருக்கு/குழந்தை பிறந்தது/எடை குறைவாய்" (ந. முத்து, எடை குறைவாய்)

**விலைவாசி :**

நாள்தோறும் பொருட்களின் விலை உயர்ந்து கொண்டேதான் இருக்கிறதே தவிர குறைந்த பாடில்லை. இன்றைய நடைமுறை எதார்த்தத்தை கீழ்க்காணும் கவிதை மிகவும் கடுமையாக வெளிப்படுத்தப்படுகின்றது.

"விலை வாசி குறைந்து விட்டதாம்/சிரித்தது/மலவாய்" (ந. முத்து, எடை குறைவாய்)

**அறிவியல் :**

அறிவியல் வளர்ச்சி நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே உள்ளது. புதிய புதிய கண்டுபிடிப்புகள். புதுமையான ஆய்வுகள் என்று அறிவியல் உலகம் விரிந்து கொண்டே செல்கின்றது. ஆனால் இவையெல்லாம் ஆக்கப்பூர்வமாக இல்லாமல் அழிவைத் தருகின்றன என்பது வேதனைக்குரியது.

"ஜெட்டுக்குள் பறந்தான்/சுட்டு சுட்டு வீழ்த்தினான்
சீச்சீ ... அமைதிக்காம்" (அமுதபாரதி, ஐக்கூ அந்தாதி)

அமைதிக்கான முயற்சி என்று மனிதர்களை கொன்று குவிப்பதால் என்ன பயன். எனவே அறிவியல் வளர்ச்சி ஒரு பக்கம் ஆக்கத்தை ஏற்படுத்தினாலும் மறுபக்கம் அழிவைத் தேடிக் கொடுக்கிறது எனலாம்.

**சுற்றுச்சூழல் :**

உலகம் முழுவதும் இன்றைய மிக முக்கியத் தேவையாக இருப்பது சுற்றுச் சூழல் பாதுகாப்பு. சுற்றுச்சூழல் சீர்கேட்டினால் ஏற்படும் விளைவுகளை நாம் கண்கூடாகக் கண்டு வருகிறோம். இருந்த போதிலும் எதிர்கால வாழ்வை எண்ணிப் பார்க்காமல் செயல்படுவது அழிவிற்கான பாதையை அமைப்பது போல் ஆகின்றது.

"அலறியது காற்று/ஒளிய இடமில்லை
வாகனப்புகை" (சென்னிமலை தண்டபாணி, கொஞ்சம் ஹைக்கூ கொஞ்சும் சென்ரியு)

வாகனங்களின் பெருக்கத்தாலும், எரிபொருட்களின் கலப்படத்தாலும் வாகனங்களிலிருந்து வெளியேறும் புகை காற்றை மாசுபடுத்துகிறது. இதனால் சுகாதாரக் கேடு உண்டாகிறது. மேற்கண்ட கவிதை வரிகள் இனி தூய்மையான காற்றை விலை கொடுத்தும் வாங்க முடியாது என்பது போன்ற எண்ணத்தை ஏற்படுத்துகிறது.

"சோளக் கொல்லை பொம்மை/காணக்கிடைக்கவில்லை
கான்கிரீட் கட்டிடங்கள்" (சென்னிமலை தண்டபாணி, கொஞ்சம் ஹைக்கூ கொஞ்சும் சென்ரியு)

இயற்கையின் மாறுபாட்டால் விவசாயம் தோற்றுப் போனதால் விளை நிலங்களெல்லாம் வீட்டு மனைகளாக மாறி நிற்கின்றன. அடுக்கு மாடிக் கட்டிடங்களைக் கட்டி நிலத்தைப் பாதிப்புக்குள்ளாக்குகின்றனர். மழையின் பற்றாக்குறைஇ வறட்சி, நீர் நிலத்தில் புகமுடியாத படி கட்டிடங்கள் ஆகியவற்றால் அழிவுகள் ஏற்படலாம். இதனைத் தடுக்க முயற்சி மேற்கொள்ளாவிடில் சுற்றுச்சூழல் முற்றிலும் பாதிப்டையும் என்பதில் ஐயமில்லை. இவ்வாறாக நீண்ட நெடிய கவிதை வரிகள் விளக்க வேண்டிய கருத்துக்களை சில வரிகளில் விளங்க வைக்கும் தன்மை கொண்ட ஹைக்கூ கவிதைகளின் மூலம் சமுதாய நிகழ்வுகள் சுட்டிக் காட்டப்பட்டிருப்பதை அறியமுடிகின்றது.

# ஒருவண்டி சென்ரியு - ஓர் ஆய்வு

முனைவர். *சா. வளவன்,*
பச்சையப்பன் கல்லூரி,சென்னை - 30.

தமிழின் முதல் சென்ரியு தொகுப்பு நூலான "ஒரு வண்டி சென்ரியு" வினை சாகித்திய அகாதமி விருதினை இந்த ஆண்டு பெற்றிருக்கிற கவிஞர் ஈரோடு தமிழன்பன் எழுதியுள்ளார். நூற்றுத் தொண்ணூற்று நான்கு சென்ரியுக்களைக் கொண்டது இந்தநூல். "ஹைக்கூ" கவிதைகள் தமிழில் வரவேற்பினைப் பெற்றபின் அதன் இலக்கணம் விளக்கப்பட்டது.

ஐந்து-ஏழு-ஐந்து அசைகள் கொண்டது "ஹைக்கூ" எனக் கூறப்பட்டிருந்தாலும் அதனை மீறித் தமிழில் படைக்கப்பட்டு வருகின்றது. பதினேழ் அசைகளுக்குக் குறைவானவற்றையும் ஓரடிமுதல் நான்கடி வரை வெவ்வேறு வகைகளில் வடிவம் கொண்டவற்றையும் "ஹைக்கூ" என்றே தமிழுலகம் ஏற்றுக் கொண்டுள்ளது. ஹைபுன், "ஹைக்கூ" போன்றிருந்தாலும் அது உரைநடைக்கூறு கொண்டதால் வடிவத்தில் வேறுபட்டு வேறுபெயரைப் பெற்றுள்ளது.

"ஹைக்கூ" வினைத் "துளிப்பா" என்கின்றனர். தலைப்பினைப் பெற்று மூன்றடியாய் அமைந்திருக்கும் ஹைக்கூவின் மூன்றாம்அடி முத்தாய்ப்பாக ஓர் அதிர்வுடனோ மின்தாக்குதலுடனோ சுவையான ஒரு திருப்பத்துடனோ அமைந்திருக்கும்.ஜப்பானிய ஹைக்கூவில் இயற்கையின் தரிசனமும் தத்துவப் பார்வையும் படிமப் பாங்கும் முதன்மை இடம் பெற்றிருக்கின்றன.ஹைகாயட - நொ - ரெங்கா என்னும் இணைப்புக் கவிதைதான் ஹைகூவை உருவாக்கியது. இணைப்புக் கவிதையின்முன் தொடக்கமாக அமையும் கவிதையை "ஹொக்கு" என்றனர். அந்த "ஹொக்கு"வைப் பிரித்துத் தனியாக்கிய போதுஹைகூ எனப்பட்டது. இணைப்புக்கவிதை என்பது, புலமைப் போட்டியை வளர்க்கும் கவிதையாக இருந்தது. தமிழில் இரட்டைப்புலவர் கவிதையைப் பற்றி நாம் அறிவோம். முதல் இரண்டடிகளை ஒருவர் பாட, பின்னிரண்டடியை மற்றவர் பாடி நிறைவு செய்வர்.

ஜப்பானிலும், போட்டிக்கு அழைக்கும் தொடர்களை ஒருவர் படைத்து வெளியிட, பலரும் இணைப்பு அடிகளை எழுதினர். வரவேற்பைப் பெற்றதைத் தேர்ந்து இணைத்துக் கொண்டதால் இணைப்புக்கவிதை எனப்பட்டது. இது முதலிலும் அமையலாம், இறுதியிலும் அமையலாம். சிலேடையாகவும் நகைச்சுவையாகவும், ஆழமுடையதாகவும், படிமமாகவும் அவை இருந்தன. போட்டிக்கு அழைக்கும் தொடர்கள் ஆர்வத்தையும், கவிதை பாடும் ஊக்கத்தினையும் தராமல் போனபோது ஹொக்கு பிரிந்து "ஹைகூ" ஆனதாகக் கொள்ளலாம்.

ஆங்கில மொழியில் "லிமரிக் எட்வர்டுலியர்" என்பார் ஐந்தடிக்கவிதைகளைப் பரப்பினார். இதிலும் இறுதிஅடிதான் இன்றியமையானது. நகை உணர்வு அல்லது திடுக்கிடும் தருபடம் நிறைந்தது. நகையுணர்வு பெரிதும் ஈர்த்ததால் தமிழிலும் வளர்ந்தது. ஈழத்துக்கவிஞர் "மகாகவி" குறும்பா என இதனை அழைத்தார். லிமரிக் ஓசையுடன் ஹைகூவின் பதினேழ் அசைகளைக் கொண்டு புதிய கவிதை வகை தோன்றியது. "லிமரைக்கூ" என்றனர். லிமிரிக் என்பதைக் குறும்பா என்றது பொருத்தமானது. சிறியவடிவமும் குறும்பும் கலந்திருப்பதால் குறும்பா என்றது பொருத்தமே. ஹைகூவினைத் துளிப்பா என முன்னரே குறிக்கப்பெற்றது. லிமரைக்கூ என்பதை "துளிக்குறும்பா" என்பதை விட "பொடிக்குறும்பா" எனலாம் என்பார் தமிழன்பன். பொடிவைத்துக் குறும்பு செய்வது லிமரைக்கூவின் முதற்பணியாக இருந்தது. மேற்கும் கிழக்கும் இணைந்து பெற்ற கவிதை வகை லிமரைக்கூ.

நகைச்சுவையும் அங்கதமும் என்றும் ஈர்க்கவல்லவை என்பதால் சென்ரியு உருவானது. ஹைகூவின் பழைய இறுக்கமான கட்டுப்பாடுகளை உதறிவிட்டு, கற்பனா வர்ணங்களை உதறிவிட்டு, அதிலிருந்து மெய்ம்மையியத்தைக் கொண்டது. லிமரிக்கின் நகைச்சுவைப் போக்கோடு சிறு புதிர்த்தன்மையையும் பொன்மொழி போன்ற தன்மையையும் கொண்டது. அன்றாட வாழ்வைப் படம் பிடிப்பதாக அமைந்தது. ஹைகூ,

லிமரைக்கூ, சென்ரியு ஆகிய மூன்றிலும் கவிதைகளைப் புனைந்து மூன்று தனித்தனித் தொகுப்புக்களாகக் கொணர்ந்துள்ளார் தமிழன்பன். "சூரியப் பிறைகள்" எனும் தொகுதி ஹைகூவையும் சென்னிமலைக் கியோப்பாத்தாக்கள் எனும் தொகுதி லிமரைக்கூவையும் ஒருவண்டி சென்ரியு எனும் தொகுதி சென்ரியுவையும் கொண்டவை.சென்ரியு கவிதைகளிலும் வளர்ச்சிப் போக்கே உள்ளது. ஜப்பானில் சென்ரியுக் கவிதைகளுக்கென்றே இதழ்கள் நடத்தப்படுகின்றன. மனநலத்திற்கான விளையாட்டுப் போட்டிக்குரியதாக சென்ரியு விளங்குவதை இணையதளம் காட்டுகிறது. சென்ரியு கேலிச்சித்திரப் பகுதிகளையும் இணையத்தளத்தில் காணமுடிகிறது என்பார் தமிழன்பன். சென்ரியு கவிதைகளில் காணும் மூன்று முக்கியமான மாறுதல்களை ஆராய்ந்துள்ளார் அவர்.

1. தங்கள் விருப்பப்படி தனிநிலைச் சென்ரியு எழுதுவோர் பலராக உள்ளமை.

2. "சென்ரியு" என்பது மனித வாழ்வை அங்கதப்படுத்துவதுதான் என்னும் கோட்பாட்டு அழுத்தத்தையும் கொஞ்சம் அப்புறப்படுத்திவிட்டது இக்காலச் சென்ரியு. இப்போது மானுடப் புலனுணர்வையே மிகுதியும் சார்ந்திருக்கிறது. இயற்கை காட்சிகளில் கூட மானுடச் சிந்தனைகளை முதன்மைப் படுத்துவதாகவும் சில வேளைகளில் சென்ரியு அமைந்துவிடுகின்றது.

3. ஹைகூ புனைதலில் அதிகரித்திருப்பதுபோல இன்று சென்ரியு படைப்பாளர்களிலும் பெண்களின் எண்ணிக்கை பெருகியிருக்கிறது. (ஒரு வண்டி சென்ரியு - சில குறிப்புகள். பக்கம் 13)

என்னும் ஆய்வு குறிப்பிடத்தக்கதாகும். இவற்றுள், மானுடப் புலன் உணர்வையே மிகுதியும் சார்ந்திருப்பது சென்ரியு என்பதையும் இயற்கைக் காட்சிகளில் கூட மானுடச் சிந்தனைகளை முதன்மைப்படுத்துவது சென்ரியு என்பதையும் நன்கு ஆராய்ந்து உணர்ந்திருந்தமையால் தமிழன்பன் தம்கவிதைகளையும் அவ்வாறே அமைத்துள்ளார்.

சோளக்கதிர் முற்றியிருக்கின்ற நிலையைப் பாடவந்த கவிஞர் மானுடச் சிந்தனையை முதன்மைப் படுத்தியிப்பதைக் காணலாம்.

"பழுபேறிய பற்கள்/சோளக்கதிர் /கண்களால் மெல்லும் பாட்டி"

பாட்டியின் பற்களும் சோளமும் பழுப்பேறியிருக்கின்றன. கண்களால் மெல்லுவதை எவராலும் தட்டிப் பறிக்க முடியாது. கண்களால் எடுத்துக் கொண்டதை கண்களால் பார்த்தவர் எவருமிலர். உரியவன் என்று சொல்லிக்கொள்பவனாலும் தடுக்க முடியாது. மானுடத்தின் ஏக்கம் கண்களில் தெறித்தும் கண்டு கொள்ளாத சமூகம் போன்று இயற்கை இல்லை. வாயால் மெல்லுவதற்கும் கண்களால் மெல்லுவதற்கும் வாய் மலர்ந்து வரவேற்பு கூறுவது இயற்கை. பற்களும் கதிரும் அங்கதத்தை ஏற்படுத்த கண்களால் மெல்லுவதைச் சுட்டி அதிர்வை இக்கவிதையில் ஏற்படுத்தியுள்ளார் தமிழன்பன்.

பழஞ்சமூக அமைப்பில் உருவான சிறுவர் கதைகளை இன்றைய அமைப்பிற்கு ஏற்றதாக மாற்றிச் சட்டென்று முடித்துவிடுவது தமிழன்பனின் போக்கு எனலாம். தம் திறமையறியாதவர்களாக மக்கள் இருப்பதைக் காட்டி, மாறவேண்டிய தேவையைக் காட்டி, விழிப்புணர்வு பெற்றோரையும் அறிய வைக்கின்றார்.

வரி செலுத்தி வாழும் /ஒரே ஒரு விலங்கு /மனிதன்/என்று கூறி விலங்குத்தன்மையிலிருந்து விடுபட, தன்திறம் அறியவேண்டும். ஆனால் அறியாமல் இருக்கின்றனர் என்கின்றார்.

"கால்வசம் உதைகள்/இருந்தும் சுமையோடு /கழுதை"/வரிசெலுத்தி, பொதி சுமக்கும் நிலையிலிருந்து மாறவேண்டிய தேவையை அறிவிக்கின்றார்.

"கதையிலிருந்து வெளியே வந்த /காக்கை, குழந்தையிடம் கேட்டது/இன்னும் அதே கதையா?"

மாறவேண்டும் என்று உணர்த்தும் மாறாமல் இருப்போரைச் சாடுகிறார்.

"கழுதை /கற்பூரவாசம் தெரிந்தும் /கழுதை /என இருக்கலாகாது என்கிறார். எதற்கெடுத்தாலும் முரட்டுத்தனத்தைக் காட்டினால் அவருக்குத்தான் என்பதையும் சுட்டிக்காட்டுகிறார்.

"சண்டைக்கோழி/வென்றாலும் தோற்றாலும்/பிரியாணி"/எனவே விழிப்புணர்வு பெறவேண்டும். இல்லையென்றால் ஆபத்து விரைவாக வந்துவிடும் என்கிறார்.

பல்லிக்கும் பூச்சிக்கும் /இடைவெளி சில நொடிகள்/சட்டென்று தின்றது இரவு"/அந்த நொடிகளை உடனடியாகத் தின்ற இரவால் ஆபத்து விரைந்துவிட்டது. விழிப்புணர்வு பெற்றுவிட்டால் முதலில் மறுப்பைக் காட்டலாம்.

"கதை வேண்டாம் /கதவைத் திறந்துவிடு/குழந்தை அடம்"/குழந்தையின் அடம்போல் தொடங்கி சமூக மாற்றத்திற்கு உதவலாம்.

அடடே !/இந்தப்பழம் இனிக்கும்/ஏணியுடன் அதே நரி/ஏமாறிய நரி, விழிப்புணர்வு பெற்றவுடன் வெற்றிபெறுகிறது.

வாழ்க்கையின் பல்வேறு சூழல்களையும் கவிதைக்கண்ணும் மொழியும் கொண்டு காண்கிற கவிதைப்பார்வை தமிழன்பனுடையது./கல்லூரியிலிருந்து /மகன் கடிதம்/கடன்களால் படிக்கும் அப்பா

பெற்ற கடன், மகனை வளர்க்கும் கடன், மகனுக்காக பட்ட கடன், குடும்பக்கடன், சமூகக்கடன் என்று பல கடன்களால் வாழ்கையைப் படிக்கும் அப்பாவைக் காட்டுகிறார்.

தம் கவிதைகளில் வினவியும் விடையளித்தும் தத்துவத்தேடலை ஓயாது செய்து கொண்டிருப்பவர் தமிழன்பன்.

எறியப்பட்ட /கல் மனத்தில் கலவரம்/எது காயப்படுமோ?/என்றும்

எடுத்துக்கொண்ட விஷயம் தவிர/வேறு தெரியாதவர் /எதற்குப் பேச வரவேண்டும் !/என்றும்

நரிகள் தேசம்/ஆடுகள் அமைச்சர்களாகித்தான்/என்ன பயன்?/என்றும் இத்தொகுப்பினுள் பல வினாக்களை எழுப்பித் தேடலில் முத்துக்குளிக்க வைக்கின்றார்.

புத்தர் உதட்டில்/பூச்சி பக்கத்திலேயே /பல்லியும் தருணமும்

சந்தேகம் /மருந்துக்கும் மருத்துவர்க்கும் தான்/மரணத்திற்கு இல்லை/

பணம் /எதையும் செய்யும் தெரிந்தவர்கள்/பணம் செய்தார்கள்/என்றும் விடை பல அளித்துத் தேடலைத் தொடர வைக்கின்றார். மொழியின் இயல்பு நவிற்சிக் களங்களையெல்லாம் அணிமயமான அதிசய நவிற்சிக்களங்களாக மாற்றுகின்ற பண்பும் தமிழன்பனின் கவிதைகளில் காணக்கிடக்கின்றன.

எத்தனை வார்த்தைகள் இருந்தென்ன/எழுத முடியவில்லை ஒரு கவிதை/அகராதி

குழந்தையோடு /யாரும் பேசவில்லை/பேசும் பொம்மை/என்றும் உள்ள கவிதைகள் சான்று. சமூக அக்கறையோடு தமிழன்பன் எழுதும் வகிதைகளில் அங்கதம் நகையை விளைத்தாலும் அவர் சிறுமை கண்டு பொங்குகின்ற உணர்ச்சிப் பாங்கினைப் படிப்பவர் உணரவே செய்வர்.

தேர்ந்தெடுக்கத் தெரியாத /ஜனங்களின் சாதனை /ஜனநாயகம்

சட்டம் ஒழுங்கைக்/காப்பாற்ற முடியவில்லை/சட்ட சபையில்

அதிகாரி வீட்டுப் பாத்திரங்கள்/அழுத்தித் தேய்த்தும் போகவில்லை/அழுக்கு

குழந்தை முகம் /கருக்கலைப்புக்கு வந்த /பெண்/என்பன சமூக அக்றையோடு பொங்குகின்றவர் தமிழன்பன் என்பதற்குச் சில சான்றுகள். ஒரு வண்டி சென்ரியு கவிதைகளில் ஆய்வு நிகழத்துவோர் மேலும் பலகளங்களை ஆராய இயலும்.

தொட்டிமீன்
குளத்தில் விட்டதும் நீந்தியது
தொட்டி அளவு

என்று தமிழன்பனே குறிப்பிட்டிருப்பது போன்று இக்கட்டுரையும் குளம் போன்ற பரப்பு இருந்தும் தொட்டி அளவே நீந்தத் தெரிந்த ஒன்றாக முடிந்திருக்கிறது.

# “சென்ரியு கவிதைகளில் நடப்பு அரசியல்”

முனைவர். *கா. வாசுதேவன்,* முதுநிலை தமிழ் விரிவுரையாளர்,
பெரியார் ஈ.வே.ரா. கல்லூரி, (த)திருச்சிராப்பள்ளி.

காலங்களுக்கேற்ப இலக்கியங்கள் மாறுதல்களையும் புதுமைகளையும் பெற்று வளர்ந்து வருகின்றன. உலக இலக்கிய வரலாறுகளும் இந்த உண்மையை உணர்த்துகின்றன. மாற்றமும் புதுமையும் பெற்று வளர்ந்து வரும் இலக்கிய வகைகளில் கவிதை முதலிடம் வகிக்கின்றது. உருவம், உள்ளடக்கம் என்ற நிலைகளில் செறிவான வடிவம் பெற்ற கவிதை இலக்கியம் தோன்றிய காலம் முதல் இன்று வரை மாபெரும் மாற்றங்களைப் பெற்றுள்ளது. மரபான பாடு பொருள்களையும், யாப்பு வரையறைகளையும் ஓசைக்கட்டுப்பாடுகளையும் கொண்டு இயங்கி வந்த கவிதை இலக்கியம் இருபதாம் நூற்றாண்டில் நெகிழ்வடைந்தது. இலக்கணத்திலிருந்து விடுபட்டுப் புதுக்கவிதை என்ற பெயரில் பரந்த பாடுபொருளை புலப்படுத்தும் ஆற்றல் பெற்றது. அதன் பின்னர் புதுக்கவிதை என்ற வடிவத்தில் இருந்து மாறுபட்ட “ஹைக்கூ” “சென்ரியு” “குக்கூ” போன்ற கவிதை வடிவங்களில் கவிஞர்கள் தங்களுடைய எண்ணங்களைப் பதிவு செய்ய முற்பட்ட நிலையில் தமிழ்க்கவிதை இலக்கியத்தின் வடிவமும், பாடுபொருளும் மேலும் விரிவடைந்தது.

## 1. நோக்கு

புதுக்கவிதை தொகுப்புகள் வெளிவரும் அளவிற்கு “ஹைக்கூ” “சென்ரியு” “குக்கூ” போன்ற கவிதைத் தொகுப்புகள் வெளிவரவில்லை என்றாலும் சோதனை நிலையில் சில வெளிவந்து வாசர்களிடையே தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன. அவ்வகையில் ஈரோடு தமிழன்பனின் “ஒரு வண்டி சென்ரியு” என்னும் தொகுப்பு தனியிடத்தைப் பெறுகிறது. அத்தொகுப்பினை அடிப்படையாகக் கொண்ட இக்கட்டுரை சென்ரியு கவிதைகளின் வழி ஈரோடு தமிழன்பன் பதிவு செய்துள்ள நடப்பு அரசியலின் போக்கையும். தன்மையையும் அடையாளப்படுத்துவதோடு கவிதை இலக்கியத்தின் தற்காலப் போக்கையும் எடுத்துக்காட்ட முனைகிறது.

## 2. ஹைக்கூ - சென்ரியு - ஒரு பார்வை.

சென்ரியு “மதுக்கடைகளிலும் தேனீர் கடைகளிலும் ஜப்பானில் வளர்ந்த கவிதை” என்கிறார் ஈரோடு தமிழன்பன். ஹைக்கூவின் மற்றொரு வகையாகவும் சென்ரியுவை கருதுகின்றனர். ஜார்ஜ் ஸ்வீட் என்ற அறிஞர்.

**இயற்கை ஹைகூ (ஹைகூ )/மானுட ஹைகூ (சென்ரியு)**

இயற்கையும் மானுடமும் இணைந்த ஹைகூ (ஒட்டு மாங்கனி ஹைகூ)

என ஆங்கில மொழி ஹைகூ மூன்று பொருண்மை வகைப்பாடுகளைக் கொண்டவை என்கிறார். இவருடைய கருத்தின் படி சென்ரியு என்பதை மிகுதியும் மானுடத்தை உள்ளடக்கிய கவிதை வடிவமாகக் கருத இடமுண்டு. எலிசபத் ஜாக்குவாஸ் என்பவர்.

ஆழமற்றது/வேடிக்கையானது/விடுகதை போன்றது/நகைச்சுவையானது/பொன்மொழி போன்றது.
என சென்ரியு கவிதைக்குரிய தன்மையைப் பட்டியலிடுகிறார். மேரி கேசல் என்பவரின் விளக்கம் ஹைகூவில் இருந்து சென்ரியுவைத் தெளிவாக வேறுபடுத்திக் காட்டுகிறது.

- ஹைகூவின் அங்கத வடிவம் சென்ரியு
- ஹைகூ இயற்கை உலகில் பார்வை செலுத்துகிறது.
- சென்ரியு மக்கள், பொருள், சம்பவங்கள் ஆகியவற்றின் மீது பார்வையை குவிப்பது.

மேற்சுட்டிய விளக்கங்களின் அடிப்படையில் மானுடத்தை முதன்மையாகக் கொண்டு நடைபெறும் நிகழ்வுகளை அங்கதச் சுவையோடும் நகைச்சுவை உணர்வோடும் செறிவான கவிதை வடிவத்தில் பதிவு செய்து சிந்திக்க வைக்கும் நோக்குடையன என சென்ரியுவைக் கருதலாம். சென்ரியுவின் உயிர்ப்புத் தன்மையான அங்கத்தை நடப்பு அரசியல் நிகழ்வுகளை வெளிப்படுத்த ஈரோடு தமிழன்பன் பயன்படுத்தியிருக்கும் பாங்கு குறிப்பிடத்தக்கது.

## 3. சென்ரியு கவிதைகளில் நடப்பு அரசியல்

### 3.1 தகுதியும் தனிக்கட்சியும்

கல்வித்தகுதி, எழுத்துத்தேர்வு, நேர்முகத் தேர்வு என்ற நிலைகளையெல்லாம் கடந்த பிறகே ஒருவனுக்கு எந்தவொரு பணியும் நனவாகிறது. ஆனால் இத்தகைய எந்த சோதனைகளும் தடங்களும் அரசியல்வாதியாக உருமாறும் ஒருவருக்குத் தேவையில்லை. ஆனால் அவர்களிடம் தகுதி வாய்ந்த மனிதர்கள் தலை குனிந்து நிற்க வேண்டிய அவலம் தொடர்கிறது. பணிக்கேற்ற தகுதி வரையறுக்கப்படும் இன்றைய சூழலில் அரசியல்வாதியாவதற்கு என்ன தகுதி வேண்டும் என்பதை,

"அது வராவிட்டால் இது/இது வராவிட்டால் அது/எதுவும் வராவிட்டால் அரசியல்"

என்று சென்ரியுவாகப் பதிவு செய்கின்றார். எந்தத் தகுதியும் இல்லாத ஒருவனுக்கு அரசியல்வாதி என்ற அடையாளம் கிடைத்ததும் தனிக்கட்சி தொடங்கவேண்டும் என்ற ஆர்வம். கட்சியும் தொடங்கப்படுகிறது. குழப்பம் அரசியல்வாதிக்கல்ல மக்களுக்கு, மக்களின் குழப்பத்தை,

"மழைநாள் கவலை /காளான்களை எண்ணுவதா?/கட்சிகளை எண்ணுவதா?

என்று சென்ரியுவாகப் பதிவு செய்து வினா எழுப்புகிறார். கவிதையில் "நேற்று பெய்த மழையில் இன்று முளைத்த காளான்" என்ற பழமொழியின் கருத்துப் பொதிவு அடங்கியிருப்பது சுட்டத்தக்கது.

### 3.2 கட்சிகளின் நிலை

தனிக்கட்சி தொடங்கப்பட்டதும் தேர்தல் அறிவிப்பு. தன்னுடைய படை பலத்தையும் பண பலத்தையும் எதிர்க் கட்சியினருக்குக் காட்ட வேண்டும் என்ற முனைப்போடு வேட்பு மனுத் தாக்கல் செய்வதற்கு தொண்டர்கள் படைசூழ ஊர்வலம். தேர்தல் முடிவு வெளியிடப்படுகிறது. இந் நிகழ்வை

" ஆயிரம் பேரோடு /வேட்பு மனுத் தாக்கல்/ஐம்பது வாக்குகள்"

என அங்கதச் சுவையோடு கவிதையாக்கிக் காட்டுவது நிகழ்கால அரசியலை நினைவுபடுத்தியது.

### 3.3 கட்சியும் தலைவர் பதவியும்

தனக்கு கிடைத்த ஐம்பது வாக்குகளுக்காவது கட்சியின் தலைவர் எனக் கூறிக்கொள்ள வேண்டாமா? தலைவர் பதவிக்கும் ஆபத்து வந்து விட்டால் என்ன செய்வது? அதற்கு,

"கவிழ்ப்புப் பயமில்லாத/தலைவர் பதவி/உறுப்பினர் இல்லாத கட்சி"

என்ற கவிதையின் மூலம் நகைச்சுவையாக ஆனால் சிந்தனையைத் தூண்டும் பதிலைத் தருகின்றார் கவிஞர் தமிழன்பன். தலைவர் இறந்து போகிறார், தந்தி வருகின்றது.

"இறந்த தலைவர் கையில்/வந்து விழுந்தது தந்தி/கட்சி நிலைமை கவலைக்கிடம்"

எந்த நோக்கமும் இன்றி தொடங்கப்படும் கட்சிகள் தொடங்கப்பட்ட வேகத்திலேயே காணாமல் போகும் பரிதாப நிலையை கவிதை நினைவுபடுத்துகிறது.

### 3.4 தொண்டர்கள்

கட்சி மாநாடு நடைபெறுகிறது. மாநாட்டில் தொண்டர்கள் பலத்த எதிர்பார்ப்புடன் காத்திருக்கின்றனர். மாநாட்டுத் திடலின் ஒரு பகுதியில் உறுப்பினர்கள் திடீர் புறக்கணிப்பு தலைவர்களுக்கிடையே பதட்டம். இதற்கான காரணத்தை எள்ளலோடு வெளிப்படுத்தும் கவிஞர்

" கட்சி மாநாடு /உறுப்பினர்கள் புறக்கணிப்பு/உணவு ஏற்பாடு சரியில்லையாம்"

என்கிறார். கொள்கை பிடிப்போ, இலட்சிய நோக்கோ இன்றி வயிற்றுப் பிழைப்புக்காகக் கூடும் தொண்டர்களை கேலி செய்யும் அதே நேரத்தில் கூட்டத்தைக் காட்ட வேண்டும் என்ற போட்டியில் அரசியல் தலைவர்கள் மேற்கொள்ளும் ஆள்பிடிக்கும் நடப்பியல் அரசியல் அவலத்தையும் செறிவாக வெளிப்படுத்துகிறது கவிதை.கட்சியில் உறுப்பினர் ஆவதற்கு அல்லது தன்னை கட்சித் தலைவரின் அடிப்பொடி எனப் பெருமை பேசுவதற்கு அரசியல் அறிவோ அனுபவமோ தேவையில்லை என்கிறாதர் தமிழன்பன். மாறாக

" கட்சி மாறிய அனுபவம்/இல்லாதவர்க்குக்/கட்சியில் இடமில்லை"

என்ற தகுதி போதும் என்கிறார். கட்சியையும் காட்சியையும் அடிக்கடி மாற்றிக் கொள்ளும் அரசியல்வாதிகளை அங்கதமாகச் சாடுகிறார்.

### 3.5. அரசியல் அறிக்கை

அமைச்சராகப் பதவியில் இருக்கும் போது மக்கள் நலனைக் கருத்தில் கொள்ளாமல் தன் வாழ்க்கையை மட்டுமே வசப்படுத்திக்கொண்டு அளவுக்கு அதிகமாகச் சொத்து சேர்த்துக் கொண்ட அமைச்சர் ஒருவர் பதவி பறிபோனதும், பரிதவிப்போடு

"பதவி இழந்த அமைச்சர்/அறிக்கை/இனி நாட்டுக்கு உழைப்பேன்"

என முழக்கமிடுகிறார். தங்களுடைய அரசியல் பிழைப்பைத் தொடர இது போன்ற அறிக்கை அரசியல் நடத்தும் பிற்போக்குத் தனத்தையும் மக்களைத் தொடர்ந்து ஏமாற்றும் அநாகரிகப் போக்கையும் இன்றைய அரசியலில் காணலாம்.

### 3.6. சட்டசபை நிகழ்வுகள்

தங்களுடைய பிரச்சனைகளை சட்டசபையில் எடுத்துப்பேசி தீர்வு காண்பார் என்ற நம்பிக்கையோடு மக்களால் தேர்வு செய்சப்படும் சட்ட மன்ற உறுப்பினர்களின் செயல்பாடுகளை விரிவாக விளக்க வேண்டிய தேவையில்லை. தலைவருக்குப் பயந்து ஏதாவது பேசினால் உறுப்பினர் பதவியும் கூட பறிபோய்விடுமோ என்ற அச்சத்தில் அச்சடித்த பதுமைகளாய் அரசியல் பணியாற்றும் விநோதம் இன்று அதிகம். சட்டத்தைக் காப்பாற்ற வேண்டிய, மதிக்க வேண்டிய உறுப்பினர்கள் தங்களுடைய விசுவாசத்தை தலைமைக்குத் தெரிவிக்கும் ஆர்வத்தில் குண்டர்களாக மாறிவிடும் அவலமும் அரங்கேறுகிறது. இத்தகு அரசியல் சீர் கேடுகளை,

"கையில் அரிவாளோடு /உறுப்பினர் சபையில் /வெட்டுப் பிரேரணை"/"சட்டம் ஒழுங்கை /காப்பாற்ற முடியவில்லை/சட்டசபையில்"?என்ற சென்ரியு கவிதைகளின் வாயிலாகப் பதிவு செய்யும் கவிஞர் இன்றைய சபை நடவடிக்கைகளின் போக்கினை குறிப்பாக உணர்த்துகிறார்.

### 3.7. அரசியல் குறுக்கீடு

அரசியல் மட்டுமா அழுக்கேறியிருக்கிறது இல்லை. அரசியலால் அனைத்துத் துறைகளும் அழுக்காகிப் போயிருக்கிறது. விளையாட்டுத்துறையும் விதிவிலக்கு அல்ல. இந்திய அணியில் இடம் பிடிக்க என்ன தகுதி வேண்டும்? அரசியல்வாதியின் வாரிசாக இருக்க வேண்டும் அல்லது அரசியல் வாதியின் ஆசீர்வாதமாவது கிடைக்க வேண்டும் என்ற நிதர்சன உண்மையை,

"தொகுதி கிடைக்காத/கட்சிக்காரன் மகனுக்கு இடம்/இந்திய கிரிக்கெட் அணி"

என்ற கவிதையில் பதிவு செய்து காட்டுகிறார்.

### 3.8 கடவுளும் அரசியலும்

சனநாயகத்தை கேலிக்கூத்தாக்கும் அரசியல்வாதிகளின் உண்மை முகங்களை ஆதங்கத்தோடு அங்கதச் சுவை ததும்ப வெளிப்படுத்தும் கவிஞர் இறைவனையும் அரசியலோடு இணைத்துப்பார்க்கிறார். நாள்தோறும் நிகழும் அரசியல் ஆர்ப்பாட்டங்களையும், குழப்பங்களையும் கண்டு மனம் வெதும்பும் இறைவன்,

"பக்தரிடம்
கடவுள் கேட்ட வரம்
அரசியலுக்கு இழுக்காதீர்"

எனக் கேட்பதாக கற்பனை செய்கிறார். கற்பனையிலும் கருத்துப் பொதிவு உண்டு. இறைவனாலேயே இன்றைய அரசியல் போக்கையும் அரசியல்வாதிகளின் செயல்பாட்டையும் பொறுத்துக்கொள்ள முடியாத நிலையில் அப்பாவி மனிதர்களின் நிலை என்ன? என்ற வினாவை கவிதை எழுப்பி சிந்திக்க வைக்கிறது.

### 4. தொகுப்புரை

ஈரோடு தமிழன்பன் சமூக நோக்குடைய கவிஞர் எனபதை "சென்ரியு" கவிதைத் தொகுப்பின் மூலம் மீண்டும் மெய்ப்பித்திருக்கின்றார். கவிதைகள் அளவில் சிறியதாக இருப்பினும் சிந்தனையைத் தூண்டும் போக்கில் அமைந்துள்ளன. அரசியலை மையமிட்டுக் கவிதைகள் பலரால் படைக்கப்பட்டிருப்பினும் "சென்ரியு" கவிதை வடிவத்தில் நிகழ்கால அரசியலை நறுக்குத் தெறித்தாற் போல அங்கதச் சுவையோடு பதிவு செய்து கவிதை இலக்கியத்தில் புதிய போக்கையும் தாக்கத்தையும் ஏற்படுத்தியிருக்கிறார் என உறுதியாகக் கூறலாம்.

# தமிழ்க் கவிதைகளில் பெரியாரியம் - இதழ்கள் வழித் தேடல்

முனைவர் *சி.அயோத்தி*, தமிழ் முதுநிலை விரிவுரையாளர்,
அரசு கலைக் கல்லூரி, உடுமலைப் பேட்டை

## முகவுரை

தந்தை பெரியார் அவர்கள் தமிழ் மக்களின் தளர்ந்த நெஞ்சில் தன்மானப் பெருக்கெடுக்கும் உணர்வின் ஊற்றாவார். உயர் சிந்தனையின் முழுவடிமாகத் திகழ்ந்தவர். தமிழ் மண்ணின் செழிப்பிற்குத் திரண்டிருந்த அறிவின் தேக்கமாவார். விந்தைமிகு பேச்சாளர். தமிழர் வாழ்வின் விடியலினை அறிவித்த வெற்றிச்சேவல். தமிழ்த்திரு நாடதனைச் சூழ்ந்திருந்த ஆரிய இருட்காட்டைக் குலைத்ததொரு ஒளிப்பிழம்பாக ஒளிர்ந்தவர். இத்தனைச் சிறப்புத் தன்மைகள் வாய்ந்த தந்தை பெரியாரின் "மண்டைச் சுரப்பை உலகு தொழும்" என்று பாடினார் புரட்சிக் கவிஞர். பெரியார் எடுத்துரைத்த கருத்துக்கள் யாவும் தமிழின மறுமலர்ச்சிக்கு உரிய வாழ்வியல் ஆதாரங்களாகத் திகழ்கின்றன. அவ் ஆதாரங்கள் ஒவ்வொன்றும் தமிழ்க் கவிதைகளில் எந்த அளவுக்கு மீட்டுருவாக்கம் பெற்றுள்ளன என்பதனைக் காண்பது தற்காலத் தமிழ் இலக்கிய ஆராய்ச்சியின் புதிய போக்கினை உறுதிப்படுத்தும். அவ்வகையில் திங்கள் தோறும் வெளிவருகின்ற தமிழ் இதழ்களில் இடம் பெற்றுள்ள கவிதைகளின் பாடுபொருள்களில் பெரியாரியக் கருத்துக்கள் பொதிந்துள்ள பான்மையினை அறிமுகம் செய்கின்றது இக்கட்டுரை.

## பெரியாரியம்

தந்தை பெரியார் தொடாத துறைகளில்லை. தொட்டால் துலங்காத கருத்துக்கள் இல்லை. தமிழின நலச் சிந்தனையாளனுக்கு இருக்க வேண்டிய தொலைநோக்குப் பார்வை தந்தை பெரியாருக்கு இயல்பாகவே அமைந்திருந்தது. இரண்டாயிரம் ஆண்டு காலப் பழமையுடைய தமிழினம் இன்றைய நிலையில் பின்தங்கிப் போயிருந்ததைக் கண்டு முன்னேற்றத் துடித்த மனிதப் பற்று தான் தந்தை பெரியாரின் உயர் சிந்தனைக்கு ஊற்றுக் கண்களாகத் திகழ்ந்தது. பன்முகத் தன்மைகள் குடி கொண்டிருந்த பெரியாரைப் பலரும் பலவிதமாகப் பார்த்தனர். கடவுள் மறுப்பாளராக, பார்ப்பன எதிர்ப்பாளராக, மூடநம்பிக்கை ஒழிப்பாளராக, பகுத்தறிவாளராக, முரட்டுச் சிந்தனையாளராக, கொண்ட கொள்கையில் உறுதியுடையவராக இப்படி ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமான கண்ணோட்டத்தோடு பார்த்தனர். அனைவருக்கும் பெரியார் சொல்லக் கூடிய பதில் மிகத் தெளிவாகவும் சுருக்கமாகவும் அமைந்திருந்தது. "என் அபிப்பிராயத்தை வெளியிட எனக்கு உரிமை உண்டு. ஆனால் என் அபிப்பிராயத்தை மறுக்க உங்களுக்கும் உரிமையுண்டு" (தந்தை பெரியார், பகுத்தறிவு இதழ் 1935). தமிழ்ச் சமூக மாற்றத்திற்கான நிகழ்காலத் தேவையான மனித நேயத்தை மையமாகக் கொண்டு எழுந்ததுதான் பெரியாரியம். உயர்வு தாழ்வு பாராட்டக்கூடிய இவ்வுலகில் வருணாசிரமம் என்னும் கோட்பாட்டினைத் தகர்க்கப் பிரச்சாரப் பீரங்கியாய்ப் புறப்பட்டதுதான் பெரியாரியம். ஆதிக்க உணர்வு நிலைபெற்றிருந்த தமிழகத்தில் அதன் ஆணிவேரினையே அசைத்து ஆட்டங்காணச் செய்ததுதான் பெரியாரியம். இத்தகைய கருத்துவீச்சுக்களினால் கவர்ந்திழுக்கப்பட்ட இனநல உணர்வுடையோரின் படைப்புக்களை நேரிடையாக எடுத்தாளாமல் தற்காலத்திய இதழ்களில் பரவலாக வெளிவருகின்ற கவிதைகள் மட்டுமே ஆய்வுப்பொருளாக எடுத்தாளப்பட்டுள்ளன. அக்கவிதைகளுள் இழையோடுகின்ற பெரியாரிய உணர்வுகளை ஒருங்கு திரட்டும் முயற்சி ஈண்டு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## காவியுடைக் கபட வேடதாரிகள்

தமிழர்களின் சமய வரலாற்றினைப் பார்த்தோமானால் ஆரம்பத்தில் நிலவழிப்பட்ட தெய்வங்களை வழிபட்டு வந்துள்ளனர். அவ்வழிபாடு காலஞ் செல்லச் செல்ல பல்வகை உருவ வழிபாடுகளாக வளர்ச்சி பெற்றன. எப்பொருளைக் கண்டு அச்சப்பட்டனரோ? எவருக்கு மரியாதையும் மதிப்பும் செலுத்த விரும்பினரோ? அவ்விருப்பங்களும் அச்சங்களும் பின்னாளில் தெய்வ வழிபாட்டினை நிலைகொள்ளச் செய்தன. ஆனால் அவ்வழிபாட்டின் உட்பொருளை மூடி மறைத்துப் புராணப் புனுகு பூசி அறிவினை மழுங்கச் செய்து உணர்வுக்கு அடிமைப்பட வைத்த நிகழ்வுகள் மெதுவாகவும் அதே நேரம் ஆழமாகவும் வேரூன்றியுள்ளன. அதன் விளைவாக மடாதிபதிகளும் சாமியார்களும் ஆச்சாரியார்களும் தெய்வ நிலைக்கு உயர்த்தப்பட்டனர். உள்ளொன்று

வைத்துப் புறமொன்று பேசும் அவ்வேடதாரிகளின் பொய் முகங்கள் இற்றைக் காலங்களில் நீதிமன்றத்திற்கும் சிறைச்சாலைகளுக்கும் சென்று மீண்டு வந்துள்ளன. மக்களின் பக்தியுணர்வினைப் பயன்படுத்தி, ஒழுக்கமற்ற, நேர்மையற்ற சுயநலவாதிகளிடமும் தவறான பாதைக்கு அழைத்துச் செல்லும் பிற்போக்குவாதிகளிடமும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் கடவுள் மறுப்புக் கொள்கையைப் பெரியார் அழுத்தமாக வெளியிட்டார். எச்சரிக்கையுடனும் விழிப்புணர்வுடனும் செயல்படத் தவறிய பெண்ணினம் இன்று இக்கயவர்களால் பாலியல் வன்கொடுமைக்கு ஆளாகியுள்ள நிகழ்வுகளை, பாதிக்கப்பட்ட அப்பெண்களே நேரில் சொன்னபிறகுதான் மற்றையோரும் விழிப்படைகின்றனர். ஈரோட்டுக் கண்ணாடி வழியாகத் துல்லியமாகப் பார்க்க மறுத்த பெண்ணினத்துக்கு நிகழ்ந்த வன்கொடுமையினையும் அதற்குக் காரணமாக அமைகின்ற "சனாதனக் கொள்கைகளின் இருப்பிடமாகிய" பீடத்தினையும் நடப்பியல் பாங்கில் இராசபாளையத்தைச் சேர்ந்த பூ. சிவக்குமார் என்னும் கவிஞர் உள்ளது உள்ளவாறு தோலுரித்துக் காட்டியுள்ளார்.

"தாழிட்ட அறைகளுக்குள்,
தரிசு நிலங்கள்
ஆசீர்வதிக்கப்படும்
அணுகவும்
காம கோடி பீடம்" (உண்மை, சனவரி 1-15, 2005,ப.42)

இக்கவிதை உணர்த்தும் பொருள், ஏழ்மை நிலையில் உழலும் ஆதரவற்ற கைம்பெண்கள் பலரின் தொலைந்து போன வாழ்க்கையினை அப்பட்டமாகச் சித்திரிக்கின்றது. போலிச் சாமியார்களின் முற்பகல் காம லீலைகள் பலவும் பிற்பகலில் திடுமென வெளிப்பட்ட தன்மையினையும் அதே கவிஞர்,

"அதிகாலையில்
உஷாவுக்கு சொன்னார்
அருளுரை...
நள்ளிரவில் காலம்
எழுதியது அழிவுரை" (மேலது)

என்று கவிதைப் படுத்தியுள்ளார். இச்சாமியார்களின் காமவலையில் சில பெண்கள் எளிதில் சிக்கிவிடுவதற்கு உரிய மனவியல் அழுத்தங்களைக் காரணகாரிய முறையில் அனைத்திந்திய சனநாயக மாதர் சங்க மாநிலச் செயலாளர் தோழர் உ. வாசுகி அவர்கள், செம்மலர் இதழுக்கு அளித்துள்ள நேர்காணலில் தெளிவுபடச் சொல்லியுள்ளார்.

"இதற்கு அடிப்படைக் காரணம் பெண்களுக்கான அங்கீகார மறுப்புதான். பொதுவாழ்க்கைக்குப் பெண்கள் எளிதில் வந்துவிட முடிவதில்லை. குடும்ப உறுப்பினர்களாலேயே அடக்கப்படுகின்ற ஒரு பெண் தனது மனக்குறையைச் சொல்வதற்கு யாருமில்லாத நிலையில் இப்படிப்பட்ட சாமியார்களிடம் நம்பிக்கையோடு தங்கள் கவலைகளைச் சொல்ல, சில சாமியார்கள் இவர்களின் பரிதாபச் சூழ்நிலையை வகையாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். காலம் காலமாகப் போதிக்கப்படும் சிந்தனைகள், மூட நம்பிக்கை, சாமியார் என்ன செய்தாலும் கேள்வி கேட்காமடல் ஏற்றுக்கொள்வது என்ற கண்மூடித்தனம், சாமியார் தவறாக நடந்து கொள்வது கூட நல்ல நோக்கத்தில் தான் என்றும், ஏதோ தெய்வமே தன்னை அணுகுவதாகவும் நினைத்து மயங்குவதும் நடக்கிறது. சாமியார்களிடம் தங்களுக்கு உள்ள நெருக்கத்தினால் மற்றவர்களிடமிருந்து கிடைக்கத் துவங்குகிற மரியாதையும் அந்தஸ்தும் சிலரை மதியிழக்கச் செய்கிறது. பகுத்தறிவின்மையும் மூடநம்பிக்கைகளும்தான் இவற்றிற்கெல்லாம் முதன்மைக் காரணங்கள்" (செம்மலர், சனவரி - 2005, பக். 7-8)

தீம்தரிகிட இதழின் ஆசிரியர் திரு ஞாநி அவர்கள் பொதிகைத் தொலைக்காட்சிக்காக எழுதி இயக்கிய "அய்யா" என்ற பெரியார் வாழ்க்கை வரலாற்றுத் தொடரில் "ஆனந்தி" என்ற பாத்திரமாகப் பொறுப்பேற்று நடித்த தோழர் உ. வாசுகி அவர்கள் கூறியுள்ள இக்கருத்துக்கள் யாவும் தந்தை பெரியாரின் தீர்க்கதரிசன உணர்வுகள் தாம் என்பதனை மறுப்பதற்கில்லை. பெரியாரிய கருத்துக்களை உள்வாங்காத மகளிர்க்கு ஏற்பட்டுள்ள இழிவுகளை விடப் பன்மடங்கு, பெரியாரிய கொள்கைகளை எதிப்பவர்க்கு ஏற்படும் என்பது காலத்தின்

கட்டாயமாக அமைந்துவிடுகின்றது. லோககுரு என்றும் பீடாபதி என்றும் அவதார புருஷன் என்றும் ஏமாற்றிப் பிழைத்தவர்கள் "மக்கள் மன்றத்திற்கு முன் அனைவரும் சமம்" என்பதனை ஏற்க மறுத்ததின் விளைவு இன்று சிறைச்சாலைக் கம்பிகளின் மறைவில் பூசை புனஸ்காரம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

"பாலியல் உணர்வைக் கட்டுப்படுத்தி வாழ்கிறேன் என்று ஒரு சாமியார் சொன்னால் அவன் பொய் சொல்ல வேண்டும். அல்லது அவன் அலியாக இருக்க வேண்டும்" என்று ஓஸோ என்ற நவீனச் சாமியார் சொன்ன கருத்தினை (உண்மை, பொங்கல் மலர், சனவரி 16 - 31 ; 2005, ப. 77) திரைபோட்டு மறைத்து விட்டு புனிதர்கள் போல ஐம்புல ஒடுக்க நாடகம் போட்ட உலுத்தர்களின் நிலை மேட்டுப்பாளையம் சி. சாமிநாதன் என்னும் கவிஞர் கூறுவது போலத் தான் அமைந்துவிட்டது.

"எங்களுக்கு வாயிலிருந்து.......
லிங்கத்தை எடுத்தார்...
விபூதி எடுத்தார்.....
குங்குமம் எடுத்தார்...
இப்போது....
எங்களால் அவரை
ஜாமீனில் தான் எடுக்க..
முடியவில்லை" (செம்மலர், சனவரி - 2005, ப. 24).

## பகுத்தறிவெனும் மாற்று மருந்து

ஏன்? எதற்கு? எப்படி? என்று கேள்வி கேட்காமல் வலுத்தவன் சொன்னான் என்பதற்காக அப்படியே ஏற்றுக் கொள்ளும் மனப்பாங்கிற்கு காரணமாக அமைகின்ற சக்திகளை மூட நம்பிக்கைகள் என்று பெயரிட்டு அழைத்தார் தந்தை பெரியார். இம்மூட நம்பிக்கைகளுக்கு மாற்று மருந்தாகப் பயன்படுவது பகுத்தறிவே என்பது பெரியாரின் அழுத்தமான கொள்கையாகும். நரகம், சொர்க்கம், யாகம், கிரகப் பலன்கள். சோதிடம், பூசை, வழிபாடு, விதி, கன்மம், தேரோட்டம், திருவிழா ஆகிய அனைத்துச் செயல்களுக்கெல்லாம் அடிப்படைக் காரணமாக அமைவது பகுத்தறிவின்மையே என்பதுதான் பெரியாரியத்தின் மையப் பொருள். இப்பொருளைத் தமிழின மக்களிடம் ஊட்டுவதற்காக தந்தை பெரியார் தம் வாழ்நாளில் பெரும் பகுதியினைச் செலவிட்டார். இத்தகைய பெரியாரியத் தொண்டின் தேவையையும் பகுத்தறிவையும், ஆளுமையினையும் "தென்மொழி ஞானப் பண்டிதன்" என்னும் பகுத்தறிவுப் பாவலர் பின்வருமாறு தன் கவிதைவழிப் பட்டியலிடுகின்றார் :

"நரகமென்றும் சொர்க்கமென்றும் நம்பவைப்பான் தீயோன்
கிரகமென்பான் சோதிடனோ கேடன் - வரவு
மிகுந்திடவே ஏய்க்க வலை விரிப்பான் - நன்மை
பகுத்தறிவா லேமுடியும் பார்
யாகத்தீ மூட்டுவதால் நாடு செழிக்காதே
ஆகமத்தால் முள்முனையும் ஆடாதே - சோகம்
மிகுந்துள்ள வையகத்தை மீட்டிட நீ எண்ணின்
பகுத்தறிவா லேமுடியும் பார்
அழுதழுது பூசை அனுதினம் செய்தாலும்
தொழுதெழுந்தால் துன்பம் தொலையா - உழுத
நுகத்தெருதால் ஊர் பிழைக்கும் - நும் செய்கை வீணே
பகுத்தறிவா லேமுடியும் பார்
எல்லாம் அவன் செயல் என்விதி என்பவை
பொல்லாதவன் தப்பிக்கும் பொய்யுரையே வெல்லும்
எகத்தாளியின் பேச்சு ஏய்ப்போரை வீழ்த்த
பகுத்தறிவா லேமுடியும் பார்" (உண்மை, பொங்கல்மலர், சனவரி 16-31, 2005, ப.51)

## உண்மை உணரும் பயணத்திற்கு ஏற்ற பாதை பெரியாரியமே

சித்துவேலைகளைக் கற்றுக் கொண்டு பல்வேறு வித்தைகளைக் காட்டி முக்தி என்றும், மோட்சம் என்றும், கடவுள் படைப்பில் உயர்ந்தவர் என்றும், தாழ்ந்தவர் என்றும் பேதம் பாராட்டிக் கொண்டு தீமை உணர்வினைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளும் பிற்போக்குவாதிகளிடம் இருந்து தப்பிக்கக் கூடிய திறன் தமிழினத்திற்குக் கட்டாயம் வேண்டும். இல்லையெனில் பஞ்சமர் என்றும் சூத்திரர் என்றும் அழைக்கப்பட்ட நாலாந்தரப்பட்ட பட்டத்தினைக் காலங்காலமாக ஏற்றுக் கொண்டு அவதிப்பட நேரிடும் என்று அறிவுறுத்தியுள்ளார் தந்தை பெரியார். அதனைத் தெளிவாக உணர்ந்து கொள்ளாத தமிழரின் இயலாமையினை எண்ணிக் கவலைப்பட்ட கவிஞர் இரா.செம்பியன், தனது கருத்தினைக் கவிதை வடிவில் தந்துள்ளார்.

"பகுத்தறிவின் துணைகொண்டு பொருளை நோக்கும்
பண்புடைய தமிழர்களை மடைய ராக்கப்
புகுத்துகின்றார் கீதையினைக் கடவுள் சொன்ன
பொன்மொழியே எனச் சொல்லி புளுகித்தள்ளி,
வெகுநாள்கள் மக்களிடை விலைபோ காது
விளக்கமின்றிக் குழப்புகின்ற கோட்பா டெல்லாம்
வகுத்தானே நால்வருணம் அவனா தேவன்?
மகத்தான இழுக்கன்றோ மன்ப தைக்கோ? "(தெளிதமிழ், 14.1.2005, ப.31)

இக்கவிதையுள் சொல்லப்பட்டதுபோல நால்வருணப் பாகுபாட்டை நிலைநிறுத்தக்கூடிய கீதையினைப் புறந்தள்ளிவிட்டு புதிய கீதையினை இக்கலியுகத்தில் சூத்திரர்தான் எழுத வேண்டும் என்று சிந்திக்கின்ற கவிஞர் நந்தாவின் புத்தெழுச்சிக் கவிதையில்தான் பெரியாரியத்தின் வெற்றியே அடங்கியுள்ளது. இதோ அக்கவித்தை :

"சாதிமதப் பிரிவுகளின் வேரை அறுக்கணும்
சமத்துவத்தின் விழுதுகள்தான் ஊரைச் சுமக்கணும்
போதிமரம் சொன்னநீதிப் பாதை அறியணும்
சூத்திரர்தான் கலியுகத்தின் கீதை எழுதணும்
உயர்வு தாழ்வு உடைக்கவல்ல உளியை எடுக்கணும்
உடலும் உயிரும் ஒன்று என்று உள்ளம் திருந்தணும்
உண்மை எது? பொய்மை எது? உரசிப் பார்க்கணும்
உண்மை தேடும் பயணம் தொடர உறுதி கொள்ளணும் (செம்மலர், பிப்ரவரி, 2005,ப.48)

## தொகுப்புரை

1. ஆண்டுகள் நூறுபல கடந்தாலும் மனிதநேயமும், மானுடப்பண்பும், சீர்திருத்த நோக்கும், விழிப்புணர்வுப் பாங்கும் கொண்ட பெரியாரிய கொள்கைகளும் கோட்பாடுகளும் புதிய புதிய சிந்தனைகளில், பற்பல வடிவங்களில் அவ்வக்காலத்திற்கேற்ற முற்போக்கு உணர்வுகளாக வெளிப்பட்டுக் கொண்டேயிருக்கும் என்பதற்கு இக்கவிதைகள் கட்டியங் கூறுவனவாக அமைந்துள்ளன.
2. உண்மை, செம்மலர், தெளிதமிழ், வெல்லும் தூய தமிழ், தமிழர் கண்ணோட்டம், தீம்தரிகிட, தமிழ்ப்பாவை, புதிய பார்வை, நற்றமிழ், தலித்முரசு, உலகத் தமிழர் சக்தி, சிந்தனையாளன், தென்மொழி, கணையாழி, மார்க்சிஸ்ட், பெரியார் பிஞ்சு ஆகிய திங்கள் இதழ்கள் பெரியாரிய கருத்தாங்கங்களைக் கவிதைகளாக, கட்டுரைகளாக, சிறுதைகளாக, தொடர்கதைகளாகத் தாங்கிவரக்கூடிய பகுத்தறிவுக் கேடயங்களாகத் திகழ்கின்றன.
3. மேற்கண்ட இதழ்களில் இடம் பெற்றுள்ள கவிதைகளுள் தெரிந்தெடுக்கப்பட்ட சில கவிதைகள் மட்டுமே பக்க அளவைக் கருத்திற்கொண்டு இக்கட்டுரைக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

# தமிழ் நாவல்களில் மருத்துவச் செய்திகள்

*சு.அரங்கநாதன்,* ஆய்வாளர், தமிழ்த்துறை,
பாரதியார் பல்கலைக் கழகம், கோவை – 641046.

இலக்கியங்கள் தனிப்பட்ட மனிதனின் பிரச்சனைகளை மட்டும் பேசாமல் பொதுவான மக்களின் வாழ்க்கை முறைகளையும் இணைத்தே இயம்புகிறது. குறிப்பாக இன்றைய தமிழ் நவீன இலக்கியங்களில் பல்துறை சார்ந்த செய்திகள் இடம்பெறுவது கண்கூடாகக் காணக்கூடிய ஒன்றாகும். தமிழ் நவீன இலக்கியங்களில் அறிவியல், வேளாண்மை பொருளாதாரம், மருத்துவம் போன்ற பல்வேறு துறைகளின் பங்கு இன்றியமையாததாக அமைந்துவிடுகிறது. தமிழில் நவீன இலக்கியங்களில் அந்நாவல்களில் காணப்படும் மருத்துவச் செய்திகளை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### உடல் பருமன் குறைவாக இருந்தால்

உடல் பருமன் அதிகமாக கொழுப்புச் சத்து அதிகம் உள்ள உணவினை உட்கொள்ள வேண்டும். உடல் பருமன் குறைவாக இருந்தால் பல நோய்கள் தாக்கும்.

இவளை உட்காரச் சொல்லி நல்லாப் பாலும் தயிரும் போட்டா உம்பு தேறிட மாட்டாளா என்ன?

என்று சிவசங்கரி காற்றுள்ள போதே நாவலில் உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேன் என்கிற திருமூலரின் கூற்றுக்கு வேகம் கொடுத்திருக்கிறார் எனலாம்.

### பேர் சொல்லாத நோய்

மனித உடலின் வெப்பத்தினால் ஏற்படும் நோய் அக்கி. இதை கிராம மக்கள் பேர் சொல்லாத நோய் என்று குயவனிடம் சென்று செம்மண்ணால் படம் வரைந்தால் குணமாகும் என்பதை கு.சின்னப்பபாரதி பவளாயி என்னும் நாவலில் சுட்டுகிறார்.

யம்மாவ் வாத்தியாருக்கு முதுவுலே அக்கி வந்துக்கீது பேரு சொல்லாதே இதுக்கு கொசுவங்கிட்டேப் போவனும், அவன் செம்மண்லே சிங்கம் படம் எழுதிருவான். அது தான் மருந்து என்றாள் ஆராயி.

### அம்மை

ஏறுவெயில் என்னும் நாவலில் பெருமாள் முருகன் அவர்கள் அம்மை நோய்க்கு மருந்தினையும், அதனை பயன்படுத்தும் முறையினையும்மேலெல்லாம் அம்மை போட்டுக் கொப்பளித்துக் கிடக்கிறது, மாரியாயி பாத்திருக்குது என்று வெளியே விடவில்லை, உள்ளேயே கிடக்கிறான். வேப்பந்தழையை அரைத்துச் சாந்து பண்ணி கோழி இறகை எடுத்துப் பூசுகிறது அம்மா

என்று படம்பிடித்துக் காட்டியிருக்கிறார். இதில் மாரியாயி பாத்திருக்குது என்று இறை நம்பிக்கையும் சுட்டப்படுகிறது.

### மூளைக்காய்ச்சல்

மூளைக்காய்ச்சல் வந்தால் உணவு உட்கொள்ள முடியாது. உடலெல்லாம் மஞ்சள் நிறமாகும் என்பதனை ராஜம் கிருஷ்ணன் அவர்கள் தனது குறிஞ்சித்தேன் என்ற நாவலில் கூறுகிறார், இந்நோய்க்கு மருந்து கூறும் போது,

துணியில் எதையோ மறைத்துக் கொண்டு வந்தான் ஏதோ வேர்கள் அவை பச்சையாகப் பிடுங்கி சிறுகட்டாகக் கட்டிக் கொண்டு வந்திருந்தான் மந்திரித்து கொண்டு வந்தேன். இதைத் தினம் தினம் கஷாயம் வைத்துக் கொடுங்கள் நாளடைவில் காய்ச்சல் நின்றுவிடும்.

என்று மருந்தின் பெயரைக் குறிப்பிடாமல், வேர் என்றே கூறுகிறார். இன்றளவும் நாட்டுப்புற மருத்துவம் அறிந்தவர்கள் மருத்துவக் குறிப்புகளை மற்றவர்களிடம் சொன்னால் பழிக்காது என்று நம்புவது இங்கே நோக்குதற்குரியது. அந்த வேர் அந்நோயினைக் குணப்படுத்தியதும் கூறப்படுகிறது.

**சிறங்கு**

சிறங்கு நோய்க்கு உப்பெண்ணெய் காச்சி ஒத்தடம் கொடுத்தால் சரியாகி விடும் என்பதன

சிங்காரத்துக்கிட்ட போய்க்காட்டி மருந்து வாங்கிட்டுப் போ.... உப்பெண்ணெய் காச்சி ஒத்தடம் கொடு.

என்று சேற்றில் மனிதர்கள் நாவலில் சிறங்கு நோய்க்கு உப்பெண்ணெய் காச்சி ஒத்தடம் கொடுக்க வேண்டும் என்ற மருந்தைப் பதிவு செய்திருக்கிறார் ராஜம் கிருஷ்ணன்.

**வாய்க்கசப்பு**

வாய் கசக்கும்போது சுடுதண்ணி வைத்துக் குடித்தால் சரியாகி விடும் என்பதை சேச்றில் மனிதர்கள் நாவலில்

லட்சுமி சுடுதண்ணி வச்சிக் குடேன்? வாயெல்லாம் கசக்குது

**வாதக்கோளாறு**

காலில் முள் குத்தினாப்புல இருந்ச்சு, ஆனா வலி ஒரு வாரமாக சரியாகவில்லை,

மஞ்சக் குழச்சிப் போட்டு அந்தி மந்தாரை இலை, ஊமத்தை இலை கொண்டாந்து வாட்டிப் போட்டு, புளி கழச்சிக் காச்சிச சூடா தேச்சி வச்சு எல்லாம் பாத்தாச்சி பளுக்கவுமில்ல, உடையவுமில்ல

என்று காலிலே ஏற்படும் நோயினையும், அந்நோய்க்கு பயன்படுத்திய மருந்தினையும் கூறுகிறார் ராஜம் கிருஷ்ணன் அவர்கள். இதில் மஞ்சல், அந்தி மந்தாரை, ஊமத்தை இலையை வாட்டிப் போட்டால் முள்குத்தி கொப்பளித்துக் கொண்டால் உடைந்துவிடும் என்பது உணர்த்தப்படுகிறது. மேலும்,

இதப் பாத்தா வாதக் கோளாறாட்டுமல்ல தோணுது சுக்கு வேலிப்பருத்திய அரச்சிப் போட்டுப்பாரு கப்புனு அமுங்கிடும்

என்ற வரிகளால் வாதக்கோளாருக்கு சுக்கு வேலிப்பருத்தி மருந்தாகும். வாதக்கோளாறு வந்தால் உடனடியாக சரியாகாது என்பதையும் வைத்தியரு வடிச்சிக் கொடுக்கின்ற எண்ணெயினைப் போடுவதோடு, அம்மனுக்கு வேண்டிக்க என்றுக் கூறுவதையும் காணமுடிகின்றது.

**மூட்டுவலி**

மூட்டுவலி பெரும்பாலும் வயதானால் வரும் நோய், இந்நோய்க்கு மருந்தாக சேற்றில் மனிதர்கள் நாவலில் ராஜம் கிருஷ்ணன் அவர்கள் பதிவு செய்திருக்கிறார்.

மூட்டு வலிக்கதுடீ கொஞ்சம் வாதமடக்கி எல கொண்டான்னு

ஓங்கிட்டச் சொல்லி அசந்துட்டே

**தேன்பூச்சி கொத்தினால்**

தேன்பூச்சி கொத்தினால் வீங்கிவிடும். வீங்கிய இடத்தில மினுமினுன்னு இருக்கும் என்பதையும் அதனை சரிசெய்ய கொடுக்கை எடுத்துவிட்டால் வீக்கம் சரியாகிவிடும் என்பதை பூமணியின் வெக்கை நாவலில்

கையி பெலமா வீங்கியிருக்கே எதுக்கு காட்டு இப்படி நேத்து தேங்கொளவி கொட்னது. அடடா அதுக்கா இப்படி வீங்கிப்போச்சு மினுமினுன்னு கொடுக்கு வந்துருச்சா வெளிய நான் கவனிக்கலயே..... சின்னக் கொடுக்குதான் எடுத்துட்டேன் நாளைக்கு வீக்கம் வத்திப்போகும்

என்று பதிவு செய்யப்பட்டுள்ளது.

**ஆடுமாடு செருக்கி விட்டால்**

ஆடுமாடுகள் வேண்டாதவற்றைத் தின்றுவிட்டால் செருக்கிவிடும், இதற்கு மருந்தாக

ஆடுமாடு வேண்டாத குழையைத் தின்று செருக்கிவிட்டால் தேன் நல்ல மருந்து

என்று வெக்கை நாவலில கூறப்படுகிறது. மாடுகளுக்கு கறக்க வலிமை வரவேண்டுமென்பதற்காக வலத்தோள் பட்டையில் இரும்பைப் பழுக்க காய்ச்சிச் சூடுபோடுவார்கள் என்று ஜோகியின் பாட்டி கதை சொல்லி அவன் கேட்டிருக்கிறான் என்று குறிஞ்சித்தேன் கூறுகிறது.

## முயல் புழுக்கைப் புகை

காய்ச்சல் சளி முதலியவறைத் தடுக்கும் ஆற்றல் முயல் புழுக்களைக் கொண்டு பிடிக்கும் புகையால் உண்டாகும் என உறுதியாக நம்புவதை சூயி காந்தனின் மானாவரி மனிதர்கள் என்னும் நாவலின் மூலம் அறியலாம். மேலும் இந்நாவலில் கண்ணில் விழும் தூசிகளைக் கையில் எண்ணெய் தடவிக் கொண்டு எடுக்கும் மருத்துவமும் கூறப்பட்டுள்ளது.

## வாய்ப்புண்

சூரியகாந்தனின் பூர்வீக பூமி என்னும் நாவலில் வாய்ப்புண்ணுக்குச் சுக்கிட்டிக் கீரை தின்னும் பழக்கமும், அம்மை நோய்க்குப் பன்றியின் கொழுப்பைக் கொடுத்தும் சரிசெய்யும் மருத்துவச் செய்தி இடம்பெற்றுள்ளது.

## பாம்புக்கடி

தங்கர் பச்சானின் ஒன்பது ரூபாய் நோட்டு எனும் நாவலில் பாம்புக் கடித்தவுடன் கடித்த இடத்திற்கு மேலே இரத்த ஓட்டம் இல்லாமல் இறுக்கமாக கட்டவேண்டும்.

வேஷ்டியின் முனையைக் கிழித்து கணுக்காலுக்கு மேலே இறுக்கிக்கட்டினார்.

மேலும், வைத்தியர் வைத்திருந்த பொடியை வெத்தலையில் கொட்டி மடித்து முழுங்கிடு என்கின்றனர். ஆனால் அதற்கும் கேட்கவில்லை. பின்னர்

வைத்தியர் வேப்பிலையும் காய்ந்த மிளகாயும் கொண்டு வரச் சொன்னார்

என்பதில் பாம்புக்கடிக்கு வேப்பிலையும், மிளகாயினையும் பயன்படுத்துகின்றனர் என்பது தெளிவாகிறது.

மரவள்ளியை தின்னால் ஆடு சொக்கிக்கும். அதனை சரிசெய்ய மீசைக்காய் கொடியின் வேரினைக் கொடுத்தால் சரியாகிவிடும் என்பதை ஒன்பது ரூபாய் நோட்டு நாவலில் காணலாம். மேலும் இதே நோய்க்கு மாம்பட்டையை அரைத்து ஊற்றினால் சரியாகிவிடும் என்பதனையும் இந்நாவல் பதிவு செய்திருக்கிறது.

இவ்வாறு தமிழ் நாவல்களில் மருத்துவச் செய்திகள் நிரம்பக்காணப்படுகின்றன. இக்கட்டுரைக்காக எடுத்துக் கொள்ளப்பட்ட நாவல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு குறிப்பிட்ட வட்டார மக்களின் வாழ்வியலைக் கூறுவதாக அமைந்துள்ளது. இந்நாவல்களில் கூறப்படும் மருத்துவச் செய்திகள் யாவும் நாட்டுப்புற மருத்துவ முறைகளே. இம்மருத்துவ முறைகள் பெரும்பாலும் நோயின் துவக்க நிலையிலேயே பயன்படுத்தும் வகையில் அமைந்துள்ளன. மருந்துகள் அனைத்துமே இயற்கையாக தங்களுக்கு தெரிந்த வகையிலேயே அமைந்திருக்கும். கிராம மக்கள் அனைவரும் தங்கள் வாழ்க்கைச் சூழலுக்கேற்ப ஒருசில மருத்துவ முறைகளையாவது அறிந்து வைத்திருப்பர் என்பது உண்மை என்ற வகையில் நாட்டுப்புற மக்கள் அனைவரும் தங்கள் வாழ்க்கைச் சூழலில் மருத்துவர்களாகச் செயல்படும் ஆற்றல் பெற்றிருப்பதை இந்நாவல்கள் தெள்ளத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. இம்மருத்துவச் செய்திகள் அனைத்துமே அந்தந்த நாவலின் விறுவிறுப்பிற்கும், வேகத்திற்கும் பெரிதும் துணைபுரியும் வகையில் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

## குறிப்புகள்


1. காற்றுள்ள போதே (சிவசங்கரி) - பக்கம் 20
2. பவளாயி (கு.சின்னப்பபாரதி - பக்கம் 165
3. ஏறுவெயில் (பெருமாள் முருகன்) - பக்கம் 170
4. குறிசித்தேன் (ராஜம் கிருஷ்ணன்) - பக்கம் 143
5. சேற்றில் மனிதர்கள் (ராஜம் கிருஷ்ணன்) - பக்கம் 36

# "யுக பாரதியின் கவிதைகளில் பெரியாரியம்"

வீ.ச. *அசோக் குமார்*, எம்.ஏ., எம்.ஃபில்., முனைவர் பட்ட ஆய்வாளர்,
அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி.

மனித மன உணர்வு வடிவமாகச் செயல்பட இலக்கியம் துணை நிற்கிறது. இலக்கியப் படைப்பாளனின் மனதிலே ஒரு பொருளோ அல்லது செயலோ தூண்டுதலாகி, படைப்பாளியின் மனதிலே கருவாகி படிப்படியாக இலக்கியம் வடிவம் கொள்கிறது. அதன் மூலம் படைப்பாளன் தான் பெற்ற உணர்வுகளைப் பங்கிட விரும்புகிறான். தமிழ் இலக்கிய வரலாற்றில் தற்போது கவிதைப் பொற்காலம். ஆயிரமாயிரம் செய்திகளை சொல்லாமல் சொல்வது கவிதை இலக்கியமாகும். இளம் கவிஞர் யுகபாரதியின் கவிதைகளில் இடம்பெறும் பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள் குறித்து ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**கடவுள் மறுப்பு :**

பெரியாரியத்தில் கடவுள் மறுப்புக் கொள்கை முக்கிய இடம் பெறுகிறது.

"கடவுளை மற !
மனிதனை நினை"

என்பது பெரியார் ஈ.வே.ரா-வின் வாக்காகும். பக்தியின் பெயரால் பாழடிக்கும் பணத்தை மக்களின் கல்வி, தொழில் வளர்ச்சிக்குப் பயன்படுத்தலாம் என்பது பெரியாரின் அறிவுரையாகும் இதனையே கவிஞர் யுகபாரதி,

"இல்லாதவற்றுக்குக்/கட்டுகிறான் கோபுரம்
இருப்பதற்கில்லை வீடு" (பஞ்சாரம், ப. 44)
"ஊருக்குள்/வரமுடியாத
அய்யனார் /உட்கார்ந்திருப்பதோ"குதிரையில்" (பஞ்சாரம், ப.16)

என்று அங்கதச் சுவையோடு தமது கவிதைகளில் குறிப்பிட்டுள்ளார். ஒரு கிராமத்தில் பாழடைந்த கணபதி கோயிலைக் கட்டுவதற்கு ஏற்படுத்தப்பட்ட ஊர்க்கூட்டத்தில் வன்முறை வெடிப்பதைக் கண்ட கவிஞர்,

"சக்தி மிக்க/சாமியெனில்
பாழடைந்து /போவானேன்" (பஞ்சாரம் ப. 16)

என்று கேள்வி எழுப்புயுள்ளார்.

**மதவாதீ :**

சமீப காலங்களாக மதவாதிகள் பாலியல் குற்றங்களில் ஈடுபடுவதையும், அதிகாரத்தைக் கைப்பற்ற மதத்தை கேடயமாகப் பயன்படுத்துவதையும் யுகபாரதி

"தடியெடுத்து வருகின்றன
காவிநிற பாம்புகள்" (தெப்பக்கட்டை, ப.53) என்றும்
"ரெத்த வாந்தியெடுத்து
மரித்த சுசீலாவை
அடித்தது பேயல்ல
வடக்குத்தெரு பூசாரியென்று
கூவ வேண்டும்" (தெப்பக்கட்டை, ப.57)
என்றும் தமது கவிதைகளில் வமர்சனம் செய்துள்ளார்.

**சமதர்மம் :**

சமதர்மக் கொள்கையை வலியுறுத்திய பெரியாரியத்தில் பார்ப்பான் எதிர்ப்பும் ஒன்று. பூணூல் போட்டுக்கொண்டும் நெற்றிக்குறி இட்டுக்கொண்டும் சமதர்மவாதியாக இருக்க முடியாதென்பது பெரியாரின் கருத்தாகும். க்விஞர் யுகபாரதி நல்ல தோழனாக பார்ப்பானொருவன் கிடைத்து விட்டானென்றும்

"இதயமிருக்கிறதா என /பார்ப்பதற்கு முன்பாக
நூலிருக்கிறதா எனத்/துருவிய கண்களை
மன்னிப்பாயாக" (தெப்பக்கட்டை, ப.66)

என்றும் தமது கவிதைகளில் வேண்டுகிறார்.

**பெண்விடுதலை :**

பெண்கள் கல்வி, பொருளாதாரத்தில் முன்னேற்றமடைந்தால் மட்டுமே தங்களுக்கு விதிக்கப்பட்ட கட்டுப்பாட்டு விலங்குகளைத் தகர்தெறிய முடியும். பெண்ணுரிமையின் அவசியத்தை கவிஞர் யுகபாரதி தமது கவிதைகளில்,

"கக்கத்தை /விட்டிறங்கினாலும்
வீலென அலறும் /தம்பியின்
மூக்குச் சளிக்காக/என் பாவாடை
வூடு பெருக்க /எச்சித்தட்டு கழுவ
கந்தலை கசக்க /கஞ்சித்தண்ணி கிண்டி விட (மனப்பத்தாயம். ப. 60)

என்பதான நிகழ்வுகளைச் சுட்டிக்காட்டி விளக்கியுள்ளார். மற்றொரு கவிதையில்,

"உடம்பை அறிவி/பேணி உடுத்துதற்கு
கற்பொன்றும் உடையில்லை" (தெப்பக்கட்டை, ப.47)

என்று கற்பு பற்றி குறிப்பிட்டுள்ளார்.

**குடியின் கேடு :**

கள்ளிறக்கப் பயன்படுத்தப்பட்ட தமக்குச் சொந்தமான தென்னை மரங்கள் பலவற்றைப் பெரியார் வெட்டிச் சாய்த்தார். கவிஞர் யுகபாரதி "தட்டு" என்ற கவிதையில் குடியால் குடும்பம் சீர்குலைந்ததை "தட்டுக்கெட்ட குடும்பம்" என்ற அங்கதச் சுவையுடன் குறிப்பிட்டுள்ளார்.

"நூற்றிப் பத்துத் தட்டு/சீர்வரிசையோடு
வாக்கப்பட்டவள் /ஆரத்தித் தட்டுக்கு
அடுத்த வீட்டுக்/கதவு தட்டும் படியாயிற்று" (பஞ்சாரம், ப. 20)

**பகுத்தறிவு :**

பகுத்தறிவு வாதமென்பது சமூக விஞ்ஞானமேயாகும். கண்ணால் கண்டு, ஆய்ந்தறிந்து எதனையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். பகுத்தறிவு இல்லாத மூட நம்பிக்கைகளாகக் கவிஞர் யுகபாரதி,

"பாவம் தொலைக்க /கோழி
செய்வினை கழிக்க/ஆடு
காவுகொடுப்பதற்கென்றே /காப்பாற்றுகிறார்கள் எல்லாவற்றையும்" (பஞ்சாரம், பக். 33,34)
"விந்தி விந்தி /தூரம் பற்றிய பிரமிப்பற்று
போய்க் கொண்டிருப்பாள்/குறிசொல்பவள்
ஆணிக் காலொடு" (பஞ்சாரம் ப. 29)

என்பனவற்றைத் தம் கவிதைகளில் குறிப்பிட்டுள்ளார்.

**பயன்பட்ட நூல்கள்**


1. யுகபாரதி - பஞ்சாரம், இராஜேஸ்வரி புத்தக நிலையம், சென்னை. 1999
2. யுகபாரதி - தெப்பக்கட்டை, இராஜேஸ்வரி புத்தக நிலையம், சென்னை. 2003
3. யுகபாரதி - மனப்பத்தாயம், இராஜேஸ்வரி புத்தக நிலையம், சென்னை. 1998
4. கி. வீரமணி, (தொ.ஆ) - பெரியார் களஞ்சியம், பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம், சென்னை. 1994.

# பொன்னீலனின் புதிய மொட்டுகளில் - கதைகூறல் உத்தி

*த. இரசனி,* தமிழ்த்துறை - தேர்வு நிலை விரிவுரையாளர்,
அ.ப.ம.கலைக் கல்லூரி, பழனி.

முற்போக்கு இலக்கியப் படைப்பாளர் பொன்னீலனின் இயற்பெயர் ஸ்ரீகண்டேஸ்வர பக்தவச்சலம். இவர் குமரிமாவட்டத்தின் மணிக்கட்டிப் பொட்டிலில் பிறந்தார். தமிழக அரசின் கல்வித்துறையில் பணியாற்றி வரும் இவர் "கரிசல்" என்ற நாவல் மூலம் தமிழ் இலக்கியத்திற்கு அறிமுகமானார். அதைத்தொடர்ந்து கொள்ளைக்காரர்கள்", "தேடல்", "ஊற்றில் மலர்ந்தது" ஆகிய நாவல்கள் "ஜீவா என்றொருமானுடன்" என்ற வரலாறு, "மார்க்சிய அழகியலின் அடிப்படைகள்" என்ற மொழிபெயர்ப்பு நூல், "தற்காலத்தமிழ் இலக்கியமும் திராவிட இயக்கச் சித்தாந்தங்களும்" எனும் ஆய்வு நூல் முதலியவற்றின் மூலம் தற்காலத்தமிழ் இலக்கியக் களத்தில் தனக்கெனத் தனி இடத்தை நிலைநிறுத்திக் கொண்டுள்ளார்.

மூன்று பகுதிகளாக இவர் வெளியிட்டுள்ள "புதிய தரிசனங்கள்" என்னும் நாவல் 1994ஆம் ஆண்டிற்கான சாகித்ய அகாதமி விருது பெற்றுள்ளது. "கரிசல்" தமிழ்நாடு அரசின் பரிசு பெற்ற நாவல், இவர் 1979 ஆம் ஆண்டு கல்பனா என்ற இதழுக்காக எழுதிய நாவலே "புதிய மொட்டுகள்" என்ற நூல். இந்நாவல் கல்லூரி மாணவர்களுக்குப் பாடமாக அமைந்திருந்தது என்பதும் குறிப்பிடத்தக்கது.

## கூற்றுநிலை மாந்தர் தேர்வு

இந்நாவலில் கதைத்தலைவன் "இசக்கிமாடான்" என்னும் இயற்பெயர் கொண்ட சுதந்திரராஜன் ஆவான். இந்நாவலில் அவனுடைய பள்ளிப்பருவ வாழ்க்கை நிகழ்ச்சி முதல் அவனுடைய இறப்பிற்குப் பின்னாலும் ஆண்டுதோறும் கொண்டாடப்பெற்று வரும் நினைவு நாள் நிகழச்சி வரையிலான கதை நிகழ்வுகளை ஆசிரியர் பதிவு செய்துள்ளார். கதை மாந்நதரின் முழுமையான வாழ்க்கை வரலாற்றைக் கூறும் இக்கதைக்கான பொருத்தமான கூற்றுநிலை மாந்தர் தேர்வு இக்கட்டுரையின் வெற்றிக்கு இன்றியமையாத காரணமாக உள்ளது.

பொதுவாகக் கதையில் கூற்று நிலை என்பது நான்கு வகைப்படும்
1. கதையாசிரியர் கூற்றுநிலை, 2. தலைமைமாந்தர் கூற்றுநிலை, 3. துணைமாந்தர்கூற்று நிலை, 4. பலடமாந்தர் கூற்றுநிலை

துணைமாந்தர் கூற்று நியைில் இந்நாவலின் கதை செல்கிறது. சாதாரணமாக வாழ்ந்து மடிந்தவன் சுதந்திரராஜன். அவனுடைய நெருங்கிய தோழரான துரைச்சாமி என்னும் துணைமாந்தரே கதைசொல்லியாக அமைந்துள்ளார். தலைமைமாந்தரின் முழுமையான வரலாற்றை நன்கு அறிந்த ஒரே கதைமாந்தர் என்பதே இதற்குக் காரணம்.

## கதைகூறலில் பதிவாகும் மூவகை நிகழ்வுகள்

"புதிய மொட்டுகளில்"மூன்று வகையான நிகழ்வுகள் பதிவு செய்யப்பட்டுள்ளன.

1. கதைசொல்லி நேரடியாகப் பங்கு பெற்ற கதை நிகழ்வுகள்
2. கதைசொல்லி பங்கு பெறாத ஆனால் தலைமை மாந்தன் சொல்ல அவர் அறிந்து கொண்ட கதை நிகழ்வுகள்.
3. இவ்விரண்டு நிகழ்வுகளோடு மூன்றாவதாகக் கதைகூறல் நிகழும் காலத்தையே நடப்பு குறித்த நேரடி வருணனையும் இணைக்கப்பெற்றுள்ளது.

சுதந்திரராஜனின் கதை துரைச்சாமியால் ரசூல் என்ற கதைமாந்தருக்கு மூன்று மணி நேரத்திற்குள் சொல்லி முடிக்கப்பெறுகிறது. கதையின் நிறைவில் இடம்பெறும் பகுதி மேற்கூறிய நேரடி வருணனைக்கு சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. "ஆ, அதா ஆளுக வந்திட்டாங்கில்லையா, தியாகராஜன் தங்கமணி.... அதா கால இழுத்திழுத்து வாரானில்ல அவன்தான் சிங்காரம்....இனியும் படுத்துக்கிடந்தா நல்லாயிருகக்ாது. எந்திரிப்போம். ஓ ரசூல் அதாவரது யார் பாருங்க, நம்ம சங்கத்தலைவரில்ல? உம், ஒரு வருசம் கூட அவரு

வராம இருந்ததில்லையே? மத்தவங்களும் அதா வந்திட்டுருக்காங்க. தங்கராஜூம் பிள்ளைகளும்........இந்தப் பய பகத்சிங் எப்போ இங்கிருந்து போனான்? ஹா, புதுசு புதுசா ஏராளமான இளம் முகங்க தெரியுதே" .

### கதை கூறலில் மொழியியல் உத்திகள்

புதின ஆசிரியர், கூற்றுநிலை மாந்தர் பங்கு கொணங்ட நிகழ்வுகளை இறந்தகாலத்திலே பதிவு செக்கின்றார். ஆனால் கூற்றுநிலை மாந்தர் பங்கு பெறாத தலைமை மாந்தரிடம் கேட்டு அறிந்து கொண்ட நிகழ்வுகளைக் கூறுமிடத்து இருவகையான மொழி அமைப்புகளை பயன்படுத்துகிறார்கள். பல இடங்களில் வரும் இறந்தகால வினைமுற்றுகள்,

இறந்தகால வினைமுற்று + ஆம் என்ற வாய்ப்பாட்டில் அமைந்துள்ளது.

(எடு) "எப்பப்பார்த்தாலும் மம்பட்டியும் கையுமா அலைவானாம். மத்த வேலைக்காரங்க இவன கண்டமானம் திட்டுவானுங்களாம். இவன் அத பொருட்படுத்தமாட்டானாம்" .

அலைவான் + ஆம்

திட்டுவான் + ஆம்

பொருட்படுத்தமாட்டான் + ஆம்

மற்றொரு வகைகயான மொழி அமைப்பில் இறந்தகால வினையெச்சம் + இரு + விகுதி என்ற உறுதி இறந்தகால வாய்ப்பாட்டில் அமைந்த வினைச்சொற்களை ஆசிரியர் பயன்படுத்துகிறார்.

(எடு)

"தங்கரனி முடியாதுன்னு திமிறியிருக்கா,

தாய்க்காரி அழுதிருக்கா"

திமிறி + இருக்கா

அழுது + இருக்கா

உரையாடலில் நீக்கல் உத்தி

கதைகூறும் துரைச்சாமி தன் கூற்றுக்கு நடுவே அவ்வப்போது அக்கதையைக் கேட்கும் ரசூலுடன் உரையாடலை நிகழ்த்துகிறார். ஆனால் இந்த உரையாடலில் நீக்கல் உத்தி பயன்படுத்தப் பெற்றுள்ளது. உரையாடும் இருவரின் கூற்றும் இடம் பெறுதலே உரையாடலுக்கு உரிய பண்பு ஆகும். ஆனால் இப்புதினத்தில் இடம் பெற்றுள்ள உரையாடல் பகுதியில் துரைச்சாமியின் கூற்று மட்டுமே இடம் பெற்றுள்ளது. நீக்கல் உத்தியின் காரணமாக கதையில் இடம் பெறாத ஆசிரியரால் தவிர்க்கப் பெற்ற) ரசூலின் கூற்று என்னவாக இருக்கும் என்பதை துரைச்சாமியின் கூற்றே உய்த்துணர வைக்கின்றது.

(எடு)

"என்ன நடக்கும்னா கேக்கிறிங்க"?

என்ற எதிர் வினனாவைத் துரைச்சாமி எழுப்புவதால் கூறும்டத்தில் இதற்கு முன் இடம் பெற வேண்டிய ரசூலின் "என்ன நடக்கும்?" என்ற வினா நீக்கல் உத்தியின்னால் விடுபட்டுள்ளது. அதே போல்,

"இல்ல, இல்ல, இல்ல; அவன் அப்படி பெரிய தியாகங்களோ, காரியங்களோ செய்ததில்லை" என்று துரைச்சாமி மறுப்புரை கூறுமிடத்தில்

"சுதந்திரராஜன் பெரிய தியாகியோ" எனும் ரசூலின் கேள்வி நாவலில் நீக்கப்பெற்றுள்ளது. இது போன்று இன்னும் சில இடங்களில் காணப்பெறும் நீக்கல் உத்தி கதைமாந்தர் கூற்றுடன் உரையாடல் பகுதிகளை இணைப்பதற்குப் பயன்படுகிறது.

### நிரைவுரை

வாசகர்களின் வாசிப்பினுக்குச் சிறந்த விருந்தாக அமைந்துள்ள இந்த நாவலில் மற்றொரு சிறப்பான குறிப்பிடத்தக்க கூறு ஒன்று உள்ளது. ரசூல் என்ற கதைமாந்தர் கதையைக் கேட்பவராகப் படைக்கப்பெற்றிருந்தாலும் கதையின் நிறைவுப் பகுதியில் அந்த மாந்தரை நாமாக (வாசகராக) அடையாளம் கண்டு கொள்ள வைப்பதில் வெற்றி காணுகிறார் படைப்பாளர் பொன்னீலன்.

# புதுக்கவிதையில் "கடலியல்"

திருமதி. *கமலா முருகன்,*தமிழ் விரிவுரையாளர்,
எஸ்.ஐ.வி.இ.டி. மாலைக் கல்லூரி,கௌரிவாக்கம், சென்னை.

கலை கலைக்காகவா? அல்லது கலை வாழ்க்கைக்காகவா? என்று நெடுங்காலமாக ஆய்ந்துவரும் ஒரு வினாவிற்கு விடையாக "இன்றைய இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள்" அமைந்துள்ளன. அவை கலை வாழ்க்கைக்காகவே என்பதனை உணர்த்தும் வண்ணம் வாழ்வின் பிரதிபலிப்பாக மட்டும் இல்லாமல், வாழ்வின் வழிகாட்டியாகவும் உள்ளன. அவ்வகையில் இன்றைய இலக்கியங்களில் ஒன்றான புதுக்கவிதையில் கடல் தொடர்பான செய்திகள் எவ்விதம் எடுத்துரைக்கப்பட்டுள்ளன என்பதனை "கவிப்பேரரசு வைரமுத்துவின்" "தண்ணீர் தேசம்" நூல் வழியாக ஆய்வதே இவ்வாய்வின் நோக்கம்.

## இலக்கியமும் அறிவியலும்

எங்கெங்கு காணினும் அறிவியல் வளர்ச்சியும், கணினியின் ஆட்சியும் என்று வளர்ந்துவிட்ட இந்த உலக வாழ்வின் பிரதிபிம்பமான இலக்கியத்தில் அறிவியலின் ஆட்சி என்பது மிகவும் குறைந்த அளவிலேயே உள்ளது என்ற செய்தி கவலைக்குரிய ஒன்றுதான். இருப்பினும் பரவலாக ஆங்காங்கே உள்ள செய்திகளும் ஆழமான உண்மையான அறிவியல் செய்திகளையே பேசுவதாகின்றன. இவ்வளர்ச்சி வரவேற்கத்தக்க ஒன்று.

"சமுதாய வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் உருவானதுதான் இலக்கியமும் அறிவியலுமாகும். இலக்கியம் ஒரு தனித்துறையாக விளங்கினாலும் அவ்விரண்டின் அடிப்படை நோக்கம் மனித வாழ்வை மேம்படுத்துவதாகும். இலக்கியத்தால் மனித மாண்புகள் நிலைப்படவும் அறிவியலால் வாழ்வின் நோக்கு நிலை விரிவடையவும் காலந்தோறும் பயன்பட்டு வந்துள்ளன. அறிவியலுக்கு ஆக்கவும் தெரியும், அழிக்கவும் முடியும். இன்றைய மனித வாழ்வுக்கு இலக்கியமும் அறிவியலும் தேவைப்படுகின்றன. தமிழில் தோன்றிய புதுக்கவிதைகள் அறிவியல் உண்மைகளையும் கண்டு பிடிப்புகளையும் பாடு பொருளாக்கி வாழ்வின் நோக்கினையும் போக்கினையும் வெளிப்படுத்தியுள்ளன." என்று எது புதுக்கவிதை என்ற நூல் பேசுகின்றது.

அவ்வகையில் இன்றைய தமிழ் இலக்கியங்களில் பிற துறைகளின் தாக்கம் எவ்வாறு உள்ளது என்ற அடிப்படையில் அறிவியல் துறையில் கடலியல் பற்றி இன்றைய புதுக்கவிதை இலக்கியங்களில் மிகச் சிறந்த நூலாக வெளிவந்துள்ள "தண்ணீர் தேசம்" பேசும் கடல் உண்மைகளே இங்கு கருவாகின்றன.

## "தண்ணீர் தேசம்" ஓர் அறிமுகம்

"கடலியலை இலக்கியப்படுத்தும் ஒரு பிள்ளை முயற்சி" என்ற அறிவிப்போடு வெளிவந்த நூல் தண்ணீர் தேசம். நம் தமிழ் மொழியை உலகத்தரம் வாய்ந்த ஒன்றாக மாற்ற, எல்லாச் செய்திகளையும் உட்கொண்ட ஒரு மொழியாக மாற்ற வைரமுத்து அவர்கள் செய்த முயற்சி இந்நூல் கடலின் கதையை மெல்லிய காதலுடன் பேசும் நூல்.

## கடலின் தன்மைகள்

சுனாமி அலைகளால் பாதிக்கப்பட்டு பெருத்த உயிர்ச்சேதமும் பொருட்சேதமும் மட்டுமின்றி மிகப் பெரிய அதிர்ச்சிக்கும் உள்ளாகி உள்ள இந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்தில் இப்போது கடல் பற்றிய இத்தொகுப்பு அவசியமாகின்றது.

## அதிசய உலகம்

கடல் இது ஓர் அதிசய உலகம் கடலுக்கடியில் பல்லாயிரம் உயிரினங்கள் உயிருடன் உலவும் அதிசய உலகம். இதனை

“கடல் உலகின் உலகின் முதல் அதிசயம்

காலவெள்ளம் தேங்கி நிற்கும் நீலப் பள்ளம்”

என்று அறிமுகம் செய்கின்றார் மேலும் இது 85 ஆயிரம் உயிர்களையும் உணவுகளையும் கொண்டுள்ள தன்மையினை

“கடல் ! அது ஒரு தனி உலகம். பள்ளி” கொண்ட விஸ்ப ரூபம்! எண்பதையாயிரம் உயிர்வகை கொண்ட உன்னத அரசாங்கம்.அடுத்த நூற்றாண்டு உணவுத் தேவையின் அமுத சுரபி -3.என்று சுட்டுகிறார்.

“இந்தப் பரந்த பூவுலகில் மூன்றில் இரண்டு பங்கினைத் தன்னகத்தேக் கொண்டு கடல் திகழ்கின்றது. அளவால் மட்டுமல்லாது. எண்ணற்ற உயிரினங்கள், விலைமதிப்பற்ற களஞ்சியங்கள். அறிவியல் சாதனைகளுக்கான விரிவான களங்கள் ஆகியவற்றாலும் கடலின் பரப்பு தனித்த ஒரு சிறப்போடு விளங்குவதாகும்” -4. என்ற சௌந்தரராஜனின் கருத்தும் ஒத்தமைகிறது.

## நிலமும் நீரும்

நாம் வாழும் இந்தப் பூமியில் மூன்றில் ஒரு பங்கு கூட நிலம் இல்லை. பெரும்பாலும் தண்ணீர் தான் நிரம்பி உள்ளது என்ற கணக்கீடு நமக்கும் அதிர்ச்சி தரக்கூடிய ஒன்றுதான், இந்தச் செய்தியினை “நாம் வாழும் புவிக் கோளத்தின் வெளிப்பரப்பு 51 கோடியே 1 இலட்சத்து 934 சதுர கிலோ மீட்டர். இதில் நிலப்பரப்பின் அளவு 29.4 சதவீதம் தான்” - 5. என்ற இளம் பெருவழுதியின் கருத்து அரண் செய்கின்றது.

## கடல் ஒரு கருணைத்தாய்

கடந்த ஆண்டின் இறுதியில் கடலில் நடந்த ஒரு கோர சம்பவம் நம்மை கடல் தாய் கருணையில்லாதவள் என்றே முணுமுணுக்க வைத்துள்ளது. ஆனால் உண்மையில் கடல் அன்னை அளவற்ற கருணை உடையவள். அதனால்தான் இன்றும் நாம் மூழ்காத பகுதியல் நின்று மூச்சுவிட்டுக்கொண்டு அவளைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கின்றோம். இதனை

“அவளுக்கா கருணையில்லை ?/கடல் தந்த அனுமதியில் தான்/

மூழ்காத நிலப்பகுதி மூச்சுவிட முடிகிறது.

கடல் நீர் இடம் மாறி நிலப்பரப்பில் நின்றால் /எல்லா இடங்களிலும்

மூன்று கிலோ மீட்டர்/உயரம் தண்ணீர் நிற்கும்” /

என்று வைரமுத்துவின் செய்து நமக்கு உணர்த்துகின்றது. “பூமியுலுள்ள நீரின் மொத்த கன அளவு 138.6 கோடி கன கிலோ மீட்டர் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. இதை பூமியின் மேற்பரப்பு முழுவதும் சமமட்டமாகப் பரப்பினால் அப்படுக்கை 3,300 மீட்டர் ஆழத்திற்கு இருக்கும். இதில் 96.5 சதவீதம் கடலில் உள்ளது. எனவே நம் கோளத்தைப் பூமி என்பதைவிட பெருங்கடல் என்பதே பொருந்தும்”-7 என்ற நித்யானந்தம் அவர்களின் கருத்து வைரமுத்துவின் கவிதை “கதையல்ல நிஜம்” என்பதை உணர வைக்கின்றது.

## உயிர்களின் மூலம்

உலகில் உள்ள உயிர்கள் எல்லாம் தோன்றியது கடலிலிருந்துதான் என்கிறார் வைர முத்து. 1வாழும் உயிர்களை வடிவமைத்தது தண்ணீர்” இதற்கு என்ன ஆதாரம் என்ற வினாவிற்கு

“கடலில் பிறந்த முதல் உயிர் தண்ணீரில்தானே சுவாசிக்க முடியும். அந்த மரபின்மையின் தொடர்ச்சிதான் இன்னும் கர்பத்தில் சிசு தண்ணீர் குடத்தில் சுவாசிக்கின்றது. 9” என்று கர்பத்தில் வளரும் பிள்ளையின் தன்மையைத் தொட்டுக் காட்டுகிறார். இது மட்டுமின்றி அந்த உறவு நிலையின் தொடர்ச்சியாக நம் உடலின் செந்நீரில் அந்த உறவுத் திரவம் ஒட்டி உள்ளது என்று மேலும் தன் கருத்தை உறுதி செய்கிறார்.

“தண்ணீரே இல்லாதிருந்தால் இப்பூமியே தோன்றியிருக்காது” என்ற இலக்குமியின் கருத்தும் “முதன் முதலாகத் தோன்றிய பிராணிகள் கடலில் 70 கோடி ஆண்டுகளுக்கு முன் முதுகெலும்பு இல்லாதவைகளாக

இருந்தன"11 என்ற நாராயணவேலுப்பிள்ளையின் கருத்தும் வைரமுத்துவின் கடல் செய்தியும் உயிரின் தோற்றம் உண்மை என்ன என்பதை உணர்த்துகின்றன.

## கடலின் அபாயங்கள்

கடலினால் நேரும் அபாயம் என்ற உடன் உடனடியாக நம் நினைவில் பொங்கிவருவது சுனாமி அலைகளாகத்தான் இருக்க முடியும். கடலின் தன்மையைப் பொறுத்தவரை இந்த சுனாமியின் பாதிப்பு மிகவும் ஏராளமாய் உள்ளன. அவை பல நடந்தும் உள்ளது. இனியும் நடக்கலாம். நடந்த நிகழ்வின் முடிவினை ஒட்டி

"வாசிக்கக் கிடைக்காத வரலாறுகளைத்/தின்று செரித்து நின்று செரிக்கும்"12

என்று அறிமுகத்திலேயே கூறுகிறார் வைரமுத்து. கடலில் உள்ள அபாயங்களாக, பொங்கும் கடலும் உலகம் சுற்ற அலைகளும், கடல்நீரோட்டம், வெடிக்கும் எரிமலை, கடல் தீவுகள், நீர்சுழற்சி, கடலும் புயலும் என்று பல ஆபத்துக்களான கடல் தன்மைகளின் செயல்களையும் விளைவையும் கூட நமக்குத் தெளிவாகக் காட்டி உள்ளார் நம் கவிதையில்.

## பொங்கும் கடலும் உலனம் சுற்றும் அலைகளும்

கடல் நம் தாய் என்றால் ஏன் கருணையில்லாமல் இந்த சுனாமி போன்ற பேரலைகளால் நம்மைப் புசிக்க வேண்டும்? என்ற வினா எழுவது இயல்பே, இதன் விடையாக கடல் பொங்குவதற்கான காரணம்

"அவள்மீது குற்றமில்லை
கடலின் கீழ் நகரும் பாறைகள் அவளை நகர்த்திவிடுகின்றன"13

என்று கூறுகின்றார். அதோடு மட்டுமின்றி இந்த அலைகள் 24 மணி ஐம்பது நிமிடத்தில் உலகம் முழுவதும் ஒரு சுற்று சுற்றி மீள்கின்றது என்ற செய்தியையும் கூறுகின்றார். இதனை

"தென் பெருங்கடலில் தொடங்கும் அலைகள் நன்றாக உலகத்தையே சுற்றி வருகின்றன. தடுத்து நிறுத்தக்கூடிய குறுக்கீடுகள் இல்லாததால் இவை உலகைச் சுற்றிவர வசதியாக இருக்கின்றது. 24 மணி 50 நிமிடத்திற்கு ஒரு முறை இரண்டு அலைகள் புறப்பட்டு நகர்ந்து சென்று உலகினைச் சுற்றி விடுகின்றன"14 என்று சௌந்திரராஜனின் கருத்தும் ஒவ்வொரு அலையும் உலகைச் சுற்றி வருகின்ற உண்மையை உணர்த்துகின்றன. இதன் காரணமாகத்தான் இந்தோனேஷியாவின் கடலுக்கடையில் ஏற்பட்ட நில அதிர்வில் பொங்கிய கடல் அலைகள் உலகின் பல இடங்களிலும் தம் பாதிப்பைக் காட்டிவிட்டன போலும்.

## கடல் நீரோட்டம்

கடல் நீரோட்டங்கள் உள்ளன. அவைகளும் நம்மீது கருணை காட்டுகின்றன என்பதும் ஒரு அபாய நிலையின் அறிவிப்புதான்."ஐந்து கண்டங்களுக்கே கருணைகாட்டும் கடல் ........... ஆமாம் கடலடியில் இரண்டு நீரோட்டங்கள் ஒன்று வெப்ப நீரோட்டம். இன்னொன்று குளிர் நீரோட்டம்"15

என்ற செய்திகளைத் தொடர்ந்து ஸ்வீடன், நார்வே நாடுகளைக் காக்கும் வெப்ப நீரோட்டம். கிரீன்லாந்தில் தழுவிநிற்கும் குளிர் நீரோட்டம், மொத்தத்தில் இந்த பூமியின் தட்பவெப்பத்தையே கருணையோடு கட்டிக் காப்பதால்தான் நாம் இன்னமும் சுவாசிக்க முடிகின்றது என்று கூறுகின்றார். இந்த தட்பவெப்பநிலை திடீரென்று மாறினாலும் நம்பாடு திண்டாட்டம்தான் என்று எண்ணிப்பார்ப்பதற்கே அச்சமாக உள்ளது. "கடலுக்கடியில் வெப்பநீரோட்டம், குளிர் நீரோட்டம் ஆகிய அறிவியல் வினோதங்கள் அன்றாடம் நிகழ்கின்றன" - 16.என்ற கருத்தும் நீரோட்டம் நிஜம் என்பதை உணர்த்துகின்றன.

## வெடிக்கும் எரிமலைகள்

கடலின் அடியில் உள்ள மற்றொரு அபாயம் எரிமலைக் குழம்புகள் ஆகும். ஆனால் இது இந்தியாவிலும் இதனைச் சுற்றியுள்ள வங்காள விரிகுடாவிலும் வர வாய்ப்பில்லை என்ற நல்ல செய்தி சொல்கிறார்.

"வங்காள விரிகுடாவில் அதற்கு வசதி இல்லை/இது இந்துமா சமுத்திரத்தின் குழந்தை /

பெரும்பாலும் ஆழமில்லை எரிமலைகள் எங்குமில்லை" 17 என்று கூறுகின்றார்.

### கடல் தீவுகள்

நான்குபுறமும் தண்ணீரால் சூழப்பட்டு உள்ள பகுதிகள் தீவுகள் என்பது நாம் அறிந்த ஒன்றுதான். ஆனால் இந்தத் தீவுகளின் தோற்றம் எப்படி நிகழ்ந்தது என்பது பெரும்பான்மையோர் அறியாத ஒன்று. கடலில் மிகப்பெரிய மலைகள் மூழ்கிய இடங்களால் மூழ்காத முகடுகளே தீவுகள் என்று அடையாளம் காட்டுகிறார் கவிஞர்."மத்திய பசிபிக்குன் குறுக்கே இரண்டாயிரம் மைல் நீளமுள்ள மலை முகட்டின் கடல் கொள்ள முடியாத சிகரங்களே ஹவாய்த் தீவுகள்" இந்து மகா சமுத்திரத்தில் இந்தியாவிலிருந்து அண்டார்ட்டிகா வரை ஒரு மலைத்தொடர் போகிறது. மலைத்தொடரில் மூழ்காத உச்சிகளே இலங்கை, மாலத்தீவுகள், இலட்சத் தீவுகள்"18. என்று புள்ளி விபரம் சொல்கின்றார். தீவுகளின் தோற்றம் பற்றி எஞ்சிய பகுதிகளையும் தானே ஈர்த்துவிடவேண்டும் என்பதனால்தான் பல அலைகளை அனுப்பிகிறாள் போலும் கடல் அன்னை. இந்த சுனாமியில் கூட பல தீவுகள் காணாமல் போனதின் மர்மம் இதுவாகத்தான் இருக்க முடியும்.

### நீர் சுழற்சி

கடலில் தோன்றும் மற்றொரு அபாயம் நீர் சுழற்சி இத்தகைய ஆபத்தும் நம் அட்லாண்டிக் சமுத்திரத்தில் உள்ளது. இதில் சிக்கி பலர் உயிரிழந்துள்ளனர்: இதற்காண காரணத்தையும் கண்டுபிடிக்கச் சென்றவர்களும் இதில் காணாமல் போயினர். இந்த சுழற்சி "பெர்முடாஸ் முக்கோணம்" என்று அழைக்கப்படுகிறது. இதில் 100 ஆண்டு கணக்கின்படி 40 கப்பல்களும் 20 விமானங்களும், பல நூறு சிறு படகுகளும் சிக்கி அழிந்துள்ளதனை அறிய முடிகின்றது.

### கடலும் புயலும்

பல்வேறு புயல்களை இந்த பூமி சந்தித்துள்ளது. ஆனால் புயல் ஆபத்தான ஒன்றாக இருந்தாலும் அதன் அறிகுறிகள் முன்பே தெரியும். என்று கூறி கவிஞர்

"புயல் நல்ல விருந்தாளி. சொல்லாமல் வருவதில்லை"20. என்று கூறுகின்றார்.

இந்தப் பூமியில் எப்போதும் 2000 புயல்கள் இருந்துகொண்டே இருக்கின்றன என்றும் கூறுகின்றார்.

### அழிவுகளின் உச்சம்

மிகப்பெரிய அழிவினை ஏற்படுத்திய இந்த சுனாமியின் பாதிப்பு சுமார் 105 ஆண்டுகளில் ஜப்பானில் 17% குஸ் தீவுகள் மற்றும் சூம்சதா வில் 10% பிலிப்பைன்ஸ்ஸில் 9% ஹவாய் தீவுகளில் 3% என்ற அளவில் பாதித்துள்ளதாக தகவல்கள் தரப்படுகின்றன. இவை மட்டுமின்றி கரைகளை நிறைத்த இந்த சுனாமி கடல் அலைகளால் இந்தோனேஷியாவில் 4000 அடி ஆழம் இருந்த கடல் பகுதிகள் சுனாமி மூடி இன்று 100 அடி ஆழம் மட்டுமே உள்ளதாக சோனோ டிரான்ஸ்மீட்டர் என்ற கருவி அளந்துள்ளதாக செய்திகள் வருகின்றன.

### முடிவுரை

"மறைமுகமாக இவ்வுலக இயக்கத்தின் மூல கருவியாக கடல் இயங்கி வருகின்றது"21. என்ற மூர்த்தி அவர்களின் கருத்து உண்மைதான். இதனை தண்ணீர் தேசத்தில் பல உண்மைத் தகவல்களை எளிய கவிதை வடிவில் நமக்கு உணர்த்துகின்றார் கவிஞர் வைரமுத்து.இத்தகைய அபாயமும் அதிசயமும் நிறைந்த பல்வேறு அறிவியல் நிகழ்வுகளையும் பிற துறைச் செய்திகளையும் நம் தமிழில் இன்றைய இலக்கியத்தில் பதிவு செய்வது அவசியமான ஒன்று. அவ்வகையில் கடலில் பிறப்பு, தன்மை கருணை, ஆபத்து என்று எல்லாச் செய்திகளையும் சரியான புள்ளி விபரங்கயோடு தமிழ்ப்புதுக்கவிதையில் தந்த வைரமுத்துவின் இலக்கியச் சேவை போற்றதற்குரிய ஒன்று. வணங்கி வரவேற்போம்.

# ஆகி வரும் பெயர்கள்

டாக்டர். சூ. காந்திமதி விரிவுரையாளர்
எம்.வி.எம் அரசினர் மகளிர் கல்லூரி

**முன்னுரை**

தேசத்தந்தை அண்ணல் காந்தி, தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாதையர் என்று சிறப்புக் கருதி அடைகளால் அழைக்கப்படும் தமிழ் மரபில் உலகு, வெற்றிலை நட்டான் போன்ற ஆகு பெயர்களும் இலக்கணத்தில் தனியிடம் பெறுகின்றன. தகுதிக்கும் தன்மைக்கும் ஏற்ப தந்தை, தாத்தா என்று காந்தியும், உ.வே.சா.வும் உறவு கூறி உயர்த்தப்படுகின்றனர். உலகு என்ற இடவாகு பெயரிலும் வெற்றிலை நட்டான் என்ற சினையாகு பெயரிலும் இடமும் சினையும் மட்டுமே எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. சூழலும் சுவையும் வழக்கும் கருதி இவற்றின் பயன்பாடு தமிழிலக்கண மரபில் பரவலாகியிருக்கலாம்.

தென்னாட்டு சாக்ரசு தந்தை பெரியார்
குட்டி ஹாலந்து திண்டுக்கல்
சின்னக் கலைவாணர் விவேக்

போன்ற பெயர்த் தொடர்கள் மேற் காட்டியவற்றிலிருந்து வேறுபட்டுள்ளன. சிறப்பும் தகுதிப்பாடும் கருதியே இவையும் அமைக்கப்பட்டிருப்பினும் ஒன்றின் அல்லது ஒருவரின் இயற்பெயர் மற்றொன்றுக்கோ அல்லது மற்றொருவருக்கோ அப்படியே இங்கு ஆகிவருவதைக் காணமுடிகின்றது. ஆகுபெயர் போல ஒன்று மறைந்திடாமல் சிறப்புப் பெயரும் சிறப்பிக்கும் பெயரும் இரண்டுமே இடம் பெறுதலும் இதன் சிறப்பாகும். தற்காலத் தமிழில் புழக்கத்திலுள்ள இது போன்ற பெயர்ப்பயன்பாடுகளை இனங்கண்டு அறிமுகப்படுத்தலே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**ஆகுபெயர்களும் ஆகிவரும் பெயர்களும்**

இந்தியாவின் மைக்கேல் ஜாக்சன் பிரவுதேவா
ஏழைகளின் ஆப்பிள் தக்காளி/நெல்லிக்காய்
தெற்கின் பிரிட்டன் நியூசிலாந்து

போன்ற தொடர்களில் சிறப்புக்காகச் சுட்டப்படும் மைக்கேல் ஜாக்சன், ஆப்பிள், பிரிட்டன் போன்ற பெயர்கள் ஒன்றன் இயற்பெயரே. அவை முறையே பிரபுதேவா, தக்காளி, நியூசிலாந்து போன்றவற்றுக்கு ஆகி வந்துள்ளது. தமிழ் இலக்கண மரபில் பயன்படுத்தப்படும் ஆகுபெயரிலோ ஓர் இயற்பெயர் மற்றொன்றுக்கு ஆகி வருதல் இல்லை. சிறப்பிக்கப்படும் பெயர் ஆகுபெயரில் மறைபொருளாகி நிற்றலால் புரிதலில் தடையும் பொருண்மைக் குழப்பமும் நேரலாம்; ஆழ்நிலையில்தான் பொருண்மைத் தெளிவு புலப்படும். ஆனால் ஆகிவரும் பெயர்கள் எனச் சுட்டப்படும் பெயர்களில் சிறப்புப் பெயரும் சிறப்பிக்கப்படும் பெயரும் வெளிப்படத் தெரிவதால் மேல்நிலையிலேயே பொருண்மைத் தெளிவு கிட்டுகிறது. இவை இரண்டற்குமான வேறுபாடுகள் மேலாய்விற்குரியன.

**பட்டப்பெயர்களும் ஆகிவரும் பெயர்களும்**

குண்டுப் பூசணிக்காய், கொத்தவரங்காய், புலவர் தமிழரசன், அறிஞர் அறிவழகன், கலைஞர் கண்ணாயிரம் போன்ற தொடர்களில் வரும் பூசணிக்காய், புலவர் போன்ற பெயர்களைப் பட்டப் பெயர்களெனலாம். அறிவு, செயல்திறன், தோற்றம் காரணமாக இவை வழங்கப்படலாம்.

குட்டித் திருவாசகம் திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி
தமிழ்நாட்டு மாப்பசான் புதுமைப்பித்தன்
தமிழ் நாட்டின் பிராட்மன் சச்சின்

போன்ற தொடர்களில் ஆளப்படும் திருவாசகம், மாப்பசான், பிராட்மன் போன்ற சிறப்புப் பெயர்களும் தகுதியும் திறமையும் கருதித்தான் வழங்கப்பட்டுள்ளன என்றாலும் இவை அனைத்துமே இயற்பெயர்கள். பட்டப்பெயர்களில் வரும் சிறப்புப் பெயர்களான புலவர், அறிஞர் என்பன கல்வித் திறன் காரணமாக ஆளப்பட்ட காரணப்பெயர்கள். குண்டுப் பூசணிக்காய், கொத்தவரங்காய் போன்றவைகள் இயற்பெயர்கள் தாம் என்றாலும் அவற்றில் சிறப்பிக்கப்படும் பெயர் சிறப்புப் பெயருடன் இணைந்து தொடர்த்தன்மையில் இடம்பெறவில்லை.

மேற்சுட்டப்பட்ட காரணங்களால் தமிழ்ப் பெயர்களை இனங்காணும் வகைப்பாட்டில் ஆகுபெயர்கள், பட்டப்பெயர்கள் என்ற வகைப்பாடு மட்டும் போதாது என்பதும் அதுபோன்ற அமைப்புடைய பெயர்களை இனங்காணக் கூடுதலாக ஒரு பெயரும் வகைப்படும் தேவைப்படுதலும் தெளிவாகிறது. அவ்வகையில்

ஏழைகளின் ஊட்டி ஏற்காடு

தமிழ்நாட்டின் புரூ லி தனுஷ்

போன்ற தொடர்களில் ஆளப்படும் ஊட்டி, புரூ லி போன்ற பெயர்களை ஆகி வரும் பெயர்கள் என அழைக்கலாம்.

**ஆகி வரும் பெயர்கள்**

ஆகி வரும் பெயர்கள் என்று இனங்காணப்பட்டு தற்காலத் தமிழில் வழங்கி வரும் பெயர்களில் ஆட்பெயர்களே அதிகப் பயன்பாட்டிலுள்ளதைக் காண முடிகின்றது. நடிகர்கள் (தமிழ்நாட்டின் ஜீனியர் ஐசுவர்யாராய் த்ரிஷா, லிட்டில் சூப்பர் ஸ்டார் சிலம்பரசன், ஜீனியர் சிம்ரன் நிலா), விளையாட்டு வீரர்கள் (இந்தியாவின் பிராட்மன் சச்சின் டெண்டுல்கர்), அறிஞர்கள் (தென்னாட்டு பெர்னாட்ஷா அறிஞர் அண்ணா), எழுத்தாளர்கள் (தமிழ்நாட்டு மாப்பசான் புதுமைப்பித்தன்), அரசியல்வாதிகள் (சின்னக் காமராஜர் மூப்பனார்) என இந்தப் பட்டியலில் அதிகம் பதிவுகள் உள்ளன. பொருட் பெயர்களில் இடப்பெயர்களே அதிகம் பதிவாகியுள்ளன. (எ.டு) குட்டி ஜப்பான் சிவகாசி, தென்னிந்தியாவின் டார்ஜீலிங் கொடைக்கானல், வடக்கின் வெனி டாக்ஹோம் இந்தியாவின் சுவிட்சர்லாந்து காஷ்மீர், தமிழ்நாட்டின் மான்செ டர் கோவை.

குட்டித் தொல்காப்பியம் தொன்னூல் விளக்கம் என சிலபோது நூல்களும் ஆகிவரும் பெயர்களாக வழங்கப்பட்டுள்ளன. இவ்வகைப் பெயர்ப் பயன்பாட்டின் மூலம் கூடுதலான செய்திகளும் வரலாற்றுப் பின்னணியும் கிட்டுவதால் அதிகம் தெளிவு ஏற்படுகிறது; சுவை கூட்டுதலும் மெருகேற்றுதலும் இவற்றின் கூடுதல் பயன்களாகின்றன. பெரும்பாலம் இவை நேர்ச் சிந்தனையோடு (Positive) ஒருவரை அல்லது ஒன்றனைச் சிறப்பிக்கும் நோக்கோடு ஆக்கப்பட்டுள்ளமையை அறிய முடிகிறது. பிரெஞ்சு நளன் போன்ற ஆகி வரும் பெயரால் நாடுவிட்டு நாடு பண்பாடும், திறனும் இலக்கியமும் பரவுதற்கும் அதனைக் கண்டறிதலுக்கும் கூட வாய்ப்புண்டு.

**முடிவுரை**

**1.** ஆகுபெயர், பட்டப்பெயர் தவிர அவை போன்ற மற்றொரு பெயர் வகைப்பாடும் தற்காலத் தமிழில் பயன்பாட்டிலுள்ளது. தன்மை மற்றும் வடிவம் கருதி அதனை ஆகிவரும் பெயர் எனச் சுட்டலாம்.

**2.** ஆகி வரும் பெயர்களில் பெரும்பாலும் ஆட்பெயர்களே வழக்கிலுள்ளன. திரைத்துறை நபர்களும், அரசியல் வாதிகளும் அதிகம் சிறப்பிடம் பெறுகின்றனர்.

**3.** இடம், பொருட்பெயர்களின் ஆக்கத்தின் மூலம் வறுமையில் செம்மையுணர்வு புலப்படுத்தப்படுகிறது.

**4.** ஆகிவரும் பெயர்கள் பெரும்பாலும் நேர்ச் சிந்தனையோடு மட்டுமே – திறன் புகழ்தல் நோக்குடன் மட்டுமே புனையப்பட்டுள்ளன.

**5.** இவ்வகைப் பெயர்களால் பண்பாடு, வரலாறு போன்றவற்றை அறிதலோடு, மொழி மூலம் உலகளாவிய தன்மையை உருவாக்க முடியும் என்ற உண்மையையும் பெற முடிகிறது.

# கவிஞர் இன்குலாப் கவிதைகளில் இயக்கங்கள் தாக்கம்

*செ. காளிமுத்து* , தமிழ் விரிவுரையாளர்,
அரசினர் கலைக்கல்லூரி (தன்னாட்சி), கும்பகோணம் - 612 001.

ஐரோப்பியர்கள் வருகைக்குப் பின்னர் தமிழ் இலக்கியங்களில் பல புதிய வகைகள் தோன்றி வளர்ந்தன. கவிதை புதுக்கவிதையாகி, இன்று ஹைக்கூ என்ற வடிவம் பெற்றுள்ளது. மேலை நாட்டாரின் இலக்கிய இயக்கங்களின் தாக்கம் புதுக்கவிதையிலும், உரைநடை இலக்கியத்திலும் இடம் பெற்றுள்ளன. நம் நாட்டிலும் சில இலக்கிய இயக்கங்கள் தோன்றி வளாந்துள்ளன. கவிஞர் இன்குலாப் கவித்தைகளில் பல இலக்கிய இயக்கங்களின் தாக்கம் இடம் பெற்றுள்ளன. அவற்றில் மார்க்சியம், தலித்தியம், பெண்ணியம் போன்றனவற்றை இங்கு காண்போம்.

## 1. மார்க்சியம்

கார்ல் மார்க்ஸ் என்பவர் வரலாற்றுச் சார்பான முன்னேற்றக் கொள்கை ஒன்றை வெளியிட்டார். இக்கொள்கை எங்கெல்சின் தத்துவத்தினின்று மேற்கொள்ளப்பட்டது என்பர். "மனித வரலாற்றில் எல்லா வளர்ச்சிக்கும் முன்னேற்றங்களும் பொருளாதார வளர்ச்சி முறையாலேயே ஏற்பட்டவையாகும். மனித சமுதாயம் வர்க்க வேறுபாடற்ற சரிநிகர் சமான நிலையை நோக்கிச் சென்று, முடிவில் அந்நிலையை அது எய்வதாகும். அத்தகைய சமுதாயத்தில் அரசாங்கம் என்பது இருக்காது. தேவைகளும் கிடைக்காத பொருள்களும் இருக்கா. இக் குறிக்கோளினை ஒரு பொருளாதார வர்க்கத்தினருக்கும், இன்னொரு பொருளாதார வர்க்கத்தினருக்கும் இடையறாது மோதலை நிகழ்த்தும் இயக்கத்தினாலேயே எய்த முடியும். இம்மோதல், வர்க்க வேறுபாடற்றதும், அளவுக்கு மீறிய தேவைகளுடையதுமான அமைப்பு ஏற்பம் வரையில் நிகழும்" என மார்க்சியம் என்பதற்கான விளக்கமாக தா.ஏ. ஞானமூர்த்தி குறிப்பிட்டுள்ளார். மேலும், ந. பிச்சமுத்து மார்க்கசியத்தை பற்றி குறிப்பிடும் பொழுது, "வர்க்கங்கள் அற்ற பொது உடமைச் சமுதாயத்தைப் படைக்கும் பாட்டாளிகளின் வரலாற்று முக்கியத்துவத்தை உறுதிப்படுத்துவதே மார்கசிய சித்தாந்தத்தின் உயிர் நாடியாக இருக்கிறது" என்கிறார். இம்மார்க்சியத்தின் தாக்கம் பல புதுக்கவிதைகளில் காணமுடிகிறது. கவிஞர் இன்குலாப் தம் கவிதை நூலின் முன்னுரையில் தம்மை மார்க்சிய இலக்கியவாதியாகத் தெரிவித்துள்ளார். மார்க்ஸ் நூற்றாண்டு நினைவு விழாக் கவிதையான, "ஒன்றுபடுவோம் போராடுவதற்கு" என்னும் தலைப்பில்,

"மார்க்சியத்தை /ஒரு மகாத்மாவும்
மார்க்ஸ்!/..........
.........
"கனவுகளின்" இடத்தில்/விஞ்ஞானத்தை வைத்த உங்களை
ஒரு /மனிதராக் கண்டே /மரியாதை செய்கிறோம்"

என்கிறார். மார்க்சியம் ரஷ்யா, சீனா போன்ற நாடுகளில் வெற்றி பெற்றதை,

"நெருப்பாற்றில் நீந்தக்கற்ற /ஒவ்வொரு கம்யூனிஸ்டும்
சோஷியத்திலிருந்தாலும் /சீனத்திலிருந்தாலும்
வர்க்கச் சுரண்டலுக்கு /மௌன சாட்சியாக மாட்டான்"

என்று போற்றியுரைத்துள்ளார். மார்க்சியத்தைப் பரப்பிய மாவோவை,

"மார்க்சிய ஞான மின்சாரக் கம்பியால் /வார்க்ப்பட்ட நீ மக்களைத் தொட்டாய்
உறைந்து கிடந்த மக்கள் சக்தியோ/கோடி கோடி மின்னல் கொடிகளாய்
அண்டம் குலுங்க ஆகாயம் நடுங்க /எழுந்து நின்றது. எழுந்த சக்தியால்
சீனம் மட்டுமா சிவந்தது? இல்லை /பூமியின் இருண்ட கதைகள் எல்லாம்

பொங்கும் புரட்சியால் சிவப்பாக்குகின்றன.

என்று புகழ்ந்துள்ளார். மார்க்ஸ்யையும், மவோவையும், போற்றியதோடு மட்டுமின்றி மார்க்சியத்தை மக்கள் கடைப்பிடித்தால் உயர்வு தாழ்வற்ற ஒரு சமுதாயத்தை உருவாக்க கவிஞர் ஆசைப்படுவதை இவர் கவிதைகளில் வழி உணரலாம்.

## 2. தலித்தியம்

"தலித்" என்னும் சொல் ஒடுக்கப்பட்டோரைக் குறிப்பதற்காக முதன் முதலில் மராத்தியத்தில் பயன்படுத்தப்பட்டது. தலித் என்னும் மராத்தியச் சொல்லுக்கு "மண்ணின் மைந்தர்கள்" என்று பொருள். ஆனால், மண்ணின் மைந்தர்களைத் தீண்டாமைக்குள்ளாக்கி, அவர்களின் உரிமைகள் பறிக்கப்பட்டன. இந்த உரிமைகளுக்குப் போராடுபவரைத் தலித்துக்கள் என்கின்றனர். தீண்டாமை எதிர்ப்பு, சாதி ஒழிப்பு, பறிக்கப்பட்ட உரிமைகளுக்காப் போராடுதல் அவற்றைப் பெறுதல், முழுச்சுதந்திரம் அடைதல் போன்றவற்றை முன்வைப்பது தலித்தியம் எனலாம்.

தமிழில் தலித் இலக்கியம் என்ற சொல் 1990 முதல் பயன்படுத்தப்பட்டு வருகிறது. தலித்துக்கள் எனப்படும் தாழ்த்தப்பட்டோரின் சமூகச் சிக்கல்களையும், அவற்றிற்கான தீர்வுகளை காணும் வழிகளைக் கண்டறியவும் விழிப்புணர்வின் விளைவாகத் தலித் இலக்கியம் தமிழில் தோன்றியது எனலாம்.

கவிஞர் இன்குலாப் கவிதைகளில் பல தலித்துகளின் உரிமைகளுக்களுக்காகப் போராடுவதாகவே உள்ளது. ஊஞ்சல் என்ற தலைப்பில்,

முழங்கால் மறைக்க /வேட்டி கட்டாதே
முந்தானை கொண்டு /மாரை மூடாதே
செருப்புப் போட்டுத் /தெருவில் வராதே.
திரு விழாவில் நீ /புரவி எடுக்காதே !
................/.................

அம்பலம் போலவே /வேட்டி கட்டணும்
மறத்தியைப் போலவே /மாரை மறைக்கணும்'
தேவனைப் போலவே /செருப்போடு நடக்கனும்
அய்யனாார் விழாவில் /கள்ளனைப் போலவே
புரவி எடுத்து /ஊர்வலம் போகணும்"

என்று பாடியுள்ளார். இதில் வேட்டி கட்டுதல், மாரை மறைத்தல், செருப்பு போடுதல், புரவி எடுத்தல் போன்ற உரிமைகள் தலித்துக்களுக்கு மறுக்கப்பட்டதையும்; அதை உயர்ந்த சாதியினர் கடைபிடிப்பதுபோல் தாங்களும் செய்ய வேண்டும் என்ற உரிமை கோருதலை இங்கு சுட்டியுள்ளார். மேலும்,

"செருப்பனிந்து கொண்டு/தெருவில் வராதே என்று
சொல்லுகின்றவனின் /தோலை உரித்தே
செருப்பாக்கி மாட்டித்/தமிர் நடைபோடுவோம்"

என்று உரிமைக்காக போராடுவதோடு, எதிர்க்கவும் தயாரான நிலை குறிப்பிடுகிறார். தஞ்சை மாவட்டத்தில் வெண்மணி என்ற கிராமத்தில் கல்உயர்வு, கேட்டதற்காக கூலித் தொழிலாளிகளை தீயிட்டுக் கொளுத்தினர். இந்நிகழச்சியை,

"குடியானவன் வீட்டு அடுப்பெரியாத போதும்
கோபால கிருஷ்ணர்கள் குளிர் காய்ந்து கொள்ள
விறகாய் எரிந்து வெண்மணி விவசாயி தான்"

என்று வேதனையோடு வெளிப்படுத்தியுள்ளார். அரியலூர் அருகில் உள்ள குளப்பாடி கிராமத்தில் மிராசுதாரரின் கிணற்றில் குளிக்கப்போன தாழ்த்தப்பட்ட வீட்டுக் குழந்தைகளைத் தண்ணீரில் மின்சாரம் பாய்ச்சிக் கொன்றனர். "அந்த பம்புசெட்டை ரிப்பேர் செய்து விட்டார்களாம்" என்பதில் அப்பன், மாமன் தோண்டிய கிணறு என்று மகிழ்ச்சியோடு வந்த குழந்தைகளை,

பறப்பசங்களா........./சேத்துல புரளுற

சேரிப் பசங்களுக்குக் /கிணத்துத் தண்ணியா

குளிக்கக் கேக்குது - என்று உயர்ந்த சாதியினர் திட்டுகின்றனர்.

"தண்ணீரில் விரித்த மின்சார வலையில்

சிறகுகள் பொசுங்கிய சேரிச் சிட்டுகள்"

என்று வேதனையோடு இக்கவிதையை முடிக்கிறார் கவிஞர். இவ்வாறாக இன்குலாப் கவிதைகளில் தலித்தியம் வெளிப்பட்டுள்ளது.

### 3. பெண்ணியம்

தற்காலத்தில் உலகம் எங்கும் சமூக வாழ்க்கையில் ஏற்பட்டு வரும் பெண் விடுதலைச் சிந்தனையின் காரணமாக தமிழ் இலக்கியங்களில் பெண்ணியம் பதிவு செய்யப்பட்டுள்ளன.

பெண்களை இழிவுபடுத்துதல், அடிமையாக்குதல், இரண்டாந்தரக் குடியுரிமையுடைய நிலையில் நடத்துதல் போன்றவைகளுக்கு எதிராகக் குரல் கொடுப்பது மட்டுமின்றி பிரச்சனைகளை எதிர்கொள்ளுதல், அடக்கு முறைகளுக்கு எதிராகப் போராடுதல், சுயமாக சம்பாதித்து வாழ்தல், விழிப்புணர்வு அடைதல் போன்ற பெண்விடுதலை பற்றிய சிந்தனைகள் அனைத்தையும் பெண்ணியம் எனலாம். கவிஞர் இன்குலாப் பெண்ணுரிமைக்காக குரல் கொடுக்கிறார். "கண்மணி ராஜம்" என்ற கவிதையில்,

"பாஞ்சாலி என்ற ராஜகுமாரிக்குத் தான்

பரமாத்மாவும் பட்டாடை கொடுப்பான்

ராஜத்திற்கு ஒரு பருத்தி ஆடை கொடுப்பானா"

என்பதில் பாஞ்சாலிக்கு உதவிய கண்ணன் ஆடையின்றி வாடையில் மெலிந்த ராஜத்திற்கு ஆடை தந்து உதவுவானா? என்று கேட்கிறார். தனி ஒரு மனிதனுக்கு உணவில்லையெனில் இச்ஜகத்தினை அழித்திடுவோம் என்கிறார் பாரதி. ஆனால், இந்த ராஜம் உணவின்றி வருந்துவதை,

"அடுப்பெரியாத அந்தக் குடிசையில்

இவளின்

மேனிச்சூடு எத்தனை நாளைக்கு வரும்? "

என்கிறார். பெண்கள் போர்க்கோலம் பூண்டு தங்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளுக்கு எதிராகப் போராட வேண்டும் என்பதை "வீராங்கனைகளே" என்ற கவிதையில் குறிப்பிட்டுள்ளார்.

"எதிரியின் இலக்கு /இன ஒடுக்குமுறை மட்டுமல்ல

பாலியல் வகையிலான வன்முறையுந்தான் /துருப்பிடித்த நினைவுகளோடு

நுழைந்த எதிரிக்கு /வளைத்துப் பிடிக்கும்

கொடிகளாய் இல்லை...../பறித்துக் கசக்கும்

மலர்களாய் இல்லை /எதிர்க்கும் பெண் புலிகள்

என்பதை நிறுவினர் /இறந்து வாழும் /வாழ்க்கையை மெய்ப்பித்தீர்.

கவிஞர் இன்குலாப் கவிதைகளில் பொதுவுடைமைக் கருத்துக்களைக்கொண்ட மார்க்சியத்தையும், தாழ்த்தப்பட்ட மக்களின் உரிமைக்காக போராடும் தலித்தியத்தையும், பெண்கள் விடுதலையை வேண்டும் பெண்ணியத்தையும் வெளிப்படுத்தியுள்ளார். இவ்விலக்கியத் தாக்கத்தால் அண்மைக்காலத்தில் நம் நாட்டில் தொழிலாளிகள், தாழ்த்தப்பட்டவர்கள், பெண்கள் போன்றவர்கள் விழிப்புணர்வு அடைந்து வருவது குறிப்பிடத்தக்கது.

# தன் வரலாற்று ஆசிரியர்களும் இலக்கியப் பாங்கும்

முனைவர். *சி.கார்த்திகேயன்*,எம்.ஏ.,எம்.பில், உதவி ஆசிரியர்,
தமிழ்த்துறை, அ.ப.க.ப. கல்லூரி, பழனி.

உரை நடை நூல்களை இலக்கியமாக ஏற்றுக் கொள்ளும் மனப்பாங்கு இன்னும் நம்மிடை அருகியே உள்ளது உணர்த்தும் முயற்சியில் பல உரை நடை நூல்களும் இலக்கியப் பாங்கு பெற்று எழுகின்றமை உண்மையே தரும் கருத்து. தெளிவு, சந்தம், உணர்ச்சி ஆகிய பண்புகளே இலக்கியப்பாங்கு பெற முக்கியமானவை எனக் கூறலாம். தன் வரலாற்று நூல்கள் அதிகமாக இருந்த போதிலும் தன் வரலாற்றை எழுதும் ஆசிரியர்கள் அதை ஓர் இலக்கியப் பாங்குள்ள நூல்களாக எழுதுகிறார்கள். தன் வரலாற்று ஆசிரியர்களில் பாரதி, திரு.வி.க., உ.வே.சா., கண்ணதாசன், வைரமுத்து ஆகியோர்களின் இலக்கியப் பாங்கு பற்றி ஆராய்வதே இவ் ஆய்வின் நோக்கமாக அமைகின்றது.

## படைப்புத் திறன்

தன் வரலாற்று ஆசிரியர்கள் தம்மைப் பற்றி எழுதுவதற்குக் காரணமாக இருப்பது அவர்களின் படைப்புத்திறன். இப் படைப்பாற்றலின் உயிர்த் துடிப்பாக விளங்குவது உணர்த்தும் திறனே ஆகும். இவற்றைப் பின் வருமாறு வகைப்படுத்தி ஆராயலாம்.

1. மனநிலை புலப்பாடல்
2. ஒழுங்குபடச் செய்திகளைத் தொகுத்தல்
3. இலக்கியப் புலமை இவையே ஆசிரியனின் படைப்புத் திறனை வெளிப்படுத்தும் நிலைகளாகும்.

## 1. மனநிலை புலப்படல்

### (அ) பாரதி

பட்டினத்தார் பாடல் மூலம் நிலையாமைத் தத்துவத்தை எடுத்துக்காட்டி எழுதுவோரின் மனநிலையைத் தொடக்கத்திலேயே புலப்படுமாறு செய்வது பாரதியின் படைப்புத் திறனில் வெகுவாக வெளிப்படுகிறது. இவரது அத்வைத மனநிலை பின்வரும் அடிகளில் புலப்படும். கடவுள் எங்கே உள்ளார்? என்பதற்குப் பதிலாக சுத்தஅறிவே சிவமென்று, உயிர்களெல்லாம் தெய்வமன்றிப் பிறவொன்றில்லை என்று கூறுகிறார்.

### ஆ) திரு. வி.க.

பஞ்சாப் படுகொலையின் போது அதைப்பற்றி எழுதுவதையும் பேசுவதையும் தொண்டாகக் கொண்டிருந்த திரு. வி.க. தன் மனநிலை பற்றி என்னுள் எழுச்சி எனும் தலைப்பில் பின் வருமாறு குறிப்பிடுகிறார். அத்தொண்டுக் கென்று யான் பிறந்தேனோ பள்ளியை விடுத்தேனோ பத்திரிக்கையாசிரியனானேனோ காங்கிரஸில் சேர்ந்தேனோ என்றெல்லாம் யான் எண்ணுவேன் என்கிறார்.

### இ) உ.வே.சா.

உ.வே.சா. தம் குரு மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம் கல்வி பயின்றபோது குருவுக்கும் தனக்குமிடையேயான அன்பை விவரித்துச் சொல்லுகின்ற இடங்களில் இவரது மனநிலை தெளிவாகப் புலப்படுகிறது. சில இடங்கள் பின்வருமாறு தமிழ்நாட்டிலே இணையற்று விளங்கும் ஒரு தமிழாசிரியரிடம் நான் அடைக்கலம் புகுந்து தமிழமுதத்தினை வாரினுகர்ந்து செம்மாந்து நிற்பேன் என்கிறார்.

### ஈ) கண்ணதாசன்

கண்ணதாசன் தன் மனநிலை புலப்படப் பல இடங்களில் எழுதினாலும், குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய இடங்கள் பின் வருமாறு அந்த நாளில் படத்துக்கு கதை எழுதுவதென்பது பிரசவவேதனை போன்றது தானானானா என்றொரு தத்தகாரத்தைக் கொடுத்துவிட்டு வார்த்தைகளையும் கருத்துக்களையும் அதற்குள் திணிக்கச் சொல்வார்கள் உள்ளம் வலிக்கும், உடம்பு வலிக்கும், நினைப்பதைச் சொல்லவும் முடியாது ஏதோ வயிற்றுப்பாட்டுக்காக எழுதித் தீர்க்க வேண்டும் எனும் கூற்று அவரது மன நிலையை நன்கு புலப்படுத்துகிறது.

### உ) வைரமுத்து.

வைரமுத்து எழுத்துக்களிலும் மனநிலை புலப்படும் இடங்கள் அதிகம் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுமானால் பொன்மணி ஒலிப்பதிவு முடிந்து புறப்பட்டபோது பக்கத்தில் அமர்ந்திருந்த பூச்செடி வேரோடு விடைபெற்றுக் கொண்டதாய் நான் வெறுமையடைந்தேன் என எடுத்துக் காட்டுகிறார்.

## 2. ஒழுங்குபட செய்திகளைத் தொகுத்தல்

ஒரு தனி மனிதனின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை அவை நடந்த வரிசைப்படி அடைவுபடக்கோத்து, அவற்றின் மூலம் அந்தத் தனி ஒருவனின் குணச்சித்திரம் முழுமை பெற்றுத் தோன்றுமாறு கலையழகுடன் வரையப்படுவதே வாழ்க்கை வரலாறு என பிரித்தானியக் கலைக்களஞ்சியம் கூறுகிறது. அத்தகைய நிகழ்வுகளின் வரிசை முறையே இங்கு பேசப்படுகிறது.

### அ) பாரதி

பாரதியைப் பொருத்தமட்டில் பத்தாவது வயது நிகழ்வுகள் தொடங்கி அவர் திருமணம் நடந்தமை தந்தை இறந்து வறுமை எய்தியமை ஆகிய செய்திகள் வரை இதில் சிற்சில சம்பவங்களே வெளிப்படுத்தப்படுகின்றன. பாரதி தன் வாழ்க்கை வரலாற்றைக் கவிதை நடையில் ஒழுங்குபட செய்திகளைத் தொகுத்துப் படைத்துள்ளார். இது சுய சரிதையன்று வாழ்க்கை பற்றிய அனுபவ நோக்கே மதிப்பீடாக விளக்கப்படுகிறது இஃது உணர்ச்சிக் குறிப்புரை அடங்கிய படைப்பாகவே கருதத்தக்கது எனும் கைலாச பதியின் கூற்று இங்கு எடுத்துரைக்கத்தக்கதாகும்.

### ஆ) திரு. வி.க.

திரு.வி.க.வின் நூலைப் பற்றி குறிப்பிடும்போது வாழ்க்கை நிகழ்ச்சிகளில் இன்றியமையாத சிலவற்றை மட்டுங் கூறுகூறாகக் குறித்துச் செல்ல முயல்கிறேன் அக் குறிப்புக்கள் எனது வாழ்க்கை நிலையை உணர்த்தும் என்று நம்புகிறேன் இங்ஙனம் அவர் கூறினாலும் அவரது வாழ்க்கைக் குறிப்புகள் அவரைப் பற்றிய செய்திகளைப் பேரளவில் நமக்கு உணர்த்துகிறேன்.

### இ) உ.வே.சா.

உ.வே.சா. தம் வாழ்நாளில் சந்தித்த பல நபர்களைப் பற்றிய குறிப்புகளை மிக அதிக அளவில் தந்துள்ளார். ஆகவே இவரது வாழ்வை முற்றிலும் இடையூறின்றி உணர இயலாது போகிறது. இதனை வாழ்க்கை வரலாற்று இலக்கியம் எனும் நூற் கருத்தாலும் கூறலாம்.

### ஈ) கண்ணதாசன்

கண்ணதாசன் தனது நூலில் ஓடிப்போன காலங்களை எழுத்துக்களாகப் பதிவு செய்துகொள்ள நான் விரும்பினேன் என்றும் நான் நடந்து வந்த பாதை தனி வாழ்வில் நான் பட்ட துயரங்கள் இவையெல்லாம் ஒரு கதைபோல இருப்பதாக நான் கருதினேன். ஆகவே வேறு கதாபாத்திரங்களை உற்பத்தி செய்து கதை எழுதுவதைவிட என்னையே பாத்திரமாக்கி உண்மையைக் கதை வடிவில் சொல்ல நான் விரும்பினேன் என்றும் கண்ணதாசன் தம் சுயசரிதை நூல்களில் குறிப்பிட்டுள்ளார்

### உ) வைரமுத்து

வைரமுத்து தன் வரலாற்று நூலில் அழகோடும், சுவையோடும் நிகழ்வுகளைக் கவனமுடன் காட்டுகிறார். இளைஞர்களுக்கும் – இல்லற வாழ்வினருக்கும் உகந்த அறிவுரைகளைத் தம் அனுபவத்தைக் கூறும் போக்கிலேயே எடுத்துரைப்பது சிறப்பு என்று கூறலாம்.

## 3. இலக்கியப் புலமை

தன் கருத்துக்கு அணி செய்யும் வகையிலும், தெளிவு கருதியும் பிற இலக்கியங்களினின்று மேற்கோள் காட்டுவதும் தாமே கவிதை இயற்றி அவற்றை உரைநடை இடையே காட்டுவதும், எழுத்தாளனின் புலமையைக் காட்டும். மேற்கோள் காட்டுதல் உரை உறுப்புகளுள் ஒன்று எனத் தொல்காப்பியம் கூறும் எனக் குறிப்பிடுவார் இ.சுந்தரமூர்த்தி

### அ) பாரதி

பாரதி பட்டினத்தாரின் பாடலை முதன்மையாக கூறிப் பேசுகின்றபோதே தம் புலமை ஆளுமை அனைத்தையும் புலப்படுத்தி விடுகிறார். விருத்தப்பாவால் இயற்றப்பட்ட ஸ்வசரிதை இசைத் தன்மையோடும் சொற்கள்

தெய்வீகத் தன்மையோடும் இருப்பது கண் கூடு.

### ஆ) திரு. வி.க.

திருமுறை, புறநானூறு, குறள், தாயுமானவர் பாடல், பட்டினத்தார் பாடல், ஆழ்வார் பாடல் எனப் பல நூல்களினின்றும் மேற்கோள் காட்டியுள்ளமை இவரது ஆழ்ந்த வாசிப்பைப் புலப்படுத்தும்.

**திருமுறை**

| | பாடலடி | பாடியவர் | பக்கம் | நோக்கம் |
|---|---|---|---|---|
| திருமுறை | யானேதும் பிறப்பஞ்சேன் | மாணிக்கவாசகர் | ப.14 | பிறப்பின் நோக்கம் விடுதலை |
| | அப்பணி செஞ்சடை | திருமூலர் | ப.511 | சைவப் பெருமை கூறல் |
| புறம் | தென்கடல் வளாகம் | - | | |
| | பொதுமை இன்றி | - | ப.121 | தமிழ்ப்பொதுமை |
| குறள் | பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர் | - | ப.99 | பண்பட்ட நாகரிகம் |

### இ) உ.வே.சா

உ.வே.சா. பல இடங்களில் தம் புலமை புலப்பட எழுதியுள்ளார். இதனைப் பட்டியலாகவே தரலாம். சான்றாக ஓரிடத்தை எடுத்துக்காட்டலாம்.

அப்பால் சுவாமி மலையிலுள்ள முருகக் கடவுள் விஷயமாகப் பதினாறு கட்டளைக் கலித்துறைகளை இயற்றினேன். உயர்ந்த சாஸ்திரக் கருத்துக்களோ, கற்பனைகளோ, அப்பாடல்களில் அமையவில்லை என்னுடைய அனுபவம் சிறிது பழக்கம் குறைவு அந்த அளவில் எத்தகைய கருத்துக்கள் இருக்குமோ அவைகளையே அப்பாட்டில் காணலாம்.

ஆடும் அரவிற்கு நேராகச் சீறும் அவரையகன்
நீடொன்றடியர்க ளோடெறு மேவியிருப்பவருள்
நாடு மிருவர் தமக்கரி யானரு யாததுயர்
சாடும் புனற் பொன்டை சூழ்திரு வேரகச் சண்முகனே

இப்பகுதி இவரது அடக்கத்தையும் இறை நம்பிக்கையையும் புலப்படுத்துகின்றது.

### ஈ) கண்ணதாசன்

கண்ணதாசனிடம் இலக்கியப் புலமை வெளிப்படும் இடங்கள் அதிகம் எனலாம். எனது சுயசரிதை என்னும் நூலில் வீழ்வாரை வீழாமுன் மேலெடுத்துத் தான் தாழ்வான் எனும் கம்பராமாயணப் பாடல் அடி காட்டப்பட்டுள்ளது. வனவாசத்தில் அறிவு என்பதனுக்கு கூறும் விளக்கம் அவர் புலமையைக் காட்டும்.

அறிவு என்பது என்ன? தான் படிக்கின்ற பொழுது உள்ளே போய், ஒரு புதுப்பொருளை வெளியே கொண்டு வந்து தள்ளுகிறது. அவ்வளவுதான் என்பது அவ்விளக்கம் ஆகும்.

### உ) வைரமுத்து

வைரமுத்து தம் சரிதை நூலில் குறளுக்கு புது விளக்கம் தருகிறார். தெய்வத்தைத் தொழாமல் கணவனையே வழிபடும் ஒரு பெண் காலந்தப்பாமல் பெய்யும் பருவ மழைக்கு ஒப்பாவாள் என்று கூறுவது இவரது புலமைக்குச் சான்றாகும்.

### முடிவுரை

மேற்கூறிய தன் வரலாற்று ஆசிரியர்களின் எழுத்துக்களில் தமது வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகளை ஓர் இலக்கியமாக வடித்து அனுபவ கருத்துக்களைப் பிறர் அறிய பயன்படுமாறு படைத்து இலக்கியத்தில ஒரு புதிய போக்கையும் பாங்கையும் அமைத்திருப்பது போற்றத்தக்கது.

# வாஸந்தியின்"வேர்களைத் தேடி" - இல் "மனிதநேயம்" உளவியல் பார்வை

*சு. கீதா* தமிழ்த்துறை ஆய்வு மாணவர்,
பூ.சா.கோ. கலை அறிவியல் கல்லூரி, கோவை.

**முன்னுரை :**

இலக்கியங்கள் வாழ்க்கையிலிருந்து பிறப்பன; வாழ்க்கையைப் பிரதிபலிப்பன; எனவே வாழ்க்கையோடு தொடர்புடைய மனித மனங்களையும் அவை சந்திக்கும் சிக்கல்களையும் இலக்கியத்தில் இனங்கான இயலும். இத்தகு முயற்சிக்குப் பிற இலக்கியங்களை விட புதின இலக்கியம் பொருத்தமானதாகிறது. ஏனெனில் அதில் பலதரப்பட்ட மனிதர்களைக் காண இயலும். இக்கண்ணோட்டத்தில் வாஸந்தியின் வேர்களைத் தேடி என்ற நாவலின் நுவல் பொருளை உளவியல் நோக்கில் காணும் முயற்சியில், உளவடியலார் குறிப்பிடும், முக்கியக் கூறுகளுள் ஒன்றான மனித நேயம் இக்கட்டுரையில் அலசப்படுகிறது.

**உளவியல் - விளக்கம் :**

"உளவியல்" மனிதர்களின் நடவடிக்கைகளை ஒழுங்குமுறையாக அறிகின்ற ஒரு அறிவியல். எல்லாத் துறைகளிலுமே அதனுடைய முக்கிய நோக்கம் மனிதர்களின் நடத்தையை முழுமையாக ஆய்வதாகும்" என்று உளவியலை மு. இராசமாணிக்கம் வரையறுக்கிறார். மனித உள்ளத்தின் உணர்ச்சிகள், விருப்புகள் வெறுப்புகள் முதலியவற்றை அறிந்து கொள்ள உதவுவது உளவியல். உளவியலை ஆங்கிலத்தில் டநவஇஏஞக-ஞஎவ என்று குறிப்பிடுவர்."சைக்" "டநவஇஏஉ" என்ற கிரேக்கச் சொல் ஆன்மாவை (நஞமக) குறிக்கும் லாகஸ் "கஞஎஉந" என்ற சொல் "அறிவு" அல்லது ஆய்வு என்று பொருள்படும். எனவே, சைக்காலஜி என்ற ஆங்கிலச் சொல், ஆன்மாவைப் பற்றிய அறிவு என்வும் மனத்தத்துவத்தைப் பற்றியது எனவும் அறியலாம்.

**உளவியல் நாவல்களின் தோற்றம் :**

"சிறுகதை அல்லது நாடகத்தை விடவும் நாவலில் தான் வாசகன் ஒருவன் தனது பக்குவத்திற்கு ஏற்ப முழுவதும் தோய்ந்து ஈடுபடுகின்றான். நாவலில் இடம்பெறும் சம்பவங்கள், திடீர் திருப்பங்கள், மர்மங்கள் போன்றவற்றில் இருந்த ஈர்ப்பு வாசகனுக்குக் காலப்போக்கில் குறைந்து விட்டது. பாத்திரங்களின் உணர்வு உலகத்தில், கனவுகளில், கற்பனைக் கோட்டைகளில் புகுந்து பார்க்கும் ஆர்வம் மிகுந்து விட்டது. நெஞ்சில் ரகசியமாக வைத்து இன்புறும் - நினைத்து துன்புறும் - தன்னோடு கலந்துவிட்ட பல தனிப்பட்ட செய்திகளை, நாவல் விவரிக்கும் போது அது மெய் தீண்டும் புலன் உணர்வுக்குச் சமமாகிறது.

**மனித நலக் கொள்கை :**

ஒரு மனிதனின் தனித்தன்மையினைப் பற்றியும், சிறப்பியல்புகளைப் பற்றியும் ஆராய்ந்து பகுப்பாய்வு செய்யும் பிரிவு உளவியலில் ஆளுயைப் பிரிவாகும். பல்வேறு அல்லது வெவ்வேறு கோணங்களில் ஒருவரது நடவடிக்கை மற்றும் குணப்பண்புகளை ஆராய்ந்து கூறுவதில், உளவியலில் பல்வேறு கருத்தியல்கள் (Theory) உள்ளன.

ஒவ்வொன்றும் அவ்வவற்றின் கண்ணோட்டத்தில் தனக்கே உரிய முறையில் மனிதனை கண்ணுற்றாலும், பொதுவாக, இவை ஒருவரது

1. உளச் செயல்பாடு என்ன? 2. தனிக் குணத்தன்மை என்ன? 3. எவ்வாறு இவை தொடர்புபடுத்தப்படுகின்றன? என்பனவையாக உள்ளன.

ஒருவரது ஆளுமையினை கீழ்காணும் முறையில் ஆராயலாம்.

1. பிரதிபலிக்கின்ற ஆளுமைப்பண்பு
2. ஆளுமைப் பண்பின் அடிப்படைக் காரண காரியங்கள்
3. மனவளர்ச்சி

போன்றவற்றின் வழியாக, ஒருவரது ஆளுமைப் பண்பினை ஆராயலாம்.

உளவியல் அறிஞர் மாஸ்கோ அவர்கள், "மனித நலக் கொள்கை அடிப்படையில் ஒவ்வொரு மனிதனும் தன் இயல்பான தேவைகளின் அடிப்படையில் முன்னேறுகிறான்" என்று குறிப்பிடுகின்றார். அந்தத் தேவைகள் ஆறு படிநிலைகளை கொண்டது என்றும் அவை கீழிருந்து மேலாக கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறி மேனிலையாக்கம் பெறும் உச்ச கட்டத்தை அடைகிறான் மனிதன் என்று விளக்கமும் தருகின்றார். அந்த படிநிலைகளாவன,

1. உடல் சார்ந்த தேவைகள், 2. காப்புத் தேவைகள், 3. அன்புத் தேவைகள்

4. தன்மதிப்புத் தேவைகள், 5. நன்மதிப்புத் தேவைகள், 6. மேனிலையக்கத் தேவைகள்

இந்த நிலைகளில் ஒரு சிலவற்றை மட்டும் அடிப்படையாகக் கொண்டு வாஸந்தியின், வேர்களைத் தேடி அலசப்படுகின்றது.

**அன்பு :**

"அன்பெனும் பிடியில் அகப்படும் மலையே" - வள்ளலார்.

இவ்வன்பு உளவியல் அறிஞர் மாஸ்லோ அவர்கள் கூறும் அன்புத் தேவை (Love & Belongingness) என்பதன் அடிப்படையில் அமைகிறது.

அன்பின் வழியது உயிர்நிலை (5)
அன்போடு இயைந்த வழக்கென்ப (6)
அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையர்
என்பும் உரியர் பிறருக்கு (7)

என, மனித வாழ்விற்கு ஆணிவேர் அன்புதான் என்றும் பொய்யா மொழிப் புலவர் குறிப்பிடுகின்றார். தனி மனிதனின் உயிரும் உள்ளமும் தழைக்க வேண்டுமெனில் அன்பு மிகவும் அவசியம்.இந்த அன்பின் அடிப்படையில் வேர்களைத் தேடி நாவலில் இடம் பெறும் பாத்திரங்களான தைதிலி, ரோஸலிண்ட், முரளி, மார்க்ரேட், மைதிலியின் அம்மா, அப்பா போன்றோர் அமைந்திருக்கின்றனரா? என்பதை இனி ஆராய்வோம். மைதிலியின் அவவலகத்தில் பணிபுரிபவள் ரோஸலிண்ட். இவள் மைதிலிக்கு நெருங்கிய தோழி. ரோஸலிண்ட் தொண்டைப் புற்றுநோய் காரணமாக ஆறுமாத காலமே உயிரோடு இருப்பாள் என்ற செய்தி கேட்டதும், மைதிலி துடிதுடித்துப் போனாள். மைதிலியின் அம்மா சாதி வேறுபாடு பார்ப்பவள். ஆனால் மைதிலியோ,கிருத்துவப் பெண்ணான ரோஸலிண்ட் ஒருநாள் அலுவலகம் வரவில்லை என்றாலும் தாங்க மாட்டாள். இது மைதிலியின் சாதி வேறுபாடற்ற அன்பை அறியலாம்.

துன்ப நினைவுகளும் சோர்வும் பயமுமெல்லாம்
அன்பில் அழியும்படி - கிளியே
அன்புக் கழிவில்லை காண்.- பாரதியார்.

அன்பு என்ற நேயப் பண்பு வேர்களைத் தேடியில் மைதிலி என்ற பாத்திரத்தின் வாயிலாக, அழுத்தமாக வெளிப்படக் காணலாம்.

**பாசம் :**

அன்பு, பாசம் இரண்டையும், தனித்தனியே பார்த்தால், தனித்தனிப் பண்புகள் போலத் தோன்றினாலும், இரண்டுமே ஒவ்வொன்றின் மாற்று வடிவங்கள் எனலாம்.

துடி அடிக்கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடி ஊட்டிப்பின் உண்ணும் களிறு (6)

என்ற பாடல் வரிகளின் மூலம், அறியலாம். இந்தப் பாசம் என்ற பண்பு வெளிப்படும் இடங்களில்

இந்நாவலில் காணலாம்.மைதிலி, சதீஷ் இருவரும் சட்டப்படி பிரிந்தவர்கள். அவன் தில்லி வரும்பொழுதெல்லாம், மைதிலியுடன் தொடர்பு கொண்டு பேசுவான். மைதிலி, இதனை விரும்பவில்லையெனினும், ஆழ்மனதில், அவனிடம் பேசுவதால் நிம்மதி பிறப்பதாக உணர்கிறாள். "விவாகரத்து ஆனதினால் நாம் விரோதிகள் இல்லை, ஏன் நாம் நல்ல நண்பர்களாக இருக்கக் கூடாதா?" என்று அவன் கேட்கிறான். பிரிந்திருக்கும் நிலையிலும், சதீஷின் கவர்ச்சி மாறாத பேச்சும், புன்னகையும் அவளுக்கு வியப்பை அளித்தது. இதுவே, அவளை, மீண்டும் மீண்டும் அவனைச் சந்திக்கச் செய்தது. சதீஷிடம் இருந்து விவாகரத்துக்காக விடாப்பிடியுடன் ஒரு வருட காலம் நீதிமன்றப் படிகளை ஏறியவள், இவளுக்குச் சாதகமான தீர்ப்பு கிடைத்ததும், அவளுடைய கட்டுக்குள் அடங்காததாக கண்ணிலிருந்து நீர் பெருகிற்று. சாதகமான தீர்ப்புக்கிடைத்த பிறகும் அழுவது அவளையே கேவலப்படுத்திக் கொள்வதாக உள்மனதில் தோன்றினாலும், நாபியிலிருந்து வெடித்த துயரம் தர்க்கத்துக்கு உட்படாததாக இருந்தது. இதிலிருந்து மைதிலியின் பாசவுணர்வை அறியலாம்.

## நட்பு :

"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவது நட்பு" (7) திருக்குறள் (788)

"முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு " திருக்குறள் (786)

என நட்பின் பெருமைகளைப் பற்றிப் பேசுகிறார் தெய்வப் புலவர். நட்பு என்பது பெற்றோர், உற்றார், மனைவி, மக்கள் என மனித வாழ்வின் முக்கிய பந்தங்கள் கைவிட்ட நிலையிலும், நட்பு என்ற பாலம், சிலருக்கு வலுவாய் இருந்து காப்பாற்றும். வள்ளுவர் கூறும் இந்த நிலைகளில் வாஸந்தி அவர்களின் வேர்களைத் தேடி நாவலில் மைதிலி, ரோஸலிண்ட் கதாபாத்திரங்களை ஆய்கிறேன். ரோஸலிண்ட் மைதிலியிடம் கஞ்சன்ஜங்கா செல்ல வேண்டும் என்று கூறியதும், அயோத்தியா கலவரம் மூளும் அபாயம் இருப்பதை அறிந்தும், அவளின் பிடிவாதம் காரணமாகவும், நட்பின் துடிப்பாலும், கஞ்சன்ஜங்கா செல்ல மைதிலி அனுமதிக்கின்றாள் என்பதிலிருந்து நட்பின் ஆழமான வேர் புலப்படுகின்றது. இவ்வாறு, மைதிலி, ரோஸலிண்ட் இருவரும், கஞ்சன்ஜங்கா செல்வது என்பது, உளவியல் அறிஞர் மாஸ்லோ குறிப்பிடும் காப்புத் தேவை (Safety Needs) என்ற அடிப்படையில் கூறலாம். அதாவது, உடல்சார் தேவைகள் பூர்த்தியாகும் நிலையில், காப்புத் தேவையை மனம் நாடுகிறது. இது உடலுக்கு ஊறு ஏற்படாவண்ணம் பாதுகாப்பும், அஞ்சத்தக்க சூழல்களில் இருந்து பாதுகாப்பு தேடுதல், காப்புணர்வு, சமநிலை, நலம், அமைதி போன்ற நிறைகளை மனம் நாடுகிறது. இவற்றில் ரோஸலிண்ட், மைதிலி இருவரும் நலம், அமைதி இவற்றைத் தேடி தான் கஞ்சன்ஜங்கா செல்கிறார்கள் என்பதை,

"இது வித்தியாசமான சூழல் தான் தில்லியில் கிடைக்காததால்
தூய்மையான காற்றுதான்" (8)

என்று மைதிலி கூறுவதிலிருந்தும்,

கஞ்சன்ஜங்காவைப் பார்க்காவிட்டால் என் ஆன்மாவிற்கு
சாந்தி இருக்காது (9)

என்று ரோஸலிண்ட் கூறுவதிலிருந்தும், இவர்களின் மனநிலையையும் அது காப்புத் தேவைகளைச் சார்ந்தது என்பதையும் அறிந்து கொள்ளலாம்.

## ஆழ்மனமும் மனித நேயமும் :

முரளி தான் ஒரு கிறித்துவப் பெண்ணை விரும்புவதால், அம்மா தன்னுடைய திருமணத்திற்கு சம்மதிக்க மாட்டார்கள் என்று தெரிந்திருந்தும், அவன் மார்கரேட்டை விரும்புகிறான். அம்மாவின் மனநிலையை

மாற்ற மார்க்கரேட்டை பல கர்நாடகக் கச்சேரிகளுக்கு அழைத்துச் செல்கிறான். இவனது குடும்ப சம்பிரதாயங்களைக் கற்றுக் கொடுக்கிறான். புரட்டாசி சனிக்கிழமையன்று, அம்மா சொன்னாள் என்ற காரணத்திற்காக, நாமம் போட்டுக் கொண்டாலும், அதை வெளியில் வந்தவுடன் அழித்து விடுகின்றான். அதை மைதிலி, "ஏன் அழிக்கிறாய்" என்று கேட்டதற்கு, "மனசளவிலே நான் இந்துவா இருந்தா போதும், அதை நான் அடையாளம் போட்டுக் காண்பிக்க வேண்டியதில்லை." (10)

என்று ஆவேசத்துடன் முரளி கூறுகிறான். இதிலிருந்து அவனது ஆழ்மனம், மதத்தை விட மனிதத்தை நேசிக்கிறது என்பது புலனாகும்.

## முடிவுரை :

பொறுமை அல்லது சகிப்புத் தன்மை என்பது நல்ல சமுதாயத்திற்கான மனிதநேயச் சிந்தனையாக உளவியல் சுட்டுகிறது. இந்நிலையில், மனித நேயமே, உண்மையான மதம் என்பது பெறப்படுகிறது. அதாவது அன்பு, பாசம் என்ற நிலைகளில் சக மனிதர்களோடு இணக்கமான உறவுக்கு வழி வகுப்பது அது என்பது தெரியவருகிறது.

காப்பியங்களில், சாதி மத வேறுபாடு நீக்கம், பசிப்பிணி நீக்கல், உலக ஒருமைப்பாடு போன்ற பண்பட்ட மனித நேயத்தையும், தூய அன்பினையும் பரவலாகக் காண முடிகிறது. மாறாக, இக்கால இலக்கியங்களில் வேறுபாடுகளைக் கண்டித்து ஒருமைப்பாட்டை அறிவுறுத்துகின்ற நிலையில், மனித நேயச் சிந்தனை புலப்படுத்தப்படுகிறது.

மாஸ்லோ குறிப்பிடும் தன்னை உணர்ந்த மேனிலையாக்க நிலையில் மகத்தான மனிதநேயச் சிந்தனை நாவலில் வெளிப்படுகிறது. நல்ல மனித மனங்கள் நாடுவதும் போற்றுவதும் நலமே என்ற சிந்தனையில் இக்கருத்துப் பெறப்படுகின்றது. இந்நிலையில், இன்று தேடப்படுவதும், தேடுவதற்கு உரியதுமாக உடையது மனித நேயமே என்பதை இந்நாவல் எடுத்துரைக்கிறது.

வேர்களைத் தேடி நாவல் மறைந்து வரும் மனித நேயம் என்ற வேரைத் தேடும் பணியை மேற்கொண்டுள்ளது. அதன் வழி மனித நேயப் பயிருக்குப் புத்துயிர் அளிப்பதாக, உளவியல் வழி நின்று இந்நாவல் உயர்ந்த சமூகப் பணியாற்றியுள்ளது என்ற துணிவுடன் இந்நாவலின் நுவல் பொருள் மனித நேயமே என்ற விடை பெறப்படுகிறது.

## துணை நூற்பட்டியல் :


| | | |
|---|---|---|
| 1. மு. இராசமாணிக்கம் | உளவியல் துறைகள், 2 ஆம் தொகுதி | ப.1 |
| 2. Mangal S K. | General Psychology | P 1 |
| 3. க. கைலாசபதி | தமிழ் நாவல் இலக்கியம் | ப.84 |
| 4. க. கைலாசபதி | தமிழ் நாவல் இலக்கியம் | ப. 84 |
| 5. திருவள்ளுவர் | திருக்குறள் | குறள் எண்கள் 80,73,72 |
| 6. கலித்தொகை | | ப. 19 |
| 7. திருவள்ளுவர் | திருக்குறள் | குறள் எண்கள் 788, 786 |
| 8. வாஸந்தி | வேர்களைத் தேடி | ப. 136 |
| 9. வாஸந்தி | வேர்களைத் தேடி | ப. 116 |
| 10. வாஸநதி | வேர்களைத் தேடி | ப. 69 |
| 11. வாஸந்தி | வேர்களைத் தேடி | ப. 17. |

# கவிஞர் முத்துலிங்கம் கவிதைகளில் சமுதாயம்

முனைவர். *தி. த. கீதாராணி,* தமிழ்த்துறை,
மீனாட்சி மகளிர் கல்லூரி, சென்னை - 24.

இலக்கியத்துறை சமுதாயத்தோடு நெருங்கிய தொடர்புடையது. இலக்கியங்கள் மனிதனையும் இயற்கையையும் பாடியுள்ளன. ஒவ்வொரு இலக்கிய வகைமையின் தோற்றத்திற்கும் குறிப்பிட்டதொரு சமுதாயம் பின்புலமாக அமைகின்றது. மனித உணர்வில் இழையோடும் நுண்மையான பண்புகள், மொழி, இனம், மக்கள், சீர்திருத்த நோக்கம் என்று சமுதாய நலன் கருதித் கவிதை பாடியோர் பலராவர். கவிஞர் முத்துலிங்கம் சமுதாய நலனில் அக்கறைகொண்டு "செந்நெல்" - என்று சமுதாய கவிதைகளைப் பாடியுள்ளார். இவர் கவிதைகளில் தமிழின் பெருமை. தமிழின் உயர்வு, சமுதாய நலன் என்னும் கருத்துக்கள் இடம்பெறுகின்றன.

## சமூகவியலும் இலக்கியமும்

"தனி மனிதனையும் மனிம சமுதாயத்தையும் ஆராய்வதே சமூகவியல் முக்கியக் குறிக்கோளாகக் கொண்டுள்ளது" என்பர் கைலாபதி. மனிதன் "வாழ்க்கை நடைமுறையின் காரணமாக அமையும் உணர்வு நிலையில் ஒரு வெளிப்பாடாக இலக்கியத்தைத் தோற்றுவிக்கின்றான். அவனிலிருந்து தோன்றுகிற இலக்கியத்திலே அவன் இருக்கிறான். அவன் போன்ற பிறர் அதனை எதிர்கொள்கிறார்கள். எனவே, இலக்கியமான அதன் தோற்றம், அதன் பொருள், அதன் பயன்பாடு ஆகிய மூன்று நிலைகளிலும் மனிதகுலத் தொர்புடையதாக விளங்குகின்றது. இது இலக்கியத்தின் அடிப்படைப் பண்பு என்பர். தி. சு. நடராஜன் (திறனாய்வுக்கலை ப. 50) தே. பொனால்ட் என்னும் பிரான்சு நாட்டு அறிஞர். "இலக்கியம் சமுதாயத்தின் புலப்பாடு" என்று கூறுவர் அறிஞர் ஹேரிலெவின், இலக்கியத்திற்கும் சமுதாயத்திற்கும் பரஸ்பரமானவை என்றும் இலக்கியம் சமுதாய காரணங்களின் விளைவு மட்டுமல்ல, சமுதாய விளைவுகளின் காரணமுமாகும் என்பர். (தி. சு. நடராசன் திறனாய்வு ப. 51) கவிஞர் முத்துலிங்கம் சமுதாய நிகழ்வுகளைத் தம் கவிதைகளில் பாடியுள்ளார்.

## மொழிப்பற்று :

மொழி என்பது மக்கள் மனக்கருத்தை வெளியிடுவதற்கு உதவுவது. அம்மொழி தமிழ்மொழியாகிய செம்மொழி என்பதைக் கூறுகின்றார் கவிஞர். தமிழ்மொழி ஆட்சிமொழியாக இருத்தல் வேண்டும் என்கிறார். கவிஞர் எண்ணியதுபோல் தமிழ்மொழி செம்மொழி ஆயிற்று இந்நாளில்.

"தமிழ் மீது பொய்யான பற்று வைக்கும் தலைவர்கள் /தலைமையில் திரண்டு நிற்போம் !

தமிழ் உணர்ச்சி குன்றி வரும் தற்கால இளைஞர்களைத் /தமிழ் எழுச்சி கொள்ளவைப்போம்" (ப.11)

என்று இளைஞர் தமிழ்மொழி வளர்ச்சியில் ஈடுபாடு கொள்ள வேண்டும் என்கிறார். ஆங்கிலம் கலந்து தமிழில் எழுதல் கூடாது, தமிழின் தூய்மைத்தன்மை போற்றவேண்டும் என்பதை,

" தமிழ்வழிக் கல்வி பயில்வதற்குச் சட்டம்/தருகின்ற அரசை வரவேற்பவன்" என்றும் கூறுகின்றார்.

"தாய்மொழியில் கல்வி - அந்த /ஜப்பானைப் போல்நாம் பயிலத் தொடங்கிவிட்டால்

ஆய துறைகளிலே - நம்/ஆளுமை கண்டே அகிலம் வணங்குமடா" (ப. 100) என்கிறார்.

## மனஉறுதி :

மனிதன் தன்னைச் சமுதாயத்திலிருந்து அப்புறப்படுத்திக்கொண்டு ஒதுதுங்கி விடாமல் தனது கால சமுதாயத்தின் பழக்க வழக்கங்களையும் நடை, உடை பாவனைகளையும் உணர்ந்து அறிந்து ஏற்று வாழ்வதோடு சமூகவயமாகும் திறத்தினையும் அந்த குறிப்பிட்ட காலச் சார்புடன் இயற்றப்பட்ட இலக்கியத்தின் மூலம் தெளிந்து தேர்தல் எளிதாகும்" என்பர் (இ. மறைமலை, இலக்கியமும் சமூகவியலும் ப. 5.) தான் வாழும் சமுதாயத்தில் மக்கள் மன உறுதியோடிருத்தல் வேண்டும் என்கிறார் கவிஞர்.

"நோக்கம் நிறைவேறும் காலம் வரை - நீ /நொடிப்பொழுதும் கண்தூங்காதே நீ

ஆக்கும் பணியிங்கே ஏராளம் - அட/அதுவரைக்கும் நீ துவளாதே

அர்ச்சுணப்பார்வை உனக்கிருந்தால் - வாழ்வில் /அனைத்திலும் வெற்றி உனக்குவரும் (ப.7) என்று பயணம் வெற்றி பெறும்வரை தொடரட்டும் என்கிறார்.

**உழைப்பு :**

" உழைப்பே உயர்வு வாழ்வின் உன்னத நிலையை,/உளி அடுபடுகிற காரணத்தால் -கல் உளர்ந்ததோர் சிற்பம் ஆகிறது" (ப. 8) /என்று கூறுவதோடு, ஒளியால் இருள் ஓடுகிறது. கையடிப்பதால் நல்ல மேளச்சத்தம் கேட்க முடிகின்றது. எழுதுகோல் கைப்படுவதால் சிறந்த இலக்கியம் உருவாகிறது. கொழுமுனை கிழிக்கிற காரணத்தால் நிலத்தில் பயிர் விளைகிறது. தரையில் துளையிடுவதால் தண்ணீர் கிடைக்கிறது. மூங்கில் துளையிடுவதால் இனிய இசை தோன்றுகிறது என்கிறார்.

...........மண்ணில் /அனுபவ அடிபெறும் மனிதர்களே

அறிஞர்கள் ஞானிகள் ஆகிறார்கள்" (ப. 8) /

என்று உலக அனுபவத்தைப் பெறுவதைச் சுட்டுகிறார். "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்" என்னும் குறள் கருத்திற்கேற்ப,

"வாயினிக்க உணவளித்ததே உணர்வளிக்கும்/வயற்கூட்டம் எல்லாமே உயிரின் கோயில்" (ப. 13)

என்கிறார். "பாங்கான ஜப்பான் போல் போட்டியிட்டுப் பக்குவமாய் முன்னேற உழைக்க வேண்டும்" (ப. 79) என்கிறார் கவிஞர்.

"பஞ்சாபி மக்களெல்லாம் பயிர்த் தொழிலை உயிர்த் தொழிலாய்ப்

பாவிக்கின்றார்/எஞ்சியுள்ள மாநிலத்தில் இருக்கின்ற மக்களெல்லாம்

இதுபோல் எண்ண /கிஞ்சிற்றும் நினைப்பதில்லை இதனாலே

விவசாயம் கீழாயிற்று" (ப. 66) என்று வருத்தத்தோடு கூறும் கவிஞர், விளைநிலங்கள் வீட்டுமனை ஆகும் நிலைகுறித்து பாடியுள்ளார்.

**சுயநலம் :**

மனிதர்கள் சுயநலம் மிக்கவர்களாக உள்ளார்கள் என்பதை விவரிக்கும் கவிஞர்குயில் பாராட்டுப் பெறவேண்டும் என்று கூவுவதில்லை. மானிடர்கள் பாராட்டுவார்கள் என்று மாநதி பாய்வதில்லை, தேனீக்கள் தன் பயன்கருதி தேனைச் சேர்க்கவில்லை, மழை கைம்மாறு கருதாமல் பெய்கிறது.

"மனிதன் மட்டும் பலன்கருதி - இந்த /மண்ணில் காரியம் ஆற்றுகின்றான்

மனிதனைப் போல சுயநலம் - இந்த/மாநிலத்தில் எங்கும் கண்டதில்லை" (ப.5) என்கிறார்

**அமைதிக்கு வழி :**

சமூகவியலாளன் எழுத்தானது கற்பனையில் எழுந்த பாத்திரப்படைப்புகளின் அல்லது கதைமாந்தரின் பட்டறிவுச் சூழல்களும் எத்தகைய வரலாற்றுப் பின்னணியிலிருந்து உருவாகின என்பதை ஆய்ந்து காணவேண்டும் என்பர். இ. மறைமலை கவிஞர் பாகிஸ்தானிர் போர் புரிந்த வீரர்களைப் பாராட்டி,

காஷ்மீர் பகுதியில் உயர்ந்தே நிற்பது /சிகரங்கள் என்றால் உண்மையல்ல

வீரர்களே உங்கள் தியாகத்தைக் காட்டிலும் /சிகரம் ஒன்றும் உயர்ந்ததல்ல (ப.20)

என்ற பாடியுள்ளார். மேலும் அமைதி ஏற்பட வழியும் சொல்கிறார்.

"பண்டைய தமிழர் போல் யாதும் நம் ஊரென்னும்/பரந்த நல் நோக்கிருந்தால்

கண்டங்கள் ஐந்தும் அந்நோக்குடைய இனத்தின்கண் /வைகூப்பி தொழுது நிற்கும்" (ப. 14) என்று சொல்கிறார் கவிஞர்.

**தேச பக்தி :**

தமிழ்நாடு பாரதத்தின் ஒரு பகுதி என்பதைவிட தமிழ்நாட்டின் விரிவுதான் பாரதம் என்றுணர்தல் வேண்டும் என்கிறார். கவிஞர் தேசபக்தியை

"காடுகள் இயற்கை இயற்கை வளங்களைக்/காப்பதும் தேசபக்தி - அதற்குக்
கேடுபுரிந்தால் அதுவே தேசத்தின்/கழுத்தில் விழும் கத்தி
அவரவர் கடமையை அவரவர் செய்தல் /அதுவும் தேசபக்தி - இதில்
எவரெவர் கடமையில் தவவறுகின்றாரோ /அவரெல்லாம் தீய சக்தி" 9ப. 29)

என்று பாடுகின்றார். பொறுப்போடு ஒவ்வொருவரும் நடந்தால் பொன்னொளிர் பாரதமாகும் என்கிறார்.

**பொதுநலம் :**

சமுதாயத்தில் ஏமாறுகின்றவர்களும் ஏமாற்றுபவர்களும் அதிகமான இருக்கின்றனர். பொதுநலத் தொண்டில் உண்மையாக நடந்து புதுச் சிந்தனையில் பாரதம் புதுமை பெறவேண்டும் என்கிறார். உண்மைத் தொண்டனே தலைவனாவான். நல்வழி காட்டுபவனே சிறந்தவன் என்பதை,

"உலகம் போகும் பாதையில் போனால் /நீயும் ஓர் மனிதன் - இந்த
உலகம் உனது பாதைக்கு வந்தால் /நீயே பெருந்தலைவன் (ப.32)

என்று கூறுகின்றார். பதவிக்காகப் பாதம் பிடிப்பவர்கள் உள்ளனர். உதவிய கரத்தை ஒட்டத் துணிகின்றனர்.

"பொதுவுடமை என்னும் புரட்சி விளக்கைக்
கம்பனும் கடுத்துநம் கைகளில் தந்தவன்" (ப.83)

என்று பாரதியின் பெருமையைப் பாடுகின்றார் பாரதிதாசன். சமுதாய சீர்திருத்தப் பாடல்களைப் பாடியவர் இவர்.

விதவைப் பெண்ணுக்கும் விவாக வாசற் /கதவைத் திறக்கக் கவிதை பாடியவர் (ப.87) என்கிறார்.

தனியொருவனுக்கு உணவில்லையெனில் /ஜகத்தினை அழித்திடுவோம் என்கிறார்" பாரதி. அவ்வழியே கவிஞரும் தனிமனிதனின் பட்டினியைத் தணிக்கும் அரசே நல்லரசு ஆகும் என்கிறார். நாட்டில் வன்முறை அதிகரித்துவருவதை,

"வன்முறைக் கும்பலைக் கூண்டோ டழிக்கும்/வல்லமை மிக்கதே நல்லரசு" (ப.48) என்கிறார்.

ஊழல் இல்லாத அரசே நல்லரசு என்கிறார். போராட்டம், பேரணி, மோதல்கள், கத்திக்குத்து, பொதுச்சொத்துக்களை நாசப்படுத்தல் முதலியன நகர நடைமுறைகளாகிவிட்டன (ப. 61). என்கிறார் இ. மறைமலை. (சமூகவியல் நோக்கில் புதுக்கவிதை) அரசியலில் இருப்பவர்தான் போராட்டத்திற்குக் காரணமாகின்றார் என்கிறார்.

"எத்தகைய பிரச்சனைக்கும் போராட்டம்தான்/ஏற்றதென்று பொதுமக்கள் நினைத்து விட்டார்
அத்தனைய நிலைஇங்கு வருவதற்கே/அரசியலில் இருப்பவர்தான் விதைகள் போட்டார்
வன்முறையைத் தூண்டிவிடும் மனிதரெல்லாம்/வளர்த்தலைமைப் பதவிக்கு வந்துவிட்டால்
நன்முறைகள் இந்நாட்டில் மலர்வதேது வாழ்வில் ஏது? (ப. 43)

என்று நாட்டின் நிலைமையை எடுத்துச் சொல்கின்றார்.

அரசியல் பொருளாதாரம் வாழ்க்கைச் சூழல் உற்பத்தி உறவுமுறைகள் ஆகியவை பண்பாட்டை உருமாற்றவும், உருச்சிதைக்கவும் ஓயாது வினையாற்றி வருவதனை இலக்கிய சமூகவியலாளர் கருத்தில் கொள்ள வேண்டும் என்பர் இ. மறைமலை (ப.81)

"ஓட்டுக்காக மதம் பார்க்காதீர்கள்/நாடுநலம் பெறும் நற்பணிகளிலே
அரசியல் பார்க்காதீர்/கேடுதருகின்ற வார்த்தைகள் எதையும்
நாவினில் சேர்க்காதீர்" (ப. 47)

என்று உண்மைக்குப் புறம்பாக நமத்தல் கூடாது ஏடுகளில் ஏழுதவும் கூடாது என்கிறார்.

"சமுதாயத்தில் நிலவும் தீண்டாமைத் தீயன்றி நெடுந்தீ வேறு உண்டா" என்று தீண்டாமை விலக வேண்டும் என்று கூறுகின்றார் கவிஞர்.

"வேள்வியால் எதிரிகள் வீழ்வர் என்பார் சிலர்/ கோள்களுக்கு விஞ்ஞானம் கொண்டுசெல்லும் நாளில் இக் /கொடுமை ஏனோ (ப. 54) என்கிறார்.

**பெண்மை :**

பெண்மை போற்றப்பட வேண்டும் என்பது கவிஞரின் உயர்வான சிந்தனை, பெண் வரதட்சணை கொடுத்து திருமணம் புரிதல் தவிர்த்து,

பெண் தட்சணையை மணமகன் வீட்டினில் /உரமுடன் கேட்டிடவே - இந்த

உலகினிலே யொரு உன்னதநாள் வரும்" (ப.99) என்கிறார்.

பெண்களைக் கிண்டல் கேலி செய்வதில், /"வரம்பினை மீறிவிட்டார் - இங்கு

நோயென இச்சொல் வாலிபர் கூட்டத்தில் /நுழைவதனைத் தடுக்க நாம்

ஆயறிவுடனே அரபியச் சட்டத்தை /அவர்க்கென இடல்வேண்டும்" (ப. 102)

என்று கடுமையான சட்டம் தவறுசெய்பவர்களுக்குத் தண்டனை கொடுக்கப்படவேண்டும் என்கிறார். சமுதாயத்திற்கு நல்லது செய்யாமல் வீண் செய்பவர்களை சர்வாதிகாரியாகி தண்டிக்க வேண்டும் என்கிறார். திரைப்படங்கள் வக்கிர எண்ணத்தை வளர்ப்பதைச் சுட்டுகின்றார்.

**உடல்நலம் :**

மக்கள் உடல்நலத்தைக் காக்க வேண்டும் என்கிறார். "ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்" என்கிறார் வள்ளுவர். ஒழுக்கமற்ற வாழ்வினால் எய்ட்ஸ் நோய் வரும். அதைத் தவிர்க்க,

"உடல்தானே அனைத்திற்கும் மூலமாகும்
உடல்தானே உயிர் உறையும் கோயிலாகும்
உடலை நாம் காப்பாற்றத் தவறிவிட்டால்
உலகிலெதைக் காப்பாற்ற நம்மலாகும்" (ப. 76)
என்று ஒழுக்கத்தைக் காத்தல் வேண்டும் என்கிறார்.

சமுதாய நிலைகளையும் போக்குகளையும் காரண காரிய முறையில் கண்டு அவற்றில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை இலக்கியப் பொருளாக எடுத்தாளுவதும் படைப்பாளிகளின் கடமையாகிறது. (திறனாய்வுக்கலை ப.58) கவிஞர் அணு உலையால் எப்போதும் ஆபத்து வரும்மென்றே பிறநாட்டினர் கைவிட்டனர், அணு உலையின் செயல்பாட்டினால் மக்களுக்குத் துன்பம் வரும். அதை உணர்தல் வேண்டும் அரசு என்கிறார். உடலுறுப்பு செயலிழப்பு தாய் வயிற்றில் குறைப்பிறப்பு, ஒவ்வாமை, மரபணுக்கள் சிதைவும் ஏற்படும் என்று சமுதாய நலன் கருதி எச்சரிக்கை செய்கிறார்.

கவிஞர் நல்லோரை வாழ்க என்று வாழ்த்துகின்றார்./"மொழி வாழ்க இனம் வாழ்க தன்னாட்டை முன்னேற்ற /முனைகின்ற தலைவர் வாழ்க /எழில் வாழ்வு பிறர் வாழ எழில்தேய உழைக்கின்ற இனிய தொழிலாளர் வாழ்க (ப. 103)/என்று பாடுகின்றார். மேலும் நல்லோர்கள் அயல்நாட்டுத் தமிழர்கள், சான்றோர்கள், தன்மானப் போர்வீரர் சந்ததி தழைத்து வாழ்க என்கிறார்.

கவிஞர் முத்துலிங்கம் சமுதாயத்தில் நல்லறம் தழைக்க வேண்டும் என்று பாடல்களைப் பாடியுள்ளார். இவரின் சமுதாயக் கவிதைகளில் மொழி, நாடு, இனம், இவற்றின் சிறப்பைக் கூறிப் போற்றுதல் வேண்டும் என்கிறார். தீமைகள் யாவும் விலகவேண்டும் நல்லோர் வாழ வழிகாட்டும் சமுதாயம் என்றும் வாழ்க என்கிறார்.

# ஜெயகாந்தனின் சிறுகதை அமைப்பு

*இரா. சங்கர்,* ஆய்வியல் நிறைஞர், தமிழ்த்துறை,
பாரதியார் பல்கலைக் கழகம், கோவை-46.

நவீன இலக்கியத்தில் சிறுகதையானது சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கிறது. அந்தச் சிம்மானசத்திற்குச் சொந்தக்காரராய், புதிய புதிய எழுத்தாளர்கள் தோன்றிய வண்ணமே இருக்கின்றனர். புதிய புதிய எழுத்தாளர்கள் தோன்றிய போதிலும், தனக்கென தனி முத்திரையைச் சிறுகதையின் மூலம் பதியவைத்துக் கொண்டிருப்பவர் ஜெயகாந்தன். அத்தகைய சிறப்பினைப் பெற்றிருக்கும் ஜெயகாந்தனின் சிறுகதை அமைப்பினை, அவரின் சிறுகதைத் தொகுப்பிற்குத் தலைப்பாக அமைந்த சில சிறுகதைகளை மட்டும் எடுத்துக் கொண்டு சிறுகதை அமைப்பினைக் கூறுவது இக்கட்டுரையின் நோக்கம்.

## ஜெயகாந்தன்

புதிய புதிய எழுத்தாளர்கள் தோன்றும் நிலையிலும், தன்னைப் புதுப்பித்துக் கொண்டு முதன்மையிடத்தில் வசிப்பவர். கதைக் கருவைக் கற்பனையாகக் கூறாமல், கண்டதைக் கண்டவாறே கூறும் ஆற்றல் பெற்றவர். சமுதாயத்தில் பின்னுக்குத் தள்ளப்பட்டிருக்கும் ஏழை மக்களின் வாழ்க்கையைத் தனது பேனா முனையால் உயர்த்திப் பிடித்து, சமூக அவலங்களைச் சல்லடைப் போட்டுச் சலித்துக் காட்டும் இவர், 1943-ல் கடலூர் மாவட்டம், மஞ்சக்குப்பம் என்னும் ஊரில் பிறந்தவர். தனது ஏழாவது வயதில் முதல் சிறுகதையை "சௌபாக்கியம்" என்ற இதழில் வெளியிட்டார். இவர் விருதுகள் பல பெற்றிருக்கிறார். குறிப்பாக "சில நேரங்களில் சில மனிதர்கள்" என்ற நாவலுக்கு சாகித்திய அகாதமி விருதினைப் பெற்றிருக்கிறார்.

## ஜெயகாந்தன் - கதையமைப்பு

ஜெயகாந்தன் சிறுகதைகளில் பெரும்பாலும் கதை சொல்லும் அமைப்பு முறையைத்தான் பின்பற்றுகிறார். ஆசிரியரே கதை கூறிக்கொண்டு செல்வதாக அமைந்திருக்கும், இல்லையெனில் ஒரு கதை மாந்தர் கதை கூறுவதாக (பெரும்பான்மை) அமைந்திருக்கும்.

"சக்கரம் நிற்பதில்லை" என்னும் சிறு கதை பல நிகழ்வை மைப்படுத்திப் பேசுகிறது. இருப்பினும் அக்கதைக்கு மையமாக "சப்பாணி" என்னும், கதாபாத்திரம் கதை கூறுவதாக அமையப் பெற்றிருக்கிறது. "சப்பாணி" னியினுடைய வாழ்க்கை, சக்கரம் போல் சுழன்று கொண்டே தான் இருக்கிறது". என்று அக்கதை முடிகிறது. இக்கதையில் ஆசிரியரே கதையைக் கூறாவிட்டாலும் கதை கூறுவதற்கு ஒரு மாந்தரை உருவாக்கி கதை சொல்ல வைத்திருக்கிறார்.

இவரது "யுகசந்தி" என்னும் கதையில் நகரத்தில் இருந்து கிராமத்திற்கு வரும் பாட்டியின் செயல்பாடுகளை ஆசிரியரே கதை கூறுவதாக அமையப் பெற்றிருக்கிறது. "பாட்டி பஸ்ஸை விட்டு இறங்கி தனது கிராமத்திற்கு வெம்மை பொருந்திய புழுதியில் தனது காலடியைப் பதிய வைத்து நடந்தாள். அவள் இளமையில் இருந்தே தனிமையில் நடந்து பழகியவள். தனது கணவர் என்று இறந்தாரோ அன்று முதலே அவள் இப்படி தனிமையில் நடக்கத் தொடங்கியவள்". இது போன்ற, ஆசிரியர் தானே கதை கூறிக்கொண்டு போகும் அமைப்பை இவரது சிறுகதையில் காணமுடிகிறது.

இவரது அனைத்துக் கதைகளிளும் கதை கூறிக் கொண்டு போகும் உத்தியையே பயன்படுத்துகிறார் என்று கூறமுடியாது. பாத்திரங்கள் பேசிக்கொண்டே போவதாகவும், ஆசிரியரே கதையைக் கூறிக்கொண்டு போகும் கதையிலும், சில இடங்களில் பாத்திரம் பேசுவதாகவும் அமைத்திருக்கிறார்.

## தொடக்கம் - முடிவு

சிறுகதையின் தொடக்கம் ஓர் எதிர்ப்பார்பை ஏற்படுத்துவது போன்று அமைய வேண்டும்.

இவரின் சிறுகதைகள் தொடக்கத்தில் எதனையோ கூறுவது போன்று அமைந்தாலும், அதன் கதைப் போக்கு ஒரு கருத்தை உணர்த்தியே முடிகிறது.

" ஒருபிடி சோறு" என்னும் சிறுகதையில் ஏழை மக்கள் எப்பொழுதும் ஒன்றுபட்டு வாழமாட்டார்கள் என்ற கருத்தோடு தொடங்கும் ஆசிரியர் இறுதியில் ஏழைகள் தங்களுக்குள் ஒன்றுமையாக வாழாவிட்டாலும் துன்பம் வருகின்ற பொழுது ஒன்றுபடுவர் என்பதனை "ராசாத்தியின் மகன் பக்கத்து வீட்டு மாரியாயின் சோற்றுப்பானையில் உள்ள சோற்றையெல்லாம் தின்று விடுகிறான். அவர் சின்னக் குழந்தையென்று பார்க்காமல் கூட வாயில் வந்த வார்த்தைகளால் திட்டுகிறாள். கதையின் பிற்பகுதியில் இராசாத்தி இறந்து விடவே அக்குழந்தைக்குத் தானே சோறூட்டுகிறாள்" என்று தொடக்கத்தில் ஒரு நிகழ்வாகவும் முடிவில் ஒரு நிகழ்வாகவும் முடிக்கிறார்.

இதனைப் போன்றே "உண்மை சுடும்" என்ற சிறுகதையின் "உலக விருப்பு, வெறுப்புகளைத் துறந்த ராசாராமனின் வாழ்க்கையை முற்பகுதியில் பிரகாசமாகக் காட்சி பெறச் செய்யும் ஆசிரியர், கதையின் பிற்பகுதியில் தனது மனைவி வேறு ஒருவனுடன் தொடர்பு வைத்திருந்தவர் என்ற கசப்பான உண்மையை அறிந்தவுடன் உலக விருப்பு, வெறுப்புக்களைத் துறந்தவரும் உண்மையை அறிகின்ற பொழுது நெஞ்சம் சுடத்தான் செய்கிறது" என்பதனை உணர்த்தி இருக்கிறார்.

### பாத்திரப் படைப்பு

இவரது படைப்புகளில் பெரும்பான்மையும் முதலிலேயே கதைமாந்தரை அறிமுகப் படுத்திவிடுவது கிடையாது. கதையின் ஓட்டத்திற்கு ஏற்பமாந்தரை அறிமுகப்படுத்திக் கொண்டே போகிறார்.

"யுகசந்தி" என்னும் கதையில் முதன்மைப் பாத்திரமான கௌரிப்பாட்டியை அறிமுகப்படுத்தி, அக்கதையின் ஓட்டத்திற்கு ஏற்ப பாட்டியின் மகனையும், மருமகளையும் நான்கு பேரக்குழந்தைகளையும், அதில் ஒரு பேத்தி விதவை என்றும் கதையின் போக்கிற்கு ஏற்ப மாந்தரை அறிமுகப்படுத்துகின்றார்.

"புகையின் நடுவினிலே" என்னும் கதையில் தனிமையில் எப்பொழுதும் சிந்தித்துக் கொண்டே இருக்கும் " கௌதமன்" என்ற முதன்மைப் பாத்திரத்தை அறிமுகப்படுத்தி, அந்த முதன்மைப் பாத்திரத்தின் ஓட்டத்திற்கு ஏற்ப, முதன்மைப் பாத்திர்த்தின், தாய், தந்தை, அத்தை, மகள் என்ற பாத்திரங்கள் அமைந்திருக்கிறன. "சக்கரம் நிற்பதில்லை" என்ற கதையில் முதன்மைக் கதைமாந்தராக மூவரை அறிமுகப்படுத்துகிறார். புகை வண்டியில் அம்மூவரும் பயணம் செய்வதாகவும், புகை வண்டியிலே ஓர் பிச்சைக்காரனையும், ஒரு பழக்காரியையும், இன்ன பிற நிகழ்வுகளையும் கதைப்போக்கிற்கு ஏற்ப அமைத்துக் கொண்டே போகிறார்.

### மொழி

ஜெயகாந்தனின் மொழி அமைப்பு, பேச்சு வழக்காகத்தான் அமைந்திருக்கிறது. இவருடைய கதைகளில் உயர்வான வழக்கு முதற்கொண்ட இழிவான வழக்கு வரை காண முடிகிறது. "யுகசந்தி என்னும் கதை, அந்தணர் குடும்பத்தைப் பற்றிப் பேசப்படும் கதையாக அமையப் பெற்றதால் அந்தணர் பேச்சு வழக்கு அமையப் பெற்றிருக்கிறது. பாட்டி வரவினை உணர்த்தும் ஒரு நிகழ்வை.

"பாட்டி வெயில்லே வந்திருக்கா, சித்தே நகந்துக்கோ வந்ததும் மேலே ஏறிண்டு இருக்கிய" என்று தனது குழந்தையைத் திட்டுவதாக அந்தணரின் பேச்சு வழக்கைப் பயன்படுத்தி இருக்கிறார்.

சேரிப்புறத்து ஏழை மக்களின் வாழ்வினைப் பிரதிபலிக்க வைக்கும் "ஒருபிடி சோறு" என்னும் கதையில் "வளையல்காரனுக்குப் பெத்தெடுத்த அந்தக் கட்டையில போனவங், கஸ்டப்பட்டு வெறகு பொழந்துட்டு வரும் மனுசனுக்கு வைச்சிருந்த சோத்த பூராம் துன்னுட்டு போயிட்டானே" என்று சேரி மக்களின் பேச்சு வழக்கை இச்சிறுகதையில் பயன்படுத்தி இருக்கிறார்.

இவர் குறிப்பிட்ட இனத்தாரின் மொழி நடையை மட்டும் பயன்படுத்தாமல், ஒரு கதையின் போக்கு எவ்வாறோ, அந்த கதைப்போக்கிற்கு எவ்வகை இன மக்களின் மொழியைப் பயன்படுத்த வேண்டுமோ அதற்கு ஏற்றாற் போல் மொழியை அமைக்கிறார்.

## சமுதாய அமைப்பு

ஜெயகாந்தன் சிறுகதைகள் சமூகத்தினைப் படம் பிடித்துக் காட்டுவதாகவே அமைந்திருக்கிறன.

"புகையின் நடுவினிலே" என்னும் கதையில் இளம் வயதிலேயே போதைப் பொருளுக்கு அடிமையாகும் சமூகத்தைச் சுட்டிக் காட்டுகிறார். போதைப் பொருளுக்கு எல்லா இளைஞர்களும் அடிமையாவதில்லை என்பதனைப் பெற்றோர் உணர வேண்டும். தங்கள் பிள்ளைகள் மீது எப்பொழுதும் சந்தேகப் படக்கூடாது என்ற சமூகச் சிந்தனையை முன் வைக்கிறார்.

"ஒருபிடி சோறு என்னும் சிறுகதையில் தனக்கென ஒரு முறையான வாழ்க்கையைக் கூட அமைத்துக்கொள்ள முடியாமையால், தாலி கட்டாமலே மனைவியாக (விபச்சாரியாக) வாழும் சேரிப் பெண்ணின் நிலையைச் சமூகச் சிந்தனையாக முன் வைக்கிறார்.

"சக்கரம் நிற்பதில்லை" என்னும் கதையில் இரண்டு கால்களும் ஊனமுற்ற நிலையில் பிச்சையெடுத்தாவது தன் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டும் என்ற கருத்தைக் கூறவந்த ஆசிரியர். இரண்டு கால்கள் ஊனமுற்ற நிலையிலும் இரண்டு சக்கர வாகனத்தின் மூலம் நகர்ந்து ஆங்காங்கே பிச்சையெடுத்துக் கொள்ளும் அந்த ஊனமுற்றவரின் வாழ்க்கை சக்கரம் போல் சுழன்று கொண்டே இருக்கிறது" என்று ஊனமுற்றோரின் நிலையைக் குறிப்பிடுகிறார்.

"யுகசந்தி என்னும் கதையில் இளம் வயதிலேயே கணவனை இழந்த கைமையாக வாழும் பாட்டி தனது பேத்திக்கும், அதே நிலை வருகின்ற பொழுது தான் பட்ட துன்பத்தினைத் தன் பேத்தி படக்கூடாது என்று பேத்திக்கு மறுமணச் சம்மதம் கூறும் நிகழ்வு, புதிய சமுதாயத்தினைச் சுட்டிக் காட்டுகிறது.

## தொகுப்புரை

ஜெயகாந்தனின் சிறுகதைகள் சமூகத்தின் அவலங்களைச் சுட்டிக் காட்டும் விதமாக அமைந்திருக்கிறன. கதை தொடங்குகின்ற பொழுது எதனையோ உணர்த்துவது போன்று அமைந்திருந்தாலும், இறுதியில் ஒரு அற்புதமான கருத்தினை உணர்த்தியே முடிக்கின்றார். அவர் பாத்திரங்களைக் கதைப் போக்கிற்கு ஏற்ப இணைத்துக் கொண்டே செல்கிறார். இனமக்களின் பேச்சு வழக்கை பயன்படுத்தும் இவர் ஒரு குறிப்பிட்ட இனத்தாரின் வழக்கை மட்டும் பயன்படுத்தாமல், எந்த இனத்தாரின் மொழி நடையைப் பயன்படுத்த வேண்டுமோ அதனோடு ஒன்றிப் போகிறார். மொழியமைப்பும் அவ்வாறே ஓர் இனத்தைப் பற்றி பேசும் கதையாக இருக்கின்ற பொழுது அந்த மக்களின் பேச்சு வழக்கு எவ்வாறு இருக்குமோ, அவ்வாறே பயன்படுத்துகிறார். மொழியமைப்பால் தான் அவர் சிறப்புப் பெறுகிறார் என்றும் கூறலாம்.

# ஜோ. டி. குருஸ் கவிதையில் இணைப்புப் பணி

*க. சரசுவதி*, தேர்வுநிலை விரிவுரையாளர்,
பாத்திமா கல்லூரி, மதுரை.

சிசரோ என்ற அறிஞர் கண்டுபிடிப்பு, வரிசை அமைவு, வெளியீட்டு முறை, உச்சரிப்பு, நினைவாற்றல் என்பதான கவிதை இலக்கியம் சார்ந்த புலப்பாட்டு நெறியின் ஐந்து உத்திமுறைகளைச் சுட்டிக்காட்டுவார். கருத்துப் பரிமாற்றத்துக்குரிய உறுப்புக்களாக உருவவியல் வாதி, ரோமான் யாகப்சன்.

| | | |
|---|---|---|
| கூறுவோர் | - | உணர்ச்சி வெளிப்பாட்டுப் பணி |
| கேட்போர் | - | தூண்டல் பணி |
| கருவி | - | மொழி/குறியீட்டு மொழி |
| செய்தி | - | அழகியல் பணி |
| சூழல் | - | சுட்டுதல் பணி |
| தொடர்பு | - | இணைப்புப் பணி |

போன்ற ஆறு பணிகளை வகுத்துரைப்பார்.

தமிழ் இலக்கண மரபில் கவிதைக்கே உரிய செய்திப்பரிமாற்றத்தைக் கூறுவது செய்யுளியல் பகுதியாகும்.

| | | |
|---|---|---|
| 1. குறித்தோன் | - | (கூறுவோன்) |
| 2. கூற்று | - | (செய்தி) |
| 3. கேட்போர் | - | |
| 4. களன் | - | (சூழல்) |

என்ற வகைப்பாட்டைத் தொல்காப்பியம் வகுத்துரைக்கிறது.

"கூறுவோர்க்கும் கேட்போர்க்கும் இடையே தொடர்பு ஏற்படுத்தும் வாயில்களும், உளவியல் தொடர்புகளும், தொடர்புக்குரிய இணைப்புப் பணியை ஆற்றுவன," என்ற கருத்தடிப்படையில் தொல்காப்பியம் கூறும் "முன்னம்", "மெய்ப்பாடு" ஆகியன தொடர்புப்பணி ஆற்றுவன என்பர். கவிஞனின் கவியுலகில் கூறுவோனுக்கும் கேட்போனுக்கும் இடையே உணர்ச்சி வெளிப்படுத்தலும் தூண்டலுமான போக்குகள் மோதுகின்றன. இவ்வுணர்ச்சி மோதலில் கவிஞனின் கவிவெளியில் தகுந்த பொருண்மையைத் தாங்கி அவை அழகியல் தன்மை கொண்ட சொல்லடுக்குகளால் நிரம்புகின்றன. அப்பொருண்மைகளைத் தனிமனித சமூக அவலப்பொருண்மைகளில் விளக்கும் வகையில் இக்கட்டுரை அமைகிறது.

கவிஞன் ஜோ. டி. குருஸின், "கடற்கரை", "ஓ... தூத்துக்குடி", "பெருமைப்படுதோழி", "புலம்பல்கள்", நானும் நீயும்", "கை ஒன்று வேண்டும்", "மனிதனைப் படிக்கிறேன்", "கதிரவனே", "சிங்கப்பூர் போன!" ... ஆகிய கவிதைகள் பகுப்பாய்வுக்கு உரியதாகின்றன.

## தனிமனிதம் - மனிதக்குழுமம் அவலப் பொருண்மை

### அ). தனிமனிதம்

சுயஅனுபவத்தை அதாவது கடற்கரையில் நடந்து செல்லும் பாவனையான சுய அனுபவத்தைக் கவிதைப்படுத்துபவனுக்குக் கடல் அலைகளும் - மன அலைகளும் நேர் கோட்டில் சந்திப்பதாய் கற்பனை எழுகிறது. அக்கவி வெளியில்

"வாழ்வில் வெற்றியும்/தோல்வியும்
சாதாரண வினை /என்று புரியும் உனக்கு"

என்று கேட்போரின் உள்ளத்தில் வாழ்வின் உள்ளர்த்தத் தேடல் தூண்டும் பணி நடக்கிறது.

கருவாலி நண்டுகள், ஏசுபிரானின் வாழ்வியல் நிகழ்வுகள் போன்றன கவிக்குறியீடுகளாகி

"தன்மீது/தவறில்லாதவன்
இவள் மீது /முதல் கல்லை வீசட்டும்"

எனும் சொல்லடுக்குகளாய் - தனி மனித அழுக்கைச் சுட்டும் பணி மேற்கொள்ளப்படுகிறது.

முத்துநகர் வண்டிப் பயண அனுபவமாய் "கனவு நகர்வு" எனும் கவிவெளியில் துயில் கலையாக் காலைப் பொழுது வருணிப்பு உத்தியில்.

"படம் பிடிக்கத் தவறவில்லை
என் கருத்துப் பெருத்த
கேமிராக் கண்கள்"

என்பதான உருவகக் கட்டுக்குள் அழகியல் பணி அமைந்து - தனி மனிதனின் காதல் பயிர் கருகிய செய்தியுமாய் ஏமாளிப்பட்டம் பெற்ற சூழலுமாய் கவிப்பொருண்மை அமைகிறது.

நட்புறவைப் பெருமைப்படுத்தும் கவிவெளியில் தனி மனிதனின் செயலின்மையை மாற்றும் போக்கு -

அழிவு நோக்கி /பயணித்த அந்த
ஆற்றலை /ஆக்கத்திற்கு திசை/
திருப்பி அற்புதத்திற்காய்"

என்ற சொல்லடுக்கு வழி கேட்போன் தூண்டப்பட அதுவே வாழ்வின் உள்ளார்த்த வெளிபாட்டுப் பணியாய் கேட்போரின் தேடல் தொடர்கிறது. "ரசிக்கிறேன்" என்ற சொல்லைப் பலமறை எடுத்தாளும் உத்தியில் முழுமை பெற்ற மனிதப்பரிணாமத்தைச் சுட்டிக் காட்டியும், பாரதியின் கவியடிகளைக் குறியீடாக்கியும்

"நான் சாகா /வரம் பெற்றேன்
தோழி....." எனவும்/"என் உயரத்தில்
உண்டு /உனக்கும் பங்கு"

எனவும், தனிமனித ஆற்றல் முழுமையைச் சுட்டும் பணி, படச்சுருளாய் ஓடும் நகர்வில் - ஆணின் எதிர்பார்ப்பும், ஏமாற்றமும், இழப்பும், மரபுமீறலும்.

"வரும் படி எல்லாம்/இவனால் தான்
இவன் உழைப்பால் தான் /இருந்தாலும் வாழ்க்கை
என்னவோ அவள் /வீட்டில் ...."

என்ற சொல்லடுக்குக்களாய் கேட்போனின் உள்ளத்தைத் தூண்டும் பணி அமைகிறது. முழுமையற்ற பாலியல் உறவு, எதிர்கொண்ட பழிச் சொல்லடுக்குகள் என்பதான ஆணின் இருப்பு நிலையில்

"வேண்டாம் வெட்டி விடு /என்று அறுத்தெறிய
இது என்ன /காய்கறி வியாபாரமா?"

என்ற பொறுப்பு நிலையில்

"இவன்/அவளைக் காதலித்தான்"

என்ற சொல்லடுக்குகள், கூறுவோன் - கேட்போன் தொடர்புகளை வளர்க்கின்றன.

எழுவாய், செயற்படுபொருள் போன்ற இலக்கணச் சொற்கள் குறியீடுகளாகி அவளின் அரக்கப் போக்கும், அவளின் மென்மைப் போக்கும் அலசப்பட்டு,

"உன் மனைவி/"வாழா வெட்டி"
என்று தானே /ஊர் தூற்றும் என்று
பொறுப்பிருந்த /காரணத்தால்
பொறுத்துக் காத்திருந்தான்"

என்பதான ஆணின் சமூக இருப்பு நிலையைக் கூறுவதாய் - கவிசொல்லியின் சொல்லடுக்குகள் உள்ளன. தனிமனிதனின் - பணம் காய்க்கும் மரத்தன்மை, உழைத்துழைத்து ஓடாய்த் தேய்ந்த தன்மை, சமூக மதிப்பு,

கௌரவம் மறந்தவனாய் வாழ்ந்த தன்மை யாவும் கவிச் சித்திரிப்பு உத்தியிலும் - கேட்போனின் தூண்டல் பணிக்கான உணர்ச்சிக் களம் அமைகிறது. கவியின் சுயதேடலாய், சுய விசாரிப்பாய் அமைந்த பிரபஞ்சப் பாதையில் - "தனிமனித ஆத்மாவின் ஆதங்கத்தை" வெளிப்படுத்தும் மனக்குறியீடாகி

"கொல்வதும் நான் /கொல்லப்படுவதும் நான் என்கிறாய்
பாடுவதும் நான் /ஆடுவதும் /ஆட்டுவிப்பதும் நான்
நான் அசைந்தால் /அசையும் அகிலமென்றாய்/
நான்தான் நீ /நீ தான் நான் என்கிறாய்"

என்ற கவிதையாய் கேட்போனின் உணர்வில் தத்துவத் தேடலைத் தூண்டும் பணி தொடருகிறது.

கவிஞனின் அகப்புறத் தேடலில் "கை ஒன்ற வேண்டும்" என்ற தொடர் மனிதப் பருவமாற்றத்தைச் சுட்டும் பன்மைப் பொருளுடையதாய் ஆழம் பெற்று தனிமனித வளர்ச்சிச் சித்தரிப்பில் - தனிமனிதப் பருவமாற்றச் சித்தரிப்பில் நேசக்கரம்/ அன்புக்கரம் என்ற தேவை நீட்டிப்பை,

"பிரம்மம் நோக்கி /நான் பயணிக்கும் வேளை
பிரியா விடை கூறி
பரிவாய் வழியனுப்ப ..."

என்பதான வாழ்வியல் நெடும் பாதைக்கு உதவும் கவி வெளியாய் கேட்போனின் உணர்வுத்தூண்டல் பணி அமைகிறது.

## ஆ) மனிதக் குழுமம்

ஆணும் பெண்ணுமாய் வாழும் கூட்டம் மாக்களாய் மாறும் நிலையில் கலீல் சிப்ரானின் கம்பீர கர்ஜனையை கவிவெளிக்குக் கொணரும் கவிஞன் தனது புறத்தேடலில் வாசித்த மனிதப் புத்தகங்களின் அழுக்குகளாய்

1. திருமணப் பேச்சு - அன்பைத் தவிர அனைத்தையும் விலை பேசும் குழுமம்.
2. படித்திருந்தும் - பண்பு மறந்த பெண் சமூகக் குழுமம்.
3. அரசியல் வாழ்வில் அனைத்தையும் சுருட்டும் அசுரக் குழுமம்.
4. குடும்ப உறவில் - கணவன், மனைவி உரிமைப் போராட்டத்தில் கேள்விக் குறியாகும் இளையோர் சமூக உருவாக்கக் குழுமம்.
5. மேலைக் கீழைக் கலாச்சார மாற்றத்தை விரும்பும் குழுமம்.
6. இருக்கும் தொழிலை நழுவ விட்டு சிங்கப்பூர் மோகத்தால் குழம்பும் குழுமம் .. போன்ற சமூகக் குழுமப் போக்குகளை,

"வக்கணையா வாழ்வு மேலே ஆசைப்பட்டு
வந்தவனும் போனவனும் சொல்லக் கேட்டு
அன்றாட வரும்படிய
தொலைச்சுப்புட்டு
வகையிழந்தா நீ சீமை வந்தே"

என்பதான கவிச்சுருக்கச் சொல்லாடல்களில் சுட்டிக் காட்டும்பணி அமைகிறது. இன்னும் புராண மாந்தர் (குந்தி) குறியீடு உத்தியாய் மேலை - பேச்சுவழக்குக் கூற்று நிலை உத்தியாய் அமைந்த அழகியல் கட்டமைப்பிலும் கூறுவோன் கேட்போன் தொடர்புப் பணி உள்ளது.

# தமிழ் இலக்கியமும் சுற்றுலாவும்

*முனைவர். சரோஜா,* தேர்வு நிலை விரிவுரையாளர்,
ஏ.பி.சி. மகாலட்சுமி மகளிர் கல்லூரி, தூத்துக்குடி.

## முன்னுரை

சுற்றுலா என்பது இன்று வளர்ந்து வரும் ஒரு துறையாகும். இத்துறை தான் வளர்வது மட்டுமில்லாமல் நாட்டின் பொருளாதாரத்தையும், பண்பாட்டையும் ஒரு சேர வளர்த்து வருகின்றது என்பதில் ஐயமில்லை. இலக்கிய வகைகளில் "புதினம்" மக்கள் மத்தியில் பலகாலம் வரவேற்பைப் பெற்று வருகின்ற ஒரு வகையாகும். புதின ஆசிரியர் பாலகுமாரன் தனது "அத்திப்பூ" புதினத்தில் சுற்றுலாத்துறை இணைத்துள்ள பாங்கை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## சுற்றுலா

"இன்பப்பொழுது போக்கிற்காகப் பயணம் செய்தல் அல்லது பயணிகளுக்கு வழிகாட்டுதல், சுற்றுலா செல்லும் பயணிகளுக்கு வசதிகள் செய்து கொடுத்தல் போன்ற பணிகளைச் செய்யும் தொழிலகம் சுற்றுலா எனப்பெறும்" என்று கலைக்களஞ்சியம் விளக்கம் கூறுகின்றது. சுற்றுலா எனப்படுவது ஒரு குறிப்பிட்ட புவியியல் எல்லையைத் தாண்டியோ, நாட்டிற்குள்ளையோ இருக்கின்ற மக்களிடையே ஓர் இணைப்பை ஏற்படுத்தக்கூடிய பயனுள்ள மனித நடவடிக்கையாகும், வளர்ந்து வருகின்ற வளர வேண்டிய இத்துறையைத் தன் புதினத்துடன் இணைத்துத் தருகின்றார் ஆசிரியர் பாலகுமாரன்.

## புதினம் - அத்திப்பூ

அத்திப்பூ ஒரு சமுதாயப் புதினமாகும். ஒரு குடும்பத்தைச்சுற்றியே கதை அமைந்துள்ளது. நடுத்தரக் குடும்பம் ஒன்று முன்னேறி வர சுற்றுலாத்துறை காரணமாக அமைவதாகக் கதை அமைந்துள்ளது.

## கதையும் கருவும்

கதைக் கரு என்பது புதினம் முழுவதும் இழையோடிச் செல்லும் படைப்பாளியின் உள்ளுணர்வாகும். இப்புதினத்தைப் பொறுத்தவரை கதையின் தொடக்கமும், முடிவும் ஒரு கருத்தில் இணைய, புதினம் நடுவில் ஒரு குடும்பத்தைச் சுற்றிப் பின்னப்பட்டுள்ளது. இது ஆசிரியர் பின்பற்றும் ஒரு புதிய வகை உத்தியாகும்.

மயில் வாகனன் என்ற தமிழர் தன்னுடைய ஓய்வு வாழ்க்கையைப் பயனுள்ள முறையில் செலவிட நினைக்கிறார். சிங்கப்பூரில் வசித்து வந்த அவர் இந்திய தேசத்தின் தொன்மையான நகரங்களை, கோயில்களைப்பற்றி ஒரு புத்தகம் எழுத வேண்டும் என நினைக்கின்றார். அதற்கான தனது பயணத்தைத் தொடங்குவதாக புதினக்கதை தொடங்குகின்றது. வாகன ஓட்டுநரான தாமோதரனின் கடந்தகால நினைவலைகளாக உட்கதை உருவாக்கப்பட்டுள்ளது. இறுதியில் தாமோதரன் நினைவலைகள் அடங்கி மயில்வாகனன் சுற்றுப்பயணத்துடன் புதினம் முடிகின்றது. இடையில் சுற்றுலாத்துறையின் தேவை, வேலைவாய்ப்புகள், அத்துறையின் குறைபாடுகள் இவற்றை இணைத்து எடுத்துச் செல்வது ஆசிரியரின் உத்திமுறையாகும்.

## சுற்றலா - ஓர் அறிமுகம்

தயமந்திக்கு சுற்றலா அதிகாரி "சுற்றுலா ரொம்ப நல்ல தொழிலம்மா உங்களைப் பார்த்தா கெட்டிக்காரி லேடி மாதிரி தெரியுது... ஒரு நாளைக்கு ஐநூறு ரூபா காலையில ஒன்பது மணிக்கு வண்டி ஏறி மத்தியானம் ரெண்டு மணிக்கு அவனை ஹோட்டல்ல கொண்டு வந்துவிட்டா போதும்" என்று விரிவாக சுற்றுலாத்துறையைப் பற்றி எடுத்துக் கூறுகின்றார்.

## சுற்றுலாவின் அவசியம்

மயில் வாகனன் தாமோதரனிடம் சுற்றுலாவின் அவசியத்தை எடுத்துக் கூறுகின்றனர். "ஊர்சுத்த, ஊர்சுத்த வாழறதுக்கு ஆசை வரும். எல்லாரையும் அணைச்சிக்கிட்டுப் போக ஆசைவரும். ஜாதி, மதம் எல்லாம் தாண்டி ஒண்ணா இருக்கிறதுக்கு ஆசைவரும் ஒரே இடத்திலே உட்கார்ந்து கிட்டிருந்தோம்னா இதுதான் என் ஊரு இதுதான் என்மதம், இதுதான் என் கடவுள்னு உட்கார்ந்து கிட்ருந்தோம்னா அடுத்தவர்களுடைய வாழ்க்கையைப் பத்தி அக்கறையில்லாது போகும் ... பயணம் செய்யாதவன்தான் சண்டை போடறான்....ஊர்சுத்தினா உள்ளம் விரியும். உள்ளம் விரிஞ்சா நல்லமனம் மோலோங்கினா தீவிரவாதம் காணாம போகும்னு சொல்லப்போறேன்" என்ற மயில்வாகனின் கூற்று சுற்றுலாவினால் நிகழும் பலவிதமான நன்மைகளை உணர்த்துகின்றது. சுற்றுலாவினால் மனது விரிவடைந்து நாட்டை ஆட்டிப் படைக்கும், நமது ஒற்றுமையைச் சீர்குலைக்கும் தீவிரவாதம் ஒழியும் என்பது மகிழ்சிக்குரிய செய்திப் பதிவாகும். பயணம் தொடங்கும் தாமேதரன் "ஊர் சுத்தறபோது இன்னும் விரிவான மனத்தோடவருவேன். இன்னும் நிறைவா என் பொண்டாட்டியைப் பார்ப்பேன்" என்று சொல்லுவது வாசகர்களின் ஏற்புரையாக அமைகின்றது.

## வேலை வாய்ப்புகள்

ஓரிடத்தைப்பற்றி முற்றிலும் புதியவர்களுக்குத் தெரிந்த மொழியில் எடுத்துரைத்து வழிகாட்டுபவரை வழிகாட்டி எனலாம். சுற்றுலா வளர்ச்சிக்கு உறுதுணையாகப் போதுமான வழிகாட்டிகள் இருப்பது இன்றியமையாதது. முக்கியமாக வெளிநாட்டுப் பயணிகளுக்கு அவர்களின் உதவி மிகத் தேவையாகும்.

வழிகாட்டித் தொழில் முதல் இல்லாமல் செய்யப்படும் மிகவும் ஒரு சிறந்த தொழிலாகும். வெளிநாட்டினருக்கு நமது பண்பாட்டை, நாகரீகத்தை எடுத்துச் சொல்லும் நிறைவான தொழிலாகும். டிரான்ஸ்போர்ட் நடத்தும் தாமோதரன், தயமந்தியுடன் இணைந்து இத்தொழிலைச் செய்தால் மிகவும் சிறந்தது என்ற கருத்து வலியுறுத்தப்படுகின்றது. இந்தியாவை மயில்வாகனனுடன் சுற்றிப்பார்த்து விட்டு வந்து தனது தொழிலை இன்னும் வலுப்படுத்தவேண்டும் என்று தாமோதரன் நினைக்கிறான்.

வழிகாட்டிகளாக இருப்போர் இடங்களின் வரலாறு மட்டும் தெரிந்து சொன்னால் போதும் என்பதில்லை. நமது பண்பாட்டை வெளிநாட்டினருக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்பதை ஆசிரியர் தமயந்தி மூலம் உணர்த்துகின்றார்.

தமயந்தி வெளிநாட்டினருடன் சென்று அவர்களுக்குக் குறைந்த விலையில் புடவை வாங்கிக் கொடுப்பதோடு, அதைக் கட்டியும் விட்டு மகிழ்விக்கின்றாள். அவர்களோடு இணைந்து வழிகாட்டித் தொழிலைச் செய்ததால் அதிகமான ஊதியத்தையும் பெறுகின்றாள். நிறுவனம் கொடுக்கும் தொகையுடன் வெளிநாட்டினர் மனம் மகிழந்து கொடுக்கும் தொகை அவளுக்கு ஊக்கத் தொகையாக அமைகின்றது.

## தவறான போக்குகள்

சுற்றுலாத் துறையில் தவறான போக்குகளையும் காணமுடிகின்றது. ஏதோ தெரிந்த சில செய்திகளை வைத்துக்கொண்டு வெளிநாட்டினரை வழிகாட்டிகள் ஏமாற்றும் நிலை காணப்படுகின்றது. வழிகாட்டி கூறும் பொய்ச் செய்தியை உணர்ந்து கொண்ட ஆங்கிலேயப் பெண்மனி "இவன் சொல்வதில் பாதி பொய் என்று எனக்குத் தெரியும். உலகத்தில் பலபாகங்களில் இந்த மாதிரி ஆட்கள் இருக்கத்தான் செய்கிறார்கள்" என்று கூறுவது இந்தியர்களை தலைகுனிய வைக்கின்றது.

அதைப்போல் இந்திய நாட்டு வரலாற்றை இந்தியர்களே உணராத இழிநிலையும் இருக்கின்றது. அதை வெளிநாட்டுப் பெண்மணி சுட்டிக்காட்டுவதைக் கேட்ட தமயந்தி வெட்கித் தலை குனிகிறாள். வெறிபிடித்தது போல வரலாற்றையும் படிக்கின்றாள். இது ஆசிரியர் எல்லோருக்கும் விடுக்கும் அறை கூவலாகும்.

வழிகாட்டிகள் அதிக விலை கொடுத்து வெளிநாட்டினருக்குப் பொருட்களை வாங்கிக் கொடுத்து லாபம் பார்க்கும் அவலநிலையையும் ஆசிரியர் கண்டிக்கின்றார், வழிகாட்டித்தொழிலில் ஆர்வமாக ஈடுபடும் தமயந்தியை, தாமோதரன் வேண்டாம் என்று தடுக்கின்றான். அதற்கு இவன் கூறும் காரணம் அத்தொழில் இருக்கும் பெண்களை ஆடவர் தவறாகப்பார்க்கும் போக்கு என்று கூறுகின்றான். இந்நிலை மாற வேண்டும்.

இத்தவறான போக்குகள் விலகி சுற்றுலாத்துறை சிறந்து பரிணமிக்கவேண்டும் என்பது ஆசிரியர் விருப்பமாகும்.

## பண்பாட்டுச் செய்திகள்

சுற்றுலாத்துறையுடன் இணைந்த சிலபண்பாட்டுச்செய்திகளையும் ஆசிரியர் புதினத்தில் எடுத்தாள்கின்றார். வெளியூருக்குப் புறப்படுகின்றபோது வண்டியின் சக்கரங்களில் எலுமிச்சை பழங்கள் வைக்கப்படுகின்றன. கடவுளே உயிரோடு இருக்கின்ற பழங்களைப் பறிகொடுத்து விட்டேன். வேறு எந்த உயிருக்கும் தீங்கு செய்யாமல் எங்கள் பிரயாணம் அமையட்டும் என்பதுதான் அதன் காரணம் என்பது புதினத்தின் தொடக்கத்தில் எடுத்துச் சொல்லப்படுகின்றது.

தமயந்தி வெளிநாட்டுப்பயணிகளிடம் விநாயகர் வழிபாடுபற்றி எடுத்துக்கூறுகின்றாள். காதைப்பிடித்துக் கொண்டு தோப்புக்கரணம் போட்டு விநாயகரை வழிபடுவதைக் சுட்டிக்காட்டி “தோப்பு என்றால் காது, கரணம் என்றால் சுற்றுதல். காதுகளைப் பிடித்துக்கொண்டு இப்படி உட்கார்ந்து எழுவதின் மூலம் ரத்த ஓட்டம் சீரடைகின்றது. சுறுசுறுப்பு அதிகமாகிறது. நெற்றியில் குட்டிக் கொள்வதற்கு ஒரு சிறிய ஸ்லோகம் இருக்கின்றது. சுக்லாம் பரதரம்” என்று ஆரம்பிக்கும் என விளக்குவது பண்பாட்டு அறிவியல் விளக்கமாக அமைகின்றது. இவ்வாறு தொடரும் விளக்கம் வாசகர்களுக்கும், சுற்றுலாத்துறையினருக்கம் பயன்தரும் விளக்கமாகும்.

## முடிவுரை

புதினம் போன்ற இலக்கிய வகைகள் பொழுது போக்குக்காக மட்டுமே என்பதை ஆசிரியர் இப்புதினம் மூலம் மாற்றியிருக்கின்றார். சுற்றுலா என்ற பிறிதொரு துறையைத் தன் புதினக்கதையுடன் இணைத்துக் கூறியிருப்பது அவர் பின்பற்றியிருக்கும் உத்திமுறையாகும். சுற்றுலாத்துறை இந்தியப்பண்பாட்டின் வளர்ச்சிக்கும், பொருளாதார வளர்ச்சிக்கும் துணையிருக்கும் என்பதை அத்திப்பூ உணர்த்தி நிற்கின்றது.

# துறைதோறும் தமிழ்

திருமதி. ***சரஸ்வதி கிருஷ்ணா*** எம்.ஏ., எம்ஃபில்., தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ கந்தன் கலை அறிவியல் கல்லூரி, வெப்படை, நாமக்கல் மாவட்டம்.

மொழி என்பது காலந்தோறும் மாறக்கூடிய ஒன்று. அதற்குத் தமிழ் மொழியும் விதிவிலக்கன்று. தமிழ் என்பது இலக்கியத் தமிழ் என்ற வரையறைக்கு மட்டும் அடங்காது. காலத்திற்கேற்றவாறு மாறி வந்துள்ளது. தற்கால அறிவியல் வளர்ச்சியை எம்மொழி உள்வாங்கித் தன்னைப் புதுப்பித்துக் கொள்கிறதோ அம்மொழியே காலப்போக்கில் நிலைபெறும். தமிழ் மொழியும் வளர்ந்து வரும் அறிவியல் புதுமைகளுக்கு ஏற்றவாறு மாறி வருகிறது. ஆனால் இந்த மாற்றத்தைத் திட்டமிட்டு செய்தால் நவீன யுகத்திற்கு எற்றவாறு தமிழை நாம் உருவாக்க முடியும். தமிழ் என்பது இலக்கியத் தமிழ் என்ற வரையறையுடன் நின்று விடாது. பல்வேறு நிலைகளில் வளர்ச்சி பெற்று வந்தாலும் தற்போது இவ்வளர்ச்சியானது போதுமானதாக இல்லை என்பதே உண்மை.

## இலக்கியத்தின் பயன் :

காலத்திற்குக் காலம் மாறிவரும் மரபுகளையும், வரலாறுகளையும் தொகுத்து தரும் பேழையாக இலக்கியங்கள் இருக்கின்றன. பழங்கால மனித வாழ்விலிருந்து மலர்ந்த இலக்கியம், அடுத்து வரும் மனிதனின் வாழ்வைப் பண்படத்துகிறது. ஒவ்வொரு கலையும் மனிதனின் வாழ்வைப் பண்படுத்தவே உள்ளன. மாந்தரின் வாழ்வை உயர்த்தவும், பண்படுத்தவும், இன்பம் தரவும், போராடுவதற்கு ஊக்கம் தரவும் இலக்கியங்கள் உதவ வேண்டும். நம் பழந்தமிழ் இலக்கணமான தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் நம் பண்பாட்டிற்கும் பெருமைக்கும் எடுத்துக்காட்டாக விளங்குகின்றன.

## உலகும் இலக்கியமும் :

உலகம் எவ்வளவு முன்னேறியதாக இருந்தாலும் அடிப்படை உணர்வுகள் மாறாததாகவே இருக்கின்றன. வீரம், காதல், தியாகம், பொறுமை, அன்பு, பண்பு, கயமை போன்ற உணர்வும் மாறாததாகும். இவற்றின் மெய்ப்பாடுகளும் மாறாததாகவே இருக்கும். உலக மக்கள் எங்கு வாழ்ந்தாலும் அந்த உணர்வுத் தொகுப்புகளே இலக்கிய வடிவம் பெறுகின்றன. உணர்வு, கற்பனை இரண்டும் இலக்கியப் படைப்பிற்கு இன்றியமையாதனவாகும்.

## கணிப்பொறி மொழியியல் :

இருபதாம் நூற்றாண்டில் மனிதர்களுக்கு மின்சாரம் எவ்வாறு அடிப்படையானதும், பிரிக்க முடியாததுமாக ஆகிவிட்டதோ, அதே போன்று கணிப்பொறியும் நம் வாழ்வில் பிரிக்க முடியாத இன்றியமையாத ஒன்றாக மாறிவருகிறது. கணிப்பொறியின் தோற்றம் என்பது ஏறக்குறை[illegible]டுகளுக்கு முன்பு தான். ஆனால் அதன் வளர்ச்சி என்பது அசுரவேகத்தில் சென்று கொண்டிருக்கிறது. அதற்குக் காரணம் மணிக்கணக்கில் நாம் செய்ய வேண்டிய வேலைகளை ஒரு சில மணித்துளிகளில் கணிப்பொறி செய்து முடிப்பது தான்.

## மொழி ஆய்வும் தமிழும் :

தமிழ்மொழி தனக்கே உரிய கட்டுக்கோப்பான இலக்கணங்களை உள்ளடக்கிய திட்டமிட்ட மொழி. நன்னூல், தொல்காப்பியம் முதலிய அனைத்துத் தமிழ் இலக்கண நூல்களும் மொழி ஆய்விற்கு பெரிதும் பயன்படும். கணிப்பொறி உருவாக்கத்திலிருந்து இலக்கண உருவாக்கத்திற்கு நம் முன்னோர்கள் படைத்துள்ள சொத்து என இதனைக் கூறலாம். இலக்கணங்கள் விதிகளாகச் சொல்லப்பட்டுள்ள விதம் இத்துறைக்குப் பெரிதும் பயன்படும். மேலும் தமிழ் ஒட்டுநிலை மொழியாக உள்ளதால் பிரித்துக் காட்டுவதற்கும் எளிமையாக இருக்கும். பகுதி - விகுதி - சந்தி - சாரியை என்ற மரபு சார்ந்த அணுகு முறையும் சிந்திக்கத் தகுந்த ஒன்றாகும். தமிழும், கணுப்பொறியும் ஒன்றிணைந்து "தகவல் யுகப் புரட்சியே" உலகத் தமிழ் மக்களிடையே ஏற்படுத்தி வருகிறது.

பொருள் தரும் மிகச் சிறிய அலகான ஒலியன் தகுதி பெறும் தமிழ் எழுத்துக்களை நன்னூல்

விதிகளைக் கொண்டு சரியா, தவறா என நிர்ணயித்தல், நன்னூல் விதிகளைப் பதிவுச் செய்வதற்கு ரோமான் எழுத்துக்களைப் பயன்படுத்தி வருகின்றனர். இதில் சொற்கள் தமிழ் மரப்புப்படி உள்ளதனா? என்றும் பிறகு உயிர் எழுத்துக்களை அடையாளம் காணல் என அமைகின்றன.

ஆங்கில மொழியில் பிழைதிருத்தர் இருப்பது போலவே தமிழுக்கும் பிழைதிருத்தர் உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டு அதற்கு "சேது பிழைதிருத்தர்" என்று பெயரிட்டனர். அது ஆவணத்தில் உள்ள பிழைகளை சுட்டிக்காட்டி அப்பிழையைத் திருத்துவதற்கான விளக்கத்தையும் கொடுக்கிறது.

## ஒப்பாய்வியல்

### திருநீலகண்ட நாயனாரும் குறுந்தொகையும்:

திருநீலகண்ட நாயனார் நாள்தோறும் சிவபெருமானின் பாதங்களை வாழ்த்தி வழிபடும் இயல்பினர். சைவ சமயப் பெருநெறியே உண்மையான பொருள் நெறி என்பதையுணர்ந்து பொய் சொல்லாமல் அறநெறியில் வாழ்ந்தார். சிவனடியார்களுக்கு வேண்டிய பணிவிடைகள் செய்து வாழ்ந்தார். அவ்வாறு வாழ்ந்து வந்த காலத்தில் இளமை மீதூர பரத்தையரிடத்தில் உறவு கொண்டு திரும்பிய அவரிடம் திருமகளைப் போன்ற அழகுடைய அவரின் மனைவி ஊடல் கொண்டார். மனைவியின் ஊடலைத் தீர்க்கத் திருநீலகண்டர் பலவாறு கூறினார். அமைதி பெறாத தம் மனைவி "தீண்டுவீராயின் எம்மைத் திருநீலகண்டம்" என்று வெறுத்துத் தடுத்தார்.

குறுந்தொகை 191 பாடலில் மரக்கிளையில் தத்தம் துணைகளோடு கூடியிருந்த பறவைக் கூட்டங்கள், துணையைப் பிரிந்திருப்போர் வருந்துமாறு தம் இனிய குரலினாலே அகவும். அதனைக் கேட்டும் திரும்பி வராத தலைவர் நமக்கு அன்னியர் ஆனார். அதனால் அவர் மீண்டும் வந்தால், எம் கூந்தலைத் தொட்டு ஒப்பணை செய்யாதே, எம்மையும் தொடாதே என்று கூறுவேன்.

குறுந்தொகைத் தலைவி "என்னைத் தொடாதே" என்று தலைவனைப் பார்த்துக் கூறுவேன் எனத் தோழியிடம் கூறுகிறாள். திருநீலகண்டரின் மனைவியோ தன் கணவரிடத்திலேயே "என்னைத் தொடாதீர்" என்று கூறுகிறாள்.

## திறனாய்வியல் :

### விருந்தோம்பல் :

"விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோன் மாண்புகள்"

என்று தொல்காப்பியம் குடும்பத் தலைவியின் பண்புகளைக் குறிப்பிடுவதிலிருந்து விருந்து போற்றுதல் மகளிர் கடமைகளில் தலையாய ஒன்றாய் இருந்தது என்பது தெரிகின்றது. அமுதத்தைத் தன் சுவையால் வெல்வதும் நல்ல தாளிப்பு மணம் கொண்டதும் உண்ண உண்ணத் தெவிட்டாததுதான் உணவை, வந்த விருந்தினர்க்கு வரையாது வழங்கி வாழ்கின்ற மகளிர் என்று புறநானூறு இலக்கியமானது விருந்து போற்றும் இல்லற மகளிரைப் போற்றுகின்றது.

சிலப்பதிகாரமும் இல்லற வாழ்வின் பெருமைக்குக் காரணமான விருந்தோம்பலின் சிறப்பினைக் கூறுகின்றது.

விருந்துபுறந் தீரூஉம் பெருந்தன் வாழ்க்கையும்

- (சிலப்பதிகாரமும்)

கம்பரும் கோசல நாட்டுப் பெண்களின் விருந்தாற்றும் பண்பைப் போற்றுகின்றார்.

"................ ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே"

- (கம்பராமாயணம்)

பாவேந்தர் பாரதிதாசன் தம்முடைய "குடும்ப விளக்கு" என்னும் நூலில் விருந்தோம்பல் என்று ஒரு தலைப்பையே படைத்துக் காட்டியுள்ளார்.

சமூகவியல் :

தமிழ் என்பது இலக்கியத் தமிழ் என்ற வரையறையுடன் நின்றுவிடாது, பொறியியல் தமிழ், சட்டத் தமிழ், மருத்துவத் தமிழ், கணினித் தமிழ் என்று பல்வேறு படி நிலைகளில் வளர்ச்சி பெற்று வருகின்றது.

இலங்கையில் மருத்துவப் படிப்பு தமிழ் வழியில்தான் கற்பிக்கப்படுகின்றது. தமிழ் வழியாக மருத்துவம் பயின்ற மாணவர்கள் உலகம் போற்றும் மருத்துவர்களாகப் பரவி இன்றும் மருத்துவத் தொண்டாற்றி வருகின்றனர். மருத்துவப் படிப்பைத் தமிழ்வழி பயில்வதற்குரிய பல அடிப்படை மருத்துவ நூல்களை இலங்கையில் மொழியாக்கம் செய்துள்ளனர். தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக அறிவியல் துறையும் சில மருத்துவ நூல்களை மொழியாக்கம் செய்துள்ளது. ஆனால் அதைப் பயன்படுத்துவதற்குத் தமிழ் நாட்டில் தடையாக இருப்பதற்கு முக்கிய காரணம் தமிழை மழலையர் பள்ளியிலிருந்து பல்கலைக் கழகம் வரை பயிற்று மொழியாக நடைமுறைப்படுத்தாமல் இருப்பது தான். "எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என்ற நிலையை அனைத்து துறையிலும் தாய்மொழித் தமிழை நடைமுறைப்படுத்துவதே இதற்குத் தீர்வாக அமையும்.

வரலாறு :

வரலாற்றுக்கு முற்பட்ட காலங்களில் மனிதனின் வாழ்வுநிலையை அறிஞர்கள் செம்புக் காலம், செம்பு கற்காலம், இரும்பு காலம், என்று மூன்று வகையாகப் பிரித்துள்ளனர்.

செம்புக்காலமும் சங்க இலக்கியமும் :

சங்க இலக்கியத்தில் செம்பு பற்றிய குறிப்புகள் பலவாறு காணக்கிடக்கின்றன.

"செம்பொற் புனை கலந்து அம்பொரிக் கலத்தை
பாலும் பல உண்ணாள்."

என்ற குறுந்தொகைப் பாடலில் செம்பொன்னாகிய கலத்திலே பொரிபோட்டு கலக்கப்பெற்ற பாலும் மிகுதியாக உள்ளது. அதைத் தலைவி உண்ணாதவளாக இருந்தாள் என்று குறிக்கப்படுகிறது.

"செம்பு இயன்றன்ன செய்உறி நெடுஞ்சுவர்"

மதில்களில் செம்பினைப் பொருத்துவது பற்றிய குறிப்பு நெடுநல்வாடையில் காணப்படுகிறது.

சங்க இலக்கியத்தில் "செம்பு" என்று குறிக்கப்படுவது தனித்த உலோகத்தை மட்டுமே! "செம்பொன்" என்பது செம்பும் தங்கமும் கலந்த நிலையைக்குறிக்கும். தென்னிந்தியாவில் செம்பு அதிகமாகக் கிடைக்கும்" கனிமமாகும். சங்க இலக்கியங்களில் "செம்புலப் புறவு", செம்புலப் பெயல் நீர்" என்றும் குறிக்கின்றன. பொதிய மலைக்கு செம்மலை என்ற ஒரு பெயரும் உண்டு.

வெண்கலப் பயன்பாடு :

தமிழ் மக்கள் வாழ்வில் வெண்கலத்தின் பயன்பாடு பிரிக்க முடியாத ஒன்றாகும். புதுமணமான தம்பதியருள் மணமகனுக்கு முதல் உணவு வெண்கலக் கும்பாவில் [illegible] தான்று தொட்டு இருந்து வரும் வழக்கமாகும். வெண்கலத்தைத் தட்டினால் "கிண்" என்று ஓசை வரும்.

"செல்வச் சீறா அர் சீறடிப் பொருந்த
போலஞ் செய் கிண் கிணி".

என்று குறுந்தொகைப் பாடலில் வெண்கலத்தைப் பற்றிய ஓசைக்குறிப்பு உள்ளது.

இரும்புக் காலம் :

சங்க இலக்கியங்களில் இரும்பைப் பற்றியப் பல குறிப்புக் காணப்படுகின்றன. எஃகு என்ற சங்க இலக்கியங்கள் இரும்பைக் குறிக்கின்றன.

"பொருந்தா மன்னர் அருஞ்சமத்து உயர்ந்து
திருந்து இலை எஃகும் போல" என்றும் அகநானூற்றில் இரும்பு பற்றிக் குறிப்புகள் உள்ளன.

கல்வெட்டியியல் :

## தமிழ்ப் பிராமி கல்வெட்டு :

பிராமி கல்வெட்டு என்பவை "பிராமி" என்ற எழுத்து வடிவத்தால் எழுதப்பெற்ற கல்வெட்டுகள். இந்தியா முழுவதும் பரவியிருந்த எழுத்து வடிவம் இது. கி.மு 3 நூற்றாண்டு முதல் இவ்வெழுத்துகளில் எழுதப்பெற்ற தமிழ் பாகதம் மொழியில் அமைந்த கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. நில அடிப்படையில் இவ்வெழுத்தினை மூவகையாகப் பிரிக்கலாம்.

1. வடநாட்டுப் பிராமி

2. மத்திய பிராமி

3. தென் பிராமி

தமிழ்ப் பிராமி என்ற பாகுபாடு கி.மு 500க்கு பின்னர்தான் தோன்றியிருக்க வேண்டுமென்பது அறிஞர்கள் கருத்து. வட பிராமியில் பயிலப்படாத சில வடிவங்கள் தமிழ்ப் பிராமியில் தமிழ் மொழிக்கே உரிய சிறப்பு எழுத்துக்களுடன் அமைந்திருக்கின்றன. அவை ழ, ற, ன என்பவை. அசோகர் பொறித்த கல்வெட்டுகள் எல்லாம் பிராமி எழுத்திலேயே பொறிக்கப்பட்டுள்ளன.

திரு. ஐராவதம் மகாதேவன் என்பவர் "தமிழ் பிராமிக் கல்வெட்டுகள்" என்ற தலைப்பில் பழைய கலவெட்டுப் படிகளும், அவற்றைத் தொடர்ந்த முடிவுகளும் தவறானவை என்று சுட்டிக்காட்டித் தக்க முறையில் சான்று காட்டித் தன் முடிவுகளை நிலை காட்டினார். பேராசிரியர் மீனாட்சி சுந்தரனார் தமது தமிழ்மொழி வரலாற்றில் பிராமிக் கல்வெட்டுகளின் மொழியமைப்பைத் தொகுத்து தந்துள்ளார்.

இக்கட்டுரையில் கணிப்பொறி மொழியியல் என்ற வளர்ந்து வரும் புதுத்துறை பற்றியும் ஒப்பாய்வு இல்லையென்றால் தமிழகம் உலகத்தாரால் புறக்கணிக்கப்படும். ஆகையால் அத்துறை பற்றியும் திறனாய்வுத்துறையில் தமிழர்கள் பழங்காலந்தொட்டு இருந்து வருவதால் அத்துறை பற்றியும், சமூகவியல் துறையில் தமிழ்வழிக் கல்வி பற்றியும், நமது வரலாற்றினை அறிந்து கொள்ள வரலாற்று துறையினைப் பற்றியும் தமிழர்களுக்கு சான்றாதாரங்கள் தேவை என்ற நோக்கில் கல்வெட்டியியல் பற்றியும் சில சான்றுகளை இக்கட்டுரையானது விளக்குகின்றது.

## தொகுப்புரை :

1. கணிப்பொறி நுணுக்கம் அறிந்த அறிஞர்களும், தமிழறிவும் மிகுந்த அறிஞர்களும் ஒன்றிணைந்து தமிழின் செயலாண்மையை உலக அரங்கிற்கு எடுத்துச் செல்வதுதான் இருபத்தோராம் நூற்றாண்டிற்குத் தமிழர்களைக் கொண்டு செல்வதற்கான அடிப்படைப் பணியாகும்.
2. திருநீலகண்ட நாயனாருடைய மனைவியின் கூற்றுக்குச் சங்க இலக்கியமான குறுந்தொகைத் தலைவி வழிகாட்டியுள்ளார் எனக் கருத முடிகிறது.

3. வழி வழியாகச் சிறந்து வந்து கொண்டிருக்கின்ற விருந்தோம்பல் சங்க காலத்தில் இருந்த நிலை குறித்து எடுத்தியம்புகிறது.

4. தமிழ்வழிக் கல்வியானது அவசியம் வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது.

5. பழந்தமிழன் உலோகப் பயன்பாட்டினைச் சங்க இலக்கியத் தரவுகளின் வழியில் உணர முடிகிறது

6. தமிழ் பிராமி கல்வெட்டுகள் குறித்தும் உணர முடிகிறது.

# தற்காலக் கவிதைகளில் சுற்றுப்புறச் சூழல்

*எம். சாந்தி*, தமிழ்த்துறை
மீனாட்சி மகளிர் கல்லூரி, சென்னை - 24.

சுற்றுப்புறச் சூழலைப் போற்றி பாதுகாக்க வேண்டும் என்ற உணர்வும் அறிவும் இன்று உலகளாவிய நிலையில் ஏற்பட்டு வருகின்றன. மக்கள் பெருக்கத்தினாலும் அறிவியல் வளர்ச்சியினாலும் ஐம்பூதங்களும் தம் இயற்கைத் தன்மையை இழந்து வருகின்றன. இந்தத் தூய்மை இழப்பினால் கடுமையான பாதிப்புகள் ஏற்பட்டு அகப்புற நலங்கள் கெடுமோ என்ற அச்ச உணர்வு இந்த இருபதாம் நூற்றாண்டு மக்கள் அனைவருக்குள்ளும் வளர்ந்து வருகிறது. அழிவு நேரிடுமோ என்ற கவலை கால்கொள்ளும் போதுதான் அக்கம் பக்கம் குறித்த விழைவும் தேடலும் அதிகமாகின்றன.

இயற்கை என்பது மூலம் இயற்கையும் அதைச்சார்ந்த அதன் தொடர்ச்சியாய் உள்ள மக்கள் வாழிடங்கள் அத்தனையும் சுற்றுப்புறச் சூழல்கள் ஆகும். கடலும், வானும், காடும், மலையும், நதியும், நிலமும் கொண்ட இயற்கைச் சூழலே சுற்றுப்புறச் சூழல் ஆகும். தமிழ் மொழி அகராதி - சுற்றுப்புறம் - அயல், சுற்றுப்பட்டு - சுற்றுப்புறம், சூழல் - ஆராய்தல், ஆலோசனை, இடம், கருத்து குறித்து, கூட்டம், சுற்றுப்புறம்1 என்று சுற்றுப்புறச் சூழல் என்பதற்கு விளக்கம் தருகின்றது.

மனிதன் இயற்கையிடத்து நல்லவனாக இருந்தால் இயற்கை அவனுக்கு நன்மை செய்கின்றது. மனிதன் இயற்கைக்குத் தீங்கு செய்தால் இயற்கையும் மனிதனுக்குத் தீமையே செய்கின்றது. மனிதனுக்கு நோய்தராச் சூழல் எதுவோ அதுவே நல்ல சூழல். இடநெருக்கடி இல்லாத வீடும் அதனைச் சுற்றிப் பசுமையான மரமும், கொசுக்களை உற்பத்தி செய்யாத குளமும், நச்சுப்புகையை வெளியிடாத தொழிற்சாலைகளும் வாகனங்களும் உள்ள இடமே நல்ல சூழல் ஆகும்.

இயற்கையை அழிப்பதால் அதன் வளம் குன்றும். வளம் குன்றுவதால் நிலம், நீர் காற்று இவைகளின் தூய்மை கெட்டு மாசுபடும் இவற்றின் பயனாக மனிதனுக்குக் கிடைப்பவை நோய், வறட்சி, பஞ்சம், பட்டினி, இவைகளே. நல்வாழ்வு வாழ்வேண்டிய நாம் நலிந்த வாழ்விற்கு வழிதேடுவதேன். முயன்றால் முடியாதது எதுவும் இல்லை. சூழலைக் காப்போம் என சமுதாயம் உறுதிபூண்டு காட்டை அழிக்காமலும் நீரினை மாசுபடுத்தாமலும் இயற்கையைப் பாதுகாக்க வேண்டும்.

இயற்கையை எந்த அளவிற்குப் பாதுகாத்து மதிக்கின்றோமோ அந்த அளவிற்கு இயற்கை மக்களுக்கு வரங்களைக் கொடுக்கும் அட்சயப் பாத்திரமாக இருக்கும். இயற்கையின் இன்றியமையாமையை மக்கள் உணர்தல் வேண்டும். இயற்கைப் பாதுகாப்புச் சட்டங்களையும் கடுமைப்படுத்த வேண்டும். இன்றைக்கு உலகில் பல நாடுகளில் சூழல் பாதுகாப்பு அமைப்புகள் நிறுவப்பட்டிருக்கின்றன. இவ்வமைப்பு தெருவை சுத்தம் செய்வதோடு அழகுபடுத்தும் வேலையையும் செய்கின்றன. மக்களுக்குத் தேவையான சூழல் சிந்தனைகளை இன்றைய மக்கள் இலக்கியமாகிய தற்காலக் கவிதைகளில் ஆராய்ந்து கூறுவதன்மூலம் இயல்பாக இன்று அவர்களிடையே உருவாகிவரும் சூழல் தூய்மை குறித்த ஆர்வத்தை அதிகப்படுத்துவதும் இவ்வாய்வின் நோக்கமாகும்.

## தற்காலக் கவிதைகளில் சுற்றுப்புறச் சூழல் :

சூழலுக்கும் சுற்றுச் சார்புக்கும் தக்கவாறு மனிதனின் பண்பாடும் நாகரிகமும் அமைவதுபோலவே இலக்கியங்களும் அந்தந்த சூழ்நிலைச் சுற்று சார்புக்குத் தக்கவாறு அமைகின்றன என்ற கூற்றுப்போன்று வாழ்க்கையின் மாறிய போக்கிற்கேற்ப மாறிவந்த இருபதாம் நூற்றாண்டின் கவிதை புதிய கவிதை சமூகநலம் சிதைவதற்குக் காரணமான இயற்கைச் சிதைவைச் சுட்டிக்காட்டி சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பு குறித்த கருத்துக்களைப் பாடிவருகின்றது.

புதுக்கவிதைகளில் சுற்றுப்புறச் சூழல் குறித்த புதுக்கவிதைகளின் கருத்துக்களை அவை கூறும் தீர்வுகளை எள்ளற் தொனியோடு பாடும் சூழல் சீர்கேடுகளை அழகியலுணர்ச்சி, அறிவியல் பார்வை, பயன்பாடு, சூழல் தூய்மை, என்ற அணுகுமுறைகளின் வழி ஆராயப்படுகின்றது.

## அழகியல் உணர்ச்சி :

புதுக்கவிதைகளில் அழகியல் உணர்ச்சியே முதலில் வெளிப்பட்டு நிற்கிறது. பழைய வானம், பழைய பூமி, பழைய காற்று, பழைய கடல் முதலானவற்றுக்காக ஏங்கும் இழந்த அழகை எதிர்பார்க்கும் ஆற்றாமை பல கவிதைகளில் வெளிப்பட்டு நிற்கிறது.

விண்ணுக்கும் மண்ணுக்கும்
தண்ணீர்ப் பாலம் பாருங்கள்
திரவ முத்துக்கள்
தெளிப்பது பாருங்கள்

விண்ணுக்கும் மண்ணுக்கும் பாலமாக அமைகிறது மழை. மழைத்துளிகளை முத்துக்களுக்கு உவமையாகக் கூறியிருப்பது மழைத்துளியின் அழகை எடுத்துக்காட்டுகிறது.

சாலையோர மரங்கள் வரவேற்புகளாக இருக்கின்றன. இவற்றை வெட்டிச் சாய்ப்பது நியாயமா என்று கேள்வி கேட்பது போன்ற தொனி இக்கவிதைகளில் மறைந்திருக்கின்றது.

காடு
முடிவெட்டிக் கொள்ளாத
மூத்த பூங்கா

இக்கவிதை எழில்மிகு காட்சியொன்றை எடுத்துக்கூறுவதாக இருந்தாலும் காடுகளின் அடர்ந்த நிலையைப் பறைசாற்றுகின்றன. இன்றுள்ள காடுகள் வழுக்கைகளாக அல்லவா காட்சி தருகின்றன.

அருவியில் நீராடி
கூந்தலை உலர்த்தியதை
என்னைப் போலவே
இந்த மலையும் கண்டது

அருவியில் நீராடி, நீராடுவதன் மூலம் இன்பம் மட்டுமல்ல மூலிகைகளின் மருத்துவத் தன்மையும் சேர்த்து உடலுக்கு நன்மையும் கிடைக்கிறது. குருகும் உண்டு தான் மணந்த ஞான்றே என்று சங்க இலக்கியத் தலைவி கூறுவதைப்போல, தன் விருப்பத்திற்குரியவள் நீராடியதையும் கூந்தல் உலர்த்தியதையும் மலையும் பார்த்ததாகக் கூறி ஒரு காதலன் அதை உறவுகொள்ளும் அழகு வியத்தற்குரியது.

நீரோடைகள் கண்ணாடி காண்பித்தன

என்ற வரி நீரின் தெளிவான பளிங்குத் தன்மையைப் பாடுகின்றது. கொடைக்கானல் ஏரியின் பளிங்குபோன்ற நீர்ப்பரப்பில் கரையோர மரங்கள் படம்பிடித்ததுபோல் தெளிவாகத் தெரியும் பாங்கினைப் பார்க்கலாம்.

இன்றோ பல நீர்நிலைகள் கலங்கி மாசுற்று நோய்க் கிருமிகளைப் பரப்பும் அச்சந்தரத்தக்க இடங்களாக இருக்கின்றன.

## அறிவியல் பார்வை :

சுற்றுப்புறச் சூழல் எந்த அளவிற்கு அறிவியலின் வளர்ச்சியால் பாதிக்கப்பட்டுள்ளது என்ற அறிவியல் பார்வையோடு இன்றைய கவிஞர்கள் பல கவிதைகளைப் படைத்துள்ளனர். படைத்து வருகின்றனர். நீராவி எஞ்சின் கண்டுபிடிக்கப்பட்ட பிறகே மனித குலம் மெல்ல மெல்ல அறிவியல் பாதையை நோக்கி வளரத் தொடங்கியது. புதிய புதிய எந்திரங்களின் கண்டுபிடிப்பு வாழ்க்கையின் தேவைகளை நிறைவுசெய்யத் தொடங்கியபோதே மண்ணிற்குப் பல நலக்குறைவுகளையும் ஏற்படுத்தியது. வாகனங்கள் மனிதனுக்குப் பயண நேரத்தை மீதப்படுத்தி நோயை அதிகப்படுத்தின. நகரத்து வாழ்க்கையில் வானங்களின் புகையே மனிதன் சுவாசிக்கும் காற்றாயிருப்பதால் காசநோயும், புற்றுநோயும் போட்டி போட்டுக்கொண்டு அவனுக்குள் முற்றுகையிடுகின்றன.

இயற்கை அழிக்கப்பட்டு மழையில்லாமல் வறட்சியை ஏற்படுத்துகின்றது. இயந்திரங்கள் வெளிவிடும் க்ளோரோ கார்பன்கள் மூலம் உயிரினங்களைக் காக்கும் ஓசோன் படலமும் பாதிப்பிற்குள்ளாகிறது. இத்தகு சூழற்கேடுகளை அறிவியல் பார்வையோடு இன்றைய புதுக்கவிதைகள் பாடுகின்றன. மனிதன் கண்டுபிடிப்பே அவனைக் கொன்றுமுடிக்கும் வருந்தற்குரிய நிலை இன்று ஏற்பட்டு வருகிறது. கவிஞர்களின் சமூக நேசமும்

இயற்கையின்பால் கொண்ட பாசமும் இத்தகு கவிதைகளில் வெளிப்பட்டு நிற்கின்றன.

மண்ணில் வளங்கள் அழிக்கப்பட்டால், அவை எரிக்கப்பட்டால் மழையில்லாமல் போகும். அழிப்பவன் அழிவான் என்று அறிவியல் பார்வையோடு எதார்த்தம் பாடுகின்றன சில கவிதைகள்,

இங்கே மனிதன்
மலைக்குக் கொள்ளி வைப்பதால்தான்
அங்கே அவன் மனைவி
குழாயடியில் ஒப்பாரி வைக்கிறாள்

என்ற கவிதையில் மரங்களுக்குத் தீயிடுவதால்தான் தண்ணீர் இல்லாமல் மக்கள் கலங்கும் நிலை ஏற்படுகின்றது என்ற உண்மை உணர்த்தப்படுகின்றது.

மரங்களை அழிப்பதால் மழை வராமல் வறட்சி நிலையைச் சந்திக்க நேரிடுகிறது. மழையற்றுப் போவதோடு மின் தட்டுப்பாடும் ஏற்படுகின்றது. நீரிலிருந்து மின்சாரம் எடுக்கப்படும் அறிவியல் கருத்தோடு மக்களுக்கான அறிவுரையும் இக்கவிதையில் வெளிப்பட்டு நிற்கிறது.

நீ
மரம் வெட்டு
மரம் மழை வெட்டும்
மழை மின் வெட்டும்

என்றும்

பிள்ளை வேண்டும் என்று
பெண்கள் அரசு சுற்றியது
அக்காலம்

என்ற அப்துல் ரகுமானின் கவிதைகளில் அறிவியல் கருத்தொன்று மறைந்துகிடக்கின்றது. மலட்டு நிலையைப் போக்கி மக்கட்பேற்றினை வழங்கும் மூலிகைக் காற்றை அரசமரம் தருவதாக அறிவியல் கூறும் உண்மையையே மேற்கண்ட கவிதையாயிருக்கிறது. அத்தகைய கவிதைகளில் அறிவியல் கருத்துக்கள் இழையோடியிருக்கின்றன.

## பயன்பாடு:

வளம்கொண்ட இயற்கையானது எண்ணற்ற வளங்களை மக்களுக்கு வழங்கிக்கொண்டே இருக்கின்றது. மக்களின் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்வதோடு வாழ்க்கையின் பல அகப்புற வசதிகளுக்கும் தொடர்ந்து பொருள் வழங்கிக்கொண்டே இருக்கின்றது. மரம், பட்டை, வேர், இலை, பூ மூலிகை இயல்பான மலைவாசம் மழைமேகம் என்று இயற்கையும் அதன் சூழலும் பலவிதமான பயன்களைத் தந்துவருகின்றன. இந்தப் பயன்பாடுகளை எண்ணி அவற்றை மக்களுக்கு உணர்த்தி இயற்கையைப் போற்றிக்காத்து அதன் மாண்புகளைப் பாடிவருகின்றார்கள் புதுக்கவிஞர்கள்.

கரை ஓரம்
நிழல் பரப்பி
களைத்துவிட்ட ஆலமரம்

ஆலமரம் மனிதர்களுக்கும் பிற உயிரினங்களுக்கும் நிழலைத் தந்து இதற்கு நிழல்தர யாரும் இல்லாமல் களைத்துவிட்டது. அது களைத்தாலும் மக்களையும், உயிரினங்களையும் அது களைத்துவிடச் செய்யாது என்ற தொனி இந்தக் கவிதையில் வெளிப்பட்டு நிற்கிறது.

இது பழக்கொட்டை
பயன்படுத்திக் கொண்டால்
நல்ல அறுவடை

ஒரு பழத்தைத் தின்றுவிட்டு கொட்டையைப் போட்டால் பல பழங்களை அது தருகின்றது. பழமும் உணவாகும். பயன்படுத்திக்கொண்டால் பழக்கொட்டையும் மரமாகும் என்று பாடுகிறது

## பயன்பாடு:

மனிதனைவிட ஆயுள் அதிகம் கொண்டதும் அவனுக்கு முன்னால் இந்த மண்ணில் தோன்றி வளர்ந்ததுமான மரம்தான் தனக்கு ஞானம் தந்தது என்று பாடுகின்றார் கவிஞர் வைரமுத்து. மரத்திடம் இல்லாதது இல்லை. அது வளரும் நாள் முதல் பலன் வழங்குவதாகவும் இறக்கும் வரை காய் காய்க்கும் என்று அதன் பயன்பாடுகளைக் கவிதையில் பட்டியலிடுகிறார்.

உண்ணக்கனி – ஒதுங்க நிழல்
உடலுக்கு மருந்து – உணர்வுக்கு விருந்து
அடைய நிழல் – அடைக்கக் கதவு
அழகு வேலி – ஆடத்தூளி
தடவத் தைலம் – தாளிக்க எண்ணெய்
எழுதக் காகிதம் – எரிக்க விறகு
மரந்தான் மரந்தான் எல்லாம் மரந்தான்
மறந்தான் மறந்தான்
மனிதன் மறந்தான்

என்று மரம் தரும் பொருள்களை பட்டியலிட்டுக் காட்டி அத்துணைப் பயன்களையும் பெற்று வளரும் மனிதன் செய்நன்றி மறந்துபோகும் இழிநிலையை வேதனையோடும் சமூக உணர்வோடும் பாடுகின்றது கவிதை.

## சூழல் தூய்மை:

இன்றைய மனிதன், வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்து கொண்டால் போதுமென்ற எந்திர மனப்போக்கு கொண்டவனாக மாறிக்கொண்டிருக்கிறான். நிகழ்காலத்திற்காக தேவை என்று தன்னை மட்டுமே கவனிக்கக்கூடிய சுய உணர்வு கொண்டவனாக இருக்கிறான். தான் வாழும் சுற்றுச் சூழலின் தன்மையைப் பற்றிய எண்ணம் அவனுக்கு இல்லாமலிருக்கின்றது.

சூழலை அழகு, அறிவியல் பயன்பாடு கருதி தூய்மையோடு காக்கும் மனம் ஒவ்வொரு மனிதனுக்கும் இருந்தால் இச்சமூகம் இமயத்திற்கு ஒப்பாகும். எந்த நாடாக இருந்தாலும் எந்த ஊராக இருந்தாலும் சட்டங்களை விடவும் இயல்பான மனமாற்றமே மண்ணில் நல்லச் சூழலை உருவாக்கும்.

## அடிக்குறிப்புகள்

1. நா. கதிர்வேல் பிள்ளை, தமிழ் மொழி அகராதி, ப.685
2. சீனி. வெங்கடசாமி, 19ஆம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் ப.11
3. பத்மாவதி தாயுமானவ, மலர் விடும் மூச்சு, ப.81
4. வைரமுத்து, இன்னொரு தேசிய கீதம், ப.136
5. செல்வபாரதி, நாணல்கள், ப.16
6. இரா. மீனாட்சி, தீபாவளிப்பகல், ப.100
7. நீலம் மதுமயன், (தொ) அடைகாக்கும் அக்கினிகள் ப.66
8. மேற்படி நூல் ப.66
9. அப்துல் ரகுமான், நேயர் விருப்பம், ப.87
10. ஹம்சத்வனி, அக்கரைக்குப் போன அம்மாவுக்கு, ப.23
11. கு.வேல்வேந்தன், விசிறியின் வியர்வைகள், ப.49
12. ஜெயச்சந்திரன், நனையாத நதிகள், ப.51
13. பருத்தியூர் பாலு, அக்கினி அரும்புகள், ப.29
14. வைரமுத்து, இந்தப் பூக்க விற்பனைக்கு அல்ல, ப.166
15. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.87
16. தி.க.அரங்கநாதன், நீருக்குத் தாகம், ப.9
17. ஐராவதம், மாலன், அசோகமித்திரன் (தொ.ஆ.) கணையாழி கவிதைகள், ப.251.

## பாலசந்திரன் கள்ளிக்காட்டின் "சிதம்பர நினைவுகள்" ஒரு மதிப்பீரை

திரு. *ந. சிதம்பரம்,* விரிவுரையாளர், ஆங்கிலத்துறை,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி.

பாலசந்திரன் கள்ளிக்காடு எழுதிய "சிதம்பர ஸ்மரன்" என்ற மலையாள சுயசரிதையின் தமிழாக்கம்தான் இந்நூல் சிறுகதை, கவிதை, கட்டுரை போன்ற சில வடிவங்களில் கலவை போன்றது இந்நூல். பொதுவாகச் சுயசரிதை என்றால் பிற்பகலில் இருந்து வாழ்வின் ஒரு கட்டம் வரை நிகழ்வுகள் வரிசையாகக் காட்டப்பட்டிருக்கும் அந்த நியதி இங்கே பின்பற்றப்படவில்லை. "சிதம்பர நினைவுகள்" என்ற முதல் அத்தியாத்தின் தலைப்பையே இந்நூலுக்குத் தலைப்பாக வைத்திருக்கின்றார் ஆசிரியர். நூலின் நிகழ்ச்சிகள் சிதம்பரத்தில் ஆரம்பித்து ஸ்வீடன் நோபல் பரிசு அரங்கத்தில் முடிகின்றது. கோவிலுக்கு வரும் ஒரு வயதான தம்பதியரின் ஆத்மகதையில் தொடங்கி டால்ஸ்டாய்க்கு நோபல் பரிசு கொடுக்காத மனித பலவீனத்தைச் சொல்லி முடிகிறது, பாலச்சந்திரன். தான் சந்தித்த மனிதர்களைப் பற்றிய மனப்பதிவுகளை எளிமையாக; அழகாக; அழுத்தமாக வெளியிட்டுள்ளார்.

இந்நூல் முழுவதிலும் ஒரு அடிநாதமாக சோகம் இழையோடுகின்றது. படிக்கும் பொழுது மனது அழுகின்றது. இந்தப் புத்தகம் பற்றி திரு. காவ்யா சண்முகசுந்திரம் சொல்லியிருப்பது முற்றிலும் உண்மை: "வாசிக்க வாசிக்க நெகிழ்ந்து போனேன்; ஒரு கவிஞனின் வாழ்க்கையில் இவ்வளவுமா! ஆச்சரியப்பட்டு போனேன்" வயதான பெற்றோர்களைத் தனிமையில் திண்டாடவிடுவது இன்றைய வாழ்வின் அவலங்களுள் ஒன்று. முதல் அத்தியாயமான "சிதம்பர நினைவுகளில்" ஒரு கோவிலில் வாழும் ஒரு முதிய பிராமண தம்பதியரை அறிமுகப்படுத்துகின்றார். பேங்க் மேனேஜர், ஆடிட்டர் என்ற வசதியான மகன்கள் இருந்தும், நடராஜ மூர்த்தி தாண்டவமாடும் புண்ணிய பூமியில் தேகம் சரிய விரும்பிய தம்பதியரைப் பற்றி இவ்வாறு கூறுகிறார்.

"காலம் காற்றாய் அடித்துப்புரண்டு போய்விட்டது. நான் இப்போது நினைத்துப் பார்க்கின்றேன். பிரியத்தில் பின்னிப் பிணைந்து குழந்தைகளைப் போல் அடிவைத்து இந்த முதிர்ந்த தம்பதிகளில் யார் முதலில் இறந்து போயிருப்பார்கள்.

ரங்கசாமியா?

கனகாம்பாளா?

இது உணர்வுப்பூர்வமான எழுத்து என்பதில் சந்தேகமில்லை. இன்னொரு நிகழ்ச்சி மருமகள் கொடுமை தாங்காமல் வேளாங்கண்ணி மாதா படத்தை வைத்துப் பிச்சை எடுக்கிறாள் ஒரு கிழவி. அக்கிழவிக்குப் பாலன் உணவு கொடுக்கிறார். சாப்பிட்டுவிட்டு வாழ்வில் நடந்து போனவைகளை நினைத்து அழுகிறாள், அக்கிழவி. "கடந்த காலத்தை நினைத்துப் பார்த்தால் அழுகை வராமல் இருக்கும் வாழ்க்கை எத்தனை பேருக்குச் சாத்தியம்?" (ப.35) என்ற கேள்வியே யதார்த்தமாக சம்மன் வைக்கின்றார் கவிஞர். பெண்கள் பற்றிய பலவித உணர்வுகளையும் எண்ணங்களையும் பாலன் வெளியிட்டுள்ளார். "கடவுளின் ஆசீர்வாத நிமிடத்திலிருந்து" என்ற அத்தியாயத்தின் வித்தியாசமான நிலைபாடுகளை எடுக்கிறார் பாலன். சாதுவான ஆண்களை மிதித்து இரசிக்கும் பெண்களைத் தன்பால் காலங்களை நாசமாக்கிய குரூர சுபாவம் கொண்ட தம் குடும்பத்துப் பெண்களை எண்ணிக் கோபப்படுகின்றார் ஆசிரியர். பெண்களைத் துண்டு துண்டாக வெட்டி நறுக்க வேண்டும் என்று எண்ணுகிறார். தான் படித்த வகுப்பில் முதல் பெஞ்சில் அமர்ந்திருந்த கருணைமயமான மலர்ந்த கண்களுடன் தன்னைப் பார்த்த பெண்ணான சாரதாவைச் சந்தித்தபின் இந்தக் கோபம் தணிகிறது.

பெண்களைப் பேய்களாகவும், தேவதைகளாகவும் பார்க்கும் போக்கு இங்குக் காணப்படுகின்றது. "தீப்பாதி" என்ற பகுதியில் சஹானா என்ற அழகான முஸ்லீம் பெண்களைப் பயமுறுத்தித் துஷ்டத்தனமாக முத்தமிடவைத்த நிகழ்ச்சியைக் கூறுகின்றார் கவிஞர். சில ஆண்டுகளுக்குப் பின் தீக்காயங்களால் முகமும் உடலும் கோரமான சஹானாவைச் சந்திக்கின்றார். தீப்புண்கள் கொண்ட கோர முகத்தில் முத்தமிடுகின்றார். கணவனைப்பிரிந்து இரண்டு குழந்தைகளுடன் பல துன்பங்களைத் தாங்கிக் கோரமான உருவத்துடன் வாழும் பெண்ணின் மன உறுதிக்கு அளித்த பாராட்டுதான் இரண்டாவது முத்தம்! இரண்டு அழகான பெண்கள் (ராதிகா, லைலா) தற்கொலை செய்து கொள்வதையும் விவரிக்கின்றார் ஆசிரியர். அழகான பெண்கள் தாங்கள் அழகாக இருக்கிறோம் என்று நினைத்து ஆரம்பத்தில் நிம்மதியாக இருக்கிறார்கள்.

இரட்டையான (ஜோடியாக) சில அனுபவங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. இரண்டு தற்கொலைகள் (மாயம், விஷக்கன்னி) இரண்டு விபச்சாரிகளுடன் சந்திப்புகள் (இரவு ஸ்நேகிதி பாதி ராப்பாட்டு) இரண்டு தனிமைப்படுத்தப்பட்ட பெற்றோர்கள் (சிதம்பர நினைவுகள், காலச்சுவடுகள்) போன்ற இரட்டிப்பான அனுபவங்கள் சில உள்ளன. ஜோசப் என்ற நண்பரின் நட்பையும், உதவிகளையும் நினைத்து உருகுகிறார் பாலன். அவர் இறந்தபின், நல்லவர்களை ஆண்டவன் சீக்கிரம் அழைத்துக்கொள்கின்றான் என்கிறார். தனது நண்பன் மோகனைக் காதலித்துப் பயித்தியம் பிடித்துக் குளிக்காமல், அழுக்கான ஆடைகளுடன் முடிவெட்டாமல் பஸ் ஸ்டாண்டில் இருப்பதைப் பார்க்கிறார் கவிஞர். அவருக்கு இவரைத் தெரியவில்லை. அவருக்கு முடிவெட்டி ஏற்பாடு செய்து நல்ல உடை கொடுத்து, சாப்பாடும் பணமும் கொடுக்கிறார். பின் பஸ் ஸ்டாண்டிலேயே விட்டுவிட்டுச் செல்கிறார். இதற்கு மேல் எதுவும் செய்ய முடியாத இயலாமையை எண்ணி வருந்துகின்றார். சில மாதங்கள் கழித்து அந்தப் பயித்திகார நண்பன் இறந்த செய்தி அவருக்கு வருகின்றது.

"அக்னிச் சாவடி" என்ற பகுதியில் ஒரு மறக்க முடியாத நிகழ்ச்சியை வர்ணிக்கிறார் கவிஞர். அய்யாவுச் செட்டியார் செக்கில் எண்ணெய் ஆட்டி விற்கிறார். அவருடைய பிள்ளைகளில் ஒருவனான ரவிக்கு வலிப்பு நோய் உள்ளது. தன் மகனின் நோய் நீங்க செட்டியார் பழனிக்கு காவடி எடுக்கிறார். பயபக்தியுடன் முருகனை வணங்குகிறார். ஆனால் ரவி குளத்தில் குளிக்கும் பொழுது வலிப்பு நோய் வந்து இறந்துவிடுகின்றான். அவன் சடலத்தைப் பார்த்துவிட்டுச் செட்டியார் நேரே கோவிலுக்குள் ஓடுகிறார். பின், நடந்ததைப் பாலன் வார்த்தைகளிலேயே படிக்கலாம்.

"முருகனின் சன்னதியில் மூச்சு வாங்க நின்றுகொண்டு தழும்பேறிய கையால் ஓங்கித் தன் நெஞ்சில் அறைந்து எட்டுத்திக்கும் நடுங்குமாறு "ஆண்டவா" என்று கூவினார். இதயத்தைப் பிளந்த அந்தக் கூக்குரல் அங்கே தூரத்தில் இருக்கம் பழனி மலைக்கு மேலே எதிரொலித்திருக்குமோ? அதன் பிறகு ஒருபோதும் அய்யாவுச் செட்டியார் பழனி மலைக்குப் போனதில்லை. முருகனின் முன்னால் நாக்கில் வேல் குத்தி ரத்தம் சொட்டச் சொட்ட பீலிக்காவடி எடுத்து ஆடினதில்லை" (பக். 80)

இதைப் படித்தவுடன் பா. செயப்பிரகாசத்தின் "அம்பலகாரர் வீடு" சிறுகதைதான் நினைவுக்கு வருகின்றது. மிகவும் நல்ல மனிதரான, அம்பலகாரரும் அவரது மனைவியுடன் இறந்தபின் அவர்களது ஒரே மகள் விபச்சாரத்தில் ஈடுபட்டிருப்பது தெரிகிறது. அம்மன் சாமியாடி அப்பெண், தானமாகப் பெற்ற தானியங்களையும் காசுகளையும் வைக்கிறான். கையிலிருந்த சாட்டையையும், திருநீர்ப்பையையும் வீசிக் கோபமாக எறிந்துவிட்டுச் சென்றுவிடுகின்றான். அது கடவுள் மீது வைத்த கோபம் தான். வணங்கிய சாமி நல்லவர்களையும் தனது அன்புக்குப் பாத்திரமானவர்களையும் காப்பாற்றாமல் போகும் பொழுது வரும் தார்மீகக் கோபம் இது.

இந்நூலின் மொழியும் நடை இயல்பாகவும், எளிமையாகவும், உணர்வுச் செறிவும் கொண்டுள்ளது. மொழிபெயர்ப்பு நூல் என்ற உணர்வு இன்றி வாசிக்க வைத்திருப்பதே மொழி பெயர்ப்பாளரின் திறமை. ஒரு மொழி பெயர்ப்பாளன் எப்படி இருக்க வேண்டுமென்பது பற்றி கிருஷ்ணமூர்த்தி கூறுகிறார்.

" ஒரு மொழி பெயர்ப்பாளன் மூலப்படைப்பிற்கு முழு விசுவாசமாக இருத்தல் அவசியம். மூலப் பிரதியை "எடிட்" செய்யவும் கூடாது. இவற்றுடன் படிப்பதற்கு எளிய நடையில் மொழிபெயர்க்க வேண்டும்". மூலப்படைப்பிற்கு விசுவாசமும், எளிய நடையும் இந்நூலின் மொழிபெயர்ப்பில் உள்ளது.

பாலச்சந்திரன் ஒரு பெண்ணிடம் அடிவாங்கி அவமானப்பட்ட நிகழ்ச்சியைக் கூட முழுமையாகக் கூறுகிறார். தன் தாய் தந்தையருக்கு எந்தச் சுகமும் அளிக்கவில்லை என்ற ஆதங்கத்தையும் வெளியிடுகின்றார். "மகா நடிகன்" என்ற பகுதி சிவாஜி கணேசன் என்ற உன்னதக் கலைஞனுக்கு ஒரு மலையாளக் கவிஞர் செலுத்தும் அஞ்சலியாகும். பெரிய கலைக்காரி என்று பெயர் வாங்கிய கமலாதாஸ் என்ற பெண்கவி தன்னை அன்பாக உபசரித்ததை எண்ணி உருகுகிறார் பாலன். இந்நூலில் எந்த இடத்திலும் யாரையும் முக்கியமாகத் தனி மனிதர்களைக் குறைகூறும் போக்கைக் காணமுடியாது. தனது குறைகளை மறைத்துத் தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளும் "சுயதம்பட்டம்" இல்லை. கவிஞர்களையும் மார்திரா அம்மா போன்ற தியாக சீலர்களையும், உன்னத மனிதர்களையும், வேசிகளையும், நண்பர்களையும், பிச்சைக்காரிகளையும் ஒரே தட்டில் வைத்துப் பார்க்கும் சமத்துவ நோக்கு இந்த நூலில் உள்ளது. மனித நேயமும் வாழ்வின் சோகத்தை சொற்களாக்கி மனதை நெருடும் இலக்கிய வெளிப்பாடும் "சிதம்பர நினைவுகளை" ஓர் உன்னத இலக்கியமாக்குகிறது.

## குறிப்புகள் :-


1. காவ்யா சண்முக சுந்தரம், பதிப்புரை "சிதம்பர நினைவுகள்" காவ்யா பதிப்பகம் (2002), சென்னை.
2. கிருஷ்ணமூர்த்தி, தினமணி கதிர், 01.08.2004.

# மீராவின் கவிதைகளில் இலக்கிய இயக்கங்களின் தாக்கம்

முனைவர் *பா.சிவநேசன்,* முதுநிலை விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி), கும்பகோணம்.

கவிஞர் மீரா சமூகச்சூழலை எள்ளல் சுவையோடு எடுத்துக்காட்டியவர். காதல் கவிதைகளுக்காகப் புதுநடையினை அமைத்துக்கொண்டவர். ஊசிகள், கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள், கோடையும், வசந்தமும், குக்கூ என்பன இவருடைய புதுக்கவிதைப் படைப்புகள். இலக்கியக் கொள்கைகளை அடிப்படையாக வைத்து கி.பி.19-ஆம் நூற்றாண்டில் இலக்கிய இயக்கங்கள் தோன்றின. அந்த இயக்கங்களின் கூறுகள் பழந்தமிழ் நூல்களிலும், தாக்கம் பிற்காலப் படைப்புக்களிலும் இடம் பெற்றுள்ளன. மீராவின் கவிதைகளில் காணும் இலக்கிய இயக்கங்களின் தாக்கம் இங்கு ஆராயப்பெறுகின்றது.

## 1. புனைவியல் :

நடப்பியல் கொள்கைக்கு மாறுபட்டது இவ்வியக்கம். இது அழகோடு புதுமையை இணைத்துக்காணும் போக்குடையது என்பர் வால்டர் பேட்டர். ஒரு கவிதையில் புதுமையோடு தனித்தன்மையும் காணப்பெறின், அது ஒரு சிறந்த புனைவியல் படைப்பாகக் கருதப்பெறும். மரபுகளிலிருந்து விடுதலை அடைவது இதன் முதன்மைக் கொள்கையாகும். புரட்சிக்கருத்துக்கள், தன்னுணர்ச்சிப்போக்கு, உணர்ச்சி வெளிப்பாடு, இசைப்பாங்கு ஆகியனவற்றைப் புனைவியலின் உத்திகளாகக் கூறுவர். சுற்றுலாவின்போது மனிதர்கள்தான் விலங்குகளைச் சுட்டிக்காட்டி உரையாடுவது வழக்கம். ஆனால் மீராவோ குக்கூவி,

தேக்கடிக் கரையில்
துதிக் கையைத்
தூக்கிக் காட்டிக்
குட்டியிடத்தில் சொன்னது
யானை ஒன்று
அதோ பார் படகில்
மனிதர்கள் என்று

எனப்பாடியுள்ளார். இதில் புனைவியல் ஆக்கம் வெளிப்பட்டுள்ளது. விலங்குகள் அறிவில் வளர முயற்சிக்கின்றன. ஆனால் மனிதன் அப்படியே இருக்கிறான் என்பதை உணர்த்தும் இக்கவிதை ஓர் அற்புதமான புனைவாகும்.

இன்றையக் கவிஞர்கள் சமூகத்திற்குத் தம்மை அடையாளப்படுத்திக் கொள்ளத் தவறுவதில்லை. அவர்கள் தம்முடைய நோக்கத்தினை எடுத்துக்கூறி, படைப்புகளில் உலா வருகின்றார்கள். முன்னோர் பரிசிலை எதிர்நோக்கிப் பாடினார்கள். ஆனால் இன்றையக் கவிஞர்களிடம் மாற்றம் விளைந்திருக்கிறது. அதுதான் புனைவியல். மீரா,

பொன்னுக்கோ இல்லை - புகழுக்கோ பாடவில்லை
என் மனித சாதி - எழுச்சிக்கே பாடுகிறேன்
என்று தன்னை இனம் காட்டிக் கொள்கிறார். மேலும் அவர்,
என் எழுதுகோல் - வெறும் எழுதுகோல் அல்ல
தேசம் தழுவும் - பொதுவுடைமைக்கு
வரவேற்புரை எழுதும் போதும்
தேகம் தழுவும் - உனக்கு
என் தனியுடைமைக்கு - வாழ்த்துரை எழுதும்போதும்
என் எழுதுகோல் வெறும்எழுதுகோல் அல்ல (கன.கற்.-21)

என்று தன்னுணர்ச்சியை வெளிக்காட்டியுள்ளார்.

## 2. நடப்பியல் :

வாழ்க்கை நிகழ்வுகளை உள்ளவாறே படைத்துக்காட்டும் கொள்கை இது. கார்ல்பெக்சன் என்பார் ஒரு நிகழ்ச்சியின் உண்மை வெளிப்பாடே நடப்பியலாகும் என்கிறார். ஆயினும் தகுதி உடைய நிகழ்வுகளே படைப்புக்களில் பதிவு செய்யப்பட வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார் ஓவெல்ஸ் எனும் அறிஞர். ஆனால் இன்று இந்நிலைமாறி எல்லாச் செய்திகளும் பதிவாகின்றன. மீரா அரசியல்வாதிகள், மாணவர்கள் ஆகியோரிடம் காணும் போக்கை நடப்பியல் சித்திரமாக்கியுள்ளார். அமைச்சர்கள் தம் தேவைக்கேற்ப அடிக்கடி துறை மாறிமாறிப் பணியாற்றி வருவதை,

போனமாதம் வரை – கைத்தறி அமைச்சர்
அதற்கு முன்பு – உணவு அமைச்சர்
இப்போது அவர் – வீட்டுவசதி வாரிய அமைச்சர்
தேவையை உடனே தெரிந்துகொண்டு அவர்
தேடிக்கொள்ளட்டும் .....(கோ.வச)

என்று குறித்துள்ளார். பாமரர்களைச் சென்றடைந்த ஒரு தமிழ்ப் பத்திரிகையின் நடப்பியலை, லாரி மோதி மாடு சாவு, (ஊசிகள்) எனத் தொடங்கும் கவிதை மூலம் காட்டியுள்ளார். நம் நாடு வளர்ச்சி பெற்றுவிட்டது என்று பறைசாற்றிக் கொண்டாலும், இன்று சிலர் உணவுக்காகத்தன் நிலைகெட்டு வாழும் அவலம் இருக்கத்தான் செய்கிறது என்பதை,

வருக வருக வாசகம் வாசலில் – கொல்லையில்
எச்சில் இலைக்கு – இந்நாட்டு மன்னர் யாசகம் (குக்கூ – 24)

எனும் கவிதையால் பெற வைக்கிறார்.

## 3. மீமெய்ம்மையியல் :

மனதில் தோன்றக்கூடிய உணர்வுகளை மறைக்காமல் அப்படியே கூறுவது இது. அதை ஆய்வாளர்கள் உள்மனத்தின் தடையற்ற சுய இயக்கம் என்று குறிப்பிடுவர். புரட்சி, வியப்பு, ஆசையின் விசுவரூபம், நையாண்டி இவை மீமெய்ம்மையியல் கவிதையின் பாடுபொருள். இலக்கியத்தில் நடைமுறை வாழ்க்கையைத் திட்டமிட்டு, மிகைப்படுத்திக் காட்டுவது இதன் கொள்கை என்கிறார் ந.பிச்சமூர்த்து. ஆகவே, சமூக நிகழ்வுகளை மறைக்காமல் வெளிப்படுத்துவதும், அவற்றைச் சற்று மிகைப்படுத்தி உரைப்பதும் இவ்வியக்கத்தின் தன்மைகள் எனத் தெரிகிறது. ஆன்மீகம் தொடர்பான மாறுபட்ட செய்திகளை அன்றையக் கவிஞர்கள் கூறத்தயங்கினர். ஆனால், மீமெய்ம்மையியலின் தாக்கத்தால் இன்றையக் கவிஞர்கள், அதுபோன்ற கருத்துககளை மறைக்காமல் கூறிவிடுகின்றனர்.

சிவனார் ஏறும் – ரிஷப வாகன – வெள்ளித்தகடு களவு
ஒருநாள் மாலையில் – ஒலி பெருக்கியில் – காதுகிழிய
தர்ம கர்த்தா தங்க மணிக்கு – வெள்ளி வீரவாள் பரிசு (ஊசிகள்)

எனும் கவிதை கோயில் தர்மகர்த்தாவிடம் காணும் முரண்பாட்டை அப்படியே உரைக்கிறது. இதில் களவு, பரிசு எனும் சொற்கள் முரண்பட அமைந்து சுவை பயக்கின்றன. காதலன் காதலியிடம், நான் மூக்கினால் சந்தனம், சவ்வாது, சண்பகம், மல்லிகை ஆகியவற்றை மோந்து பார்த்திருக்கிறேன். ஆனால் இப்போது,

உன் வண்ணப் பாதங்களையும்
பாதங்கள் முத்தமிட்ட மண்ணையும் – மோந்துபார்க்கும்
மோகவெறி கொள்கிறேன் (கள.கற்.17)

என்று கூறுவதாக ஒரு கவிதையைப் பாடியுள்ளார் கவிஞர். இதில் காதல் நிகழ்வு மிகைப்படுத்திக் காட்டப்பட்டிருக்கிறது. இதுபோன்ற கவிதைகள் மீமெய்ம்மையியலைச் சாரும்.

**4. குறியீட்டியல் :**

ஒரு பொருளை மற்றொன்றால் குறிப்பால் உணர்த்துவது இதுவாகும். தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ள உள்ளுறை, இறைச்சி, பற்றிய கோட்பாடுகளே குறியீட்டியலாக மலர்ந்துள்ளன என்கிறார் மல்லார்மே.

மூட்டை மூட்டையாய் - முதுகில் சுமையை
ஏற்ற மட்டும் ஏற்றிவிட்டு - ஒரே ஒரு துரும்பை
எடுத்துப் போட்டதும் - பாரமெல்லாம் பறந்துபோனதாய்
எப்படி உன்னால் மகிழ முடிந்ததோ - ஓ
பாலைவனத்தில் பயணம் போகும் ஒட்டகமே

எனும் கவிதை ஊசிகள் எனும் தொகுப்பில் அமைந்துள்ளது. முதுகில் சுமை - விலைவாசி. ஒரே ஒரு துரும்பு - பஞ்சப்படி. பாலைவனத்தில் பயணம்போகும் ஒட்டகம் - அரசு ஊழியர். இவ்வாறு இக்கவிதையைக் குறிப்படுத்த முடிகின்றது.

நீ ஒரு வார்த்தைசொல் - கொல்லையில் நிற்கும் வாழையை
வாசலில் கொண்டு வந்து வைக்கிறேன் - (கன. கற்.38)

இதில் வாழை திருமணத்தின் குறியீடாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**5. மார்க்சியம் :**

பாட்டாளிகளை முதலாளிகளிடமிருந்து மீட்பது, சமுதாய முன்னேற்றத்திற்கு வழிவகுப்பது, மூடநம்பிக்கைகளைக் களைவது ஆகியன மார்க்சீயத்தின் கொள்கையாகும். கவிஞர் மீரா தன்னுடைய எழுதுகோல் பொதுவுடைமைக்கு வரவேற்புரை எழுதும், என்று கூறி மார்க்சியத்தில் தனக்குள்ள ஈடுபாட்டை தெளிவுபடுத்தியுள்ளார்.

எல்லார்க்கும் எல்லாம் - என்கிற திட்டத்தால்
இலட்சிய சட்டத்தால் - மட்டுமே இந்த
அகிலம் தழைக்கும் ஆம் அகிலம் தழைக்கும் (கோ.வசி)

என்று பொதுவுடைமைத் தத்துவத்தை ஆமோதிப்பதோடு,

நீ - சோஷியலிசத்துக்குப் - படித்துறை அமைத்தாய்
சுரண்டல் முதலை - சும்மா விடுமா
உன்னையே வஞ்சித்து விழுங்கி விட்டது (கோ.வசி)

என்று ஏகாதிபத்திய நிலை நீடித்திருப்பதையும் சுட்டிக்காட்டியுள்ளார் கவிஞர்.

**6.பெண்ணியம் :**

பெண்களுக்கு ஏற்படும் சிக்கலுக்குத் தீர்வு காண எழுந்த இயக்கம் இது. பெண்களுக்குச் சமூக மதிப்பளிப்பதில் பெண்களும், ஆண்களும் எடுக்கும் உணர்வு நிலையுடைய செயல்பாடுகளே பெண்ணியமாகும் என்கிறார் கமலாபாசின். தமிழ்க்கவிஞர்கள் பெண்களுக்குப் பாலியல் சமத்துவம் வேண்டுமென்று குரல் கொடுத்துள்ளனர். மீரா,

ஆளப் பிறந்தவன் ஆண்தான் அவனை/அண்டி அடங்கி ஒண்டி ஒடுங்கி
வாழப் பிறந்தவள் வனிதை என்னும்/கீழோர் நெஞ்சைக் கீற வேண்டும் (கோ.வசி)

என்று உணர்ச்சி மேல்படப்பாடியுள்ளார். மேலும்,

பெண்ணே - நீ ஒரு சிரிக்கும் ரோஜா
உன்னைக் கசக்க - ஒருகை நினைந்தால்
முள்ளை நீட்டு - மூர்க்கம் காட்டு
பெண்ணே - நீ ஓர் புண்ணிய ஆறு

உன்னைச் சுயநல - அணைகள் தடுத்தால்

பொங்கு - புறப்படு - பொடிபொடியாக்கு (கோ.வச)

என்று ஆற்றுப்படுத்தியுள்ளார். இதுவன்றி வாலெண்டீனா, க்ருஸக்காயா அஞ்சலாடேவிட், இந்திராகாந்தி, சரோஜினி முதலிய பெண் சாதனையாளர்கள் போன்று வாழவும் வாழ்த்தியுள்ளார். பெண்ணியத்திற்கு மீரா ஆற்றிய பங்களிப்பு இவ்வகையில் அமைந்துள்ளது.

## 7. காந்தியம் :

அன்பு, அகிம்சை, சுதேசி, புலால் மறுப்பு, கள்ளுண்ணாமை ஆகியன காந்தி வகுத்துக்கொண்ட கொள்கைகள். தமிழ்க்கவிதைகளில் காந்தியத்தின் தாக்கம் ஏற்பும், எதிர்விளைவுமாக இருக்கின்றன. மீராவின் கவிதைகளில் இந்த இரு நிலைகளும் உள்ளன. ஒரு விவசாயி பாரதத்தின் தலைவனாய்ப் பவனி வர வேண்டும். இது அகிலம் துதிக்கும் அண்ணல் காந்தி கண்ட கனவு (கோ.வச) என்கிறார்.

கருப்பு நிலா உன் வானத்திலே - எங்கும் சுரண்டல் சுதந்திரத்தோடு

ஏழ்மை வந்தது விமானத்திலே - அங்கம் குறைக்கும் தொழுநோயாய்

அரசியல் நடக்கும் ஈனத்திலே - இங்கு மகாத்மா திரும்பி வந்தால்

தலை குனிவார் அவமானத்திலே (கோ.வச)

என்பதும்,

குடிமகன் ஒருவன் - கூறினான்

தள்ளாடிநின்று - தாத்தா காந்திதான்

சுதந்திரம் வாங்கித் - தந்தார் என்று (குக்கூ).

என்பதும் காந்தி கண்ட கனவு நனவாகாது மாறிப் போயிருப்பதைச் சுட்டுகின்றன.

## தொகுப்புரை:

மீராவின் கவிதைகளில் புனைவியல் மற்றும் நடப்பியல் போக்கு மிகுதி. குறியீட்டியலுக்கு இரண்டு கவிதைகள் சான்றாகின்றன. கவிஞர் மீரா மார்க்சியம், காந்தியம் ஆகியவற்றில் கொண்டுள்ள ஈடுபாடு தெரியவருகிறது. பெண் சாதனையாளர்களைச் சுட்டிக்காட்டி, பெண்கள் முன்னேற்றத்திற்குக் குரல் கொடுத்திருப்பது பாராட்டிற்குரியது.

## துணை நின்ற நூல்கள்:

1. இலக்கிய இயக்கங்களும் திறனாய்வும், கோமதி நூலகம், சென்னை, 1982.
2. இலக்கிய இயக்கங்கள், சக்தி வெளியீடு, சென்னை, 1980.
3. பெண்ணியம், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 2000.

# இருத்தலியமும் தமிழ்ப் புதினங்களும்

திரு. *சீமானம்பலம்* ,
பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

எந்த ஒரு தத்துவமானாலும் சரி, கலை இலக்கியங்களானாலும் சரி திடீரென்று, தனித்துவமாக, எத்தகைய முன்னொட்டுக்களுமின்றித் தோன்றிவிடுவதில்லை. இவை தனக்கு முன்னுள்ள, தனக்கு வழிகாட்டும் / வலுச்சேர்க்கும் வழிகளில் பயணப்பட்டுத் தனக்கேயுரிய புதிய வழிகளையும் உருவாக்கிக் கொண்டு தன்னளவில் முழுமையடைகிறது. அல்லது ஒரு நிலையிலிருந்து மற்ற நிலைகளை நோக்கித் தங்களை நகர்த்திக் கொண்டே இருக்கிறது.இந்த இடநகர்வில் அருகருகேயும், சில/பல பொதுமைப் பண்புகளையும் கொண்ட கலை, இலக்கியங்கள் தங்களுக்குக்கென்று இலக்கிய இயக்கங்கள் / கோட்பாடுகளை வளர்த்தெடுத்துக்கொள்கின்றன. அல்லது இலக்கியவாதிகளாலும், திறனாய்வளர்களாலும் அவை தோன்றிய காலத்தின் பின்னணியிலோ, உருவ / உள்ளடக்க அடிப்படையிலோ அல்லது அவை முன்னிருத்தும் சித்தாந்தத்தின் அடிப்படையிலோ செவ்வியல் தொடங்கி... பின்னை நவீனத்துவம்... என்று வகைப்படுத்தப்படுகின்றன.

இந்த வகைப்படுத்தலுள் வறட்டு அறிவுவாதம் , லட்சியவாதம், தர்க்கம், விஞ்ஞானம் ஆகியவற்றை மறத்து, இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில், இரண்டு உலகப் போர்கள் மனித வாழ்க்கையில் ஏற்படுத்திய நெருக்கடிகளின் காரணமாக, ஐரோப்பியச் சிந்தனையில் தோன்றிய, தனிமனித விடுதலையை முன்னிருத்தும் ஒரு கருத்தியல்வாதக் கோட்பாடே இருத்தலியம். பிரான்சிலும், ஜெர்மனியிலும் தோற்றம் பெற்ற இச்சிந்தனையானது, பல்வேறு நாடுகளுக்கும் பரவி இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஒரு கலை இலக்கியப் போக்காவும் உருக்கொண்டது.

## தோற்றம் :

இருத்தலியமானது இருபதாம் நூற்றாண்டில் தோற்றம் பெற்றதென்றாலும், இதன் கருவை சாக்ரடீஸ், பிளேட்டோ, இயேசு, பவுல், அகஸ்தீன, பாஸ்கல் முதலியோரின் சிந்தனைகளில் காணப்படுவதாகத் திறனாய்வாளர்கள் (எஸ்.வி. ராஜதுரை, எச்சிஸ்டென்ஷியலிசம்) மதிப்பிடுகின்றனர். இருத்தவியமானது இருபதாம் நூற்றாண்டில் தான் முழுமை பெற்றதென்றாலும்,பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே இருத்தல் குறித்த சிந்தனையைத் தொடங்கி வைத்தவராக டென்மாக்கைச் சேர்ந்த கீர்க்கெகார்ட் அறியப்படுகிறார். இருத்தலியத்தின் தந்தை என்றழைக்கப்படும் இருவரும், நீட்சேயும் இருத்தலியத்தின் முன்னோடிகளாகக் கருதப்படுகிறார்கள்.

மேற்குலகில், பூர்ஷ்வாப் பொருளியலும், விஞ்ஞானமும் வளர்ந்து, மனித உறவுகள் கெட்டிதட்டிப் போய், போர்கள் முதலிய பேரழிவுகள் உருவானபோது, மனிதனின் பழைய நம்பிக்கைகளும், கோட்பாடுகளும் புதிய சூழலில் பொருத்தமானவையாக இல்லாதபோது, மனிதனின் பார்வை திரும்பிய இடமெல்லாம் சூன்யமே தெரிந்தபோது, அச்சமும் பதற்றமும் ஒரு சமூகம் முழுவதையும் ஊடுருவி நின்றபோது, இந்நிலையை, விளக்குகின்ற ஒரு முயற்சியாக மட்டுமல்லாமல், அதைக் கடந்து செல்கிற ஒரு முயற்சியாகவுமே இருத்தலியம் தோன்றியது. (எஸ்.வி. ராஜதுரை மு.நூ.ப. 268).

## இருத்தலியம் :

இருத்தலியலில் ஆத்திக இருத்தலியல் , நாத்திக இருததலியல் என்ற இரண்டு பிரிவுகள் உண்டு. தனிமனிதன் கடவுளில் நம்பிக்கை கொள்ள வேண்டும் என்கிற ஆத்திக இருத்தலியல்வாதிகளாக கீர்க்கெகார்ட்,மார்ஷல், ஜாஸ்பர் போன்றவர்களும், தனிமனிதன் தன்மீதே நம்பிக்கை கொள்ள வேண்டுமென்று கூறும் நாத்திக இருத்தலியல்வாதிகளாக நீட்சே, ஹைடெக்கர், சார்த்தர், காம்யு, பெர்டியேவ் போன்றவர்களும் அறியப்படுகின்றனர்..

மனிதனது இருத்தலை அவனது இடத்தை, சூழலை, உலகில் அவன் செயல்பாட்டை, கடவுளோடு, கடவுட் சிந்தனையோடுஅவனுக்கிருக்கும் தொடர்பை அல்லது தொடர்பின் மையைக் குறிப்பதே இருததலியல். (கு.வெ.பாலசுப்பிரமணியன், தமிழ் உலா, ப. 134).

வறட்டு அறிவுவாதம், தர்க்கம், அறிவியல் ஆகியவற்றை மறுக்கும் இருத்தலியல், அதற்குப் பதிலாக தனிமனிதனின் வாழ்க்கையும், அவனது அனுபவமும் இணையும் வரலாற்றுச் சூழலில் அவனைக் காணவேண்டும் என்று இருத்தலியம் அழுத்தக் கூறுகிறது.

(Paul Roubiezek, Existentialism for and against, P.10).

இருத்தலியவாளர்கள் மாறுபட்ட கருத்துக்களைக் கொண்டிருந்தாலும், பின்வரும் கருத்துக்களில் தமக்குள் ஒன்றுபடுகின்றனர் எனலாம்.

இருத்தல் இயல்பிற்கு முந்தியது (Existence Preceedy Essence) என்பது இருத்தலியலின் கொள்கை வாக்கியமாகும். எளிய மொழியில் இதனை "உண்மைகள் கருத்திற்கு முந்தியன" எனலாம். முதலில் எத்தகைய முன்தீர்மானிக்கப்பட்டஇயல்புகளுமின்றித் தூக்கியெறியப்பட்டிருக்கும் நாம், பின்னரே நமது விருப்பங்கள் மற்றும் செயல்பாடுகளின் மூலம் நமது இயல்புகளையோ / சாரங்களையோ கட்டமைத்துக்கொள்கிறோம் என்பதாகும் இது.

சமூகத்தால் நிர்ணயிக்கப்பட்ட சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்படாமல், தனக்கு விருப்பமானதைத் தேர்ந்தெடுக்கும் உரிமையும், சுதந்திரமும் தனிமனிதனுக்கு உண்டு என்கிற அதே வேளையில்,அத்தேர்வுச் சுதந்திரத்தைப் பயன்படுத்தி, அவன் மேற்கொள்ளும் செயல்களுக்கும் அவனே பொறுப்பு என்றும், பொறுப்பைத் தட்டிக் கழிப்பது சுதந்திரத்தை மறுப்பதாகும் என்கிறது இருததவியல். இந்தப் பொறுப்பு மனிதனைக் கவலைக்குள்ளாக்குகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

மனிதன் தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழ்வதையும், மனிதனின் இடத்தைப் பொருளுக்கும், பொருளின் இடத்தை மனிதனுக்கும் வழங்குவதை இருத்தலியம் சாடுகிறது.

உலகில் நடக்கும் நடப்புகள் அனைத்தும் தற்செயல் நிகழ்ச்சி, பிறப்பிற்கு முன்பு, இறப்பிற்குப் பின்பு என்ற இரண்டு சூனியத்திற்கு இடைப்பட்ட வாழ்க்கையோ அபத்தம் நிறைந்த ஒன்று. மனிதன் பிறந்து வாழும் இந்த உலகிற்கெனத் திட்டமோ, நோக்கமோ, பொருளோ இல்லை. எனவே, எந்தவொரு நிகழ்வுக்கும் காரண - காரியத் தொடர்பு காணவேண்டிய அவசியம் இல்லை என்கிறது இருத்தவியல்.

தவறு, பதற்றம், தடை, அச்சம் போன்ற எதிர்மறை அனுபவங்களுக்கு முக்கியத்துவம் தருகிறது இருத்தவியல். மனிதனின் எதிர்காலத் திட்டங்களையெல்லாம் சிதறடித்துவிடும் - மனித இருப்பின் இறுதி எல்லை எனப்படும், மரணம், எப்பொழுது வேண்டுமானாலும் வரலாம் என்பதால், திரும்ப வராத இறந்த காலம், நிச்சயமற்ற எதிர்காலம் இவற்றை விடுத்து நிகழ்காலத்தில் வாழ வலியுறுத்தும் இருத்தலியம், நோய், மரணம் போன்ற எல்லைக்கோட்டு நிலையில்தான் (Boarder line situation) மனிதன் தன் வாழ்வின் உண்மைப் பொருளை விளங்கிக்கொள்ள முடியும் என்கிறது.

## தமிழ்ப் புதினங்களில் இருத்தலியம் :

சுதந்திரத்திற்குப் பின்பு இந்தியச் சமூகத்தில் உருவான நம்பிக்கை வறட்சி, எதிர்மறை மனோபாவம் ஆகியவற்றின் வெளிப்பாடாக - நவீனத்துவத்தின் ஒருபகுதியாக - நவீனத்துவத்திற்கான தத்துவத் சிந்தனைகளை வழங்கிய இருதலியம், குறிப்பாக 1960களில் தன்னை வெளிப்படுத்திக் கொண்டது. ஆதவன், இந்திரா பார்த்த சாரதி, அசோகமித்திரன், க.நா.சு. சம்பத், கி. நாகராஜன், சுந்தரராமசாமி ஆகியோர் இருததலியல் சிந்தனை இழையோடும் புதினப் படைப்பாளர்களாக அறியப்படுகின்றனர்.

ஆதவன், காகித மலர்களிலும், என் பெயர் ராமசேஷனிலும் டெல்லிச் சூழலில் குடும்பங்கள், அலுவலகங்கள் என்று பல இடங்களிலும்மனிதர்கள் முகமூடி தரித்தலையும், தரித்த முகமூடிகளை ஈவிரக்கமின்றிக் களைவதையும் தன் பாத்திரங்களின் - செல்லப்பா - ராமசேஷன் - வழி நிகழ்த்திக் காட்டுகிறார். இவர்கள் பிறரின் முகமூடிகளைக் களைவதோடு மட்டுமல்லாமல் தங்கள் முகமூடிகளையும் களைத்து கொள்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

இ.பா.வின் புதினங்களில் தில்லியில் வாழுகின்ற உயர் நடுத்தர வர்க்கத்தினரிடையே காணப்படும் மனப்போராட்டங்களும், உறவு விரிசல்களும் விரிவாகப் பேசப்படுகின்றன. இவருடையவை யதார்த்தவாதப்

புதினங்களாகவே காணப்பட்டாலும் இக்கட்டமைப்பிற்குள்ளிருந்து, தனிமனித சுதந்திரம், வாழ்வை அபத்தமெனக் கருதுதல், எல்லைக் கோட்டுநிலை, போன்ற இருத்தலியக் கூறுகளைத் தனக்கான தத்துவப் பொருளாகக் கொண்டுள்ளன. தந்திரபூமி, மாயமான் வேட்டை, நிலமெனும் நல்லாள், வெந்து தணிந்த காடுகள், திரைகளுக்கு அப்பால் போன்ற ஐந்தாறு புதினங்களை ஒருசேர வாசிக்கும்போது, அவை வெவ்வேறு புதினங்கள், சூழல்கள், சம்பவங்கள், பாத்திரங்களாக இருந்தாலும், எல்லாப் புதினத்தின் ஆண், பெண் குரல்களும், ஒரு ஆண், ஒரு பெண்ணின் குரலாகவே ஒலிப்பதாகத் தோன்றுவது தவிர்க்க முடியாததாகி, தேடலுடைய வாசகனை, ஏமாற்றத்திற்கும், சலிப்பிற்கும் உள்ளாக்குகின்றன.

இ.பா.வின் ஆண்குரல், பெண்ணை அடக்குதல், முடியாத நிலையில் விலகிப் போய்விடுதல், பெண்குரல் அடங்க மறுத்தல், முடியாத நிலையில் பணிந்து போய்விடுதல் என்பதாகவுமே இருக்கிறது.

"தண்ணீரில்" சென்னைப் பெருநகர வாழ்வின் தண்ணீர்ப் பிரச்சனையை இரு பெண்களின் வாழ்க்கையினூடாகச் சொல்லிச் செல்லும் அசோகமித்திரன், அவ்விரு பெண்களின் மற்றும் சிலரின் இருத்தலுக்கான போராட்டத்தை தணிந்த குரலில் ஆனால் அழுத்தமாகப் பதிவு செய்கிறார்.

க.நா.சு.பின் "பசி"யின் சாமா, வாழ்நிலையைத் தெய்வீகத் தன்மையுடையதாக்க, நீட்சே குறிப்பிடும் மந்தை மனிதர்களிலிருந்து, மனதளவில் விடுபடுகிறான் என்றாலும், பூரண சுதந்திரத்திற்கு இது போதாது. ஆனால் "பொய்த்தேவில்" அறிபவனாகிய சோமு முதலியார், அறியப்படுவதாகிய மெய்த்தேவுடன் ஐக்கியமாகி பூரண சுதந்திரமடைகிறார். "ஏழு பேர்" தனக்கு விருப்பமான ஒன்றைத் தேர்வு செய்து கொண்ட பிறகு,அத்தேர்வுக்கான விளைவுகளுக்கும், அவனே பொறுப்பு என்பதைப் பிரதிநிதிப் படுத்துவதாக அமைகிறது.

ஜி. நாகராஜனின் இருத்தலியல் தொனி கொண்ட "நாளை மற்றுமொரு நாளே"யின் எல்லாப் பாத்திரங்களும், நிறுவப்பட்ட சமூகக் கட்டமைப்பிற்குள், தவிர்க்க முடியாததாகிப் போன வேஷங்களின்றி, போலி மனசாட்சியின்றி மற்றவர் என்ன நினைப்பர் என்ற நினைவகற்றி, தங்களின் தளத்தில் இயல்பாக இயங்கும் இவர்கள், தங்கள் இருத்தலைத் தாங்களே நிர்ணயித்துக் கொள்கிறார்கள்.

சாவின் காரணமாக கடைசி பட்சத்தில் எல்லாம் போய்விடுகிறது. எல்லாம் தானே ! இதற்கு என்ன செய்வது ! என்ற இருத்தலியல் வேதனையுடன், சாவு பலவிதங்களில் சம்பவித்தாலும், அதற்கு மூலகாரணம் ஒன்றாகவே இருக்க வேண்டுமெனக் கருதி அதனை அறியும் தேடலுடன் தொடங்கும் சம்பவத்தின் "இடைவெளி" பிரபந்த அளவில் மனிதனிடம் ஒரு கையாலாகாத்தனம் இருக்கிறது. அந்த விதத்தில் எந்தச் செய்கையுமே பயனற்றது. அர்த்தமற்றதும் கூட!" (ப.52) என்பதைத் தினகரன் புரிந்து கொண்டிருந்தாலும் "இதயத்தை நிரப்புவதற்குச் சிகரங்களை நோக்கிய பயணம் மட்டுமே போதுமானது" என்று காம்யு கருதியதைப் போல், மனைவி குடும்பம், வேலை என்கிற வாழ்க்கைப் பிரச்சயினூடே, மரணம் பற்றிய அறிதலுக்காகப் போராடும் தினகரன், சாவு என்பது முரண்பாடுடைய இடைவெளி என்றும்... இடைவெளியைக் கையில் பிடிக்க முடியாது என்பதால் சாவு வெல்லப்படாத ஒன்று என்ற முடிவுக்கு வந்து, [illegible]லக்கோடு தெரியாமல் ஓடிக்கொண்டிருந்த சாவே, உன்னை நான் கண்டுகொண்டு விட்டாலும் உன்க்குத்தான் வெற்றி என்று தலைவணங்குகிறார்.

எதுவும் சரியில்லை என்ற எண்ணத்தைப் பலமாக ஏற்படுத்தும் ஜே.ஜே. எது சரி? எப்படி மாற்றியமைக்க வேண்டும்? இனி மனிதன் பின்பற்ற வேண்டிய நியதிகள் எவை? என்ற கேள்விகளின் முன் கொள்வதும் அந்தகாரம், அவன் இருத்தலியலாளன் - கலகக்காரன் - தீர்வு காண்பவனல்லன் என்பதைக் குறிப்பதாக இருக்கிறது.

மனிதனின் மிகப்பெரிய சங்கடம் முடிவுகள் எடுப்பது என்பதால், சரணாகதி நிம்மதியைத் தரக்கூடியது என்று கருதும் ஜே.ஜே. இப்போது இட்டுச் செல்ல கடவுளும் இல்லை, பயணம் தொடர முடிவெடுக்கவும் முடியாது என்ற நிலையில், தற்கொலையைத் தேர்வாகக் கொள்கிறான். காம்யுவின் மரணம், நீட்சேயின் கடவுள் இறந்துவிட்டார், மரணம்தான் சகல உன்னதங்களுக்கும் காரணம் போன்ற வாசகங்கள் "ஜே.ஜே. சில குறிப்புகள்" ஓர் இருத்தலியல் புதினம் என்பதற்கான தடயங்களை நெடுக விட்டுச் செல்கின்றன.

# கண்ணதாசன் கவிதைகளில் தத்துவம்

*அ. சுப்பாத்தாள்,* எம்.ஏ., எம்.பி.எல்., பி.எட்., விரிவுரையாளர்,
எல்.ஆர்.ஜி. நாயுடு அரசினர் மகளிர் கலைக்கல்லூரி, திருப்பூர்.

**முன்னுரை :**

தற்காலக் கவிஞர்களின் தலைசிறந்தவர் கண்ணதாசன் ஆவார். இவர் பேரும் புகழும், செல்வமும், செல்வாக்கும் பெற்றவர். "உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாதவர், எதையும் தாங்கும் இதயம்" கொண்டவர் கண்ணதாசன். வாழ்வின் மேடு பள்ளங்கள், இன்ப துன்பங்கள் எல்லாவற்றையும் கண்டு அனுபவித்தவர். "எல்லாம் நன்மைக்கே" என்றும், "நடப்பதெல்லாம் நாராயணன் செயல்" என்றும், கண்ணன் மீது பாரத்தைப் போட்டுக் காரியத்தை நடத்தியவர் கண்ணதாசன்.

கண்ணதாசன் கவிதைகள் பெரும்பாலும் சமுதாயத்தைப் பிண்ணனியாகக் கொண்டு அமைந்துள்ளன. சமுதாய நிலை, அவற்றில் என்ன என்ன மாற்றங்கள் நிகழ வேண்டும் என்பது பற்றியும், வெளிப்படுத்துகின்றன. கண்ணதாசன் கவிதைகளில் தத்துவம் என்பதை வாழ்க்கைத் தத்துவம், அரசியல் தத்துவம், கடவுள் தத்துவம் போன்றவற்றின் மூலம் காணலாம்.

**தத்துவம் - ஒரு விளக்கம் :**

சுருங்கக்கூறின், மெய்ப்பொருள் பற்றி ஆய்தலே தத்துவமாகும். தத்துவம் என்பது உண்மையை அறிதல் என்றும், தன்னை அறிதல் என்றும் பொருளாகும். நுண்ணிய பல உண்மைகளை எடுத்துச் சொல்லுவதுதான் தத்துவமாகும். புதியன காண வேண்டும் என்ற ஆர்வத்துடிப்பு மூல முதற்காரணம் பற்றிய சிந்தனை ஆகியவற்றை தத்துவம் என்று சான்றோர் கருதினர். உலகியல் பற்றிய பகுத்தறிவுச் சிந்தனைகளும், வாழ்க்கை நடைமுறை பற்றிய கருத்துரைகளும்தத்துவத்தன் பாற்படும். புதிய சிந்தனைகளை தோற்றுவிக்கும் கருத்துக்களும் தத்துவத்தின் பாற்படும்.

**வாழ்க்கைத் தத்துவம் :**

இன்றைய வாழ்க்கை ஆரவாரம், ஆடம்பரம் மிக்கதாகவும் போலித்தனமும், புன்மையும் நிறைந்ததாகவும் மாறி வருகிறது. நல்லெதிர்கால நம்பிக்கையே அவரது உயிர்த்துடிப்பாக விளங்கியது. கிடைக்காததை எண்ணி ஏங்கிச் சாவதைவிடக் கைமேல் கிடைத்ததைப் பெரிதென்றெண்ணி ஆறுதல் அடைவதே சிறந்த வழியாகும். "போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து" என்னும் தமிழ்நாட்டுப் பழமொழியும் இங்கு எண்ணிப் பார்க்கத் தக்கதாகும்.

வாழ்வில் நாமும் வாழ்ந்து, பிறரையும் வாழவைக்க வேண்டும். அவ்வாறு முடியவில்லையெனில் தீயதைச் செய்யாமல் இருந்துவிட வேண்டும். கொடுத்து உதவா விடினும் கொடுப்பதைத் தடுக்காமல் இருப்பதே நல்லதாகும்.

"நல்லது செய்தல் ஆற்றீராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்"

இதுதான் நரிவெரூஉத் தலையாரின் வாழ்க்தைத் தத்துவமாகும். எதுபற்றியும் ஆழமாகச் சிந்தித்து அல்லற்படுவதைவிட வாழ்க்கை எளிதாக எண்ணி இன்பமடைய வேண்டும் என்பதே உமர்கயாமின் கொள்கையாகும். வாழ்க்கையில் சுகபோகமாக உண்டு செழித்துக் கவலையற்று வாழ்ந்திருந்தால் தான் அவரைப் படைத்த இறைவன் திருப்தி அடைவானாம் என்ற கருத்து போலியானது.

இளம் வயதில் இன்பம் அனுபவித்து முதிர்ந்ததும் துயர் வாட்டுவதாகப் பாடுகிறார் - "கண்ணதாசன் ஊர்க்குருவிகள் வேதாந்தங்கள் தெரியா, வாழ்வை அது துயரம் இன்பம் எதைத் தந்தாலும், வாழ்ந்து பார்க்க வேண்டும் என்ற திடமான நம்பிக்கை அவருக்கு உண்டு".

எதிர்காலம் இனிமையாகவும் வளமாகவும் அமையும் - அமைய வேண்டும் என்ற நம்பிக்கையும் நல்லாசையும் கண்ணதாசனுக்கு இருந்தன.

காலனை காலால் உதைத்த பாரதியார் போல், கண்ணதாசனும் "துன்பம் வந்தால் அதைத் தூர எட்டி உதை" என்று கூறுகிறார்.

"தனக்குள்ளிருக்கும் துயர வெள்ளத்தை வெளியேற்ற இவர் கைக்கொள்ளும் ஒருநெறி அதை பாட்டாக்கி, மற்றவர்களையும் அதில் பங்கு கொள்ளச் செய்வதுதான். அப்படி மற்றவரோடு துயரத்தைப் பகிர்ந்து கொள்ளும் போது இவரது துயர் அழிவது மட்டுமல்லாது, அதன்பின் இவரிடம் பிறக்கும் கவிதைகளில் உற்சாகம் கரைபுரள்கிறது".

நிலையாமையை உணர்த்தி வாழ்வில் நேர்மையைக் கடைபிடிக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார்.

## அரசியல் தத்துவம் :

ஆள்வோரையும் ஆளப்படுவோரையும் இணைப்பது அரசியலே ஆகும். கண்ணதாசன் 1949 முதல் 1979 வரை அரசியலில் தொடர்பு கொண்டிருந்தார். பிரிவினை வாதம் பேசிக் கொண்டிருந்தவர் இந்திய தேசிய ஒருமைப்பாடு, நாட்டு ஒற்றுமை பற்றிக் கவிதை பாட ஆரம்பித்தர். இந்தியா இனத்தாலும், மொழியாலும் வேறுபட்டுள்ள நிலைமையை மாய்தொழித்து ஒருமைப்பாட்டை வளர்ப்பதில் ஆர்வம் காட்டுகிறார்.

"ஒன்றுதான் தேசம் ஒன்றுதான் சிந்தை
ஒன்றுதான் நாம் சொல்லும் வார்த்தை
ஒன்றுதான் நோக்கம், ஒன்றுதான் பார்வை
ஒன்றுதான் நாம்செல்லும் பாதை"

என்று தேசிய ஒருமைப்பாடு குறித்து அழகிய பாடல் பாடியுள்ளார். ஒற்றுமைக்கு ஈடான வலிமை ஒன்றுமில்லை.

ஒற்றுமைக்கும், ஒருமைப்பாட்டிற்கும் ஊறு விளைவிக்கும் சாதி இனக்கொடுமைகளைக் கண்ணதாசன் தம் கவிதைகளில் வன்மையாகக் கண்டிக்கிறார். தமிழகத்தில் சாதிக் கொடுமை தேர்தல் காலங்களில் பயங்கரமாகத் தலைவிரித்தாடி ஜனநாயகத்தின் அடிப்படையையே ஆட்டி அசைத்துவிடுகிறது. நூற்றுக் கணக்கானோர் பலியாகின்றனர். மனிதாபிமானம் நாட்டுப்பற்றுக் காரணமாகவே சாதி வெறியை அரசியலிலிருந்து அகற்ற வேண்டும் என்று கண்ணதாசன் கருதுகிறார். எப்போது ஓர் இனம் ஆகின்றதோ அன்றுதான் நாடு நலம் பெறும், வளம் பெறும், மக்கள் பயன் பெறுவர். ஒற்றுமைக்கு தலை தூக்கும்போது தான் நியாயமும் உண்மையும் வலுப்பெறும்.

## கடவுள் தத்துவம் :

பக்கவமற்ற பண்பாடற்ற மனிதக் கூட்டத்தைப் பக்குவப்படுத்தி பண்படுத்தத் தோன்றியதே சமயமாகும். இறைவனே நமது வாழ்வை வகுத்துக் காட்டுபவனும், வழிகாட்டுபவனும் ஆவான் என்பதில் கண்ணதாசனுக்கு உடன்பாடுண்டு தெளிந்த நிலையும் திறந்த நெஞ்சும் கொண்டவர்கள் நன்றி நிறைந்தவர்கள். நன்மை புரிந்தவர்கள், பழமை போற்றுபவர்கள், பாசம் கொண்டவர்கள். ஆகியோரிடத்தும் இறைவன் இருப்பதாகக் கண்ணதாசன் கருதினார்.

புறக்கோலங்களை நீக்கிவிட்டு ஒழுக்கத்தோடு வாழ்ந்து உயிர்களிடத்து அன்புகொண்டு வாழ்ந்தாலே இறைவனருள் தானே கிட்டும். வாடும் உயிர்களின் வாட்டம் போக்காமல், பெற்ற தாயைப் பேணிக் காக்காமல் நெற்றியிலே நீறணிந்து என்ன பயன்? கண்ணதாசன் கேட்கிறார்?

"தாயைக் கதறவிட்டுச் சாமியாடி பார்த்திருப்பான்
தாயணைக்கும் பேரறிவைச் சாடுவதோ பக்திவழி"

மேலும் தொடர்கிறார்,

"நெற்றியிலே திருநீறு நீண்டதொரு பின்குடுமி
புத்தியெலாம் சத்தியத்தின் புதைகுழிக்குத் தங்க நகை
இத்தகைய தேவர்களின் இயல்பிழந்த வேடவழி
நித்தியத்தை நன்குணர்ந்த நேசவழி ஆவதில்லை"

பொய்வேடத்தையும் புறக்கோலத்தையும் எவ்வளவு கடுமையாகக் கண்ணதாசன் சாடுகிறார்.கண்ணன் மீது மிகுந்த பக்தி கொண்டவர் கண்ணதாசன் என்பதும் உண்மையே. இவர் இறைவனை அவர் அவர் மனதிற்கேற்ப பல வடிவங்கள் இருப்பதாக பேர்சொல்லிப் பாடுகிறார்.

## முடிவுரை :

சான்றோர்கள் வழியில் நின்று சரியான வாழ்க்கை வாழ வேண்டும் என்பது அவரது எண்ணம். உமர்கயாம் தத்துவத்தை உளமார விரும்பி அதன்படியே வாழ்வதுதான் வாழ்க்கை என்று கருதினர். ஒருமைப்பாட்டுணர்வும், ஒற்றுமையுணர்வும் அவற்றிற்குத் தடையாக உள்ள சாதி, இன வேற்றுமைகளைச் சாடுவதிலும், பிற்கால கவிஞர்களின் கவிதைகளில் பெரிதும் இடம் பெற்றுள்ளதையும் தெளிவாக்குகிறது. சொல்லிலும், செயலிலும் தான் இறைவன் குடிகொண்டிருக்கிறான் என்பது நன்கு புலப்படுகிறது.

வாழ்வில் ஏற்படும் தோல்விகளையும், துன்பங்களையும் எண்ணி வருந்தாமல் எதையும் எளிதாக எடுத்துக்கொண்டு உலக நிலையாமையைப் புரிந்து நேரிய வாழ்க்கை வாழவேண்டும் என்னும் தத்துவத்தை அவரது பாடல்கள் நமக்குப் புலப்படுத்துகின்றன.

## குறிப்புகள் :

1. புறநானூறு (வர்த்தமான் பதிப்பகம், சென்னை) ப. 195, 365.
2. ஆ. செகநாதன், கண்ணதாசன் ஒரு கண்ணோட்டம்.
3. ஆ. செகநாதன், கண்ணதாசன் ஒரு கண்ணோட்டம்.
4. கண்ணதாசன் கவிதைகள், தொகுதி 3, ப. 148.
5. கண்ணதாசன் கவிதைகள், தொகுதி 1&2, பக்கம் 320.
6. கண்ணதாசன் கவிதைகள் தொகுதி 1&2, பக். 321.

# மேத்தாவின் கவிதைகளில் வருங்காலவியம்

முனைவர். ச. சுப்புரெத்தினம் தமிழ்த்துறை விரிவுரையாளர்,
தருமபுரம் ஆதீனம் கலைக் கல்லூரி, தருமபுரம் - மயிலாடுதுறை.

## முன்னுரை :

புதுக்கவிதை என்பது வெளிப்படையாக உணரப்பட்டு, வெளிப்படையாக உணர்த்துவது, மேலைநாடுகளில் ஏற்பட்ட அரசியல், சமுதாய, பண்பாட்டு மாற்றங்களினாலும், மாறுபட்ட புதிய இலக்கியச் சிந்தனைகளாலும் மார்க்சியம், புனைவியம், வருங்காலவியம், பெண்ணியம், தலித்தியம் போன்ற பல்வேறு இயக்கங்கள் தோன்றின. அவற்றுள் ஒன்றான "வருங்காலவியம்" குறித்துச் சிந்திக்கும் நோக்கில் மு. மேத்தாவின் கவிதைகளில் ("அவர்கள் வருகிறார்கள்" கவிதைத் தொகுதி) அவ்வியக்கம் இயன்றுமையினை இக்கட்டுரை ஆய்கிறது.

## வருங்காலவியம்

பழையன கழிந்து புதியன புகும் நோக்கியலான இவ்வியக்கம், பழைமைவாதிகளிடமிருந்து இலக்கியப் போக்கினைக் காக்க முனைந்து எழுந்தது என்பர் (மால்கம் பிராட்பரி, புதுமையியம் : 246). இத்தகைய இலக்கியவாதிகள் புதுக்கவிதைகளைப் பொறுத்தவரை, அதன் வெளிப்பாட்டு உத்திமுறை அதிர்ச்சித்தன்மை மிக்கதாகவோ, புதிய பாதையினை வகுப்பதாகவோ அல்லது வலிமைக் குணம் மிக்கதாகவோ இருக்க வேண்டும் எனக் கருதினர். அதே கருத்திலேயே மு. மேத்தாவும் தனது கவிதைகளைப் படைத்துள்ளார் எனக் கருதமுடிகிறது.

பொதுவாகப் புதுக் கவிதைகளில் வருங்காலவியத்தின் தாக்கம், (1) உள்ளடக்கத்தில் வெளிப்பாடு (2) வடிவத்தில் வெளிப்பாடு என்ற இருநிலைகளில் அமைவதுண்டு. மு. மேத்தாவின் கவிதைகளில் "வருங்காலவியம்" உள்ளடக்கம் என்ற நிலையில் மட்டமே மிக்குள்ளதைக் காண முடிகின்றது.

## தலைப்புகள் :

கவிதைத் தலைப்பே அதன் பாடுபொருளை உணர்த்திவிட வேண்டும் என்ற பழைய மரபு மாறி, வாசகர்களின் உய்த்துணர்வுக்கு விட்டுவிட வேண்டும் என்பதில் வருங்காலல வியத்தினர் தற்காலத்தில் ஆர்வம் காட்டவது வெளிப்படை. அதே நிலையில் தனது கவிதைத் தொகுதி ஒன்றிற்கு "அவர்கள் வருகிறார்கள்" என்ற தலைப்பினைத் தந்துள்ளார் மு. மேத்தா. யார் அந்த அவர்கள்? என்பதனை வாசகர்களின் சிந்தனைக்கே விட்டுவிடுகின்றார்.

சிறகே ஒரு சுமைதான, 1978, காற்றை மிரட்டிய சருகுகள், (தேர்தல் என்றும் பொருளில்) தேறுதல், கார்களில் நசுங்கும் காலைப் பூக்கள், நடிக்கத் தெரியாத நடிகைக்கா என்று அவர் தந்துள்ள உட்தலைப்புகள் அதிர்ச்சித் தன்மை மிக்கனவாக உள்ளன. இதே மரபில்,

1. கைகுலுக்கிக் கொள்ளும் காதல்
2. கண்சிமிட்டும் கல்லறைகள்
3. சூரியனுக்குப் பின்பக்கம்
4. கனகாம்பரமும் டிசம்பர் பூக்களும்
5. கோழிக் குட்டிகளும் பன்றிக் குஞ்சுகளும்

என்றளிக்கப்பட்ட தற்காலக் கவிஞர்கள் பலரின் தலைப்புகளும் சிந்திக்கத்தக்கன.

பெண்கள் பருவம் அடைவதை வாலிபத்தின் தூது எனக் கூறும் மு. மேத்தா, கனவுகளைத் தவிர்க்கவியலாத அவர்களுக்குக் காதற் சிந்தனைகள் ஏராளம் என்பதால், அத்தகைய பெண்களை ஆயிரம் சிறகுகள் முளைத்த அபூர்வப் பறவைகளாகச் சித்திரிக்கிறார். சிறார்ப் பருவததில் வார்த்தைகளுக்கு மட்டுமே பொருள் தெரிந்திருந்த அவர்கள் பருவம் வந்த பின்னர்தான் தத்தம் உடம்புக்கும் பொருளுண்டு என்பதைப் புரிந்து கொள்கிறார்கள் எனக் கூறுவது ஒரு புதிய சிந்தனையாக உள்ளது.

பருவ மகளிர் தினந்தோறும் விடியற்காலையில் எழுந்து வாசலில் கோலமிடுவது வழக்கம். இவர்கள் இளமங்கைப் பருவத்தில் பிறந்த வீட்டு வாயிலிற் கோலமிடுவர். பின்னர், குடும்பப் பெண்ணாகப் புகுந்த வீட்டிற் கோலமிடுவர். புகுந்த வீட்டுக் கோலத்தின் நம்பிக்கை பிறந்த வீட்டிலேயே தோன்றி விடுகிறது என்று, பெண்களின் மனநிலையினை நன்குணர்ந்த இக்கவிஞர்,

"வாசல் கோலங்கள் கூடி/
அவர்களுடைய/மனக் கோலங்களுக்கு/வரைபடமாகிறது"

என்கிறார். "கொவ்வைச் செவ்விதழ்" என வருணித்த கவிஞர்களின் திறனைத் தாண்டி "இசைத்தட்டு இதழ்கள்" என வருணித்திருப்பது புதுமையின் சின்னமாகும். மங்கையரின் அத்தகைய இதழ்களால் உச்சரிக்கப்படும் திரைப்படப் பாடல் வரிகளுக்குக்கூட மந்திரச் சொற்களாகும் மகிமை கிடைத்துவிடுவதாகப் பாடியுள்ளது மேலும் சிறப்புடையது.

வரதட்சணை :

வரதட்சணை என்னும் சமூகநோயினால் பீடிக்கப்பட்டிருக்கும் பெண்களின் அவலம் பல கவிஞர்களால் பேசப்பட்டுள்ளது. புதுமையுடன் நோக்கும் இக்கவிஞரோ,

"வாழ்க்கையின்/நிதர்சன அர்த்தத்தைக்/கண்டு கொள்ள
நேரிட்டதால் - அந்த/உல்லாசவாசிகள்
ஊமைகளாகி விடுகிறார்"/

என்கிறார். வாய்க்கப் போகும் கணவன் குறித்துப் பெண்ணிடம் யோசனை கேட்காத பெற்றோரைச் சாடுவார் பாரதியார் (பெண்கள் விடுதலைக் கும்பி : பாடல். 5). வரதட்சணை பயத்தினால் பலர் முதிர் கன்னியராக இருப்பதுமுண்டு. திருமணப் பேச்சே நடைபெறாமற் போவதுமுண்டு. ஆனால், இக்கவிஞரோ, வரதட்சணை குறித்து இருதரப்பினரும் பேசுவதாகக் குறிப்பிடுகின்றார். எனினும், பேசப்பட்ட வரதட்சணை ஒத்துவராததால் அத்திருமணம் வாய்க்காமற் போவதைப் பின்வருமாறு கவிதைப் படுத்துகிறார்.

"அங்கே நடைபெறும்/ராஜதந்திரப் பேச்சு வார்த்தைகள்
தோற்றுப் போனதால்/அடிக்கடி/அடுப்படிக்கே
திருப்பியனுப்பப் படுகிறார்கள்"

மனத்தில் ஏராளமான ஆசைகளைச் சுமந்து நிற்கும் பெண்களின் திருமணம், கொடுக்கவியலாத வரதட்சணையால் நின்று போகும் பரிதாபத்தைச் சுட்டும் விதம் சற்றுப் புதுமையாக உள்ளது. ஐந்தோ பத்தோ அதிகமாகக் கேட்டாலும் அதற்கும் சம்மதித்து அப்பெண்ணை எவ்வாறேனும் அந்தக் குடும்பத்திடமே ஒப்படைத்துவிட வேண்டும் என்ற பொதுவான மனப்பான்மையினைச் சாடிட நினைக்கும் இக்கவிஞர், பேச்சுவார்த்தை தோல்வி அடைந்தாலும் பரவாயில்லை; கேட்கப்படும் வரதட்சணைக்கு உடனடியாக அடிபணியலாகாது என்ற புதிய சிந்தனையைத் தருகிறார். இளைஞர்கள் வரதட்சணையில் வறட்டுப் பிடிவதமாக இருப்பதில்லை என்பதையும், ஆனால் அவர்தம் பெற்றோர்களே பிடிவாதத்துடன் இருக்கின்றனர் என்பதையும்

"இளைஞர்களின் கனவுகளில்/மலர்மகளாக
வரவேற்கப்பட்ட அவர்கள்/பெரியவர்களின் வீடுகளில்/மருமகளாக நுழைவதற்கு

மறுதலிக்கப் படுகிறார்கள்"

எனச் சுட்டுகின்றார். எனவே, இளைய சமுதாயம் மாறத் தொடங்கியுள்ளது என்ற புதிய தகவல் இங்குக் கிடைக்கிறது. எனினும், சில வாலிபர்கள் முதலில் வரதட்சணை வாங்கமாட்டேன் என்று வாக்குறுதி அளித்துவிட்டுப் பின் மனம் மாறிவிடுவதையும் ஆசிரியர் சுட்டத் தவறவில்லை (ப.16). இக்கவிதை வரிகள், வேறு பல வகையில் இளைஞர்களைக் கவுரவப்படுத்தினால் அவர்களது வரதட்சணை அவா குறைந்து விடும் என எண்ணும் இக்கவிஞரின் மனநிலையை வெளிப்படுத்துவனவாக உள்ளன.

### கற்பனை :

கன்னியர்க்குத் திருமணக் கற்பனை வழக்கம் போலவே தடையில்லாது கிடைக்கிறது. பின்னரோ திருமணம் குறித்த நிஜத்தில் பொய்த்துப் போகிறது என்பதைக் கவிஞர்,

"அந்தப் பேதைகளின்/நினைவுப் பாதைகளில்/அலங்கரிக்கப்பட்ட ரதங்களின்
அணிவகுப்பு -/வாழ்க்கை வீதியிலோ
அவர்களுடைய/நடைவண்டிப் பயணத்துக்கும்/வழிமறிப்பு!"

எனக் குறிப்பிடுகின்றார்.

### சொர்க்கம்

சொர்க்கம், நரகம் என்ற பழைய நம்பிக்கையிலிருந்து பலரை விடுவிக்க முனையும் இக்கவிஞர் சொர்க்கம் என்ற ஒன்று உண்மையிலேயே இல்லாததனால்தானே பலருக்குத் திருமணம் நிச்சயிமாகாமலேயே இருக்கிறது என்கிறார் (பக்.19-20). காட்டுமயிலைத் தேசியப் பறவையாக்கி, அதனைச் சிறப்பிக்கும் இந்தியர்களுக்கு வீட்டிலுள்ள கன்னியர்களைக் கவுரவிக்கும் புதிய மனப்பான்மை வரவேண்டும் எனவும் இவர் விரும்புகின்றார் (ப.20).

### விஞ்ஞானிகள்

விஞ்ஞானிகளைப் போற்றுதும், அவர்களிடமிருந்து பல புதிய கண்டுபிடிப்புகளைக் கோருவதும் வருங்காலவியக் கவிதை மரபுதான். கடல் நீரைக் குடிநீராக்கும் எந்திரங்கள் செயல்பாட்டிற்கு வருவதை நினைவுபடுத்தும் முகத்தான், கண்ணீரைக் குடிநீராக்கும் வழியைக் கண்டு பிடிக்குமாறு மு.மேத்தா கேட்பது ("விழிச்செல்வம்") சற்றுப்புதிய சிந்தனையாக உள்ளது. "விலங்கு என்பது பிறரால் பூட்டப்படுவதென்றே பேசப்பட்டு வந்த பழைய சிந்தனையிலிருந்து மாறி, ஒருவன் தான் செய்த சொந்த விலங்கினாலேயே தன்னைத் தளையிட்டுக் கொண்டு துன்புறுவதாகச் சித்திரித்துள்ளது ஒரு புதிய கண்ணோட்டமாகும்.

### மூட நம்பிக்கை

"விதி" என்பது மூட நம்பிக்கை என்போரும் உண்டு. அத்தகையோருக்கு உழைப்பு மட்டுமே உண்மைத் தத்துவமாய்த் தெரியும். அத்தகைய புதிய சிந்தனைக்கு வித்திடக்கருதும் இக்கவிஞர்,

"நம்பிக்கை நாார்மட்டும்/நம்கையில் இருந்தால்/உதிர்ந்த பூக்களும்
ஒவ்வொன்றாக வந்து/ஒட்டிக் கொள்ளும்" (சுதந்திரராகம்)

என்று பாடுகின்றார். மேலும் "வருங்காலம் நமதாகும்" என்றும் நன்னம்பிக்கை மனிதனின் வருங்காலத்தை மகிழ்ச்சி மிக்கதாகச் செய்யும் என நம்பும் மு.மேத்தா,

"பனித்துளியின் முத்தத்தில்/பச்சை இலை தலைகவிழும்
ஈரவிடியல்கள் இனிவேண்டாம்/வேர்வைத் துளிகளால்
விதியை அழித்தெழுதும்/வீர விடியல்களே/வேண்டும்"

எனக் கவிதை பாடுகின்றார்.

### தீண்டாமை

தீண்டாமை என்னும் சமூக "அநீதி"க்குக் கொக்கை (Policy) என்ற சொல்வடிவம் கொடுத்துள்ள இக்கவிஞர், சாதி என்பதன் அபாயத்தை உணர்ந்து, அதனை உலகளவில் போக்க முற்பட்டால் குருதி வெள்ளம் நிறுத்தப்பட்டு, அமைதி நிலவும் என்று எதிர்பாக்கிறார். அவரது அந்த எதிர்பார்ப்பு,

"இன நிற பேதங்களால்/இரத்தக் குளியல் நடத்தும்/தீண்டாமைக் கொள்கைகளை

உலகெங்கும் திருத்துவோம்" (சுதந்திரராகம்)

என்றவாறு வெளிப்பட்டுள்ளது.

### அறிவியல் வளர்ச்சி

வருங்காலத்தில் அறிவியல் வளர்ச்சி மிகுமானால் "சாதி பேதம்" மறைந்து விடும் எனக் கனவு காணும் இக்கவிஞர்,

"சாதியே... ஓ சாதியே!/................................./உன் இடத்தை

அறிவின் பிள்ளைகள்/ஆக்கிரமித்த பிறகு/நீ

தூசி போலத்/துடைக்கப்பட்டாய்"

என்று கூறி நிகழ்காலத்திலேயே வருங்காலத்தையும் காண முயன்றுள்ளார்.

### வடிவத்தில் வருங்காலவியம்

வருங்காலவியச் சிந்தனையாளர்கள் கவிதையின் வடிவத்திலேயே அதனை வெளிப்படுத்த முனைவதுமுண்டு. கவிஞர் தனது உயிர்த்துடிப்பான சொற்களைத் தடித்த எழுத்தில் விளக்கும் முறையுண்டு. ஆனால், இக்கவிஞர் தடித்த எழுத்தில் எழுதாமல் ஒன்றை மேற்கோளில் மட்டும் தந்து புதுமை செய்துள்ளார். அத்துடன், தமிழ் இலக்கணம் குறித்த சொற்களை எடுத்தாண்டும் பின்வருமாறு புதுமை செய்துள்ளார்.

"சாதி - மனிதன் தன் முகத்தில்/தானே பூசிக் கொண்டகரி/அதனால் இது

"பிறவினை" யல்ல/"தன்வினை"

இதனால்/"செயப்படு பொருளோ"/பிரிவினை"

### முடிவுரை :

புதுக்கவிதையின் முதன்மையான நோக்கமே எளிமைதான். அந்த எளிமையும் வாசகர்களின் சிந்தனையினைத் தூண்டுவதாக அமைதல் வேண்டும். இதற்குத் தற்காலதில் இயன்றுத வரும் வெவ்வேறு இலக்கிய இயக்கங்கள் துணைபுரிகின்றன. "வருங்காலவியம்" என்பது பழைமை நீக்கிப் புதுமை நோக்கும் இயக்கமாக இருப்பதால் இதனைத் தனது கவிதைகளில் இயங்கவிட்டதனால்தான் கவிஞர் மு. மேத்தாவின் கவிதைகள் சிந்தனைகளைத் தூண்டுவனவாக உள்ளன என்பது தெரிகிறது. எனவே, வருங்காலவியச் சிந்தனைகளில் கவிதைகள் பெருகின் கவிதை இலக்கியமும், சமுதாயமும் இன்னும் வளம் பெறும் என்பது உறுதி.

# விடுகதையில் புதுக்கவிதைக் கூறுகள்

முனைவர். *மு. செந்தமிழ்க்கோ,* எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,தமிழ்த்துறை விரிவுரையாளர்,
ஸ்ரீ அரவிந்தர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி,ஆகாசம்பட்டு.

தமிழ் மொழியின் நீண்ட நெடிய மரபியல் தொல்காப்பியம் காலந்தொட்டே விடுகதைகள் சமுதாயத்தின் அனைத்துத் தரப்பு மக்களிடையேயும் புழங்கி வரப்பட்டுள்ளது. "பிசி" என்றழைக்கப்படும் இதற்கு "உவமையாக வருவனவற்றைக் கூறிப் பொருளை மறைமுகமாகச் சுட்டுவதாகும். விடுகதையின் காலம், சூழல், உருவம், உள்ளடக்கம், உத்தி தொடர்பான சிந்தனைகளை நாம் தொல்காப்பியத்திலேயே காணலாம்.[1] இந்நூற்பாவில் உவமை வரும், வெளிப்படையாக வரும், என இருநிலைகளில் விடுகதைகளின் வகையும் அமைப்பும் பதிவிக்கப்பட்டுள்ளது. காலந்தோறும் விடுகதை கேட்போனுக்கு நிகழ்தகவுகளை மயக்கமுறச் செய்வதற்காகவும், கவிதையின் உத்திமுறைகளுள் ஒன்றாகவும் சங்க காலந் தொட்டே பதிவிக்கப்பட்டுள்ளது.[2] இவற்றை உரையாசிரியர்களின் விளக்கத்திலும் காணலாம்.[3] இவ்வாறு நெடிய மரபில் பல்வேறு காலப்படிநிலைகளில் வழங்கி வரப்பட்ட விடுகதைகளை புக்கவிதையோடு இக்கட்டுரையில் இணைத்துப் பார்க்கப்படுகிறது.

புதுக்கவிதை எனும் இலக்கிய வகை மரபினைக் கட்டுடைத்து எழுந்த விடுதலையைப் போல வரைமுறைகளையோ, இலக்கணங்களையோ அது கொண்டதன்று. இது புறநிலையில் காணலாகும் ஒற்றுமை. திட்டமிட்ட வரையறைக் கூறுகள் இவ்விரு வகைகளில் இல்லையாயினும் தற்காலப் புதுக்கவிதைகளில் பொதுவாகக் காணப்படும் புலப்பாட்டுத்திறம், யதார்த்தவாதம், தர்க்க ரீதியான விளக்கங்கள், மரபு மீள்பார்வைகள் ஆகியனவைகளையும் வடிவமைப்பில் படைப்பாளியின் கற்பனை /சொல்நீட்சியைப் பொறுத்தும் கவிதைகள் சிறு, குறுங்கவிதைகளாக அளவிடப்படகின்றன. இவ்வாறு இருநிலைகளில் வெட்டுண்ட உருவாய் நிற்கும் விடுகதை, புதுக்கவிதை ஆகியனவற்றுள் ஏதேனும் உருவம், உள்ளடக்கம், உத்தி, புலப்பாட்டுத்திறம் ஆகியன ஒன்றியுள்ளதா? எனவும் ஒன்றன் பதிவுகளும் கருத்தாடல்களும் இன்னொரு வகைமை பெற்றுள்ளதா? எனவும் ஆராய்வதே இக்கட்டுரையின் பயனாம்.அடுத்து விடுகதை கேட்பவனைக் குழப்பவும், சிந்திக்க வைக்கும் நிலையிலும், மறைவாக வெளிப்படுத்தும் கருத்தாக்கங்களைச் செய்கிறது. புதுக்கவிதை கூறவந்த செய்தியை தெளிவாய்ப் பிசகாமல் கூறவல்லது. இரண்டின் நிலையில் இருந்து பார்த்தால் வித்தியாசப்படலாம். ஆனால் கூறவந்த அல்லது வினாவினை உவமை, உருவகம், சந்தம், நடை, கருத்தாடல் ஆகியவற்றினன் மூலம் மறைத்தமையால் அது இன்றையப் புதுக்கவிதைகளோடு நெருங்கியத் தொடர்பு கொண்டுள்ளது. ஆகவே இக்கட்டுரையில் விடுகதையெனும் நிலையில் புதுச்சேரி மாவட்ட விடுகதைகளே பிரதான ஆய்வுப் பொருளாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. புதுச்சேரியில் வழங்கும் விடுகதைகளில் புதுக்கவிதையியல் கூறுகளை வெளிக்கொணர்வதே இக்கட்டுரையின் நோக்கமாயிற்று.

புதுவையில் கிடைக்கும் விடுகதைகளை நாம் இருபிரிவின் கீழ்கொண்டுவரலாம். ஒன்று உரைநடை மற்றும் வெளிப்படையானது. இரண்டாவது எதுகை, மோனை, இயைபு, சந்தம் சார் விடுகதைகள் எனக் கவிதை நடையைப் பெற்றிருப்பது. ஆனாலும் இவ்விரு பிரிவுகளுள் இரண்டிலுமே கவிதைக் கூறுகள் காணப்படுகின்றன. இதில் கதையமைப்பு, பாடலமைப்பு கொண்ட விடுகதைகள் விடப்பட்டு உரைநடை விடுகதைகளே பிரதானமாக்கப்பட்டுள்ளது. அடுத்து புதுக்கவிதைகள் பெரும்பாலும் பிரச்சனைகளைக் கருத்தாடல் செய்யுமே அன்றி, முடிவுகளைக் கூறுவதில்லை. அவ்வாறே விடுகதைகள் முடிவைச் சுட்டுவதன்று, இஃது வெளித்தோற்ற நிலையில் காணப்படுவது. சில கவிதைகள் முடிவுகளைக் கூறினும் அவற்றிற்கு இணையாக நாம் தீர்வுகளைத் தன்னுள்ளே கொண்டு கேட்போரைக் குழப்பும் விடுகதைகளைக் கொள்ளலாம்.

அமைப்பியல் ரீதியாகப் பிரிக்கப்படும் விடுகதைகள் உருவகமடையது. உருவகமில்லாதது

எனப்படும். உருவகம், உவமம் போன்றவற்றின் மூலம் பலபரிமாணக் கவிதைகள் எனப்படும் கவிதை வகைக் கூறுகளையும்ள நாம் விடுகதையில் காணலாம். உதாரணமாக

"வேகாத வெய்யிலிலே /வெண்ணெய் வைத்தேன் / உருகவில்லை உலர்ந்தது" - (சுண்ணாம்பு)

"அரப்படி அரிசி வாங்கிப் / பொங்கி ஆயிரம்பேர்/ சாப்பிட அரைச்சட்டி மீதம்" - சுண்ணாம்பு

இது போன்று கவிதைகளின் உத்திமுறையில் எதிர்நிலைக் கருத்தாடல்கள், ஒரு செய்தியை நுவல பல்வேறு கோணங்களின் வெளிப்பாடுகள் என்பது இன்றைய புதுக்கவிதை நடையில் சிறப்புற்றிருப்பன. இதனைப் போன்ற ஒரு கவிதை

"நிலவின் களவியல் /பிறந்த புதுவுயிர்/பனித்துளி"

"அப்படியென்ன சாதித்து விட்டது/புல்! விடிந்ததும் /பனித்துளி கிரீடத்தோடு" [4]

என்பன போன்ற கோணங்களே / பார்வைகளே பிரதானப் பாடுபொருளாவது ஈங்கு நோக்கத்தக்கது. தன்னுள் பல்வேறு கோணங்களையும், மறை பொருளையும் கொண்டதாகப் படிமங்கள் இலக்கியங்களில் பதிவிக்கப்பட்டுள்ளன. இத்தன்மையினை நாம் விடுகதையில் காணலாம்.

"நடுக்காட்டில் ஈட்டி - (கம்பு)5

"கருப்பு வானில் வெள்ளிப் பிறை" - (யானைத் தந்தம்)6

"அத்துவானக் காட்டினிலே ஒரு துளி இரத்தம்" - (தப்பலாம் பூச்சி)7

"பட்டமரத்திலே பச்சை அதிலும் சிவப்பு" - (கிளி)8

இவ்வாறு, படிமம் மூலம் நுதலிய பொருளின்றி, பொருள்கோடல் செய்கையில் புதுக்கவிதையின் கூறுகளில் ஒன்றான "கூறுவது ஒன்று, புரிதல் பல" எனும் கட்டுக்குள் இவ்விடுகதைகளை நாம் அடக்கலாம். அடுத்து இன்றைய புதுக்கவிதையின் தலையாய உத்தியாக கூறப்படும் எதிர்நிலைக் கருத்தாடல்களையும், முரண்களின் பிணைப்பு ஆகியனவும், எதிர்நிலைத் தர்க்க வாதங்களையும் விடுகதைகளில் சிறுபான்மையாக நாம் காணலாம். உதாரணமாக

"ஆடாத அழகிற்கு /அனைவரும் ஆணையிட/அதுவே அதன் பேர்" - (ஆடு)9

"தாயும் மகளும் /தர்ம பத்தினிகளா?/விரிச்ச தலையை /முடியாதவர்" - (தென்னை)10

"ஆறுமாதப் பெண்ணுக்கு /அடிவயிற்றில் கர்ப்பம்/எண்ணிப் பார்த்தால்
எழுபது பிள்ளை" - (நெல்) 11

எனும் விடுகதைகளில் நாம் இன்றைய புதுக்கவிதையாளர்களின் கருத்தாக்கங்களைக் காணலாம்.

"அழையாத விருந்தாளியாய்/அரண்மனைக்குப் போவேன்/அரசன்முன் அமர்வேன்
அருசுவையோடு உண்பேன்" - (ஈ)12

"ஏழை படுத்த பாயை /சுற்றி வைக்க ஆளில்லை" - (பூமி)13

"அஞ்சு விரல் பந்தாட சூரியனிடம் வாதாடுவது" - (எருமுட்டை)14

எனும் விடுகதைகளில் புதுக்கவிதைகளின் தலையாய பாடுபொருளாக உள்ளதும், இயக்கப் பின்னணிக் கருத்துக்களைத் தாங்கியபடி உள்ள கவிதைகளிலும் காணப்படுகின்ற "முரண்பாடுகளின் இணைவுகள்" எனும் உத்தியினை நாம் இந்த விடுகதைகளில் காணலாம்.

மேலும் புதுக்கவிதைகள் முரண்களைப் பிணைத்து நிகழ்வுகளை /கருத்தாடல்களைப் பதிவிக்கும் போக்கினை விடுகதை அமைப்புகளில் காணமுடியும். இதனைப் புதுத்திறனாய்வுகள் நிகழ்ச்சியினது உணர்ச்சியைக் காட்டும் கவிதைகள் அடுத்தபடியாக இயற்கை விடுகதைகளான புதிர்களிலேயே அதிக இலக்கிய நயமும், கவிச்சாரமும், மிகைப்படுத்துதலில்லாத கற்பனைக் கூறுகளையும் காணக்கிடக்கின்றன. இதில்

தலையாய ஒற்றுமை யாதெனில் புதுக்கவிதையின் கற்பனை வளம் மிகைப்படுத்தலில்லாதவாறு இருப்பதை உணரலாம்.

நிதர்சனங்களைப் பகர்வதாகவும், புதிய கோணச் சிந்தனையுமே இயற்கைக் கவிதைகளாக புதுக்கவிதை தந்துள்ளது. அவ்வாறு இருக்க, விடுகதையில்

"அந்திக் கிழக்கே /அதிகாலை மேற்கே /வண்ணமே நான்" - (வானவில்) 15

"இரவெல்லாம் பூக்காடு /பகலிலே வெறுங்காடு" - (வானம்)16

"ஒரு குளத்தில் ஒருதட்டு/நனையாமலே கிடக்கின்றது" - (நிலா)17

இவை போன்று கவிதைக் கூறுகளாக உள்ளவற்றை விடுகதை என்ற பெயரில் கேட்போரை ரசிக்கவைக்கவும், மறக்காமல் இருக்கவும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

"மனிதன் போடாத பந்தலில்/மலர்ந்து கிடக்கும் பூ" - (நட்சத்திரம்)18

"வெட்டவெளி பொட்டலிலே/விதவிதமாய்ப் பூச்சரங்கள்" - (வானம், நட்சத்திரம்)19

"ரோஜாப்பூ கொட்ட கொட்ட / பொறுக்க முடியவில்லை" - (மழை) 20

"ஆகாயத்திற்கும் பூமிக்கும் / ஒரே சங்கிலி" - (மழை) 21

"விதைக்காத விதை மண்ணிலே /அறுக்காத கதிர் விண்ணிலே" (சூரியன்)22

என்பன போன்ற விடுகதைகளில் இடம்பெற்றுள்ள விடைகளைத் தலைப்புகளாக்கி புதுக்கவிதைத் தொனியில் படிக்க அவை இன்றைய கவிதைகளாகப் பரிணாமம் பெறுகின்றன. இவற்றை இன்றைய நிலையில் இதனை நாம் திட்பநுட்பவுரை எனலாம்.அடுத்து தனித்து இயங்கும் அல்லது சொற்ப ஜீவிகளை விளித்துரைத்தல், பாடுபொருளாக்கல் இன்றைய கவிதையின் இயல்பு. உதாரணமாக,

"மழையோடு வருகின்ற /மஞ்சள் புறாவே - உனை /
வெட்டினால் ஒரு சொட்டு /ரத்தம் வராததேன்" - ஈசல்)23
ஓடையிலே ஓடாத நீர் / ஒருவரும் குடிக்காத நீர்" - (கண்ணீர்) 24

என்பன விளித்தல் எனும் புதுக்கவிதை பாடுபொருள் கூற்றாக எடுத்துக் கூறலாம்.

"மழைக்கு குடைபிடிக்கும்/ அரைசாண குள்ளன்" - (காளான்)25

"அம்மா தந்த தட்டில்/ தண்ணி விட்டா நிற்கலை" - (தாமரை)26

"விரிச்ச பாயைச் /சுருட்ட முடியவில்லை" - (கோலம்) 27

என்பன போன்ற விடுகதைகள் இறுக்கமானவைகளையும், சொற்செறிவுகளையும், புதிய தூண்டுதலையும், கவிதைக்கூறுகளை உள்ளடக்கியதாகவும் விளங்குகின்றது. இவ்வாறுள்ள விடுகதைகளினைப் புதுக்கவிதையினது பாடுபொருள் / உத்தியோடு இயைந்துள்ளதையும் நாம் உய்த்துணரலாம்.அடுத்து இந்த விடுகதைகள் அனைத்திலும் கவிதைக்கூறுகள் இடம்பெற்றில. இவற்றை விளக்க நமக்கு அமைப்பியலே உதவுகிறது. எதிர்மறை விடுகதைகள், உடன்பாட்டு விடுகதைகள் இந்த இரண்டில் எதிர்மறை விடுகதைகளும் Antithetical opposition privational opposition, Contary opposition எனும் எதிர்மறை உட்கூறுகளும் புதுவையைப் பொறுத்தமட்டில் கவித்துவமாகக் காட்சியளிக்கின்றது. இதில் இணைநிலை விடுகதை, கூட்டுநிலை விடுகதை என்பவனையே நீண்ட, குறுகிய அளவுள்ள கவிதைகளை நமக்குத் தருகின்றது.

இவ்வாறு தர்க்கவாதம், அழகியல், படிமம், முரணியம், யதார்த்தம், இயற்கை ஆகியனவையே புதுக்கவிதையை உயர்த்திப் பிடிப்பதாக உள்ளது. இந்த பாடுபொருட்கூறுகள் புதுக்கவிதை நடையிலேயே விடுகதையில் அதாவது, மரபு வழிப்பட்ட சமுதாய நீட்சியப் படைப்புக்களில்லாது, புதுக்கவிதை முன்வளர்நிலை விட, பின் வளர்நிலையிலேயே அதிகம் விடுகதைப் பண்புகளைப் பெற்றுள்ளன. புதுக்கவிதைக் கூறுகளை

நாம் அறுதியிடயியலாது. ஆயினும், உணர்தலின் மூலமே ஈங்கு விளவிக்கப்பட்டுள்ளது. இந்தப் பின்வளர்நிலை தலைப்பின்றி, கவிதை புரியாத நிலையில் படைப்புகளாகப் படைக்கப்பட்டன. இவையே விடுகதைக் கூறுகளை உள்ளடக்கிய புதுக்கவிதையாய் பரிணமித்துள்ளன.தன்னுணர்வு, விளித்தல், பிறவற்றைப் பேசவிடுதல், சொற்சுருக்கம், செறிவு, பரிணாம நிறைவு, சந்தம், வசன நடையின்மை முதலிய கவிதைக்கூறுகளை உள்ளடக்கியபடி நமது புதுவை மாநில விடுகதைகள் அமைந்துள்ளன. தொக்கி வரும் விடுகதைகளும், சுமார் இரண்டு வரிகளையுடைய விடுகதைகளும், "நான்-என்னை" என்பன போன்ற இயற்கை விடுகதைகளும் இன்றைய புதுக்கவிதைக் கூறுகளை உள்ளடக்கியவாறு காணப்படுகின்றன. மற்றவை முற்றிலும் பொருந்தா நிலையிலும் இல்லை. அதன் கூறுகளோடு பெரும்பான்மையாக ஒத்துப்போவதுமில்லை. உவமம், உருவகம் என்பதில் உருவப் போக்கு அதிகம் உள்ள இத்தகைய படைப்புக்கள் படிமமாக இருப்பின் அவை விடுகதைப் பண்பைக் கொண்டுள்ளது. ஆகவே, விடுகதையின் நோக்கு, போக்கு, உத்தி, உருவகம் ஆகியனவைகள் பிற்கால வளர்சியான புதுக்கவிதையிலும் பதிவிக்கப்பட்டுள்ளன.

## குறிப்புகள்

1. தொல். செய். நூற். 165.
2. குறு. 203, கலி. 55
3. நச்சி. தொல். பக். 266.
4. பு.சே.மா.வி.கா.ம. வாழ்வியல்-அ. கனகராசு, பக். 62
5. மேலது, பக். 66
6. மேலது, பக். 68
7. மேலது, பக். 71
8. மேலது, பக். 74
9. மேலது, பக். 86
10. மேலது, பக். 49
11. மேலது, பக். 32
12. மேலது, பக். 51
13. மேலது, பக். 53
14. மேலது, பக். 58
15. மேலது, பக். 59
16. மேலது, பக். 59
17. மேலது, பக். 59
18. மேலது, பக். 60
18. மேலது, பக். 60
19. மேலது, பக். 61
20. மேலது, பக். 63
21. மேலது, பக். 65
22. மேலது, பக். 51
23. மேலது, பக். 89
24. மேலது, பக். 87
25. மேலது, பக். 76
26. மேலது, பக். 76
27. மேலது, பக். 62

## துணை நூல்கள்


1. புதுச்சேரி மாநில நாட்டுப்புற விடுகதைகள் காட்டும் மக்கள் வாழ்வியல். - அ. கனகராசு.

2. நாட்டுப்புற இயல் ஓர் ஆய்வு. - சு. சக்திவேல்.

# பாரதியார் கவிதைகளில் புனைவியல்

*மு. செந்தமிழ்ச்செல்வி*, கௌரவ விரிவுரையாளர்,
அரசு கல்லூரி, உடுமலைப்பேட்டை.

## முன்னுரை

இருபதாம் நூற்றாண்டின் ஈடு இணையற்ற கவிஞன் பாரதி. ஏடுகளில், கற்றோரின் நாவினில் மட்டும் இருந்த தமிழ் இலக்கியத்தினை, பாமரர்களின் நெஞ்சிலும் நீங்கா இடம் பெறச் செய்த பெருமையில் பாரதிக்கு முதலிடமுண்டு. புதுக்கவிதையில் பல்வேறு புதிய உத்திகளைப் பயன்படுத்தி மக்கள் மனதில் நீங்கா இடம் பெற்றார். பாரதியார் தம் கவிதைகளில் எடுத்தாண்டுள்ள புனைவியல் கருத்துக்களைப் பற்றி இக்கட்டுரை எழுதியம்புகின்றது.

## புனைவியல் - விளக்கம்

புனைவியல் இலக்கியத்துக்கான வரையறையாக, "காதல், வீரம், இயற்கை இறந்த நிகழ்சிகள், தனிமனித முக்கியத்துவம், தன்னுணர்ச்சிப் புலப்பாடு, எல்லாவற்றிற்கும் மேலாக கற்பனைச்சார்வு ஆகிய கூறுகள் மிகுந்துள்ள இலக்கியங்களைப் புனைவியல் கலை இலக்கியம் எனலாம்" (ந. பிச்சமூர்த்தி, இலக்கிய இயக்கங்கள், ப-26).

## தேசியமும் புனைவியலும்

இந்திய நாட்டையும், இந்நாட்டு மக்களையும் உயிர் மூச்சாக நேசித்தவன் பாரதி. தாய்நாடு அன்னியரின் ஆதிக்கத்தினால் அடிமைப்பட்டுக் கிடந்த போது அதனை எதிர்த்துத் தன்னுடைய கவிதையினால் பாரத நாட்டிற்குச் சிறப்புச் செய்துள்ளார்.

தாய்நாட்டின் சிறப்பினைப் போற்றி "பாரத நாடு" என்னும் கவிதையில்,

"ஞானத்திலே பரமோனத்திலே - உயர்
மானத்திலே அன்னதானத்திலே .....
ஒண்மையிலே தவறாத புலவர்
உணர்வினிலே யுயர் நாடு" (பாரதியார் கவிதைகள் பக் 143-144)

என்று பாடுகிறார். தாய் நாட்டினைப் பல்வேறு துறைகளில் முன்னேறச் செய்வதன் மூலம் உயர்வடையச் செய்யலாம்என்ற கொள்கையில் உறுதியுடைய பாரதி தன்னுடைய "பாரத தேசம்" என்னும் கவிதையில்,

"வெள்ளிப் பனிமலையின் மீதுலாவுவோம் - அடி
மேலைக் கடல் முழுதுங் கப்பல் விடுவோம்...
ஆயுதம் செய்வோம் நல்ல காகிதம் செய்வோம்
ஆலைகள் வைப்போம் கல்விச் சாலைகள் வைப்போம்" (பக் 144-145)

என்று இன்று பாரதம் அடைந்துள்ள முன்னேற்றத்தினை நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்பே தன்னுடைய கவிதையில் புனைந்து காட்டி சிறப்புச் செய்துள்ளார். பாரத நாட்டைத் தாயாகவே நினைத்த பாரதி, "எங்கள் தாய்" என்னும் தன்னுடைய கவிதையில் பழங்கால நிகழ்வுகளை உணர்ந்து சொல்லக்கூடிய ஞானிகளால் பாரத்தாயின் பிறப்பை அறிய இயலாது என்பதை,

"தொன்று நிகழ்ந்த தனைத்து முணர்ந்திடும்
சூழ்நிலை வாணர்களும் - இவள்
என்று பிறந்தவள் என்றுணராத
இயல்பினளாம் எங்கள் தாய்"4. என்று கூறும் பாரதி,
"முப்பது கோடி முகமுடையாளுயிர்
மொய்ம்புற வொன்றுடையாள் - இவள்
செப்பு மொழி பதினெட்டுடையாள் எனிற்
சிந்தனை ஒன்றுடையாள்" ( பக் 150-151)

என்ற வரிகளின் மூலம் பாரத மக்கள் தொகையை பாரதத்தாயின் முகமாகவே புனைந்து காட்டியுள்ளார்.

## சமுதாய சிந்தனைகளில் புனைவியல்

பாரதி தான் வாழ்ந்த பாரத சமுதாயம் அன்னியரின் ஆதிக்கத்தினால் தாழ்வுற்று இருப்பதுடன்,

மக்களின் மனநிலையில் மாற்றமின்மை கண்டு கொதிப்படைகிறார். அக்கொதிப்பினை,

"நரியுயிர் சிறுசேகவர் தாதர்கள்
நாயெ னத்திரி யொற்றார் உணவினைப்
பெரிதெனக் கொடு தம்முயிர் விற்றுடும்
பேடியர் பிறர்க் கிச்சகம் பேசுவோர்" ( ப. 313 )

என ஆங்கிலேயருக்கும் அடிவருடிகளாகத் திரியும் வஞ்சகர்களைத், தந்திரத்தில் சிறந்ததாக விளங்கும் நரிக்கும், ஒரு நிலையின்றித் திரியும் நாய்க்கும் ஒப்பாகப் புனைந்துரைக்கிறார். பாரத மக்கள் ஒற்றுமையின்றி வாழும் நிலையினை,

"நெஞ்சு பொறுக்குதில்லையே - இந்த
நிலை கெட்ட மனிதரை நினைத்துவிட்டடால்
கொஞ்சமோ பிரிவினைகள் ஒரு
கோடியென்றால் அது பெரிதாமோ?" (ப. 163)

என்று பாடுகிறார்பாரதியார். சாதி, மத பேதங்களை நீக்கி சமதர்ம சமுதாயத்தினை உருவாக்க விரும்பி

"ஜாதி மதங்களைப் பாரோம் - உயர்
ஜன்மம் இத்தேசத்தில் எய்தினராயின்
வேதிய ராயினும் ஒன்றே - அன்றி
வேறு குலத்தினராயினும் ஒன்றே" (ப. 77)

என்று பாடுகிறார். பொதுவுடைமைச் சிந்தனையின் மூலம் சமுதாயத்தினை உயர்த்தலாம் என்ற நம்பிக்கை உடையவர் பாரதியார். இக்கருத்தினை வலியுறுத்தும் வகையில்

"இனியொரு விதி செய்வோம் - அதை
எந்த நாளும் காப்போம்
தனியொருவனுக் குணவில்லை யெனில்
ஜகத்தினை அழித்திடுவோம் - வாழ்க"

எனப் பாடுகிறார். பெண்ணியச் சிந்தனைக்கு முதன்முதலில் வித்திட்டவன் பாரதி. பெண்ணின் சிறப்பினை உணர்ந்து அவளை மேன்மைப்படுத்தினால் நாடு சிறப்படையும் என்ற எண்ணத்திற்கு முதல் வித்திட்ட பெருமை பாரதியையே சாரும்.

"ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவிலோங்கி இவ்வையகம் தழைக்குமாம் ...
நாணும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்
ஞான நல்லறம் வீர சுதந்திரம்
பேணு நற்குடிப் பெண்ணின் குணங்களாம்" (ப.251)

என்று பெண்ணின் சிறப்பினைப் போற்றுகிறார். இயற்கை மாட்சியும் புனைவியலும் பாரதி இயற்கையழகின் பேரின்பத்தில் திளைத்து காண்கின்ற பொருளனைத்தையும் நயமிகு கவிதையாக்கித் தந்துள்ளார். பாரதி தன்னுடைய வசன கவிதையில், ஞாயிறு, நிலவு, சக்தி, காற்று, கடல் அனைத்தையும் தன்னுடைய சொற்சித்திரங்களால் சிறப்புறப் புனைந்துள்ளார். ஞாயிற்றின் சிறப்பைப் பற்றி,

"நீ ஒளிச்சுடர், நீ விளக்கு, நீ காட்சி
மின்னல், இரத்தினம், கனல், தீக்கொழுந்து
இவையெல்லாம் நினது நிகழ்ச்சி" (ப.554)

என்ற பாடுகிறார். "குயிற்பாட்டில்" காலை நேரக் காட்சியினை,

"காலை யிளம் பரிதி வீசுங் கதிர்களிலே ...
வேகத் திரைகளால் வேதப் பொருள்பாடி
வந்து தழுவும் வளங்களை" (ப.508)

என்று காலை நேரத்தில் கடலோரத்தில் சூரிய உதயத்தினை அழகுறப் புனைந்து காட்டுகிறார். குயிலினது குரல் மற்றும் அழகினைப் பற்றிப் பாடும் போது,

"இன்னமுதைக் காற்றினிடை எங்கும் கலந்தது போல்
மின்னற் சுவைதான் மெலிதாய் மிக வினிதாய்

வந்து பரவுதல் போல் வானத்து மோகினியாள்..” (ப.509)

என்று பாடுகிறார்.

கண்ணனைத் தனது தாயாகவும், தந்தையாகவும், காதலனாகவும், காதலியாகவும், குருவாகவும், சீடனாகவும் பல்வேறு வடிவில் கண்ட பாரதி கணண்ம்மாவின் எழிலினை இயற்கையில் தான் காணும் எல்லாப் பொருட்களுடனும் ஒப்பிட்டுப் பார்க்கிறார்.

“சுட்டும் விழிச் சுடர்தான் கண்ணம்மா / சூரிய சந்திரரோ?

வட்டக் கரிய விழி - கண்ணம்மா வானக் கருமை கொல்லோ” (ப.335)

என்று பாடுகிறார்.

## புதுமை நோக்கில் புனைவியல்

பாரதி புதுமை நோக்கில் விருப்பமுடையவர். அவருடைய புதுக் கவிதையும், வசன கவிதையும், மரபிலிருந்து விட்டு விடுதலையாகத் துடித்த மனோபாவம் காரணமாக விளைந்தவை ஆகும். பாரதி” பாஞ்சாலி சபதத்தில்” முந்தைய காப்பியங்களான “வியாசர்பாரதம்”, “வில்லிபாரதம்” ஆகியவற்றிலிருந்து மாறுபட்டு புதுமையான பல செய்திகளைப் படைத்துக் காட்டுகிறார். பாஞ்சாலியை சூதில் தோற்ற தருமனை தண்டிக்க விரும்பி வீமன் அர்சுனணை நோக்கி,

“இது பொறுப்பதில்லை - தம்பி / எரிதழல் கொண்டு வா
கதிரை வைத்திழந்தான் - அண்ணன்
கையை எரித்திடுவோம்” (ப.443)

என்று ஆணையிடுகிறான். தவறு செய்த சகோதரனைத் தண்டிக்க விரும்பும் புதுமை நோக்குடையவனாக வீமனைக் காட்டுகிறார்.

“சுவை புதிது, வளம் புதிது, பொருள் புதிது” என்னும் கொள்கையில் ஈடுபாடு கொண்ட பாரதி புரட்சியின் வடிவினை அக்கினிக் குஞ்சாகக் காண்கிறார்.

“அக்கினிக் குஞ்சொன்று கண்டேன் / அங்கொரு காட்டிலோர் பொந்திடை வைத்தேன்
வெந்து தணிந்தது காடு - தழல் / வீரத்திற்கு ஞ்சென்று மூப்பென்று முண்டோ” (ப.469)

என்று பாடுகிறார். “மத நம்பிக்கை” என்பதன் பேரில் மகளிர் அடிமைப்படுத்துவதை பாரதி கடுமையாகச் சாடுகிறான்.

“தில்லித் துலுக்கர் செய்த வழக்கமடீ - பெண்கள்
திரையிட்டு முகமலர் மறைத்து வைத்தல்” (ப. 347)

என்று பாடுகிறார். நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்பே அதனைக் கற்பனையில் கண்டு மகிழ்வெய்துகிறார்.

“ஆடுவோமே - பள்ளுப் பாடுவோமே / ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று ...
நாமிருக்கு நாடு நம தென்பதறிந்தோம் - இது
நமக்கே யுரிமையா மென்பதறிந்தோம்” (பக். 185 - 186)

என்று பாடுகிறார்.

## தொகுப்புரை

1. புனைவியலுக்கு விளக்கம் கூறப்பட்டுள்ளது.
2. பாரதி தேசிய சிந்தனைகளை எடுத்தியம்பப் புனைவியல் கருத்துக்களை பயன்படுத்தியமை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.
3. சமுதாயச் சிந்தனைகளை விளக்கப் புனைவியல் கருத்துக்கள் பயன்படுத்தியமை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.
4. இயற்கையின் மாட்சியை விளக்கப் புனைவியல் கருத்துக்கள் பயன்பட்டமை விளக்கப்பட்டுள்ளது.
5. புதுமை நோக்கில் புனைவியல் கருத்துக்கள் எடுத்தாளப்பட்டுள்ளமை விளக்கப்பட்டுள்ளது.

## ஆதார நூல்கள்

1. ந. பிச்சமூர்த்தி -இலக்கிய இயக்கங்கள்.
2. பாரதியார் கவிதைகள்.

# குழந்தை உளவியல் நோக்கில் சிறுமியர்

*வே. செடிப்பவுன்* -முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை, காந்தி கிராமம்.

## முன்னுரை

குழந்தைகளின் நடத்தை, மன வளர்ச்சி, உடல் வளர்ச்சி, கேட்கும் ஆற்றல், பேசும் திறன், மனவெழுச்சி, குடும்பம், பள்ளி போன்ற இடங்களில் அவர்கள் நடந்து கொள்ளும் முறைகள், குழந்தைப் பருவத்திற்கே உரித்தான குணநலன்கள், சிக்கல்கள் ஆகிய அனைத்தும் அடங்கியதே குழந்தை உளவியல். இவையனைத்தையும் மனதில் கொண்டே குழந்தை இலக்கியவாதிகள் தங்கள் படைப்புகளை உருவாக்குகின்றனர். அவர்கள் குழந்தைகளின் மனப்போக்கிலேயே உலகையும் பார்க்க முற்படுகின்றனர். குழந்தைகளின் ஆளுமை வளர்ச்சிக்குக் குழந்தை இலக்கியம் துணைபுரிய வேண்டும், என்ற நோக்கில் பாடல், கதை, நாடகம் ஆகிய அனைத்தையும் அமைக்கின்றனர். இவ்வகையில் குறிப்பிடத்தக்கவர் பூவண்ணன். அவருடைய கதைகளில் பெரும்பாலான சிறுவர் சிறுமியர் நடத்தை மாறுபாடுகளை மையமாகக் கொண்டே எழுதப்பட்டுள்ளன. அவர்களுடைய நடத்தை மாறுபாடுகளுக்கு வாழ்க்கைத்தரம், அகச்சூழல் மற்றும் புறச்சூழலே காரணமாக அமைகின்றன. குறிப்பாக சிறுமிகளுக்கிடையேயான புரிந்து கொள்ளுதல், அதில் ஏற்படும் சிக்கல்கள் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு பெரிய இடத்துப் பெண், புள்ளிமான், தீயவர் செய்யும் நன்மை, அமுதாவின் ஆசை, ஆகிய நான்கு கதைகளும் அமைந்துள்ளன. இக்கதைகளில் இடம்பெறும், சிறுமிகளுடைய மனநிலையையும், மனநிலை மாற்றங்களையும் அதற்கான காரணங்களையும் உளவியல் நோக்கில் ஆராய்வதே இக்கட்டுரையின் தன்மை.

## சிறுமியர் நிலைப்பாடு

சமுதாயத்தில் பணம், புகழ், செல்வாக்கு நிறைந்த குடும்பத்தில் பிறந்தவருக்கும், இருப்பதைக் கொண்டு மகிழ்ச்சியாகவாழக் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற நிலையினருக்கும், வறுமையில் வாடுபவர்களுக்கும் இடையே அதிக வேறுபாடுகள் காணக்கிடக்கின்றன. அடிப்படையில் அனைவரும் மனிதர்களே என்றாலும், அவர்கள் வாழும் வாழ்க்கையே அவர்களை மிருகங்களாகவும், மனிதர்களாகவும், மாற்றுகின்றன. இக்கருத்தை மேற்கூறிய கதைகளில் வரும் சிறுமியரின் செயல்கள் உணர்த்துகின்றன. ஒருவருடைய வாழ்க்கைத்தரமே அவருடைய செயல்களைத் தீர்மானிக்கின்றன. எனவே, அதனை அடிப்படையாகக் கொண்டு சிறுமியரை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவை,

1. மேல்மட்ட சிறுமியர்
2. நடுத்தரச்சிறுமியர்
3. கீழ்மட்டச் சிறுமியர்

## மேல்மட்ட சிறுமியர்

மிகுந்த செல்வச் செழிப்புடைய இச்சிறுமிகள் பெற்றோரின் அளவற்ற அன்பிற்கு ஆளாகி, அடக்குமுறை இல்லாமல் வளர்க்கப்படுகின்றனர். அதிலும் வீட்டிற்கு ஒரே மகளாக இருக்கும் சிறுமிகள் பிறரிலிருந்து தன்னைத் தனிமைப்படுத்திக் கொண்டு வாழவே விரும்புகின்றனர். எப்போதும் தலைமை வகித்தல், தம்மைவிடத் தாழ்ந்தவர் மீது ஆதிக்கம் செலுத்துதல், பிறரைப் புண்படுத்துதல், அடம் பிடித்தல், விட்டுக்கொடுக்காமை, சகிப்புத்தன்மையின்மை போன்ற குணங்கள் இவர்களிடையே நிறைந்திருக்கின்றன.

"மிக்க செல்வம் உடைய பெற்றோரின் அன்புக்குப் பாத்திரமாகத் தோன்றுகிற ஒரே குழந்தை, கண்டதே காட்சி, கொண்டதே கோலம் எனவும், தான் இட்டதெல்லாம் சட்டம் எனவும் கருதி, விரும்புகின்ற பொருள் அனைத்தையும் பெற்று இன்பமாக வாழ முற்படுகிறது. விரும்பியது கிட்டாத போது முரண்டு பிடிக்கிறது. தன்னிடம் இருப்பதைப் பிறருக்கு அளித்து மகிழும் மனப்பக்குவம் இல்லாமல் வாழப்பழகுகிறது. தனியாக இன்பம் அனுபவிக்கின்ற இயல்பும், தன்னயமும், பிடிவாதக் குணமும், பிறர் துயரம் உணராத மனப்பான்மையும் இவ்வகைக் குழந்தையிடத்தில் அதிகம் காணப்படுவதாக உளவியலார் கூறுகின்றார்.

"பெரிய இடத்துப் பெண்" என்ற கதையில் வரும் கோகிலா பணக்காரச் சிறுமி. பொம்மை ஒன்றை வைத்து விளையாடுகின்றாள். அது கைதவறி மாடியிலிருந்து கீழே விழுந்து விடுகின்றது. அச்சமயம் அவளையொத்த வயதுடைய தங்கம் என்ற சிறுமியைப் பார்க்கின்றாள். தங்கம் கோகிலா வீட்டுத் தோட்டத்தில்

வேலை செய்யும் முனிசாமியின் மகள். உடனே அவள் தங்கத்தை அழைத்து தவறிவிழுந்த பொம்மையை மாடிக்கு எடுத்துவரும்படி கூறுகின்றாள். பொம்மையை எடுத்த தங்கம் அதனழகிலே மயங்கி அதற்கு முத்தம் கொடுக்கின்றாள். இதைப் பொறுக்க முடியாத கோகிலா "பொம்மையை எடுத்து வா என்றால் உடனே எடுத்து வரவேண்டியதுதானே! அழுக்குப் பிடித்த உன் கையால் முத்தமிடவா சொன்னேன்? என்று வசை புராணம் படித்துக் கொண்டே தங்கத்தின் கன்னங்களிலும், முதுகிலும் தன் கைவரிசையைக் காட்டுகிறாள்."

பிறரைப் புரிந்து கொள்ளாமை, அதிகாரம் செலுத்துதல் போன்ற இத்தகைய செயல்களுக்குச் செல்வச் செழிப்பில் வளர்ந்தமை ஒரு காரணம். மேலும் ஒரே குழந்தையாக வயளர்பவர்களுக்கு, அவர்களிடமிருக்கும் பொருளைப் பிறருக்குக் கொடுத்து மகிழும் வாய்ப்புக்கள் குறைவு. இச்சூழ்நிலையில் வளர்ந்தாள் கோகிலா, தன் பொம்மைக்குத் தங்கம் முத்தமிட்டதைக் கண்டு, ஆத்திரமடைகின்றாள். அவளுடைய பொருளைப் பிறர் துய்ப்பதைத் தாங்கிக்கொண்ள்ளும் மனப்பக்குவம் அவளுக்கு இல்லை. உடன்பிறப்புகளின்றி வளரும் இத்தகைய குழந்தைகளிடையே இதுபோன்ற சுயநலக் குணம் மேலோங்கி இருப்பதை உணரமுடிகின்றது.

"புள்ளிமான்" என்ற கதையில் வரும் வள்ளி செல்வந்தரின் மகள். ஒரு நாள் மிருகக்காட்சி சாலைக்குச் செல்கிறாள். அங்கு புள்ளி மான் ஒன்றைக் காணுகிறாள். உடனே, தன் தந்தையிடம் அதை வாங்கித் தருமாறு கேட்கிறாள். அவர் கண்டுகொள்ளாமலிருக்க, அவள் சாப்பிடாமல் தூங்காமல் பிடிவாதம் செய்கிறாள். மான் வந்தவுடன் இயல்புநிலை அடைகின்றாள்.

"விருப்பங்களும், தேவைகளும் பூர்த்தி செய்யப்படும் போது ஏற்படும் உள்ள நிறைவு குழந்தையிடம் நன்னடத்தையையும், கீழ்ப்புடிதலையும் உண்டாக்கும்." என்பது உளவியல் முடிவு.

இங்கு, வள்ளியின் விருப்பம் நிறைவேற்றப்பட்டவுடன் அவளுடைய பிடிவாதக்குணம் மாறுகிறது. குழந்தைகளைப் பொறுத்த வரை தாங்கள் நினைத்ததை அடையும் பொழுதுதான் அவர்களுடைய மனம் இன்பமடைகிறது என்பதை இதன்வழி அறியலாம். மேல்வர்க்கக் குழந்தைகளிடையே, "தான்" என்ற உணர்வும், விரும்பியதை அடைய வேண்டும் என்கிற வெறியும், பேச்சிலும், செயலிலும் ஆதிக்கப் போக்கும் நிறைந்திருப்பதை மேற்கண்ட கதைகள் தெளிவுபடுத்துகின்றன.

## நடுத்தரச் சிறுமியர்

நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த இச்சிறுமிகளிடையே அன்பு, பொறுமை, பணிவு, உதவுதல், நட்பு போன்ற நற்குணங்களும், பொறாமை, சூழ்ச்சி போன்ற தீய குணங்களும் நிறைந்துள்ளன. இவர்கள் எப்பொழுதும் மேல் மட்டத்திலுள்ள சிறுமிகளுடன் உறவுநிலை பாராட்ட விரும்புகின்றனர்.

"அமுதாவின் ஆசை" என்ற கதையில் வரும் அமுதா நடுத்தரக் குடும்பத்தைச் சார்ந்தவள். அவள் பிறருக்கு உதவவேண்டும் என்பதை இலட்சியமாகக் கொண்டவள். தன்னுடன் பயிலும் சக மாணவியருக்கு உதவுவதில் இன்பமடைகிறாள். ஆசிரியர்களுக்குப் பணிந்து செயலாற்றுகிறாள். பிறருக்கு உதவுவதால் தனக்குத் துன்பமும், அவமானமும் ஏற்பட்ட போதிலும் அக்குணத்திலிருந்து அவள் தன்னைச் சிறிதும் மாற்றிக் கொள்ள வில்லை.

"தீயவர் செய்யும் நன்மை" என்ற கதையில் வரும் வள்ளி [illegible]வமுடையவள். கல்பனா, மீனாட்சி, மாலினி மூவரும் அவளுடைய தோழிகள். இம் மூவரும் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். வள்ளிக்குத் திடீரென்று ஏழைப் பொன்னி என்பவளின் நட்பு கிடைக்கிறது. இதை வள்ளியின் மற்ற மூன்று தோழிகளால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இவர்கள் மூவரும் பொன்னியின் மேல் கோபம் கொள்கின்றனர். அக்கோபமே நாளடைவில் பொறாமையாக வடிவெடுக்கின்றது.

இதன் வழி, தங்களுக்குக் கிடைக்க வேண்டிய அனுகூலம் பிறருக்குக் கிடைக்கும் போது அவர்கள் மேல் வெறுப்பேற்படுகிறது என்பதை உணர முடிகிறது. பொன்னியின் மேல் கொண்ட பொறாமையே அவர்களைப் பொன்னிக்கு எதிராகச் செயல்படத் தூண்டுகிறது. நடுத்தர வர்க்கச் சிறுமிகளிடத்தே நற்குணங்கள் இருப்பினும், பொறாமை கொள்ளுதல், வீண் பேச்சு, சினமூட்டுதல், எள்ளுதல், இகழ்தல், கலகமூட்டுதல் போன்ற செயல்களே அதிகம் காணப்படுகின்றன என்பதை மேற்கண்ட கதைகளின் வழி அறியமுடிகின்றது.

## கீழ்மட்டச் சிறுமியர்

மிக ஏழ்மையான குடும்பத்தைச் சேர்ந்த சிறுமிகள் இவ்வகையில் அடங்குவர். இச்சிறுமியர் மிகுந்த படிப்பாற்றல் உடையவர்களாக உள்ளனர். இவர்களுக்கு அடங்கிப் போதல், சகிப்புத்தன்மை ஆகிய பண்புகள் மிகுதி. அதற்குக் காரணம் அவர்களுடைய வளர்ப்புச் சூழலும், வாழ்க்கை முறையுமே.

"பெரிய இடத்துப் பெண்" என்ற கதையில் வரும் ஏழைத் தங்கம், பணக்காரக் கோகிலாவின் பொம்மையை முத்தமிட்டதற்காக அடிக்கப்படுகின்றாள். அவளுடைய ஏழ்மை அவளைப் பொறுமை மிக்கவளாக ஆக்குகிறது. அவளது இயலாமையை அழுது தீர்த்துக்கொள்கின்றாள்.

"குடும்பச் சூழ்நிலையை மனத்தில் கொண்டு குழந்தைப் பருவத்திலேயே சிறுமிகள் வாழக்கற்றுக் கொள்கின்றனர். என்பது உளவியல் கூற்று.

இக்கதையில் வரும் தங்கம் இத்தகைய தன்மையைச் சேர்ந்தவளே, பண்ணை மதலாளியின் மகளைத் தான் எதிர்த்தால், தோட்டக்காரனான தன் அப்பா தண்டிக்கப்படுவார் என அக்குழந்தை எண்ணியிருக்கலாம். அதனால் அடங்கிப் போதல் அதன் இயல்பாகிவிட்டது. ஏழ்மைச் சூழலில் வாழ்பவர்களுக்குத் தன் எதிர்ப்புணர்ச்சியைக் காட்ட வாய்ப்பில்லை என்பதைத் தங்கத்தின் செயல்வழி உணரமுடிகின்றது.

"தீயவர் செய்யும் நன்மை" என்ற கதையின் நாயகி வள்ளி பள்ளிக் கட்டுப்பாடுகளுக்கும், ஆசிரியர்களுக்கும் அடங்காதவள். படிப்பிலே ஆர்வம் இல்லாதவள். ஆனால் எழைப் பெண்ணின் நட்புக் கிடைத்த பிறகு ஆசிரியர்கள் விரும்பும்படி நடந்து, படிப்பிலே முதலிடம் வகிக்கின்றாள்.

"ஏற்றத்தாழ்வின்றி எளிமையாகப் பழகுவதில் ஆண் குழந்தைகளை விட பெண் குழந்தைகளே வெற்றியடைவதாக உளவியலார் கூறுகின்றனர். பணக்கார வள்ளி ஏழைப் பொன்னியிடம் கொண்ட நட்பு இதனை மெய்ப்பிக்கின்றது.

"குழந்தை பின்பற்ற ஒரு நல்ல மாதிரி கிடைக்குமானால், தன் தவறுகளை எல்லாம் குழந்தை தானே திருத்திக்கொள்ளும்" என்பது குழந்தை உளவியரின் கருத்து.

இங்கு, வள்ளியின் நற்செயல்களுக்குப் பொன்னியே, முன் மாதிரியாக இருக்கிறாள். பொன்னியின் ஏழ்மையும், அவளுடைய சாதிக்க வேண்டும் என்ற ஆர்வமுமே அவளைப் படிப்பிலும் நற்குணங்களிலும் சிறந்து விளங்கச் செய்கின்றது.

கீழ்வர்க்கச் சிறுமியர் தங்கள் பெற்றோரையே முன்மாதிரியாகப் பின்பற்றுகின்றனர். அவர்களுடைய அடங்கிப்போதல் குணம் இச்சிறுமிகளிடத்தும் தொடர்கின்றது. எச்சூழ்நிலையிலும் அவர்கள் அதிகாரம் செலுத்துதல், தவறிழைத்தல் போன்ற செயல்களில் ஈடுபடுவதில்லை என்பதை மேற்கண்ட கதைகள் உணர்த்துகின்றன.

## தொகுப்புரை

1. குழந்தைகளின் சிந்தனையையும், செயலையும், மனநிலை மாற்றங்களையும் நிர்ணயிப்பது அவர்களுடைய வாழ்க்கைத் தரமே என்பது புலனாகிறது.

2. மேல்மட்டச் சிறுமியரும், நடுத்தர வர்க்கத்தைச் சார்ந்த சிறுமியர்களுமே பிறரைத் துன்புறுத்தும் படியான செயல்களில் ஈடுபடுகின்றனர்.

3. மேல்மட்டச் சிறுமியரை எப்போதும் தங்களுக்குத் துணையாக வைத்துக்கொள்ள நடுத்தர வர்க்கச் சிறுமியர் விரும்புகின்றனர். அதற்கு ஏதேனும் இடையூறு ஏற்படும் போது அவர்கள் பதிலுணர்ச்சிகளைக் (தாக்குதல், பொறாமைப்படல், சண்டையிடல்) காட்டுகின்றனர்.

4. கீழ்மட்டச்சிறுமியர் மற்ற இருவர்க்கத்தினரையும் சார்ந்து, பணிந்தே இருக்கின்றனர். அதற்குக் காரணம் அவர்களுடைய ஏழ்மை நிலையும், சூழலுமேயாகும்.

5. மேல்மட்டச் சிறுமியர்களுக்கும், கீழ்மட்டச்சிறுமியர்களுக்கும் இடையே நட்புணர்வும் புரிந்து கொள்ளும் மனப்பக்குவமும் வளர்கின்றது. ஆனால் நடுத்தர வர்க்கச் சிறுமியர் மற்ற இருவர்க்கத்தினரிடமும் சரியான உறவு நிலையை வளர்த்துக்கொள்வதில்லை. மேல் வர்க்கத்தினர் மேல் கொண்டுள்ள பொறாமையும், கீழ் வர்க்கத்தின் மேல் கொண்ட மேட்டிமைப் பார்வையுமே அதற்குக் காரணமாகும்.

# உரைநடைத் தந்தை ஆறுமுக நாவலர் 1822-1879

அண. *செல்வ கணபதி,* விரிவுரையாளர்
முத்தாலம்மன் கலை அறிவியல் கல்லூரி, இராசிபுரம்.

## இளமைக்காலம்

சைவமும் தமிழும், இரு கண்களாக கொண்டு புகழ்பட வாழ்ந்தவர் ஆறுமுக நாவலர். யாழ்ப்பாண நல்லூரில் கந்தபிள்ளைக்கும், சிவகாமிக்கும் 1822-ல் புதல்வனாக பிறந்தார். தந்தையார் கந்தபிள்ளை தமிழ்ப்பற்று மிக்கவர் பன்மொழிப் புலமையுதம், நாடக நூல்களும் இயற்றியவர். வாக்குண்டாம், நன்னெறி, மூதுரை, நிகண்டுகளைக் கற்றார். பிறமொழியும் கற்க விரும்பினார். சேனாதிராயரிடம் தமிழ், சமஸ்கிருதம் கற்றார். சரவணமுத்துப்பிள்ளையிடம் இலக்கண இலக்கியங்களை கற்றார். கிருஸ்த்துவப்பாடசாலையில் சிறிதுக் காலம் தமிழ் பணித் புரிந்தார். கிருத்துவ மதப் போதகர் பீட்டர் பெர்சிவல் பாதிரியார் நாவலரிடம் விரும்பி தமிழ் கற்றார். தமிழன் தன்மையை உணர்ந்த நாவலர் எல்லோரும் படித்து இன்புறவேண்டும் எனும் நோக்கில் வண்ணார் பண்ணையில் 1848ல் சைவப் பிரகாச வித்தியாசாலை தோற்றுவித்தார். கிருத்துவ மதத்தார் இவரின் புலமையை வியந்து ஆங்கிலத்தில் இருந்த கிருத்துவ வேதநூலான விவிலியத்தை தமிழில் மொழிப் பெயர்த்துத் தருமாறு வேண்டினர். நாவலர் "எனக்கொன்னும் ஆட்சேபனை இல்லை. பைபிள் சிந்தனையைத் தமிழ் பெறுவதில் எனக்கு மகிழ்ச்சி தா...... ஆனால் வேறொன்றுமில்லை. என்நெறி, என் நம்பிக்கை ஆகியவற்றை எந்தகாரணம் கொண்டும் நான் விட்டுகொடுக்க முடியாது". என உறுதியுடன் கூறினார். செந்தமிழ் நடையில் தமிழில் மொழி பெயர்த்தார் அறிஞர் மகத லிங்கம் அய்யர் படித்து மூல நூலில் உள்ளதற்கு ஏற்ப தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. பாராட்டுக்குரியவர் ஆறுமுகு நாவலர்.

## கல்விப்பணி

சைவ நூல்களான பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், காஞ்சிபுராணம், சிவஞானபோதம், தேவாரம், திருவாசகம் முதலிய நூல்களை மாணவர்களுக்கு இலவசமாக கற்று கொடுத்தார். மேலும், சூளாமணி நிகண்டு, நன்னூல், திருக்குறளும் கற்று கொடுக்கப்பட்டன. இலங்கையில் வண்ணார் பண்ணைக் கோப்பாய், பருத்தித்துறை, புலோலி, ஏராலை, முல்லைத்தீவு முதலிய இடங்களில் கல்வி நிறுவனம் நிறுவி பணி செய்தார். தமிழகத்தில் சிதம்பரத்திற்கு வருகை பரிந்து கல்விச் சாலையைத் தோற்றுவித்தார்.

## சமயப்பணி

திருவாடுதுறை ஆதினத்தில் சைவ சமயச் சொற்பொழிவு ஆற்றினார் நாவன்மை கண்ட ஆதீனத்தார் இவருக்கு, "நாவலர்" எனும் பட்டம் அளித்துச் சிறப்பித்தனர். தமிழகத்தின் அனைத்து சைவ மடங்களும் சென்று சைவ சமய நெறியைப் பரப்பினார். சைவத்தின் மீதும் தமிழ் மீதும் பற்றுக்கொண்டதைத் தாமே கூறியவற்றிலிருந்து, "நான் என் சக்திக்கேற்றவாறு உத்தியோகத்தின் பொருட்டு முயற்சி செய்யின் அது தப்பாது சித்திக்கும் என்றறிந்திருக்கும் அஃதில்லாமையால் விளையும் அவமதிப்பைப் பார்த்தும் உத்தியோகத்தை விரும்பவில்லை. தமிழ்க் கல்வித் துணை மாத்திரங்கொண்டு செய்யப்படும் உத்தியோகம் வலிய வாய்ந்த பொழுது அதையும் நான் விரும்பவில்லை. கன்னியை நாயகனிடத்து ஒருதுட்டாயினும் வாங்காது வீடு விளைநிலம், தோட்டம், ஆபரணம் முதலியவற்றோடு விவாகஞ்செய்து கொடுக்கும் வழக்கமேயுடையது என் சென்ம தேகமாகவும் நான் இல்வாழ்கையில் புகவில்லை. இவைகள் எல்லாவற்றிற்கும் காரணம் சைவ சமயத்தையும் அதன் வளர்ச்சிக்குக் கருவியாகக் கல்வியையும் வளர்த்தல் வேண்டும் என்னும் பேராசையாகும் என்பார்.

## நாவலர் பதிப்புப் பணி

மானுட மேன்மை கருதி நூல்கள் பல வெளியிட எண்ணினார். 1850-ல் இலங்கை வண்ணார் பண்ணையில் சைவ பிரகாசப் வித்தியாசாலையில் வித்தியானுபான அச்சுக்கூடம் ஒன்றை நிறுவினார். அதே போன்று சென்னையிலும் 1860-ல் அச்சுக்கூடம் தோற்றுவித்தார். பெரியபுராணவசனம், திருமுருகாற்றுப்படை, சுப்ரபாதம் சிவாலய தரிசனவீதி, சைவ தூசன பரிகாரம், நன்னூல் விருத்தியுரை, திருத்தொண்டர் புராணம், சிவப்பிரகாசரின் திருச்செந்தில் நீரோட்ட யமக அந்தாதி நாவலர் உரையுடன் 1851ல் வெளியிடப்பட்டது. தருக்க சங்கிரகம், தருக்க சங்கிரக தீபிகை அல்லது அன்னம் பட்டயம் நாவலரால் வெளியிடப்பட்டன. சென்னை வித்தியானுபாலான அச்சுக்கூடத்திலிருந்து சேதுபுராண, பிரயோக விவேக உரை, பதினொன்றாம் திருமுறை, நால்வர் நான்மணிமாலை போன்ற நூலை வெளியிட்டார். நாவலரின் தமிழ்த் தொண்டும், பதிப்புத்தொண்டும் போற்றற்குரியது.

## ஆதித்தனார் பாராட்டு

ஆறுமுக நாவலரின் தமிழ்த் தொண்டை வியந்து குன்றக்குடி, திருவண்ணாமலை மடாலயம் பல்லக்கில் பவனிவரச்செய்ய முனைந்தபோது நாவலர் மறுத்தார். மாடாலயத்தார் " தங்களைப் பல்லக்கில் ஏற்றுவிப்பதாக எண்ணவேண்டாம். தமிழ் மொழியையும், சைவ நெறியையும் அல்லவா இன்று பல்லக்கில் ஏற்றுவிக்கப் போகிறோம். நீங்கள் மறுத்தால் அவை இரண்டும், பல்லக்கில் ஏறி பவனிவரும் வாய்ப்பை இழக்கும் என்று கூற பின்னர், இசைந்தார். சிறப்புடைய தமிழ்த் தொண்டரை சிவநெறிச் செல்வரை மதித்து, போற்றிப் பரவசப்படுத்திய பெருமை சைவ மடாலயங்களையே சேரும்.

கிறித்துவர்களுக்கு நாவலர் வண்ணார் பண்ணையில் தமிழ் அச்சுக்கூடம் நிறுவினார். வச்சிரதண்டம் எனும் இதழில் சைவ சமய விளக்கக் கட்டுரைகள் எழுதினார். பல நூல்களையும் பதிப்பித்து வெளியிட்டார்.

## இதழியலார் பாராட்டு

பல பாடநூல் 1,2,4 நாவலரால் எழுதப்பெற்று வெளியிடப்பெற்றது. ஒவ்வொரு பகுதியிலும், கடவுளை வணங்குதல், குருவை வழிப்படுதல், புண்ணியம் செய், அறவழியில் செல் போன்ற நீதிக் கருத்துக்களையும், பொதுக்கருத்துக்களையும் கொண்டு அமைந்தன. ஒழுக்கம் அவசியம் தேவை எனக்கருதி, அவ்வையார், சிவப்பிரகாசர் பாடல்கள் படித்து அவற்றின் வழி பின்பற்றவேண்டும் என்கிறார். இவர் உரைநடை வல்லாளர் என்பதை இலங்காபிமானி என்ற இதழ் பின்வருமாறு இயம்புகிறது. " ஆறுமுக நாவலர் தலைசிறந்த உரைநடைப் புலவர். உரைநடையில் அவருக்கு ஒப்பாரும், மிக்காரும்மிலர், நாம் அறிந்த வகையில் அவரே சிறந்த பேச்சாளர், புலமை நிரம்பியவர். இப்போது சீர்கெட்டு இருக்கும் தமிழை உயர்த்த அவர் பல அறிய நூல்களை எழுதி வெளியிட்டு இருக்கிறார்". இவற்றால் நாவலர் உரைநடைத் தந்தை என்று போற்றப்படுகிறார்.

செய்யுள் இலக்கியம் இயற்றிவந்த காலத்தில் அனைவரும் உணரும் வகையில் உரைநடையில் எழுதினார். வசனநடை எழுதுவதிலும் வல்லவர். கந்தபுராணம், பெரியபுராணம், திருவிளையாடல் புராணம், கண்டனப்பிரகாசம் பாலஉரை எழுதிப் பதிப்பித்து வெளியிட்டவர். நற்றமிழ் உரைநடையில் "வசன நடை கைவந்த வல்லாளராகச் சிறந்த பாடநூல்களையும் சமயக்கதைகள் கொண்ட சமய நூல்களையும், எழுதி வெளியிட்டமையினால் இவராலேயே தமிழரின் பாரம்பரியக் கலாச்சாரமாகிய சைவம் பிழைத்தது" என்பர். இவரை உரைநடையின் தந்தை எனவும் போற்றுவர்.

## நாவலர் உரைச் சிறப்பு

சிதம்பரம் வித்தியாசாலையில் நூல்களைப் பதிப்பித்தபோது உரைநடையின் சிறப்புப் பற்றி நாவலர் கூறியது, "எல்லா தருமங்களையும் அறிந்த விதிப்படி சிரத்தையுடன் செய்து பயன் பெறுவதற்குச் சமய நூலுணர்ச்சியே ஏதுவாதலால். அப்படிப்பட்ட சமய நூலுணர்ச்சியை வளர்த்தலாகிய இந்தத் தருமமே எல்லாத்தருமங்களிலும் மிக மேலானது என்பதும் எல்லாத்தருமங்களுக்கும் மூலம் என்பதும்

சொல்லவேண்டுமா?" என்பதிலிருந்து உரைநடையின் அவசியத்தை கூறவதைக் காணலாம்.

தமிழில் நிறுத்தக் குறியீட்டினைக் கொணர்ந்தவர். இவரை ஐந்தாங்குரவர் என்றும், அழைப்பார். திருவாவடுதுரை ஆதீனத்து தெய்வ சிகாமணி அய்யர் ஆறுமுகமா "அது சைவப் பயிர் வளர்க்க வந்த சொல்லாறு" என வியந்து போற்றுவர். சைவநெறியில் சிறப்புடைய நாவலரை மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள்,

"கருள்விரவு தலைக்கழிக்குங் கண்மணியும் வெண்ணீறும்
பொருள்விரவும் ஐந்தெழுத்தும் பொருளாகக் கொண்டுவப்போன்
தெருள்விரவு சுத்தசைவ சித்தாந்தப் பெருஞ்செல்வன்
அருள்விரவு பரவபுகழ் ஆறுமுக நாவலனே"

என பாராட்டிச் சொல்வர் அறிஞர் சிவை. தாமோதரம் பிள்ளை அவர்கள். நாவலர் இல்லையெனில் தமிழ் வளர்ச்சியே இருக்காது என்பதை,

" நல்லை நகல் ஆறுமுக நாவலர் பிறந்திலரேல்
சொல்லுதமிழ் எங்கே சுருதி எங்கே எல்லவரும்
ஏத்துபுராண வாகமங்கள் எங்கே பிரசங்கமெங்கே
ஆத்தனறி வெங்கே அறை"

என்று கூறுகிறார்.

இத்தகைய பெருமைக்குரிய நாவலர் 5.12.1879ல் மறைந்தார். செய்யுள், உரைநடை, சமயச் சொற்பொழிவு, நாடகம், இசை, இலக்கியங்களில் மேன்மையுற்றவராகத் திகழ்ந்தார். தமிழ் மறுமலர்ச்சிக்கு வித்திட்டார். உரைநடைக் கலை வளர்ச்சிக்குப் பாடுபட்டவர் கல்விப்பணியிலும், தமிழ்ப் பணியிலும் சைவப்பணியிலும் அயராது உழைத்த பெருமானை, தமிழ்த் தொண்டரைப் போற்றுவோமாக.

# சூரியனை விடியவைப்போம் நாவலில் - பெண்ணியக் கோட்பாடுகளும் தீர்வுகளும்

*இரா.செல்வி* (குணவதி),எம்.ஏ.,எம்.பில்., விரிவுரையாளர்,
தமிழ்த்துறை, பூ.சா.கோ.கலை அறிவியல் கல்லூரி, பீளமேடு – கோவை.

## முன்னுரை

ஆண்டாள் பிரியதர்ஷினியின் சூரியனை விடியவைப்போம் என்ற நாவல் கவிதை நடையில் இயற்றப்பட்ட பெண்ணிய நாவலாகும். கட்டாய ஆண்வாரிசு, வரதட்சணைப் பிரச்சினை, மலடிப்பட்டம், பெண்சிசுக்கொலை, பொருந்தா மணம் (குழந்தைத் திருமணம்) ஆகிய பெண்கள் எதிர்கொள்ளும் வாழ்வியல் சிக்கல்களை இந்நாவல் சித்தரிப்பதுடன் அவற்றைக் களைவதற்கான பெண்ணியத் தீர்வுகளையும் முன்வைக்கின்றது. அத்தீர்வுகள் வருமாறு

1. சக பெண்களுடன் கலந்து உறவாடுதல்
2. இயக்க நடவடிக்கை
3. கலகவாதம்

இம்மூன்று தீர்வுகளையும் இக்கட்டுரை திறனாய்கிறது.

## சக பெண்களிடம் கலந்து உறவாடுதல்

பொதுவாகப் பெண்நிலைவாதிகளின் கோட்பாடுகள் பெண்ணின் சொந்த வாழ்க்கையிலிருந்தே துவங்கிச் செல்கின்றன. நவீன குடும்பமுறையில் பெண்கள் அந்நியப்பட்டுப்போயிருப்பதையே இப்போக்குக் குறிக்கிறது. ஒவ்வொரு பெண்ணும் குடும்ப அமைப்பின் மூலமாக ஒடுக்கப்பட்டிருப்பது என்பது தனக்குமட்டுமான ஒரு நிகழ்வேயென்று நம்பிக்கொண்டிருக்கிறாள். ஆனால் சக பெண்களிடம் கலந்து உறவாடும் போதுதான் ஒடுக்கு முறைகளின் வடிவங்களின் பொதுத்தன்மையை அவள் உணருகிறாள் (அபர்ணா மகந்தா, மார்க்சியமும் பெண் நிலைவாதமும். பக் 46-47) என்ற பெண்ணியக் கோட்பாட்டின்படி ஆண்டாள் பிரியதர்ஷினி அவர்கள் பெண் கதாப்பாத்திரங்களைக் கலந்து உறவாடச் செய்திருக்கிறார்.

ஆண்வாரிசு பெற்றுத்தரவில்லை என்று கணவனாலும் மாமியாராலும் ஏசப்படும் சரஸ்வதி, மலடிப்பட்டத்திற்கு ஆளான விஜயா, வரதட்சணைப் பிரச்சினையாலும் சற்று உடல் ஊனமுற்றவள் (விந்தி விந்தி நடப்பவள்) என்பதாலும் திருமணம் நடைபெறாது முதிர்கன்னியாய் வாழும் பானுமதி ஆகிய மூன்று பெண்கதாப்பாத்திரங்களும் ஏனையோரும் முனைவர் பட்டம் பெற்றவர்கள். ஒரே கல்லூரியில் ஒரே துறையில் பேராசிரியைகளாகப் பணியாற்றும் இவர்கள் யாவரும் ஒருமித்த தோழிகளாய் கலந்து உறவாடுபவர்கள். ஆணாதிக்கச் சமூகம் குறித்தும் பெண் ஒடுக்கு முறைகள் குறித்தும் கலந்துரையாடல் நிகழ்த்துபவர்கள். ஒருவருக்கொருவர் ஆதரவும் தைரியமும் அளித்துக்கொள்பவர்கள். இவர்கள் யாவரும் புதுமைப் பெண்களாகப் புரட்சிப் பெண்களாகத் திகழ்பவர்கள் என்பதை ஆசிரியர் இவ்வாறு வர்ணனை செய்கிறார்.

"எல்லோரும் முனைவர். பிறருக்கு உதவவும் முனைவர். புத்தக வீணை சுமக்கும் கலியுக சரஸ்வதிகள். சுவாசக் காற்றிலும் கல்வி விதை விதைப்பார்கள். அரட்டையில் கூட அறிவார்த்தமே புதைப்பார்கள். கிசுகிசுவும் பொறாமையும் பொச்சரிப்பும் அடர்த்தி குறைந்து நட்பும் மனிதநேயமும் அரியாசனம் போட்டிருக்கும் அல்லி ராஜ்யம் அது" (ப.27).

இவர்கள் இவ்வாறு ஒருங்கிணைந்து கலந்து உறவாடுவதால் போராடும் மனத் துணிவும் ஏற்படுகிறது என்பதை விஜயா கதாப்பாத்திரத்தின் மூலம் எடுத்துரைக்கிறார் ஆசிரியர் ஆண்டாள் பிரியதர்ஷினி அவர்கள்.

ஐந்து வருட மணவாழ்வில் விஜயா தாய்மை அடையாததால் கணவன் ஆனந்தனும் ஆணாதிக்கத்தில் ஊறித்திளைத்த மாமியாரும் அவளுக்கு மலடிப்பட்டம் சுமத்துகின்றனர். கணவன் ஆனந்தன் விஜயாவின் தங்கையை இரண்டாம்தாரமாக மணக்க முடிவெடுக்கிறாள். இதற்கு விஜயா சம்மதிக்க மறுப்பதுடன் கணவன், மாமியார் இருவரையும் எதிர்த்துப் போராடுகிறாள். இதற்கான துணிவை விஜயா சரஸ்வதியிடம் இருந்து பெற்றாள்

என்பதைப் பின்வரும் மேற்கோள் சுட்டுகின்றது.

கட்டாந் தரையென்றாலும் கரம்பு நிலமென்றாலும் காட்டுச் செடியேனும் அங்கங்கே தலைக்காட்டும். கற்றாழை முட்செடியும் கட்டாயம் வேர்பிடிக்கும், யாரிடம் குறையென்று வேரிடம் தேடுங்கள். இல்லையென்றால் வேறிடம் விதை நட்டாலும் வெற்றிடமே விளைந்திருக்கும்... இதுநாள்வரை மனசுக்குள் அடைகாத்த ஆத்திரத்தைக் குஞ்சுபொறித்து வினாக் கருடனை அத்தையுடம் துரத்தி விட்டாள். மனசாட்சியைத் தூதுவிட்டாள். தோழி சரஸ்வதி போதித்த தைரிய சக்தி மந்திரத்தை உச்சாடணம் செய்து செய்து மனசுக்குள் குடியிருந்த தயக்கத்தைத் தட்டிவிட்டாள். வீரத்தைக் குருதியிலே உயிர்மூச்சாய் எட்டிவிட்டாள் (பக். 91-92).

என் தங்கையை இரண்டாம்தாரமாக்க ஒப்புதல் தரமாட்டேன், கட்டாயப்படுத்தினால் காவல்துறையில் புகார் செய்வேன் என்று விஜயா எச்சரித்ததால் கணவனும் மாமியாரும் ஆத்திரமுற்று அவளுக்குத் தீ வைக்கின்றனர். விஜயா தற்கொலைக்கு முயன்றதாக உண்மைகளைத் திசைதிருப்பப்பார்க்கின்றனர். ஆனால் மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட விஜயா உயிர் நீங்கும் தருவாயில்,'*மரணவாக்குமூலம் அளிக்கையில் உண்மையைச் சொல்லிவிட்டுப்* புதுமைப் பெண்ணாய் மரணம் அடைகின்றாள். இதை ஆசிரியர் ஆண்டாள் பிரியதர்ஷினி அவர்கள் தாலி விலங்கு பூட்டிய கணவன் கையில் போலீஸ் விலங்கு... பார்த்தப்படியே விஜயாவிடம் மிச்சமிருந்த ரெண்டு சொட்டுக்கண்ணீரும் ஒரு சொட்டு உயிரும் நிம்மதியாய்த் தீர்ந்து போயின (ப.108) என்ற வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

இவ்வாறு பெண்கள் கலந்து உறவாடுவதன் வாயிலாக ஆணாதிக்கத்தை எதிர்த்துப் போராடும் மனத்துணிவைப் பெறமுடியும் என்பதை நாவலின் ஒரு தீர்வாக முன் வைக்கின்றார் ஆசிரியர் ஆண்டாள் பிரியதர்ஷினி அவர்கள்.

## இயக்க நடவடிக்கை

சமூகத்தில் நிலவும் ஆணாதிக்க வன்முறைகளை எதிர்த்துப் போராடுவதற்குப் புதுப்புது மாற்றுவழிகளைக் கையாளவேண்டும் என்று பெண்ணியவாதிகள் குறிப்பிடுகின்றனர். இவற்றில் எளிய வழிமுறைகளைப் பின்வரும் பெண்ணியக்கருத்துச் சுட்டுகிறது.

ஒவ்வொரு குடியிருப்பைச் சுற்றியுள்ள பெண்களை ஒருங்கு திரட்டுவதே இவற்றில் மிகவும் எளிதாகச் செய்யக்கூடிய அமைப்பு முறையாகும் (அபர்ணா மகந்தா, மார்க்சியமும் பெண்நிலைவாதமும் - ப.56).

இந்தப் பெண்ணியக்கருத்துப்படி ஆண்டாள் பிரியதர்ஷினி அவர்கள் தமது நாவலில் சக்தி சந்திப்பு என்ற இயக்கத்தைப் படைத்திருக்கிறார். பேராசிரியை சரஸ்வதியின் தலைமையில் உருவான இந்த இயக்கத்தில் கல்லூரி மாணவிகள் உறுப்பினர்களாக இருக்கின்றனர். விடுமுறை நாட்களில் இந்தச் சக்தி சந்திப்பு, தர்மபுரி மாவட்டம் பாவையூர் கிராமத்தில் தவறாமல் நடைபெறுகின்றது. அந்தக் கிராமத்தில் நிலவும் பெண் சிசுக்கொலையைத் தடுத்து நிறுத்துவதற்காக, சக்தி சந்திப்பு இயக்க உறுப்பினர்கள் அகிம்சைவழியில் போராடுகின்றனர். இச்சக்தி சந்திப்பு இயக்கத்தின் மகத்துவத்தை அதன் தலைவி சரஸ்வதி பின்வருமாறு குறிப்பிடுகிறாள்.

வெள்ளி என்றாலே சக்தியின் விடியல்தானே... பாட்டும் கூத்தும் நாகரிகப் பித்தும் மட்டுமில்லை. என் மாணவிகளின் அடையாளம். பிரச்சனைகளைச் சிறைப்படுத்தவும் கருகிக்கொண்டிருக்கும் பண்பாட்டுவேர்களை வளப்படுத்தவும் *மனிதத்தை மனிதர்களில் விதைப்படுத்தவும் நம் கூட்டு முயற்சிதானே சக்தி.* இது பெண்களால் பெண்களுக்காக பெண்களே சுயகர்ப்பம் சுமந்த விடியல் (ப.23) என்று அதன் நோக்கத்தையும் செயல்பாட்டையும் குறிப்பிடும் சரஸ்வதி பாவையூர் கிராமத்தில் நிலவும் பெண் சிசுக்கொலைக்கு முற்றுப்புள்ளிவைக்க விழைகிறாள். அவளும் மாணவியரும் பெண்சிசுக்கொலையின் கொடுமையை விழிப்புணர்வுப் பாடல்களாலும் வீதி நாடகங்களாலும் பாவையூர் மக்களுக்குப் புலப்படுத்துகின்றனர். ஆண் குழந்தை வரவென்றும் பெண் குழந்தை செலவென்றும் பொய்மை நீதியினைத் தாய்மை போதிக்குமா? ஆணுக்குப் பதினொன்றும் பெண்ணுக்குப் பத்துமென கர்ப்பப்பை நாள் கணக்குப் பார்க்கிறதா? மகள் என்றால் முலைப்பாலும் குறைவாகச் சுரக்கிறதா? மகன் பசிக்கு அதிகமாக மூன்று முறை பிறக்கிறதா? சரஸ்வதியின் குழுவினர் கல்லாய்ச் சமைந்திருந்த மக்களிடம் கேள்விக்கணையைப் பாய்ச்சினர். கூத்தோடும் நடிப்போடும் குலைவைவிட்ட கண்ணீரோடும் ஒவ்வொருத்தரிடமும் நீதி நெறி பீய்ச்சினர் (ப.55).

மேலும் பூவாயி என்ற பத்துவயது சிறுமிக்கும் நாகமணி என்ற ஐம்பதுவயது கிழவனுக்கும் நடைபெறவிருந்த பொருந்தா மணத்தைத் தடுத்துநிறுத்த சரஸ்வதி ஒரு முடிவுக்கு வருகிறாள். பாரதி என்ற

பெண்குழந்தைக்குத் தாயான அவள் பூவாயியையும் தன் மகளாகத் தத்தெடுக்கிறாள். தொடர்ந்து அப்பாவையூர் கிராமத்தில் நிரந்தரமாய்த் தங்கி மக்களுக்கு விழிப்புணர்வு ஊட்டவும் தொண்டாற்றவும் முடிவெடுக்கின்றாள். இவ்வாறு இயக்க நடவடிக்கை என்ற தீர்வின்படி இந்தச் சக்தி சந்திப்பு இயக்கமும் ஆக்கப்பூர்வமாக விளங்குவதைக் காணலாம்.

## கலகவாதம்

ஆண் - பெண்ணுக்கு இயல்பான ஆர்வமான உணர்ச்சியைத் தணித்துக்கொள்ள இருந்த இயற்கையான வழி அடைபட்ட நிலையில் ஆணாதிக்கமே ஒருபால் உறவை (ஆண் × பெண்) (பெண் × பெண்) இயற்கைக்கு விரோதமாக வித்திட்டது. ஒருபால் உறவு ஆணாதிக்கத்தின் கொடையே ஒழிய பெண் விடுதலையின் புகழ் பூத்துக் கொட்டும் விடுதலையல்ல . (இரயாகரன், ஆணாதிக்கமும் மார்க்சியமும் - ப.140).

இதைக் கருத்தில் கொள்ளாது பெண் ஓரினச் சேர்க்கை பரிசோதனைக் குழந்தை ஆகிய தீவிரப் பெண்ணியத் தீர்வுகளை முன்வைக்கும் ஆசிரியர் ஆண்டாள் பிரியதர்ஷினி அவர்கள் ஆணாதிக்கத்தை அதிர்ச்சியுறவைக்கும் விதமாக முன்வைத்தேன் என்கிறார். (தொலைபேசி வழி நேர்காணல் - 21.1.05) பெண் ஓரினச் சேர்க்கையைக் கண்டு ஆணாதிக்கவாதிகள் எங்ஙனம் அதிர்ச்சியுறுவார்கள், மனமாற்றம் அடைவார்கள் என்பது கேள்விக்குறியாகவுள்ளது. ஆண்களிடத்திலும் ஆண்-ஆண் என்று வாழக்கூடிய ஓரினச் சேர்க்கை (ஹோமோசெக்ஸ்யூவாலிட்டி) நிலவுவதை ஆசிரியர் கவனத்தில் கொள்ளவில்லை எனத் தெரிகிறது.

மேலும் நம் ஷ்யாமா பானுமதி போல் புதுமைப் பெண்கள் புறப்படட்டும்... பெண் உயிரைக் கிள்ளுக் கீரையாகக் கெல்லி எறிகின்ற ஆண்களை ஒதுக்கட்டும் கடைசி சுவாசம் வரைக்கும் வாழ்க்கைத் துணை தேவை அது பெண்ணுக்குப் பெண்பாலாகவும் இருக்கலாம். இதுவே புது நூற்றாண்டின் புரட்சிச் சூரியன் விதைக்கின்ற உறவுச் சுடர்... ஆரத்தி எடுத்து வரவேற்போம் (ப.124) என்று நாவலில் முக்கிய கதாப்பாத்திரமாக ஆக்கரீதியில் செயல்படுவளாக விளங்கும் சரஸ்வதி பெண் ஓரினச் சேர்க்கையை ஆதரிப்பது இன்னொரு கேள்வியை எழுப்புகிறது. இப்படியே பெண் சிசுக்கொலை அதிகரித்தால் பிற்காலத்தில் மணமகள் பஞ்சம் ஏற்பட்டு மீண்டும் மனித சமூகத்தில் திரௌபதி - பஞ்சபாண்டவர் வாழ்வியல் முறை ஏற்படும், மனைவி, அத்தை, சித்தி, பெரியம்மா, சின்னம்மா, அக்கா, தங்கை, பாட்டி என்றிருக்கும் அத்துணைப் பெண் உறவும் பிரபஞ்ச எல்லை தாண்டி புதைந்து போய்விடும் என்று எச்சரிக்கை விடுக்கும் சரஸ்வதி பெண் ஓரினச் சேர்க்கையிலும் இத்தகைய கலாச்சார சீரழிவு ஏற்படும் என்பதை உணராதது ஏன் என்ற கேள்வியும் எழுகிறது.

ஓரினச் சேர்க்கை, சோதனைக்குழாய் குழந்தை ஆகிய இரு தீர்வுகளும் ஆக்கப்பூர்வமான புரட்சிகர முடிவல்ல. மாறாக இது கட்டுடைப்பை முன்வைக்கும் பின் நவீனத்துவக்கலகவாதமாகும். இயற்கையான உறவை மறுக்கின்ற அனைத்து உறவுகளும் ஆணாதிக்க வகைப்பட்டவையே (இரயாகரன், ஆணாதிக்கமும் மார்க்சியமும் - ப.314). என்பதால் ஆண்டாள் பிரியதர்ஷினி அவர்கள் மூன்றாம் தீர்வு குறித்து மறுபரிசீலனை செய்தாகவேண்டும்.

## முடிவுரை

பெண்ணியம் என்பது பெண்விடுதலையோடு ஆண் மனமாற்றத்திற்கும் சமத்துவ சமுதாயத்திற்கும் ஒட்டுமொத்த மானிடகுல விடுதலைக்கும் தீர்வுகாணும் உலகத்தத்துவமாகும். ஆகவே ஆண்டாள் பிரியதர்ஷினியின் முதல் இரண்டு தீர்வுகளான சக பெண்களிடம் கலந்து உறவாடுதல், இயக்க நடவடிக்கையான சக்தி சந்திப்பு ஆகியவை ஆக்கப்பூர்வமான தீர்வுகளாகும்.பெண் ஓரினச்சேர்க்கையும் சோதனைக்குழாய் குழந்தையும் தீவிரப் பெண்ணியத்தின் கலகவாதம் என்பதால் மூன்றாம் தீர்வு இந்திய மண்ணிற்கு மட்டும் அல்ல ஒட்டுமொத்த மானிட குலத்திற்கும் ஏற்புடையதல்ல. இத்தீர்வு மனித இனத்திற்குக் குந்தகம் விளைவிக்கும் என்பதால் ஆசிரியர் ஆண்டாள் பிரியதர்ஷினி அவர்கள் இதனை மறுபார்வைக்கு உட்படுத்த வேண்டும்.

## மேற்கோள் நூல்கள்


1. அபர்ணா மகந்தா, மார்க்சியமும் பெண் நிலைவாதமும், பொன்னி வெளியீடு, 12 முதல் பிரதான சாலை, நேரு நகர், அடையாறு, சென்னை-20 (1990).

2. ஆண்டாள் பிரியதர்ஷினி, சூரியனை விடியவைப்போம், மதி நிலையம் 4(39) தணிகாசலம் சாலை, பிருந்தாவன் அபார்ட்மெண்ட்ஸ், தி.நகர், சென்னை-17 (2004).

3. இரயாகரன், ஆணாதிக்கமும் மார்க்சியமும், கீழைக்காற்று வெளியீட்டகம் 10 அவுலியா சாகிபு தெரு, எல்லீசு சாலை, சென்னை-2.

# அமைப்பியல் நோக்கில் "அந்தி"

முனைவர். *தூ. சேது பாண்டியன்*,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

சுந்தர பாண்டியன் என்ற புனை பெயர் கொண்ட எழுத்தாளர் காவ்யா சண்முக சுந்தரம் எழுதிய படைப்பே அந்தி என்னும் நாவல். இந்நாவல் 1998ல் முதல் பதிப்பாக வெளிவந்தது. இதன் 2ம் பதிப்பு 2001ல் வெளிவந்தது. இந்த நாவலின் கட்டமைப்பினை விளக்க முயல்கிறது இக்கட்டுரை. அமைப்பியல் என்றவுடன் பெர்டினாண்ட் டி சசூரின் அமைப்பியலா? லெவிஸ்ட்ராஸின் அமைப்பியலா? விளாடிமீர் பிராப்பின் அமைப்பியலா? உருசிய நாட்டு உருவவியலார் குறிப்பிடும் அமைப்பியலா? என்றெல்லாம் குழம்பிக் கொண்டிருக்க வேண்டாம்.

அமைப்பு என்பது பல உறுப்புகளை உடையது. இவ்வுறுப்புகள் ஒன்றாக இணையும் போது இணைதல் என்ற செயல் காரணமாகத் தனித்து இருந்தபோது இருந்த இயல்பிலிருந்து மாறுபடுகிறது. இந்த மாறுபாட்டால் புதிய பொருள் உண்டாகிறது. இந்த இணைதல் பற்றியும் அதனால் ஏற்படும் விளைவு பற்றியும் விளக்குவதே அமைப்பியல் எனலாம். ஒரு கதை எழுத இரண்டு முதன்மை உறுப்புகள் தேவை. ஒன்று கருத்து மற்றொன்று அதனைச் சொல்ல ஒரு மொழி. இந்த இரண்டு முதன்மை உறுப்புகளுக்கும் பல உள்உறுப்புகளைக் கொண்டமைகின்றன. கதையின் தலைவன், தலைவி, துணைமாந்தர்கள்அவர்களின் செயல்களால் நிகழும் நிகழ்வுகள் அனைத்தும் கருத்து என்னும் முதல் உறுப்பின் உள்ளுறுப்புகள் ஆகின்றன. சொல், தொடர், சொல்லும் முறை, பயன்படுத்தும் உத்திகள், பொருட் புலப்பாடு முறை, முதலியன இரண்டாவது உறுப்பான மொழியின் உள்ளுறுப்புக்களாகின்றன. இவ்விரண்டு உறுப்புக்களின் இணைவே முழுமையான கதையாக உருவகம் பெறுகிறது. சுருக்கமாகச் சொன்னால் எந்தவொரு படைப்புக்கும் ஒரு வடிவம் உண்டு அந்த வடிவத்திற்கும் அந்த வடிவம் கூறும் உள்ளடக்கத்திற்கும் உள்ள பொறுத்தப்பாடு குறித்த விளக்கமே அமைப்பியல் ஆய்வு எனலாம்.வடிவத்தின் சிறப்பு எவ்வாறு படைப்பின் சிறப்பிற்கு துணை புரிகிறது. என்று விளக்குவதே கட்டமைப்பியல் ஆய்வு என்ற கருத்தமைவின் அடிப்படையிலேயே இந்த ஆய்வு அமைகின்றது.

"அந்தி" நாவலின் "எச்சரிக்கை" என்ற முன்னுரையில் "இது என் கதைதான், இருபதைந்து ஆண்டுகளுக்கும் முன் ஒரு கோடை காலத்தில் என் உச்சந்தலையில் விழுந்த இடி அது தொண்டைக்குழிக்குள் இத்தனை வருசங்களாய் வார்த்தைகளுக்காய் தவமிருந்து இன்று அதன் வரம் நாவலாக உங்கள் கையில்" என்று படைப்பாளி கூறுவதிலிருந்து அவருடைய வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சோக நிகழ்ச்சியே இந்த நாவலுக்குக் கருவானது என்பது தெளிவாகிறது. நாவல் ஆசிரியரின் அப்பாவைப் பெற்ற ஆத்தாளின் இறப்பே அந்தச் சோகநிகழ்ச்சி. ஒரு மரணம் நாவலாக மலர்ந்திருக்கின்றது. ஒரு மரணத்தை - இன்னும் சொல்லப்போனால் ஒரு தற்கொலையை - அதற்குரிய காரணகாரியங்களை எல்லாம் இணைத்து இத்துணை சுவையாகச் சொல்ல முடியுமா என்ற வியப்பே விஞ்சி நிற்கின்றது.

ஆறுமுகத்தம்மாள் வெள்ளையப்பத்தேவரைத் திருமணம் செய்து கொண்ட போது அவரிடம் இருந்தவை கொஞ்சம் ஈடுகள் மட்டுமே. வெள்ளையப்ப தேவர் ஒரு புத்திசாலியாகக்கூட இல்லை. ஈடுகளை விற்று நிலம்வாங்கிக் கிணறு தோண்டி நிலத்தைப் பண்படுத்தியது எல்லாம் ஆறுமுகத்தம்மாள்தான். ஆறுமுகத்தம்மாள் குடும்பத்தைத் தாங்குகிறாள். முத்துச்சாமித்தேவர், கந்தசாமித்தேவர். குப்புச்சாமித் தேவர், மாடசாமித்தேவர் என நான்கு ஆண்கள், பார்வதி, பாப்பாத்தி என இரண்டு பெண்கள் ஆக மொத்தம் ஆறு குழந்தைகளைப் பெற்று அவர்களை வளர்த்து ஆளாக்கிய ஆறுமுகத்தம்மாள் பிற்காலத்தில் கணவன் மறைவுக்குப் பின்னர் தனியாளாகிப் போனாள். ஆறுமுகத்தம்மாளின் பிள்ளைகள் எல்லோரும் அவரவர்தம் பாட்டைப் பார்த்துக்கொண்டு போய்விடுகிறார்கள். ஆறுமுகத்தம்மாள் திருட்டுக் குற்றம் சாட்டிக்

கேவலப்படுத்துகிறாள் ஒரு மருமகள். மற்றொரு மருமகளோ மகன் வீட்டுக்கு வந்த ஆறுமுகத்தம்மாளை "இங்கு வேலை செய்தால் தான் சாப்பாடு" என்று பேசி விரட்டி விடுகிறாள். இப்படித்தான் பெற்று வளர்த்த பிள்ளைகளின் வீடுகளில் தனக்கு அன்பும், ஆதரவும் இல்லாததால் தனித்து வாழ்ந்த ஆறுமுகத்தம்மாள் இறுதியில் தற்கொலை செய்துகொண்டு விடுகிறாள். அவள் இறந்தபின் அதுவரை அவளுக்கு ஆதரவுதராத அவளுடைய மக்கள் எந்தக் குறையும் இல்லாமல் சடங்குகள் செய்கிறார்கள். இறுதியில் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டு சுயநலம் பேணுபவர்களாகவே நிலைத்து நிற்கின்றனர். இது தான் அந்தி நாவலின் கதைச்சுருக்கம்.

நாவல் திறனாய்வாளர்கள் பொதுவாக நாவலின் அமைப்பை - கதைப் பின்னலை விளக்கும் போது தொடக்கம் - வளர்ச்சி - உச்ச கட்டம் - வீழ்ச்சி - முடிவு - என்று ஏற்ற இறக்கக் கோணங் கொண்ட வரைபடத்தால் விளக்குவார்கள். ஆனால் அந்தி நாவல் அத்தகைய எளிய அமைப்புடைய நாவலாக அமையவில்லை. ஆறுமுகத்தாள் இறந்த நாளில் தொடங்கி கருமாதி நடைபெறும் பதினாறாம் நாள் முடிய பதினாரு நாட்கள் நடைபெறும் நிகழ்ச்சிகளைக் கூறும் வகையில் பதினாரு இயல்களில் நாவல் அமைந்துள்ளது. ஆனால் ஒவ்வொரு இயலும் ஒவ்வொரு நாள் நிகழ்ச்சியில் தொடங்கினாலும் தொடங்கிய சிறிது நேரத்திலேயே பின்னோக்கு உத்தியிலோ அல்லது நனவோடை உத்தியிலோ கடந்த கால நிகழ்வுகளைத் தொகுத்துக் காட்டுவதாக அமைந்து இறுதியில் மறுபடியும் நிகழ்காலத்தில் வந்து முடிவதாக அமைகிறது. சில இயல்கள் பின்னோக்கு உத்தியின் மூலம் விளக்கிய கடந்தகால நிகழ்வுகளுடனேயே முடிந்து விடுகின்றன. இந்த அமைப்பினால் நாவல் நிகழ்வுகள் நிகழ்வில் தொடங்கி இறப்புக்குள் சென்று பின்னர் நிகழ்வுக்குத் திரும்பி மறுபடியும் இறந்தகாலத்திற்குள் பயணம் செய்து மறுபடியும் நிகழ்வுக்குத் திரும்புதல் என்ற வகையில் மறுபடி மறுபடி இறப்புக்குச் செல்வதும் நிகழ்வுக்கு வருவதுமான அமைப்பு காணப்படுகிறது. 174 பக்கங்களைக் கொண்டமைந்த இந்நாவலில் ஏறத்தாழ 110 பக்கங்கள் முன்னோக்கு மற்றும் நனவோடை உத்திகளால் இறந்தகால நிகழ்வுகைக் கூறுவனவாகவே அமைகின்றன.

இந்த அமைப்பினால் இந்த நாவலின் கரு எவ்வாறு சிறப்புற வெளிப்படுகிறது என்ற வினா எழுவது இயல்பே. ஆறுமுகத்தம்மாள் என்ற கதாபாத்திரத்தின் மரணம் - தற்கொலை - தான் இந்த நாவலின் மைய நிகழ்வாகும். இந்தத் தற்கொலைக்குக் காரணம் என்ன? இது ஏன் நடந்தது? என்ற வினாவிற்கு இறுதிவரை நாவலில் விடை இல்லை. ஒவ்வொரு இயலிலும் ஒவ்வொரு கதாபாத்திரத்தினுடனான ஆறுமுகத்தம்மாளின் உறவு சித்தரிக்கப்படுகிறது. ஆறுமுகத்தம்மாள் உயிரோடு இருந்த போது அவள் மற்றவர்களோடு கொண்டிருந்த உறவும், மற்றவர்கள் இவள்மீது கொண்டிருந்த பாசமும், அவளை மதியாமல் செய்த அவமதிப்புக்களும் ஒவ்வொரு இயலிலும் தனித்தனியாக விரிவாகப் பேசப்படுகின்றது. இவையாவும் முன்னோக்கு உத்தியாக = பிற பாத்திரங்களின் கூற்றாக அல்லது அவள்மீது பாசங்கொண்ட பாத்திரங்களின் சனவோட்டத்தில் அமைவது போல படைக்கப்பட்டுள்ளது.

இந்நாவலின் ஒவ்வொரு இயலிலும் ஆறுமுகத்தம்மாளின் சாவுக்குக் காரணம் என்று ஒவ்வொருவர் மீதும் குற்றம் சாட்டுவது போல அமைந்து இறுதிவரை எந்தஒரு குற்றச்சாட்டும் நிரூபணம் ஆகாமலே கதை முடிந்துவிடுகிறது. ஒவ்வொருவர் பர்வையிலும் தன்னைத் தவிர மற்றவர்கள் தான் குற்றவாளியாக்கப் படுகின்றனர். ஒவ்வொருவரும் ஆறுமுகத்தம்மாளின் மரணத்திற்கு மற்றவர்களின் செயல்தான் காரணம் என்று நிலைநாட்டப் பார்க்கின்றனர். இந்நாவலில் ஆறுமுகத்தம்மாளின் மனமுறிவுக்குப் பல நிகழ்வுகள் காரணமாகப் படைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் எதனால் அவள் தற்கொலை செய்து கொண்டாள்? என்பது மட்டும் தெளிவாக இல்லை. இதற்கு அந்நிகழ்வுகள் காலவரிசைப்படி கூறாததும் ஒரு காரணம் ஆகிறது. அதற்குப் பின்நவீனத்துவத்தின் தாக்கத்தால் ஏற்பட்ட தொடரில் எழுத்துமுறை காரணமாகிறது. ஆறுமுகத்தம்மாளின் சுயகௌரவம் பாதிக்கப்பட்ட நிகழ்வுகள் பல. அவை ஒவ்வொரு இயலிலும் ஒவ்வொருவர் கூற்றாக வெளிப்படுகிறது.

மூன்றாவது இயலில், மூத்தமருமகள் தன்மீது ஐந்து ரூபாயைத் திருடியதாகத் திருட்டுப்பட்டம்

கட்டியபோது மனமுடைந்து போகிறாள் ஆறுமுகத்தாய். இந்த நிகழ்வு மூத்தமருமகள் பகவதி ஆறுமுகத்தம்மாளைத் திருட்டுக் குற்றம் சாட்டி அவமானப்படுத்தியதாக அமைகிறது. (ப.37) அப்போது அவளுக்கு வருத்தமெல்லாம் மூத்தமகன் பொண்டாட்டி பேச்ச கேட்டுட்டு தன்ன நம்பாம போய்விட்டானே என்பதுதான் (ப.38) நான்காவது இயலில், "இன்னிக்கு காலையில் பெரிய அத்தை வீட்டுக்குப் பேனோன். அவா சொல்றதப்பாத்தா வள்ளயூரு சித்திதான் காரணமுன்னு சொல்றா" என்றமையும் பகுதி இரண்டாவது மருமகள் கிடா வெட்டியகறிகளைக் கொடுக்காமல் அவமதித்ததுதான் ஆறுமுகத்தம்மாளின் தற்கொலைக்குக் காரணம் என்று கூறுகிறது. (எ.48) இது இரண்டாவது மகன் மருமகளால் ஆறுமுகத்தம்மாளுக்கு ஏற்பட்ட மனமுறிவைக்காட்டுகிறது.

ஆறாவது இயலில் தன் சின்ன மருமகன் தன் அண்ணன் மகன் என்பதால் உரிமையோடு தன் மகளைச் சொத்து வாங்கிவரும்படி அனுப்பியதால் தன் மருமகனிடம் "ஒனக்கு அத்த வேணுமா சொத்து வேணுமா என்று கேட்கிறாள்" அத்த எதுக்கு?....சொத்துதான் வேணும் என்று அவன் கூறவும் தோட்டத்துல பாதிய அவனுக்கு எழுதிக்கொடுத்துவிட்டாள். அப்போது சொத்து போனது கூட அவளுக்கு வருத்தம் இல்ல. தொப்புள் கொடி உறவு அறுபட்டு விட்டதே என்பதில் அவளுக்குத் தாங்க முடியாத துக்கம். இது மகள் மருமகள் செயல்களால் தன் சொந்த அண்ணனின் செயலால் ஏற்பட்ட மனமுறிவு ஆகும்.

இதே இயலில் சொத்தைத் தன் மருமகனுக்குக் கொடுத்ததை எதிர்த்துப் பேசிய மூன்றாவது மகன் குப்புச்சாமித்தேவர் இறுதியில் "நீ செத்தாலும் வரமாட்டோம்" என்று கோபித்துக் கொண்டு போகிறார். அதனாலும் ஆறுமுகத்தம்மாள் மனம் உடைகின்றாள். ஏறக்குறைய இதுபோல்தான் அம்மாவுக்கும் எல்லாப்பிள்ளைகளுக்கும் இடையில் உறவில் விரிசல் விழுந்தது. ஆனால் எது பிந்தியது? எது இறுதியில் அவள் உயிரைக்குடித்தது என்பது தெளிவுறா வகையில் கதை பின்னப்பட்டிருக்கிறது. இதற்கு இந்த அமைப்பே துணையாகிறது மரணத்திற்குக் காரணம் யார் என்று சொல்ல முடியாத குழப்பமே இத்தகையதொரு கதைப் பின்னலைத் தந்திருக்கிறது நாவலாசிரியரின் கூற்றிலேயே இக்கருத்து, "எங்க குடும்பத்தின் கலங்கரை விளக்கு ஒருநாள் அணைந்து போயிற்று காற்றடித்தது என்றார்கள் எண்ணை இல்லை என்றார்கள் திரிதீர்ந்துவிட்டது என்றார்கள் எப்படியோ அவள் இல்லை என்பதற்கு என்னைச் சுற்றி கவிழ்ந்த இருட்டு மட்டுமே சாட்சியம் என்று முன்னுரையில் வெளிப்படுகிறது.

இந்நாவலின் சில எதிர்வுகள் பாத்திரப்படைப்புக்கும் நாவல் ஓட்டத்திற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆறுமுகத்தம்மாள் வெள்ளையப்பதேவர் ஜோடியில் ஆறுமுகத்தம்மாள் பாத்திரம் புத்திசாலித்தனம் + வீரம் + குடும்பத்தைத்தாங்கும் சக்தி என்ற பண்புகள் கொண்டும், வெள்ளையப்ப தேவர் பாத்திரம் - புத்திசாலித்தனம் - சுறுசுறுப்பு = வீரம் என்ற பண்புகள் கொண்டும் கட்டமைக்கப்படுகிறார்கள்.

இந்த நாவல் ஒரு யதார்த்த வாத நாவல் என்கிறார் ஞானி. இந்த யதார்த்த வாதம் கதை நிகழ்வுகளின் தன்மையால் மட்டும் அமைந்தது அல்ல. கதை கூறும் உத்தியாலும் இந்த யதார்த்தவாதத்தை காணமுடிகிறது. கதைகளை வெறும் நிகழ்வுகளின் தொகுப்பாக கூறாமல் படைப்பாளி ஓர் நாட்டுப்புறவியல் ஆய்வாளர் என்பதால் தம் ஆய்வுகளின் போது சேகரித்த நாட்டார் பாடல்களான ஒப்பாரிப்பாடல்களையும் மாரடிப்பாடல்களையும் 16 இயல்களில் 12 இயல்களில் பயன்படுத்தியுள்ளார்.

# சாய்வு நாற்காலி புதினத்தில் வாழ்வியல் பன்முகத் தன்மைகள்

பேராசிரியர் முனைவர் *உ.சையத் அஜீஸ் பீரான்,* தமிழ் முதுகலை மற்றும் ஆய்வுத்துறை,
புதுக்கல்லூரி, சென்னை - 14.

இலங்கை சித்தி லெப்பை மரைக்காயரால் 1885 இல் எழுதப் பெற்ற அசன்பே சரித்திரம் தமிழில் தோன்றிய இரண்டாவது புதினமாகவும், இஸ்லாமியத்தமிழ் இலக்கியத்தில் தோன்றிய முதலாவது புதினமாகவும் கருதப்பெறுகின்றது. அதனைத் தொடர்ந்து இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் புதின வரலாறு விரிந்து செல்கின்றது. அவ்வகையில் தோப்பில் முஹம்மது மீரானின் சாய்வு நாற்காலி புதினம் குறிப்பிடத்தக்க அளவில் தன் முத்திரையைப் பதித்துள்ளது.

இப்புதினத்தின் ஆசிரியர் தோப்பில் முஹம்மது மீரான் கன்னியாகுமரி மாவட்டத்தின் கேரள எல்லையையொட்டி அமைந்துள்ள தேங்காய்ப் பட்டினத்தில் பிறந்தவர். இவருடைய பயிற்றுமொழி மலையாளமாக இருந்ததால் எந்தக் கல்வி கூடத்திற்கும் சென்று முறையாகத்தமிழ் மொழியைக் கற்றுக் கொள்ளவில்லை. இவருடைய தனித்துவமிக்க திறமை காரணமாக ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட சாய்வு நாற்காலி (1995) புதினத்திற்கு சாகித்திய அகாதெமி பரிசு கிடைத்துள்ளது சிறப்பிற்கு உரியது. இதுபற்றி தோப்பில் முஹம்மது மீரானிடம் கேட்டபோது, படைப்பு என்பது ஆவேசமான பாய்ச்சல். மொழிக்கட்டுப்பாடு குறுக்கீடுமானால், அதன் வீச்சு குறையும் என்பதும், பேனா எடுக்கும்போதெல்லாம் என்கிராமம் ஒரு குழந்தை கைநீட்டி வருவதுவோல் காட்சி தருகிறது, அந்தக் கடலும் கடற்கரை மணலும் என்னோடு பேசுகின்றன. அந்த மொழி கேட்டு எழுதுகிறேன் என்று கூறியுள்ளார். இதன் வாயிலாக இலக்கியப் படைப்பிற்கு மொழி என்பது தடை கிடையாது, உணர்வே அதில் மேலோங்கியிருக்கின்றது என்பது புலப்படும்.

பரம்பரை பரம்பரையாக சாய்வு நாற்காலி புதினத்தில் மனிதர்கள் முதலாளி என்ற போர்வையில் பெண்ணின் மீது ஆதிக்கம் செலுத்துவது, சமயம் என்ற போர்வையில் மக்களை ஏமாற்றுவது ஆகியவை பன்முகநிலையுடன் எடுத்துக்காட்டப்படுகின்றன.

## பெண்கள் மீது ஆதிக்கம்

முஸ்தபாக்கண்ணுவின் பரம்பரையே பெண்ணின்மீது ஆதிக்க வெறி கொண்டு துன்புறுத்தும் தன்மை பலவகைகளில் காட்டப்பட்டுள்ளது. சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு குடற்பசிக்கும் உடற்பசிக்கும் உரிய இரைகளின் சுவைகளைப் பற்றியே எப்போதும் சிந்தித்துக் கொண்டிருக்கும் முஸ்தபாக்கண்ணு என்பவர் மீன் வாங்கியதற்கு முப்பது ரூபாய் கொடுப்பதற்குக் கூட வசதியில்லாத நிலையிலும் இவருடைய ஆதிக்கக் குணமும் அரக்கக் குணமும் பல்வேறு வகையில் சாய்வு நாற்காலி புதினத்தில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

"மனையிடத்து செலுத்திய ஆதிக்கம்
பொத்தடி வாயெ, திருவிதாங்கூர் மகாரஜாட்டெ
இருந்து பட்டும் வாளும் வாங்கி குடும்பம்,
ஆரெப்பாத்து கடற்புறுத்திலெ போயி மீனு
வாங்கச் சொல்லுதா?......... பாறுகாலி. எறங்கடி
இந்த மனேலேருந்து வெளியே," (பக். 36-37)

என்று தன் மனைவியை வீட்டை விட்டே வெளியேறு என்று கூறுவது அவரை (முஸ்தபாக்கண்ணு) கடைத்தெருவிற்குச் சென்று மீன்வாங்கி வாருங்கள் என்று மனைவி கூறியது தான் காரணம் என்பதை நினைக்கும்போது அனைவரது நெஞ்சமும் கனக்கின்றது.

மேலும், அடுப்பில் துண்டு மீனை எடுத்துப் போட்டுக்கொண்டிருந்த மனைவினை மதிய உணவு பத்து நிமிடங்கள் தாமதமானதற்குப் பிரம்பால் அடித்து துன்புறுத்துகின்றார். இச்செய்கை இவருடைய ஆதிக்க வெறியைக் காட்டுகிறது.

## பெண்களை நாசப்படுத்தும் போக்கு

முஸ்தபாக்கண்ணுவின் தந்தையும் பெண்ணாதிக்க வெறியராக இப்புதினத்தில் காட்டப்பட்டுள்ளார். முஸ்தபாக்கண்ணு தன்வீட்டு வளாகத்துப் பின்வீட்டு பாத்துமாவை ஏமாற்றி பாலுறவு அனுபவித்து பின் கைவிட முயற்சிக்கிறார். நியாயம் கேட்ட பெண்ணின் மீதே ஊர்ப்பஞ்சாயத்தில் பழிபோட்டு மகனைத்தப்ப வைத்து,

பின்னர் ஊர் விலக்கு எனும் தீர்ப்பையும் அவரே சொல்லுகின்றார். (பக். 158-159)

முஸ்தபாக்கண்ணுவின் தாத்தா காசீம் என்பவர் தன் மனைவியின் பெயரில் உள்ள சொத்துக்களைத் தன் பெயருக்கு மாற்ற நினைக்கிறார். அதற்கு மனைவியிடம் கைநாட்டு வைக்க வேண்டுகின்றார். அவருடைய மனைவி அதற்கு மறுக்கின்றாள். அதற்காக அவர் தன் மனைவியைப் பிரம்பால் அடித்து கைநாட்டு வாங்கிய பின்னர், அவளைப் பிறந்த வீட்டிற்கு விரட்டி விடுகின்றார். இவ்வாறு சங்கிலித் தொடர்போல பரம்பரை பரம்பரையாக முஸ்தபாக்கண்ணுவின் தந்தை-தாத்தா ஆகியோர் பெண் மீது ஆதிக்கம் செலுத்தும் வெறியர்களாகக் காட்டப்பட்டுள்ளமை இங்கு நோக்கத்தக்கது.

இத்துடன் தோப்பில் முஹம்மது மீரான், பிரம்பின் வரலாற்றைக் கூறுவதுபோல் பரம்பரை ஆதிக்க வெறியை மனதை உருக்கும் வகையில் படம் பிடித்துக் காட்டுகின்றார்.

உப்பா வாப்பும்மாவை இந்த பிரம்பால் பளார்பளார் என்று அடிக்கும்போதும், வாப்பா உம்மாவை பளார்பளார் என்று அடிக்கும் போதெல்லாம் புழுபோல் நெளியும் அவர்களுடைய தொண்டை நாளங்களிலிருந்து புறப்படும் வேதனையின் அவல அலறலில் அந்தக் கிராமத்திலுள்ள வெண்மணலும் புற்பூண்டுகளும் மரம் கொடிகளுமெல்லாம் அதிரும். சிலவேளை விண்ணும் முகம் சுளிக்கும். காதைப் பொத்தும், அவ்வளவு கோராமான கைகளிலிருந்து உயர்ந்து தாழ்ந்து வழுவழுப்பு ஏறிய பிரம்பு (பக்.167)

இவ்வாறு எடுத்துக்கூறி பெண்களிடத்து அனைவரும் இரக்கம் கொள்ள வேண்டும். அவர்களைத்துன்புறுத்தக்கூடாது என்ற கருத்தை தோப்பில் முகம்மது மீரான் உள்ளமைத்துள்ளார். வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு என்பதற்கேற்ப பெண்களை அடிமைப்படுத்தியும் அவர்களை ஏமாற்றியும் காலம் காலமாக வந்தவர்களையும், பலரையும் சமயப் போலிகள் ஏமாற்றுவதில் வல்லவர்கள். சமய வேடமிட்ட ஆதிக்கவாதிகளை இப்புதினத்தின் வாயிலாக எள்ளல் முறையில் தோலுரித்துக்காட்டுகின்றார். இதன் வாயிலாக தான் சாாந்த சமயத்தில் படிந்துவிட்ட அழுக்குகளைக்களைய முனைந்துள்ளார் என்பதனை உணர்ந்து கொள்ளலாம்.

இப்புதினத்தில் சமயத்தின் பெயரைக் கூறிக்கொண்டு மக்களை ஏமாற்றும் பலதரப்பட்ட சமய வேடந்தாங்கிகளுள் முஸ்லியாரும் ஒருவர். அவர் ஜின்னை (மனிதர்களின் கண்களுக்குப்புலனாகாத நெருப்பால் படைக்கப்பட்ட ஓர் இனம்) அடக்கியாளுவதாகக் கூறி மக்களை ஏமாற்றுகின்றார். கன்னி கழியாத பெண்களே "மை" பார்க்க முடியும் என்று அறிவித்துவிட்டு பல பெண்களை கொடுத்த முஸ்தபாக் கண்ணுவையே மை பார்க்க பயன்படுத்தி சமூகத்தை ஏமாற்றுகிறார்.

இதுபோல், சமய வேடந்தாங்கிகள் பலகட்டுக் கதைகளை மக்கள் மத்தியில் கட்டவிழ்த்து ஏமாற்றுகின்றார். "ஏழு கடல்களுக்கு அப்பால் உள்ள கந்தக மலையடிவாரத்தில் சங்கிலியால் கட்டிப்போடப்பட்ட ஒரு ஜின் சங்கிலியை அறுத்துக்கொண்டு தப்பிவந்து அட்டூழியம் செய்வதாகவும், அந்த ஜின் ஒரு பெண்ணைப் புணர்ந்து அப்பெண்ணிற்குக் குழந்தை பிறந்தால் அக்குழந்தை உயிர் வாழாது என்றும், மீறி வாழ்ந்தால் அக்குழந்தை கூர்ந்து பார்ப்பதெல்லாம் பற்றி எரியும் என்றும், அத்தாய்க்குப் பால் சுரந்து வலியெடுக்கும் என்றும், இறுதியில் அத்தாய் பால் கொடுத்தபடியே உயிர்விடுவாள்" (பக்.71) என்றும்,

ஜின் முதலை உருவெடுத்து குமரிப்பெண்ணை விழுங்கும் என்றும் (பக்.45) ஜின், பேய், பிசாசுகள் எல்லாம் முஸ்லியார் பெயர் கேட்டாலே நடுங்கும் என்றும் (பக்.62) ஜின்னை விரட்டும் முஸ்லியார் கண்மூடித்திறப்பதற்குள் நெடுந்தொலைவு பயணிப்பதாகவும் கூறி சமய வேடந்தாங்கிகள் மக்கள் மனதில் மயக்கத்தையும், பயத்தையும் வரவழைத்து மிரட்டிப்பிழைக்கின்றனர் என்ற கருத்தையும் அறியமுடிகிறது. இங்கு "மருட்டுகின்ற மதத்தலைவர் வாழ்கின்றார்" என்ற பாரதிதாசனாரின் தொடர் இங்கு நினைவிற்கு உரியது.

## முடிவுரை

இவ்வாறு தோப்பில் முகம்மது மீரான் செல்வம் மற்றும் குடும்பப் பெருமைகளின் துணை கொண்டு வலுவிழந்த பெண்களை நாசப்படுத்தும் ஆணாதிக்கப் பண்பு கொண்டவர்களையும், சமயத்தைத் தம் பிடிக்குள் வைத்துக் கொண்டு மக்களை மிரட்டி வாழும் சமய வேடந்தாங்கிகளையும் இனம் காட்டியுள்ளார், அவ்வாறு இனம் காட்டுவதன் வாயிலாக, சமுதயாத்தில் பல நூற்றாண்டுக்களாகப் புரையோடிப் போயிருக்கும் சமூக நோய்க்கு மருத்துவம் காண இப்புதினத்தின் வழி தோப்பில் முகம்மது மீரான் முனைந்துள்ளார் என்பது அறியலாகிறது.

# புத்தம் வீடு - ஒரு நடையியல் ஆய்வு (ஒலிக்குறிப்புச் சொற்கள்) (Onomatopoeia)

முனைவர் *ப. தமிழ்ப்பாவை,* விரிவுரையாளர் - தமிழ்த்துறை,
ஸ்ரீ ஜி.வி.ஜி. விசாலாட்சி மகளிர் கல்லூரி, (தன்னாட்சி) உடுமலைப்பேட்டை.

'புத்தம் வீடு' தமிழில் எழுதப்பட்ட முதல் வட்டார வழக்குப் புதினம் என்னும் பெருமை பெற்றது எனலாம். இது நாகர்கோவில் பனைவிளை கிராமத்துப் பின்னணியில் அமைந்த நாடார் வட்டார வழக்கில் ஹெப்சிபா ஜேசுதாசனால் எழுதப்பட்ட புதினமாகும். இவண் இப்புதினம் நடையியல் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றது.

நடையியல் என்பது மொழியியல் சார்ந்தது. இலக்கியத் திறனாய்வும் மொழியியலும் இணைந்த நிலையே நடையியலாகின்றது. ஓர் இலக்கியப் படைப்பில் மொழி எங்ஙனம் கையாளப்பட்டுள்ளது என்பதறிய இவ் நடையியல் ஆய்வு துணை செய்கின்றது. புதிய நடையியலின் தந்தையான லியோஸ்பிட்சர் (Leo Spitzer) கூறுகையில் நடையியல், இலக்கியத் திறனாய்வையும், மொழியியலையும் இணைக்கும் பாலமாகின்றது என்கின்றார். (Linguistics and Literacy Style, p.22) இவ் ஆய்வு படைப்பாளரின் நோக்கிலும், படைப்பின் அடிப்படையிலும், படிப்போரின் நோக்கிலும் அமையலாம். படைப்பின் அடிப்படையில் அமையும் போது படைப்பாளனின் பண்புகளும் புலனாகும் வாய்ப்புள்ளது. இதன் மூலம் படைப்பாளனுக்கும் அவனது நடைக்கும் பெரிதும் வேறுபாடற்ற நிலையை உணரலாம்.

தமிழ்ப்பேரகராதி நடை என்பதற்கு 22 பொருள்களைத் தருகின்றது. அவற்றுள் ஒன்று மொழி நடை ஆகும். ஜி.டபிள்யூ. டர்னர் (G.W. Turner), வார்ன்பர்க் (Wann burg), மிடில்டன் முர்ரே (Middleton Murrey), ÜB (Leech) போன்றோர் நடையியல் குறித்துப் பல்வேறு கருத்துக்களைக் கூறியிருப்பினும், அனைத்தும் நடையியல் என்பது அறிவியல் அடிப்படையில் அமைந்த மொழி ஆய்வு என்பதையும், இது பெரிதும் படைப்பாளனையும், அவன் படைப்பையும் சார்ந்தது என்பதையும் புலப்படுத்துகின்றன.

உல்மான் (Ullmann) மூன்று நிலைகளில் ஒருவரது நடையியல் கூறுகளை அடையாளம் காணமுடியும் என்கின்றார். அவை 1. ஒலியியல் கூறுகள், 2. பொருளியல் கூறுகள், 3. தொடரியல் கூறுகள். என்பன. இவை ஒரு படைப்பாளியின் நடைத்திறத்தை அளக்க உதவுவன. இவ்வகையில் புள்ளியல் அணுகுமுறை (Statistical Approach)-யைப் பின்பற்றி ஆய்வு செய்யும்போது படைப்பாளியின் தனித்தன்மையை உணர இயலும். ஹெப்சிபா ஜேசுதாசனின் 'புத்தம் வீடு' புள்ளியல் அணுகுமுறை வழி ஆய்வு நிகழ்த்தப் பெறுவதால் படைப்பாளியின் தனித்தன்மையும் அதன்வழி படைப்பின் தனித்தன்மையும் புலனாகின்றன.

அன்றாட வாழ்வில் நம்மையறியாமல் பயன்படுத்தும் ஒலிக்குறிப்புச் சொற்களைப் போல ஒரு படைப்பாளி எத்தகு ஒலிக்குறிப்புச் சொற்களை, எத்தகு சூழலில், எப்படியெல்லாம் பயன்படுத்தியுள்ளார் என்பதை அறிவதும் ஒருவரது நடையைக் காணும் முயற்சியே. ஹெப்சியா ஜேசுதாசன் பயன்படுத்தியுள்ள ஒலிக்குறிப்புச் சொற்களின் வழி படைப்பாளரது தனித்தன்மையை இனங்காணும் முயற்சியாக நடையியலின் ஒரு கூறான ஒலியியல் கூறுகள் இப்புதினத்தில் அமைந்துள்ள பாங்கு மட்டிலும் இக்கட்டுரையின்வழி வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

## இப்புதினத்தில் ஒலியியல் கூறுகளுள் ஒன்றான ஒலிக்குறிப்புச் சொற்கள் (Onomatopoeia)s

1. தனித்தும் 2. இரட்டித்தும்

3. எதிரொலியாகவும் 4. போலச் செய்தல் நிலையிலும்

5. எதுகை, மோனையாகவும் 6. ஒலி வேறுபாட்டால் பொருள் மாற்றம் ஏற்படுத்தும் வகையிலும் இப்புதினத்தில் அமைந்துள்ளன.

**தனித்து வருவன** (Single Words) :

தனிச்சொற்கள் பெரும்பாலும் என், இது, ஒரு என முடிவன. புத்தம் வீட்டில் என் என முடியும் தனிச்சொற்கள் மட்டும் இடம்பெற்றுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| (எ.கா) | உம் மென்று | - | கோபத்துடன் அமைதி காத்தல் |
| | சட் டென்று | - | உடனடியாக |

தன் மகனது பேச்சாக இருந்தால் பெரியவர் உம்மென்று முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டிருப்பார். (ப.62)

விருந்தாளி சட்டென்று எழுந்திருந்தார். (ப. 90)

என்று இவ்வாறு சொல்ல வந்த செய்தியின் பொருளை உடனடியாக உணர்த்தும் வகையில் தனித்து வரும் சொற்கள் இடம் பெற்றுள்ளன.

**இரட்டித்து வருவன** (Reduplicatives) :

தமிழ் இலக்கணத்தில் இரட்டைக்கிளி, அடுக்குத்தொடர் என வருவன இவ்வகையில் அடங்கும்.

| | | |
|---|---|---|
| என் | - | கீச்கீச்சென்று |
| த்த | - | கரகரத்த |
| த்து | - | முணுமுணுத்து |
| க்க | - | கரகரக்க |
| ஆக | - | சுறுசுறுப்பாக |

என இரட்டைக் கிளவிகள் பின்னொட்டுக்களைப் பெற்று வருகின்றன. பெரும்பாலும் இரட்டைக்கிளவியில் வரக்கூடிய என், ண்ணு எனப் பேச்சுவழக்குப் பின்னொட்டு பெற்று அமைந்துள்ளன.

எ.கா. சலசலன்னு

அடுக்குத் தொடராக வருவன

| | | |
|---|---|---|
| த்து | - | துடிதுடித்து |
| ஓடு | - | கடுகடுப்போடு |
| ப்பு | - | கடுகடுப்பு |
| த்த | - | குறுகுறுத்த |

இவ் அடுக்குத் தொடர்கள் பின்னொட்டின்றியும் அமைவதுண்டு. லூசிதான் உண்மையில் குற்றவாளி போல் மிரளமிரள விழித்துக்கொண்டு முதல் பெஞ்சில் உட்கார்ந்திருந்தாள். (ப. 28)

**எதிரொலிச் சொற்கள்** (Echo Words) :

ஒலிக்குறிப்புச் சொற்கள் இரட்டைக்கிளவி, அடுக்குத் தொடர் என்று இரட்டித்து வரும்போது அச்சொற்கள் எதிரொலிச் சொற்களாகவும் அமைவதுண்டு. இது முதல் அசையிலோ, இரண்டாம் அசையிலோ, மெய்யெழுத்திலோ, உயிரெழுத்திலோ அமையும்.

இது சில நேரங்களில் ஒலியியல் வேறுபாடுகளையும் உருவாக்கும். இவையும் என், ஆக, ண்ணு, போன்ற பின்னொட்டுக்களைப் பெற்றிருக்கும். வட்டார வழக்குப் புதினம் என்பதால் என்று என்பதற்குப் பதிலாக ண்ணு என்ற பேச்சு வழக்குப் பின்னொட்டு இப்புதினத்தில் அடிக்கடி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பிள்ளையாண்டான் அப்படித்தான் பெரியவர் வைத்தியரை அழைப்பார். சட்டுபுட்டுண்ணு அவ கழுத்திலே தாலியெக் கட்ட எவனையாவது பிடிச்சிக்கிட்டு வரணுமே. (ப. 18)

**போலச் செய்தல் (Imitatives) :**

தொடக்க நிலையில் ஒலியைப் போலச் செய்தல் நிகழ்ந்தது. பின் இச்சொற்கள் எதிரொலியாக அமைந்தது. இப்புதினத்தில் இச்சொற்கள் அவ் ஒலியை, ஒலிக்கான சூழலை பிரதிபலிப்பாக அமைகின்றன.

| | | |
|---|---|---|
| களுக்கென்று | - | உடனடியாகச் சிரிப்பது |
| சலசலத்து | - | தண்ணீரின் சலனநிலை |
| பளிச்பளிச் | - | ஒளிர்கின்ற நிலை |

இவை ஒலிக்குறிப்புச் சொற்களின் நிலையில் அப்டியே ஒலியைப் பிரதிபலிக்கின்ற வகையில் போலச் செய்கின்ற பணியை நிகழ்த்துகின்றன.

எதுகை (assonance), மோனை (alliteration) என்பன தமிழிலக்கணத்தில் வரும் கவிதைக்கூறுகள் மோனை என்பது முதலெழுத்து ஒன்றி வருவது. எ.கா. காப்பி கீப்பி ணி கா த கீ. எதுகை என்பது இரண்டாமெழுத்து ஒன்றி வருவது. எ.கா. சட்டுபிட்டு ணி ட் த ட் இவை இரட்டித்து வருவன. எதிரொலித்து வருவன இவற்றிலிருந்து பெரிதும் வேறுபட்டுள்ளன. சில இடங்களில் புதுப்பொருளைத் தருவதாகவும் அமைந்துள்ளன.

எ.கா. கரடுமுரடு

சில, ஒலிகளை மாற்றுவதால் ஒலிக்குறிப்புச் சொற்கள் பொருள் மாற்றத்திற்குள்ளாகின்றன.

சடக்சடக்
சரக்சரக் - ட த ர
சுறுசுறு
துறுதுறு - சு த து

இவ்வாறு தனித்தும், இரட்டித்தும், பிரதிபலித்தும், போலச்செய்தும் எதுகை மோனையாகவும், பொருள் வேறுபாடுற்றும் வருகின்ற ஒலிக்குறிப்புச் சொற்கள் கதைமாந்தரோடு தொடர்புடைய மொழியியல் சூழலை விளக்குவதாக அமைந்துள்ளது. இவ்வகையில் இவ்வட்டார வழக்கின் தனித்துவமும், படைப்பாளியின் விருப்பக்கூறுகளும், தனித்துவமும் புலனாகின்றன.

# சிறுகதைகளில் மனித நேயம்

*ப. தமிழரசி* எம்.ஏ., எம்.ஃபில்., தமிழ்த்துறை ஆய்வாளர்,
கோபி கலை அறிவியல் கல்லூரி, கோபி.

**முன்னுரை :**

அளவில் சிறியதாக இருப்பது சிறுகதை. சிறுகதை என்பது வாழ்க்கையில் நிகழும் ஓர் கற்பனையின் அடிப்படை உணர்ச்சியைக் கருவாகக் கொண்டு பின்னப்படுவதாகும். ஒரு கதையைப் படித்து முடிக்கும்போது அதில் ஒரு முழுமையும், நிறைவும் இருத்தல் புலனாக வேண்டும். ஏர்வாடி இராதாகிருஷ்ணன், சுஜாதா ஆகியோரின் சிறுகதைகளில் காணப்படும் மனித நேயம் பற்றி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**வறுமையின் சூழலில் அன்பு :**

சாவித்திரியின் குடும்பம் வறுமையில் வாடினாலும் குழந்தைச் செல்வத்திற்குப் பஞ்சமில்லை. அவர்கள் குழந்தைகளை வளர்ப்பதற்கே சிரமப்படும் வேளையில் அவளது ஒன்றுவிட்ட அக்கா ஒரு குழந்தையை தத்தெடுத்துக் கொள்ளக் கேட்கிறாள். பணம் தருவதாகவும் கூறுகிறாள். அவளும் தன் கணவனிடம் கேட்டுவிட்டுச் சொல்கிறேன் என்கிறாள். இரவு வீடுதிரும்பும் கணவனிடம் சொல்ல நினைக்கிறாள். ஆனால் குழந்தைகள் தூக்கத்தில் சிணுங்குவதைக் கவனிக்காமல் அவர் மாறி, மாறி முத்தமிட்டு அன்பை வெளிப்படுத்திக் கொண்டிருந்த கணவனைப் பார்ததும் எதுவுமே சொல்ல முடியவில்லை. வறுமை நிலையிலும் குழந்தைகள் மீது பாசம் வைத்திருக்கும் தந்தையின் மன உணர்வை சுஜாதாவின் இக்கதை உணர்த்துகிறது.

குடும்ப வறுமை காரணமாக அபூர்வமான ஆர்.எச். நெகடிவ் வகை இரத்தத்தை பணக்காரர் ஒருவரின் ஆபரேசனுக்காக தானம் செய்கிறாள், கோமதி. அவளே அடிபட்டு இரத்தம் இழந்து உயிருக்குப் போராடும் நிலையில் அவளுக்கு இரத்தம் தர யாரும் முன்வரவில்லை. இதனால் இறக்கிறாள். ஏனென்றால் அவள் ஏழை. பணத்துக்காக மனிதனின் நேயம் விலை பேசப்படுவதை ஏர்வாடி அவர்களின் "ரத்த தானம்" கதை உணர்த்துகிறது.

**இல்வாழ்க்கையின் இடர்பாடுகள் :**

கோவிலுக்குச் சென்ற இடத்தில் சோமசுந்தரம் - ஈஸ்வரி தம்பதிகள் ஒரு பிச்சைக்காரக் கிழவியை அவள் கூறிய சோகக் கதையைக் கேட்டு வீட்டு வேலைக்கு சென்னைக்கு கூட்டிவர நினைக்கிறார்கள். அப்போது சைக்கிளில் வந்த தாடிக்காரன் ஒருவன் அவர்கள் கூறியது பொய் என்றும், அந்தப் பெண் ஒரு ஏமாற்றுக்காரி என்றும் கூறுகிறான். அது உண்மையா? பொய்யா? என்று புரியாத நிலையில் இந்த அம்மா வேலைக்கு வேண்டாம் என்று காரில் புறப்படுகிறார்கள். அந்த அம்மாள் கெஞ்சியபடியே பின் தொடர்ந்து வருகிறாள். கருணைக்கும் சில நிபந்தனைகள் உண்டு என்று கூறிக் கதையை முடிக்கிறார் சுஜாதா.

இந்தியா, ஏதோ ஓர் ஊர்... என்று கதை தொடங்குகிறது. கடை அடைப்பு என்ற பெயரில் ரவுடிகள் கூட்டம் ஒவ்வொரு மாநிலத்திலும் நடத்தும் அட்டகாசத்தை அப்பட்டமாகத் தோலுரிக்கிறது "இளநீர்" என்னும் சிறுகதை. புதுமணத் தம்பதிகள் தங்களது தேனிலவை முடித்துக் கொண்டு திரும்பும் வழியில் ரவுடிக் கும்பலிடம் அகப்படுகிறார்கள். அவர்கள் அவனை எந்த மாநிலம்? என்று கேட்கிறார்கள். நான் இந்தியன்! என்று கூறுகிறான். அந்தக் கும்பல் அவர்களைத் துப்பாக்கியால் சுடுகிறது. எங்கே போயிற்று மனித நேயம்? என்று கேட்கத் தோன்றுகிறது, சுஜாதாவின் "இளநீர்" என்னும் சிறுகதை.

"நகரம்" சிறுகதையில் வள்ளியம்மாள் தனது 12 வயது மகள் பாப்பாத்திக் வைத்தியம் பார்க்க மதுரை பெரியாஸ்பத்திரிக்கு வருகிறாள். மருத்துவமனையில் அவளை அலைக்கழிக்கும் நிலை பரிதாபமாக உள்ளது. இன்றைய அரசு மருத்துவமனைகளின் அவலநிலையைக் காட்டுகிறது. இறுதியில் மனம் நொந்து அவள் மனித சக்தியை வெறுத்து, தெய்வசக்தியை நினைத்து ஊருக்குத் திரும்புகிறாள். "பாப்பாத்திக்குச் சரியாகிப் போனால் வைதீஸ்வரன் கோவிலுக்கு இரண்டு கை நிறையக் காசு காணிக்கையாக அளிக்கிறேன்" என்று வேண்டிக் கொள்கிறாள் எனக் கதையை முடிக்கிறார் சுஜாதா. மனித நேயம் அற்றுப்போனது. காசு கொடுத்துக் கடவுளிடம் மனித நேயம் விலை பேசுகிறது இக்கதை.

"பாவ புண்ணியம்" சிறுகதையில் பதவியில் இருக்கும் போது ஒருவருக்கு ஏற்படும் மரியாதைகளையும், அவன் பதவி இழந்தபோது ஏற்படும் அவமரியாதைகளையும் சுட்டுகிறார். மனிதர்களின் மனங்களில் ஏற்படும்

மாற்றத்தை அழகாகக் கூறியுள்ளார், ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன் அவர்கள்.

"மேல்மட்டங்கள்" என்னும் சிறுகதையில் வரும் கதிரேசன் காண்டீன் காண்டிராக்டர் ஆறுமுகம் பிள்ளை தன் ஊழலை மறைக்க லஞ்சம் கொடுக்க முன்வந்தும், அதனை மறுத்த சுந்தர் நியாயத்தை தொழிலாளர் பிரதிநிதிகளிடம் எடுத்துச் சொல்ல, அதனை மறுத்த அவர்கள்அவனையே சாடுகிறார்கள்.

"மேடையில் சில மங்கல நிகழ்ச்சிகள்" கதையில் வரும் ஆறுமுகம் தனது மகளின் திருமணத்தை அமைச்சர் தலைமையில் நடத்தத் திட்டமிட்டு செலவு செய்கிறார். அமைச்சர் வரக் காலதாமதம் ஏற்படவே ஆறுமுகத்தின் அம்மா மாப்பிள்ளை, பெண்ணை அழைத்து கோவிலில் வைத்துத் திருமணத்தை நடத்துகிறார். தனது பெருமையைத் தம்பட்டம் அடித்துக் கொள்வதற்காக அமைச்சரை அழைத்த ஆறுமுகம் இறுதியில் வருந்துகிறார். இல்வாழ்க்கையின் இடர்பாடுகளை எஸ். இராதாகிருஷ்ணன் இவ்வாறு விளக்குகிறார்.

"இனி அவர்கள் வரமாட்டார்கள்" என்னும் கதையில் வரும் ராமநாதனும், அவரது இளைய மனைவி கல்யாணியும் வயது வித்தியாசம் அதிகமிருந்தாலும்மற்றவர்களின் கேலிகளுக்கு இடையே மனமொத்து வாழ்ந்த அவர்கள் புனிதப் பயணம் சென்ற இடத்தில் நாரமநாதன் உயிர் நீங்க, கல்யாணியும் அவரது உடலை அணைத்துக்கொண்டே கோதாவரி ஆற்றில் உயிர் விட்டதன் மூலம் அவர்களிடையே இருந்த அன்பின் பூரணத்துவத்தை ஏர்வாடி அவர்கள் நிலைநாட்டுகிறார்.

### மனித நேயத்தின் சிறப்பு :

"நியாயங்கள்" சிறுகதையில் வரும் இன்ஸ்பெக்டர் வீரபத்ரையா கைதிகளை அடிப்பதற்குக் கூறும் நியாயமான காரணங்கள் நம்மை ஆச்சரியப்பட வைக்கின்றன. கதையின் நாயகனைப் போலப் பதில் சொல்ல முடியாமல் திணற வைக்கின்றன.

பஸ் நிலையம், இரயில் நிலையம் போன்ற மக்கள் நெரிசல் மிகுந்த இடங்களில் திருடிவிட்டு அதுமட்டுமில்லாமல் சிறுதுகூட மனிதாபிமானமே இல்லாமல் அவர்களது கழுத்தை, காதை என நகைகளுக்காக அறுத்துவிட்டு ஓடிவிடும் திருடர்களுக்குத் தண்டனை தேவை. அந்த வலியைத் திருட்டுக் தைதிகளும் உணரவேண்டும் என்ற கருத்தை இன்ஸ்பெக்டர் வீரபத்ரையா மூலம் உணர்த்துகிறார். நீதிபதி அளிக்கும் தண்டனை போதாது, சிறையில் அவனுக்கு வேளாவேளைக்கு சாப்பாடு, சோப்புக்கட்டி! இப்படி வசதியுடன் அவர்களுக்குக் கொடுக்கும் தண்டனை பத்தாது. எனவேதான், இவனை அடித்து நொறுக்குகிறேன் என்று கைதிகளை அடிப்பதற்கு நியாயமான காரணத்தைக் கூறுகிறார். இங்கு இன்ஸ்பெக்டர் மனதில் உள்ள மனித நேயத்தை சுஜாதா உணர வைக்கிறார்.

"தீர்வு" என்னும் சிறுகதையில் அதிக சப்தத்தை எழுப்பிக் கொண்டு பாடிக்கொண்டு இருக்கும் கல்யாண மண்டபத்தின் லவுட் ஸ்பீக்கர் அக்கம் பக்கத்தினருக்குத் தீராத தலைவலியாக இருந்ததோடு அல்லாமல் குழந்தைகளின் படிப்பையும் கெடுப்பதாக வேதாச்சலம் நினைக்கிறார். எங்கு புகார் கொடுத்தும் செல்லுபடியாகாத நிலையில் மண்டபத்திலேயே தூக்குப்போட்டு தற்கொலை செய்து தீர்வு காண்கிறார். மற்றவர் நலனுக்காத் தன் உயிரையே தந்து பாடம் புகட்டுகிறார், மனித நேயத்தின் சிறப்பை எஸ். இராதாகிருஷ்ணன் கூறியுள்ளார்.

விதவையும், ஊமையுமான அழகம்மாவை அந்த ஊர்ப் பெரியவர்களே விபச்சாரி ஆக்குகிறார்கள். அவளது பெண்ணால் தங்களது மகன்கள் கெட்டுவிடக் கூடும் என்று கருதி அவர்களை ஊரைவிட்டுத் தள்ளி வைக்கிறார்கள். அந்த ஊரிலே வெட்னரி டாக்டராக வேலைபார்க்கும் சுந்தர் அவளையே திருமணம் செய்து மீண்டும் ஊருக்கே திரும்பி வருகிறான். மனித நேயம் சிறிதுமின்றி ஊரை விட்டுத் தள்ளிவைக்கும் பெரிய மனிதர்களிடையே மனித நேயத்தில் உயர்ந்து நிற்கிறார் டாக்டர் சுந்தர். "குற்றவாளிகளே தீர்ப்பு வழங்குகிறார்கள்" என்ற கதையில் ஏர்வாடி அவர்கள் இவ்வாறு மனித நேயத்தை உணர்த்துகிறார்.

"அவள் வித்தியாசமானவள்" சிறுகதையில் வரும் கல்யாணி திருமணத்திற்கு முன்பே நிச்சயிக்கப்பட்ட ராசேந்திரன் இறந்ததை அறிந்து விதவைக்கோலம் பூணுவதைக் கண்டதும் அவள்தாய் மட்டுமல்ல, நாமும் அதிர்ச்சியடைகிறோம். அவள், அவன்மீது வைத்திருந்த காதலின் ஆழத்தையே நமக்கு எஸ். இராதாகிருஷ்ணன் அவர்கள் காட்டுகிறார்கள். கல்யாணி இராணுவ விதவைகளின் நலவாழ்வுக்காகத் தன் வாழ்வை அர்ப்பணித்ததில் அவளது சமுதாய நேயம் புலனாகிறது.

தன் மனைவியின் கற்பைச் சூறையாட நினைத்த பண்ணையாரை வெட்டிச் சாய்த்துவிட்டு

முதலிரவன்றே சிறைக்குச் செல்லும் ஆறுமுகம் பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்ற கருத்துடன் திரும்பி வந்து பண்ணையார் மனைவியை கெடுக்க முயல, அங்கே வந்த ஆறுமுகத்தின் மனைவி, ப்ண்ணையார் மனைவி தனக்கு துணையாக இருந்ததைக் கூறி மன்னிப்புக் கேட்கச் செய்கிறாள்.

தன் கணவனைக் கொன்றவனின் மனைவியையே பாதுகாத்த பண்ணையார் மனைவியின் மனிதநேய பெருந்தன்மையை "ஆறுமுகத்தின் வேறுமுகம்" கதை மூலம் ஏர்வாடி அவர்கள் உணர்த்துகிறார்.

ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன் எழுதிய "மனிதர்கள்" என்னும் சிறுகதையில் வரும் நேசமணி என்னும் கொலைகாரன் தான் கொன்ற சுகுணாவின் காதலன்தான் தற்போது ஃபாதராக உள்ள மரியதாஸ் என்பதை அறியாமல் பாவமன்னிப்பு கேட்கிறான். இதனால் ஃபாதர் மரியதாஸ் (நேசமணியை) கொலை செய்யும் நோக்கத்துடன் வருகிறார். வந்த ஃபாதரை பாவியாக்காமல் தானே தற்கொலை செய்து கொள்வதாகக் கூறி கொலைகாரனின் நேயத்தை உணர்த்துகிறார்.

### வாழ்வியல் மேன்மை :

சாந்திக்கு தான் வேலை செய்யும் வீட்டு முதலாளி ஐயாவும், அம்மாவும் தன்னிடம் காட்டும் அன்பைக் கண்டு பெருமைப்பட்டாள். சாந்தியின் கல்யாணத்திற்காக மாதம் இருபது ரூபாள் அவள் பெயரில் ரெக்கரிங் டெபாசிட் போட்டதைக் கூறியபோது நெகிழ்ந்த சாந்தி அது தன்மேல் வைத்த அன்பால் போடவில்லை. எங்கே சம்பளம் அதிகமாகக் கிடைத்தால் வேறுபக்கம் ஓடிவிடுவாளோ என்று பயந்து அவர்கள் டெபாசிட் செய்ததை தெரிந்துகொண்ட போது மனிதர்களுக்குள் இத்தனை ஈனத்தனமான எண்ணங்களா? என வருந்துவிற அவள், சூதுவாதில்லாமல் நல்ல இடத்திலே சம்பளம் குறைவாக இருந்தாலும் வேலை செய்வதாகக் கூறி தனது தன்மானத்தை நிலைநிறுத்துகிறாள். "சாந்திக்குச் சம்மதமில்லை" என்னும் சிறுகதையில் ஏர்வாடி இராதாகிருஷ்ணன் அவர்கள் வாழ்வியலின் மேன்மையை இவ்வாறு உணர்த்துகிறார்.

இறை உண்டியலில் விழும் பணம் வெடிகளுக்கும், ஆர்ப்பாட்டங்களுக்கும் செலவாகிறது. அதைவிட அப்பணத்தை ஏழை மாணவனின் படிப்பிற்குச் செலவிட்டோம் என்ற மனநிறைவோடு செல்லும் சம்பத் பற்றி "செலவல்ல மூலதனம்" கதையில் எஸ். இராதாகிருஷ்ணன் கூறுகிறார்.

சமூகப்பணி என்ற போர்வையில் தன் குடும்பத்தையும், குழந்தைகளையும் புறக்கணித்து விளம்பரத்துக்கா சேவை செய்வது போல் நடிக்கும் பெண்களையும், அதைத் தைரியமாகத் தட்டிக்கேட்கும் பெண்ணாக வரும் விஜியின் துணிவையும் "சேவையா..... தேவையா...." என்ற கதையில் ஏர்வாடி அவர்கள் உணர்த்துகிறார்.

"இனிவரும் நாள்களில்...." கதையில் கிராமமே தேர்தலை புறக்கணிக்க நினைக்க அதனை தமிழ்நேசன் என்னும் இளைஞன் தேர்தலைப் புறக்கணிப்பது ஜனநாயகத்தைக் கொச்சைப்படுத்துவது ஆகும் என்று கூறி தேர்தலில் பங்குபெற வைக்கிறான். தமிழ்நேசன் போன்ற இளைஞர்களின் தேசப்பற்று மூலம் எஸ். இராதாகிருஷ்ணன் நம்மை வியக்க வைக்கிறார்.

எந்த வேலையும் கேவலமில்லை. உழைப்பே உயர்ந்தது: ... —ணர்ந்த இளைஞனின் கதையைச் சொல்கிறது எஸ். இராதாகிருஷ்ணனின் "வேலை(ளை) வந்துவிட்டது" சிறுகதை.

### முடிவுரை :

எல்லா மனிதர்களிடத்தும் மனித நேயம் என்பது மனதின் ஓர் ஓரத்தில் இருந்து கொண்டேதான் இருக்கும். அது வெளிப்படும் இடமும், வெளிப்படுத்தும் விதமும் வெவ்வேறாக இருக்கும் என்பதையும், மனித நேயம் என்பது நம் மனதில் இல்லாவிட்டால் ஏற்படும் அவல நிலையையும் சுஜாதா, ஏர்வாடி இராதாகிருஷ்ணன் இருவருமே தங்களது படைப்பின் மூலம் உணர்த்தியுள்ளனர்.

### துணை நூல்கள் :


1. பதினெட்டுக் கதைகள் - சுஜாதா
   (குமரிப் பதிப்பகம், நாகபட்டினம், முதற்பதிப்பு : 1984 டிசம்பர்)
2. ஏர்வாடி இராதாகிருஷ்ணன் சிறுகதைகள்
   (சுதா பதிப்பகம், சென்னை. முதற்பதிப்பு : மே 1993)

# புதினம்

*பெ.தேவி,* கௌரவ விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக்கல்லூரி, வாலாஜாபேட்டை - 632 513.

புதினம் இலக்கிய வகை பதினெட்டாம் நூற்றாண்டில் ஆங்கிலத்தில் தோன்றியது. வசன காவியம் என்ற சொற்றொடர் "Prose Epic" என்னும் தொடர் மொழியின் தமிழாக்கமாகும். புதினத்தின் கருத்து வடிவம் ஆங்கிலத்தில் இருந்து பெறப்பட்டது. பதினெட்டாம் நூற்றாண்டில் ஆங்கில நாவலுலகில் சிறந்து விளங்கியவருள் ஒருவரான ஹென்றிஃபீல்டிங் (1707-1754) என்பாரை ஆங்கில வசன காவியத்தின் தந்தை என்றழைப்பர். இவர் தனது படைப்புக்களான "A Comic Epic Poem in Prose" என்றே எழுதுவார் வசனத்தில் எழுதப்படும் வேடிக்கையான காவியம் என்று பொருள், மீதுயர் கருத்தும் (Sublime) விழுமிய நடையுங் கொண்ட பழைய காவியங்களின் வேறுபட்ட தன்மையை புதினம் பெற்றிருக்கும் உண்மையைக் குறிப்பிடவே " வேடிக்கையான காவியம்" என்றார். மேலைநாட்டார் புதினத்தை பண்பு விளக்கப் புதினம் (Character Novel), நிகழ்ச்சிப் புதினம் (Dramatic Novel) என இரண்டாகப்பகுப்பார்.

## தமிழில் புதினத்தின் தோற்றம்

புதினம் என்னும் இவ்வுரைநடை இலக்கியத்தைப் பற்றி தொல்காப்பியர் குறிப்பிடுகையில்,

"பாட்டிடைவைத்த குறிப்பினாலும்
பாவின்றி எழுந்த கிளவியானும்
பொருளோடு புணர்ந்த நகைமொழி யானும்
பொருளோடு புணர்ந்த பொய்ம்மொழியானும்
உரைவகை நடையே நான்கென மொழிப" (தொல் - செய் - 171)

பாவின்று எழுந்த கிளவி என்று ஆசிரியர் குறிப்பது உரைநடைநூல். பொருளொடு புணராப் பொய்ம்மொழி பொய்ப்புதினம் எனவும், பொருளோடு புணர்ந்த நகை மொழி புதினம் என்றும் வழங்கப்பெறுகின்றன.

தமிழில் தனிச் செய்யுட்கள் தொடர்நிலை செய்யுட்களும் கதை பொதிந்தனவாயிருந்தன. இப்படிமுறை வளர்ச்சி சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, கம்பராமாயணம் தோன்றிய காலகட்டத்தில் உச்சநிலை அடைந்தது. பதின்மூன்றாம் நூற்றாண்டளவில் காவியம் கதை சொல்லும் சிறப்பியல்லை இழக்கத் தொடங்கியது என்று எஸ். வையாபுரிப் பிள்ளை குறிபிடுவார்.

காவிய நெறியின் வீழ்ச்சியானது பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் வீழ்ச்சியடைகிறது. இங்கிலாந்தில் கதைப்பாடல்கள் உள்ளூரக் குன்றியமையால் நாவலிலக்கியம் தோன்றுவதற்கு ஏதுவாக அமைந்த என்று, டாக்டர் டில்யார்ட் படிப்போரைப் பிணிக்கவல்ல நெடுங்கதைகள் செய்யுளில் அமையும் நிலை காணப்படவில்லை. அக்காலத்தில் சிறப்புற்று விளங்கிய டிரைடன் என்பார் எழுதிய "Fables" என்ற கதைப்பாடற் தொகுதியும் போப் என்பவர் (1688-1744) யாத்த இலியாது (ELIAD) காவியமும் மொழிப்பெயர்ப்புகள் ஆகும்.

தெய்வங்கள், அரசர்கள், உயர்குடித்தலைவர்கள் ஆகியோரை மையமாகக் கொண்டு காவியங்கள் படைக்கப்பட்டன. ஐரோப்பாவில் ஏற்பட்ட பல்வகைச் சமூக மாற்றங்களில், நிலமானியச் சமூகம் சிதைந்து முதலாளியச் சமூகம் ஏற்பட்டது. அந்நிய இயந்திரங்களின் வருகையால் கல்வி பரவலாயிற்று. கலை இலக்கியங்கள் அனைவரையும் உட்கொண்டு படைக்கப்படும் சூழல் தோன்றியது. காப்பிக் கதை சொல்லும் மரபு சிதைந்து புதினம் தோன்றியது.

ஆங்கிலத்தில் நாவல் என்பதை "Fiction" என்ற பொதுப்பிரிவிற்குள் கற்பனைக் கதைகள் என்று வழங்குகின்றனர். புதினம் மனிதனை மனிதனாக பிரதிபலிக்கச்செய்கிறது. உலக வாழ்வோடு ஒட்டி அமையும் பண்பையும், அடித்தள மக்களின் வாழ்வியல் சூழலை பிரதிபலிக்கும் பிம்பமாகவும், சூழ்ச்சி (அ) சதி பாத்திரங்கள், உரையாடல், காலம், இடம், நடை வெளிப்படையாகவோ, குறிப்பாகவோ காட்டப்பட்டுள்ள வாழ்க்கை தத்துவத்தை மையமாக வைத்து எழுதப்படும் இவற்றை நெடுங்கதை என்றும் குறிப்பிடுவர்.

## தமிழில் முதல் மூன்று புதினம்

மயிலாடுதுறை வேதநாயகம் 1876 இல் பிரதாப முதலியார் சரித்திரத்தில் பெண்மானம், பெண்கல்வி, பெண் தலைமையும் பல கிளைக்கதைகளையும் பழமொழிகளையும் காணமுடிகிறது. இரண்டாவது புதினம் பி.ஆர்.ராஜம் ஐயர் எழுதிய கமலாம்பாள் சரித்திரத்தில் குடும்ப வாழ்க்கையில் உருவாகும் உறவுச் சிக்கலை இயல்பாக குறிப்பிடப்படுகிறது. மூன்றாவது புதினம் மாதவையா எழுதிய பத்மாவதி சரித்திரத்தில் வாழ்வின் ஒவ்வொரு நிகழ்விலும் சடங்கினால் பிணைக்கப்பட்டுள்ளதை சாடுகிறார்.

## துப்பறியும் புதினம்

இருபதாம் நூற்றாண்டின் முதல் முப்பதாண்டுக் காலம் துப்பறியும் படைப்புகள் பெருகின 1902 இல் ச.ம.நடேச சாஸ்திரியின் தீனதயாளுவும் பவானந்தரின் அபூர்வ சாமர்த்தியங்கள் 1909 இல் வெளியிடப்பட்டது. கொலை எப்படி நடந்தது என்பதை மையமாக வைத்து எழுதப்பட்டதாகும். பிரணதார்த்தி ஹெரிசிவா எழுதிய அனுமான்சிங் அல்லது கொலைகளவுத் திறவுகோல், ங.ந. கிருஷ்ணசாமி அய்யர் எழுதிய வேலியின்கூலி அல்லது கள்வர்கவர்ந்த கல்யாணப்பெண் (1912) இல் எழுதப்பட்டது. துப்பறியும் நிபுணரான சுந்தரமய்யரின் அன்பின் வலிமை காணாமற்போன மரண சாசனம் என்ற புதினம், வடுவூர் துரைசாமி ஐயங்கார் சமயச்சஞ்சீவியும் பெண் நாவலாசிரியரில் வை.மு.கோதைநாயகி அம்மாள் தான் எழுதிய ராஜமோகன், கடமையின் எல்லை என துப்பறியும் நாவலை எழுதினார்.

சுப்பிரமணியத்தின் அறுவடை, சட்டிசுட்டது, பொய்த்தேவு போன்ற நாவல்களில் பணம், பதவி, புகழ், இன்பம் இவற்றில் குறிக்கோளாக உடையவர்களின் வாழ்க்கை பொருளற்று போய்விடும் என்றும், ஆர். சண்முகசுந்தரத்தின் நாகம்மாள் என்னும் நாவல் கள்ளம் கபடமில்லாத பெண்ணின் வாழ்வில் குடும்ப உறவுச் சிக்கலை மையமாக வைத்து எழுதியுள்ளார். மனிதர் மண், பொன், பெண்மீது அளவுக்கு அதிகமாக ஆசை வைக்கும் போது எவ்வளவு அலைக்கழிப்புக்கு ஆளாகிறார்கள் என்பதை நடேசன் என்னும் சங்கரராமின் மண்ணாசை நாவலில் காணமுடிகிறது. சுதந்திரத்தின் பயன் எளியவர் வாழ்விலும் மாற்றத்தை தரவேண்டும் என்று முருகன் ஓர் உழவன் என்ற நாவலும் தேசபக்தன், கந்தன், விடுதலை போராட்ட நாவலாகவும், கே.எஸ்.வேங்கடரமணி எழுதியுள்ளார்.

## பெண்ணிய புதினம் :

பெண் உரிமையும், பொதுவுடமை சிந்தனைகளையும் குடும்பசிக்கலை மையமாக வைத்தும், ராஜம் கிருஷ்ணனின் "வேருக்குநீர்", "குறிஞ்சித்தேன்", "அலைவாய்க் கரையில்", "சேற்றில் மனிதர்கள்" போன்ற நாவலின் வழி அறிய முடிகிறது. பெண்ணுக்கு உரிமைக்குரல் கொடுத்த புரட்சிநாவலாக விந்தனின் பாலும் பாவையும் ஆண் பெண் இருவருக்கும் கற்புக்கோட்பாட்டை வலியுறுத்தப்பட்டுள்ளது. திரிபுர சுந்தர என்கிற லட்சுமி எழுதிய பெண் என்னும் நாவலில் இன்றைய பெண்கள் கல்வி கற்று வீட்டிலும், வெளியிலும் அடிமை மனோபாவத்துடன் வாழ்வதையும், சந்திரா என்னும் பெண் புதுமைப் பெண்ணாக வாழமுயலும் போது எதிர் கொள்ளும் போராட்டங்களையும், வைரமூக்குத்தியில் ஆணாதிக்கத் கொண்டவன் கணவன், அவனது குடும்பத்து உறுப்பினர்களால் துன்பம் அடைவதைச் சாடுகிறார்.

## சமூக சிக்கலை மையமாக கொண்ட புதினம் :-

பொருந்தாத திருமணத்தால் தோல்வியும், துயரமும் ஏற்படும் என்பதை மு.வரதராசனார் 1950-இல் தாம் எழுதிய அல்லி, பாவை, கரித்துண்டு, வாடாமலர், கள்ளோகாவியமோ, பெற்றமனம், மண்குடிசை, செந்தாமரை, ஆகிய புதினங்களில் விளக்கியுள்ளார். நெஞ்சில் ஒருமுள், கயமை, மண்குடிசை, அகல் விளக்கு ஆகியன பரிசு பெற்ற நாவல்களாகும்.

## வரலாற்றுப் புதினம்

தில்லி, ஆக்ரா, பஞ்சாப் முதலிய இடங்களில் விடுதலைப் பெற்ற காலகட்டத்தில் நிகழ்வுகளை குறிப்பெடுத்து அலையோசையை வரலாற்று புதினமாக எழுதியுள்ளார். மேலும் பொன்னியின் செல்வன், சிவகாமியின் சபதம் ஆகிய வரலாறு தழுவிய புதினங்களை கல்கி எழுதியுள்ளார். கலைஞர் மு.கருணாநிதியின் உரோமபுரி பாண்டியன், தென்பாண்டிசிங்கம் குறிப்பிடத்தக்க வரலாற்று புதினமாகும்.

## பட்டாளி மக்களின் அவல நிலையும், போராட்டமும் :

நெசவாளர்களின் வாழ்க்கைப் போராட்டத்தை மையமாக்கொண்டு, அந்நிய நாட்டு மூலதனத்தாலும், உள்நாட்டுத் துணி உற்பத்திக்கொள்கையாலும், நசிந்துபோன கைத்தொழிலாலும், பாட்டாளி மக்களின் அவல

வாழ்க்கையை சிதம்பர ரகுநாதனின் பஞ்சும் பசியும், நாவலின் வழி அறிய முடிகிறது.

அகிலனின் கயல்விழி, பெண், சிநேகிதி, நெஞ்சின் அலைகள், வேங்கையின் மைந்தன் (சாகித்திய அகாதமி பரிசு பெற்ற நூலாகும்) பாவை விளக்கு போன்ற நாவல்களை எழுதியுள்ள இவர் ஞானபீட பரிசும் பெற்றுள்ளார். இவரது படைப்புகள் சமுதாயச் சிக்கல்களை எதிர்கொள்வதும் உளவியல், சமூகவியல், நோக்கில் படைக்கப்பட்டுள்ளது. கலைஞனது வாழ்க்கை சமுதாய மேம்பாட்டுக்கு பயன்படவேண்டும் என்று உணர்த்துமாறு ஐம்பதுகளின் இறுதியில் எழுதப்பட்டன.

1970 களில் தி.ஜானகிராமனின் மோகமுள், உயிர்த்தேன், செம்பருத்தி, அமிர்தம், அம்மா வந்தாள், அன்பே ஆரமுதே, மரப்பசு, நளபாகம் போன்ற நாவல்களில் அடிமனத்து ஆழங்களையும், சமூக உறவுச் சிக்கல்களையும் கண்டறிந்து எழுதப்பட்டுள்ளது. தலைமுறை இடைவெளிகளால் முரண்பாடுகள் ஏற்படுவதை ஹப்சியா ஏசுதாசனின் புத்தம் புது வீடு, ஆனாதை, ஆர்.சண்முக சுந்தரத்தின் சட்டி சுட்டது, நாகம்மா, நாஞ்சில் நாடனின் அன்பிலாதனை, ஆ.மாதவனின் மாமிசப்படைப்பு போன்றவற்றை எம்.வீ.வெங்கட்ராமனின் அரும்பு என்ற புதினத்தில் மனிதன் எண்ணங்களால் ஆக்கப்பட்டவன் என்பதையும், நித்திய கன்னி, கேள்வித்தீ ஒரு பெண் போராடுகின்றாள், இருளும் ஒளியும் போன்றவை இவரது படைப்புக்களாகும்.

ல.ச.இராமாமிர்தம் எழுதிய பத்ரா, அபிதாவும் தத்துவ நோக்குடன் எழுதப்பட்ட குறிப்பிடத்தக்க பதினமாகும். நீலபத்மநாபனின் தலைமுறைகள், பள்ளி கொண்டபுரம், மின் உலகம், தேரோடும் வீதி, முதலான புதினங்கள் நனவோடைக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டவையாகும். டி.செல்வராஜ் எழுதிய மலரும் சருகும் வர்க்கப்பார்வை அணுகுமுறையையும், இந்திரா பார்த்தசாரதியின் தந்திரபூமி, மாயமான் வேட்டை, தீவுகள், வெந்து தணிந்தகாடுகள் மற்றும் தந்திரபூமியின் முதலாளித்துவ் ஆளுமையையும், ச.கந்தசாமியின் சாயாவனம் என்ற நாவலில் எளிய மனிதர்களது மரபுசார்ந்த மதிப்பீடுகளையும், போராட்டங்களையும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

## தலித்திய புதினம் :

பொன்னீலனின் கரிசல் முதலாளித்துக் கொடுமைகளையும் ஒருங்கிணைந்த போராட்டங்களையும் அறிய முடிகிறது. ராஜம் கிருஷ்ணனின் அலைவாய்க்கரையில் மீனவத் தொழிலாளர்களது உரிமைப் போராட்டத்தை மையமாகவும், சேற்றில் மனிதர்கள் என்ற புதினம் அடித்தள கூலிவிவசாய மக்களைப் பற்றியும், தொழிலாளரது வாழ்வின் துன்பத்தை "கரிப்புமணிகள்" புதினத்தின் வழி அறியலாம்.

ஜீ. நாகராசன் எழுதிய நாளை மற்றொருநாளே பிறரின் பலவீனத்தைப் பயன்படுத்தி பிழைக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டிகின்ற மனிதனின் கதையாகும். பூமணியின் பிறகு, வெக்கை புதினங்கள் செருப்பு தைக்கும் தொழிலாளியின் வாழ்க்கை மையமாக வைத்து எழுதப்பட்டவையாகும். சிவகாமியின் பழையன கழிதலும், ஆனந்தாயி, பாமாவின் கருக்கு, சங்கதி ஆகிய நடப்பில் வாழ்வியல் உண்மைகளை சித்திரிக்கும் புதினங்கள். இமயம் எழுதிய கோவேறு கமுதைகள், ஆறுமுகம், ஆதிக்க சாதியின் கொடுமையினையும் விபச்சாரத்தில் ஈடுபடும் தாயை நேரில் பார்த்த மகனின் மனநிலை, தாயின் மனநிலையையும் சித்திரிக்கும் புதினமாக அமைகிறது.

நகர வாழ்வியல் சூழலை வாழ்க்கைப் போராட்டங்களை ஜெயகாந்தனின் ஒரு நடிகை நாடகம்பார்க்கிறாள், சில நேரங்களில் சில மனிதர்கள், சுந்தரகாண்டம், முதலியன சமூக உளவியல் கண்ணோட்டத்தில் படைக்கப்பட்ட பதினாமகும். சு.சமுத்திரத்தின் வேரில் பழுத்த பலா கட்டிடத் தொழிலாளரின் வாழ்வையும், முட்டம் இந்து முஸ்லீம் மதக்கலவரத்தைக் கதைக் கருவாக கொண்டும், பாலைப்புறா எயிட்ஸ் நோயாளியின் வாழ்வியல் நிலையைப் பதிவு செய்தும் வெளிவந்துள்ளன.

## தொகுப்புரை

நிகழ்காலச் சூழ்நிலை புதின எழுத்தாளர்களின் படைப்புகள் ஆரவாரம் மிக்க நகரச் சூழ்நிலைகளைப் பின்புலனாகக் கொண்டும், சமுதாயக் கொடுமைகளை சாடியும், தனிமனித உணர்வுகளை முன்னிறுத்தியும், சீர்திருத்தவாதங்களை அறிவுறுத்தியும் எழுதப்பட்டுள்ளன. அவ்எழுத்தாளர்கள் டேவிட், சிந்தையா, வண்ணநிலவன், திலகவதி, பொன்னீலன், முகமதுமீரான், பிரபஞ்சன், ஜெயமோகன், அழகிய பெரியவன், பூமணி, பாமா, சிவகாமி, கோணங்கி, தமிழவன் ஆகியோர் வேதநாயகம் பிள்ளையில் தொடங்கி இன்று வரை காலத்தால் அழியாத சிறந்த தமிழ்ப் புதினங்களை தமிழ் இலக்கிய உலகிற்கு கொணர்ந்துள்ளனர்.

# ஆத்மாவின் ராகங்கள் ஒரு மீள்பார்வை

*கோ. நிர்மலா தேவி* தமிழ் விரிவுரையாளர், கற்பகம் கலை அறிவியல் கல்லூரி,
ஈச்சனாரி (அஞ்சல்) கோவை – 21.

## முன்னுரை

ஆத்மாவின் ராகங்கள் புதினத்தின் ஆசிரியர் நா. பார்த்தசாரதி ஆவார். இவர் ஒரு தமிழ்ப் பேராசிரியர். தமிழ் இலக்கியங்களில் நல்ல தோய்வு உடையவர். இவர் பல நாவல், சிறுகதைகளை எழுதியுள்ளார். பொதுவாகப் பார்த்தால் இவருடைய நாவல், சிறுகதைகளில் பெண் கதாபாத்திரங்களின் காதல் இறுதியில் ஒன்று சேர்வது இல்லை. உதாரணமாக குறிஞ்சி மலர், ஆத்மாவின் ராகங்கள் என்ற இந்த இரண்டு நாவல்களை கூறலாம். இவரது நாவலின் கருத்துக்களில் பெரும்பாலும் சங்க இலக்கியங்களின் தாக்கம் இருக்கும். ஆத்மாவின் ராகங்கள் என்ற நாவலை எடுத்துக் கொண்டால் பெண் கதாபாத்திரங்களில் முதன்மைப் பாத்திரமாக இருக்கக்கூடிய மதுரவல்லி என்கிற மதுரம் உடம்மை விடப் புலன்கள் உயர்ந்தவை, புலன்களை விட மனம் உயர்ந்தது. உடம்பு, புலன்கள் மனம் எல்லாவற்றையும் விட ஆத்மா மிக உணர்ந்தது. மிகப் பரிசுத்தமானது என்ற உண்மையான காதலின் இன்பத்தை உணர்த்துவதாக அமைகிறது. தான் தன் நாட்டின் மீது கொண்டிருந்து பக்தியின் காரணமாகத்தான் அவள் ராஜாராமனை விரும்பத் தொடங்கினாள். பெண் என்பவள் பொதுவாக தன்னை சமுதாயத்திற்கு அர்ப்பணித்தல் என்பது அவ்வளவு எளிதாக நடக்கக்கூடிய காரியம் இல்லை. ஆனால் இந்த நாவலில் மதுரம் தன்னை நாட்டுக்காகவும், நாட்டிற்காக உழைத்த ராஜாராமனுக்காகவும் தன்னை அர்ப்பணிக்கிறாள். எந்தக் காலகட்டத்திற்கும் பொறுந்தும் வண்ணம் நா.பார்த்தசாரதி இந்த நாவலைப் படைத்துள்ளார். சங்க இலக்கிய நூலான மணிமேகலையுலும், மாதவி மகளான மணிமேகலை இன்ப நாட்டத்தினை வெறுத்துப், புத்தபிக்குணியாகத், தன் புவத்திறம் அறுகவென நோற்றுத் தன்னை சமுதாயத்திற்காக அர்ப்பணிக்கிறாள். இதிலிருந்து சங்க காலம் முதல் இக்காலகட்டம் வரை பெண்கள் தன்னை ஊரின் நலத்திற்காகவும், நாட்டின் நன்மைக்காகவும், சமுதாயத்தின் நலனுக்காகவும் தன்னை அர்ப்பணிக்கத் தயங்குவதில்லை என்பதை அறியலாம்.

அறிமுகம் மணிமேகலை
குருகுபெயர் குன்றங் கொன்றோன் அன்னநின்
முருகச் செவ்வி முகந்து, தன் கண்ணால்
பருகாள்....
......

கிரவுஞ்சமாகிய மலையைப் பிளந்து, சூரனைக் கொன்றவன் முருகப்பெருமான். அவனைப் போன்றே சிறந்து விளங்கும் இவளது இளமைச் செவ்வியைத் தன் கண்களால் முகந்து பருகாதவள் ஆயினாள் மணிமேகலை. பசுமையான தொடியணிந்த நங்கையான மணிமேகலை முற்பிறவியில் உதயகுமாரனின் மனைவியாக இருந்ததும், இந்தப் பிறவியிலும் தனது மனம் உதயகுமாரனிடம் செல்ல, தன் தாயின் நிலை அறிந்து அதை தவிர்த்து தனது இளமையைச் சமுதாயத்திற்காக தான் விரும்பியவனை திருமணம் செய்யாமல் இருக்கிறாள். நாட்டின் நலன்கலைப் பேணுகிறாள்.

## பண்புகள்

1. இளமை துறத்தல் 2. விரும்பியவரை திருமணம் செய்யாதிருத்தல் 3. நாட்டு நலம் பேணல் 4. பசிப்பிணி நீக்கல் 4. சிறைக் கோட்டங்களை அறக்கோட்டங்களாக மாற்றுதல்

போன்ற அறச் செயல்களை செய்கிறாள். இவ்வாறாக மணிமேகலை முழுமையாகச் சமுதாயத்தின் நலனுக்காகத் தன்னை அர்ப்பணிக்கிறாள். மணிமேகலையைப் போன்றே ஆத்மாவின் ராகங்கள் நாவலில் மதுரம் தன்னை சமுதாயத்தின் நலனுக்காகவும், ராஜாராமனின் மேல் வைத்திருக்கக் கூடிய உண்மையான காதலுக்காகவும் திருமணம் செய்து கொள்ளாமலேயே தனது இளமையைத் துறக்கிறாள்.

## அறிமுகம் (மதுரம்)

தனபாக்கியம் பெற்ற மகள் மதுரம்.. இப்புதினத்தின் பெண் பாத்திரங்களில் தலைமைப் பாத்திரமாக விளங்குகிறாள். தாசியர் குலத்தில் தோன்றினும், சிலம்பு மாதவியைப் போல் சேற்றில் மலர்ந்த செந்தாமரை ஆவாள்.

மணிமேகலையைப் போல சமுதாயத்திற்காகத் தன்னை தியாகம் செய்பவள். வீணை வாசிப்பில் தேர்ந்தவள். நாட்டுக்குத் தன்னை தியாகம் செய்யும் ஒருவருக்கு அந்தரங்கத் தியாகம் செய்பவளாக இவளது கதாபாத்திரம் அமைகிறது. பட்டுப்புடவை சரசரக்கவும், வளையல்கள் குலுங்கவும் நடந்து வந்த மதுரம், சரஸ்வதியின் மேதமையும், லட்சுமியின் சுமுகத் தன்மையும் சேர்ந்த வசீகர முகத்துடனும், நீராடி முடித்த நீண்ட கூந்தலுடனும், நெற்றியில் திலகமுமாக காட்சியளிப்பாள். அவளுடைய மூக்கிலிருந்த வைர பேஸரியில் சூரிய ஒளிபட்டுத் தோற்றுக் கூசும். அன்னியத்துணிகள் பகிஷ்காரம் செய்யும் நாள் முன்னரே போலீஸில் மாட்டிக் கொள்ளாது இருக்க வேண்டி, ராஜாராமன் மதுரைக் கோவிலுக்குக் சென்று கும்பிடுகிறான். அப்போது அங்கே மதுரத்தைக் காண்கிறான். பின்னர் அன்னியத் துணிகள் பகிஷ்காரம் முடிந்து கைது செய்யப்பட்டு அழைத்துச் செல்லப்படுகிறான். அவ்வாறு அழைத்துச் செல்லுவதை மதுரம் பார்த்து விடுகிறாள். பின்பு ராஜாராமனுக்காக மனம் கலங்குகிறாள்.

## இளமை துறத்தல்

மணிமேகலை எவ்வாறு தனது இளமையைத் துறந்து ஒரு துறவியைப் போல சமுதாயத்திற்காக பாடுபடுகிறாளோ அவளைப் போலவே மதுரத்தின் கதாபாத்திரமும் அமைகிறது. ராஜாராமனைத் திருமணம் செய்து கொள்ளாமல், உலகறியாமல் ஊரறியாமல் அந்தரங்கமாகத் தன்னை தியாகம் செய்கிறாள் மதுரம். மதுரம் ராஜாராமனுக்குத் தன் மனதில் இடம் கொடுத்ததற்குக் காரணம் அவன் தேசத்தின் மேல் வைத்திருக்கும் பக்தி. இவளும் தேசத்தின் விடுதலையை உயிர் மூச்சாகக் கருதினாள். அந்த நேரத்தில் ராஜாராமனைப் பார்த்தவுடன் அவனுடன் இரண்டறக் கலந்தவள் போல மாறிவிடுகிறாள். முதலில் ராஜாராமன் மதுரத்தைத் தவறாகப் புரிந்து கொண்டாலும் பின்பு அவளைப் பற்றி நன்கு புரிந்து கொண்டு தன் மனதில் அவளுக்கென்று ஒரு இடத்தையும் தருகிறான். நமது தேசம் எப்பொழுது விடுதலை அடைகிறதோ அப்பொழுதுதான் நம் திருமணத்தைப் பற்றிப் பேச வேண்டும் என்றும் கூறுகிறான். மதுரமும் அதற்கு ஒப்புக்கொள்கிறாள். திருமணம் செய்து கொள்ளாமலேயே அவனுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் அனைத்தையும் செய்கிறாள். இறுதியில் அவளை விட்டு அனைவரும் சென்றவுடன் அவளது உடல் நிலை மிகவும் மோசமானது. அந்த நிலையைப் பிரகதீஸ்வரர் ராஜாராமனிடம் மனைத உருக்கும் பிரியத்தைப் பார்த்து இருக்கிறேன். உடம்பை உருக்குகிற பிரியத்தைப் பார்த்து இருக்கிறேன். இந்தப் பிரியமோ மனசு, உடம்பு, எலும்பு அத்தனையும் உருகியிருக்கு என்று ஆத்மாவின் ராகங்களின் சிறப்பினை விளக்குகிறார். இறுதியில் புன்முறுவல் பூத்தபடி உறங்குவது போல வாடிய ரோஜா மாலையாகக் கட்டிலில் கிடந்தது மதுரத்தின் உயிரற்ற சரீரம். சரீரத்தோடு அவனை அடைவதற்கு ஆசைப்பட்ட மதுரம் இளமை முதிர்ந்த காலத்தில சரீரத்தை நீத்து ஆத்மாகவே அவனுள் வந்து கலந்து விடுகிறாள். இவ்வாறாக மதும் ராஜாராமனைத் திருமணம் செய்து கொள்ளாமல் அவனை நினைத்தே தனது வாழ்நாளைக் கழித்து, இறுதியில் உடல் நிலை மிகவும் மோசமான நிலையில் தனது உயிரை விடுகிறாள்.

## நாட்டு நலம் பேணல்

ஒருமுறை மதுரை மாநாட்டு வேலைகள் காரணமாக ஐந்தாறுநாட்கள் ராஜாராமன் வாசகசாலைக்கு வரவில்லை. ராஜாராமன் மேலூரில் தனக்குச் சொந்தமான வீடு, நிலம் இவற்றை விற்றுவிட்டு முன்பணத்தை மதுரத்திடம் தருகிறான். அதற்கு மதுரம் நிலம் விற்பதற்கு என்ன அவசரம் வந்தது என்றும் என்னை ஒரு வார்த்தை கேட்டிருந்தால் விட்டிருக்க மாட்டேன் எனறும் அவன்மேல் வைத்திருக்கும் ஆத்மார்த்த அன்பின் காரணமாக அவன்மேல் உரிமையோடு கோபித்துக் கொள்கிறாள். ஆத்மாவோடு ஆத்மாவாகக் கலந்து உறவுகொண்டுவிட்டவளைப்போல இவ்வளவு ஒட்டுதலாக அவளால் எப்படிப் பேச முடிகிறது என்று ராஜாராமன் மனத்துள் வியந்தான். ஆனால் அவள் அப்படிப் பேசியது அவனுக்கு மிகவும் இதமாகத்தான் இருந்தது. மேலும் மதுரம் ராஜாராமனிடம் ஓர் உரிமையைக் கேட்கிறாள். தேசத்துக்காக நீங்க கஷ்டப்படுவதற்கும் தியாகம் செய்வதற்கும் உரிமை இருப்பது போல, உங்களுக்காக கஷ்டப்படுவதற்கும் தியாகம் பண்ணுவதற்கும் தனக்கும் கொஞ்சம் உரிமை வேண்டும் என்கிறாள். ஒரு தியாகி மற்றவர்களும் தியாகியாவதற்கு அனுமதிக்க வேண்டும். இல்லையெனில் தியாகத்தையே அவன் ஒரு சுயநலமாய் பயன்படுத்துவது போல் ஆகிவிடும். நீங்கள் ஊரறிய உலகறிய தேசத்துக்காக தியாகம் செய்யுங்கள். ஆனால் ஊரறியாமல் உலகறியாமல் புகழை எதிர்பார்க்காத ஒரு அந்தரங்கமானத் தியாகத்தை உங்களுக்காக நான் பண்ணுவதை நீங்கள் தடுக்கக் கூடாது. அது நியாயமுமில்லை, தர்மமுமாகாது என்று கூறுகிறாள். ஜமீன் வழக்கில் கைது செய்யப்பட்டுக் கடலூர்ச் சிறையில் இருக்கும் ராஜாராமனுக்கு மதுரம் ஒரு கடிதம் எழுதுகிறாள். நீங்கள் விடுதலையாகி வரும் வரை எல்லாக் காரியங்களையும் நான் கவனித்துக் கொள்கிறேன்.

எந்தக் கவலையும் உங்களுக்கு வேண்டாம். பக்கத்தில் இருக்காவிட்டாலும், மானசீகமாக நானும் உங்களோடு அச்சிறைவாசத்தை அனுபவிப்பதாகவே பாவித்துக் கொள்கிறேன் என்று அதில் குறிப்பிட்டாள். அக்கடிதம் ராஜாராமனுக்கு பாலைவனத்தின் இடையே பயணம் செய்யும்போது பருகக்கிடைத்த நல்ல தண்ணீர் போல இருந்தது. மதுரம் தனது சொத்துக்கள் அனைத்தையும் விற்றுதான் ஆசிரமத்திற்கு உதவி புரிந்தாள். இறுதியில் வீடும் ஜப்திக்கு வந்தபோதும் சிரிப்பு மாறாத முகத்துடன் வாடகை வீட்டில் குடியேறினாள். ராஜாராமனால் தொடங்கப்பட்ட திலகர் வாசகசாலை, அவனுடைய சிறை வாசத்தின் போது மூடிவிடாமலிருக்க தேவையான பொருளுதவிகளைச் செய்து தொடர்ந்து நடத்தச் செய்தாள். நாட்டுக்காக உழைக்கும் முத்திருளப்பன் சிறையிலிருந்தபோது, அவருடைய குடும்பம் கஷ்டப்படாது இருக்க மாதா மாதம் பத்தர் மூலமாகப் பணம் கொடுத்து உதவி செய்தாள். இங்கு மதுரத்தின் நாட்டு நலம் பேண வேண்டும் என்ற அவளது உயர்ந்த குறிக்கோளை நாம் அறியலாம். தான் விரும்பும் ராஜாராமனுக்காக மட்டும் இல்லாமல் நாட்டிற்காக உழைக்கும் ஒவ்வொரு தேசபக்தனுக்கும் உபகாரம் பண்ணும் அவளுடைய மனதின் சிறப்பை இங்கு உணரலாம்.

## விரும்பியவரைத் திருமணம் செய்யாதிருத்தல்

ராஜாராமன், மதுரம் இருவரும் மதுரை மீனாட்சியம்மன் பொற்றாமரைக் குளத்தருகிலும், மீண்டும் அம்மன் சந்நிதியிலும் சந்நித்துக் கொள்கிறார்கள். அந்நியத் துணி மறியலில் கலந்து கொண்டதினால் ராஜாராமனை போலீஸ் கைது செய்து இழுத்துச் செல்கிறார்கள். அப்பொழுது அங்கு வரும் மதுரம் அந்த நிகழ்ச்சியைப் பார்த்து கண்கள் கலங்கிய நிலையில் நிற்கிறாள். மதுரம் தன்னைப் பார்த்து கண்கள் கலங்குவதை ராஜாராமன் கவனித்து விடுகிறான். ராஜாராமன் வேலூர் சிறையில் அடைக்கப்பட்டு இருந்தபோது அவனைப் பரோலில் அழைத்துப் போக ரத்தினவேல் பத்தர் வருகிறார். ஆனால் ராஜாராமன் பரோலில் செல்ல மறுத்து விடுகிறார். அப்பொழுது பத்தர் ராஜாராமனிடம் அந்தப் பெண்ணுக்கு ஏதாவது சொல்ல வேண்டுமா? என்று கேட்கிறார். இந்த செயல்தான் ராஜாராமன் மதுரம் இருவரையும் ஒன்று சேர்க்கும் முதல் தொடராக அமைந்தது எனலாம். இதற்கு முன் நடந்தவற்றில் அவளைப் பற்றிய செயல்களை எல்லாம் அவன் நினைவுப்படுத்திப் பார்க்கிறான். வேலூர் சிறையில் இருந்த ராஜாராமன் விடுதலைப் பெற்று வெளியே வருகிறான். வாசகசாலை விரிவுபடுத்தப்பட்டு மிகுந்த வசதியுடன் இருப்பதைப் பார்க்கிறான். யார் பண உதவி செய்தார்கள் என்று பத்தரிடம் கேட்கிறான். மதுரம்தான் உதவினாள் என்ற செய்தியை அறிகிறான். தவறான வழியில் கிடைத்தப் பணத்தினால் நமக்கு அவள் ஒரு உதவியும் செய்ய வேண்டாம் என்று அவன் ஆரம்பிக்கும் போதே, பத்தர் இடைமறித்து, காந்தியையும், அகிம்சையையும், சத்தியத்தையும் நம்புவோர் இப்படி உதாசீனமாகப் பேசக்கூடாது என்று கூறுகிறார். மேலும் கடவுள் மனிதனைப் படைத்தான் - மனிதனோ சாதிகளைப் படைத்து விட்டான் என்று காந்தியின் சிந்தனையைக் கூறுகிறார். அந்தப் பெண் ஒன்றாம் நம்பர் சந்தில் பிறந்ததைத் தவிர வேறு எந்தத் தவறும் செய்யவில்லை என்ற செய்தியையும் கூறுகிறார். அவளின் விருப்பப்படிதான் வேலூர் சிறைச்சாலைக்கு தான் வந்ததையும், முத்திருளப்பன் குடும்பத்திற்கு உதவியதையும், வாசகசாலை நடத்த உதவி புரிந்ததையும் கூறுகிறார். இந்தச் சூழ்நிலையில் இருந்துதான் ராஜாராமன் மதுரத்தைப் பற்றி யோசிக்கத் தொடங்கினான். ஒன்றாம் நம்பர்ச் சந்தில் பிறந்ததும், தனபாக்கியத்தின் கைகளில் வளர்ந்ததும் வாழ்வதும் அவள் செய்த பிழைகள் இல்லை என்பதை உணர்கிறான். மனிதர்கள் எங்கே இருக்கிறார்கள் என்பது பெரிதில்லை. எப்படி இருக்கிறார்கள் என்பதுதான் பெரிது. சாதியையும், குலத்தையும் வைத்து மட்டும் நான் ஒருத்தியை உதாசீனப்படுத்தினால் காந்தியை மனப்பூர்வமாகப் பின்பற்றுபவனாக இருக்க மாட்டேன் என்று சுயசிந்தனையில் மூழ்கி - பின்பு தெளிவு பெற்று அவளை விரும்ப ஆரம்பிக்கிறான். பின்பு அவள் தனக்காக செய்யும் உதவிகளை மறுக்காமல் ஏற்றுக்கொள்கிறான்.

## நிறைவாக

இவ்வாறாக மணிமேகலை எவ்வாறு தன்னுடைய உடல், பொருள், ஆவி அனைத்தையும் அந்த மக்களின் உய்விற்காக அர்ப்பணித்தாளோ, அதேபோல மதுரம் தன்னுடைய அனைத்து இன்ப துன்பத்தையும் ராஜாராமன் என்ற தனிமனிதனின் மேல் கொண்ட அதன்பிறகு அடையாளமாக அர்பணிக்கிறாள். அவர்கள் இருவருமே தாங்கள் பிறந்த குலத்தின் பெயர் இந்த அர்ப்பணிப்பின் மூலம் மாற்றப்பட வேண்டும் என்று விரும்புகிறார்கள். தங்களின் பெயர் தனக்குப் பின்னரும் வாழவேண்டும் என்ற சிந்தனையைக் கொண்டிருக்கிறார்கள். மணிமேகலையின் பாத்திரப்படைப்புப் போலவே மதுரத்தின் பாத்திர படைப்பும் அமைக்கப்பட்டுள்ளது எனலாம்.

# சசி பாரதியின் "குட்டிக் கதைகள்" ஒரு மதிப்பீடு

திருமதி. *நித்தியா அறவேந்தன்*,பிஷப் ஹீபர் கல்லூரி, திருச்சி

சிறுகதைப் பண்புடையதாகவும், சிறுகதையை விட வடிவில் சிறியனவாகவும் அமைந்துள்ள கதைகள் குட்டிக் கதைகள் (அ) குறுங்கதைகள் எனப்பெறுகின்றன. மித்ர பதிப்பகத்தால் வெளியிடப்பட்டிருக்கும் சசிபாரதி. சு. சபாரத்தினம் அவர்களின் "மனிதர்கள்" எனும் தொகுதியில் இருபத்தொன்பது குட்டிக்கதைகள் (அ) குறுங்கதைகள் இடம் பெற்றுள்ளன. இந்த 29 கதைகளுமே இக்கட்டுரைக்கான களமாக அமைகின்றன. இக்கதைகளில் காணலாகும் சமுதாயப் போக்குகளை இக்கட்டுரை ஆராய்கின்றது.

சு. சபாரத்தினம் அவர்கள் சசிபாரதி எனும் புனைப்பெயர் கொண்டவர். இவர் "ஈழநாடு" நாளேட்டின் வாரமலர் ஆசிரியராகப் பணிபுரிந்தவர். இலங்கைத் தமிழ்ப் பரப்புலகில் எல்லோருக்கும் அறிமுகமான எழுத்தாளர். நூற்றுக்கும் மேற்பட்ட குறுங்கதைகளைப் படைத்தவர். இவற்றில் சில, இலங்கையில் "சசிபாரதி குட்டிக்கதைகள்" எனும் தலைப்பில் வெளிவந்தன. இக்கதைகளே தமிழகத்தில் "மனிதர்" என்ற பெயரில் வெளியிடப் பெற்றுள்ளன. இந்நூலின் ஆங்கில மொழியாக்கம் "Faces" என்ற தலைப்பில் அண்மையில் வெளிவந்துள்ளது.

## குட்டிக் கதைகளுக்கான "கதைக்கரு"

"மனிதர்கள்" தொகுதியில் இடம்பெற்றுள்ள கதைகள் பலவற்றிலும் மனித சமூகத்தின் அவலங்களே கதைக்கருவாகக் கொள்ளப் பெற்றுள்ளன. அவற்றைக் கீழ்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. மக்களின் ஏமாற்றும் மனநிலையைப் படைத்தல். (க.எ. -2, 15, 20, 23, 28).
2. மூட நம்பிக்கையைத் தகர்த்தல் (க.எ - 7, 21, 24, 25, 27)
3. மனித ஒற்றுமையை வலியுறுத்துதல் (க.எ. 6, 11, 22, 29)
4. பேராசையைக் காட்சிப் படுத்துதல் (க.எ. 1, 9, 10, 12)

## 1. மக்களின் ஏமாற்றும் மனநிலையைப் படைத்தல்.

ஏமாற்றுப் பெறுதல், உடல் ஊனம், அனாதைநிலை ஆகியவற்றின் காரணமாக வறுமையுற்றும், பிச்சையெடுத்தும் வாழும் மக்களின் நிலை இக்கதைகளில் கருவாக்கப்பெற்றுள்ளது.

வறுமை, அனாதைநிலை, காரணமாக ஒரு பெண் பிச்சை எடுத்து வாழ்கிறாள். பழைய பத்திரிக்கையை விரித்து உறங்குகிறாள் (க.எ-23). இப்பெண் தன் நிலையை மாற்றிக் கொள்ள எவ்வித முயற்சியும் எடுத்துக் கொண்டதாக ஆசிரியர் படைக்கவில்லை. ஆனால், மற்றொரு கதையில் பிச்சைக்காரி தங்கம் தன் உழைப்பிலும், தன் கூட்டத்தினரின் உதவியாலும் சுயமாகச் சமையல் வேலை செய்து பிழைக்கிறாளர்; உணவு உண்டவர்களோ கடன் சொல்லி ஏமாற்றியதால் கடனாளியாகின்றாள், மீண்டும் பிச்சை எடுக்கிறாள் (க.எ-2). தங்கம் சுயதொழில் செய்து வாழ்வதற்குப் பிச்சையெடுத்தாவது சிலர் உதவுவதையும், வேறு சில மனிதர்களோ அவளை ஏமாற்றும் போக்கையும் இங்கு காணமுடிகின்றது. இதனால்தான் போலும், மற்றொரு கதையில் உடல் ஊனத்தால் ஒருவன் பிச்சையெடுக்கிறான். அவன் மனைவியும், குழந்தைகளும் அவனுடன் சேர்ந்து கொள்கின்றனர். ஐந்தாவதாகப் பிறந்த குழந்தைக்கு இரு கைகளும் இல்லை. வருந்த வேண்டிய தந்தையோ மகிழ்வதாக ஆசிரியர் படைத்துள்ளார் (க.எ- 20). மேலும், கடவுளை மனிதர்கள் ஏமாற்ற நினைப்பதும், (க-எ 15), பத்திரிக்கைகள் மக்களை ஏமாற்றுவதுமாக (க-எ 23) ஆசிரியர் படைத்துள்ளார். இந்த ஏமாற்று மனநிலைகளைக் கீழ்வருமாறு குறிப்பிடலாம்.

**ஏமாற்று மனநிலை**

1. பிச்சைக்காரியை ஏமாற்றும் மனிதன்

அ. ஏமாற்றியவர் தண்டிக்கப்படவில்லை.

ஆ. ஏமாறியவள் தண்டிக்கப்படுதல்.

2. கடவுளை ஏமாற்ற நினைக்கும் மனிதன்

அ. ஏமாற்றியவன் தண்டிக்கப் படுகிறான்.

3. மக்களை ஏமாற்றும் பத்திரிக்கை

அ. ஏமாற்றியவன் தண்டிக்கப் படவில்லை.

இந்த வரைபடம் உணர்த்துவது; கீழ்நிலையில் இருக்கும் மக்களை ஏமாத்துதலில் தண்டனை பெறுபவர் ஏமாறியவர்களே. ஆனால், மேல்நிலையில் இருக்கின்ற கடவுள் போன்றவர்களை ஏமாற்றினால் தண்டனை பெறுபவர் ஏமாற்றியவரே. இதுபோன்ற சமூகச் சூழலினால்தான் வறுமையினால் வாடும் ஒரு தாய் தன் கைக்குழந்தையைக் கொன்று அவளும் தற்கொலை செய்து கொள்வதாக ஆசிரியர் படைத்துவிடுகின்றார். மற்றொரு கதையில் (க-எ -28).

**2. மூடநம்பிக்கையைத் தகர்த்தல் :**

பாவங்களைக் கடவுள் போக்குவதாகக் கருதுவது, உழைக்காமல் கடவுள் பணத்தைத் தருவதாக நினைப்பது, வெறுங் கல்லைத் தெய்வமாக நினைத்துப் பூஜை செய்வது போன்ற மூடநம்பிக்கைகளைத் தகர்ப்பனவாகச் சில கதைகள் படைக்கப்பட்டுள்ளன. விபரம் வருமாறு;

தன் செய்த பாவங்களை, கடவுள் மன்னிப்பார் என்று தன்னை வருத்திக்கொண்டு கோயிலுக்குச் செல்ல கடவுள் அங்கு இல்லாதது கண்டு ஏமாறுதல் (க-எ-7).

மனிதன் தனக்குப் பணம் வேண்டும் என்று இறைவனைக் கேட்க அதை நான் படைக்கவில்லை என்று கூறுகிறான் இறைவன் (க.எ- 24).

மூன்று தலைமுறையாக இரத்தினக்கல் என்று நினைத்து பூசை செய்து வந்தனர். நான்காம் தலைமுறையைச் சேர்ந்த நாகரத்தினம் அப்பொட்டலத்தைப் பிரித்துப் பார்க்க அவை வெறும் கல்லாக இருக்க ஏமாற்றம் அடைதல் (க.எ-27).

இந்த மூன்று வகையான முடிவுகளுமே மேலாட்டமாகப் பார்க்கையில் கடவுள் நம்பிக்கையை மறுப்பனவாக அமைந்துள்ளன. ஆனால்,

"காதர்நாநா வியாபாரம் சிறப்பாக நடக்க அல்லாவை வேண்டிச் செயல்பட அன்று வியாபாரம் நன்றாக நடந்தது" (க.எ -21) என்றும்,

"மனிதன் கடவுளின் அன்பை வேண்டி நிற்க தேவியின் கடிதலினால் கடவுள் பெண்ணைப் படைத்து பூமிக்கு அனுப்பி மனித வேண்டுதலை நிறைவாக்கினார்" (க.எ -25) என்றும் படைத்துள்ளார். எனவே, ஆசிரியருக்குக் கடவுள் நம்பிக்கை உடன்பாடு என்பது தெரிகின்றது. இந்நிலையில் மேற்கண்ட முடிவுகளை ஆசிரியர் அளித்ததற்கான காரணம், சோம்பேறித் தனத்தையும், தவறு செய்வதையும் ஊக்கப்படுத்த விரும்பாததே எனலாம்.

**3. மனித ஒற்றுமையை வலியுறுத்துதல் :**

சமூதாயத்தில் மக்கள் சாதி, மத, இன வேறுபாடுகள் இன்றி ஒற்றுமையுடன் வாழ வலியுறுத்துவதாகச்

சில கதைகள் அமைக்கப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

காகங்கள் தங்களுக்குள் வேறுபாடு காட்டுவதில்லை. ஆனால், மனிதர்களுக்குள் எத்தனை வேற்றுமைகள். காகங்கள் வேறுபாடின்றி இணைந்து கல்யாண விருந்தில் கலந்தன (க.எ - 29).

வேலிகலைத் தாண்டி கிளைபரப்பியும், பயன்தரும் மரத்தின் இயல்பை மனிதன் பின்பற்றுவதில்லை (க.எ -11).

சாதி, மத, இனமற்ற, எல்லா உயிர்களும் ஒன்றென மனிதகுலம் இயங்க விரும்பிய ஸ்ரீமான் அனைவரையும் ஒன்று திரட்டுகிறார். ஆனால், இறுதியில் இறந்து விடுகிறார் (க.எ-6).

எலும்பு துண்டுகளுக்கும் இனத்தைக் கண்டுபிடிக்கும் மனிதர்கள் (க.எ - 26).

ஆசிரியரின் இந்த நிலைப்பாடுகள் ஆறாறிவற்ற பறவைகள் எவ்வித வேறுபாடின்றிக் கூடி வாழ்கின்றன. மரங்கள் எவ்வித வேறுபாடின்றிப் பயன் தருகின்றன. ஆறறிவுடைய மனிதனோ வேறுபாடின்றி வாழ்வதில்லை. வேறுபாடின்றி வாழ வேண்டும் என்று வலியுறுத்துவோரும் இந்த சமூக அமைப்பில் உயிருடன் வாழ முடிவதில்லை என்பனவற்றை உணர்த்துவனவாக அமைந்துள்ளன.

## பேராசையைக் காட்சிப்படுத்துதல் :

அதிகாரத்திற்கு ஆசைப்படுதல், ஆண்வாரிசுக்கு ஆசைப்படுதல் மற்றவர் பொருளுக்கு ஆசைப்படுதல் இவை போன்ற அவல ஆசைகளையும் ஆசிரியர் படைத்துள்ளார்.

அதிகாரத்திற்கு ஆசைப்படும் அரசன் அழிவதாகவும், 5 பெண் குழந்தைகளுக்குப் பின் ஆண் குழந்தையை விரும்பும் மயான காவலாளியின் ஆசை, பக்கத்து வீட்டுக் கோழிகள் இடும் முட்டையை விரும்புபவனின் ஆசை, 5வதாக ஒரு பெண்ணை மணந்து கொள்பவனின் ஆசை ஆகியவற்றை ஆசிரியர் எள்ளல் தொனியுடன் முடித்துவிடுகிறார்; அவர்கள் துன்பப்படுவதாக படைக்கவில்லை.

மேற்கண்ட நான்கு வகை பகுப்புகளுக்குப்படாத வேறு சில கதைக் கருக்களையும் கதைகளாக்கியுள்ளார், அவை, சிலுவைக் காட்சி ஓவியம் முதற்பரிசு பெறுதல் (க.எ-3), நன்மை, தீமை இரண்டும் ஒருவர் நோக்கும் பார்வையில் அமைவது (க.எ-4), விஞ்ஞானிகள் கடவுளை சிருஷ்டிக்க முயலுவது (க.எ-5), கோழி தான் கூவாவிட்டால் பொழுது விடியாது என்று தவறாக நினைப்பது (க.எ-8), கடவுளுக்குப் படைக்கும் பொருள்களைப் பற்றியது (க.எ-13), பெரிய வீட்டைக் கட்டினாலும் சாமியறை சிறிதாக இருப்பது (க.எ-14), சுகம் மிஞ்சினால் தானும் அழிந்து பிறரையும் அழித்தல் (க.எ-16), குழந்தையின் பிடிவாதம் (க.எ-17), மாணவர்களின் உழைப்பின்மை (க.எ-18), நாகரிக மோகம் (க.எ-19), நாளேட்டின் தலைப்புச் செய்தி (க.எ-26) என்பனவாகும்.

## முடிவுரை :

மக்களின் ஏமாற்றும் மனநிலையைப் படைத்தல், மூடநம்பிக்கையைத் தகர்த்தல், மனித ஒற்றுமையை வலியுறுத்துதல், பேராசையைக் காட்சிப் படுத்துதல் ஆகியவற்றிற்கே சு. சபாரத்தினம் அவர்கள் தம் படைப்பில் முதன்மை அளித்திருப்பதை மேற்கண்ட விளக்கங்கள் வழி அறிய முடிகின்றது.

## துணை நின்றவை :

சசிபாரதி சு. சபாரத்தினம், மனிதர்கள், மித்ர வெளியீடு, சென்னை, 20.

# மொழிபெயர்ப்பு நோக்கில் பச்சைஇருளன் சகா பொந்தன்மாடன்

முனைவர் *வே. நெடுஞ்செழியன்* முதுநிலை விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அரசினர் கலைக்கல்லூரி, திருவண்ணாமலை.

**முன்னுரை :**

ஐரோப்பியர் வரவில் தமிழ்மொழியில் தோன்றிய புத்திலக்கிய வகையுள் ஒன்று சிறுகதை. தமிழில் சிறுகதைத் துறையின் தோற்றுவாய் மேலை நாடுகளின் பங்களிப்பாக விளங்குவது போன்றே, தமிழ்ச் சிறுகதைத் துறையின் வளர்ச்சியிலும் அயல்மொழிச் சிறுகதைகள் குறிப்பிடத்தக்க பங்களிப்பைச் செய்திருக்கின்றன. ஆங்கில மொழியும் ஆங்கிலேயர் உருவாக்கிய கல்வி முறையும் இதற்கு இன்றியமையாத ஊடகங்களாக விளங்கின. இதன் விளைவாக, தமிழில் ஒருபுறம் புனைகதைத் துறை தோன்றி வளர்ச்சியுற, மறுபுறம், பிறமொழி மொழிபெயர்ப்புகளும் இடம்பெறலாயின. ஒரு புறம் மொழியாக்கம், மறுபுறம், சிந்தனைத் தாக்கம் என இருமுனைப் போக்கில் தமிழ்ச் சிறுகதைச்சூழல் வளம்பெறலாயிற்று. இத்தகைய வளமான சூழலின் வெளிப்பாடாக மொழிபெயர்ப்புத் தொகுப்பாக வெளிவந்துள்ள நூல் பச்சைஇருளன் சகா பொந்தன்மாடன் ஆகும்.

**தமிழில் புனைகதை மொழிபெயர்ப்புச் சூழல் :**

ஒரு மொழியில் தோன்றும் புனைகதைகளைப் போன்றே. அம்மொழியில் பெயர்க்கப்படும் புனைகதைகளும் படைப்பியல்பு பெற்றவை என்பர்.[1] தமிழில் மொழிபெயர்ப்பு இலக்கியத்திற்கும் இடம்தந்து இலக்கணம் கூறியது தொல்காப்பியம். வால்மீகியின் மொழிபெயர்ப்பாகவன்றி மொழியாக்கமாகச் சிறப்பது கம்பராமாயணம். பாரதி மொழிபெயர்ப்பின் இன்றியமையாமையை எடுத்துரைத்ததோடு தாகூர் கதைகளையும் மொழிபெயர்த்தார். வங்கத்துச் சரத்சந்திரரையும், காண்டேகரையும், பிரேட் சந்தையும் மொழிபெயர்த்துத் தமிழ் இலக்கியப் புலம் செழுமையுற்றது. கா.ஸ்ரீ.ஸ்ரீ த.நா. குமாரசாமி, க.நா.சு., டி.எஸ்., சொக்கலிங்கம், அ. ஜெயராமன், சுந்தர ராமசாமி, ஆகியோர்தம் பணி அவ்வகையில் குறிப்பிடத்தக்கது. பிற மொழிகளிலிருந்து தமிழுக்குப் பெயர்க்கப்பட்ட படைப்புகள் தமிழ்ப் படைப்புலகின் அந்தரங்கத்தைப் பாதித்திருக்கின்றன என்பர்.[2] எப்பொழுதெல்லாம் சிறந்த அயல்மொழிப் படைப்புகள் தமிழுக்கு அறிமுகம் செய்யப் படுகின்றனவோ அப்போதெல்லாம், சுயமான தமிழ்ப் படைப்புகளின் தரமும் மேலொங்குகின்றது என்பார் பிரபஞ்சன்.[3]

**மொழிபெயர்ப்புச் சிறுகதைகள் :**

மொழிபெயர்ப்பு உம்மைத் தொகை, மொழியும் பெயர்ப்பும் என விரியும். ஒரு மொழியில் மூலமொழிக் கதைகளும் மொழிபெயர்ப்புக் கதைகளும் ஒரு சேரத் தொகுக்கப்பட்டுள்ள புதிய போக்கை உணர்த்தும் வகையில் இத்தொடர் ஆளப்பட்டுள்ளது. பொதுவாக, ஒரு மொழியில் அம்மொழியின் படைப்பு தனியேயும், மொழிபெயர்ப்புப் படைப்பு தனியேயும் வெளிவருதல் இயல்பு. ஆயின் மொழிச் சிறுகதைகளும் பெயர்ப்புச் சிறுகதைகளும் ஒருங்கிணைந்து ஒரே தொகுதியாக வெளியிடுதல் எனும் முயற்சியில் அமைந்த நூலாக, பச்சை இருளன் சகா பொந்தன் மாடன் திகழ்கிறது. நிலம், மொழி, இனம், பண்பாடு ஆகியவற்றால் பிரிந்து வேறுபட்டிருக்கும் மனிதர்களை, அவ்வேறுபாடுகளைக் கடந்து சக மனிதர்களாக அடையாளம் காட்டிக் கரம் இணைக்கச் செய்யும் இயல்பான மொழிபெயர்ப்புத் துறையில் புதிய முயற்சியாக, இந்திய மண்ணில் அந்நியமுற்று விளங்கும் மாநில வேறுபாட்டுணர்வுகள் கடந்து, ஒருங்கிணைக்கும் முயற்சியின் விளைவாக - இருமொழி இணைவாக - மொழிபெயர்ப்புத் தொகுப்பு உருவாகியுள்ளமை குறிப்பிடத் தக்கது.

"ஒவ்வொரு மொழி பேசும் இலக்கியத்தையும், அம்மொழி பேசும் மக்களின் கலாச்சாரத்தையும், அடுத்த மொழிகளில் அறிமுகப்படுத்தும் நோக்கத்திற்கு மட்டுமே தன்னை அர்ப்பணித்துக் கொள்ளும் தனித்தனிப் பத்திரிக்கைகள் இந்திய மொழிகள் அனைத்திலும் தொடங்கப்பட வேண்டும்" [4] என்ற சுந்தர ராமசாமியின் கருத்து ஈண்டு ஒப்புநோக்கற்குரியது.

ஏற்கெனவே லத்தீன் அமெரிக்கச் சிறுகதை மொழிபெயர்ப்புகளோடு தமிழில் அதற்கிணையான தரமான சிறுகதைகளையும் இணைத்து "ஸ்பானியச் சிறகுகளும் வீரவாளும்" எனும் தொகுப்பு எழுத்தாளர் பவா. செல்லதுரை, கருணா ஆகியோர் முயற்சியில் 1992-இல் வெளிவந்தது. தற்போது பவா செல்லத்துரையின் மனைவி கே.வி. ஷைலஜாவின் முயற்சியில் இத்தொகுப்பு உருவாகியுள்ளது.

"என் கணவர் பவா, மலையாள, தமிழ் சிறுகதைகள் தொகுப்பு இரண்டு மொழிகளிலும் புத்தகம் கொண்டு வர வேண்டும் என்று சொன்னார். அதை ஏன் நான் செய்யக்கூடாது என்ற ஆர்வம் தான் இந்தப் புத்தகத்தை உருவாக்கத் தூண்டியது" [5].

என்பது தொகுப்பாளர் கூற்று. ஆயின் இம்முயற்சி தமிழில் மட்டுமே நடைபெற்றுள்ளது. மலையாளத்தில் கொண்டு சேர்க்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

## தமிழும் மலையாளமும் :

தமிழகத்தின் மேற்கில் அமைந்துள்ள அண்டை மாநிலம் கேரளம். "மேற்குத் தொடர்ச்சி மலைக்கும் அரபிக் கடலுக்கும் இடையே வடக்கே காசர் கோடுக்கும் தெற்கே பார சாலைக்கும் நடுவில் அமைந்த ஒரு பச்சைப் பசுந்தோட்டம் கேரளம்" என்பர்[6]. தமிழின் சேய்மொழி என்றும் சகோதரி மொழி என்றும் இருவேறுபட்ட பார்வையில் உறவாக நோக்கப்படும் திராவிட மொழிகளாக இரண்டும் உள்ளன. இரண்டும் நாகரிகம், பண்பாட்டு நிலைகளில் சிறிய இடைவெளியோடு பெரிதும் தொடர்புடையன. கி.பி 5 ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் ஆரிய மயமாக்கலின் அடையாளமாக பரசுராமன் கோடாரி வீசிப் பெற்றுத் தந்தது கேரளம் என்ற கதை உருப்பெற்றுள்ளது. அகத்தியர் நிலத்தைச் சமப்படுத்திய தமிழகத்தின் ஆரிய மயமாக்கல் கதை ஒப்பிடற்குரியது. ஆங்கில ஏகாபத்தியத்தின் கீழ் இரண்டுமே ஒரு நாட்டெல்லையில் மாநில அளவில் சுருங்கி, வாழ்வியல் தளத்திலும் பிரச்சனைகளின் களத்திலும் ஒன்றிணைந்துள்ளன. புனைகதைத் துறையில் நடப்பியல், இருப்பியல் முதலான இலக்கியப் போக்குகளின் அடிப்படையில் இரண்டின் படைப்புகளும் ஒப்பீட்டிற்குரியன[7]. நவீனத்துவத்திலும் மலையாளத்தில் தொடக்ககாலப் படைப்புகள் யதார்த்த வகை சார்ந்தவை. தமிழ்ப் படைப்புகள் பலவும் அவ்வகையில் தரத்துடன் வெளிவர மலையாளப் படைப்புகள் உதவியுள்ளன. சுமார் அறுபதாண்டுகளாக மலையாளப் படைப்பாளிகள் தமிழுக்கு வந்துள்ளனர்.[8]

## பச்சை இருளன் சகா பொந்தன் மாடனில் இருமொழிச் சூழல் :

கே.வி. ஷைலஜா மலையாளத்தைத் தாய்மொழியாகக் கொண்டவர். தமிழ் மண்ணில் வாழ்பவர். பொதுவாகவே நாற்றங்கால் வாழ்க்கையாகச் சொந்த மண்ணிலிருந்து பிடுங்கப்பட்டு மற்றொரு மண்ணில் நடப்படுபவர் நினைவில் ஏக்கங்களோடு பால்ய உறவின் வேர்களைத் தேடிப் பயணித்தலும், இருநிலை வாழ்வியலின் இடைவெளிகளில் இலக்கியம் தேடி இயங்குதலும ஆகிய தளங்களில் இயங்குபவர். தற்போது மலையாள மொழியின் இலக்கியங்க்ளைத் தமிழில் மொழிபெயர்த்துக் கொண்டிருக்கிறார். சிதம்பர நினைவுகள் இவருடைய தடம் பதித்த மொழி பெயர்ப்பாகும். அடுத்துக் குறிப்பிடத்தக்கதாக பச்சை இருளன் சகா பொந்தன் மாடன் திகழ்கிறது. இத்தொகுப்பில் வெறும் தொகுப்பாளராக மட்டுமன்றி மொழி பெயர்ப்பாளராகவும் இடம் பெற்றுள்ளார், (மாயலோகம்) கே.வி. ஷைலஜா.

தமிழ் மண்ணின் வாழ்வியலை அடையாளம் காட்டக் கூடிய ஏழு சிறுகதைகளையும் அதற்கு இணையாக மலையாள மண்ணின் நடப்பு வாழ்வின் அடையாளமாக விளங்கும் ஏழு சிறுகதைகளையும் சம தளத்தில் இயங்கும் வண்ணம் தொகுத்து வெளியிட்டுள்ளார். தனியே ஒரு மொழிபெயர்ப்புக் கதை மட்டுமே வெளியாகும்போதோ அல்லது ஒரு படைப்புக் கதை வெளியாகும்போதோ அவற்றை அவ்வவற்றின் தனித்துவத்தோடு வாசித்தலும், உணர்தலும் இயல்பு. ஆயின் மொழியும் பெயர்ப்பும் ஆகிய இருமொழிக் கதைகள் இணைத்து வெளியிடப்படும் போது அங்கே ஒப்பீட்டு நோக்கில் சமமான தரத்தோடு கூடிய தேர்வு வாசகர்களின் எதிர்பார்ப்பாகிறது. எனவே, தனி மொழிபெயர்ப்பாளரை விட, மொழி - பெயர்ப்புத் தொகுப்பாளர் பணி சிக்கலானது. தராசு முள்ளோடு ஒரு கலைஞன் செயற்படும் அறிவியல் ரீதியான வலியாகும். இதனை

உணர்ந்த பிரபஞ்சன் தமிழில் தராசு முள் பிசகாத பண்டமாற்று இது என்கிறார்[9]. தமிழில் தற்போது வந்துகொண்டிருக்கும் கதைகளில் இருந்து சிறந்த கதைகளைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். ஆனால், மலையாளத்தில் நான் படித்த கதைகளில் சிறந்தது என்ற ரீதியில்தான் கதைத் தேர்வு நடந்திருக்கிறது என்று கதைத் தேர்வு குறித்துத் தொகுப்பாசிரியர் கூறியுள்ளார்.[10] ஆயின் மிகுந்த ஜாக்கிரத்தை உணர்வுடன் மலையாளக் கதைகள் தெரிவு செய்யப்பட்டுள்ளன. இவர்கள் நவீன எழுத்தாளர்கள் என்பது ஒன்று. நம் சமகாலத்தவர் என்பது மற்றொன்று. இவர்கள் தங்களுக்கென்று புதுமொழியைப் படைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதுதான் விசேஷம் என்று பாராட்டுகிறார் பிரபஞ்சன். [11]

தலித்தியம், பெண்ணியம், நடுத்தர வர்க்கத்தின் அவநம்பிக்கைக்கும் அச்சத்துக்கும் நம்பிக்கைக்கும் இடையில் ஊசலாட்டமாக இயங்கும் இருப்பியல், நடப்பியல், என, இயங்கும் வெளிகளும், காட்டும் முகங்களும், ஊடாடும் சிக்கல்களும், உணர்த்து முறையின் கலை நுட்பங்களும் பெரிதும் ஒப்புமையுடையவனாக உள்ளன. சிற்சில தனித் தன்மைகளும் மிளிர்கின்றன.

ஒடுக்கப்பட்ட மக்களின் பிரதியாய் தமிழில் பச்சை இருளனும் கேரளத்தில் பொந்தன் மாடனும் இருமொழிச் சமுதாயத்தின் வர்க்க வேறுபாட்டின் நசுங்கிய அடிமை வாழ்வில் அடையாளங்களாக நகர்கிறார்கள். "இருவரின் வெளிகளும் காடு, மலை, மரம், தெருவின் இருண்டாகாரம் என்று சுருங்கிப் போவது, வளைந்த சுரங்களின் சாட்டை நுனி, இருவரின் உடம்பிலும் தழும்பேறியுள்ளது. குளப்பாசிகள் மாதிரி சமூகத்தை மூடுபவர்கள் இவர்கள்" என்று இருவருக்கமான ஒருங்கிணைவைப் பிரபஞ்சன் எடுத்துரைக்கிறார்.[12] பச்சை இருளனின் விடுதலையுணர்வு கள்வனாகும் பட்சத்திலேயே சாத்தியமாக, ஊரையே அச்சத்தில் நடுங்க வைக்கும் அவன் வாழ்க்கை, தனிமையில் இருண்ட குகைகளில்தான் சுருங்கிவிடுகிறது என்பதை, அவனை எலியைப் பிடிப்பது போலச் சுற்றி வளைத்துப் பிடித்த காட்சிப்படிவம் உணர்த்துகிறது. தன் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்த அந்த சீமைத்தம்பிரான் வீட்டில் முற்றத்தை மதிக்க அனுமதிக்கப்படாத பொந்தன் மாடன், மாடி அறையிலிருந்து கூப்பிடும் தம்பிரானின் ஏவலைக் கேட்க, அவருக்கு இணையான உயரத்தில் அறைப் பக்கத்திலுள்ள பனை மரத்தில் தளப்புடன் நின்று கேட்கின்ற அடிமை வாழ்வியல் சூழலுடன் பச்சை இருளனில் பண்டாரியார் முன் அடிமையுற்றிருக்கும் ஊர் அடையாளம் ஒப்பிடத்தக்கது.

"காலச்சுவடுகள்" முறையான தகுதி பெற்றிருந்தும் உயர்சாதிப் பெண்ணுக்கு இடம் கிடைக்க வேண்டுமென்பதால், முதல்தகுதி பெற்ற தலித்தியப் பெண் இட ஒதுக்கீட்டின் தகுதிக்கு மாற்றப்படுவதும், அதை எதிர்த்துப் புகார் மனு கொடுக்கும்போது, அவர்கள் தரும் எச்சரிக்கையில் பயம் துரத்த புகார் மனுவைத் திரும்பப் பெற்றுக் கொண்டு கீழிறங்கும் பெண்ணின் காலடிச் சுவடுகள், அதைத் தட்டிக் கேட்கத் துணிவின்றி அச்சத்தில் போராடும் அவ்வினத்தைச் சேர்ந்த பேராசிரியரின் - அவ்வின மூதாதையர்களின் காலடிச் சுவடுகளின் தொடர்ச்சியாகப் பயணிப்பதைப் பதிவு செய்கிறது. காலடிச் சுவடுகள் எனும் மலையாளக் கதை இன்றைய அவநம்பிக்கை பொருந்திய வாழ்க்கைச் சூழலில் பயம் பின்னால் துரத்த, முன்னால் பார்க்க இயலாது பின்னாலேயே கண் வைத்துக் குறிக்கோள் மறந்து இருப்பியல் நோக்கி இயங்கும் நிலையைப் பதிவு செய்யும் வகையில் பயத்தின் பதிவுகளை ஸ்ரீகுமாரின் "பின்னால் யாரோ ஒருவன்" எனும் மலையாளச் சிறுகதையும், எஸ். ராமகிருஷ்ணனின், "அரூப மிருகம்" எனும் தமிழ்ச் சிறுகதையும் முன்னிறுத்துகின்றன. பொருளாதாரத்தின் பிடியில் சிக்குண்டு அலுவலகத்தில் கையாடல் செய்யும் ஒருவனின் பயத்தில் சிக்குண்ட வாழ்க்கையை மலையாளமும், தனித்து அச்சமுற்று இயங்கும் ஆண் ஒரு பெண்ணின் அன்பில் சார்ந்து வாழ்பவனாக மாறும்போது பயம் கவ்வுவதாகத் தமிழும் பதிவு செய்கின்றன. வாழ்க்கை இறுகத்திலிருந்து தப்பிக்கும் மனோபாவத்தில் பயணிக்கும் ஒருவன் தன் இளவயதில் இழந்த வாழ்க்கையின் பிம்பமாக சமுகத்தை காணும் மயிலிறகு வருடலான பதிவைப் பாவண்ணனின் பயணம் காட்டுகிறது. மாறாக, கழுத்தை இறுக்கும் நடைமுறை வாழ்விலிருந்து தப்பிக்கும் மனோபாவத்தில் பழிவாங்கும் உணர்வோடு தனக்குள்ளேயே முரண்படும் மனப் பிறழ்வை மாயலோகம் காட்டுகிறது.

பெண்ணியக் கதையாக மலையாளத்தில் அமைந்தவை ஒருநாள் வேலை, ஹிக்விக்டா, பாஞ்சாலி ஆகியன. ஒரு பெண் நர்ஸ் பணியில் உள்ள உழைப்புச் சுரண்டலைப் பதிவு செய்வது ஒரு நாள் வேலை. ஒரு பெண்ணை ஐந்து பேருள் ஒருவனாகக் காதலித்துப் போட்டியில் மணந்து வெற்றி பெற்ற ஒருவன் அப்பெண்ணை ஐந்து பேர் உணர்வில் வக்கிரத்தோடு புணர்வதன் வழி அவள் கனவுகளைச் சிதைப்பதும் இயல்பாய், தூக்கத்தில் கலைந்த கூந்தலோடும் குங்குமத்தோடும் எழுந்து அவள் கதவைத் திறக்கும்போது வேறுயாரோ ஒருவன் உள்ளே இருக்கிறானோ என ஆதிக்க உணர்வில் சிதைவதும் ஆகிய பாலியல் சுரண்டல் பாஞ்சாலியில் வெளிப்படுகிறது. மலைவாசிப் பெண்களை வேலைவாங்கித் தருவதாகக் கூறி ஏமாற்றி அழைத்துச்சென்று பாலியல் ரீதியாகச் சுரண்டுதலும் அதிலிருந்து விடுதலை பெறத் துடிக்கும் பெண்ணின் போராட்டமும் அச்சமும் இயலாமையும், பாதர் ஒருவர் துணையோடு மீளலும் ஆகிய தலித் பெண்ணிய வாசிப்பில் ஆண் சார்புக் குரலாக அப்பெண்ணின் மனப்பபோராட்டங்களை முழுமையாய் ஆராய்ந்து அமைந்துள்ள கதை ஹிக்விக்டா. கால்பந்தாட்ட வீரரான பாதர் அவளால் இயலாத நிலையில் உதவிக்குச் சென்று மீட்கிறார்.

தமிழில் பெண்ணியப் பார்வையில் குறிப்பிடத்தக்கவை நுனி மீசையில் திறந்து கொள்ளும் நகைப்பு, சுவாசத்தின் நிறம் பெண்ணிய தளத்தில் அமைந்த ஆரோக்கியமான காதலில் பயணிக்கிறது. பெண் உடலெனும் பார்வை கடந்து அவள் சுவாசத்தை நேசிக்கும் உயிரோடு உயிராகக் கலந்து உறவாடும் உடல் கடந்த ஆன்ம நேசத்திலேயே பெண்ணியம் தன் விளிம்பைத் தொடுதலை எடுத்துக்காட்டுகிறது. பெண் குடும்ப வாழ்வில் பணிச்சுமைகளிலும் அடிமைக் கூன்களிலும் விரைந்த வயோதிகத்தில் நுழைய, ஆண் கருத்த மீசையோடு தன் இளமையின் வீரியத்தை மீசை நுனியில், உதட்டுச் சுழப்பின் நகைப்பில் கர்வம் கொள்வதை, ஓர் ஆணின் தேடலில் நகர்த்துவது நுனி மீசையில் திறந்து கொள்ளும் நகைப்பு. இளவயது தோழியின் தோழமையை மறக்க இயலாது அதற்குள்ளேயே மனவெளி இயங்க அவளைத் தேடிச் செல்கிறான். அவள் முகத்தை கண்ணைக் கண்டு அவன் தேடல் நிறைவுறுகிறது. ஆயின் வயோதிகம் அவன்மீது சிலந்திக் கூடு கட்டியுள்ளமை கண்டு, தனக்கும் அவளுக்குமான வயோதிகம் உணர்த்தும் வாழ்வியல் இடைவெளியில் அவன் நொறுங்குகிறான்.

மின்னணுவியல் இவ்வுலகைச் சோம்பேறியாக்குவதையும், கிரிக்கெட், இளைஞர்களை வாழ்விலிருந்து அப்புறப்படுத்துவதையும் இரு நாடுகளுக்கிடையே பகையுணர்வு வளர்ப்பதையும் பதிவு செய்கிறது சாதனம். மாயலோகமும் தொலைபேசி முதலான மின்னணு உலகம் உட்கார்ந்த இடத்தில் பணத்தைப் புரட்டுவதையும் ஏமாற்றப்படுவதையும் தன்கோணத்தில் காட்டுகிறது. ஜி. முருகனின் "இரண்டாவது மரணம்" நகர நாகரீகத்தில், தனிமையில் இயங்கும் ஒருவன் மறைந்துவிட்ட தன் தந்தையின் இரண்டாம் குடும்பம் ஒன்று நகரத்தில் இருப்பதை அறிவதும், புதிய அவ்வுறவை ஏற்பதுமான புதிய வெளியில் இயங்குகிறது. இருமொழிக் கதைகளை ஒருங்கிணைத்து ஒப்பிட்டு நோக்க, தலித்தியம், பெண்ணியம் எனும் இரு தளங்களிலும் ஆழ்ந்த தேடலை மலையாளத்தில் காணமுடிகிற அளவுக்குத் தமிழ்க் கதைகளில் காணமுடியவில்லை. அதே நேரம் வேர்கள் பிடுங்கப்பட்ட வாழ்க்கைச் சூழலில் நம்பிக்கையோடு நோக்கும் பார்வையிலான, இருப்பின் அர்த்தத்தை ஊட்டுவனவாகத் தமிழ்க் கதைகள் அமைந்திருப்பதைத் தனித்தன்மையாகக் குறிப்பிடலாம்.

## மொழிபெயர்ப்பில் மொழிபெயர்ப்பு :

மொழிபெயர்ப்பை 1. விஞ்ஞான பூர்வமானது 2. ரசனை பூர்வமானது என்று இருவகைப்படுத்தலாம் என்பர். மொழி பெயர்ப்பை மொழிபெயர்ப்பு என்று தெரியும் வகையிலேயே மொழி பெயர்க்க வேண்டும் என்பது விஞ்ஞான பூர்வமாக மொழி பெயர்ப்பு ஆகும். பெயர்ப்பு மொழி வாசகரை உறுத்தாது அம்மொழி படைப்பு போன்று பெயர்க்கப்படுவது ரசனை பூர்வமானது. புனைகதைத் துறைக்கு விஞ்ஞான பூர்வமான மொழி பெயர்ப்பு தேவை என்றும் கூடாது என்றும் இருவித கருத்துக்கள் நிலவுகின்றன.பச்சை இருளன் சகா பொந்தன் மாடனின் மொழிபெயர்ப்பு நடை இவற்றுள் விஞ்ஞான பூர்வமானதாக விளங்குகிறது. "வரிக்குவரி இது மொழிபெயர்ப்பு என்று மண்புழுவாய் முண்டும் மொழியே சிறந்தது என்பது என்.உறுதியான கருத்து" என்று கூறும் பிரபஞ்சன் "முண்டும் முடிச்சுமான மொழியில் முண்டும் முடிச்சுமான கதைகளை அதே அலைவரிசையில் மொழிபெயர்த்து

இருக்கிறார்கள் மொழியாக்கியவர்கள்" என்கிறார்[14] எழுத்தாளர்களின் அறிமுகப் பகுதியில் தமிழ்ப் படைப்பாளிகள் என்றும் மலையாளக்காரர்கள் என்றும் குறிப்பிட்டுள்ளமை ஆசிரியரின் மொழிபெயர்ப்பின் மீதான பார்வைக்குச் சான்று தருகிறது.

## இத்தொகுப்பினால் விளையும் பயன்களாக பிரபஞ்சன் குறிப்பிடுவன

1. இக்கதைகளைப் படிக்கும் வாசகன், தன் தாய்மொழியில் அதே தரமான கதைகளைத் தேடுவான், அவன் தரமும் உயரும்.

2. இக்கதைகளை வாசிக்க நேர்ந்த தமிழ் எழுத்தாளர், இக்கதைகளின் பரப்பைக் கடக்க முயற்சிகளை மேற்கொள்வார் எனில், அவருக்கு ஆத்ம லாபம் கிடைக்கும். அவர் மொழிக்கு உன்னதமாகவும் அமையும்[15].

எனவே, இருமொழிச் சமுதாயப் பண்பாடு வாழ்வியல்புகளையும் சிறுகதைத் துறை பரப்பையும் கொண்டு ஒரு மொழியில் அம்மொழியில் வாசிப்பின் தரத்தையும் எழுத்தின் தரத்தையும் உயர்த்துவதோடு, எழுத்துலகத்தின் பரப்பைக் குறுகிய எல்லையிலிருந்து உலகளாவிய எல்லைக்கு விரித்தல் ஆகிய பயன்களை விளைக்கும் தொகுப்பாக மொழி - பெயர்ப்பு எனும் புதிய பார்வையின் இரண்டாம் சிறுகதையாக இத்தொகுப்பு விளங்குகிறது.

## முடிவுரை :

மொழி பெயர்ப்புத் தொகுப்பு முயற்சியின் புதிய போக்காக மொழி - பெயர்ப்புத் தொகுப்பு முயற்சியாக விளங்கியுள்ள நூல் பச்சை இருளன் சகா பொந்தன் மாடன். இந்நூல் இருமொழி இணைவில் வாசகர், எழுத்தாளர், சமூகப்பார்வை ஆகிய மூன்று தளங்களிலும் ஆரோக்கியமான தரத்தையும் விரிவையும் உருவாக்குவதில் தக்க பங்களிப்பை ஆற்றியுள்ளது.

## குறிப்புகள் :

1. யுவன் சங்கா, முன்னுரை, எம்.எஸ். (மொ.பெ) கிழவனும் கடலும், ப.9.
2. மேற்படி
3. பிரபஞ்சன், நானும் ஆடும் அந்தப் பெண்ணும் (கட்) கே.வி. ஷைலஜா, பச்சை இருளன் சகா பொந்தன் மாடன். ப.7.
4. சுந்தர ராமசாமி, ஜே.ஜே. சில குறிப்புகள், ப.12
5. கே.வி. ஷைலஜா, முன்னுரை. பச்சை இருளன் சகா பொந்தன் மாடன். ப. இ
6. முனைவர் சிற்பி. பாலசுப்பிரமணியன், மலையாளக் கவிதை, ப.1
7. பா. ஆனந்த குமார், இந்திய இலக்கியம், ப.16
8. பிரபஞ்சன், மு.கு. நூ. ப.7
9. மேற்படி, பக் 7-8
10. கே.வி. ஷைலஜா, மு.கு.நூ.ப.இ
11. பிரபஞ்சன், மு.கு. கட். ப.8
12. மேற்படி
13. யுவன் சங்கர், மு.கு.நூ. ப.10
14. பிரபஞ்சன், மு.கு. நூ. பக் 9-10
15. மேற்படி, ப.10

# திருக்குறளில் திராவிட இயக்க உரையாசிரியர்களின் உரைப்போக்கு

*வீ. பால்முருகன்,* முனைவர் பட்ட ஆய்வாளர், முதுகலைத் தமிழாய்வு மையம்,
அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி),சிவகாசி,

காலமாற்றத்தால் கருத்து மாற்றம் ஏற்படுவது தவிர்க்க இயலாதது. மாற்றுக் கருத்துருவாக்கம் அறிஞர்களால் வரவேற்கத் தக்கதும் கூட. கால மாற்றம் ஏற்படுத்திய பகுத்தறிவுச் சிந்தனைகளால், திராவிட இயக்கங்களின் கடவுள் மறுப்பு, வர்ணாசிரம எதிர்ப்பு, மூட நம்பிக்கை, மனித நேயம், உலகியல் பார்வை, என்பன போன்ற கொள்கைகளைக் கொண்டவர்கள் எழுதிய உரைகள் பகுத்தறிவுப்பார்வை உரைகள் ஆகும். திராவிட இயக்கத்தைச் சேர்ந்த புலவர் குழந்தை, கலைஞர் மு. கருணாநிதி, நாவலர் நெடுஞ்செழியன், அரிமதி தென்னகன் போன்ற உரையாசிரியர்கள் திராவிட இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் ஆவார்கள். இவ்வுரையாசிரியர்களின் உரைகளை ஒப்பிட்டு காணும் நோக்கில் இவ்ஆய்வுக் கட்டுரை அமைகிறது.

## கடவுள் வாழ்த்தும் திராவிடச் சிந்தனையும்

உரையாசிரிகள் அனைவரும் கடவுள் வாழ்த்து என்னும் அதிகாரப் பெயரைத் தங்கள் கருத்திற்கு ஏற்ப மாற்றி அமைந்துள்ளமையைக் கீழே காணலாம்.

| | | |
|---|---|---|
| தந்தை பெரியார் | - | பண்புச் சிறப்பு |
| புலவர் குழந்தை | - | இறைநலம் |
| புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் | - | உலகின் தோற்றம் |
| கு.ச. ஆனந்தன் | - | உலகத்தின் மூலம் |
| நாவலர் நெடுஞ்செழியன் | - | அறிவின் சிறப்பு |
| அரிமதி தென்னகன் | - | இறைமைப்பண்புகள் |
| கலைஞர் மு. கருணாநிதி | - | வழிபாடு |

எனத் திராவிட இயக்க உரையாசிரியர்கள் பகுத்தறிவுச் சிறப்புடன் முதல் அதிகாரத்திற்குப் பெயர் சுட்டியுள்ளனர்.

திருக்குறளில் உள்ள "கடவுள் வாழத்து" என்னும் அதிகாரத்தை மட்டும் எடுத்துக் கொண்டு திராவிட இயக்க உரையாசிரியரான தந்தை பெரியார் கடவுள் வாழ்த்து என்னும் தலைப்பு பொருந்தாது. திருக்குறளை முழுமையாக ஆராய்ந்து பார்த்தால் அதனுள் எங்குமே கடவுள் என்னும் சொல்லாட்சியைக் காணோம் என்பது யாவரும் அறிய வேண்டிய உண்மை. ஆனால், மற்றவர்கள் சொல்லலாம், கடவுட் தன்மை கொண்ட இறைவன் என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளாரே என்று கேட்கக் கூடும். இறைவன் என்பது கடவுளுக்கு ஏற்பட்ட சொல் அல்ல, கடவுளுக்குப் பயன்படுத்தப்படுகிறது. நான் அச்சுப் போட்டு விற்ற திருக்குறளைப் பார்த்தால் தெரியும். அதில் கடவுள் வாழ்த்து என்று போடாமல் பண்புச் சிறப்பு என்றுதான் போட்டிருக்கிறேன் ( திருநாவுக்கரசு,க. திருக்குறளும் திராவிடர் இயக்கமும், ப. 128 ) என்று விளக்கம் தருகிறார்.

"கடவுள் வாழ்த்து" என்னும் முதல் அதிகாரத்திற்குத் திராவிட இயக்கச் சிந்தனையைப் புகுத்தியவர் பெரியார். அவரின் நெறியோடு, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், புலவர் குழந்தை, அரிமதி தென்னகன், நாவலர் நெடுஞ்செழியன் கலைஞர் மு.கருணாநிதி போன்ற உரையாசிரியர்களிடம் திராவிட இயக்கச் சிந்தனையை அறிய முடிகின்றது.

## வர்ணாசிரம எதிர்ப்பு

திராவிட இயக்க நெறியாளர்கள், கடவுட் கொள்கையாளர்கள், கடவுட் கொள்கையாளர்களாயினும் வர்ணாசிரம எதிர்ப்பு உணர்வாளர்கள், பரிமேலழகர் என அனைவருமே எண் குணத்தான் யார்? என்பதில் ஒரே

கருத்தினர் அல்லர். இவை கற்பனையும் அன்று, மிகுதிப்படுத்தப்பட்ட செய்தியும் அன்று.

"கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை" (குறள் - 9)

என்னும் குறளுக்குத் "தத்தமக் கேற்ற புலன்களைக் கொள்கையில்லாத பொறிகள் போலப் பயன்படுதல் உடையவல்ல. எண்வகைப்பட்ட குணங்களாவன: தன் வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல். பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பினாற்றலுடைமை" என்பது பரிமேலழகர் உரையாகும். உடல், கண், காது, மூக்கு, வாய் என்னும் ஐம்பொறிகள் இருந்தும் அவைகள் இயங்காவிட்டால் என்ன நிலையோ, அதே நிலைதான் ஈடற்ற ஆற்றலும் பண்பும் கொண்டவனை வணங்கி நடக்காதவனின் நிலையும் ஆகும் என்று கலைஞர் உரை வரைந்துள்ளார்.

குணமும் உருவமும் இல்லாத கடவுளுக்குப் பரிமேலழகர் எண்வகை குணங்களைச் சுட்டுகிறார். ஆனால் கலைஞர் இக்கருத்தை மாற்றி ஈடற்ற ஆற்றலும் பண்பும் கொண்டவனை வணங்கி நடக்காதவனின் நிலை. ஐம்பொறிகள் இயங்காவிட்டால் எப்படியிருக்குமோ அதைப் போன்றிருக்கும். எனவே ஆற்றலும் பண்பும் நிறைந்தவர்களை வணங்கி நடத்தல் ஒவ்வொருவருக்கும் கடனாகும் எனத் தெளிவுபடுத்துகிறார். எண்குணத்தான் என்ற தொடரில் அமைந்துள்ள எண் என்னும் சொல்லுக்கு எண்ணத்தக்க மதிக்கத்தக்க என்று சொல்லப்படுகிறது. போலும் எண் என்றால் எட்டு எனக் கொள்ளப்படவில்லை. எனவே எண்குணந்தான் என்பதற்கு ஈடற்ற ஆற்றலும் பண்பும் கொண்டவன் எனக் கொண்டு அரிய உரை கூறும் கலைஞரின் உரை கடவுள் என்னும் கற்பனையைச் சிந்தையிலிருந்து விளக்கி நற்பண்பாளரையும் அறிஞரையும் தன்னலமற்றவரையும் பின்பற்ற வேண்டும் என்ற உயர்ந்த நோக்கை வற்புறுத்துகிறது. கடவுள் மறுப்பாளர் அல்லது கடவுள் நம்பிக்கையாளர் என்னும் வாதத்தினுள், வள்ளுவரைக் கடவுள் மறுப்பாளர் என்றே தம் உரையில் உரை வகுத்து விட்டார் கலைஞர்.

## உரைமாற்றுச் சிந்தனை

திராவிட இயக்க உரையாசிரிகள் உரை கூறும் பொழுது ஒவ்வொருவரும் தம் திறனுக்கு ஏற்ப மாற்றுச் சிந்தனையை எடுத்து வியம்புகின்றனர்.

"மனத்தது மாசாக மாண்டார் நீர் அடி
மறைந்தொழுகும் மாந்தர் பலர்" (குறள் 278)

இக்குறட்பாவிற்கு "மாசு தம் மனத்தின் கண்ணதாக பிறர்க்குத் தவத்தால் [illegible] உடையராய் நீரில் மூழ்கிக் காட்டித் தாம் அதனில் மறைந்து நடக்கும் மாந்தர் உலகத்து பலர்" என்று உரை காண்கிறார் பரிமேலழகர்.

"குற்றம் மனத்தின் கண் இருக்க பெரியார்களின் தன்மையைப் பூண்டு தீய வழிகளில் மறைந்தொழுகும் மாந்தர் பலர் உலகத்தில் உள்ளனர்" என்கிறார் புலவர் குழந்தை.

"மாண்டார் நீராடி" என்பதற்கு "தவத்தர் போல் நீராடி" என்ற பொருளை அரிமதி தென்னகனார் உரை செய்துள்ளார்.

இவ்வுரைகளினின்றும் மாறுபட்டு "நீருக்குள் மூழ்கியோர் தம்மை மறைத்துக் கொள்வதைப் போல மாண்புடையோர்" என்னும் பெயருக்குள் தம்மை மறைத்துக் கொண்டு மனத்தில் மாசுடன் பலர் இவ்வுலகில் உலவுகின்றனர் என்று புத்துரை காண்கிறார், கலைஞர் மு.கருணாநிதி. இவர் தம் உரை தெளிவாகவும் அழகாகவும் சிறந்தும் காணப்படுகிறது.

## உலகியல் பார்வை

அறிவு சார்ந்த மாறுபட்ட சிந்தனைகளையும் கருத்துக் கோட்பாடுகளையும் உலகியல் நடைமுறைகளையும் உலகியல் நடைமுறையோடு ஒப்பிட்டு உரை காணும் போக்கு திராவிட இயக்க உரையாசிரியர்களிடம் காணமுடிகின்றது.

"வித்தும் இடல் வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிக்சில் மிசைவான் புலம்"

இக்குறட்பாவிற்கு "முன்னே விருந்தினரை உண்ண வைத்து பின் மிக்கதகைத் தான் உண்பவனது விளைநிலத்தில் வித்திடுதல் வேண்டாம் தானே விளையும்" என்கிறார் பரிமேலழகர்.

"வந்த விருந்தினரை உண்பித்து மிகுந்ததைத் தான் உண்பவனது நிலத்தில் அவன் தானே சென்று விதைக்க வேண்டியதில்லை. பலரும் உதவுவர்" என்கிறார் புலவர் குழந்தை.

"விருந்தைப் போற்றி மிகுந்ததை உண்பவரிடத்தில் விதைத்துப் பெற வேண்டியவை தாமே வரும்" என்கிறார் அரிமதி தென்னகன்.

"விதை போடுதலை விரும்பான்." "வித்திடுதல் வேண்டாம் தானே விளையும்" என்ற கருத்துகளைக் காட்டிலும் "விதைத்துப் பெற வேண்டியவை தாமே வரும்" என்ற அரிமதியார் கருத்தும் அவன் தானே சென்று விதைக்க வேண்டியதில்லை. பலரும் உதவுவர்" என்ற புலவர் குழந்தை கருத்தும் சிறந்து காணப்படுகின்றன.

"விருந்தினருக்கு முதலிடம் கொடுக்கும் மனித நேயம் மிக்கவர்தான் விதைக்காவிட்டாலும் அந்நிலத்தில் அவர் மீது அன்பு கொண்ட பிறர் பாடுபட்டு விளைவிப்பதனால் அவர் விதைத்துப் பெற வேண்டியவை பிறர் உதவியால் தாமே வரும்" என்ற கருத்து உலகியலோடு ஒட்டியதாக அமைந்து சிறக்கிறது.

## முடிவுரை

திராவிட இயக்க உரையாசிரிர்களைப் பொறுத்த வரை மற்ற உரையாசிரியர்களினின்றும் முற்றிலும் மாறுபட்டவர்களாகவே உள்ளனர்.

திராவிட இயக்கத்தார் சமூக அக்கறையோடு சமுதாய ஏற்றத் தாழ்வுகளை துன்பங்களை நீக்கி சமூகப் பயன்பாடு கருதி குறளின் சொற்களை மாற்றாமல் குறளைச் சிதைக்காமல் புத்துரை கண்டனர். திராவிட இயக்கத்தாரின் புத்துரைகள் புதிய வடிவில் சர்க்கரை பூச்சு கொண்ட மருந்து போல் எளிய இனிய தன்மையில் அமைந்திருப்பதைக் காணலாம்.

# மாத்தளை சோமுவின் சமூகப் பார்வை

செல்வி. *மு.ச.பூங்குழலி,* எம்.ஏ., எம் ஃ பில் ஆய்வாளர்,
பிசப் ஈபர் கல்லூரி, திருச்சி.

காலக் கண்ணாடியாக விளங்கும் இலக்கியத்தின் பலவகைகளுள், படிப்போரை மிகவும் ஈர்ப்பது புதினம் ஆகும். புதினங்களைத் தனிமனிதச் சார்புடையன, சமூகச் சார்புடையன எனப் பகுக்கலாம். சமூகச் சார்புடைய புதினங்கள் சமூக மாற்றங்களை ஏற்படுத்த வல்லன. மாக்சிம் கார்க்கியின் தாய் புதினம் உருசியப் புரட்சிக்குத் தூண்டுகோலாய் இருந்ததை வரலாறு கூறும். கலை இன்பம் பொழுதுபோக்குக்காக மட்டுமல்ல, வாழ்க்கைப் பயன்பாட்டிற்காகவும் உதவ வேண்டும். அதுதான் சிறந்த கலையின் தன்மையாகும் என முனைவர் மு.வரதராசனார் (நூல் - இலக்கிய மரபு) கூறுவது நோக்கத்தக்கது. மேலும் மக்களின் அன்றாட வாழ்வியலை, வாழ்வுச் சிக்கல்களை, முரண்பாடுகளை, மக்கள் படும் பாடுகளைச் சித்தரிக்கும் புதினங்கள் அனைவருடைய ஆழ்மனதையும் அசைத்துப் பார்க்கும் திறம் கொண்டனவையாய் மிளிரும்.

வழிவழி வந்த நம்பிக்கைகள், நியதிகள், சமூக உணர்வுகள் ஆகியவற்றிற்கும் தனிமனிதருடைய வாழ்க்கை நிலைக்கும் பொருந்தாமை ஏற்படும்பொழுது முரண்பாடு தோன்றுகிறது. அந்த முரண்பாட்டினை, அதாவது மனிதருக்குள்ளும், மனிதனுக்கும், சமூகத்துக்கும் இடையேயும் தோன்றும் மோதலை அடிநிலையாகக் கொண்டதே நாவலிலக்கியம் என்பார் முனைவர் கைலாசபதி தன் தமிழ்நாவல் இலக்கியம் என்ற நூலில். இலங்கையிலிருந்து புலம்பெயர்ந்து ஆசுதிரேலியாவில் வாழும் மாத்தளை சோமுவின் நான்காவது உலகம் புதினத்தின் வழி, அவருடைய சமூகப் பார்வையை இனம்காட்ட முயல்கிறது இக்கட்டுரை.

## மாத்தளை சோமுவின் படைப்பிலக்கியம்:

1983ஆம் ஆண்டு இலங்கையில் ஏற்பட்ட இனக்கலவரத்துக்குப்பின் புலம்பெயர்ந்து வந்தவர் மாத்தளை சோமு. இலங்கைத் தேயிலைத் தோட்டத் தொழிலாளர்கள் படும்பாட்டை அருகிருந்தே கண்டு கண்ணீர் மல்கியவர். உலகில் அமெரிக்க வல்லரசு அனைத்து நாடுகளின் மேலும் ஆளுமை செலுத்த முனைவதை எண்ணி நொந்தவர். வாழ்வே போராட்ட மயம் ன்ற நிலைக்குத் தள்ளப்பட்ட மக்களிடையே வாழ்ந்தவர். அவருடைய எழுத்துகளில் போர்வெறி மீது கொண்ட சினமும் போலிகளை அடையாளம் காட்டும் திண்மையும் வெளிப்படுகின்றன.

எழுத்தாளன் ஒரு நாட்டின் சமுதாய அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த வினாக்களுக்கு அவன் மறுமொழி அளிக்கிறான். தான் வாழ்ந்த கால நிகழ்ச்சிகளில் பங்கு கொள்கிறான் என்று இரெனிவெலாக்கும் ஆசுடின்வாரனும் (நூல் - இலக்கியக் கொள்கை) கூறுவது மிகமிக ஏற்புடையதாக உள்ளது. நான்காவது உலகம் என்ற நூல் மூன்று குறுநாவல்களை உள்ளடக்கியது.

### 1. ஒரு தோட்டத்து நாதசுரம்:

நாதசுரக் கலைஞன் ஆறுமுகத்தின் கலைவாழ்வையும், கலையை மதிக்கத் தெரியாத மனிதர்களின் குறையறிவையும், கலையுணர்வில்லா மகனுடைய பணவேட்கையையும் படம்பிடித்துக் காட்டுகிறது ஒரு தோட்டத்து நாதசுரம்.

### 2. நான்காவது உலகம் :

உலகத்தைச் சமூக உலகம், அரசியல் உலகம் எனப் பகுத்து, அரசியல் உலகை அமெரிக்கா சார்ந்த வல்லரசுகளை முதலாகவும், உருசியா சார்ந்தவைகளை இரண்டாவதாகவும், இவ்விரு நாடுகளையும் சாராதவர்களை மூன்றாவதாகவும் பிரித்துப் பார்க்கிறார் ஆசிரியர். மூன்றாவது உலகங்களின் துன்பப்படுகிற மக்களைத்தான் நான்காவது உலகம் என எண்ணுகிறார். தேயிலைத் தோட்டத் தொழிலாளர்களின் அவல வாழ்வையும், அவர்களைச் சுரண்டியும், வெளிநாட்டு நிறுவனங்கள் தரும் உதவித்தொகைகளைக் கவர்ந்தும் வாழும் கொடியவர்களையும் படம்பிடித்துக் காட்டுகிறார் நான்காவது உலகம் குறுபுதினத்தில். புனைகதை சமுதாய மாற்றத்தை, மாறும்

சமுதாயத்தின் நிலையைக் காட்டும் வரலாற்றுச் சான்றாகவும் விளங்குகிறது எனக் கா.சிவத்தம்பி குறிப்பிடுவது (நூல் : நாவலும் வாழ்க்கையும்) சாலப் பொருத்தமுடையதாக விளங்குகிறது.

### 3. ஆயுதங்கள்:

சிங்களவரின் வல்லாண்மையில் சிக்கிச் சீரழியும் தமிழ்த் தொழிலாளர்களின் நிலையையும், ஆயுதமேந்திப் போராடும் போராளிகளின் விடுதலையுணர்வையும் படம்பிடிக்கிறது இக்குறுபுதினம்.

### நடப்பியல் இலக்கியம்:

சமூக நோக்கோடு படைக்கப்படுவன நடப்பியல் இலக்கியங்கள் எனப்படும். இலக்கியத்தின் ஆற்றல் குறித்தும் வகை குறித்தும் பேசவந்த சோ.முத்துமாணிக்கம், பொழுதுபோக்குவதற்கும், மகிழ்வூட்டுவதற்கும் மட்டுமன்றிப் போராடவும் தூண்டவல்லது இலக்கியம், கற்பனைவாதம், நவீனத்துவம், பின் நவீனத்துவம், இருத்தலியல் வாதம் எனப் பல கோட்பாடுகளின் பிடியில் இலக்கியம் சிக்கிக் கொண்டபோது, இயல்பு நிலையை வார்த்தெடுக்க வல்லது எதார்த்தவாதக் கோட்பாடே என்பது பலருடைய துணிவு. எதார்த்தவாத அல்லது நடப்பியல் புதினங்களே சமுதாயத்தின் நாடியைச் சரியாகப் பிடித்துத் துடிப்பறிந்தன எனக்கூறுவார், தன் இயக்கவியல தமிழ்ப் புதினங்களின் வழி என்ற நூலில்.

### சமுதாயச் சிந்தனைகள்:

மனிதர்கள் இணைந்து வாழ்வது சமுதாயம். ஒவ்வொரு மனிதனும் சமுதாய விலங்கு என்று அழைக்கப்படுகிறான். இந்தச் சமுதாய விலங்கு. சில ஆதிக்க விலங்குகளால் அடிமைப்படுத்தப்படுகிறான். மனிதனை மனிதனே அடிமைப்படுத்தி வாழக்கூடிய கொடுமை இன்றைய சமுதாயத்திலும் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது.

ஏழையென்றும் அடிமையென்றும் / எவனும் இல்லை ஜாதியில்
என்ற குரல்களும் இந்தச் சமுதாயத்தில் எழுந்த வண்ணம் இருக்கின்றன.

இலக்கியப் படைப்பாளியும் ஒரு சமுதாய உறுப்பினரே. எனவே, அவர் தாம் வாழும் சமுதாயத்தில் தாம் காணும், தம்மைப் பாதிக்கும் நிகழ்ச்சிகளைக் கண்டு மனம் கொதிப்புற்றுத் தம் படைப்புகளில் வெளிப்படுத்துவதுடன் தம் சமுதாயத்தில் காணப்படும் சமுதாயப் பிரச்சினைகள், சமுதாயச் சீர்கேடுகள், சமுதாய அவலங்கள், சமுதாய இழிநிலைகள் முதலியன அகல்வதற்குரிய வழிவகைகள் கூறவும் காணலாம். இலக்கியம் என்பது சமுதாய அமைப்பு, குடும்ப உறவு முறை, வகுப்பு முரண்கள் முதலிய பல்வேறு சமுதாயக் கூறுகளைப் பிரதிபலிக்கும் தன்மையுடையது என்கிறார் எம்.சி.ஆல்பிரட். இந்தக் குறுநாவல் தொகுப்பில் உள்ள இடம் பெயர்ந்த மக்களின் சமூக நிலை, அடிமை நிலை, உண்மை ஜனநாயகம் போன்றவை ஆராயப்பட்டுள்ளன.

### சமூகநிலை:

இக்குறுநாவலின் ஆசிரியர் தேயிலைத் தோட்டத் தொழிலாளர்களுடன் வாழ்ந்திருந்தவர். எனவே தான் கண்ட, கேட்ட பழகியுணர்ந்த தேயிலைத் தொழிலாளர்களின் சமூக அவல நிலையைச் சித்தரிக்கிறார். ஒரு தோட்டத்து நாதஸ்வரம் குறுநாவலில், மின்சாரம் அங்கு இல்லை. மின்சாரத்தைப் பொறுத்தவரையில் அவர்கள் தீண்டத்தகாதவர்கள் என்ற வரிகளிலும், ஆனால்.... அதுதான் இந்தச் சமூகத்தின் நிலை தேயிலை உற்பத்தி செய்கிற மக்கள் நல்ல தேயிலை டீ குடித்ததே இல்லை என்ற வரிகளிலும் தோட்டத்து மக்களின் அவல நிலை புலப்படுகிறது. தாங்கள் உற்பத்தி செய்த பொருட்களை உழைப்பாளர்கள் பயன்படுத்த இயலாப் பொருளியல் ஏற்றத்தாழ்வால், அடிமை நிலையால் தம்பொருளுக்கே அந்நியமாகிறார்கள் (Alienation) என்பதை வேதனையுடன் சித்தரிக்கிறார் ஆசிரியர்.

### தொழிலாளர்களின் அடிமை நிலை:

பிஜித் தீவில் கூலித் தொழிலாளர்களாகச் சென்று இன்னல்பட்ட இந்தியர்களின் துயரநிலையை பாரதியால்,

கரும்புத் தோட்டத்திலே - அவர்
கைகளும் கால்களும் சோர்ந்து விழும்படி
வருந்துகின்றனரே...

என்று பாடியுள்ளது போல, கூலித் தொழிலாளர்களின் நிலைக்காகக் கண்ணீர் வடிக்கிறார் மாத்தளை சோமு.

தண்ணீர் அருந்துவதற்குக் கூடத் தனிக்குவளை அமைப்பு நிறுவப்படும் கேவலமான அடிமைத்தனம் படம்பிடித்துக் காட்டப்பட்டுள்ளது.

## விழா முறைகள்:

யாழ்ப்பாணத்தைப் பற்றிச் சொல்லிவரும் ஆசிரியர் அங்கு நிகழும் விழாக்களைப் பற்றியும் சொல்கிறார். சிவன் கோயில் திருவிழா திரும்பவும் நடந்தது. அது இரண்டாவது ஆண்டு. தேர் முடிந்து தீர்த்தம் பூங்காவனம் என்று திருவிழா முடிந்துவிடும். அமைதிக்காக நாம் தேடிச்செல்லும் கோயிலிலும் சண்டை சச்சரவுகள் குடியிருக்கின்றன. கோயிலில் வரக்கூடிய நிர்வாகக் குழு உறுப்பினர் தேர்தலின்போதும் தகராறு வெடிக்கும். கோயிலுக்குள் இருக்கின்ற கடவுள் சிலைகள் உயிராகி வராது என்ற துணிச்சலான நினைவில் இந்த மனிதர்கள் பதவிக்காக பட்டத்துக்காக கோஷ்டி சேர்ந்து வகுக்கிற தந்திரம், ஆடுகின்ற ஆட்டம் அரசியலுக்கு இணையானது. தேவாரம் தெரியாதவர்களும், தொண்டபுராணம் படிக்காதவர்களும் பணம் இருக்கிற ஒரே தகுதியினால் கோயில் நிர்வாகத்தில் புகுந்துவிடும் கொடுமை இன்னும் நடந்து கொண்டுதான் இருக்கிறது.

## மயக்க உலகம்:

இந்த உலகம் ஒரு மயக்க உலகம். ஆடம்பர உலகம். வெளித்தோற்றத்தின் வெண்மையைக் கண்டு மயங்கி உள்ளத்து அழுக்கைப் பார்க்கத் தவறிய உலகம். இந்த நிறம்தான் அவருக்கு மிகப்பெரிய பலம், பாதுகாப்பு. அவர் எப்போதும் சுத்தமாகவும், அழகாகவும் இருப்பார். அவரை எல்லோரும் அழகு உடையில்தான் பார்த்திருக்கின்றார்கள். இவ்வாறு நான்காவது உலகம் குறுநாவலில் சாமியாரின் வெளித்தோற்றத்தைப் பார்த்து மயங்கிய அப்பாவி மக்கள் பலர். இந்த விஞ்ஞான சாதனங்கள் எல்லாம் உண்மையைச் சொல்வதற்குப் பதிலாக எவருக்கோ எதற்கோ அடிமையாகி பொய்யை நிஜமாக்கவே உதவுகின்றன. ஊடகங்களின் உளறல்களை நம்பி ஏமாறக்கூடிய மக்கள் கூட்டம் இன்னும் ஒருபுறம் இருக்கத்தான் செய்கிறது.

ரேடியோ சிலோன் மயில்வாகனத்தின் சிம்மக்குரல் கொழும்பிலிருந்து கிளம்பி, அந்த லயத்து மக்களிடையே முழங்கியது. சாமிக்கண்ணுவின் முகத்தில் ஒரு பரவசம் பெருமிதமாய் பரவியிருந்தது. அந்த தோட்டத்திலேயே முதல் ரேடியோவை இல்லை முதன்முதல் ரேடியோவை அவன்தான் வாங்கியிருக்கிறான். அதற்காக வட்டிபாயிடம் அசலை விழுங்கும் வட்டியுடன் கூடிய கடன்பட்டிருந்தது கூட மறந்து போயிற்று.

தன்னிடம் வசதிவாய்ப்புகள் குறைவாக இருப்பினும் கடன் வாங்கியாவது ஆடம்பரமாக வாழவேண்டும் என்ற ஒரு கேளிக்கை எண்ணம் மக்கள் மனதில் நிலவுகிறது. மேலும் மக்களின் சிந்தனையைத் திருடிடும் சாதனமாக இந்தத் தொலைக்காட்சி அமைந்துள்ளது. டி.வி. யாரை யோசிக்கவுடுது? ட.வி. பார்க்கிற நேரம் எல்லோரும் கண்ணையும் காதையும் பறிகுடுக்கிறதோ.. மூளையையும் பறிகுடுத்திடுறாங்க இன்றைய மக்களின் பல மயக்க நிலைகளை இவ்வாறு மாத்தளை சோமு எடுத்துரைத்துள்ளார். உலகளாவிய அளவில் இன்றைய தொலைக்காட்சி, கணினி, தொலைத்தொடர், பலகணி, மின் அஞ்சல் எல்லாம் வல்லாதிக்கம் படைத்த ஒரு அரசுக்கோ, தனி மனித நிறுவனத்துக்கோ, வர்த்தக நிறுவனத்துக்கோ அடிமையாகி அவர்களின் பொய்களை ஒரு பக்கச் சார்பான தகவல்களை மக்கள் முன்னே கொண்டு செல்கின்றன.

## பிறந்த மண் நினைவு:

சாமிக்கண்ணு வானொலியில் அலைவரிசையைத் தேடிக் கொண்டிருந்தபோது சென்னை வானொலி நிலையம் பிடிபட்டது. அப்போது தன் தாய்மொழியைக் கேட்டபோது தன் தாயக நினைவிற்குத் திரும்புகிறாள் ஒரு கிழவி. அவள் கண்ணுக்குள் திருச்சி மாவட்டம் துறையூர் தாலுக்காவில் இருக்கும் கிராமத்தின் நிழல்கள் விழுந்தன. புருவத்தின் முடிகள் நரைத்துப் போயிருந்தாலும், தாயக ஆசை அவளுக்கு நரைக்கவில்லை. சொக்கத்தில் சென்று வாசம் செய்தாலும், தன் பிறந்த மண்ணில் இருக்கும் சுகம் அங்கு வராது. வாழ்க்கையை வாழ்ந்து முடித்த ஒரு கிழவியின் பிறந்த மண் நினைவு இங்கு சான்றானது.

## புலம் பெயர்வு:

பிறந்த இடத்தில் இருந்தால் மண் பாசமும், உரிமைச் சுகமும் அதிகம் கிடைக்கும். அங்கு உரிமைகள் சுரண்டப்படும்போது, மானம் பறிக்கப்படும்போது புலம்பெயர்ந்து வேறு எங்காவது சென்று பிழைக்கலாமா என்ற எண்ணம் உருவாகுவது இயற்கையே. பட்டினியா கெடந்தாலும் மானத்தோட இருக்கலாம் என்ற வரிகளில் மானம் உயிரினும் பெரிது என்ற அவர்களின் எண்ணமும், தமிழனா பொறந்ததே தப்பு... என்ற வரிகளின் மூலம் உரிமை ஒடுக்கத்தால் ஏற்பட்ட சோகமும் புலப்படுகிறது. விதியே விதியே தமிழ்ச் சாதியை என்செய நினைத்தாய் எனப் பாரதியின் ஏக்கக் குரலை மாத்தளை சோமு எதிரொலிக்கிறார்.

## போராட்ட குணம்:

பொறுமைக்கு உதாரணமாகச் சொல்லப்படும் பூமிக்குள் தான் பூகம்பமும் ஒளிந்திருக்கிறது. அழுத்தப்படும் நீருக்குத்தான் வேகம் அதிகம். அதேபோல, அடக்கப்படும் மக்களுள் எதிர்க்கும் வேகம் அதிகமாக இருக்கும். போராட்டக்குணம் மிகுதியாக இருக்கும். தலைகீழாக விழுந்த வண்டு தலைநிமிர்ந்தா எறும்பெல்லாம் ஓடிரும். தான் எதுவுமே செய்யாதபோது, தன்னால் முடியாத நேரம் எறும்பெல்லாம் சேர்ந்து செஞ்ச சித்ரவதைக்குப் பழிக்குப் பழி வாங்குமாம். எறும்புகளைத் தேடிக் கடிக்குமாம். சாதாரண வண்டே தான் வாழறதுக்குப் போராடுது. மனுசன் ஏன் போராட்டம் செய்யக் கூடாது...? என்ற போராட்டக்குணம் அனல் தெறிக்க எழுந்திருப்பதை உணர்த்தியிருக்கிறார் ஆசிரியர். இவ்வாறு ஏற்பட்ட இனக்கலவரங்களைத் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டியதன் மூலம், பண்டைய கால இனக்கலவர நிகழ்வுகளை நன்கு அறிய முடிகிறது.

## போலிச் சேவைகளைச் சாடல்:

வெளிநாடுகளில் இருந்து வரும் உதவித் தொகைகளைத் தன்னலத்துக்காகப் பயன்படுத்துவோரை எலிசபெத் என்ற கதைமாந்தர் மூலம் சாடுகிறார் ஆசிரியர். இப்படி, சமூகசேவை என்கிறார்களே. இந்தப் போட்டோக்கள், இந்த வீடியோ பிலிம் யாருக்காக? இதன் செலவு எவர் தலையில்? நாங்கள் சிட்னியில் வீதிகளில் உண்டியல் குலுக்கிக் கஷ்டப்பட்டுச் சேர்த்து அனுப்புகிற பணத்தில்...

## முடிவுரை:

மாத்தளை சோமு தான் கண்டு, கேட்டு, பட்டு உணர்ந்தவைகளைப் படமாக்கியுள்ளதால், சமூகத்தில் அவலநிலையைச் சுட்டெரிக்கும் கருவியாக அவருடைய படைப்புகள் திகழ்கின்றன. படிப்பவரைச் சிந்திக்கத் தூண்டுவதும் செயலாற்ற முடுக்கிவிடுவதும் ஒரு நல்ல படைப்பின் வேலையாகும். எழுத்தாளன் ஒரு சமூகப் போராளி. அவ்வகையில் மாத்தளை சோமுவும் கனன்று கொண்டிருக்கும் நெருப்பாக விளங்குகிறார். இந்த நெருப்பு எல்லா உள்ளங்களிலும் பற்றும்போது, விடுதலையுணர்வு வெடித்துக் கிளம்பும், உழைப்பவர் விடுதலையும் உறுதியாகும் எனக் கருதலாம்.

## துணை நூல்கள்:

1. க. கைலாசபதி, தமிழ் நாவல் இலக்கியம்.
2. எம்.சி.ஆல்பிரட்,The relationship of Literature & Society.
3. இரெனிவெலாக், ஆஃச்டின்வாரன் - இலக்கியக் கொள்கை.
4. கா.சிவத்தம்பி, நாவலும் வாழ்க்கையும்.
5. மாத்தளை சோமு - நான்காவது உலகம்.
6. பழனி. சோ.முத்துமாணிக்கம், இயக்கவியல் - தமிழ்ப் புதினங்களின் வழி.
7. முனைவர். மு.வரதராசன் - இலக்கிய மரபு.

# அமைப்பியல் பார்வையில் நாவல்கள்

*ரோமா.பேச்சிமுத்து* முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ் உயராய்வு மையம்,
யாதவர் கல்லூரி, மதுரை - 14.

தமிழ் நாவல்களில் கதைப் பின்னல் , கதைக்கரு அல்லது உரிப்பொருள், பாத்திரப்படைப்பு, பின்னணி, மொழிநடை , நோக்கு நிலை , ஆகியவற்றின் வடிவமும் கட்டமைப்பும் அமைந்த ஒரு அமைப்பே அமைப்பியல் எனப்படும். நாவலில் நிகழ்கின்ற நிகழ்வுகளை ஒரு சேரத்தொகுத்து உணர்த்துவதே அமைப்பியல் எனப்படும். நாவல்களின் அமைப்பியலின் நோக்கினையும் போக்கினையும் ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## அமைப்பியலும் அதன் விளக்கமும்

அமைப்பியல் இலக்கியத்தின் வடிவத்தையும் கட்டமைப்பையும் இலக்கியக் கோட்பாட்டையும் பற்றியதாகும். தமிழவன் தமிழில் "ஸ்ட்ரக்சுரலிசம்" என்னும் திறனாய்வு நூலினை எழுதியுள்ளார். (தமிழவன், ஸ்ட்ரக்சுரலிசம், ப.7) அந்நூலினுள் அவர் "அமைப்பியல்" என்னும் சொல்லிற்கு "இலக்கியத்தில் இடம் பெறுகின்ற சொற்களும் அச்சொற்களின் பொருள்களுக்கும் இடையிலான பொருள் அடிப்படையிலான உறவினைக் குறிப்பதாகும் என வரைவிலக்கணம் தந்துள்ளார். அமைப்பியல் கோட்பாட்டினை உருவாக்கியவர் "லெவிஸ்ராஸ்" என்னும் மேலை இலக்கியத் திறனாய்வாளர் ஆவார். அவரே அமைப்பியல் கோட்பாட்டின் தந்தை எனக் கருதப்படுகின்றார். அவரைத் தொடர்ந்து ஃபெட்டினண்ட்-டி-சசூர் என்பவர் அமைப்பியல் கோட்பாட்டினை மிகவும் தெளிவாக வரையறுத்துக் கூறியுள்ளார்.

அவர் அமைப்பியலுக்கு "மொழி" பலகுறிகளைக் கொண்டது அந்த மொழிக்குறிக்கு இரண்டு தளங்கள் உள்ளன. 1. குறிப்பான் என்னும் ஒலி வடிவத்தளம். 2 குறிப்பீடு என்னும் அர்த்தத்தளம்" (ந.முத்துமோகன், லெவிஸ்ட்ராஸின் அமைப்பியல் கொள்கை-ஒரு தத்துவவிளக்கம்", பக்.1-3) என விளக்கம் தந்துள்ளார்.

"அமைப்பியல்" என்பது இலக்கியத்தை அதன் கட்டமைப்பு முறையில் ஆராய்வதாகும். மோண்ட்டில் ஆங்கில இலக்கியத்தில் கோல்ரிட்ஜ் (S.T.Coleridge) என்பவரின் இலக்கியச் சிந்தனைகளில் அமைப்பியலின் மூல வடிவினைக் காண்கின்றோம். அவருடைய ஒருமைப்பாட்டுக் கோட்பாடு பகுதிகளில் ஒழுங்கான ஒருங்கிணைப்பே முழுமையைத் தோற்றுவிக்கின்றது (concept of organic unity) என விளக்கியுள்ளது. அத்துடன் சிறுகதைகளில் கருத்து ஒருமைப்பாட்டின் இன்றியமையாமையை உணர்த்திய "எட்கார் ஆலன்போ" இலக்கியத்தை அமைப்பியல் நோக்கில் சிந்தித்தவராகக் கருதலாம். இந்த அணுகுமுறையை உருவாக்கி வளர்த்தவராக டி.எஸ்.எலியட் என்பவரே கருதப்படுகின்றார். எஸ்ரா பௌண்ட், ஹ்யூம் ஆகியோர் வெளியிட்ட இலக்கியச் சிந்தனைகளின் செல்வாக்கினால் இலக்கியத்தை அரசியல், சமூக, சமய, ஒழுக்கவியற்கருத்துக்களின் வெளியீடாகக் கருதுவதை விட முதலில் இலக்கியமாகக் கருதிப் பார்க்க வேண்டும் என்று அவர் வலியுறுத்தினார். எனவே இலக்கியத்தின் நயமும் இலக்கியச் சுவையும் காணும் ஈடுபாடுமிகுந்து அமைப்பியல் அணுகுமுறையில் ஆழமாக ஈடுபட்ட மற்றொரு மேனாட்டுத் திறனாய்வாளர் ஐ.ஏ.ரிச்சர்ட்ஸ் என்பவர் ஆவார். சுருக்கமாகச் சொன்னால் இலக்கியத்தை, ஒழுக்க அறிவுரையாகவும், சமூக வரலாறாகவும் கருதிய போக்கும், திறனாய்வாளனின் மனப்போக்குகளுக்கேற்ப இலக்கியத்தின் பொருளுணரும் போக்கும் அமைப்பியல் முறையில் கடிந்துரைக்கப்பட்டன. அதே போன்று சமூக வெளிப்பாடுகளுக்கு மிகுதியான செல்வாக்கினைத் தரும் மார்க்சீய அணுகுமுறையும், படைப்பாளம் மனநிலையை ஆராயும் ப்ராய்டிச உளவியல் போக்கும் ஓர் எதிர் விளைவை ஏற்படுத்தின. இதன் காரணமாகவே இலக்கிய அமைப்பியல் கவனம் செலுத்திய

புதுத்திறனாய்வாளர்கள் தோன்றினர்.

## நாவல்களும் அமைப்பியல் நிகழ்விடங்களும்

தமிழ் நாவல்களில் கதைப்பின்னல், கதைக்கரு அல்லது வரிப்பொருள், பாத்திரப்படைப்பு, பின்னணி, மொழிநடை, நோக்கு நிலை, வடிவமும் கட்டமைப்பும் போன்ற நிலைக்களன்கள் அமைந்ததே அமைப்பியலாகும். இந்த நிலைக்களன்களின் மூலமாக அமைப்பியலின் வெளிப்பாடுகள் நிகழ்கின்றன என்பதனை, கிரிஜாதேவி எழுதிய "மோகன் ரஞ்சனி" அல்லது சமூகத்தோற்றம் எனும் நாவலில் இடம் பெறும் குழந்தைத் திருமணத்தால் விளையும் தீங்குகள் மக்களிடம் நிலவும் மூட நம்பிக்கைகள் கணவனுக்கு அடிமையாகும். பெண்களின் அவலங்கள் ஆகிய சித்தரிப்புகள் அன்றைய அமைப்பினை நன்கு உணர்த்துகின்றன. ஆனால் இன்னும் நாகரிகம் வளர்ந்த நிலையிலம் கூட கிராமங்களில் குழந்தைத் திருமண நிகழ்வுகள் நடைபெறுகின்றன. இது அவர்களின் கல்வியறிவின்மையினால் இந்தக் குழந்தைத் திருமணங்கள் கிராமங்களில் நிகழ்கின்றன.

லூமா வாசுகியின் "இரத்த உறவு" என்னும் நாவலில், இடம் பெற்றுள்ள மங்களத்தம்மாள், தன் மருமகளையும் அவளின் குழந்தைகளையும் வெறுப்பவளாக இந்த மங்களத்ம்மாள் என்னும் கதைப் பாத்திரத்தை ஆசிரியர் படைத்துள்ளார். இன்றைய ஒரு சில வீடுகளில் நடைபெறுகின்ற நிகழ்வினை வைத்து படம் பிடித்துகாட்டுகின்றார். இதற்கு காரணம் வரதட்சணை என்னும் கொடுமையே ஆகும். இவற்றின் மூலமாக சமுதாயத்தில் பெண்களின் உரிமைகள் மாமியாரால் பாதிக்கப்படுகின்றன எனலாம்.

## சமூக அவலங்களில் அமைப்பியல்

சாதிச்சிக்கல்கள் இன்றைய சமூகத்திலும் பலவித இன்னல்களைத் தோற்றுவித்த வண்ணமாகத்தான் இருந்துள்ளன எனலாம். ஆனால் சாதிப்பிரச்சனைகளை மக்களிடையே தூண்டிவிட்டு, அது தொடர்ந்து கொழுந்து விட்டு எரிகையில் அதில் குளிர்காயும் வர்க்கத்தினர் இன்று வாழ்ந்து கொண்டுதானிருக்கின்றனர் என்பதற்குச் சான்றாக,

பூமணியின் "பிறகு" என்னும் நாவலில் மேல் சாதியினர் எனத் தங்களைக் கூறிக் கொள்ளும் பிரிவினர் பின்னர் சக்கிலியக் குடியினரைக் கீழ்ச்சாதி மக்கள் எனப் பறைசாற்றியதோடு தங்களின் நிலங்களில் கூலிவேலை கொடுத்துக் கசக்கிகிப்பிழிகின்றனர். இதைப் போல் இந்திரா பார்த்த சாரதியின் "குருதிப்புனல்" என்னும் நாவலில் சாதிக் கொடுமைகளின் உச்சகட்டம் சமுதாயத்தில் அரங்கேறுவதை சித்தரிக்கின்றார். இச்சாதிக்கொடுமையினால் பல தீங்குகளும், இன்னல்களும் ஏற்கப்படுகின்றன. இந்தச் சாதியின் ஒட்டு மொத்த அமைப்பினை உணர்த்தவதாக இவை அமைகின்றது எனலாம். மக்களைப் பல்வேறு அவதிகளுக்கு ஆளாக்குவதில் சாதிக் கொடுமைகள் முக்கிய இடம் பெறுகின்றன.

ம.கொ.விஜயராசு முதலியாரின் " ஒரு பெண் வேலை" என்னும் நவாலில், சமகால சமூக நிலை அப்பட்டமாக வெளிப்படுகின்றது. தொண்டை மண்டல வேளாளரில் பல இனத்தவர்கள் உண்டு. இவர்களில் பூவிருந்த வல்லியர் என்ற ஒரு இனம் உண்டு. இவர்களில் புலால் உணவு உண்பவர்களை "விழப்புக்காரர்" என்றும் உண்ணாதவர்களை "ஆசாரக்காரர்" என்றும் பிரித்து வைத்திருந்தார்கள். ஆசாராக்காரை மற்றவர்கள் "திருமுடி" என்ற ஒரு பட்டப் பெயரால் அழைப்பார்கள். அதாவது இவர்கள் தாம் உண்ணும் போத மற்றவர்கள் பார்வையில் படாதிருக்க ஒரு திரை போட்டு மறைத்திருந்து உண்பார்கள்" என மக்களிடையே இருந்த ஏற்றத் தாழ்வுள்ள வாழ்க்கை முறை சித்திரிக்கப்படுகின்றது.

## சீர்திருத்தச் சிந்தனைகளில் அமைப்பியல்

சமூகத்தில் புரையோடிக்கிடக்கும் அவலங்கள் எண்ணற்றவை. இவற்றைச் சீர்திருத்த சுயமரியாதை இயக்கம் தொடங்கப் பெற்றது. இந்த இயக்க ரீதியாக தனிமனிதச் சீர்திருத்தச் சிந்தனைகள் மக்களிடையே

எழுத்தலைப்பட்டன எனலாம். பல்வேறு நாவலின் மூலமாக சமூகக் கொடுமைகளை எடுத்துரைத்துச் சீர்திருத்தத்தின் அவசியத்தை வலியுறுத்தினர்.

டி.எஸ்.டி.சாமி எழுதிய “சரஸா” என்னும் நாவல் பெண்ணுரிமைப் பிரச்சனையை மையமாகக் கொண்டது. ஆனால் தாசி மோகத்தால் தவிக்கும் ஜமீந்தாரின் பரிதாப நிலை, பிணம் தூக்கும் பார்ப்பனர்களிடையே கூலி சம்பந்தமாக எழும் சச்சரவுகள் போன்ற கேவலமான நடவடிக்கைகளையும் நகைச்சுவையுடன் குத்திக்காட்டும் ஆசிரியர் கதாநாயகியைத் துணிச்சலான புதுமைப் பெண்ணாக முன்னிறுத்துகின்றார்.

மூவலூர் ஆ. ராமாமிர்தத்தம்மாள் எழுதிய தாசிகள் மோசவலை அல்லது மதிபெற்ற மைனர் என்ற நாவலில் சமூகச் சீர்திருத்த மாநாட்டுக்குத் தலைமை வகிக்கும் குணபூஷணி பின்வருமாறு உரையாற்றுகிறார்.

ஒரு குறிப்பிட்ட பெண் சமூகத்தை விபசாரத்துக்குத் தயார் செய்து வைத்திருப்பது இந்நாட்டு ஆண் சமூகத்தின் மிருக இச்சைக்குத் தக்க சான்றாக இருக்கின்றது. பகுத்தறிவு, நாகரிகம் வளர்ந்து கொண்டிருப்பதாகச் சொல்லப்படும் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் தேவதாசி முறையை ஒழிப்பது சாஸ்திர விரோதம், சட்ட விரோதம், கலை விரோதம் என்று கூக்குரல் கிளம்பும் சாஸ்திரங்களும் தலைவர்களும் இருப்பது மானக்கேடாகும் (நாவல் நூற்றாண்டு வரலாறும் வளர்ச்சியும் ப.143) இவ்வுரை அக்கால சமூகக் கட்டமைப்பைத் தெளிவுறுத்துகின்றது.

இன்றைய நாவல்களில் சீர்திருத்த இயக்கப் போக்கை முன்னிறுத்துவதில் முக்கிய இடம் வகிப்பவையாகக் கொள்ள வேண்டியவை அறிஞர் அண்ணாவின் நாவல்களாகும். பெண்கள் விழிப்புடனும், வெளிப்பகட்டில் மயங்காதவறும் இருத்தல் வேண்டுமென்பதை “பார்வதி பி.ஏ.,” உணர்த்துகின்றது. சாதிக்கொடுமைகள், பொருந்தா மணத்தால் ஏற்படும் துயரங்கள், மத வேடத்தில் உலகை ஏய்க்கும் கபட வேடதாரிகள் ஆகியோரின் நிலையை உணர்த்தவதாக இவருடைய நாவல் அமைகின்றது எனலாம்.

## தொகுப்புரை

தமிழ் நாவல்களில் சமூகச் சீர்திருத்த அவலநிலைகளை மையமாக வைத்து படைப்பாளன் தன்னுடைய கதைக் கருவினைப் பன்படுத்தி சமூகம் மாற்றம் அடைய வேண்டும் என்ற எண்ணத்துடன் தன்னுடைய நாவலைப் படைத்துள்ளான். சமுதாயத்தில் நிகழ்கின்ற அவலை நிலையை நகைச்சுவை உணர்வுடன், தன்னுடைய படைப்பினை அமைக்கின்றன எனலாம். ஒவ்வொரு படைப்பாளனின் படைப்பிலும் சமூகம் தனது தாக்கத்தை ஏற்படுத்தும் தன்னைச் சுற்றி நடக்கும் நிகழ்வுகளை உள்வாங்கிக் கொள்ளும் படைப்பாளன் அவற்றினூடே பயணிக்கத் தொடங்குகிறான். நிகழ்வுகள் சார்ந்த அவன் மனத்தில் எழுகின்ற கதைப்பின்னல், கதைக்கரு, பாத்திரப்படைப்பு, முன்னோக்கு உத்தி, நோக்கு நிலை, ஆகியவற்றை மையமாக வைத்துக் கொண்டு சமூக அவலங்களையும் சீர்கேடுகளையும் அமைப்பியல் வழி நின்று நாவல்கள் உணர்த்துகின்றன. இந்த அமைப்பியல் சார்ந்த நிகழ்வின் மூலமாக நாவலின் போக்குச் சிறப்பாக அமைகின்றனது எனலாம்.

# வேளாண்மைத் தொழிலில்வளமைச் சடங்குகளும் பெண்களின் பங்கும்

டாக்டர். *இரா. மனோகரன்,* வேளாண் உதவி அலுவலர், 1/7, இராமலிங்கா லே அவுட்,
தளி ரோடு, உடுமலைப் பேட்டை - 624 126.

வேளாண்மைத் தொழிலும் வளமைச் சடங்கும் பெண்களின் பங்கும் நாட்டுப்புறங்களில் தோன்றி வளர்ந்த இலக்கியம் தொடங்கி இன்றைய நவீன இலக்கியம் வரை பல்வேறு கால கட்டங்களில் பதிவு செய்து வரப்பெற்றுள்ளது.

வேளாண்மைத் தொழிலில் பெண்கள் வளமைச் சடங்குகளை நம்பிக்கையுடன் கூடிய வழிபாடாகச் செய்து வருவதையும் இச்சடங்குகளில் பெண்களின் பங்கு பற்றியும் தமிழ் இலக்கியங்களின் எடுத்துக்காட்டுகளுடன் விரிவாகக் கூறும் கட்டுரையாக அமைக்கப்பட்டுள்ளது.

ஆதி முதல், மனித இனத்திற்குத் தேவையான உணவு, உடை, உறையுள் ஆகிய மூன்றையும் நிறைவேற்றிக் கொள்ள உறுதுணையாக இருப்பது இயற்கையேயாகும். வேட்டைச் சமுதாய நிலையாகிய முதனிலையிலேயே மனிதன் சடங்குகளின்மீது நம்பிக்கை வைத்து அதையே பற்றுக் கோடாகக் கொண்டு தொடரப்பட்டுள்ளதை அறிந்து கொள்ள முடிகிறது. நம்பிக்கையின் உச்ச நிலையே சடங்குகளின் எச்ச நிலையுமானது. வேட்டை நிலையிலிருந்து மனித சமுதாயம் இயற்கையுடன் இணைந்து வாழும் ஆழ்நிலையில் இயற்கையான தாவரங்களிடமிருந்து உணவு கிடைப்பதை அறிந்து அதனைச் சேகரித்துப் பயன்படுத்தப்பட்டது அறியப்படுகிறது. அப்போது ஆண்கள் வேட்டைக்கும் பெண்கள் உணவு சேகரிப்பிற்கும் என்ற பணிநிலை உருவானது. பின்பு உழவுத் தொழிலில் உணவுப் பொருள்கள் உருவாக்கப்பட்ட நிலையில் இயற்கையின் செயல்பாடுகளை நன்கு கவனித்து அதன் ஏற்ற இறக்கங்களைப் புரிந்துகொள்ள முடியாமல் திணறும் சூழ்நிலையில் இயற்கையின் மீது நம்பிக்கை ஏற்பட்டது. புயலுக்கு மனிதன் அஞ்சினான். தென்றலுக்கு மகிழ்ந்தான். கடுமழைக்குப் பயந்தவன் மித மழைக்கு மகிழ்ந்தான். இவ்வாறு இயற்கை சீறுஷீதையும் தணிதலையும் கண்ட மனிதன் இயற்கையின் கோபத்தைத் தணிக்க வழிபாடு ஏற்படுத்தினான். அதனால் விளைந்த நன்மைகளுக்கு நன்றி தெரிவிக்கும்பொருட்டு படையல்களைப் படைத்து வழிபாட்டினை உருவாக்கினான்.

## இயற்கையின் வழிபாடு

இயற்கையின் செயல்பாடுகளின் போது திருப்தியடைந்த மனிதன் அதற்கு நன்றி செலுத்தும் பொருட்டாகவும் பாதிப்பேற்படும் போது அதனைத் திருப்திப்படுத்தச் செய்யும் சிறு முயற்சியாகவும் இயற்கை வணங்கப்பட்டது. அதனால், நம்பிக்கையுடன் கூடிய சடங்குகளின் வாயிலாக முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இக்கருத்தை க.காந்தி கூறும்போது இயற்கையின் புதிரான செயல்களை உணர இயலாதபோதும் மனித வாழ்வில் நிகழும் ஊறுகளுக்குக் காரணம் கற்பித்துக்கொள்கிறது. அவை நம்பிக்கையாக உருப்பெறுகின்றன. என்பதால் இயற்கையின் வழிபாட்டுக்குக் காரணம் உணர முடிகிறது. மழை பொய்த்தல் போன்ற இயற்கை உதவி புரியாத காலத்தில் இயற்கை, மனிதனுக்கு உதவும் காலத்தில் நடந்ததைப் போலத் தாமும் செய்தால் இயற்கை நமக்கு உதவி செய்யக்கூடும் என்றெண்ணி மனிதன் மகிழ்ந்து செயல்படுத்தத் தொடங்கினான். இக்கருத்தின் அடிப்படையில் மனிதன் நம்பிக்கையுடன் செய்யப்படும் செயல்கள் வளமைச் சடங்குகள் என்று கூறுப்படுகின்றன. வளமைச் சடங்குகள் எப்பொழுது தோன்றியது என உறுதிபடக்கூறமுடியாது. எனினும், இயற்கையின் தாக்கத்திற்குட்பட்ட நிலையில் இச்சடங்குகள் தோன்றியிருப்பதற்கான வாய்ப்புகள் உள்ளன. இயலாத போது பேராற்றல் உணரப்படுகிறது. அது இறையாற்றலாக உணரப்படுகின்றது. இறையாற்றல் உள்ளதென இயற்கையே கருதப்படுகிறது. அவ்வியற்கையினை,

மண்திணிந்த நிலனும்
நிலன் ஏந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும்

வளித்தலை இய தீயும்
தீ முரணிய நீரும் என்றாங்கு
ஐம்பெரும் பூதத்து இயற்கை

என்று புறப்பாடல் குறிப்பிடுகின்றது

### வளமைச் சடங்கு

இயற்கையுடன் இணைந்து வாழத் தெரிந்த மனிதன் இயற்கையாக நடைபெறும் செயல்களுக்கேற்ப நம்பிக்கைகளின் அடிப்படையில் சில செயல்களைச் செய்யத் தலைப்பட்டான். அப்பொழுது இயற்கை ஒத்துழைத்துத் தன் வாழ்விற்குப் பயன்பட வேண்டும் என்ற ஆசையினால் சில வகையான சடங்குகளைச் செய்தான். வேளாண்மைத் தொழில் இயற்கையை நம்பியே நடைபெற வேண்டியிருக்கிறது. வானம் பொழிந்து பூமி வளம் பெற்றால் தான் வாழ்வு வளம் பெறும். அதனால், சில வகைச் சடங்குகளைச் செய்தால் இயற்கை தமக்கு வளம் அளிக்கும் என்று நம்பிச் சில சடங்குகள் செய்யப்படுகிறன. அதுவே வளமைச் சடங்குமாகிறது. இக்கருத்தை க.கிருஷ்ணசாமி இயற்கை நமக்கு உதவ வேண்டுமாயின் நாமும் இயற்கையைப் போல (Imitate) நடக்க வேண்டுமென்றும், நாம் செய்வதைப் பார்த்து இயற்கையும் அதுபோலச் செய்யும் என்றும் நம்பினர். இந்த நம்பிக்கை, வளம்--செழிப்புப் பற்றிய நம்பிக்கை (Fertility Belief) எனப்படுகிறது. இந்நம்பிக்கையின் காரணமாகச் செய்யப்படும் சடங்குகள் வளமைச் சடங்குகள் (Fertility Rituals) ஆகும். அதன் வளர்ச்சியே வள வழிபாடாகும்". (Fertility Cult) என்று கூறுவது ஒப்பிட்டு நோக்கத்தக்கதாயுள்ளது.

### வேளாண்மையில் பெண்கள்

மனித இனப் பெருக்கத்திற்கு உரியவள் பெண். தொல்பழங்கால முதல் பெண் வழிச் சமுதாயமே இருந்து வந்துள்ளது. ஆரியர் வருகைக்குப் பின்பாகத்தான் ஆண் ஆதிக்கச் சமுதாயமாக மாற்றப்பட்டது. பழங்குடியினரிடம் இன்றும் தாய்வழிச் சமூக அமைப்பு உள்ளது. இத்தாய்வழிச் சமூக அமைப்பு முறையில் இன்றளவும் கூட சடங்குகளில் தாய் மாமனுக்கு உயரிய மரியாதை வழங்கப்படுவதை வைத்து உணர்ந்து கொள்ளமுடிகின்றது. பூமியைப் பெண்ணாகக் கருதுவதும் வழிபடுவதும் நமது பண்பாட்டில் காணப்படும் வழக்கமாகும். அதற்குக் காரணம் பெண்கள் தான் பயிர்த் தொழிலைக் கண்டு பிடித்தவர்கள். பயிர்த் தொழிலைப் புதிய நோக்கில் வளர்த்தவர்கள் இக்கருத்தை இவ்வாறு ஆரம்ப காலக் கண்டுபிடிப்பாளர்களாகவும் பயன்படுத்துபவர்களாகவும் பெண்கள் முன்னின்று செயல்பட்டுள்ளதன் மூலம் மனித இனத்தின் பண்பாட்டையும் நாகரிகத்தையும் வடிவமைப்பவர்களாகப் பெண்கள் விளங்கி உள்ளனர் என்பது தெரிய வருகிறது. என்ற போரிஸ் லெஸ்ஸிங் கருத்தைச் சுட்டிக் காட்டிப் பஞ்சாங்கம் கூறுவதிலிருந்து பெண்களது சிறப்பை உணர்ந்து கொள்ள முடிகின்றது. இக்கருத்து, கற்களாலோ குச்சிகளாலோ நிலத்தைக் குத்தியோ கீறியோ பயிரிட்டனர். வேளாண்மைத் தொழில் முழுக்க முழுக்க பெண்களே செய்துவந்த நிலைமை உழவுத் தொழிலுக்குக் கலப்பையும் விலங்குகளைப் பழக்குதலும் கண்டுபிடிக்கப்படும் வரை தொடர்ந்தது என்று கூறும் கருத்தால் வலுப்பெறுகிறது. இந்நிலை உழு கருவிகள் கண்டுபிடிக்கப்படும் வரை தொடர்ந்தது. உழு கருவிகள் கண்டுபிடிக்கப்பட்ட பின்பு வேளாண்மைத் தொழிலில் ஆண் ஆதிக்கம் செலுத்தினர் என்றறியப்படுகிறது.

விளை நிலத்திற்கும், பெண்களுக்கும் ஒற்றுமையுண்டு. பெண்கள் மனித இனத்தை உற்பத்தி செய்யும் பொருள். அதுபோல நிலமும், உணவு உற்பத்தி செய்யக்கூடியது. பெண்கள் கரு உற்பத்தி, கரு வளர்ச்சி போன்றே நிலத்தில் விதைகள் முளைத்துப் பயிராக வளர்சின்றன. பயிருக்கு ஊட்டம் நிலமும் குழந்தைக்கு ஊட்டம் தாயும், அளிப்பதால் நிலம் பெண்ணுக்கு இணையாகக் கூறப்படுகின்றது. மனித இனப் பெருக்கத்திற்குரியவள் பெண்ணாக இருப்பதுடன் பறவை, விலங்கு போன்றவைகளின் பெண்ணினமும் இனப்பெருக்கமுடையதாக உள்ளது அறியப்பட்டது. இனத்தைப் பெருக்குபவை அனைத்தும் பெண்தான் என்ற பொருளில் நிலத்தைப் பெண்ணாகக் காணப்பட்ட தன்மையை இதனால் உணரமுடிகின்றது. நிலம் மட்டுமல்ல இயற்கையின் அனைத்துப் பொருள்களும் இயக்கங்களும் பெண்ணாக உருவகிக்கப்பட்டன. இக்கருத்தை, பயிருக்கான நல்ல மழை பெய்யும்பொழுது இயற்கைத் தாயாக உருவகிக்கப்பட்டாள். பயிரை அழிக்கும் புயலும் வறட்சியும் வரும்போது இயற்கை கொடுமைக்காரியாகக் கற்பிக்கப்பட்டாள் என்ற போரிஸ் லெஸ்ஸிங் கூறியதாக பஞ்சாங்கம் கூறும் கருத்திலிருது அனைத்தும் பெண் மயமான இயக்கம் என்பது உணரப்பட்டது.

உற்பத்திப் பொருள்களை முதலில் கன்னிப்பெண்களுக்கும் குழந்தைப் பேறுடைய பெண்களுக்கும் கொடுத்தால் அவர்களுடைய வளமைச் சக்தி அவர்களால் செய்யப்படும் பயிர்த் தொழிலின் செயல்களில் சென்றடைந்து நல்ல மகசூல் கிடைக்கும் என்ற நம்பிக்கையை மக்களிடத்தே தோற்றுவித்துள்ளது. அதனடிப்படையிலே, அதுவும் கன்னிப் பெண்கள் குழந்தைப் பேறுள்ளவர்கள் ராசிமிக்கவர்களாகக் கருதப்பட்டனர். அதனால் வேளாண்மைத் தொழிலில் அதனை முதன் முதலில் தொடங்கி வைக்கப் பெண்களே அனுமதிக்கப்பட்டுள்ள செய்தி அறிந்துகொள்ள முடிகின்றது. தமிழகம் மட்டுமல்லாமல் உலகமெங்கும் பெண்ணிற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது. பூமியைப் பெண்ணாகக் கருதுவதுடன் வழிபடுவதும் வளமைச் சடங்குகளுக்குப் பெண்களை முன்னிலைப்படுத்துவதும் தெரிகிறது.

தமிழகத்தைப் பொறுத்த மட்டிலும் பயிர்த்தொழில் விதைத்தலின்போது சாலில் விதை போடப் பெண்களே பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. ஆண்கள் விதைக்கும் பணி செய்யும்போது முதலில் ஒரு பிடி விதையெடுத்துப் பெண்களால் விதைக்கச் செய்தே விதைப்பது கடைப்பிடிக்கப்படுகின்றது. நிலங்களுக்குப் பெண்கள் செல்ல இயலாத நிலையிலும் வீட்டிலேயே விதையை எடுத்துச் செல்லும் கூடையிலோ, பையிலோ முதலில் போடச் செய்த பின்பே ஆண்களினால் அள்ளி நிரப்பும் வழக்கமுள்ளதை அறிந்து கொள்ளமுடிகின்றது. இதன்மூலம் பெண்களிடம் உள்ள வளமைச் சக்தி அவர்கள் தொடும் பொருள்கள் வாயிலாகச் சென்று நன்மையை ஏற்படுத்தும் என்பதை அறிந்து பெண்களையே தொடங்கச் செய்வதை விளங்கிக் கொள்ள முடிகின்றது.

சங்க இலக்கியங்களில் பெண்களை வேளாண்மைத் தொழிலில் முன்னிலைப்படுத்தியுள்ள செய்திகள் இங்கு நினைவு கூறத்தக்கதாயுள்ளன. தினைப்புனக்காவல், களை எடுத்தல், விதை நடுதல், நடவு செய்தல், அறுவடை போன்ற பல்வேறு பணிகளிலும் பெண்களே பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணும்போது இக்கருத்து மேலும் வலுப்பெறுகிறது. தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் கிடைத்த வள்ளிப்பாடல்களில் தினைப்பயிர் காவல் செய்தல் பற்றிய செய்திகளாலும் இக்கருத்து வெளிப்படுகின்றது. இக்குறிப்பால் தினைப்பயிருக்கு மட்டுமின்றி அனைத்துப் பயிருக்கும் உள்ள பொதுத்தன்மை வள்ளிப்பாட்டின் வாயிலாக வெளிப்பட்டுள்ளதை அறிந்து கொள்ள முடிகின்றது. வளமைச்சடங்குகள் வேளாண் தொழிலில் ஆதிகாலம் முதல் இன்றளவும் கடைப்பிடிக்கப்பட்டு வந்துள்ளமையையும் அச்சடங்குகள் பெண்களைக் கொண்டே செய்யப்பட்டு வந்துள்ளமையையும் இச்செய்திகளை அவ்வக்காலத்து இலக்கியங்களின் வாயிலாகவும் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. காந்தி, க.தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், பக், 103-104.
2. புறம் 2.1.6.
3. கிருஷ்ணசாமி, க., நாட்டுப்புறப்பாடல்களில் வளமை நம்பிக்கையும் சடங்குகளும், பக்.169-195.
4. ஆரியர் - ஆரியர் தாய்வழிப் பெண்ணுக்கு இருந்த தலைமையை மாற்றி தந்தை வழி ஆணுக்குரிய தலைமையாக ஆக்கினர். அறவாணன், க.ப., தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப்படையெடுப்புகள் ப.159.
5. பெண்கள் வேளாண்மையைக் கண்டுபிடித்தவர்கள்.
6. பஞ்சாங்கம் (மொ.ஆ)., பெண்ணெனும் படைப்பு - சிலமானுடவியல் குறிப்பு ப.46.
7. கிருஷ்ணசாமி, க., நாட்டுப்புறப்பாடல்களில் வளமை நம்பிக்கைகளும் சடங்குகளும், பக்.169-195.
8. பஞ்சாங்கம் (மொ.ஆ)., பெண்ணெனும் படைப்பு - சில மானுடவியல் குறிப்பு ,ப.45.
9. தென் ஆப்பிரிக்காவிலுள்ள சும்பா இனப் பெண்கள் நிலத்தின் நடனமாடாது நிலத்தைக் கொத்த மாட்டார்கள். நிலத்தை மிதிக்காவிடில் பயிர் விளையாது என்று கூறுகின்றனர். பழையமெக்சிகோவில் சடங்குகளுக்குப் பிறகே வேளாண்மைப் பணிகளைத் தொடங்குகின்றனர். கிருஷ்ணசாமி, க., நாட்டுப்புறப்பாடல்களில் வளமை நம்பிக்கைகளும் சடங்குகளும், பக்.169-195.

# புகை நாடகத்தில் - ஓர் உளவியல் பார்வை

முனைவர் *மு.முகம்மது அலி* தமிழ்த்துறை
புதுக்கல்லூரி, சென்னை - 14.

புத்தர் பெருமான், பிறப்பால் உயர்வு-தாழ்வு இல்லை, அனைவரும் சமம் என்ற கருத்தை முன் வைத்துள்ளர். இஸ்லாமிய மார்க்கமும் வெள்ளையர் - கருப்பர், ஆண்டான் - அடிமை முதலான வேறுபாடுகள் இல்லை, அனைவரும் சமம் என்ற கருத்தை வலியுறுத்திக் கூறியுள்ளது. இவ்வாறு உலகம் ஏற்றுக் கொள்ளும் பொதுக் கருத்திற்கிடையே மாறுபட்ட வகையில், பல்வேறு தரங்களில் அமைந்த ஏற்ற இறக்கத்திற்கேற்ப மனிதர்களுள் வெகு சிலர் மனிதர்களைக் கூறு போட்டு பட்டியலிட்டுக் காட்டியுள்ளனர். அவர்கள் தங்களின் உயர்வு மனப்பான்மை காரணமாக மனிதர்களுள் பலரைப் பல வகைகளில் ஒடுக்கி வாழ்கின்றனர். அவ்வாறு ஒடுக்கும் போது ஒடுக்குவோர்க்கும் ஒடுக்கப்படுவோர்க்கும் (தலித்கள்) இடையே பனிமூட்டம் நிகழ்கின்றது. அத்தகைய பனிமூட்டத்தை உளவியல் தன்மையில் புகை என்ற தலைப்பமைந்த நாடகம் விளக்கிக் காட்டியுள்ளது.

## கதை

ஒரு கிராமத்தில் சிலர் பலரை ஒடுக்கி வாழ்கின்றனர். அங்கு உள்ள தலித்கள் தாங்கள் காலம் காலமாக ஒடுக்கப்படுவதை அறிந்தோ அறியாமலோ வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். அந்நிலையில் முற்போக்கு எண்ணம் கொண்ட உயர் வகுப்பைச் சார்ந்த கங்காதரன் என்ற இளைஞனாலும் புலவர் ஒருவராலும் தலித்துகள் தங்கள் உண்மை நிலையினை உணர்கின்றனர். அப்போது அவர்கள் தங்கள் குடியிருப்புக்களிலிருந்து வெளியேறி ஒடுக்குபவர்கள் வாழக் கூடிய இருப்பிடங்களை நோக்கித் தீப்பந்தங்களுடன் ஒன்றாகச் செல்லுகின்றனர். இதுவே இந்நாடகத்தின் கதையாகும். சுடர் விட்டு எரியும் தீப்பந்தத்தை ஊதினால் அது அணைந்து புகையும். ஆனால் புகையும் அடுப்பை ஊதினால் அது கொழுந்து விட்டு எரியும். வெந்து புகையும் நெஞ்ச அடுப்புகளின் மூட்டத்தை ஊதி ஆக்கரீதியான அக்கினியினை உளவியல் முறையில் இந்நாடக ஆசிரியர் வெ.மு.ஷாஜஹான் கனி வெளிப்படுத்திக் காட்டியுள்ளனர். வெந்து புகையும் தலித்களின் (ஒடுக்கப்பட்டோரின்) உள இயல்பு இந்நாடகத்தின் வாயிலாக இங்குகாட்டப்படுகின்றது.

## ஒடுக்கப்படுவதை அறியாது மகிழ்வுடன் இரத்தல்

ஒடுக்கப்படுவோர் தாம் ஒடுக்கப்படுவதை அறியாமலேயே பலவகையான கடிமனான உடலுழைப்புத் தொழில்களைச் செய்வர். அவற்றைச் செய்யும் போது அவர்கள் அருவருப்பு அடைவது கிடையாது. அதற்கு ஈடாகச் சிறிதள்வு உணவோ அல்லது சிறிதளவு பணமோ கிடைத்தவுடன் எல்லாவற்றையும் மறந்து மகிழ்ச்சியடைவர். இதனைப் புகை நாடகம், ஒரு தோட்டி குப்பை சுமக்க - ஒருத்தி மலம் அள்ள ஒருவன் சாக்கடை இறைக்க - ஒருவன் தெருக்கூட்ட - இன்னொருவன் பிணம் எரிக்க எல்லோருமே அவற்றை உற்சாகமாகச் செய்கின்றனர். அவர்கள் செய்த தொழிலுக்கு கைகளைக் கட்டிக் கொண்டு வரிசையாக நின்று சம்பளமோ -சலுகைகளோ பெறுகின்றார்கள் என்று கூறி தாங்கள் ஒடுக்கப்படுவதை அறியாது இருக்கும் அவர்களின் நிலை கீழ்க்கண்ட பஞ்சதந்திரக் கதை வாயிலாகப்பாடம் பிடித்துக்காட்டப்பட்டுள்ளது.

ஆழம் குறைந்த ஒரு பாழடைந்த கிணறு. உள்ளே ஒரு நரி மேலே ஒரு வெள்ளாடு (நிறத்தில் அது கருப்பு ஆடு) உள்ளே எட்டிப்பார்க்கிறது. நரி அதை உள்ளே அழைக்கிறது. வெள்ளாடு கீழே இறங்க அதன் தலையில் கால் வைத்து ஏறி நரி மேலே வந்து கூத்தாடுகிறது. வெள்ளாடு விபரம் புரியாமல் உள்ளே முளைத்துள்ள அற்பமான புல்லை ருசித்து மேய்கிறது (ப.15) இவ்வாறு பஞ்ச தந்திரக்கதை வாயிலாக இந்நாடகத்தில் தலித்துகளின் உள இயல்பு உணர்த்தப் பெற்றுள்ளது.

## பேச்சு வழக்கு ஒருவர் சாய்ந்த இனத்தை இனம் காட்டுதல்

அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பது முது மொழி. அதுபோல ஒருவருடைய பேச்சு வழக்கினை வைத்து அவருடைய இயல்பினை - அவர் சார்ந்த இனத்தின் தன்மையினை அறிந்து கொள்ளலாம். இருக்கருத்தைத் திருவள்ளுவரும்,

"மனத்தானாம் மாந்தர்க்கு உணர்ச்சி இனத்தானம்
இனனான் எனப்படும் சொ"ல் (குறள் 453)

என்பதன் வாயிலாக வெளிப்படுத்திக் காட்டியுள்ளார். சேரிவாழ் மக்களைப் பற்றியமைந்த நாடகத்தில் அவர்களுக்கே உரித்தான பேச்சு வழக்கு பரவலாகக் கையாளப்பட்டுள்ளது.

"வெட்டியான் காத்தால குப்பவண்டி அடிச்சான்னா
மத்தியானம் ஆசர் குடுக்கிறதுதான, அப்புறம்
என்ன செய்கிறான்?........... குமிக்கிறானோ?"

இதுபோன்ற பலவகையான வழக்குத் தொடர்கள் அமைந்து ஒடுக்கப்பட்டோருடைய பலதரப்பட்ட இயல்பினை வெளிக்காட்டியுள்ளன.

## தாழ்வு மனப்பான்மை

அ) ஏழ்மை காரணமாக - இருப்பவர் மத்தியில் இல்லாதவர் சென்றால் இளிவரல் நிலை பெற்று இல்லாதவர் ஒருவகையான தாழ்வு மனப்பான்மையினை அடைவர். இவ்வகையான மனப்பான்மை தலித்களிடம் அமைந்திருப்பதனை புகை நாடகம் பல இடங்களில் வெளிப்படுத்திக் காட்டியுள்ளது. உயர் சாதிக்காரரான கங்காதரன் காந்தி பிறந்த நாள் அன்று விருந்து உண்ண வருமாறு தன் நண்பன் தனக்கோடியை அழைத்தபோது மிகுந்த வெட்கத்துடன் மறுக்கின்றான், பிறகு தன் விட்டிற்கு வந்த கங்காதரனிடம் தனக்கோடி இங்க சாப்பிடுறேன்கிறியா? (4.70) என்று ஐயத்துடன் கேட்பது, நண்பன் உணவு உண்டவுடன் சாப்பாடு பிடிச்சிருக்கா (ப.70) என்று வினைவுது போன்றவை தனக்கோடியின் ஆழ்மனதில் பதிந்த தாழ்வு மனப்பான்மையின் வெளிப்பாடே ஆகும். பசித்தோர்க்கு உணவு கொடுத்தோம் என்பதில் மட்டும் அமையாது உயர்தர வகுப்பைச் சேர்ந்தவர்கள் தம் வீட்டில் உணவு உண்பதனைப் பெரும் பேறாகக் கருதுகின்ற மனோபாவம் ஏற்பட்டதற்கு தலித்களிடத்து இயல்பாக அமைந்துள்ள தாழ்வு மனப்பான்மை காரண்ம் என்பதனை இந்நாடகம் வெளிப்படுத்திக் காட்டியுள்ளது.

## ஆ) மரியாதைக்கு உகந்தவர்களாகத் தங்களை நினைக்காதிருத்தல்

உயர்தரவர்க்கத்தினரின் அவச் சொற்களைக் கேட்டுக் கேட்டுப் பழகிய ஒருவர்க்கு உயர்தர வர்க்கத்தைச் சார்ந்த ஒருவர் உங்களைத்தான் என்று மரியாதையாக அழைத்தவுடன் தன் காதுகளையோ நம்ப இயலாத நிலை ஏற்படும் இனம் புரியாத மகிழ்ச்சியும் ஏற்படும். இத்தகைய உளநிலையினை இந்நாடகத்தில் வரும் குஞ்சரம் என்ற தாழ்த்தப்பட்ட பெண் பெற்றாள் என்று நயமாகக் காட்டப்பட்டுள்ளது. சண்டாளி (ப.35), முண்ட (ப.35) அவுசாரி சிறுக்கி (ப.36) என நாளும் அதிகாரத்திமிரில் பேசும் உயர்தர வர்க்கத்தினரின் அவச்சொற்களைக் கேட்டுக் கேட்டுக் சலித்துப்போன குஞ்சரத்திற்கு உயர் வகுப்பைச் சார்ந்த ஒருவன் (கங்காரன்) தன்னை இந்தாங்க (ப64) என்று அழைத்தவுடன்... ங்க மரியாதையில் முதன் முதலாய் அழைக்கப்படும் சுகத்தின் ஆனந்தம் இன்னும் நம்மைத்தான் அழைத்தானா? என்ற சந்தேகம். உலக்கை கொண்டு எதையோ குற்றிக் கொண்டிருந்த அவள் கற்பனை உலகத்தில் மிதக்கின்றாள். கையிலிருந்த உலக்கை மாயமாய் மறைகிறது - நவநாகரிக ஆடை - கழுத்திலும் கையிலும் நகைகள் - தலையிலும் புதுவகை அலங்காரம் - இன்னும் புதிய புதிய ஆடம்பர அணிகலன்கள் இப்படியே இன்னும் .......... (ப.65) இவ்வாறு உயர்வகுப்பினர் ஒருவரால் மரியாதையாக அழைக்கப்பட்டபோது தலித்ஒருவர் பெற்ற உள இயல்பு நன்கு காட்டப்பட்டுள்ளது.

## செய் தொழில் ஏற்படுத்தும் தாக்கம்

ஒருவர் செய்யும் தொழிலின் தரத்திற்கேற்ப அவர் சமூகத்தில் மதிப்பு அமைகின்றது. அத்துடன் அமையாமல் அத்தொழிலின் தரம் அவர்களுடைய குழந்தைகளின் உள இயல்பில் தாக்கத்தை ஏற்படுத்தி மகிழ்ச்சியையோ அல்லது வருத்தத்தையோ அளிக்கின்றது. இந்நாடகத்தில் மலம் அள்ளும் தொழிலைச் செய்யும் தன் தாயிடம் (செவப்பி) ஊர்ல எங்கூட சண்டைக்கு வர்ரவன்க எல்லாம் என்னா இதுவாப் பேசுரான் தெரியுமா ஒனக்கு ? எங்க வூட்டுப்.... அள்றவ மகன்தானடாங்கிறான்க (ப.37) என்று மகன் தனக்கோடி மனம்வெம்பி வெதும்பிக் கூறுகின்றான். மேலும் தன் தாயிடம் அத் தொழிலைச் செய்ய வேண்டாம் என்றும் வற்புறுத்துகின்றான்.

## படித்த தலித்துகளின் மனநிலை

கற்றோருக்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு என்ற மொழிக்கு ஏற்ப, கல்வி கற்றவர் எவராக இருந்தாலும் அவர் ஒழுக்கத்துடன் இருப்பாரேயானால் அவருக்கு மேன்மை உண்டாகும். அவர் எவ்வகைப்பட்ட வகுப்பைச் சார்ந்தவராக இருந்தாலும் உயர்வு கிடைக்கும். கல்வி கற்றவர் தலித்களாக இருந்த போதிலும் உயர் வகுப்பார் அவர் இடும் கட்டளைகளை நிறைவேற்றுவர். தலித்களின் துணையினை நாடுவர். இதனை நாலடியார்,

தோணி யியக்குவான் தொல்லை வருணத்துக்/காணின் கடைப்பட்டான் என்றிகழார், காணாய்
அவன் துணையா ஆறுபோய் அற்றே நூல் கற்ற /மகன் துணையா நல்ல கொளல்

(பொருட்பால் - கல்வி 136)

பாடலின் வாயிலாக விளக்கிக்காட்டியுள்ளது. இன்றைய கால கட்டத்தில் படித்த தலித்களில் சிலர் தாம் உயர்பதவியினைப் பெற்றவுடன் தங்களின் இனத்தை மறக்கின்றனர். சிலர் தாங்கள் பிறந்த இனத்தைக் கூறிக் கொள்ள விரும்பவில்லை. இன்னும் சிலர் தாங்கள் பிறந்த இனத்தையே வெறுக்கின்றனர். அவற்றிற்கெல்லாம் உயர் வகுப்பினரால் பெற்ற மனக்காயங்கள் காரணமாக அமையலாம் (அல்லது) தங்களுக்கு உயர் வகுப்பினரால் மரியாதை கிடைக்காமற் போய்விடும் என்ற காரணமாகவும் இருக்கலாம்.

இந்நாடகம் படித்த தலித் இளைஞன் ஒருவன் தான் வாழ்ந்த இடத்தை வெறுப்பதனை
இன்னும் எத்தினி நாளாக்கி இந்தச்சேரிலயே
இருக்க?.... இந்த ஒருச்சாண் குடிசைலதான் வந்து
படுத்துக்கப் போறேனாக்கும் போவியா (ப.52)
என்ற தொடரின் வாயிலாக உணர்த்திக்காட்டியுள்ளது.

இயல்பிற்கேற்ற தொழில்

விரலுக்குத் தகுந்த வீக்கம் என்பர். அதுபோல தலித்களில் சிலர் தங்களின் இயல்பிற்கேற்ற தொழில்களை நாடுகின்றனர். இவர்களின் இத்தகைய இயல்பு இந்நாடகத்தில் நயமாகக் காட்டப்பட்டுள்ளது.

தலித் இளைஞன் (தனக்கோடி) தன்னுடைய படிப்பிற்கேற்ற வேலையை எதிர்பார்க்கின்றான். தன் தாய் கூறியதைக் கேட்ட தனக்கோடி கோபத்துடன் கட்டி மேய்க்கிற வேல. அதுக்கு பன்னிமேய்க்கிற வேலைக்குப் போகட்டுமா? என்று கேட்டதும், தன் மகன் கோபப்பட்டதை அறியாமல் தாய் செவப்பி கற்பனையில் மூழ்குகின்றாள்

வேலிக் கருவை மரங்கள் அங்கும் இங்குமாக ........... நான்கைந்து பன்றிக் குட்டிகள். அவன் மகன் அவற்றை மேய்க்கும் தோரணையில் நிற்கின்றான். திடீரென்று 4 பன்றிகளாயிருந்த இடத்தில் 10 பன்றிகள்...........20 பன்றிகள் .............40 பன்றிகள் 80-100-200 ஒரே பன்றி மயமாக (ப.31) என நயமாக இந்நாடகத்தில் உணர்த்தப் பெற்றுள்ளது.

## ஒடுக்கப்பட்டுபவரும் பிறரை ஒடுக்க எண்ணுதல்

உயர்வர்க்கமோ - தாழ்வர்க்கமோ, ஒடுக்குபவரோ - ஒடுக்கப்படுபவரோ எவராக இருந்தாலும் வாய்ப்புக் கிடைக்கும் போது பிறரின் தோளின் மீது ஏறி அவரை நசுக்கவோ அல்லது முதுகின் மீது ஏறிப்பயணிக்கவோ முயற்சி செய்வர். இதனையே, யானைக்கு ஒரு காலம் வந்தால் பூனைக்கு ஒரு காலம் வரும் என்று முதுமொழி கூற, "காலம் என்பது கறங்கு போல மேலது கீழாக கீழது மேலாக" என்று மனோன்மணீயம் எடுத்துக் காட்டியுள்ளது. புகை நாடகத்தில் வரும் செவப்பி ஒடுக்கப்பட்ட இனத்தைச் சார்ந்தவள். இருந்போதிலும் தன் இனம் சார்ந்த மற்றவர்களை ஒடுக்குவதற்குத் தன் மகனுக்கு வாய்ப்பு கிடைத்துள்ளமையினை நினைத்து, "மேஸ்திரி வேலைன்னா - கக்கூஸ் காரிங்க, குப்ப வண்டிக்காரங்க சாக்கட வண்டிக்காரங்க எல்லாரையும் கட்டி மேய்க்கிற வேல சும்மாவா? (ப.30) என்று அவள் பெருமையுடன் கூறுவது இங்கு உணரத்தக்கது.

**வாய் பேசாத ஊமைகளாக இருக்க வேண்டிய நிலை :**

வாழ்வின் பல நிலைகளிலும் வலுவிழந்தவர்கள் ஒடுங்கியே வாழ வேண்டிய சூழ்நிலை ஏற்படுகின்றது. அண்டி வாழுகின்ற தாம் சண்டித்தனம் செய்தால் ஒண்டுவதற்குக் குடிசைக்கூடக் கிடைக்காது என்பதனை அறிந்து கொண்டு உள்ளத்தால் பொருமிக்கெண்டு இருப்பர். அதிலும் தாழ்த்தப்பட்ட பெண் பல கொடுமைகளுக்கு உள்ளானால் அவளால் என்ன செய்ய இயலும்?. மனதிற்குள் புகைந்து கொண்டு இருப்பதைத் தவிர வேறு வழியில்லை. இந்நாடகத்தில் வரும் குஞ்சரம் என்ற தாழ்த்தப்பட்ட பெண் ஒடுக்குவோர் இனம் சார்ந்த ஒருவரின் பாலியல் வெறிக்கு உணவாகுகின்றாள். அவளால் எத்தகைய எதிர்ப்பினையும் காட்ட இயலவில்லை. பலநிலைகளிலும் பலமிழந்தவர்கள் வாய் பேசாத ஊமைகளாக இருக்கின்ற மனநிலை இந்நாடகத்தில் காட்டப்பட்டுள்ளது.

**முடிவுரை :**

"மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்" (குறள் 973)

என்ற வள்ளுவரின்

வாய் மொழியினை அனைவரும் உணர வேண்டும். உயர்ந்தவர்கள் தாம் உயர்ந்தவர் என்ற மனநிலையினை உடைத்தெறிந்து அனைவரும் தம்மையொத்த மனிதர்கள் தாம் என்பதனை உணர வேண்டும். ஒடுக்கப்பட்டவர்கள் தாம் ஒடுக்கப்படுகின்ற நிலைமையினை உணர்ந்து அத்தடைகளை உடைத் தெறிகின்ற மன நிலையினைப் பெற வேண்டும். மூடிவைக்கப்பெற்று அடுப்பில் கொதித்துக் கொண்டிருக்கும் பாத்திரத்தின் மூடி வெம்மையின் அழுத்தம் தாளாது வெளியே தள்ளப்பட்டு விடும். அதுபோல, அடக்கு முறைக்கு ஆளாகி நாளும் ஒடுக்கப்பட்டுவரும் கூட்டம் வெம்மை தாளாது பிறீட்டுக் கிளம்பும். இக்கருத்தை வலியுறுத்தும் வகையில்,

"ஓடப்பராயிருக்கும் ஏழையப்பர்
உதையப்பராகி விட்டால் ஓர் நொடிக்குள்
ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி
ஒப்பப்பர் ஆய்விடுவார் உணரப்பா நீ"

என்று,பாரதிதாசனார் கூறியிருப்பதும், "கற்பி புரட்சி செய் ஒன்று சேர்" என்று டாக்டர் அம்பேத்கார் கூறியிருப்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும். நம்மை அடிமைப்படுத்த நினைக்கும் எவருக்கும் அடங்கக் கூடாது. நாம் எவரையும் அடக்கி வாழக் கூடாது. நாம் அனைவரும் மனிதர்கள். ஒருவருக்கொருவர் இணக்கமாக வாழ வேண்டும் என்பதனை இந்நாடகம் உளவியல் தன்மையில் படம் பிடித்துக் காட்டியுள்ளது.

# புதினங்களில் தொடர் பாத்திரப்படைப்பு

*திருமதி.கி.லோகேஸ்வரி* எம்.ஏ., பி.எட். எம்.ஃபில்.,
தேர்வுநிலை விரிவுரையாளர் - தமிழ்த்துறை, அ.ப.ஆ.க.ப.கல்லூரி, பழனி.

காலச்சூழலுக்கு ஏற்ப இலக்கியங்களின் நோக்கிலும், போக்கிலும் மாற்றங்கள் ஏற்படுதல் தவிர்க்க இயலாததாகும். இந்நிலையே புதிய இலக்கிய வகைகள் தோன்ற காரணமாகும். இவ்வாறு தோன்றிய புத்திலக்கிய வகைகளுள் புதின இலக்கியத்திற்கு தனி இடம் உண்டு. புதின இலக்கியத்தின் வெற்றிக்கு அடித்தளமாக அமைவது பாத்திரப்படைப்பே ஆகும்.

## 1. புதின இலக்கியமும், பாத்திரப் படைப்பும் :

புதின ஆய்வாளர்கள் பாத்திரப்படைப்பை இருவகையாகப் பிரித்துக் காண்கின்றனர். அவை 1.முழுநிலைப்பாத்திரம், 2.ஒருநிலைப்பாத்திரம் என்பனவாகும்.

பொதுவாகப் புதினங்களில் மேற்குறிப்பிட்ட இருவகைப் பாத்திரப்படைப்பு, காணப்பட, துப்பறி, குற்றவியல் புதினங்களில் இவ்விருவகைப் பாத்திரப்படைப்பினின்று சற்று மாறுபட்ட "தொடர்பாத்திரப்படைப்பு" என்ற போக்கினை உடைய பாத்திரப்படைப்பு இடம் பெறுதல் குறிப்பிடற்குறியதாகும். இவ்விருவகைப் புதினங்களில் காணலாகும் "தொடர்பாத்திரப்படைப்பு" இக்கட்டுரையின் ஆய்வுப் பொருளாகும்.

## 2. தொடர் பாத்திரப்படைப்பு - வரைவிலக்கணம்

துப்பறி, குற்றவியல் புதினங்களில் தனியார் துப்பறிவாளர்களே தொடர்பாத்திரப்படைப்பாகப் படைக்கப்படுகின்றனர். இந்நாவல்களில் நினைவில் நிற்கும் பாத்திரங்களும் இவர்களே. இவர்கள் என்றும் இளமை மிக்கவர்கள். சாகாவரம் பெற்றவர்கள், சாதனையாளர்கள், சாகசங்கள் செய்பவர்கள் குற்றவாளிகளைக் கட்டுபிடிப்பதில் கெட்டிக்காரர்கள் தோல்வியைச் சந்திக்காதவர்கள். இவர்கள் காவல்துறையில் நண்பர்களை பெற்றவர்கள், மேலும் காவல்துறையின் உதவியுடன் குற்றவாளிகளைக் கைது செய்பவர்கள். பணத்திற்காக தீயவர்களுக்கு உதவாத, நல்லவர்களுக்கு உதவும் அறநிலைப் பாத்திரங்கள். தனியார் துப்பறிவாளர்கள் போன்று அரசு காவல்துறை அதிகாரிகளும் தொடர் பாத்திரங்களாக இடம்பெறுவதுண்டு. துப்பறி, குற்றவியல் புதினங்களுக்கே உரிய தனிச்சிறப்பு பாத்திப்படைப்பாக இப்பாத்திரப்படைப்பு அமைகிறது. இப்புதினங்களின் வெற்றிக்கு தொடர்பாத்திரப்படைப்பே அடிப்படைக் காரணம் ஆகும்.

## 3. தொடர் பாத்திரப்படைப்பு - வரலாறு :

இத்தொடர்பாத்திரப்படைப்பானது இருபதாம் நூற்றாண்டின் மூன்றாவது சகாப்தத்தில் செல்வாக்குப் பெற்ற துப்பறி புதினங்களிலும் இருபதாம் நூற்றாண்டின் இறுதி மூன்று சகாப்தத்தில் செல்வாக்குப் பெற்ற குற்றவியல் புதினங்களும் பல்வேறு வளர்ச்சி நிலைகளை அடைந்துள்ளது எனலாம்.

தமிழ்ப் புதினங்களில் இடம் பெறும் அனைத்து தொடர்பாத்திரங்களும் முன்னோடி "ஷெர்லாக் கோம்ஸ்" என்ற ஆர்தர் கனான்டாயிலின் தொடர்பாத்திரம் ஆகும். கனான்டாயிலுக்கு முன்பே "ஆலன்போ" என்ற ஆங்கிலப் புதின ஆசிரியர் "அகஸ்டி டீயூபின்" என்ற தொடர் துப்பறிவாளனைப் படைத்துள்ளார் என்பது குறிப்பிடற்குறியது. எனினும் தமிழ்துப்பறி, குற்றவியல் புதினங்களில் தொடர்பாத்திரப்படைப்புக்கு முன்னேடி "ஷெர்லாக் கோன்ஸ்" என்ற துப்பறிவாளர் தொடர்பாத்திரமே ஆகும். இப்பாத்திரத்தினை முன்னோடியாகக் கொண்டு பின்வந்தோர். இத்தொடர்பாத்திரப் படைப்பில் தத்தம் தனி முத்திரையினையும் பதித்துக்கொண்டனர். தமிழ்த்துப்பறிகுற்றவியல்புதினங்களில் இடம்பெறும் தொடர்பாத்திரங்கள் பற்றி ஆராயலாம்.

### 3.1. துப்பறி புதினங்களில் தொடர்பாத்திரப்படைப்பு :

துப்பறி நாவல்களின் வளர்ச்சி நிலையினை விடுதலைக்கு முன், விடுதலைக்குப்பின் என

இருவகையாக பிரித்து இவ்வகை நாவல்களில் இடம் பெறும் தொடர்பாத்திரப்படைப்பிற்கு சில சான்றுகள் காணலாம்.

### 3.1.1. விடுதலைகக்கு முன் துப்பறி புதினங்களில் தொடர்பாத்திரப்படைப்பு:

#### 3.1.1.1. பண்டித நடேச சாஸ்திரி

இவர் ராஜம் ஐயர், மாதவய்யா ஆகியோரின் சமகாலத்தவர் தமிழ் நாவல் முன்னோடிகளில் குறிப்பிடத்தக்கவர். அவர் 1894-இல் எழுதிய " தானவன்" என்ற துப்பறியும் போலீஸ் இன்ஸ்பெக்டரை பற்றிய புதினத்தில் ஐந்து கதைகள் அடங்கியுள்ளன. " தானவன்" என்ற நாவல், இன்ஸ்பெக்டர், தானவன் தனது சொந்த அனுபங்களைச் சொல்லும் பாணியில் அமைந்துள்ளது. "தானவன் என்ற நாவலில் குறிப்பிடப்படும் தந்திரங்கள், யுக்திகள் எல்லாம் ஆங்கில, பிரெஞ்சு மொழிகளில் உள்ள துப்பறியும் நாவல்களைப் படித்து அவற்றை மூலமாக வைத்து எழுதப்பட்டவை என்று ஆசிரியரே தமது முன்னுரையில் குறிப்பிடுகின்றார்". இக்கூற்று துப்பறி புதினத்தின் தொடர்பாத்திரப்படைப்பு உத்திக்கு மேலைநாட்டுத் துப்பறி புதினம் அடிகோலியுள்ளதை உணர்த்தும்.

"தானவன்" என்ற நாவல், இன்ஸ்பெக்டர் தானவன் தனது சொந்த அனுபவங்களைச் சொல்லும் பாணியில் அமைந்துள்ளது.

#### 3.1.1.2. ரங்கராஜ்

இவர் 1906-இல் இராஜம்மாள் என்ற புதினத்தை எழுதினார். அதில் ஷெர்லாக் கோம்ஸின் தாக்கமாகத் துப்பறிவாளன் "கோவிந்தனை" தொடர்பாத்திரப்படைப்பாகப் படைத்துள்ளார். இவர் போலீஸால் கண்டுபிடிக்க முடியாத பல மர்மங்களைக் கோவிந்தன் கண்டுபிடிப்பதாகக் காட்டியுள்ளார். இந்நாவலில் துப்பறியும் நிபுணனுக்கு மாறுவேடங்கள் புனைந்து, அந்த மாறுவேடங்களை வாசகர்கள் கண்டு கொள்ளாதவாறு அமைத்துக் கதைகள் ஆர்வத்துடன் நடத்தி படைப்பாளன், "கோவிந்தனை" வாசகர் மனதில் பதித்தவர். எனவே மத்தியில் அபார வெற்றி பெற்றவர்.இப்புதினத்தைத் தொடர்ந்து ஒன்றன்பின் ஒன்றாக "இராஜேந்திரன்", "சந்திரகாந்தா" "மோகனசுந்தரம்", ஆனந்த கிருஷ்ணன்" "வரதராஜன்", "விஜயராகவன்", "ஜெயரங்கன்" என்ற எட்டு புதினங்கள் எழுதினார். இவையாவிலும் துப்பறியும் கோவிந்தனை நடமாடவிட்டு தமிழ்ப் புதின முதல் துப்பறி தொடர்பாத்திரப்படைப்பை உருவாக்கினார். தானவனைக் (பண்டித நடேச சாஸ்திரி) காட்டிலும், கோவிந்தன் சிறந்த தொடர்பாத்திரப்படைப்பாகும். கோவிந்தன் பாத்திரப்படைப்பு பின்னர் தமிழில் தோன்றிய துப்பறி, குற்றவியல் பதினங்களின் தொடர்பாத்திரப்படைப்பிற்கு முன்னோடியாகும்.

#### 3.1.1.3 ஆரணியார்

இவரின் புதினங்களில் "ஆனந்த சிங்" என்ற துப்பறி தொடர் பாத்திரம் இடம் பெறுகிறது. இக்காலக் குற்றவியல் புதினங்களின் முன்மாதியாகத் திகழ்பவன் இவர் எனலாம். இவர் அறிவும் ஆற்றலும் மிக்கவன். இவன் சுவற்றில் இருக்கும் கைரேகையைக் கொண்டே குற்றவாளியின் உயரம், நிறம், கொலை நிகழ்ந்த முறை ஆகிவற்றைக் கண்டுபிடிப்பவன்.

#### 3.1.1.4 வடுவூர் துரைச்சாமி :

ஆரணியாரின் "ஆனந்தசிங்" போன்ற ஆற்றல் மிக்கவனாக அதே சமயம் அவதார புருடனாக வடுவூராரின் துப்பறிவாளன் திகம்பரசாமி படைக்கப்பட்டுள்ளார். இவரது "திகம்பரசாமி" என்ற துப்பறி தொடர் பாத்திரம் அரசாங்கத்தால் கௌரவிக்கப்பட்டு அனைத்து சுதந்திரத்துடன் துப்பறி செயல் புரிவதாகக் காட்டப்பட்டுள்ளது.

### 3.1.2 விடுதலைக்குப்பின் துப்பறி புதினங்களில் தொடர் பாத்திரப்படைப்பு

விடுதகைக்குப்பின் துப்பறி புதினங்கள் எழுதியவர்களில் தேவன், சீரஞ்சீவி, வேலவன், பி.டி.சாமி,

புஷ்பா தங்கதுரை போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள். இந்நிலையில் " தமிழ்வாணனின்" வரவு துப்பறி புதின வளர்ச்சியில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. இவரைத் தொடர்ந்து வந்த "சுஜாத" துப்பறி புதினத்தில் புதிய பாணியை உருவாக்கியவர். எனவே தமிழ்வாணன், சுஜாதா ஆகிய இருவரின் தொடர்பாத்திரப் படைப்பினைப் பற்றி இங்கு காணலாம்.

### 3.1.2.1 தமிழ்வாணன்

தமிழ்வாணன் துப்பறிவாளர்கள் பலரை தம் புதினத்தில் படைத்துள்ளார். இது இவர் பிற புதின ஆசிரியர்களினின்று சற்று மாறுபடுவதைக் காட்டுகிறது. எனினும் "சங்கர்லால்" என்ற துப்பறிபாத்திரம் தொடர் துப்பறிபாத்திரமும். முந்தைய "கோவிந்தன்" "ஆனந்தசிங்" துப்பறிவாளர் போன்று சங்கர்லால் பாத்திரமும் ஆற்றல் மிக்கதாகவே காட்டப்பட்டுள்ளது. மேலும் "சங்கர்லால்" துப்பறியும் திறமையால் உலகப் புகழ் பெறுவதாகவும் காட்டப்பட்டுள்ளது. உலக அளவில் "சங்கர்லால்" புகழ்பெற்றது அதாவது "கோவிந்தன்" "ஆனந்தசிங்" இவர்களை விட அதிகம் புகழ் பெறுவது விடுதலைக்குப் பின் தமிழ்நாட்டில் ஏற்பட்ட பூர்ஷவா சமூக வளர்ச்சியாகும் என எஸ்.தோதாத்ரி கூறுகிறார் மேலும் அவர், "சர்வதேச அரங்கில் தமிழ்நாட்டைச் சார்ந்தவருக்குப் புகழ் ஏற்படுவதைத் துப்பறியும் கதைகளில் "தமிழ்வாணன்" சித்திரிக்கிறார். இது ஓரளவிற்கு விடுதலைக்குப் பின்பு பலம் பெற்ற தமிழ் இனவெறி இயக்கங்களின் பிரதிபலிப்பு ஆகும்" என்றும் கூறுகிறார். எனவே தொடர்பாத்திரப்படைப்பில் முதன்முதலில் உலகப்புகழ் பெற்ற பாத்திரமாக தமிழ்வாணனின் துப்பறி பாத்திரம் இயங்குகிறது.

### 3.1.2.2 சுஜாதா

தமிழ்வாணன் போன்று சுஜாதாவும் ஆரம்பத்தில் புதினத்தில் பல துப்பறிவாளர்களைப் படைத்துள்ளார் என்பது குறிப்பிடக்குரியது. எனினும் பிந்தைய புதினங்களில் "கணேஷ்" என்ற முதன்மைத் துப்பறிவாளனையும் இவனுக்கு உதவியாக "வஸ்ந்த்" என்ற துணைமைத் துப்பறிவாளனையும் படைத்துள்ளார். பிற துப்பறி புதின ஆசிரியரிடமிருந்து வேறுபட்டு இரட்டைத் துப்பறி தொடர்பாத்திரப்படைப்பை முதன் முதலில் நடைமுறைப்படுத்தியவர் இவரே. இப்பாத்திரப்படைப்பே குற்றவியல் பதின ஆசிரியர்களின் காதல் துணை துப்பறி தொடர்பாத்திரப்படைப்படைப்பிற்கு முன்னோடி எனலாம்.

## 3.2 குற்றவியல் புதினங்களில் தொடர்பாத்திரப்படைப்பு :

சுஜாதாவைத் தொடர்ந்து ராஜேந்திரகுமார், ராஜேஷ் குமார், பட்டுக்கோட்டை பிரபாகர், சுபா, இந்திரா, சௌந்தர்ராஜன், பிரபு என பலர் புதினங்களின் எழுதினர். இவர்கள் துப்பறி மற்றும் குற்றவியல் தன்மை இரண்டையும் கலந்து எழுதினார். ராஜேந்திர குமார் மிகுதியாகக் குற்றவியல் கூறுகளைத் தம் படைப்பில் புகுத்தி எழுதினார். எனவே துப்பறி நாவல் குற்றவியல் நாவலாகத் தடம் புரளும் நிலை ஏற்பட்டது. எனினும் இவர்கள் தங்கள் படைப்பினைக் குற்றவியல் புதினங்கள் எனக் கூறவில்லை. ஆனால் ராஜேந்திரக் குமாரைத் தொடர்ந்து வந்த ராஜேஷ்குமார் குற்றவியல் செய்திகளுக்கு முதன்மை தந்து எழுதியதோடு தனது படைப்பினை, "குற்றவியல் நாவல்" (Crime Novel) என்ற பெயரில் முதன்முதலில் வெளியிட்டார். இவரைத் தொடர்ந்து பட்டுகோட்டை பிரபாகர், சுப ஆகியோர் " குற்றவியல் புதினங்கள்" எழுதினார்.

குற்றவியல் புதினங்களில் இடம்பெறும் தொடர்பாத்திரப்பிற்குச் சான்றாக ராஜேஷ்குமார், பட்டுக்கோட்டை பிரபாகர், சுபா ஆகியோர் பாத்திரப்படைப்புக் காட்டலாம். இவர்களின் புதினங்களில் தனியார் துப்பறி தொடர்பாத்திரத்திற்கு உதவும் காவல்துறை தொடர்பாத்திரங்களும் இடம்பெறுவது குறிப்பிடக்குரியது. அத்தொடர் பாத்திரங்களை கீழ்வரும் முறையில் பகுத்துக் காட்டலாம்.

தொடர்பாத்திரப்படைப்பு முறை

| புதின ஆசிரியர்கள் | தனியார் துப்பறிவாளர்கள் | காவல்துறையினர் |
|---|---|---|
| ராஜேஷ்குமார் | விவேக் | நியூட்டன் |

| | | |
|---|---|---|
| ப.கோ.பி. | பரத்சுசீலா | பால்ராஜ், சிரஞ்சீவி |
| சுபா | நரேந்திரன், வைஜெயந்தி | கோகுல்நாத்,நவநீத கிருஷ்ணன் |

குற்றவியல் புதினங்களில் இடம்பெறும் துப்பறி பாத்திரங்கள் காவல்துறை துப்பறி பாத்திரங்களை விடச் சிறந்தவை. காவல்துறை தொடர்பாத்திரங்கள் தங்கள் தொழில் தொடர்பாக தனியார் துப்பறி பாத்திரங்களிடம் அறிவுரையும் உதவியும் பெறுவது உண்டு. இவ்விருவகைத் தொடர் பாத்திரங்கள் ஒருவருக்கொருவர் உதவுவதுடன் நல்லதொரு நட்பிற்கு இலக்கணமாகவும், காட்டப்பட்டுள்ளனர். குற்றவியல் புதினங்களில் துப்பறிவாளர்கள் துப்பறி நிறுவனம் அமைத்து செயல்படுத்துவதாகக் காட்டப்படுகிறது.

### 3.2.1 ராஜேஷ்குமார்

இவரின் தொடர் பாத்திரப்படைப்பு "விவேக்" இவரும் தமிழ்வாணனின் "சங்கர்லால்" போன்று உலகப் புகழ் இந்திய நாட்டினர் பிரதம கலந்தாலோசிக்கும் அளவிற்குச் சிறப்புச் பெற்றவர். நாட்டுப்பற்று மிக்கவர். உலகப் புகழ் பெற்ற துப்பறிவாளராகக் காட்டப்பட்ட போதும், இவர் தனக்கென்று தனிப்பட்ட துப்பறிநிறுவனம் (Detective Agency) எனவும் வைத்துக் கொண்டிருப்பதாகக் காட்டப்படவில்லை. மேலும் விவேக் கண்ணியமான பாத்திரப்படைப்பு. இவர் தனது மனைவி ரூபாவிடம் குறும்புத்தனமாகப் பேசுவது, மனைவிக்குப் பயப்படுவது போல் நடிப்பது போன்ற தன்மைகள் இதுவரை வாசகர்கள் மத்தியில் இயல்பான மனிதராகக் காட்டுகிறது.

### 3.2.2. பட்டுக்கோட்டை பிரபாகர்

இவரின் துப்பறிவாளர்கள் பரத், சுசீலா, காதல்இணை, துறுதுறுப்பானவர்கள். "பரத் ஜொள்ளுவிடும், அதே சமயம் ஒழுக்கத்தின்று மீறிப் போகாத துப்பறிவாளர். சுசீலா கவர்ச்சியான வாசகங்கள் எழுதிய பனியன் அணிந்து இளைஞர்களின் மனதைக் கவரும் நவநாகரிக மங்கை. பாரதி கண்ட புதுமைப்பெண், "பரத்" பிற அழகிய பெண்களைக் கண்டு ஜொள்ளுவிடும்போது வரிந்து கட்டிக்கொண்டு சண்டைக்குச் செல்பவள். இவர்களின் குறும்புத்தமான பேச்சுகளும், கிண்டல்களும், ஒருவரை ஒருவர் ஏமாற்றுவதும் வாசகர்களால் பெரிதும் ரசிக்கப்படுகிறது. எதிர்கொள்வதில் வல்லவர்கள் இவர்கள் உலகப் புகழ் பெற்றவர்கள் அல்லர். உள்நாட்டில் புகழ் பெற்றவர்களாக மட்டுமே காட்டப்பட்டுள்ளனர். இவர்கள் "மூன்லைட் டிடக்டிவ் ஏஜன்ஸி" என்ற நிறுவனத்திற்கு உரிமையுடையவர்கள்.

### 3.2.3 சுபா:

இவரது துப்பறி பாத்திரங்கள் "நரேந்திரன்" வைஜெயந்தி" "நரேந்திரன்" சுருக்கமாக நரேன் என அழைக்கப்படுகிறான். இவர்களும் பரத் சுசீலா போல் காதல் பறவைகள் அவர்களைப் போன்ற பண்பு நலன் உடையவர்கள் இவர்களது துப்பறி நிறுவனம் "ஈகிள்ஸ் ஐ" என்ற பெயரில் அமைகிறது. நரேனின் மேலாளராக ராமதாஸ் என்ற பாத்திரம் இடம் பெறுகிறது. இப்பாத்திரம் எப்பொழுதும் பைப் புகைத்துக் கொண்டிருப்பதாகக் காட்டப்படுகிறது. மேலும் உள்ளுணர்வின் மூலம் பின்வரும் ஆபத்துக்களை முன்னரே உய்த்துணர்த்துவதாகவும் காட்டப்படுகிறது. நரேனின் கீழ் வேலை செய்யும் உதவித் துப்பறிவாளர்களாக ஜான்சுந்தர், அனிதா, காதல்இணை இடம் பெறுகின்றனர். இவர்கள் அனைவரும் தொடர்பாத்திகள் ஒருவருக்கொருவர் அன்புடையவர்கள். ப.கோ.பி.யின் துப்பறி நிறுவனத் தொடர் பாத்திரங்களைவிட சுபாவின் துப்பறி நிறுவனத்தில் அதிகப் பாத்திரங்கள் இடம்பெறுவது குறிப்பிடற்குரியது.

மேல்குறிப்பிட்ட புதினங்களின் தொடர்பாத்திரப்படைப்பு வளர்ச்சி நிலைமாறி வரும் சமுதாய நிலையினையும் பெண்ணிய சிந்தனையின் எழுச்சியினையும் புலப்படுத்துகிறது எனலாம்.

# கவிஞர் பாலாவின் பார்வையில் சமுதாயம்
## திண்ணைகளும் வரவேற்பறைகளும் கவிதையின் வாயிலாக....

*வி. வசுமதி*, எம்.ஏ., எம்.ஃபில்., தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ. ஜி.வி.ஜி. விசாலாட்சி மகளிர் கல்லூரி,உடுமலை.

விமர்சகர்களில் ஒரு தராசு முள்ளாக, மனிதர்களில் ஒரு மா மனிதனாக, கவிஞர்களில் ஒரு நவ கவிஞனாக மிளிர்பவர் கவிஞர் பாலா. சமுதாயத்தை அவர் நோக்கும் நோக்கு சற்றே வித்தியாசமானது. இன்றைய நவ நாகரீகமான வாழ்வில் மாறியுள்ள மாற்றங்கள் பல. பொருட்கள், ஒரு சில அமைப்புகள் மட்டுமா இவ்வுலகில் மாறியுள்ளன. அல்ல; அல்ல இவற்றுடன் இன்றைய மனிதமும் மாறியும்- மாற்றப்பட்டும் உள்ளன.

எனவேதான் கவிஞர் பாலா இவ்வமைப்பின் ஒரு சிறிய கூறாக, தமது பல கவிதைகள் அமைந்த தொகுதியை "திண்ணைகளும் வரவேற்பறைகளும்" என்ற தலைப்பிட்டு வெளியிட்டுள்ளார். இங்கு அவரின் *சமுதாயப் பார்வையை இவ்வொரு கவிதையில் காண்போம்.*

"நட்டுவைத்ததொரு
தொட்டிச் செடியா - இவ்வாழ்க்கை
எனில்
அலங்காரப் பூவாய் இருப்பதைவிட
ஆதரவான சாடியாய் இருப்போம்"

என முன்னுரையில் தொடங்கும் இவர் தம் கவிதையில் அன்றும், இன்றும் ஏற்பட்ட சமுதாய மாற்றங்களைப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

### சமுதாய மாற்றம் :

மனிதன் தனக்குத் தானே கூடிவாழ ஏற்படுத்திக் கொண்ட அமைப்பாகத் திகழும் இச் சமுதாயத்தில் வாழும் போது, தனி வீடு என்பது முக்கிய அங்கம் வகிக்கிறது. "உணவு, உடை, இருப்பிடம்" என்ற கூற்றின் அடிப்படையில் வீடு கட்டும் போது சாதாரணமாக, "வரவேற்பை அமைத்தல்" என்று கூறுவது சரளமாகக் காணப்படுகிறது.

### வரவேற்பறை என்றால் என்ன?

வீட்டிற்கு வருவோரை வரவேற்று அமர்த்தி, தேவையானதை அளித்த பிறகு அவர்களை வழியனுப்புதல். இங்கு வீட்டின் நபர் உள்ளடக்கமாக உள்ளார் என்பது கூர்ந்து நோக்கத்தக்கது. அவர்கள் இல்லையெனில் யாருக்கும் உள்ளே வர அனுமதியில்லை. ஆனால் அன்று

"நேர்த்தி செய்திட சுவர்கட்கு மயக்கும் வண்ணங்கள்
வசீகரம் கூட்டிட அவற்றில் வண்ணப்படங்கள்
அமர்ந்திட அகலம் அகலமாய் சுகம் வழியும் இருக்கைகள்
பானங்கள் வைக்கவும் பத்திரிக்கை வைக்கவும்
மினுக்கும் சின்ன மேசைகள்
களைப்பை விரட்ட கண்சிமிட்டும் தொலைக்காட்சிப் பெட்டிகள்
கால் பதிக்கச் சுகமான விரிப்புகள்
கலை மனம் காட்டிட கண்ணாடி அறைகளில்
வரிசையில் வைத்த அழகு பொம்மைகள்
வெளிச்சமும் வெப்பமும் வடிகட்டிட
சன்னல்களில் சதிராடும் நேர்த்தித் திரைகள்
தாகம் தணிக்க ஐஸ் பெட்டிகள்"

என்ற அமைப்பில் வரவேற்பறைகள் இல்லை. வீடுகள் தோறும் வீதி பார்த்துத் திண்ணைகள் கிடந்தன. அது வீடுகள் விரித்த இரு கைகள் போல அள்ளித் தழுவும் அன்பின் அழைப்பாய் அமைந்திருந்தது. இன்று மாற்றப்பட்டு சமுதாயத்தில் நிற்பதால், கவிஞர்,

"முடியுமா இந்த வரவேற்பறைகளில்
ஒரு வழிப்போக்கன் வழிநடைக் களைப்பிற்கு
ஆதரவாய் அமர?
முடியுமா இந்த வரவேற்பறைகளில்
வாழ்க்கையில் பழுத்ததோர் தாத்தாவோ பாட்டியோ
ஒரு முகம் தெரியா மனிதரை
உட்கார வைத்து ஊர்க்கதை முதல்
வீட்டு வம்பு வரை பேச?"

எனச் சாடுகிறார்.

### மாறுபடும் மனிதம் :

திண்ணைகளில் தலைவிரித்தாடிய மனிதம், இன்று தலைவிரி கோரமான கோலத்தோடு வரவேற்பறையில் நிற்கிறது. திண்ணைகளின் சிறப்பைக் கவிஞர் அவர்கள் கூறும் போது, சொர்க்கம் இருந்ததாகவும் குறிப்பிடுகிறார். மேலும்,

"அமரவும் கிடக்கவும்
அடுத்தவருடன் கதைக்கவும்
என்று நகர்ந்த நாட்களில்
அந்தத் திண்ணையில்
மனிதம் பொதுவாய் இருந்ததுண்டு"

என மனிதம் இருந்ததை வெளிப்படுத்தி, இன்று மாறுபட்ட மனிதத்தைக் கூற முற்படுகையில்,

"திண்ணைகள் இடித்து
வரவேற்பறை கட்டும் நண்பரே
நம் உள்வெளி நாகரிகத்தில்
வாழ்க்கை அலங்காரமாகி விட்டது!
மனிதம் தான் மூளியாகி விட்டது!

என்று மூளியாகிவட்ட மனிதத்தை இனம் காட்டுகிறார்.

### முடிவு

இன்று திண்ணைகளெல்லாம் வறவேற்பறைகளாக மாறிவிட்டன. நகரமயமாகி வரும் கிராமியங்களுக்கும், திண்ணைகளை அழித்து வரவேற்பறை கட்டும் இன்றைய மனிதங்களும் சற்றேனும் யோசித்து வீதியில் நன்முறையில் கட்சியளிக்கும் மனிதங்களுக்கு ஏதேனும் ஒருவகையில் உதவி புரிதல் நன்று . அன்றேல்

"திண்ணைகள் இடித்து
வரவேற்பறை கட்டும் நண்பரே
நம் உள்வெளி நாகரீகத்தில்
வாழ்க்கை அரங்காரமாகிவிட்டது
மனிதம்தான் மூளியாகிவிட்டது"

என்ற வரிகள் உண்மையாய் பூமியில் உறைந்து, வளரும் சமுதாயத்தையும் தாக்கும். எனவே மனிதத்தைக்காக்க மனிதர்களான நாம் ஒவ்வொருவரும் இன்றே முயற்சி எடுத்தல் நன்று.

# ஒரு கலைஞனின் கலைநுட்பம்

*வ. வள்ளியம்மாள்,* தமிழ்த்துறை, பாத்திமா கல்லூரி, மதுரை.

## ஒரு கலைஞனின் கலை நுட்பம்

"படைப்பாளியின் அனுபவங்கள் படைப்புக்களாகின்றன. தனது அனுபவங்களை வாசகன் உண்மை என உணரும் படி செய்து படைக்கும் போது கலையாகிறது. உண்மையும், அழகும் கலந்ததே படைப்பு. உருவம் அழகாகவும் உள்ளடக்கம் இவற்றுடன் படைப்பை உருவாக்கக் கலைஞன் பயன்படுத்தும் கலைநுட்பங்களே உத்தியாகும்.

உருவம், உள்ளடக்கம் இவற்றுள் எது முக்கியமானது என்பது குறித்து பலவகை மாறுபட்ட கருத்துக்கள் உண்டு. படைப்பாளியின் உள்ளார்ந்த உண்மையான அனுபவங்கள் உள்ளடக்கமாக மாற, படைப்புக்குறித்த அழகுணர்வு உருவமாக மாறுகிறது. வாசகனுக்குத் தன் எண்ணத்தைச் சொல்ல, அனுபவத்தைப் புரிய வைக்க, பிறபடைப்புகளிலிருந்து மாறுபட, தன்படைப்பைச் சுவையாக்க, புதுமையாக்க படைப்பாளன் கையாளும் அனைத்தும் உத்திகளாகும்.

இன்றைய நவீனக்கதை உலகில், காலமும், வெளியும், கனவும், கலைத்துப் போடலுமே உத்திகளாய் புனை உலகைப் படைக்கும் படைப்பாளிகளின் நடவில் மண்ணில் காலூன்றி, சமூக அக்கறையுடன், மனிதநேய உணர்வுடன், மானுட அவலங்களை யதார்த்தமாகச் சித்திரிக்கும் பன்முக ஆளுமை கொண்ட படைப்பாளர் இரா. நடராசன். பல தளங்களில் சமூக அவலங்களைத்தொடும் வீச்சுடன், கதையுடன் இரண்டறக்கலந்து உணர்வுபூர்வமாய் சிறுகதைகளைப் படைக்கும் இவர், உருவத்திலும் உள்ளடக்கத்திலும் புதுமைபுரிவதுடன், வாசக மனதில் தான் உணர்த்தும் அனுபவம் புதிய பலவித உத்திகளைச் சிறப்பாகக் கையாள்வதால் இவரது படைப்புக்கள் மெருகுடன் திகழ்கின்றன. இரா. நடராசனின் சிறுகதைத் தொகுப்புக்களான "மிச்சமிருப்பவன்" "மதி" எனும் மனிதனின் மரணம் குறித்து..... என்பனவற்றில் படைப்பாளர் கையாளும் உத்திகள் குறித்து இக்கட்டுரை ஆராய்கிறது.

## முப்பெரும் உத்திகளள்

வாசகனுள் புது உலகைப் படைக்கும் போது, கதைகளின் தலைப்புகள், பாத்திரங்கள், உரையாடல், மொழிநடை, தொடக்கம், முடிவு, தனிமொழி, ஆசிரியரின் குரல் எனப் புரிதலுக்கான அனைத்தும் உத்திகளாகின்றன. படைப்பாளன் அறியாமல் தானே வந்தமைதல், கதைப்போக்கில் கதையை வலுவாகக் கூற படைப்பாளன் வலிந்து படைத்தல் என உத்திகள் பல்வேறு விதமாக அமைந்தாலும் சிறந்த வெளியீட்டுத்திறன் சிறுகதையின் வெற்றிக்கு வித்திடுகிறது. "எந்த ஒரு படைப்பிலும் பொதுநிலை உத்திகள் என்ற மரபு வழிப்பட்ட உத்திகளையும், தனிநிலை உத்திகள் என்று கலைஞனின் தனி வெளியீட்டுப் பாங்கு நெறியினை உணர்த்தவல்ல புது உத்திகளையும், அவனுக்கே உரிமையான - மற்றவர் படைப்புகளில் பாதிப்பையும், தாக்கத்தையும் ஏற்படுத்த முடியாத - சிறப்புநிலை உத்திகளையும் காணமுடியும்" எனும் முனைவர் அண்ணாமலையின் கருத்திற்கேற்ப இரா. நடராசனின் படைப்புகளில் முப்பெரும் உத்திகளும் கலந்து அமைந்து படைப்பைச் சிறப்புறச் செய்வதைக் காணலாம்.

## பொதுநிலை உத்திகள்

நேர்கோட்டு கதை அமைப்பு கொண்டு, கருவை முதன்மைப்படுத்தும் கதைப்பின்னலுடன், பின்னோக்கு உத்தி, மறைபொருள், ஆசிரிய இடையீடு, ஆர்வநிலைத் தூண்டல், உரையாடல், நுணுக்கமான வருணனை யெனக் கதை கூறலுக்கான மரபு வழிப்பட்ட உத்திகளுடன் "ஏஞ்சல்ஸ் இங்கிலீஸ் ஸ்கூல்", "வெட்டியான் இரவு", "கடன்", "விரும்பினாலும் விரும்பாவிட்டாலும்" போன்ற சிறுகதைகள் அமைகின்றன.

"தொண்டைக்குழி", "விளையாட்டின் அகதிகள்" போன்றவை மொழி பெயர்க்கப்பட்ட சிறுகதைகளோ

எனத் தோன்ற, "விரும்பினாலும் விரும்பாவிட்டாலும்", "பீலிசிங்கு" எனும் சிக்குலிங்கத்தின் வாக்குமூலம், "கடன்", போன்றன வட்டார வழக்குகளுடன் மண்ணின் மணத்துடன் படைப்பாளரின் வேறுபட்ட இருதளங்களில் சஞ்சரிக்கும் திறனைச்சுட்டுகின்றன.

### தனிநிலை உத்திகள்

மரபான உத்திகளைத் தனித்தன்மையுடன் புதுவகையில் கையாளும் போது தனிநிலை உத்தியாகிறது. சிறுகதைக் கூறுகளில் ஒன்றாக அமையும் உரையாடலும்., தனிமொழியும் இரா. நடராசனால் கதைகூறும் உத்தியாகச் சிறப்பாக கையாளப்படுகின்றது.

"ஆயிஷா" எனும் சிறுகதைக்கு உரையாடலே உயிரூட்ட, "இரத்தத்தின் வண்ணத்தில்" உரையாடலின்றி அமைய, "மதி" எனும் மரணம் குறித்து ..... சிறுகதையில் வரும் துண்டு, துண்டான முழுமையற்ற உரையாடல்கள் கருவிற்குத் தரும் அழுத்தம் வார்த்தைகளில் விவரிக்க இயலாது.

"சோமாசி" எனும் சிறுகதை கவிதையில் தொடங்கி, "ஆந்திரா" எனும் புதுக்களத்தில், முன்னிலையில், கூறப்பட, "தொழுவம்" சிறுகதை தன்மையில் தொடர்கிறது.

"டேய் ஆம்பிளைகளா, கயவாளிப்பயலுகளா கேளுங்கடா, கேளுங்க என "ரெண்டு ரூபா தீர்ர வரைக்கும்" எனும் கதை முழுமையும் தனிமொழியில் அமைகிறது.

வெட்டியானுக்கும் நரிகளுக்கும் இடையில் நடக்கும் கொடிய போராட்டத்தை விவரிக்கும் "வெட்டியான் இரவில்" சிறுகதையில், பிணமே ஆயுதமாய் சுழன்று நரிகளை துரத்திவிட்டு. இருட்டில் கதறி அழும்போது."டேய் பாண்டி, எங்கின ராசா இருக்கிற?" எனத் தீவட்டியுடன் மகனைத் தேடும், தாயின் குரல் - படைப்பாளரின் ஒற்றைத் தனிமொழி - உரையாடலற்ற, வருணனை நிறைந்த படைப்பிற்கு வலுச்சேர்க்கிறது.

"டீ ஒன்று போடு சுசீ.... தலை வலிக்கிறது. அந்த டேப்பை அணைச்சிடு... சுசீ, சுசீ என்ன பண்ற இங்க..... அந்த சிகரெட் பாக்கெட்ட எடு!..... என ஏவும் மொழியாகத் தொடக்கம் முதல் அமையும் ".சுசீ முதல் சுசீ வரை"

இவ்வாறு கதையை ஆக்கிரமிக்கும் குரல் தன்மையாக, முன்னிலையாக, தனிமொழியாக ஆணாதிக்க மொழியாகக் கதையை நகர்த்திச் செல்கிறது. ஆசிரியரின் குரல் சிறுகதையின் ஊடே அங்குமிங்கும் கீற்றாய் ஒலிக்கும் மரபு மீறப்பட்டு, குரலே கதை சொல்லியாக மாறும் தனிப்போக்கைக் காணலாம்.

நிகழ்ந்த ஒன்றைக் கதைப்போக்கின் பின்னால், விரிவாகக் கூறல் பின்னோக்கு உத்தியாகும். "படத்தில் இருப்பவர்"சிறுகதை முழுவதும் பின்னோக்கு உத்தியில் கூறப்படுகிறது.

மிச்சமிருப்பவன் சிறுகதையில் கலவரத்தால் பாதிக்கப்பட்டு, தனது மகனுடன் உயிர்தப்பும் குஞ்சா மயக்கமடைகிறான். தனது பக்கத்தில் குற்றுயிரும் குலையுயிருமாய் கிடந்த குழந்தை மாரி பருந்துகளுக்கு உணவாகிவிட்டது தெரியாததால், தனது மகன் எங்கோ உயிரோடு இருப்பதாக நம்புகிறாள். அந்த நம்பிக்கை அவளை சாகாது பார்த்துக்கொள்கிறது. பாத்திரத்திற்கு தெரியாத இந்த உண்மை வாசகர்களுக்குத் தெரிய மறைபொருள் உத்தி கதைக்குச் சுவை தருகிறது. "தலைமுறை கைதிகள்" சிறுகதையில் அம்மனுக்குப் பலியிட தெர்ந்தெடுக்கப்பட்ட தாத்தா தப்பிச் சென்றது வாசகனுக்கும், பாத்திரங்களுக்கும் தெரியாது மறைக்கப்பட்டு, ஆர்வநிலை தூண்டப்பட்டு முடிவில் உண்மை வெளிப்படுகிறது.

### சிறப்புநிலை உத்திகள்

படைப்பாளியின் மனதில் எழும் நிகழ்வுகளைப் பதிவு செய்யும் படைப்புகளில் உருவம், உள்ளடக்கம், உத்தி எனும் மூன்றும் முக்கிய பங்கு வகித்து, இன்றியமையாதது எது என முடிவுக்கு வராதவாறு ஒன்றை ஒன்று சார்ந்து தத்தம் அளவில் சிறப்புற்றுத்திகழ்கின்றன. சமூக அவலங்களை வெளிப்படுத்துவதில் அக்கரைமிக்க இரா. நடராசன் தான் கூறவந்த கருத்தை வலியுறுத்த உருவத்தையே உத்தியாகப் பயன்படுத்துவது

அவருக்கே உரிய சிறப்பாகும்.

"மதி" எனும் மனிதனின் மரணம் குறித்து.... எனும் சிறுகதை பிரேத பரிசோதனை அறிக்கை வடிவில் மதி எனும் அலியின் வாழ்வை விளக்குகிறது. படைப்பாளியின் குரல் இயைந்து ஒலிக்க அலிகளின் அவல வாழ்வு சிறப்பாகச் சித்தரிக்கப்படுகின்றது.

தூக்கு மேடைக்குச் செல்லும் அம்சா என்ற விபச்சாரப் பெண்ணின் கடிதமாக விரிகிறது. "இரத்தத்தின் வண்ணத்தில் எனும் சிறுகதை.

"இந்த விஞ்ஞான கேள்வி-பதில் நூலும் இவ்வரிசையில் வர இருக்கும் இன்னபிற 12 நூல்களும் தமிழில் எழுத என்னைத் தூண்டியது ஆயிஷாதான் என புத்தக முன்னுரை போல ஆயிஷா எனும் புத்திசாலிச் சிறுமியின் கதை கூறப்படுகிறது.

"பீலிசிங்கு எனும் சிக்குலிங்கத்தின் வாக்குமூலம் எனும் சிறுகதையில் வாக்கு மூலம் வடிவில் குறவர்களின் சமூக அவலம் சுட்டப்படுகிறது.

படத்தில் இருக்கும் இறந்த தந்தை, மகனின் துயருக்காக, சமுதாயத்தில் வஞ்சிக்கப்படும் இன்றைய இளையசமுதாயத்திற்கு வருந்திப் பேசுவதாக "படத்தில் இருப்பவர்" சிறுகதை அமைகிறது.

"பறையடி சித்தரில்" டம் டணக்கு டக்கு டம் டம் என சுழன்று சுழன்று எழும் பறையின் ஒலியில் வாசகனை அறைந்து திரும்பும் வலியும், வேதனையும், மூர்க்கமும் மிக்க காலவெளி கடந்த பறையடி சித்தரின் தீர்க்கமான சொற்கள் கதையின் வடிவமாகிறது.

## முடிவுரை

பலவித வடிவங்களில் கதைகளைச் சொல்லிப் பார்க்கும் ஆசை, கதைக் கேற்ற வடிவத்தைத் தேர்ந்தெடுக்கும் சிறப்பு, கனமான உள்ளடக்கம், நவீன உத்திகளுடன் கதை சொல்லும் திறன், வேறுபட்ட கதைக்களங்கள் கொண்ட இரா. நடராசனின் படைப்புலகின் அடித்தளம் சமூகத்தின் மீது அவர்கொண்ட அக்கறையே ஆகும்.

"செருப்பு தைப்பவனாகப் பிறந்தவனின் வாழ்க்கை இருக்கிறதே அது செருப்பிழைகளின் முடிச்சுகளில் சிக்கி ஆணிகளின் கூர்முனையில் கிழிகிற வாழ்க்கை"

"புதைகாடு, எரிகாடு, சாவு அவனுக்கு வாழ்வைக் கொண்டு வருவதாய் உள்ளது. ஊரின் துயரம் அவனுக்கு வருமானம்".

நரித்தோலும், புலிநகமும் நமக்குக் கிடைக்கிறதே பெரிசாப் போச்சு. கெடைக்கிற ஒண்ணு ரெண்டு நரிய பொந்து வச்சு பிடிச்சா காட்டு குத்தமுன்னு புடிச்சுக்கிட்டுப் போயிரானுங்க. எங்க போவான் குறவன் பிழைக்க" என செருப்பு தைப்பவன், வெட்டியான், குறவன், விபச்சாரி என்று பலதரப்பட்ட அடித்தள மக்களின் அவலங்களைச் சுட்டும் போது படைப்பாளரின் குரல் உரத்து ஒலிக்கிறது. சிறுகதைகளைத் தனித்தனியாகப் படைக்கிறபோது வியப்பூட்டும் உத்திகள், தொகுப்பில் சலிப்பைத் தந்தாலும், படைப்பாளரின் அடிப்படை நோக்கமான சமூக உணர்வைப் பதிவு செய்யத் தவறவில்லை.

## பயன்பட்ட நூல்கள்


1. திறனாய்வுக்கலை - தி.சு. நடராசன்
2. முப்பெரும் உத்திகள் - அண்ணாமலை
3. மிச்சமிருப்பவன் - இரா. நடராசன்
4. மதி எனும் மனிதனின் மரணம் குறித்து - இரா. நடராசன்

# சுட்டி விகடன் இதழ்ச் சிறுகதைகள்

டாக்டர். *ஆர். விஜயராணி,* முதுநிலை தமிழ் விரிவுரையாளர்,
பிஷப் ஹீபர் கல்லூரி, திருச்சி - 17.

## சுட்டி இதழ் அறிமுகம்

சிறுவர்களுக்கென்று தற்போது வெளிவந்து கொண்டிருக்கும் இதழ்கள் கோகுலம், சுட்டி விகடன் இரண்டும் அதிக எண்ணிக்கையில் வெளிவந்து கொண்டிருக்கின்றன. இதுவரையில் வெளிவந்த சிறுவர் இதழ்கள் பல வந்த வேகத்திலேயே நின்றுவிட்டன. "துளிர்" இதழ் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கின்றது. இருந்த போதிலும் வெளிவரும் பிரதிகளின் எண்ணிக்கை மிகவும் குறைவே. துளிர் இதழிலும் விளம்பரம் இல்லை, துளிர் இதழுக்கும் விளம்பரம் இல்லை. சுட்டி விகடன் 1999 நவம்பர் முதல் வெளிவருகின்றது 94 - 96 பக்கங்கள் வரை (அனைத்துப் பக்கங்களும். வண்ணமயமானவை) இடம் பெற்றுள்ளன. "நம்பர் 1 தமிழ்ச் சிறுவர் இதழ்" என்ற தலைப்புடன் வெளிவருகின்றன. சிறுவர்களை மகிழ்விப்பதுடன் அவர்களின் படைப்பாற்றலை வெளிக்கொணரும் வகையில் பல போட்டிகள், செயல் முறைப் பயிற்சிகளும் இதில் இடம் பெற்றுள்ளன. ரூ. 15விலையில் இப்படியொரு கருத்துக் கருவூலத்தை விகடன் குழு நிறுவனம் சிறுவர்களுக்கு அளித்து மகிழ்விக்கின்றது.

சுட்டி விகடனில் இடம் பெற்றுள்ள படைப்புகளை (உள்ளடக்கக் கூறுகளை) 1. புனைவுக் கூறுகள், 2. புனை அல்லாத கூறுகள், 3. பிறகூறுகள் என்று மூன்று வகையாகப் பிரிக்கலாம். புனைவுக் கூறுகளாக - கதை, நாடகம், கவிதை ஆகியவற்றைக் குறிப்பிடலாம். கட்டுரையின் பக்க எல்லை கருதி சிறுகதை மட்டும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப் பெற்றுள்ளன. சிறுகதை ஒரே இதழில் முடிபவை 2003ல் ஜனவரி - ஜூன் வரையில் வெளிவந்த 6 மாத இதழ்களில் மொத்தம் தொண்ணூற்று எட்டுக்கதைகள் இடம்பெற்றுள்ளன. சிறுகதையின் பக்க எல்லை 1/4 - 4 வரை உள்ளன.சுட்டியில் இடம்பெற்றுள்ள கதைகள் ஒரே இதழில் முடிபவையாக உள்ளன. தொடர்சிறுகதை இடம்பெறவில்லை. ஆனால் ஒரே தலைப்பில் ஒவ்வொரு இதழிலும் வெவ்வேறு கதைகள் இடம்பெற்றுள்ளன. "உகப் புகழ்கதைகள்", "வரலாற்றுக் கதை", "உலகம் உன்கையில்" போன்ற தலைப்புகளில் ஒவ்வொரு இதழிலும் ஒரு கதை இடம் பெற்றுள்ளது. இவை பெரும்பாலும் இதழின் விறுவிறுப்புத் தன்மையுடன் சுட்டிகளுக்கு ஆவலைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளன.சுட்டியில் இடம்பெற்றுள்ள சிறுகதைகளைக் கீழ்க்கண்டவாறு வகைமைப் படுத்தலாம். 1. குட்டிக்கதைகள் 2. உல்ட்டா கதைகள் 3. புதிர் கதைகள் 4. பாட்டி சொன்ன கதைகள் 5. வட்டார வழக்குக் கதைகள் 6. வரலாற்றுக் கதைகள் 7. உலகம் உன்கையில் 8. உலகப் புகழ்கதைகள் 9. மாயா டீச்சரின் மந்திரக் கதைகள் 10. பிடித்த டீச்சர், பிடிக்காத டீச்சர் கதைகள்

### 1. குட்டிக்கதைகள்

குட்டிக்கதைகள் என்ற பொதுத் தலைப்பில் தையல் ராணி, திருடன் மனசு, அட்வைஸ் அஸ்வினி, நிலாவுக்குச் சட்டை, ரெட்டைப் பிறவி, யார் அரசர், எறும்பு விவசாயி, வாழ்வாசாவா, வால்பையன், முதலை ராஜா, தற்பெருமைத் தவளை .......... என பல வித்தியாசமானத் தலைப்புகளில் இக்கதைகள் வெளிவந்துள்ளன. சான்றாக தற்பெருமைத் தவளை என்ற ஒரு கதையை நோக்கலாம்.ஒரு தவளைத் தன் இனம்சார்ந்த மற்ற தவளைகளிடம் எப்போதும் தன்னைப்பற்றி (எப்போதுமே) மிக உயர்வாகப் பேசிக் கொண்டிருக்கும். அவ்வழியே ஒரு எருது வந்தது. அதன் உருவத்தைப் பார்த்துப் பயப்படாது என்னால் கூட எருதுவைப் போல பெரிதாக முடியும் என்று கூறி மூச்சை இழுத்துப் பிடித்துக் கேட்டது. உனக்கும் எருதுக்கும் வித்தியாசம் உள்ளது என்றன மற்ற தவளைகள். மீண்டும் மீண்டும் மூச்சை இழுத்த தவளை அழுத்தம் தாங்காது நெஞ்சு வெடித்து இறந்தது. தற்பெருமை கொண்டால் தாழ் நிலைக்குத் தள்ளப்பட்டு விடுவோம். என்ற நீதியைச் சுட்டிகளுக்கு உணர்த்தும் வகையில் இக்கதை அமைந்துள்ளது.

2. உல்ட்டா கதைகள்

இவற்றில் காக்கா சுட்ட வடை, யானை எப்படித் தப்பியது?... போன்ற தலைப்புகளில் கதைகள் இடம்பெற்றுள்ளன. சுட்டிகளுக்கு "சிரி சிந்தி" என்ற தன்மையில் கதைகளை எடுத்துக் கூறுவதாக உல்ட்டா கதைகள் அமைந்துள்ளன. தன் வினை தன்னைச் சுடும் என்ற நிலையில் யானை எப்படித் தப்பியது கதை உள்ளது.

3. புதிர்க் கதைகள்

சுட்டிகளுக்கு புதிராகக் கதை கூறி யோசனை செய்து கண்டு பிடிக்கத் தூண்டும் வகையில் இக்கதைகள் அமைந்துள்ளன. ஒரே ஒரு கேள்வி, கடவுள் கேட்ட கமிஷன், எப்படிக் கடப்பது, மாம்பழம் விற்ற மூவர், தேங்காயின் திருச்சி பயணம், எத்தனை பூக்கள், எவ்வளவு பொற்காசுகள் போன்ற தலைப்புகளில் கதைகள் இடம் பெற்றுள்ளன.

4. பாட்டி சொன்ன கதை

இதே தலைப்பில் பல கதைகள் உள்ளன. ஒவ்வொரு இதழிலும் குறைந்த பட்சம் இரண்டு அல்லது மூன்று கதைகள் இடம்பெற்றுள்ளன. எத்தனுக்கு எத்தன், மந்திரியின் தந்திரம், வீடா அது எதுக்கு, திருட்டுக் காக்கை, வெட்டியண்ணா, ராக்கெட் ராஜா, பஞ்சவர்ண கிளி, சர்க்கஸ் சிங்கம், என் அருமைக் கண்ணுக்குட்டி, புத்திகெட்ட மந்தி, அழகால் வந்த ஆபத்து, என்னைக்கு அமாவாசை... போன்ற தலைப்புகளில் கதைகள் இடம்பெற்றுள்ளன. பாட்டியின் கதைகூறல் திறன் சுட்டிகளுக்கு மகிழ்ச்சியைத் தருவதாக உள்ளது.

5. வட்டாரக் கதைகள் :

இத்தலைப்பில் அமைந்த கதைகள் மூலம் அவ்வட்டார மக்களின் பேச்சு, பழக்க வழக்கங்களைச் சுட்டிகள் அறிந்து கொள்ள முடிகின்றது. சுட்டி இதழில் கொங்கு தமிழ், உசிலைத்தமிழ், சென்னைத் தமிழ், குமரித் தமிழ், இலங்கைத் தமிழ், போன்ற தலைப்புகளில் வட்டார வழக்குக் கதைகள் அமைந்துள்ளன. சான்றாக "மந்திர றெக்கை" என்ற கதை கொங்கு தமிழில் அமைந்துள்ளது அதிகம் ஆசைப்படக் கூடாது என்ற நீதியைக் கூறும் வகையில் சிங்கம் கதை கூறுவதுபோல் அமைந்துள்ளது."காட்டில ஒரு சிங்கம் இருந்துச்சாம்மா, வானத்லேஇருந்து றெக்க பறந்து வந்து இது மேல விழுந்துச்சாம்மா....... சிங்கம் மனசுல நெனச்சதெல்லாம் நடந்துச்சுங்களா, நெனக்கறது எல்லாம் நடக்கறது. இந்த றெக்கையை பத்ரமா வச்சுக் கோணும்" என்று கதை முழுமையும் கொங்கு தமிழில் அமைந்துள்ளது.

6. வரலாற்றுக் கதை

பண்டைய அரசர்கள், மாமன்னர்கள் போன்றோரின் வாழ்க்கை வரலாறு, அவர்கள் மேற்கொண்ட போர்கள், வெற்றி பெற்ற வழிகள், மக்களுக்குச் செய்த உதவிகள் ஆகியவற்றை இக்கதைகளின் வாயிலாகச் சுட்டிகள் அறிந்து கொள்ள முடிகின்றது.சக்ரவர்த்தி சந்திர குப்த மௌரியர், மைசூர் புலி திப்புசுல்தான், மாவீரன் நெப்போலியன், கிருஷ்ண தேவராயர், விஜயபுரி இளவரசி..... போன்ற தலைப்புகளில் வரலாற்று கதைகள் அமைந்துள்ளன.

7. உலகம் உன்கையில்

இத்தலைப்பிலமைந்த கதைகள் சுட்டிகளை ஆழ்ந்து சிந்திக்க வைப்பதுடன் பொது நலப் போக்கை கடைப்பிடித்தால் நாமும் உயரலாம் நாட்டையும் உயர்த்தலாம் என நீதி புகட்டுகின்றன."நீயும் சாப்பிடு நானும் சாப்பிடுவேன்" என்ற கதை சுட்டிகளுக்கு பொது நலம் பேணும் தன்மையை விவரிக்கின்றது. தெலுங்கு தேசத்தைக் கிருஷ்ண தேவராயர் ஆண்டு வந்தார். தெனாலி ராமனை அரசவையிலிருந்த அனைவரும் கோமாளி என எண்ணி நகையாடினர். ஒரு நாள் அரசர் விருந்து ஏற்பாடு செய்து அவற்றை வலதுகை மடக்காமல் உண்டால் அவர்களுக்கு 5000 பொற்காசுகள் பரிசு என அறிவித்தார். அனைவரும் செய்வதறியாது திகைத்தபோது

தெனாலிராமன் அறையில் உள்ளவர்கள் ஒருவருக்கு ஒருவர் கையை மடக்காமல் ஊட்டிக்கொண்டு சாப்பிட்டதைப் பார்த்து அரசரும், மற்றவர்களும், வியந்து மகிழ்ந்தனர். பரிசும் கிடைத்தது. பிறர் வயிற்றுக்கு நாம் அண்ணமிட்டால் நம் வயிறு தானே நிறையும். பொது நலமே அனைவரையும் அரவணைக்கும், புகழையும் தரும். தன் அறிவால் தெனாலிராமன் வென்ற சிறப்பினை அறிய முடிகின்றது. அவனுடைய புத்திக் கூர்மையால் எவ்வாறு தன்னை பிறர்க்கு மத்தியில் வெளிப்படுத்துகிறான் என்பதன் மூலம் சுட்டிகள் ஒரு அறிவார்ந்த கதையினை அறிந்து கொள்கின்றனர்.

### 8. உலகப் புகழ் கதைகள் :

பெரும்பான்மையும் ராஜா, ராணி கதைகளாகவே இவ்வை உள்ளன. உறங்கும் அழகி, புத்தி சாலி, இடையர், பாடகன், மந்திரப் பெட்டி, தங்க மீன், குட்டிப் பெண் வயலெட் போன்ற கதைகள் இத்தலைப்பின் கீழ் இடம் பெற்றுள்ளன. சான்றாகப் “பாடகன்” என்ற கதையினை கூறலாம். ரஷ்ய நாட்டு ஜார் மன்னனைத் துருக்கி நாட்டு மன்னன் போரிட்டு வென்று சிறையில் அடைத்தான். பெரும் தொகை கொடுத்தால் ஜார் மன்னனை விடுவிக்கலாம். துருக்கி நாட்டு மன்னன் அரசவைக்கு வந்த பாடகனின் இனிய பாடல் கேட்டு மன்னன் பரிசளிக்க முன் வந்தான். பாடகன் பரிசாக ரஷ்ய மன்னனை அடிமையாக்க கேட்டான். ரஷ்ய மன்னர் தலைநகர் அடைந்தான். “என்னை மீட்காத என் மனைவியை அழைத்து வாருங்கள்” என்று மன்னன் ஆணையிட்டான். மீண்டும் அதே இனிய பாடல். பாடகன் வேடத்திலிருந்த தன் மனைவியின் அறிவுத்திறன் கண்டு வியந்தான். பொது சொத்தை செலவு செய்யாது தன் அறிவுத்திறனாலேயே தன்னை மீட்டுக் கொண்டு வந்த தன் மனைவிக்கு நன்றி கூறினான். சுட்டிகளுக்கு முன்யோசனை, சிந்தித்தல் போன்றவற்றை இக்கதைகள் கற்பிக்கின்றன.

### 9. மாயா டீச்சரின் மந்திரக் கம்பளம்

இத்தலைப்பில் அமைந்த கதைகளில் ஒரு பொதுவான செய்தியை விளக்கிக் கூறி அவற்றின் பண்புகள், பயன்கள் மற்றும் நிலைகளையும் சுட்டிகள் சிறுவயதிலேயே அறிந்து கொள்ளும் வகையில் கூறப்பெற்றுள்ளன. சில கதைத் தலைப்புகள் : பற...பற... விமானம், குரோக்கோவைத் தேடி முதலைகள், தேன்+ஈ = தேனீ போன்றன.பற...பற விமானம் என்ற கதையில் விமானத்தைப் பற்றிய அடிப்டைச் செய்திகள், அது பறக்கும் விதம், விமானத்தின் முக்கிய பாகங்கள், விமானம் பறக்கும் போது அதன் சக்கரங்கள் உள்ளே இழுத்துக் கொள்வதற்கான காரணங்கள் போன்ற பல செய்திகள் இடம் பெற்றுள்ளன.

### 10. பிடித்த டீச்சர், பிடிக்காத டீச்சர்

சுட்டிகள் தங்கள் அனுபவங்களைக் கூறுவதாக இத்தலைப்புகளில் அமைந்துள்ளது. பிடித்த டீச்சர் எனும் போது சுட்டிகள் பள்ளியில் நடந்த அனுபவத்தை மற்ற சுட்டிகளுக்குக் கூறுவதாகவும், அவர்களும் ஒரு செய்தியைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்படுகிறது. பிடிக்காத டீச்சர் எனும் போது ஒரு சிறு சம்பவமாக இருக்கின்றனவே தவிர அது மற்றவர்களைப் பாதிப்பவையாக அமையவில்லை என்பது சிறப்புக்குரியது.

### முடிவுரை :

சுட்டியில் இடம்பெற்றுள்ள சிறுகதைகள், எளிய இனிய மொழிநடையில் அமைந்துள்ளன. சுட்டிகளுக்கு ஆர்வத்தை ஏற்படுத்தும் விதத்தில், சிந்திக்கவும், செயல்படவும் தூண்டும் வகையில் சுவைபட அமைந்துள்ளன. அறிவித்தல், அறிவுறுத்தல், மகிழ் வித்தல், ஆகிய மூன்று பணிகளையும் இச்சிறுகதைகள் செய்கின்றன. சிறுகதைகள் 10 தலைப்புகளில் சான்றுகளுடன் விவரிக்கப்பெற்றுள்ளன.

# "நேயர் விருப்பம்" - புனைவியல் தன்மை (அப்துல் ரகுமான்)

*மு. ஜெய்கணேஷ்,* ஆய்வியல் நிறைஞர்,
வடுகபட்டி.

ஒரு மொழியின் வளர்ச்சியை அதன் இலக்கியங்களைக் கொண்டே நிர்ணயிக்க முடிகின்றது. ஏனெனில் இலக்கியங்கள் மொழியின் தன்மையையும், அதன் வளமையையும் மெருகேற்றுகின்ற மருந்துகளாகும். இலக்கியங்கள் புதிது புதிதாகப்படைக்கப்படும் பொழுதுதான் மொழி விரிவடைகின்றது. தமிழ்மொழியின் பழைய ஆபரணங்களான மரபுக் கவிதைகள் இன்றைய பொழுதில் அதன் தோற்றத்தினை குறைவாகவே கொண்டுள்ளது. நாவல், கவிதைகளே இன்றைய தாய்மொழியை வெகுவாக ஆக்கிரமித்துக் கொண்டுள்ளன. அவையும் இன்று பல பரிணாமங்களாகப் பாகுபட்டு நடைபோட்டுக் கொண்டிருந்தன. இவையனைத்தும் "தற்காலத் தமிழ் இலக்கியம்" என்ற பெயரில் வழங்கப்பட்டு வருகின்றன. இத்தற்காலத் தமிழ் இலக்கியங்கள்யாவும் புதிய போக்கினையும், புதிய நடை அமைப்பினையும் கொண்டு உலா வருகின்றன. கவிக்கோ அப்துல் ரகுமானின் "நேயர் விருப்பம்" என்ற கவிதைத் தொகுப்பின் வாயிலாக அவரின் புனைவியல் தன்மையை எடுத்தியம்புவதே இக்கட்டுரையின் நோக்கம்.

## அரசியல்

இக்கவிதைத் தொகுப்பு முழுவதும் பெரும்பாலும் முரண் உத்தியையே கையாளுகின்றார் ஆசிரியர். பதவி வெறி பிடித்துத் திரியும் இன்றைய அரசியல் வாதிகளை வாழைப்பழத்தில் ஊசி ஏற்றுவதைப் போல் கடிந்து கொள்கின்றார்.

"எத்தனை பதவி வெறி / இந்த மனிதருக்கு? / செத்தால் அதையும் சிவலோக பதவியென்பார்!"

என்று, இறந்த பின்னும் பதவிச் சேற்றைப் பூசிக் கொள்கிறான் என்று சாடுகிறார். இன்றைய அரசியல்வாதிகளின் உண்மைநிலை இதுவேயாகும். மக்களுக்காகச் சண்டைபோட்டுக்கொண்டிருந்த காலம் போய் நாற்காலிக்கு அடித்துக் கொள்ளும் அரசியல்வாதிகளே இன்று நாடெங்கும் முளைத்துள்ளனர். இவ்வரசியல்வாதிகளை மேலும்,

"தகுதி இலாதாருக்குத் / தரலாமா உயர்பதவி / சகதிக்கு எதற்காகத் தங்க மணிக்கிண்ணம்?"

என்கிறார். சகதி என்று சாடுகின்றார். "இங்கே ஜனநாயகத்தில் தலைகள் எண்ணப்படுகின்றன, யாரும் எடைபோடுவதில்லை" என்று ஓர் அறிஞன் கூறினான். அக்கூற்று நிதர்சனமான உண்மை. இன்றைய அரசியல்வாதிகள் மட்டுமில்லாது உயர்பதவி வகிக்கும் பலர் அப்பதவிக்கு எந்தவித தகுதியும் இல்லாதவர்களாகவே தென்படுகிறார்கள்.. பதவி என்பது தானாய் வருவதாகும். அதைத்தேடிச் செல்வாரைப் பரத்தை என்கிறார். மேலும், "உமிப்பதவி எல்லாம் உலக்கை வரும் வரைதான்" என்றும் பதவி நிலைத்திருக்காது என்கிறார் ஆசிரியர்.

அரசியல்வாதிகளை ஓரிடத்தில் "பேனா" என்றும் பொதுமக்களை "தாள்கள்" என்றும் , மக்களுக்காக உழைப்பதே அவர்களின் தலையாய பணியாகும் என்கிறார். இன்றைய அரசியல்வாதிகள் பணப்பைகளுக்கு மட்டுமே தலைகுனிகின்றனர் என்பதை இதன்மூலம் தெளிவுபடுத்துகின்றார்.

"பேனாக்களே! / கிரீடங்களைக் கழற்றி விட்டு / தலை குனியுங்கள் நீங்கள் இருப்பது / தாள்களுக்காக / பைகளுக்காக அல்ல"

இக்கவிதைகள் அனைத்திலுமே அரசியல்வாதிகளை மென்னை தடவிய வன்மையான சொற்களால் சாடுகின்றார். இது ஆசிரியரின் தனிச்சிறப்பாகும்.

## இயற்கை வருணிப்பு

இயற்கை வருணிப்பில் கவிஞரின் புனைவுத் தன்மை முரண் உத்திமுறை வழியே வெளிப்படுகின்றது.

“மண்” என்ற தலைப்பில் உள்ள கவிதையில் மண்ணைப் பற்றிக் கூறவந்த கவிஞர், “மண்” பேசுவதாக அமைத்துள்ளார். சொல்லவந்த செய்தியை முரண்வயமான சொல்நயங்களாலே அழகாகக் கூறுகின்றார்.

“உயிர்களின் கருப்பை நான் / சமாதியும் நானே / மண் என்ற பெயரில் என் மீது /ஆசை வைப்பவரைப் / பழிப்பதும் நீங்கள் தான் / நாடென்ற பெயரில் ஆசை வைத்தால் /”பற்று என்று / பாராட்டுவதும் நீங்கள் தான்

கவிதைகளின் ஊடே சமுதாய அவலங்களையும் சுட்டிக்காட்டுகிறார். இன்றைய சமுதாயத்தில் நடக்கின்ற அவலங்களில் பிச்சை எடுப்பதே முதன்மையாக உள்ளது. இதனை அழகாகக் கவிதையின் பிம்பமாய்க் காட்டுகின்றார்.

“நீங்கள் என்னைக் /காலால் மிதிக்கிற போது /பெருமை அடைகிறேன் ஆனால் என்னில் /பிச்சைப் பாத்திரம் செய்து /கையில் ஏந்துகிறபோது நான் அவமானப்படுகிறேன்”

சமுதாய அவலத்தைப் புலப்படுத்துவதோடு மட்டுமில்லாமல், ஆங்காங்கே ஊறுகாயைத் தொட்டு வைத்தாற் போன்று மனிதனுக்குத் தேவையான அறிவுரைகளையும் கவிதையில் பதியம் போட்டுள்ளார். ஒரு மனிதனின் வெற்றி பெறும் நோக்கத்தில் “பொறுமை” என்ற குணம் மிக்க அவசியமாக விளங்குகின்றது. “பொறுமை கடலினும் பெரிது” என்பது ஆன்றோர் வாக்கு எனவே மனிதனுக்கு பொறுமைக்குணம் பெருமைக்கு வழிகாட்டும் திறவுகோல் என்பதைக் கருத்தில் கொண்டு கவி புனைந்துள்ளார் கவிஞர்.

“நீங்கள் என்னைக் /கீறுகிறீர்கள் /நான் சோறு தருகிறேன் /

என்னைக் காயப்படுத்துகிறீர்கள்/நான் பாலூட்டுகின்றேன்.

என்று அழகாக பொறுமையின் அவசியத்தை புலப்படுத்தியுள்ளார். இதனையே வள்ளுவரும் இவ்வாறு உரைக்கின்றார்.

“அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல தம்மை
இகழ்வார் பொறுத்தல் தலை”

“குளம்” என்ற கவிதையில் குளத்தினை அழகாக வருணித்துக் கூறுகின்றார். கடலை படுகிழடு என்றும், ஆறு, ஏரி, போன்ற இவற்றை பூப்படையாதவை என்றும் கூறுகின்றார். ஆனால் பூக்கள் நிறைந்து கிடக்கும் குளம் மட்டுமே பூப்படைந்த புனல் என்கிறார். இக்கவிதையில் இவரது புனைவுத்தன்மை வித்தியாசமாக உள்ளது.

“பூமியிலே என்னைப்போல்/பூப்படைந்து பொலிவடைந்த /புனலுண்டா எங்கேனும்?

இக்கவிதையும் “மண்” என்ற கவிதையைப் போல குளம் தானே பேசுவதாக அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இக்கவிதையிலும் சமுதாயச் சிந்தனை மிக்க ஒரு கருத்தினை கவிதையின் ஊடே விதைத்து வைக்கின்றார். நிறத்தையும், தரத்தையும் பார்த்து ஏற்றத்தாழ்வு மனப்பான்மையை உற்பத்தி செய்து கொண்டிருக்கும் மனிதனைச் சாடுகின்றார் கவிஞர். கற்கால மனிதன் கண்டுவிட்ட இப்பழக்கம் தற்கால மனிதனையும் விடவில்லை. இக்கருத்தினையே பசுவய்யாவின் கவிதை சுட்டிக்காட்டுகிறது.

“சில நாய்கள்/இருந்த இருப்பில்/கத்தத் தொடங்கி/நிறுத்தத் தெரியாமல் அக்கத்தலில் மாட்டிக் கொண்டு சுழலும்”

இத்தகைய வேற்றுமைக் கொள்கை மனித சமுதாயத்தை ஆட்டிப்படைக்கின்றன என்பதை கருத்தில் கொண்டே கவிஞர்,

“வேற்றுமைகள் எனக்கில்லை / மேனியிலே அழுக்குகளை /
ஏற்றுள்ளோர் வந்தால் இறக்கிவைப்பேன் சிலபேரோ /பாவத்தையும் கழுவப்
/பார்க்கின்றார் என்னிடத்தில் பாவம், அவர்களைப் /பார்த்தால் நான் சிரிப்பதுண்டு”

என்று குளம் உரைப்பதாகப் படைத்துள்ளார். இயற்கை அழகில் வடித்த கவிதைகளில் “மரங்கள்” என்ற

தலைப்பிலிட்ட கவிதைகளில் ஆசிரியரின் புனைவியல் தன்மை உருவங்களால் அமைந்த சொல் நயங்களாலும், முரண் உத்திகளாலும் வெளிப்படுகின்றது. மரங்களை "பூமியின் வரங்கள்" என்றும், விதை "வாமனின் விசுபரூபங்கள்" என்றும், "வெய்யில் விழிகளுக்கு மையெழுதும் கோல்கள்" என்றும், "மேக மைக்கூடுகள் கவிழ்த்த மையில் உருவாகும் அதிசயப் பேனாக்கள்" அழகாகக் கூறுகின்றார்.

## தேசப்பற்று

ஒவ்வொரு கவிஞனும் தேசப்பற்று என்பது அவனுடைய இதய விழியின் பார்வையாக இருக்கவேண்டும்.. பாரதியை இன்று நாடு முழுவதும் உச்சரிக்கக்காரணம் அவனுடைய தேசப்பற்றும், தேசப்பற்றுமிக்க கவிதைகளும் ஆகும். இத்தகைய தேசப்பற்றுக்கு கவிஞர் அப்துல் ரகுமானும் விதிவிலக்கல்ல. காந்தியடிகளைப் பற்றிய கவிதையில்" ஏழையின் வீதிச் சுமைதாங்கி" என்றும் நேருவைப்பற்றிய கவிதையில் அவரை இந்திய நாட்டை தாயாகவும், இந்திய மக்களைப் பிள்ளைகளாகவும் உருவகிக்கின்றார்.

"இந்நாள் / அதிசய நாள் /பிள்ளைகள் கூடி/ஒரு தாயைப் பெற்ற நாள்"

## சமுதாயச் சிந்தனை

இன்றைய சமுதாயம் கிழிந்த கந்தல் துணியாய் மாறிப்போயுள்ளது. அதன் துயரங்களும், காயங்களும் ஆற்றப்பட வேண்டும் என்ற எண்ணத்தினைக் கருக்கொண்டே "ஒப்பில்லாத சமுதாயம்" என்ற கவிதையை வடித்துள்ளார். இன்றைய சமுதாயத்தின் கிழிவுகளைம், இழிவுகளையும் ஆசிரியர் இவ்வாறு கூறுகின்றார்.

பொருளியல் அறிஞர்கள் புத்தகத்தில் காட்டும் பூலோக சொர்க்கம், அரசியல்வாதிகளின் அலுக்காத வாக்குறுதிகள், திட்ட ஆண்டிகள் கட்ட மயலும் மடம், வறுமையெனும் பாலையிலே வாடுகின்ற மான்களுக்கோ கண்களை ஏமாற்றும் கானல் நீர் என்று கூறுகின்றார். மேலும் நான் காணுகின்ற சமுதாயம், நல்லனவற்றையே சேமித்த வைக்கும் பெட்டகமாய் இருக்க வேண்டும் என்றும் கூறுகின்றார். இவற்றை முரண்உத்தி மூலம் அழகாகக் கூறுகின்றார்.

"கலப்படம் செய்பவருக்குக் , கைநிறைய பரிசுண்டு , கல்யாணத்தால் சாதிக் கலப்படம் செய்வோருக்கு"

சுருக்கி உரைத்தல் - கருத்துப் பரிமாற்றத்தில் சுருங்கச் சொல்லி விளங்க வைக்க வேண்டும் என்ற ஆன்றோர் வாக்கினை அசிரியர் கரத்தில் கொண்டு கவி புனைந்துள்ளார். நம் தமிழ்மொழியின் முதல் காப்பிய நூலாகவும், முதன்மையான நூலாகவும் கருதப்பெறுவத சிலப்பதிகாரம். இவ்வரும்பெரும் நூலினை ஆசிரியர் நான்கே வரிகளில் கூறுகின்றார். இதில் இவரது சுருங்கச்சொல்லி விளங்க வைத்தல் தன்மை நன்கு புலனாகின்றது.

"பால் நகையாள் வெண்முத்துப் , பல்நகையாள் கண்ணகிதன்
கால்நகையால் வாய்நகைபோய் , கழுத்து நகை இழந்த கதை"

மேலும் "மும்முலைத்தாய்" என்று திருக்குறளையும், " கற்பை இழக்காத பரத்தை" என்று புத்தகத்தையும், "பெண்டளையான் இயன்ற வெண்பா" என்று தாஜ்மகாலைப் பற்றியும் வடித்திருப்பது ஆசிரியரின் சுருங்கிச் சொல்லி விளங்க வைத்தல் தன்மையை மேலும் உறுதிப்படுத்துகின்றது.

முடிவு - இன்றைய கவிஞர்கள் தங்கள் புனைவியல் தன்மையினை கட்டணத்திலன் கட்டளைக்கு விற்றுக் கொண்டிரக்கும் வேளையில், கவிஞர் அப்துல் ரகுமானின் கவிதை இதற்கு விதி விலக்காக உள்ளது. உங்கள் பேனாவின் வியர்வைக்குக் கூலிகேளுங்கள், அதன் மாதவிலக்கையும் பணம் பண்ணாதீர்கள் என்று இக்கவிஞரே இன்றைய கவிஞர்களைச் சாடியிருப்பது குறிப்பிடத்தக்கது. நேயர் விருப்பம் என்ற தனது கவிதைத் தொகுப்பு முழுவதும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் முரண் உத்திகளாலும், உருவங்களாலும் தனது புனைவியல் தன்மையைப் பதிவு செய்துள்ளார்.

# நவீன தமிழ்ச் சிறுபத்திரிக்கைகள் - பதிவும் பார்வையும்.

*பா. ஜெய்கணேஷ்,* முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ் இலக்கியத்துறை, மெரினா வளாகம், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை - 5.

தமிழ் இலக்கிய வடிவம், பொருள் மாற்ற வரலாறு என்பது ஒவ்வொரு காலத்திலும் அக்காலத்தின் சமூக, அரசியல் செயல்பாடுகளின் மூலமாகவே நிகழ்கிறது. சங்க இலக்கியங்கள் முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தலபுராணங்கள் இறுதியாகப் பல்வேறு காலச் சூழல்களினால் பல்வேறு தன்மைகளைக் கொண்டு இலக்கியங்கள் உருப்பெற்று வந்துள்ளன. கி.பி. 16ம் நூற்றாண்டில் இந்தியாவில் புகுந்த ஐரோப்பியர்களால் இந்திய இலக்கியங்கள் குறிப்பாகத் தமிழ் இலக்கியங்கள் புதுத் தன்மைகளோடு தோற்றம் பெற்றன. ஐரோப்பியர்களால் கொண்டு வரப்பட்ட அச்சு இயந்திரத்தின் மூலம் அழிந்து போகும் சுவடுகளில் இருந்த தமிழிலக்கியங்கள் நிலைபெற்றன. அச்சுஇயந்திரத்தின் வருகையால் பதிப்பித்தல் என்பது எளிமையான ஒன்றாகச் சாத்தியப்பட்டது. 19ம் நூற்றாண்டுகால மரபிலக்கண இலக்கியங்களிலிருந்து உரைநடை எனப் புதுவடிவம் தோன்றி அதன் மூலமாக நாவல், சிறுகதை, கவிதை என இலக்கியப்போக்கு மாற்றம் பெற்றது. இதன் மூலம் பல்வேறு துறைகளும் தனித்து வளரலாயின. இத்துறைகளில் இதழியல் துறையும் தமிழ் இலக்கியப் போக்கில் தனக்கான தனி இடத்தினைப் பெற்றுக்கொண்டது. 20ம் நூற்றாண்டின் இலக்கிய வளர்ச்சிக்கு இதழ்கள் ஆற்றிய பங்கு தமிழ் இல்க்கியம் பிறிதோர் தளத்தினை அடையக் காரணியாய் அமைந்தது.

இதழ்கள் இருவேறு தன்மைகளைக் கொண்டு வெளிவந்தன. அவை பேரிதழ்கள், சிற்றிதழ்கள் ஆகும். "ஜனரஞ்சகமான, அதிக விநியோகம் உள்ள பெரிய முதலீட்டுடன் பெரும் அளவில் நடத்தப்படுகிற, வியாபார ரீதியான பத்திரிக்கைகளுக்கு முற்றிலும் மாறானவை சிறுபத்திரிக்கைகள். Little Magazines எனும் ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கம் இது. (தமிழில் சிறு பத்திரிக்கைகள், வல்லிக்கண்ணன், 1991) என்னும் ஆசிரியரின் கூற்று சிற்றிதழ்களுக்கு உரிய தன்மைகளைத் தெரிவிக்கின்றது.

மகாகவி பாரதியார் நடத்திய இந்தியா, சுதேசமித்திரன் பத்திரிக்கைகள் தொடங்கி கல்குதிரை, நவீன விருட்சம் முடிய 1990 வரை தமிழ் இலக்கியச் சூழலை மாற்றியமைத்து வளப்படுத்திய இலக்கியச் சிறுபத்திரிகைகள் குறித்தப் பதிவினை "தமிழில் சிறு பத்திரிகைகள்" என்னும் நூலாக வல்லிக்கண்ணன் வடித்துத் தந்துள்ளார்.

இதழ்களின் சிகரமாகிய "மணிக்கொடி தொடங்கி எழுத்து, வானம்பாடி, கசடதபற, ழ, கணையாழி என 90களின் இறுதிவரை நடந்த இலக்கியப்பத்திரிக்கைகள் குறித்த ஒரு ஆவணமாக வல்லிக்கண்ணனின் நூல் அமைந்து காணப்படுகின்றது. 1990 முதல் 2004 வரை வெளிவந்த நவீனச் சிற்றிதழ்கள் குறித்த பதிவுகளையும் சில அம்சங்களையும் முன்வைக்கும் பொருட்டே இக்கட்டுரை அமைகின்றது. மேலை இலக்கியத்தாக்கத்தினாலும், கோட்பாடுகளினாலும் தமிழிலக்கியம் பெற்ற மாற்றங்களைப் பிரதிபலிப்பது நவீனச் சிற்றிதழ்களே. இவற்றைக் கருத்தில் கொண்டே இவ்வாய்வு நிகழ்தப்பெறுகிறது.

## ஐரோப்பியத் தத்துவங்களும் தமிழிலக்கியச் சூழலும்

1917ல் நிகழ்ந்தேறிய இரஷ்யப் புரட்சியின் விளைவாக மார்க்சியத் தத்துவம் உருப்பெற்று பல்வேறு நாடுகளுக்கும் பரவியது. காரல்மார்க்ஸ், எங்கெல்ஸ், லெனின், மார்க்ஸிம்கார்க்கி, லியோ டால்ஸ்டாய் ஆகியோரின் தத்துவங்கள் படைப்புகள் பல்வேறு நாடுகளுக்கும் மொழிபெயர்க்கப்பட்டன. மார்க்சிய கோட்பாடுகளையும், அறிஞர்களின் கருத்துரைகளையும் பல்வேறு நாடுகளில் வாழ்ந்தோர் பின்பற்றத் தொடங்கினர். தமிழகத்தில் மார்க்சியத்தின் கோட்பாடுகள் வேரூன்றின. இலக்கியச் சோதனைகள் வலுப்பெற்றன. மார்க்சியத்தைத் தொடர்ந்து பல்வேறு ஐரோப்பியத் தத்துவங்கள் பின்தொடரலாயின. அமைப்பியல், பின்அமைப்பியல், நவீனத்துவம், பின்நவீனத்துவம், இருத்தலியல், மாய எதார்த்தவாதம், பெண்ணியம், தலித்தியம் ஆகியவை தமிழ் இலக்கியச் சூழலில் நிலைப்படுத்திக் கொண்டன.

தமிழ் எழுத்தாளர்கள் பலரும் இத்தத்துவங்களின் அடிப்படையில் இலக்கியங்களை, புனைவுகளை கட்டமைத்தனர். மேலைத் தத்துவங்களின் மூலம் நவீனத்தமிழ் கோட்பாடு இலக்கியங்கள் தோன்றியதோடு பல நவீன இலக்கியச் சிற்றிதழ்களும் உருவாக்கம் பெற்றன. மார்க்சியம் தவிர பிற அனைத்து கோட்பாடுகளும் 90களின் பிற்பாடுதான் வலுப்பெற்றன. தலித்களின், பெண்களின் எழுச்சி குறித்து தலித்தியம், பெண்ணியம் எனத் தனித்தனி கோட்பாடுகள் உருவாக்கம் பெற்றன.

## நவீனச் சிற்றிதழ்கள்

1990கள் தொடங்கி இன்று வரையிலாக வெளிவந்து கொண்டிருக்கும் இதழ்களை நவீனச்

சிற்றிதழ்கள் என வரையறை செய்யலாம். "நற்றமிழ், செந்தமிழ்ச்செல்வி, வளர்தமிழ், தெளிதமிழ்" போன்ற மரபு ரீதியான இதழ்கள் இவற்றில் அடங்காது. மேற்சொன்ன காலகட்டத்தில் கட்டுரையாளர்களுக்குக் கிடைத்த தரவுகளைக் கொண்டு பார்க்கும் பொழுது, 40க்கும் மேற்பட்ட இதழ்கள் உருப்பெற்றுள்ளன. தாமரை, காலச்சுவடு, விருட்சம் போன்ற இதழ்கள் 90களுக்கு முன்னமேயே தோன்றியிருப்பினும் தனித்த அடையாளத்தோடு இன்றுவரை அவை வெளிவந்துகொண்டிருக்கின்றன. நிறப்பிரிகை, வெளி, கல்குதிரை போன்ற இதழ்கள் சிறப்பான தன்மைகளோடு வெளிவந்து இன்று நின்றுபோய்விட்டன. பற்பல இதழ்கள் பல்வேறு தன்மைகளில் தமிழ்ச்சூழலில் முத்திரை பதித்து வருகின்றன. கட்டுரையின் பக்க அளவு கருதி இதழ்களின் பெயர்கள் மட்டுமே குறிப்பிடப்படுகின்றன. இதழின் ஆசிரியர், வெளிவரும் இடம், முதல் இதழ் வந்த ஆண்டு, இதழின் காலம் ஆகியவை பதிவு செய்யப்படவில்லை. சிற்றிதழ்களில் பல வளமையான செய்திகள் உள்ளது போலவே சில வன்மங்களும் அவ்வப்போது நிகழ்கின்றன. இவற்றைச் சுட்டிக்காட்டவே சில கருத்துக்களை முன்வைத்து இக்கட்டுரை அமைகின்றது.

## இதழ்களின் பெயர்கள்

இலக்கியம், சினிமா, நாடகம் எனப் பல்வேறு தன்மைகளைக் கொண்டு இவ்விதழ்கள் வெளிவருகின்றன.

| | | |
|---|---|---|
| இலக்கிய இதழ்கள் | - | காலச்சுவடு, உயிர்மை, தீராநதி, நறுமுகை, கவிதாசரண், வல்லினம், பன்முகம், சொல்புதிது, கூட்டாஞ்சோறு, ஏர், நவீன விருட்சம், கணையாழி, மீள்சிறகு, புது எழுத்து, படித்துறை, ஆரண்யம், தீம்தரிகிட, செம்மலர், ரசனை, பிரும்மராஜஸ் நிறப்பிரிகை, மணல் புத்தகம், மன்னுயிர், ஆதி, தொனி, கல்குதிரை, அகம்புறம், மாற்றம், புதியதடம், கசடற, நேற்றுபெய்த மழையில் இன்று முளைத்த காளான் தாமரை, கலை, சாம்பல், சௌந்தரசுகன் காலம், அட்சரம், புதிய பார்வை, புத்தகம் பேசுது. |
| நாடக இதழ்கள் | - | கட்டியம், வெளி. |
| சினிமா இதழ்கள் | - | நிழல். |
| குழந்தை இதழ்கள் | - | துளிர் (சிறுவர் அறிவியல் இதழ்), அரும்பு. |
| தலித்திய இதழ்கள் | - | புதிய கோடாங்கி, தலித், தலித் முரசு. |
| பெண்ணிய இதழ்கள் | - | பனிக்குடம். |

என 48 இதழ்கள் கட்டுரையாளர்களுக்குக் கிடைத்தவை. மேற்சொல்லப்பட்டனவற்றில் இன்று (2005, ஜனவரி) பல இதழ்கள் நின்று போய்விட்டன. அவை நிறப்பிரிகை, வெளி, கல்குதிரை, சாம்பல், பனிக்குடம், ஏர், ஆரண்யம், மாற்றம், புதிய தடம் ஆகும். காலச்சுவடு, உயிர்மை போன்றவை தங்கள் இதழ்களை வலைத்தளத்திலும் வெளியிட்டு வருகின்றன. மாத இதழ், இருமாத இதழ், காலாண்டிதழ், சிறப்பிதழ் என வரும் இவை பெரும்பாலும் சென்னையை மையமாகக் கொண்டே வெளிவருகின்றன. சில இதழ்கள் பிற பகுதிகளிலிருந்தும் வெளிவருகின்றன.

## இதழின் போக்குகள்

நவீன முகம் கொண்டு வெளிவரும் இவ்விதழ்கள் மிகச் சிறந்த புதிய படைப்பாளிகளையும், விமர்சகர்களையும் அறிமுகப்படுத்தியுள்ளன. ஜெயமோகன், எஸ். ராமகிருஷ்ணன், பிரேம் - ரமேஷ், கோணங்கி, சாருநிவேதிதா, தியோடர் பாஸ்கரன், அம்ஷன்குமார், மார்க்ஸ், ரவிக்குமார், எம்.ஜி.சுரேஷ், வீ. அரசு, மனுஷ்ய புத்திரன், மாலதி மைத்ரி, குட்டி ரேவதி, சல்மா, க்ருஷாங்கினி, சுகிர்தாராணி, அன்பாதவன், ஜே.பி. சாணக்யா, பாமரன் என இன்னும் பல்வேறு எழுத்தாளர்களை மையங்கொண்டு இயங்கி வருகின்றன இவ்விதழ்கள்,

ஒவ்வொரு இதழும் தனக்கான மைய அரசியலை பின்வைத்து கருதுகோள்களை முன்வைக்கின்றன. இதழ்களின் கருதுகோள்கள் நவீன கோட்பாடுகளால் ஒரு முரணியக்கத்தை உருவாக்குகின்றன. இந்த முரணியக்கமே அவ்வப்போது எழுத்தாளர்களிடையே பல்வேறு சர்ச்சைகளுக்கு அடித்தளமிடுகின்றன. நவீன இலக்கிய கோட்பாடுகளாலும், எழுத்தாளர்களின் புரிதலாலும இதழ்களின் போக்குகள் கட்டமைக்கப்படுகின்றன.

## தலித் பெண்ணிய இதழ்கள்

தலித்தியம், பெண்ணியம் தமிழ் இலக்கியச் சூழலில் வலுப்பெற்ற பின் அதன் மூலமாக இலக்கியங்களின் பல்வேறு வடிவங்களில் தங்களுக்கான கேள்விகளை எழுப்பி இச்சமூகத்தின் முன் வைக்கப்பட்ட தமது ஒடுக்கு முறைகளுக்கான வன்முறையைக் கட்டுடைத்தல் என்பதை நவீனச் சிற்றிதழ்களின்

மூலமாகவும் இக்கோட்பாடுகள் சாத்தியப்படுத்திக் கொண்டன. தலித் அரசியலை முன்வைத்து இயங்கும் "புதிய கோடாங்கி, தலித், தலித்முரசு" ஆகிய இதழ்கள் தலித் விடுதலை வேண்டி போராடி வருகின்றன. தலித் இளைஞர்களுக்கு பல்வேறு விழிப்புணர்வு முகாம்களைத் தோற்றுவித்து அதன்மூலம் தங்கள் விடுதலையைப் பரவச் செய்கின்றன இவ்விதழ்கள்.

19நூற்றாண்டுகளாக ஆண் இலக்கியம், ஆண் அரசியல், ஆண் ஒடுக்குமுறை என்பதற்கு எதிராகக் குரல் கொடுத்து உருவானதே பெண்ணியக் கோட்பாடு ஆகும். இத்தனை காலம் ஆண்கள் பெண்ணின் உறுப்புகளை அழகியல் சார்ந்த வருணனையாகப் பாடி வந்தனர். இதே உறுப்புகளை இன்று பெண்ணிய கவிஞர்கள் எதிர்வினையாகத் தங்களின் விடுதலையாக தம்கவிதைகளில் பயன்படுத்தி வருகின்றனர். பெண்ணிய கவிஞர்கள் தங்கள் கவிதைகளை நூலாக வெளியிட்டும் இதழ்களின் மூலமாகப் பரவச் செய்தும் தனி அடையாளத்தைப் பெறுகின்றனர். பெண்ணின் விடுதலைக்கென குட்டிரேவதியை ஆசிரியராகக் கொண்டு வெளிவரும் "பனிக்குடம்" இதழ் சிறப்புடன் அமைகிறது.

## சர்ச்சைகள்

எதிராளியை வீழ்த்துவதற்கு கத்தி, அருவாள், துப்பாக்கி பயன்படுத்துவதற்கு பதிலாகத் தற்போது எழுத்தாளர்கள் இலக்கியத்தைப் பயன்படுத்தப் பழகிவிட்டார்கள். ஒருவர் எதிரி என்றால் அவரைத் திட்டுவது, அடிப்பது அல்லது வெட்டுவது தேவையில்லை. ஒரு கவிதை பாடியோ, சிறுகதை எழுதியோ அவரைத் திட்டித் தீர்த்துவிடலாம். இப்போதைய சிற்றிதழ்களில் நிகழும் இதழுக்கான செயல்பாடுகளில் இது குறிப்பிட்டுச் சொல்ல வேண்டியது.

ஏப்ரல் ஜூன் 2003, சொல் புதிது இதழில் வெளியான "நாச்சார் மட விவகாரங்கள்" என்ற தலைப்பில் வேதா (வேதசகாயகுமார்) அவர்கள் இயற்றிய கதை காலச்சுவடு இதழின் குழுவைத் தாக்கி எழுதப்பட்டதாகவும் அதற்குப் பல்வேறு கண்டனங்கள் எழுந்ததையும் சிற்றிலக்கிய வட்டாரத்தில் அறியமுடிகிறது.

இதே போல் ஜூலை - செப்டம்பர் 2004 தேதியிட்ட பன்முகம் இதழில் எம்.ஜி. சுரேஷ் எழுதிய "சிசிஃபஸ்" என்ற சிறுகதை தனிமனிதத் தாக்குதலுக்கான ஆயுதமாக வெளியிடப்பட்டிருக்கிறது.

".......இவன் தனது வலது கையால் விஷ்ணுவின் புராணம் போன்ற கதைகளையும், இடது கையால் சங்கக் கதைகளையும், வலது காலால் அவதூறு விமர்சனங்களையும், இடது காலால் இலக்கியத் திருட்டுக் கதைகளையும் எழுதலானான்" (ஜூலை - பெசப்டம்பர் 2004 - பன்முகம், பக். 36-41) என எம்.ஜி. சுரேஷ் எழுதிய சிறுகதை ஜெயமோகனைக் கண்டபடி திட்டிய ஒரு ஆயுதம். ஜெயமோகனை "ஜெயகோவிந்தா" என்ற புனை பெயரில் விமர்சித்து எழுதியுள்ளார். இதற்கு காரணம் எம்.ஜ். சுரேஷி அவர்களின் நூலுக்கு இணையதளத்தில் ஜெயமோகன் கொடுத்த விமர்சனமே ஆகும். இவ்விமர்சனம், அவரது நூலைப் பாராட்டாமல் திட்டியே எழுதப்பட்டது குறிப்பிடத்தக்கது.

அடுத்ததாக, பெண் கவிஞர்கள் எழுதும் உடல் ரீதியான கவிதைகளுக்குப் பல ஆண் கவிஞர்கள் எழுதிய விமர்சனங்கள் சிற்றிதழ் பரப்பில் கடுமையான விமர்சனங்களை எழுப்பியது. பழனி பாரதி கூறிய கருத்துக்களுக்குப் பல்வேறு சிற்றிதழ் படைப்பாளிகளும் விமர்சகர்களும் கூறிய பரவலான விமர்சனங்கள் பெண் கவிஞர்களின் ஞாயத்தை முன் வைத்தது. அவ்வப்போது சிற்றிதழ்களில் நடந்தேறும் இவ் இலக்கிய வன்மங்களை விட்டொழித்துப் பார்த்தால் பல்வேறு ஆரோக்கியமான அம்சங்களும் உலவி வரத்தான் செய்கின்றன.

## தொகுப்புரை

1. ஐரோப்பியத் தத்துவங்களின் தாக்கத்தாலும், மரபு சார்ந்த இதழ்ப் பின்னணியாலும் உருவான நவீனத் தமிழ்ச் சிறுபத்திரிகைகள் இலக்கிய உலகில் குறிப்பிடத் தகுந்த மாற்றங்களை நிகழ்த்துகின்றன.

2. கருத்து முரண்பாடுகளை வன்மங்களோடு கூறாமல் இன்பத்தோடு பகிர்ந்து கொண்டால் இலக்கிய வளமும் உலகமும் செழிப்படையும்.

3. விமர்சனங்கள், கருத்து வேறுபாடுகள் இலக்கிய உலகில் அவசியம் தேவை. ஆனால் அவை நட்போடு கூடியதாக அமைந்தால் சிறப்பு.

## பயன்பட்ட தரவுகள்


1. www, thamizham.com.
2. www, uyirmmai.com.
3. வல்லிக்கண்ணன், தமிழில் சிறு பத்திரிகைகள், 1991.

# சூரியகாந்தன் புதினத்தில் வேளாண் செய்திகள்

*ப. ஜெயராஜ்* எம்.ஏ.,எம்.ஃபில் ஆய்வு மாணவர்,
பூ.சா.கோ. கலை அறிவியல் கல்லூரி, கோயமுத்தூர் - 14.

பண்டைக்கால முதலே பயிர்த்தொழில் மற்றைத் தொழில்களுக்கும் உயிர்த் தொழிலாக விளங்கி வந்துள்ளது. உரிமைத் தொழில்களில் ஒன்றாகவும் அச்சாணி எனவும் "உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை" எனவும் "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்" எனவும் போற்றப்பட்ட ஒப்பற்ற தொழிலாகும்.

இருபதாம் நூற்றாண்டில் தற்கால இலக்கியத்தில் புதினங்களில் பெரும் மாற்றம் ஏற்பட்டது. புதினங்களில் பிற துறைகளான உளவியல், சமூகவியல், வேளாண்மை, பெண்ணியம், தலித்தியம், பின்நவீனத்தும் போன்ற துறைகளைக்கொண்டு புதினங்கள் எழுதப்பட்டன. பூர்வீக பூமி என்ற புதினத்தை வேளாண்மைத்துறையினை மையமாகக் கொண்டு ஆசிரியர் சூரியகாந்தன் அவர்கள் இயற்றியுள்ளார். அவற்றில் வேளாண் செய்திகள்.

### வேளாண்மை என்ற கலைச் சொல் :

வேளாண்மை என்ற சொல் இலத்தீன் மொழியில் "ஹபநச" என்று வழங்கப்பட்டது. பிறகு "Agri" என்றும் Soil மற்றும் Culture என்றும் விளங்கிக் காலப்போக்கில் "Agriculture" என்ற கலைச் சொல்லாக வடிவம் பெற்றது. இதனுள் கால்நடை, மீன்வளம், வனவளம் ஆகிய துறைகள் அடங்கும். பிற்காலத்தில் பல உட்பிரிவுகள் தோன்றியுள்ளன. வேளாண்மை பெரும்பாலும் மண்வளம், நீர், பயிர்வளர்ப்பு மற்றும் பயிர்ப் பாதுகாப்பு ஆகிய துறைகளைக் கொண்டு அமைந்துள்ளது.

### உழவு செய்தல் :

வேளாண் மாந்தருக்கு நில அடிப்படையிலான தொழில் உழவு என்பதை தொல்காப்பியர்

"வேளாண் மாந்தருக்கு உழுதுண் அல்லது
இல்லென மொழிப் பிறவகை நிகழ்ச்சி" (தொல்-மரபியல்-நு.81)

என்றும் உழவுத் தொழிலுக்குகேற்ற கருவிகள் நாஞ்சிலும் (கலப்பை) மாடுகள் கொண்டு உழவு செய்ய வேண்டும் என்றும் கூறுகின்றார்.

"ஒரு ஜோடிக் காளைகளை வைத்துக்கொண்டு ஏர் பூட்டி இந்தக் காட்டை உழவு செய்வதென்பது ஆகிய காரியமாகப்படவில்லை. ரெண்டு மூணு ஜோடி திடமான காளைகளும், வலுவான வண்டிகளும், ஆட்களும் இருந்தால் தான் சிறுகச் சிறுக வேலைகளை ஆரம்பிக்க முடியும். முதலில் முட்டமாயக் குவிந்திருக்கும் முள்செடிகளையும் அடர்ந்த மண்டிக்கிடக்கும் புதர்களையும் வெட்டியெடுத்து வேர்ப்பிடுங்கி காய்ப்பிடுங்கி எறிய வேண்டும். குண்டு குழிகளைச் சமப்படுத்த வேண்டும். கற்களைப் பெயர்த்தெடுத்து அப்புறப்படுத்த வேண்டும். ஆங்காங்கே உட்கார்ந்திருக்கும் பெரிய பாறைகளை உடைத்து வண்டிகளில் போட்டுக் கடத்தியாக வேண்டும். இத்தனைக்கும் பிறகுதான் மழை ஈரம் போதுமானவரை கிடைப்பதைப் பொறுத்து உழவு வேலையைச் செய்யமுடியும்" (பூர்வீக பூமி. பக்.38).

### மண்ணின் தன்மை :

வேளாண்மைக்கு அடிப்படையாக விளங்குவது நிலவளம் மற்றும் மண்ணின் தன்மையாகும். எனவே, மண்ணின் தன்மைக்கு ஏற்ப பயிர்கள் விளையும். புதினத்தில் மண்ணின் தன்மை, சரளையும் கருப்பும் கலந்த மண்ணாக குறிப்பிடப்பட்டுள்ளது. "சரளையும் கருப்பும் கலந்த மண் இறுகிப்போயிற்று. இயற்கை உரத்தைத் தின்றதனால் உண்டான செழிப்பும் விளைச்சலுக்கு அவைகளைப் பயன்படுத்தாமல் விட்டதால் உண்டான முட்களும் மண்டிக் கிடந்தன". (பூர்வீக பூமி. பக்.44).

### நீர்ப்பாசனம் :

"நீரின்று அமையாது உலகம்" என்பது வள்ளுவம். உண்பதற்கும் உணவாகி, உணவுப் பொருள்களையும் உண்டாக்கும் நீரின்றி விளைவுமில்லை. எனவே, வேளாண் செய்தவற்கு நீர் இன்றியமையாதது. நீர் பற்றாக் குறையின்போது கால்வாய் பாசனத்தின் மூலம் நீர் பெற்று வேளாண்மை செய்கின்றனர். "இங்கு குடியேறி ஒன்றரை வருடத்திற்குப் பிற்பாடு கிணறுவெட்டி முடித்த நிலையில் பரவலான பாய்ச்சலுக்குத் தண்ணீர் போதவில்லை. அதனால் அச்சிற்றாற்று நீரை சிறு கால்வாய் ஒன்று வெட்டி இந்தக்

கிணற்றுக்குள் வந்து கலக்கும்படி திட்டமிட்டு அதைச் செய்து முடித்தனர். இதன் விளைவாக இரண்டு மோட்டார் பம்புசெட் வைத்து நாள் முழுக்கத் தண்ணீர் சப்பளையை விவசாயத்துக்கு விரிவுபடுத்திக்கொள்ள முடிந்தது". (பூர்வீக பூமி. பக்.55).

**பயிர்கள் :**

இயற்கைச் சூழலுக்கும் மண்வளத்திற்கும் ஏற்ப நெல், மஞ்சள், கரும்பு, வாழை, வரகு, சாமை ஆகிய நன்செய் புன்செய்பயிர்கள் பயிரிடப்பட்டன. "மஞ்சளும், நெல்லும், கரும்பும், நல்ல விளைச்சல் தருவதாயிருந்தன. பதினைந்து ஏக்கர் அளவுக்குப் பசுமை போர்த்து விவசாயம் செழித்திருந்தது. கிணற்று மேட்டுக்கு மேற்குப் புறமாய் இருந்த நிலம் இளக்கமான மணற்பாங்காயிருந்தது. வாழைக்கென அதைப் பண்படுத்தியிருந்தனர்". (பூர்வீக பூமி. பக்.61).

**உரம் :**

மண்ணில் அங்கப் பொருள்கள் அதிகமாகக் கிடைப்பதற்கு ஏற்றவாறு பசுந்தாள் உரங்களை இடுவது இன்றியமையததாகும். நெல் வயலில் புங்கு, வேம்பு, எருக்கு ஆகியவற்றின் தழைகளை இடலாம். இங்கு திராட்சை கொடிகளுக்குக் கள்ளி செடிகள் உரமாக பயன்படுத்துவதை காணலாம். "சாலையில் நின்ற திருகுக் கள்ளிகள் வேலியிலிருந்துவெட்டியெடுக்கப்பட்டுத் திராட்சைக் கொடிகளின் அருகில் இருந்த குழிகளின் ஓரமாய் போடப்பட்டிருப்பதைப் பார்த்தான். இதை அந்தத் திராட்சை கொடிகளுக்கு உரமாக்கத்தான் இப்படிப் போட்டு வைத்திருக்கின்றனர்". (பூர்வீக பூமி. பக்.101).

**கரும்பு ஆலை அமைத்தல்**

வேளாண் பெருமக்கள் தானியப் பயிர்களுடன் பணப் பயிர்களையும் பயிரிட்டு வந்தனர். நன்செய் நிலங்களில் நெல், கரும்பு, வாழை பயிரிடப்பட்டன. இவ்வாறு பணப் பயிரான கரும்பு விளைந்தபின் கரும்பை வெட்டி கரும்பு ஆலை அமைத்து வெல்லம் அடிப்பார்கள். வெல்லம் செய்வதற்குத் தேவையான பொருட்கள் பற்றி கூறும்போது "வெல்லம் அடிப்பதற்குத் தேவையான அச்சுப்பலகைகளையும், மரச்சமுட்டிகளையும் தயார் செய்ய வேண்டியிருந்தது. ஆசாரியைக் கூட்டி வந்து பழைய அச்சுப் பலகைகளில் பழுதுபட்டவற்றைச் சரிபண்ணும் வேலையும் இருந்தது. கரும்புச்சாறு காய்ச்சும் கொப்பரைகளின் ஓட்டை ஒடைசல்களைக் கொல்லம் பட்டறையில் இருந்து ஆள் கூட்டிவந்து அடைக்க வேண்டியிருந்தது. (பூர்வீது பூமி. பக்.67)

**உணவு :**

வேளாண் தொழில் செய்யும் மக்கள் தாங்கள் வசிக்கும் நிலத்திற்கு ஏற்பவும், தட்பவெட்பத்திற்கு ஏற்பவும் நிலத்தில் விளையும் பயிர்களைக் கொண்டு உணவு உட்கொள்கின்றனர். பெரும்பாலும் காலை மதியமும் உணவாக ராகிக்கூழோ, சோளக்கூழோ உட்கொள்கின்றனர். இரவு உணவாக சோளச்சோறும் கொள்ளுப் பருப்பும் அவர்களுக்கு உணவாக அமைகிறது. "பத்து மணிக்கு ராகிக் கூழோ, சோளக்கூழோ ஆள்தவறாமல் ஒரு போசி ஊற்றி குடிக்க வைக்க வேண்டும். அதை வயிறாறக் குடித்த தெம்பில் தான் மறுபடியும் காட்டிற்குப் போவார்கள்". "மத்தியானத்துக்கு ராகிக்களியும், சோளக்களியும் அவர்களுக்குப் பஞ்சாமிர்தமாகப் பசியாற்றியது". (பூர்வீக பூமி. பக்-51). "பொன்னம்மா ஆக்கிப்போடுகிற களியிலும், புளிக்குழம்பிலும் நன்கு ருசி கண்டவர்களாய்பொம்பிளைகள் இருந்தனர். அத்தோடு பொங்கல் சோறுபோல், சோளச்சோறு, கெட்டியான கொள்ளுப்பருப்பும் அவர்களுக்கு விருந்து வைத்துப் பரிமாறுவதுபோல திருப்தியளிததது. (பூர்வீக பூமி. பக்-53).

**முடிவுரை :**

இவ்வாறு புதினத்தில் சொல்லப்பட்ட வேளாண் செய்திகள் கர்நாடக மாநிலத்தில் உள்ள சாம்ராஜ் நகர் பகுதிகளில் இன்றளவும் பின்பற்றப்படுகின்றன. இலக்கியத்திற்கும் வேளாண்மைத் துறைக்கும் உள்ள தொடர்பின் மூலம் வேளாண்மையின் சிறப்பினை அறிய முடிகிறது. இருதுறைகளும் வளர்ச்சியடைய வழிவகுக்கிறது.

**பார்வை நூல்கள் :**


1. பூர்வீக பூமி - சூரியகாந்தன்
2. இலக்கியமும் வேளாண்மையும் - முனைவர். சா. கிருட்டிணமூர்த்தி, முனைவர். சா. உதயசூரியன்
3. இலக்கியத்தில் வேளாண்மை - இல.செ. கந்தசாமி.
4. தொல்காப்பியம் - பேராசிரியர் உரை.

